உ

சிவமயம்.

திருவருட்ப்ரஸாதவள்ளலார்

என்னும்

மகாமகிமைப் அம்பலத்து நல்லார்

சிவப்பிரகாசசுவாமிகள்

அருளிச்செய்த

# சித்தாந்தசிகாமணி.

---

இது

செ. நாகி செட்டி

எழுதிய

உரையுடன்

குருபாசவ அண்ட் கம்பனியாரால்

சென்னை:

கலாரத்நாகரம் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றது.

சாதாரணஹு தநுர்ரவி.

1910.

விலை ரூபா 2-8-0.








௨

சிவமயம்.

# இப்புத்தகத்திலடங்கியவை.




௧. உரிமையுரை

௨. ஸ்ரீமுகம்

௩. அபிப்பிராயங்கள்

௪. சிறப்புப்பாயிரம்

௫. சாத்துகவிகள்

௬. உபோத்காதம்

௭. சிவப்பிரகாசசுவாமிகள் வரலாறு

௮. திருவுருப்படங்கள்

௯. தென்தேசத்து வீரசைவசமயாசார்யர்துதி

௧0. செய்யுள் முதற்குறிப்பகராதி

௧௧. ஸ்த்தல விஷய அட்டவணை

௧௨. ஸ்த்தல விஷய சூசனம்

௧௩. பிழை திருத்தம்

௧௪. சித்தாந்தசிகாமணி மூலமும் உரையும்

௧௫. அங்கலிங்கோத்பவம்

௧௬. வீரசைவசமயவிசாரம்

௧௭. லிங்கலக்ஷணம்

அக. அங்கலிங்கஸம்பந்தம்

௧௯. வாழ்த்துக்கவி

௨0. சித்தாந்தசிகாமணியில் காணும் புராணசரித்திரம்




உ

சிவமயம்.

ஸ்ரீமத் ஜ்ஞாந ராஜதாநியான

# பொம்மையபாளையத்து பெரியமடம்

ஸிவகஞ்சி மயூராசல நிவாஸ யதீஸ்வர

கர்த்தரான

மயிலம் தேவஸ்தாநம்

ஆதீனபரம்பரை தர்மகர்த்தத்வம்

## சிவஞானபாலய சுவாமிகள்

அங்கீகாரத்தின்படி

மஹாஸந்நிதாநத்துக்கு

ஸமர்ப்பிக்கப்பட்டது.



உ

சிவமயம்.

திருக்கோவலூராதீன ஞானியார் மடாலயத்து

ஸ்ரீ ல ஸ்ரீ

# சிவசண்முகமெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள்

அனுக்கிரகித்த

# ஸ்ரீமுகம்.

பரவுதற் குரித்தாம் பத்திப் பெருமையீர்!

சச்சிதாநந்த சற்குருவின் திருவருட்பிரசாத விசேஷத்தாலே சிவஞானச் செல்வ முதலிய எந்நலனும் நன்னர் வாய்க்க.

தென்றமிழ்நாட்டு வீரசைவ சமயத்தினர் வாதமாறு நன்முத்தியைத் தரும் வீரசைவ வுண்மைகளை யறிந்துய்தலொன்றே கருதித் தவப்பிரகாச சிவப்பிரகாச எம்மடிகள் மொழிபெயர்த்தருளிய சித்தாந்த சிகாமணிக்கு ஆன்றோர் முறையை யறிந்து வெளிப்படுக்கும் தகைசால் தங்கள் சால்புறும் உரையில் சிற்சில இடத்தைக் கண்ணுற்றோம். மலமகன் றமலன் மாணுறு சேவடி யுளங்கொளுமச்சீர் வளமெனக் கருதினோர் அறியவேண்டுவனவாகிய அங்கவிலக்கணங்களும் இலிங்கவிலக்கணங்களும் சம்பிரதாய விரோதமின்றிச் செவ்வன் விளக்கப்பட்டுள்ளன. இத்தகைய நூல் ஒவ்வொரு வீரசைவரிடத்தும் அவசியம் இருக்கவேண்டுவதே. அன்றியும் பற்பல மதங்களின் பண்பெலா முணர்தல் பாரிய வறிவினர் பகுதியாம். ஆதலின் ஏனைய மதத்தறிஞர்களும் இதுபெற்று மகிழவேண்டுவ தவசியமே.

குருநாதன் றிருவருள் மருவிவாழ் குகவே.

இங்ஙனம்,

சாதாரண௵ தநுர்ரவி ௯௨ திருக்கோவலூராதீனம். } ஶிவஷண்முகமெய்ஞ்ஞானஶிவாசார்யஸ்வாமி.

சிவமயம்.

# அபிப்பிராயங்கள்.

சென்னை பிரஸிடென்ஸி காலேஜ்
தமிழ்ப்பண்டிதர்
மஹாமஹோபாத்யாயர்
## உ. வெ. சாமிநாதய்யரவர்கள்
எழுதியது.

தமிழ்வாணர்களுடைய கருத்தைவிட்டகலாத துறைமங்கலம் - ஸ்ரீசிவப்பிரகாசசுவாமிகள் இயற்றியவற்றுள், வீரசைவசித்தாந்தத்தை நன்கு தெரிவிப்பதாகிய சித்தாந்தசிகாமணியும் அதனுரையும் அடங்கிய அச்சுப்புத்தகத்தின் காட்சி மிகுந்த இன்பத்தை விளைவிக்கின்றது. ம-ா-ா-ஸ்ரீ செ. நாகிசெட்டியாரவர்கள் வடமொழியில், 'ஸ்ரீசிவயோகிராட்' என்பவரியற்றிய இதன் முதனூலையும் அதன் வியாக்கியானத்தையும் வடமொழி தென்மொழியில் வல்ல பண்டிதர்களைக்கொண்டு ஆராய்ச்சி செய்வித்துத் தாமும் மிக உழைத்து ஒழுங்குபடுத்திப் பதித்து வெளிப்படுத்தியதாகத் தெரிதலின், இப் புத்தகம், வீரசைவசித்தாந்தங்களை அறிந்துகொள்ளும் விருப்பமுடையவர்களுக்கும் மற்ற வித்தியா விநோதர்களுக்கும் மிக்க பயனளிக்குமென்று நம்புகிறேன்.



ப்ரஹ்மஸ்ரீ
## மருவூர் - கணேச சாஸ்திரியாரவர்கள்
எழுதியது.

ம-ா-ா-ஸ்ரீ செ. நாகிசெட்டியாரவர்களால் தென்மொழியில் உரையெழுதிப் பதிப்பிக்கப்பட்ட சித்தாந்தசிகாமணி யெனும் அரிய பெரும் கிரந்தத்தைப் படித்தேன். ஸ்ரீசிவப்பிரகாசசுவாமிகளால் செய்யுள் வடிவமாய் எழுதப்பட்டுள்ள இந்நூலுக்கு முன்னூல் வடமொழியிலுள்ள சித்தாந்தசிகாமணி யென்பதே. இதற்கு வடமொழியில் எழுதப்பட்டுள்ள வியாக்கியானத்தை யனுசரித்தே இவ்வுரை யெழுதப்பட்டுள்ளது. பக்தி வைராக்கிய ஞானங்களுக்குப் பரமஸாதனமாகிய இந்நூலுக்கு இவர் எழுதிய உரையானது வடமொழியில் அவ்வளவாகப் பரிசயமில்லாது தென்மொழிப் பரிசயமுடையவர்களான ஆஸ்திகரனைவர்க்கும் அளவிறந்த உபகாரமாகும் என்பது நிச்சயமே. அரிய அர்த்த ரஹஸ்யங்களை எடுத்துக் காட்டிய இவ் வித்வானது பேருபகாரசிந்தை முதலிய பெருமைகள் இப் புஸ்தகம் படிப்பவர்க்கு இனிது விளங்கும். ஆதலின், கற்றறிந்த பெரியோர்களும் கனதனவான்களும் இத் தகைய பேருபகாரத்தைச் செய்த நாகிசெட்டியாரவர்களுக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டவர்கள் என்பது எனது திடமாகிய அபிப்பிராயம்.



# OPINIONS.

K. P. PUTTANNA CHETTY, Esq., *Senior Councillor to H. H. the Maharajah of Mysore,* writes:—

I have heard of Saint Sivaprakāśa Swāmigaḷ and you tell me that his work is a translation in Tamil of the Sanskrit work Siddhānta Sikhāmaṇi. If this be so, I can say that the book ought to command a wide sale not among the Vīrasaivās in the Tamil Districts, but also among the Saivite brothers. It is the recognized Text-book dealing with Vīrasaivism in the Sanskrit language. I wish your book every success.

V. V. RAMANA SASTRIN, Esq., M.A., F.Z.S. (*Lond.*); O.M.D.S.F.V. (*Berlin*); M.O.S.M.F. (*Paris*); M.C.S.G.B.I. (*Manchester*); C.M.M.S. (*Lond.*); F.I.A.Sc.; F.A.S.; F.T.S.; &c., &c., *Editor, "The Siddhānta Dipika and Agamic Review,"* Madras, writes:—

This Tamil metrical version, by Tuṛaimangalam Sivaprakasa Swamin, of the far-famed Vira-mahesvara Sanskrit Text-book of mystic dogmatics, the Siddhanta-Sikhamaṇi, is a philosophic classic, and issued for the first time, with an original commentary in Tamil prose, by Mr. S. C. Nagi Chettiyar of Salem, an enterprising Vira-maheśvara scholar who has, for sometime past, been making a special study of the standard Tamil works on the Vira-maheśvara doctrine. As regards the merits of the Tamil metrical version, there can be but one opinion, to wit, that it reflects the strength, grace and music of the Sanskrit original, in a remarkably impeccable manner. The name of Tuṛaimangalam Sivaprakasa Swamin, who flourished about three hundred years ago near Pondicherry, is itself a guarantee, in the world of Tamil letters, for flawless diction and refined expression. The Sanskrit original is by Reṇuka-Sivayogirat, and forms the substance of the dialogues of the greatest Vira-mahesvara Apostle, Reṇukacharya, who, in a series of sermons, instructs Saint Agastya, the ancient Aryan sage, who gave the Tamils their language, religion, arts and sciences. These dialogues bear on the most vital verities of Vira-mahesvara mysticism, which are calculated to bring man face to face with God, whilst he is in the flesh. The Tamil commentary which Mr. S. C. Nagi Chettiyar has added to Tuṛaimangalam Sivaprakaśa Swamin's verse, has fully availed itself of all the help to be found in published Vīra-maheśvara literature

in Sanskrit, Kanarese and Tamil, more especially in the Sanskrit of Maritoṇtadārya's authoritative commentary on the Sanskrit Siddhānta-Sikhamaṇi, and may consequently claim to have left nothing unsaid which needs to be said, in order to render the teachings of Vīra-maheśvara mysticism as illuminitave as possible. It is no exaggeration to say that the Siddhanta-Sikhamaṇi is a casket of mystic gems, every one of which is worth wearing for a lifetime, here and beyond, next to man's heart. So soul-stirring and convincing are its teachings that the book bears on its very face the stamp of inspiration, which he who runs may read. I congratulate Mr. S. C. Nāgi Chettiyar upon his present publication, the first fruits of his self-sacrificing and God-loving labours, and I may say the service he has hereby rendered to his brother-Vīra-maheśvaras in particular, and to the students of Indian religions in general, ought to prove enduringly useful.



உ

## திருப்போரூர்

ஸ்ரீகந்தஸ்வாமியார் தேவஸ்தான தர்மகர்த்தரும்

மடாதிபதியுமாய் விளங்கிய

ஸ்ரீமத் - சிதம்பரஸ்வாமிகளாதீனத்துப்

பதினொராவது பட்டத்ததிபரான

திருமழிசை - சிவப்பிரகாச ஸ்வாமிகள்

இயற்றியருளிய

# சிறப்புப்பாயிரம்.



### இணைக்குறளாசிரியப்பா.

வாழிய பெரிதே வாழிய பெரிதே
மாமணி துதைந்த காமரு தண்கடல்
சுலவுமிஞ் ஞாலத் திலகியெஞ் ஞான்றும்
வாழிய பெரிதே வாழிய பெரிதே
யாரெனின்
மாங்குயின் மடவார் தேங்குர லின்னிசை
கற்கென முகிழ்த்த பொற்புறு செங்கேழ்
தண்டளிர் பொதுளிய விண்டட வெகினத்
துற்றுப் பன்முறை கற்றினி தகவுறாஉ
மன்றலங் காவயி னின்றபஃ றருக்க
ளின்றலை மரீஇய வன்றலர் மலர்க
ளகம்புற மிரண்டினுஞ் சகம்புகழ் பரசிவ
னுருவள ரிலிங்க மருவுறப் பெற்றே
விராவிய வெண்ணில் சராசரப் பிரபஞ்
சங்களா மெனைத்துமி லிங்கதா ரணத்த
தெனுமறை யுண்மை யினையறி வுறுத்துங்
காட்சியிற் கிளர்தரு மாட்சிமிக் கொளிருஞ்
சேலமா நகரின் பாலதாஞ் செவ்வாய்ப்
பேட்டையின் மேவிய நாட்டதி காரன்
அதாஅன்று
நிகமாக மோக்த மகாவீர சைவ
சிவாசா ரத்தன் றவாக்கரு ணடத்தன்

தாவரு நோன்மையி ரேவண கோத்திரத்
துற்பவ முற்றொளி ரற்புத விற்பனன்
இசைபுகழ் சென்ன பஸவரா மேந்த்ர
னருந்தவப் புதல்வன் றிருந்து முத்தமிழோ
டாங்கில முந்தேர்ந் தோங்குமிச் சென்னை
ஸெண்ட்றல் ஜெயில ஸிஸ்டெண்ட் ஜெயில
ரென்னுமுத் யோக மன்னுமென் னண்ப
னன்பாரு ளீகை யென்பவோ ருருக்கொண்
டெய்திற் றென்ன வைதிற் பொலிவுறு
வாகார்ந் திலங்கு நாகேந்த்ர வள்ளல்
வாழிய பெரிதே வாழிய பெரிதே
யாழிசூ ழுலகில் வாழிய பெரிதே
ஏனெனின்
அருட்டிகழ் ப்ரதம சிருட்டியா தியினில்
வேதியர் முதலா வோதுநாற் குலரெனுத்
தொக்க பசுசிருட் டிக்குட் படாஅது
மனுதிகட் கெட்டா வனுதி மலமுத்த
சித்துரு வாம்பர வத்தெனும் பரம
பதிசிருட் டிக்கண் ணுதிசிவ குலராய்ப்
பெருங்கிரி வயினுறு கருங்கற் களையந்
திரமென வடித்துத் தரையிடை விற்குன
ருறுஞ்சிறு பயனிற் றெறுங்கதிர் முதற்சண்
டேசரீறுகப் பேசுமா வரண
தேவரை யருச்சித் தாவலி னவரைத்
தாமருச் சனைசெயக் காமுறும் பிரேத
விலிங்கத் தைக்ய மிலங்கப் புரிவித்
தேகபா வனையில நேககன் மாதிக்
கிரியா விசேடத் திரியா வருச்சனைப்
பொற்புற வியற்றி யற்பப் பயனுறாஉம்
பற்பல சைவ ரைப்போ லாது
மேலோ தக்கிரிப் பாலார்ந் திலகு
மரதனக் கற்களைப் பரிவொடு மேற்றுச்
சாணையிற் றீட்டி மாணுற வித்தே
துன்னுறு மிகுபலன் மன்னுனர் போன்று
வேதாகம முணர் மேதா வியர்கள்
சிவசம் பந்தஞ் சைவமென் றியம்புஞ்
சொற்பொருட் கிலக்கா மற்புத நாடித்
தூல மெழுவா யேலுமுத் தனுவிற்
பராவுறு மிஷ்டப் பிராண பாவமா

மூவிலிங் கங்களு மாவலிற் பூண்டு
சுத்தவே தாகமத் துத்தர காண்டத்
தோதுபு முறைவழு வாதிய லற்பக்
கிரியா வருச்சனைப் புரியா வனந்த
பலனுறு பவரா யிலகுஞ் சிவாமிச
ராய்குரு வருளாற் சாங்கோ பாங்கக்
கிரமசங் கீகப் பரமசாம் ராஜ்ய
ஏகவிம் சதியாம் யோகமா தீக்ஷா
பரணரா யன்னோன் சரணோத் பவமார்
தசவித பாதோ தகசே வனரா
யண்டின ரெவருங் கண்டரு வருக்கு
மசுத்த நிலத்தை விசுத்தா லயமாக்
கோலிமா லிங்கம் வாலிதி லா லாயக்கி
ணத்தல மிகுபரி சுத்தத் தலனு
வாயின வாறெனத் தூயலிங் காங்க
சம்பந் திகளா வெம்பந் தமற்றே
மலஜல விஸர்ஜந மலர்முலை மடவார்
போக நுகர்ச்சி யாகுமெக் காலமு
மேவு மசுசி பாவனை யிலரா
பஞ்சகு தகச்சார் புஞ்சிவ லிங்க
லோபமவ் விரத லோபமா தியன
வுற்றிடிற் பிராண னற்றிட லன்றிச்
சுத்தப் பிராயச் சித்தம திலராய்த்
தங்கிரி யாலய விலிங்க மலாம
லவாவினிற் பிறபல் சிவாலயங் களையும்
நத்தமா லாதிய நித்த தேவரையும்
தங்குரு லிங்கத் துங்கபா தோதக
தீர்த்த மலாப்பிற தீர்த்தங் களையு
மனமறு கனவிலு நினையா தவரா
யாரண விலிங்க தாரண மிகந்த
பவிபோ ஜனாதி நவையற் றவராய்த்
தீதுறு பந்திபே தாதியா மாறந்
தரங்க பவித்துவ மொருங்கற் றவராய்த்
தவநனி சிறந்த சிவமாஹேஸ் வரரைக்
கண்டெழுன் முதலாக் கொண்டவேழ் முக்தி
சோபா னக்ரம மாபா ரத்தராய்ச்
சீராரி லிங்கா சாராதி யான
பஞ்சா சாரமு மெஞ்சா தவராய்த்
தாசத்து வாதி யாசற் றிலங்குஞ்

சொற்பெறு மூவிரு சற்சன யுக்தராய்ப்
பூதிகண் டிகைமுத லோதெழிற் றுல்லிய
வட்டா வரண சிட்டா பரணராய்க்
கைவரு மற்றைச் சைவர்க் குரிய
கால தேசக் கோலக் கற்பித
சீலமெ னைத்தையுஞ் சாலவிட் டவராய்ச்
சிவஜீவ பேத மவையற் றவராய்ச்
சுத்தசித் தப்பிர சித்த ப்ரசாதங்
களைநுகர் நியதியி லிளையா தவராய்ச்
சிவார்ப்பித மலதுணு தவாற்புதத் தவராய்ச்
குருலிங்க ஜங்கம மருவுபா தோதகஞ்
சிவாகமஞ் சிவக்ஷேத் திரஞ்சிவா சாரம்
பூதி ப்ரஸாத மேதகு கண்மணி
யாதிய வற்றை யேதிலர் பழிக்கின்
மனம்பொறு தவராய்க் கனபஞ்ச முத்திரை
யுற்றிலிங் கத்தாற் றத்துவ சுத்தியும்
காணுமச் சுத்தியா லாணவச் சுத்தியு
மேத்துறு மஃதா லாத்தும சுத்தியு
மெய்துறப் பெற்றே யைதிற் றிகழும்
வயமார் சிவாநந் நியபாவ மேவி
தவாங்க மெனைத்துஞ் சிவாங்க மயமாய்த்
தினமுறு மாஹ்வா னவிஸர் ஜனங்க
ளின்றி முக்காலமு நன்று கமநெறி
யிட்டலிங் கார்ச்சனை யிற்றவ ருராய்ப்
புடவியின் மருவிய திடவீர சைவ
ரின்மத வுண்மைத் தன்மையை யெவரு
மங்கையி னெல்லி யங்கனி யென்னத்
தேர்தரு மாறிப் பார்புகழ் துறைமங்
கலப்பதி வெங்கை நலப்பதி யொடுநல்
காத்தூர் நிவாச னேத்துமா வீர
சைவா சாரியன் மைவாழ் சோண
மலைகுரு தேவ னலரடி மறவான்
எழுத்துச் சொற்பொருள் வழுத்தியாப் பணியெனு
மைந்திலக் கணமு மைங் காவியமு
மற்றுள கலைகளு முற்றவு ணர்ந்தே
யற்புதக் கற்பனைப் பொற்பலங் காரஞ்
சொற்சுவை பொருட்சுவை யிற்பொலிந் தோங்கு
முப்பா னிருநூற் பொற்புற வியற்றி

மகிதலத் தென்றும் புகழுடல் நிறீஇய
சிவப்பிர காசத் தவப்பெருங் கவிஞன்
செந்தமிழ்ச் செய்யுளின் முந்துற வியற்றிய
சித்தாரணி புகழ் சித்தாந் தசிகா
மணிநூற் புலவர்கண் மணிநூ லதற்கு
முன்னோர்
பற்பல மதத்தினு மற்புத மிக்க
தவாப் பெருஞ் சீர்சால் சிவாத் வைதமத
சித்தாந் தக்கு ரித்தா மனுதி
சைவராம் வீர சைவ மதக்கோட்
பாடறி யாம னுடினர் போன்றே
ஒருவர்
அகப்புறச் சமயப் பகுப்பினி லொன்று
மைக்கிய வாதத் தயிக்கிய மெனவும்
அதாஅன்று
சொல்லரு மாயையை வெல்லுநம் மல்லமர்
உருத்திரன் கூறென வுரைத்தன ரென்னே
மற்றொருவர்
லிங்கதா ரணத்தர் சங்கை யிலற்பப்
பலம்பெறு வாரெனப் புலம்பிய தன்றி
அதனோநா வரையர் விதக்கில ரெனவும்
கூறுவ ரவர்தாந் தேறுநா வரையர்
விடைக்குறி தரித்த தடக்கிய தென்னே
பின்னோர்
பேசு நகுலேச பாசு பதத்தை
யம்மத மென்றே யமைத்ததிங் கென்னே
இன்னோ ரெல்லாம் பன்முறை கற்றச்
சைவ மதத்தின் தெய்வத மேன்மையை
நன்கறிந் தினியப் புன்செயல் விடுத்தே
உள்ளவா றறிந்துத முள்ளங் களிக்கவும்
கற்றவர்க் கன்றி மற்றவர்க் கும்பொருள்
தெள்ளிதின் விளங்கவும் வெள்ளிதிற் பதவுரை
யோடு விசேட நீடுறு முரையும்
சொற்பொரு ளிலகப் பற்பல குறிப்பும்
செந்தமிழ்க் கன்னட முந்தா ரியமுதற்
பற்பல பாஷையி னிற்பிர மாணமும்
வேதாக மங்களி னோதுறு காட்டும்
வடநூற் பொருத்த மிடையத் திருத்தியும்

வேண்டுவ வமைத்தைங் காண்டிகை யுரையொன்
றியற்றியே யச்சிற் குயிற்றி யிப்புவியுட்
பெரு குறு மாறு செய்தனன்
திருகற் றெவருந் தெளிதரற் பொருட்டே

அதனால்

வாழிய வன்னோன் வாழிய பெரிதே
வாழிய வவன்குலம் வாழிய பெரிதே
வாழிய வந்நூல் வாழிய பெரிதே
வாழிய கற்றோர் வாழிய பெரிதே
வாழிய கேட்டோர் வாழிய பெரிதே
வாழிய பெரிதே வாழிய பெரிதே
ஆழிசூ ழுலகில் வாழிய பெரிதே.



சிவமயம்.

# சாத்துகவிகள்.

உடையார்பாளையம் மஹாகனம்பொருந்திய
ம-ா-ா-ஸ்ரீ சமஸ்தான வித்துவான்
கம்பராமாயணப்பிரசங்கம்
வீரசைவ. க. கனகசபைக்கவிராயரவர்கள்
இயற்றியது.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முத்தார்ந்த மடவார்கள் மயல்சூழ் காமல்
முதியோர்க்கு விரிந்தநெஞ்ச மொப்பத்து ருமல்
பத்தார்ந்த விருவினையு மொருங்கு தேறும்
படிக்குமுத்திப் பயனெளிதிற் பாங்காய்க் கொள்ளப்
புத்தார்ந்த பல்சமய வாதி யோர்கள்
புகழ்நூல்கள் பலமணியாய்ப் புகல மேலாஞ்
சித்தாந்த சிகாமணியென் றுரைக்கும் வண்ணஞ்
சிவப்பிரகா சப்பெருமான் செப்பி னுனல். (க)

நன்னூலுங் காரிகையு மிகவு ணர்ந்து
நாவலர்க ணவின்றிட்ட நாலொன் பான்மேல்
சொன்னூலு மலந்துமிக்கும் நெறியுண் டேயோர்
துகளிலா யோகியர்கற் கத்தொடங்கும்
என்நூலு மிந்நூலுக் கிணையோ வென்ன
வியம்பியநூ லுக்குரையை விரித் திசைத்துச்
செந்நூலாய் வீரசைவ நாகெனப் பேர்
திகழ்ந்தவே ளச்சிட்டுச் சிறப்பித் தானல். (உ)

சிதம்பரம் வீரசிம்மாசனத்துக் காரணகர்த்தராகிய
சென்னப்பநாய்க்கன்பாளையம்
ஸ்ரீமத் - பச்சகந்தஸ்வாமிகள் மடம்
துரைசங்க பச்சகந்தஸ்வாமியாரவர்கள்
இயற்றியது.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சீர்பெரு குலகிற் சைவநான் கதனிற் செப்பிடு வீரமுவ் வகைய்ய
ஏருடை பெருமான் றனதுவாக் கதனு லெழிலுறு வேதநான் கியம்பி
தேர்பெறு மதனில் மேலதாம் தெய்வத் தானென விளங்கியே தனது
ஆர்ந்திடு மையா நமதா லிருப தாகம மெட்டினி லெடுத்தே. (௩)

இயற்றிய வதனில் வீரசை வாசார மியல்பதா யுள்ளதை முன்னோர்
தெயற்சியாய்த்தெய்வ பாடையிற் செய்தார் தெள்ளுறு சித்தாந்த சிகாமணியை
செய்யநற் றமிழாற் செய்தனன் றெய்வ சிவப்பிர காசப்பேர் மேலோன் [ச்
அய்யனும் நாக னதற்குநல் லுரையு மாக்கின னுலகுபே றடைய. (உ)



மஹாவித்வான் - காஞ்சீபுரம்

## ராமாநந்தயோகிகள்

## இயற்றியது.



### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நீர்பூத்த முடிபூத்த நிமலனு ரடிக்கன்பு நிலவப் பூத்த
ஏர்பூத்த வுளம்பூத்த சிவப்பிரகா சப்பெரியோ னினிதினுய்ந்து
பேர்பூத்த தமிழ்மொழியிற் பிறங்கவருள் சித்தாந்த சிகாமணிப்பேர்
வார்பூத்த சாத்திரத்தை யெல்லாரு மினிதுணர மனத்துக் கொண்டே. (க)

வடமொழியி லுள்ளவதன் முதனூலை யொப்பிட்டு மாண்பு சால்கன்
னடமொழியி லுள்ளபல நூலகத்துக் கரந்தவரு நலமுந் தோன்றத்
திடமொழியாந் தென்மொழியி னகல வுரை தீட்டியிவண் சிறப்பத் தந்தான்
மடமையொழிந் திடவறிஞ ருலகினுக்குச் செயுமுதவி வகையினோர்ந்தே. (உ)

வளஞ்சான்ற புகழ்சான்ற சேலநகர் சென்னவச வப்ப வேள்செய்
உளஞ்சான்ற தவப்பயனே ருருக்கொண்ட தெனவறிஞ ருரைப்ப நின்றோன்
குளஞ்சான்ற நயனத்த னடியரடிக் கன்புசெயுங் குணமே மிக்கோன்
களஞ்சான்ற கறையவன்றன் பூசனையே பொருளென்னக் கருதுமேலோன்.

பரந்தியலுங் கலைக்கடலைத் தன்னறிவாஞ் சோங்குகொடு பரிந்துநீந்தி
நிரந்தரமுஞ் சாதுசங்கக் கரைமேவ நாடுமொரு நியதி கொண்டோன்
வரந்தருநல் வாய்மையொடு பொறையடக்க முதலாக வயங்கு மேலாந்
தரந்தருமக் குணமனைத்து மோருருவா வந்தவெனுந் தகைமை சான்றோன்.

முன்னோர்கண் மொழிநூலைப் பொன்னேபோற் போற்றவெனு முதுமொழிக்
கெந்நாளுங் குறியானோன் றானொரு மரும்பொருளை யெவருங்காண [கிங்
இந்நாளில் தெரித்திடுவான் பன்னூலும் வெளியிடுமோ ரிதயம் பூண்டோன்
மன்னுவ லவர்புகழு நாகிசெட்டிப் பெயர்வாய்ந்த மதிஞன்மாதோ. (ரு)



சென்னை மாஜி இந்துஜனபூஷணி பத்திராதிபரும்

எட்டயபுரம்

ஸம்ஸ்தான வித்வானுமாகிய

திருமயிலை. வி. சுந்தரமுதலியாரவர்கள்

இயற்றியது.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பூவேறு வீரசைவத் துறைசைசிவப் பிரகாசப் புனிதன் சொற்ற
பாவேறு சித்தாந்த சிகாமணியாஞ் சிவாத்வைத பாஷ்ய நூற்குக்
காவேறு சேலநகர்ச் செவ்வாய்ப் பேட்டைக்கதிபன் கலைநூ லாய்ந்த
நாவேறு நாகிசெட்டி யோர் விருத்தி யுரைசெய்து நல்கி னானால்.



சித்தாந்தசரபம் - அஷ்டாவதானம்

பூவை - கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

இயற்றியது.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நம்புவனத் தினிற்கருநா னிலத்து மினிதோங்கி நான்று மல்கும்
பம்புவள மொருங்குறவே மிகப்பெருகி நிறைதருநாற் பயனை யுற்று
வெம்பலிலா வரனடிய ரேத்துசுக வனநாதர் விழைவு வாய்ந்திங்
கிம்பரியா வரும்பரசுஞ் சேலம்செவ் வாய்ப்பேட்டை யெனுமோ ரூரில். (௧)

வீரசைவ மரபதனுக் கொருதிலக னெனத்துலங்கி மிக்க வுண்மைத்
தீரமிகு சோதிடனென் றெவரும்விம் மிதங்கொள்ளுந் திண்மை பூண்டு
வாரமுற வந்தடைந்தார்க் கருஞ்செல்வ நனிவழங்கும் வள்ள லான
மாரனிகர் சென்னவச வப்பவே ளருந்தவத்தில் வந்த புத்ரன். (௨)

செந்தமிழாங் கிலேயங்க னடந்தெலுங்கு மொழியனைத்துஞ் செவ்வே தேர்
பந்தமுறு மில்லறத்தி லேயிருந்தும் பற்றற்ற பண்பு மிக்கோன் [ந்தோன்
முந்தியநற் செல்வியருள் கருணைபொறை யீகைதயை முகம னுள்ளான்
எந்தையர னைக்கனவி னும்மறவா நாகிவே ளெனு மென் னண்பன். (௩)

தவஞான முனிவரர்சூழ் பொம்மையபா ளயமடத்திற் சதுரிற் றங்கி
அவஞான மொழித்துத்த னடிமையென யாவரையு மாண்டு கொண்டு
துவஞான மாம்வீர சைவநற் றீக்ஷைபுரி தூயோ னான
சிவஞான பாலையதே சிகமூர்த்திக் கட்டளையைச் சிரமேற் றாங்கி. (௪)

கற்பனைய லங்கார கவிஞெளிரக் கற்கண்டு கனிதே னென்னப்
பொற்பமைநற் கவிசொல்சிவப் பிரகாச முனிவரனுர் புகன்ற ஞான
விற்பனமுற் றுயர்வீர சைவக்க ளஞ்சியமாய் விளங்கா நின்ற
அற்புதசித் தாந்தசிகா மணியெனுமோர் பெருநூலை யன்பிற் சூழ்ந்து. (ரு)

வடமொழியில் வழங்குமிதன் முதனூலை யுங்கண்டு மகிழ் விஞய்ந்து
விடயமுரா ஞுகாத படியொத்திட் டாங்காங்கு விளங்கு பேத
முடணிகழி னனிதூக்கிச் செவ்வையுற வேதிருத்தி யூங்குக் காணும்
படர்சரித வாராய்ச்சி கன்னடமா தியமொழியிற் பரிந்து நோக்கி. (சு)

பிண்டமதாயி லகியவோர் பதவுரையு மேயியற்றிப் பெரும்விற் பன்னர்
கண்டதிச யிக்கநூற் ஞென்றுநற் றலங்கட்குங் கார ணத்தை
விண்டவவ தாரிகைவி சேடவுரை யுயர்நுணுக்கம் விரித்து ரைத்துத்
துண்டமதி யான்வீர சைவத்தை யாவருக்குந் துலக்கி ஞைல். (எ)



சென்னைக் கிறிஸ்டியன் காலேஜ் தமிழ்ப் பண்டிதராயிருந்த
சைவப்பிரசாரணர்
ஈக்காடு. இரத்தினவேலு முதலியாரவர்கள்
இயற்றியது.



எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஒருககர வுகரங்கள் முதலு மீறு
   ருடையானே கவர்பொருளா நாப்ப ணிற்பப்
பெருகருள்சேர் குரவனருள் சமுசை தன்னைப்
   பிறங்கியவெண் பாவதனுற் பேசி வீரந்
தருகருத லனைச்செந்தூர் நிரோட்ட கத்தாற்
   ருழ்த்தியா சாற்குக்கா ணிக்கை யாக்கி
வருகருணை நண்பனுக்கு நோய்கொண் டாலும்
   வனிதைகொளே னென்றுரைத்தவ் வரம்பி னின்றேன். (க)

திருந்துதமி ழெனுங்கவியால் வெங்கைக் காளித்
   தேரழித்து முருங்கைதனைக் காத்த சீலன்
வருந்திருக்காட் டுப்பள்ளி யுப்பு விற்ற
   மங்கைக்குத் திருநோக்கான் ஞான மீந்தோன்
பொருந்தியவோர் மாங்கனிக்காத் துன்பு செய்த
   பொழிற்காவ லனைப்போக்கு தெய்வ வாக்யன்
அருந்துறைமங் கலச்சிவப்ர காச தேவ
   னருணூல்கள் சிறப்பொருவ ரறையற் பாற்றே. (உ)

அன்னவற்றுட் சித்தாந்த சிகா மணிப்பே
  ருருநூலைப் பெருநூலை யறிஞர் போற்றிப்
பன்னுறுவீ ராகமத்தின் சார மாகப்
  பல்குறுநா லினையெவரும் படித்துத் தேறச்
சொன்னலமும் பொருணலமு மெடுத்துக் காட்டுந்
  துளங்கவளங் கொளங்கைநெல்லிக் கனியே போல
நன்னரறி ஞர்களுவப்ப விருத்தி செய்து
  நவமாக்கி யவனீக்கி நல்கி னானால். (ந)

சேலைநிகர் விழியுமைநா யகனைப் போற்றித்
  திசழ்குருலிங் கஜங்கமபக் தியினின் மிக்கோன்
சேலைதனைச் சேர்செவ்வாய்ப் பேட்டை வந்தோன்
  செல்வமிகு நாகிசெட்டி யபிதா னத்தோன்
நூலையுணர்ந் ததற்கேற்ப வொழுக்கங் கொண்டோ
  னுண்ணறிவன் பல்சமயப் பிறநூல் தம்மான்
மாலையொரு போதுமனங் கொள்ளா தோட்டு
  மாட்சியோன் தாழ்ச்சியிலா வாய்மை யோனே. (சு)



சென்னை ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல்

தமிழ்ப்பண்டிதர்

ம-௱-௱-ஸ்ரீ

## கோ. வடிவேலுசெட்டியாரவர்கள்

இயற்றியது.



நிலைமண்டிலவாசிரியப்பா.

சிந்தை மயக்குத் தீர்ந்தெவ ருமுய
வெந்தை யருக ணியம்பிய வாரண
நான்முறை பிறழாது நுண்ணிதி னோக்கி
வான்பெற வாய்ந்து மனமா ணெறியோர்ந்
திங்கித நிட்டை யியல்பா கப்பெற்
றிங்கித மக்க ளளிதிற் பெறுமா
சிற்கு ணத்தர்சொல் சிவப்பிர காச
நற்றவ ஞானி நவின்றிடு நூல்களு
ளொன்றாய்ப் பெரும்புக ழுறுவீர சைவ
நன்றாய் விளக்கு நவையறு நூலாஞ்
சித்தாந்தங் காட்டுஞ் சித்தாந்த சிகாமணி
சித்தாந் தத்தைத் தெள்ளிதி னுணரச்

சீர்சால் சேலஞ் செவ்வாய்ப் பேட்டைப்
பேர்ரே வணுராத் ரியகுரு பீடம்
சென்னவச வப்ப சிரேட்டிசெய் தவத்தி
னன்னய மாவரு நாகி சிரோட்டியென்
றெழில்பெறு புலவ னிணக்கமி லாத
தொழின்மனம் வையாத் தூய னந்நூற்கு
முன்னூல் பலவு முரணறக் கண்டு
பன்னரு நல்லுரை பளகற வரைந்து
கற்றவர் களிக்கக் கலைமக ளுவக்க
மற்றவர் தமக்கிது வாய்ப்பெனக் கொள்ள
வீரசை வத்தின் மேம்பா டுணர்த்திப்
பேரணிச் சீர்த்தியாற் பிறங்கியுற் றனனே.



சென்னை - வேப்பேரி

எஸ். பி. ஜி. ஹைஸ்கூல் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

கா. நமச்சிவாயமுதலியாரவர்கள்

இயற்றியது.



### அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தவம்பழுத்த துறவுடையான் தமிழ்பழுத்த வுளமுடையான் தார ணிக்கே
சிவம்பழுத்த வுண்மையினைப் பத்திரயம் பலநாட்டித் தெளிவு கூட்டி
நவம்பழுத்த தமிழ்நூல்க ணல்குசிவப் பிரகாச நற்ற வத்தோன்
பவம்பழுத்த வெம்மனோ ருய்யும்வகை யினைநாடிப் பரக்க வன்றே. (க)

சொற்றதொரு சித்தாந்த சிகாமணியா மருநூலைத் துலங்க யார்க்கும்
உற்றவத னரும்பொருளைப் பல்லாற்றா னினிதுணர்ந்தோ ருரைவகுத்தான்
கற்றதனாற் பயனிறைவ னடிதொழலு மவனடியார்க் காண்ட றுனும்
மற்றவன்றன் புகழோது முதுநூலை யாய்தலுமே மரபென் றோர்ந்தோன். (உ)

சேல்காட்டும் வயல்காட்டுஞ் சேலநகர் வயிற்றோன்று சிறப்பு மிக்கோன்
பால்காட்டுந் தென்மொழியி னிலக்கியமு மிலக்கணமும் பரிவிற் றேர்ந்தோன்
நீல்காட்டு மினத்தவரைக் கனவினுமே நாடகில்லான் நேர்மை மிக்கோன்
மால்காட்டும் வசவேச னடிபரவு நாகிசெட்டி மகிபன் மாதோ. (௩)



உ

சிவமயம்.

# உபோத்காதம்.

ஈஶ்வர ஸ்ருஷ்டி யென்றும் ப்ரஹ்ம ஸ்ருஷ்டி யென்றும் ஸ்ருஷ்டியிரு வகைப்படும். அவற்றுள், ஈஶ்வரன் ஸ்வாதந்த்ரியாய் முதன் முல் வரலாறு. முதல் ஸ்ருஷ்டித்தல் ஈஶ்வரஸ்ருஷ்டியாம். ப்ரஹ்மா ஈஶ்வரஸ்ருஷ்டியைக்கண்டு அவனது ஆணையின்படி ஸ்ருஷ்டித்தல் * ப்ரஹ்மஸ்ருஷ்டியாம். இவ்விருவகை ஸ்ருஷ்டிகளில் முதலாவதான ஈஶ்வரஸ்ருஷ்டியில் தோன்றினவர்களில் ஶிவகணத்தலைவராவர் ஸ்ரீ ரேணுக தாருகர்கள். இவர்களில், † ஸ்ரீரேணுககணநாதர் என்பவர் பரமஶிவத்தினது ஆஜ்ஞையின்படி வீரஶைவ தர்மப்ரதிஷ்டார்த்தமாய், கொல்லிபாக்கத்தில் ‡ ஸ்ரீஶைலம் என்னும் திவ்யக்ஷேத்ரத்தில் வீற்றிருக்கும் ஸோமேஶலிங்கத்தில் உத்பவித்து திக்விஜயஞ் செய்யுங்காலையில், முதன்முதல் போதிகையடைந்து அகஸ்த்ய மஹர்ஷிக்கு வேதாகமோக்த ஷட்ஸ்த்தலரஹஸ்யத்தைப் போதிக்கும் ஜ்ஞாநஶாஸ்த்ரமாகிய இந்தச் சித்தாந்தசிகாமணியை உபதேஶித்து, அவரை நோக்கி, "நீர் இது உலகில் எஞ்ஞான்றும் நடைபெறும் வண்ணம் பரிபாகிகளுக்குபதேஶிக்கக்கடவீர்" என ஆஜ்ஞாபித்தருளி, லங்காபுரியிற் சென்று, அப் புரிக்கதிபதியும் ¶ மாஹேஶ்வரஶிகாமணியுமாயிருந்த ராவணனது ஸஹோதரனாகிய விபீஷணன் விருப்பத்தின்படி, ஒரே

* ப்ரபஞ்சோத்பத்தி:— பரமஶிவன் ப்ரஹ்மாவை ஸ்ருஷ்டித்து, அவனை நோக்கி "நீ உலகத்தை ஸ்ருஷ்டிசெய்யக் கடவை" என ஆஜ்ஞாபிக்க ; ப்ரஹ்மா, "ஸ்வாமிந் ! ஸ்ருஷ்டித் தொழில் செய்வதியாங்ஙனம் ? க்ருபைசெய்வீராக" என வணங்கிக் கேட்க, பரமஶிவன் முதன் முதல் அப்ராக்ருதர்களை ஸ்ருஷ்டித்தனன். ப்ரஹ்மா ஸ்வபாவமாயுள்ள பஞ்சபூதங்களினின்றும் ப்ராக்ருதர்களை ஸ்ருஷ்டித்தனன். இம் முறையானே வீரஶைவர்கள் அப்ராக்ருதர்களும், ப்ரஹ்மஸ்ருஷ்டிக் குட்பட்டவர்கள் ப்ராக்ருதர்களுமாவர்கள். இவ் வரிய பெரிய விஷயங்கள் ஈண்டு விரிக்கிற் பெருகுமாதலான், ஶிவாகமவாராய்ச்சியில் வல்லுநரைக் கொண்டு உண்மை யறிந்து தெளிவாராக.

† இவரை ரேணுககணேஶ்வரர் எனவும், ரேவணஸித்தேஶ்வரர் எனவும் வழங்குதலுண்டு.

‡ இந்த ஸ்த்தலம் கர்நூல் ஜில்லாவில் உள்ளது.

¶ சித்தாந்தசிகாமணி.

ததாபி ப்ரார்த்தநீயம் மே கிஞ்சிதஸ்தி மஹாமுநே ।
[illegible] ஶிவபக்தோ ஹி ஸ்வயம் [illegible] ।
ராவணோ ஹி ஸஹோதரோ மாஹேஶ்வரஶிகாமணிஃ ।
[illegible] ஹி ஜகத்த்ரயே ॥

முஹூர்த்தத்தில் மூன்றுகோடி லிங்கப்ரதிஷ்டைசெய்து ஆசீர்வதித்து, அவ்விடம்விட்டு வெளிப்பட்டு, காஞ்சீபுரமாதியான ஸ்த்தலங்களைச் சேர்ந்து, ஆங்காங்குப் பற்பல மஹிமைகள் புரிந்து, முடிவில் ஸ்ரீருத்ரமுநீஸ்வர ஸ்வாமிகளுக்கு ஆசார்ய பட்டாபிஷேகஞ்செய்து, தாம் உத்பவித்த ஸோமேஸ ஸந்நிதியடைந்து, அம் மஹாலிங்கத்தில் அந்தர்த்தாநமாயினர். இவ்வாறு ஸ்ரீரேணுகவிஜயம், வீரசைவஸமயாசார்யபுராணம் ஸித்தேஸ்வரபுராணமாதியான க்ரந்தங்களில் நன்கு விளங்கும்.

வடமொழி லாசிரியர் வரலாறு.

இற்றைக்குச் சற்றேறக்குறைய ௬000 வருஷங்களுக்குமுன் * ஸிவயோகிராட் என்பவர் அந்த ரேணுகாகஸ்த்யஸம்வாதத்தையே ஓதும் சித்தாந்தசிகாமணியை வடமொழியில் செய்தருளினர். இவர் வரலாறு வடமொழியில் காணப்படுவதுபோல, இந்தத் தென்மொழி க்ரந்தத்திலும் காணலாகும்; ஆதலின் ஈண்டு விரித்திலம். யுகபேதங்களால் வீரசைவ ஸமயாசார்யர்கள் ஸமயோத்தாரணத்திமித்தம் ப்ரதியுகத்தில் வெவ்வேறுபெயரால் † திருவவதாரஞ் செய்வாராவர்.

---

* இவரை ரேணுகாசார்யயோகி, ஸிவயோகி, ஸிவயோகீஸ்வரர் என்னும் பெயரால் வழங்குதலு முண்டு. இவர் ரேணுககணநாதரது கடாக்ஷத்தைப் பெற்ற வம்ஸபரம்பரையில் அவதரித்தவர். ராட் - ராஜன்.

† வீரசைவ ஸமயாசார்யர்கள் உத்பத்தி:— பரமஸிவனது ஸத்யோஜாதாதியான பஞ்சமுகத்தினின்றும் முறையே ரேவணாராத்ரியர், மருளாராத்ரியர், பண்டிதாராத்ரியர், ஏகோராமாராத்ரியர், விஸ்வாராத்ரியர் என்போர் உத்பவித்து வீரசைவத்தைப் பரிபாலநம் செய்தார்கள்; ஒவ்வொருவரும் ப்ருங்கி, வீர, வ்ருஷ, ஸ்கந்த, நந்தி என்னும் கோத்ரங்களை முறையே யுண்டாக்கி, * ரம்பாபுரி, † உஜ்ஜயினி, ஸ்ரீஸைலம், ‡ பதரிகேதாரம், ¶ வாராணஸி என்னும் ஸ்த்தலங்களில் ஸிம்ஹாஸநங்களை ஸ்த்தாபித்தார்கள். அவைகள் இப்போதும் உள்ளன. அவ் வீரசைவ ஸமயாசார்யர்களே த்ரேதாயுகத்தில் கண்டாகர்ணன், கஜகர்ணன், ரேணுகன், தாருகன், விஸ்வகர்ணன் என்னும் பெயரால் திருவவதாரஞ் செய்தனரென்றுப் பாரமேஸ்வராகமம் கூறுகிறது. மேலும், ஸ்வாயம்புவாகமத்தின் ௬-வது படலத்திற்கூறிய மூலாசார்யர்களின் பெயர்களும் ஸூப்ரபோதாகமத்திற் கூறிய மூலாசார்யர்களின் பெயர்களும் பேதிக்கின்றன. எவ்வாறெனின், கண்டாகர்ணன், கஜகர்ணன், ரேணுகன், தாருகன், விஸ்வகர்ணன் ஆகிய இவர்கள் மூலாசார்யர்களென்றும், இந்த ஸிவகணங்களே ப்ரதியுகத்தில் வெவ்வேறு பெயர்பெற்று அவதரிப்பார்களென்றும் ஸ்வாயம்புவாகமம் கூறுகிறது. ஆனால், ரேவணாராத்ரியர், மருளாராத்ரியர், பண்டிதாராத்ரியர், ஏகோராமாராத்ரியர், விஸ்வாராத்ரியர் ஆகிய இவர்கள் மூலாசார்யர்களென்று ஸூப்ரபோதாகமம் கூறுகிறது; இதனை, வீராகமத்தின் பாஸுபததந்த்ரம் வற்புறுத்துகிறது. ஸ்வாயம்புவாகமத்தின் விதியை யங்கீகரிப்பதாயின், ஸூப்ரபோதாகமம் ஓதும் மூலாசார்யர்கள் அந்த மூலாசார்யர்களுக்கு வலிமைபெற்ற பரம்பரையார்க ளாவர்களென்பது பெறப்படுகிறது. எவ்வாறேனும், இரண்டாகமங்களும் ஒரே பெயருடைய ஆசார்யர்களைக் கூறுவதனால், மேற்கூறியவாறு அவர்கள் யுகபேதங்களில் வெவ்வேறு பெயரால் அவதரிப்பவர்களென்பது பெறப்படுகிறது. வீரசைவ ஸமயாசார்யர்களான மூலாசார்யர்களை பஞ்சமுகோத்பவர்களென்றும், மூலாசார்யர்களின் பின்னோர்களைப் பஞ்சவக்த்ரகணநீஸ்

---

* பாளேஹள்ளி அல்லது பாளேஹொந்நூர் எனப் பொருள்படும்; இது கரூர் ஜில்லாவில் உள்ளது. † இது பல்லாரி ஜில்லாவில் உள்ளது. ‡ இது இமயமலையில் உள்ளது. ¶ இது காஸீக்ஷேத்ரமென வழங்கும்.

வடமொழிச் சித்தாந்தசிகாமணியைத் துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகள் தென்மொழியில் ௧௦௧௦-செய்யுளாக வகுத்தருளினர். இவர் வரலாறும் இதனுடன் அநுபந்திக்கப்பட்டிருக்கிறது. அதில் ஆங்காங்குக் காட்டியுள்ள அரிய செய்யுள்களுக்கு அனைவரும் எளிதிலறியுமாறு ஓர் சிற்றுரையும் சேர்த்துள்ளோம்.

தென்னூலாசிரியர் வரலாறு.

வடமொழி ஶ்லோகங்களையும் தென்மொழிச் செய்யுள்களையும் ஒத்திட்டுக் கவனமாய்ப் பார்க்கும் கல்வியறிவுடையவர்களுக்கு வடமொழியினின்று தென்மொழிப் படுத்தும் அருமை பெருமைகள் நன்கு புலப்படும். வடமொழியிலுள்ள விஷயங்கள் சற்றேனும் விடுபடாமலும், அபிப்ராயங்கள் முறை பிறழாமலும் தென்மொழியிற் காணப்படுகின்றன. அன்றியும், வடமொழிச் சித்தாந்தசிகாமணியைத் தக்கபண்டிதரைக்கொண்டு தென்மொழிப்படுத்தி பதவுரை, பொழிப்புரை, உபநிஷத் மேற்கோளாதியுடன் ஸித்தமாயுள்ளது. இது அச்சேறி வெளிவரும். இவ் வடமொழிச் சித்தாந்தசிகாமணியின் ஆதாரங்கொண்டு தென்மொழிச் சித்தாந்தசிகாமணிக்கு ஓர் உரை செய்யத் துணிந்தது. இவ் வுரை வடமொழியின் கருத்தைத் தழுவியிருப்பது மன்றி, வடமொழியிலும் கன்னடத்திலுமுள்ள வீரஶைவபாஷ்யம், வீரஶைவாம்ருத புராணம், ஏகோத்தர ஶதஸ்த்தல ஸாரஸங்க்ரஹம், ஷட்ஸ்த்தல சிந்தாரத்நம், தத்வகரந்தி, சென்னபஸவபுராணமாதியான க்ரந்தங்களினின்றும் வேண்டிய விஷயங்கள் திரட்டி ஆங்காங்குச் சேர்க்கப்பட்டுள்ளன. அன்றியும், அங்கஸ்த்தலம், லிங்கஸ்த்தலம், இவற்றின் உட்பிரிவுகள், அங்கலிங்கோத்பவம், வீரஶைவஸமய விசாரம், லிங்கலக்ஷணம், அங்கலிங்காதிகள் முறையானே வகுத்தும், முக்ய விஷயங்களைக் குறிப்பிட்டும், ஸ்த்தலங்களுக்கு முற்றிலும் அவதாரிகை யெழுதியும், மூலபாடத்தில் ஆங்காங்கு அச்சிட்டவரால் நேர்ந்த வழூஉக்களைக் களைந்தும் திருத்தியுமுள்ளோம். ஆதலின், வாசிப்பவர்கள் ஶிவாத்வைத ஸித்தாந்தத்தை இனிது அறியலாகும்.

சித்தாந்தசிகாமணிக்கு உரை எழுதிய விவரணம்.

---

விரோதிப்பவர்கள் என்றும் வழங்கப்படும். மேலும், இவ்வாறுய மூலாசார்யர்களையும் உபாசார்யர்களையும் ஶிவகணத்தலைவர்களென்றும் அல்லது நித்யமூர்த்திகளென்றும், ப்ரக்ருதி ஸம்பந்தமான யாதொரு மாசுபடிந்தவரல்லரென்றுமுணர்க. தர்மப்ரதிஷ்டார்த்தத்தின் பொருட்டு ப்ரதியுகத்தில் மூலாசார்யாகள் திருவவதாரஞ் செய்வார்களெனவும், ப்ரமதகணங்களின் அம்ஶபூதரான உபாசார்யர்களும தரிகாலஜ்ஞாநிகளும் தர்மப்ரதிஷ்டையின்பொருட்டேயன்றித் தர்மபரிபாலநத்தின்பொருட்டும் காலதேஶவர்த்தமானங்களினால் யாதாமொரு இடையூறு நேரிட்டுக் குன்றுமாயின் அவதாரஞ் செய்வார்களெனவும் வீரஶைவர்கள் அறிந்து இருக்கிறார்கள். ஆதலால், அல்லமப்ரபுதேவர் திருவவதாரஞ்செய்தனரென்பதற்குத் திருவிளையாடற்புராணமென்னும் ப்ரபுலிங்கலீலையும, மஹாபகதஶிரோமணிகளான நந்திதேவரின் அவதாரமாகிய ஜகத்குரு பஸவேஶ்வரரும், சென்னபஸவேஶ்வரரும், லக்ஷத்துத்தொண்ணூற்றாறுயிரம் ஶிவகணத்தலைவர்களும் அவதரித்தனரென்பதற்கு வ்ருஷபேந்த்ரவிஜயமென்னும் பஸவபுராணமும சென்னபஸவபுராணமும் சான்றாகும். இதுவுமன்றி, *திருக்குடந்தையில் ஸ்ரீ ஸாரங்கதேவர் வீரஶைவ ஸிம்ஹாஸநமும் இன்றும் உளது. இதுவும் புராதன குருபீடமாம். இதன் சரித்ரம பெற முயல்கின்றோம்.

* இது கும்பகோணம் என்று வழங்கும்.

இந்த க்ரந்தத்தில் சில வைதிக படங்களை விதிப்படி அமைத்துபகரிக்க வேண்டிய தாவஸ்யகமென வெழுந்ததோர் பெருங்காதலான், ஓவியத் துறையில் கைபோந்தவரால் வெகுநேர்த்தியாய் எழுதப்பட்டு ஆப்டோஎடுத்த விலையுயர்ந்த நான்கு படங்கள் இதனுடன் சேர்த்துள்ளேம். அவற்றுள், துறைமங்கலம் சிவப்பிரகாசசுவாமிகள் * திருவுருப்படமுமொன்று.

திருவுருப்படங்களை யமைத்தற்குக் காரணம்.

ஸச்சிதாநந்த ஸ்வரூபனாகிய பரமேஸ்வரன் ஸகல சராசரங்களையும் ஸ்ருஷ்டித்து, அவரவரது கர்மத்திற் கேற்பப் பயனை யருளி, ப்ரபஞ்சத்தை நடாத்துகின்றன னென்பது ஆஸ்திகரனைவருக்கும் ஒப்ப முடிந்ததோர் விஷயமே. அநாதியாயுள்ள இந்த ப்ரபஞ்சத்தில் ஜீவகோடிகள் தத்தம் கர்மங்களுக் கேற்பப் பயனைப் பற்பல வுலகங்களில் பற்பல தேஹங்களைக்கொண்டு அநுபவிப்பனவேயாயினும், கர்மவயப்பட்ட பிறவிப்பிணியைப் பெற்றுழலுதலை விட்டு ஸுகித்திருப்பதற்குமோர்வழியுண்டு. அவ் வழியை யடையச்செய்வது ஸாதுஸங்கஸேவை, ப்ரபல ஶ்ருதிவிசாரம், புருஷப்ரயத்நங்களேயாம்.

வேதம், வேதாங்தம், ஆகமாதிகளின் விவரணம்.

இனி, முக்தி யென்பது வீடு. அவ் வீடு கண்கூடாகக் காணக்கூடியதன்று. ஏனெனின், இந்த்ரியங்களுக்கு விஷயமாயுள்ள பொருளே ப்ரத்யக்ஷமாம். முக்தி நிலையோ வெனின், அது இந்த்ரியங்களுக்கு விஷயமாவதன்று. ஆதலின், அதை விளக்குவதற்கென்றே ஶாஸ்த்ரங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஈஶ்வரனது கருணையைப் பெற்றவர்களுக்கே ஜ்ஞாநமும், அதனால் முக்தியும் உண்டாவன வென ஆன்றோர் கூறுவர். இனி, ஈஶ்வரன் யாவன்? ஜீவர்கள் யாவர்? பந்தம் யாது? என வினவி, அவற்றின் உண்மைப்பொருளை யறிவோமாயின், முக்திநிலை இத் தன்மையதென நன்கறிதல் கூடும். இங்ஙனம் விவேகித்து அறிதற்குரிய கருவியாய் நிற்றல் ஶாஸ்த்ரங்களாம். அந்த ஶாஸ்த்ரங்களோ அளவு கடந்தன. ஆயினும், தத்காலம் நம் இந்த்யா தேஶத்தில் ஸாதாரணமாய் நடைபெற்றுவரும் ஸமயங்களோ மூவகைத்தாம். அவை ஶைவ வைஷ்ணவ ஶாக்தங்களாம். ஶைவர் தமது ஶாஸ்த்ரமே சிறப்புற்றதென்றும், அதனாற்றான் முக்தி யடைதல்வேண்டுமென்றும் கூறுவர். வைஷ்ணவரும் ஶாக்தரும் அம் முறையானே தத்தம் ஶாஸ்த்ரங்களே சிறப்புற்றனவென்பர். இனி, இவர்கள் ஶாஸ்த்ரங்களுக்குச் சிறப்பு யாதோ வெனின், வேதத்திற்கு முரணுறாது வேதநெறி நிற்றலே வைதிகத்வ மென்பர். மேலும், இவர்கள் வேதத்திற் கொத்துரைப்பது † ஆகமமெனக் கூறுவர். ஶைவ ஶாஸ்த்ரம்

* இந்தத் திருவுருப்படத்தை நாடி பலவிடங்களில் யான் சஞ்சரித்துழன்றும் பயன் பெறாது வந்தே மீளுங்கால் திருவெங்கையிலும் நல்லாற்றூரிலும் கிடைத்தபிம்பம் இலேகைப் படமுதலியவற்றி னுதரவால் இஃது அமைக்கப்பட்டது.

† ஆகமம் - ஆ என்பது பாஶம் எனவும், க என்பது பஶு எனவும், ம என்பது பதி எனவும் பொருள்படுத்தி த்ரிபதார்த்த லக்ஷணத்தை யுணர்த்து நூல் எனவும், ஆ என்பது ஜ்ஞாநம், க என்பது மோக்ஷம், ம என்பது மலநாஶம் எனவும் பொருள்படுத்தி ஆன்மாக்களுக்கு மலத்தை நாஶம்பண்ணி ஜ்ஞாநத்தை யுதிப்பித்து மோக்ஷத்தைக் கொடுக்கும் நூல் எனவும் கூறுவர்.

* ஶிவாகமங்களாம். வைஷ்ணவ ஶாஸ்த்ரம் † விஷ்ண்வாகமங்களாம். ஶக்தி ஶாஸ்த்ரம் ‡ ஶாக்தாகமங்களாம். ஆயினும், அவர்கள் தத்தம் ஆகமங்களுக்கு அநுகூலமாகத் தோன்றும் ¶ இதிஹாஸ புராணங்களையும் ப்ரமாணங்களாய்க்

---

* ஶிவாகமம் இருபத்தெட்டு :—௧. காமிகம், ௨. யோகஜம், ௩. சிந்த்யம், ௪. காரணம், ௫. அஜிதம் என்னும் ஐந்தும் பரமஶிவனது ஸத்யோஜாதமுகத்தினின்றும், ௬. தீப்தம், ௭. ஸூக்ஷ்மம், ௮. ஸஹஸ்ரம், ௯. அம்ஶுமாந், ௧௦. ஸுப்ரபேதம் என்னும் ஐந்தும் வாமதேவமுகத்தினின்றும், ௧௧. விஜயம், ௧௨. நிஶ்வாஸம், ௧௩. ஸ்வாயம்புவம், ௧௪. ஆக்நேயம், ௧௫. வீரம் என்னும் ஐந்தும் அகோரமுகத்தினின்றும், ௧௬. ரௌரவம், ௧௭. மகுடம், ௧௮. விமலம், ௧௯. சந்த்ரஜ்ஞாநம், ௨௦. முகபிம்பம் என்னும் ஐந்தும் தத்புருஷமுகத்தினின்றும், ௨௧. ப்ரோத்கீதம், ௨௨. லளிதம், ௨௩. ஸித்தம், ௨௪. ஸந்தாநம், ௨௫. ஸர்வோக்தம், ௨௬. பாரமேஶ்வரம், ௨௭. கிரணம், ௨௮. வாதுளம் என்னும் எட்டும் ஈஶாநமுகத்தினின்றுந் தோன்றின. இவற்றுள், காரணம்=கரணம்; ஸஹஸ்ரம் = ஸாஹஸ்ரகம்; ஸுப்ரபேதம் = ஸுப்ரபம், ஸுப்ரபோதம்; ஸ்வாயம்புவம் = ஸ்வயம்பூதம், ஸ்வாயம்பு, ஸ்வயம்பு; ஆக்நேயம்=ஆக்நேயகம், அநலம், அநிலம்; வீரம்= பத்ரம்; மகுடம்=மாகுடம், முகுடம்; சந்த்ரஜ்ஞாநம்=சந்த்ரஹாஸம்; முகபிம்பம் = பிம்பம், முகயுக்பிம்பம்; ப்ரோத்கீதம்=உத்கீதம்; லளிதம்=லலிதம்; ஸந்தாநம் = ஶாந்தம்; ஸர்வோக்தம்=நாரஸிம்ஹம், ஶர்வோக்தம், ஶர்வோத்தரம்; பாரமேஶ்வரம்= பரமேஶ்வரம்; வாதுளம்=வாதூலம், வாதுலம், பரம், பாரதம் எனவும் சில ஆகமங்கள் பலபெயர்களால் வழங்கும்.

இவ் விருபத்தெட் டாகமங்களிலொன்றாகிய ரௌரவம் ௭௩ படலங்களையுடையது. இவற்றுட் பாபவிமோசநப் படலமென்ப தொன்று. இதிலுள்ள ஸூத்ரங்களில் பன்னிரண்டு ஶிவஜ்ஞாநத்தை போதிப்பதாம். திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டதேவர் சிறுவயதிலேயே அவ் வூர்ப் பொல்லாப்பிள்ளையாரென்னும் விநாயகமூர்த்தியின் உபதேஶத்தால் அதன்பொருளை யறிந்து, தமிழில் சிவஞானபோதமெனப் பெயரிட்டுத் தம் ஶிஷ்யர்களுக்குபதேஶித்தன ரென்பர் ஒரு சாரார். வடமொழி ஶிவஜ்ஞாநபோதத்தின் பன்னிரண்டு ஸூத்ரங்களின் பொருள் ஶிவஜ்ஞாநபோதமாமென்று பன்னிரண்டாஞ் சூத்ரத்திலேயே கூறப்பட்டிருத்தலான் ஶிவஜ்ஞாநபோதமென்னும் க்ரந்தமானது ரௌரவாகமத்திலில்லையென்பது பெறப்படுமெனவும், வடமொழிப் பன்னிரண்டு ஸூத்ரங்களையும் தமிழ்மொழிப் பன்னிரண்டு ஸூத்ரங்களையும் செவ்வனே ஒத்திட்டுப் பார்க்குமிடத்து மொழிபெயர்ப்பு முரணுகக் காணப்படுதலான் மெய்கண்டதேவர் ஶிவஜ்ஞாநபோதத்தை வடமொழியினின்று அவ்வாறு முரண்பட மொழிபெயர்த்தனர் என்பது இழுக்காகுமெனவும், அதனால் அந்த ஶிவஜ்ஞாநபோதமானது வடமொழியினைத் தழுவாததோர் ஶாஸ்த்ரமாமெனத்துணிதற்பாலதெனவும், மெய்கண்டதேவர் அருளிய ஶிவஜ்ஞாநபோதத்தினும் அருணந்திஶிவாசார்யர் அருளிய ஶிவஜ்ஞாநஸித்தியாரினும் வடமொழியினின்று மொழிபெயர்த்ததாகக் காணப்படவில்லையெனவும் கூறுவர் மற்றொரு சாரார். தென்மொழி ஶிவஜ்ஞாநபோதத்தையே மொழிபெயர்த்து வடமொழியாகமத்துட் சேர்க்கப்பட்டுள்ளதெனவும் செப்புவர் இன்னொரு சாரார். எவ்வாறாயினுமாகுக. உண்மையினை யாராய்ந்தறிதல் அறிஞர்க்கழகாம். ஈண்டு உதாஹரணமாக இரண்டு ஸூத்ரங்களை மட்டுமெடுத்துக் காட்டுவாம். அவை வருமாறு:—

---

† விஷ்ண்வாகமம் இரண்டு:—பாஞ்சராத்ரம், வைகாநஸம்.

‡ ஶாக்தாகமம் ஒன்று :—வாமம்.

¶ இதிஹாஸம்:— பாரத ஶிவரஹஸ்யங்களாம். அன்றியும், பாரத ராமாயணங்களெனவும், பாரத ராமாயண ஶிவரஹஸ்யங்களெனவும் கூறுவாருமுளர்.

கொள்கின்றனர். சைவர் சிவாகமங்கள் வேதத்தோடு முரணுறுமல் அதற்கு வ்யாக்யானம்போல வேதப்பொருளையே விளக்கவந்தமையான் அவைகளே வைதிகமென்பர். அம் முறையனே, ஏனைய இருவரும் கூறுவர்.

"வேதம்" என்னும் பதம் "விதஜ்ஞாநே" என்னும் வடசொல் தாதுவுக்கு "கரணே காதுவஞ்" என்னும் விகுதி சேர்ந்து "வேத" என்னும் சொல் வந்தது. "வேத்யந்தே தர்மார்த்தகாமமோக்ஷா: ஜ்ஞாயந்தே அநேந" (தர்மார்த்தகாமமோக்ஷங்கள் இதனால் அறியப்படுகின்றன வாதலின்) என்று வேதம் என்னும் பதத்திற்கு வடமொழி * வ்யாகரண விதிப்படி பொருள் கொள்ளப்பட்டிருத்தலான் தர்மார்த்த காமமோக்ஷங்களை விளக்குவதே வேதமென்றுணர்க.

---

சிவேநைகத்வம் ஸத்வஸ்ய தத்ஸ்வரூபத்வசக்திக: ।
ஸோSயமேகத்வஸம்பந்நோ பவதி ஸ்வாநுபூதித: ॥

அவனே தானே யாகிய வந்நெறி
யேக னுகி யிறை பணிநிற்க
மலமாயை தன்னொடுவல் வினை யின்றே.

ஸம்பக்த்யா ஸஹிதோ பக்தைஸ்ஸங்கம் சிவாலயம் ।
ஸேவம் வித்யா ஜ்ஞாநஸம்பந்நோ மோக்ஷஸித்திபாக் ॥

செம்மலர் நோன்றாள் சேர லொட்டா
வம்மலங் கழீஇ யன்பரொடு மரீஇ
மாலற நேய மலிந்தவர் வேடமு
மாலயந் தானு மரனெனத் தொழுமே.

**புராணம் பதினெட்டு** :— க. ப்ரஹ்மம், உ. பத்மம், ௩. வைஷ்ணவம், ௪. சைவம், ௫. பாகவதம், ௬. நாரதீயம், எ. மார்க்கண்டேயம், அ. ஆக்நேயம், ௯. பௌஷ்யம், ௧௦. ப்ரஹ்மகைவர்த்தம், ௧௧. லிங்கம், ௧௨. வராஹம், ௧௩. ஸ்காந்தம், ௧௪. வாமநம், ௧௫. கூர்மம், ௧௬. மத்ஸ்யம், ௧௭. காருடம், ௧௮. ப்ரஹ்மாண்டம். இவற்றுள், நாரதீயம் பாகவதம் காருடம் வைஷ்ணவம் என்னும் நான்கும் விஷ்ணுபுராணமும், ப்ரஹ்மம் பத்மமென்னுமிரண்டும் ப்ரஹ்மபுராணமும், ப்ரஹ்மகைவர்த்தமென்பது ஸூர்யபுராணமும், ஆக்நேயமென்பது அக்நிபுராணமும், ஏனைய பத்தும் சிவபுராணமுமாம்.

**உபபுராணம் பதினெட்டு** :— க. ஸநத்குமாரம், உ. உசநம், ௩. நாரஸிம்ஹம், ௪. நந்தி, ௫. சிவதர்மம், ௬. துர்வாஸம், எ. நாரதீயம், அ. கபிலம், ௯. மாநவம், ௧௦. ஆங்கிரம், ௧௧. வாருணம், ௧௨. காளி, ௧௩. வாஸிஷ்டலைங்கம், ௧௪. ஸாம்பவம், ௧௫. ஸௌரம், ௧௬. பராசரம், ௧௭. மாரீசம், ௧௮. பார்க்கவம். இவ்வாறன்றி, க. ஆதித்யம், உ. ஸ்காந்தம், ௩. ஸோமம், ௪. கபிலம், ௫. கௌசிகம், ௬. ஸாம்பம், எ. சிவதர்மம், அ. தௌர்வாதம், ௯. நாரஸிம்ஹம். ௧௦. நாரதீயம், ௧௧. பராசரீயம், ௧௨. பார்க்கவம், ௧௩. ப்ரஹ்மாண்டம், ௧௪. மாரீசம், ௧௫. மாநவம், ௧௬. வாஸிஷ்டம், ௧௭. வாயவ்யம், ௧௮. வாருணம் எனவும் கூறப்பட்டுள்ளன.

* வேதபாஷ்யம், யாஸ்கமுநிவர்செய்த நிருக்தம், சரணவ்யூஹம், மாத்யந்தஸாரப்ரகாசம் முதலியன.

வேதமானது ருக் யஜுஸ் ஸாமம் அதர்வணமென * நான்கு வகைப்படும். பின்னும், அது பற்பல ஶாகைகளாய்ப் பேதப்பட்டிருக்கிறது. இது பரமேஶ்வரனால் ஓதப்பட்டதென பற்பல ப்ரமாணங்கள் காணப்படுகின்றன. ஆதலின், அதன் உண்மையினை சற்றாராய்வாம்.

---

* அஜபா வேதம் சேர்ந்து ஐந்தெனவும் வழங்கும். பஞ்சாசார்யர்கள் ஐந்து வேதங்களுக்கு முறையானே அதிகாரிகளாவர். இவர்களைப் பஞ்சமுகோத்பவர்களெனக் கூறுவர்.

உபவேதம் நான்கு:—க. ஆயுர்வேதம், உ. அர்த்தவேதம், ங. தநுர்வேதம், ச. க

அங்கம் ஆறு:—க. சந்தஸ், உ. கல்பம், ங. வ்யாகரணம், ச. ஶிக்ஷா, ரு. ஜ்யோதிஷம், சு. நிருக்தம்.

உபாங்கம் நான்கு:—க. மீமாம்ஸா, உ. ந்யாயம், ங. புராணம், ச. ஸ்ம்ருதி.

ஸ்ம்ருதி பதினெட்டு:—க. மநு, உ. அத்ரி, ங. விஷ்ணு, ச. யாஜ்ஞவல்க்யம், ரு. உஶநம், சு. ஆங்கிரஸம், எ. யமம், அ. ஆபஸ்தம்பம், கூ. ஸம்வர்த்தம், க0. காத்யாயநம், கக. ப்ருஹஸ்பதி, கஉ. பராஶரம், கங. வ்யாஸம், கச. ஸங்கலிதம், கரு. தக்ஷம், கசு. கௌதமம், கஎ. ஸாதாதபம், கஅ. வஸிஷ்டம்.

ஶாஸ்த்ரம் ஆறு:—க. வேதாந்தம், உ. வைஶேஷிகம், ங. பாட்டம், ச. ப்ரபாகரம், ரு. பூர்வமீமாம்ஸா, சு. உத்தரமீமாம்ஸா.

திருமூலர்.

வேதத்தை விட்ட வறமில்லை வேதத்தின்
ஓதத் தகுமற மெல்லா முள தர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை யோதியே வீடுபெற் றார்களே.

திருநெறி யாவது சித்தசித் தன்றிப்
பெருநெறி யாய பிரானை நினைந்து
குருநெறி யாஞ்சிவ மாநெறி கூடும்
ஒருநெறி யொன்றாக வேதாந்த மோதுமே.

அஞ்சன மேனி யரிவையோர் பாகத்தன்
அஞ்சொ டிருபத்து மூன்றுள வாகமம்
அஞ்சலி கூப்பி யறுபத் தறுவரும்
அஞ்சா முகத்தி லரும்பொருள் கேட்டதே.

அண்ண லருளா லருளுஞ் சிவாகமம்
எண்ணி லிருபத்தெண் கோடிநூ றாயிரம்
விண்ணவ ரீசன் விழுப்ப முரைத்தனர்
எண்ணிநின் றப்பொரு ளேத்துவ னானே.

பண்டித ராவார் பதினெட்டுப் பாடையுங்
கண்டவர் கூறுங் கருத்தறி வாரென்க
பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையும்
அண்ட முதலா னரன்சொன்ன வாறே.

ப்ரளயாந்த * கல்பந்தோறும் பரமேஸ்வரன் தன்னிடம் ஸூக்ஷ்மமா யொடுங்கிநின்ற வேதத்தை முந்தின கல்பத்திலுள்ளதான பதவாக்ய முறையானே பஞ்சாசார்ய திருவுருவந்தாங்கி முதன்முதல் சொல்லுகின்றனன். அதனை ப்ரஹ்மாதியருபதேசம் பெற்றுப் பரவச்செய்கின்றனர். பண்டித ஶிரோமணிகளான காளிதாஸர் கம்பராதியோர் பூர்வமில்லாத நவீந வாக்யங்களோடு கூடின காவ்யகல்பநாலங்காரம் ஆக்கியது போன்று, பரமேஸ்வரன் வேதங்களை நவீநமாய் ஆக்கினவனல்லன். வேதம் எல்லாக் கல்பங்களினும் ஒரேவிதமான சொற்றொடர்களோடு கூடினவைகளாய்ப் பரமேஸ்வரனாற் கல்பாதியில் சொல்லப்படுகின்றது. இவ்வாற்றான், முற் கல்பத்து வேதமே பரமேஸ்வரனிடத்தினின்று கல்பாதியில் தோன்றுகின்றதென்பதும், வேத கர்த்தா பரமேஸ்வர னென்பதும், அநாதியென்பதும், நித்யனென்பதும், ஸ்வயம்பென்பதும் பெறப்படும்.

---

அண்ண லருளா லருளுந்திவ் யாகமம்
விண்ணி லமரர் தமக்கும் விளங்கரி
தெண்ணி லெழுபது கோடி நூறாயிரம்
எண்ணிலு நீர்மே லெழுத்தது வாகுமே.

சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவம்
உவமா மகேச ருருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மிற்றும் பெற்ற
நவவா கமமெங்க ணந்திபெற் றானே.

பெற்றநல் லாகமங் காரணங் காமிகம்
உற்றநல் வீர முயர்சிந்தம் வாதுளம்
மற்றவ் வியாமள மாகுங்கா லோத்தரந்
துற்றநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே.

அண்ண லருளா லருளுஞ் சிவாகமம்
எண்ணிலி கோடி தொகுத்திடு மாயினும்
அண்ணல றைந்தவ திவறியா விடின்
எண்ணிலி கோடியு நீர்மே லெழுத்தே.

அவிழ்க்கின்ற வாறு மதுகட்டு மாறுஞ்
சிமிட்டலைப் பட்டுயிர் போகின்ற வாறுந்
தமிழ்ச்சொல் வடசொல் லெனுமிவ் விரண்டும்
உணர்த்து மவனை யுணரலு மாமே.

சதாசிவந் தத்துவ முத்தமிழ் வேத
மிதாசனி யாயிருந் தேநின் றகால
மிதாசனி யாயிருந் தேமன நீங்கி
யுதாசனி யாதுட னேயுணர்ந் தேமால்.

---

* ப்ரஹ்மாவின் ஆயுள்:—மநுஷ்ய வருஷம் ௪௩௨0000 கொண்டது ப்ரஹ்மாவுக்கு ஒரு நாள். அப்படி ௩௬0 நாள் கொண்டது ப்ரஹ்மாவுக்கு ஒரு வருஷம். அப்படி நூறு வருஷம் கொண்டது ப்ரஹ்மாவின் ஆயுள் அல்லது கல்பம், இதனுடன் லோகாந்தமாம்.

இவ் வேதம் கர்மகாண்டமெனவும் ஜ்ஞாநகாண்டமெனவும் இருவகைப் படும். கர்மகாண்டத்தில் ஜ்ஞாநம் கூறப்பட்டிருப்பினும், அது சிறுபான்மை யும் கர்மமே பெரும்பான்மையும் விளக்கப்பட்டுளது. அம் முறையானே, ஜ்ஞாநகாண்டத்தில் கர்மம் கூறப்பட்டிருப்பினும், அது சிறுபான்மையும் ஜ்ஞாநம் பெரும்பான்மையும் விளக்கப்பட்டுளது. இங்ஙனம் கூறும் கர்மத் தினால் ஈஶ்வர ப்ரஸாதமும், அதனால் சித்த ஶுத்தியுமேற்பட, ஜ்ஞாநத்தி னால் முக்திநிலை நிலைக்குமாதலான், கர்மம் ஜ்ஞாநத்திற்கு ஸாதநமாகி ஜ்ஞாநகாண்டமே முக்யப்பொருளாதலன்றி ஜ்ஞாநம் கர்மத்திற்கங்கமாகா.

ஒவ்வொரு ஸமயத்தரும் வைதிகமென்பர். வைதிகமென்பது வேதத்தை யநுஸரித்ததெனப் பொருள்படும். எந்த ஸமயத்தாரது ஶாஸ்த்ரம் வேதத்தை யநுஸரித்து அந் நெறி நிற்கின்றதோ, அது வைதிகமென்பதை யாவரும் ஒத்துக்கொள்வர். இங்ஙனம், வேதத்தைக்கொண்டே உண்மை யறியவேண்டி யிருத்தலான், பரஶிவப்பொருள் வேதத்தினாலேயே யறியவேண்டியதென் னும் * வேதவாக்யங்களோ எண்ணிறந்தன.

இவ்வாற்றானே, வேதம் முக்ய மெனவும், அதனாற்றான் மெய்ஞ்ஞாந மடைய வேண்டுமெனவுமறிக. அங்ஙனமாயின், யாவரது ஆகமம் வேதநெறி நின்று வைதிகத்தன்மை பெற்றுளதோ வென்பதை நன்கு ஆராய்தல் ஆன் றோர்க்கழகாம்.

வேதத்தில் பந்த மோக்ஷங்களை விளக்கி முக்தியடையும் மார்க்கத்தைப் போதிப்பது ஜ்ஞாநகாண்டமே. அது வேதத்திறுதியாகி † வேதஶிரஸ்ஸு எனவும், வேதாந்தம் எனவும், உபநிஷத் எனவும் பெயர்பெறும்.

இனி, ஜ்ஞாநநிலையைப் போதிப்பதாகிய உபநிஷத்துக்கள், ப்ரஹ்மமெனப் படும் ஶிவமே ஸத்யமென்றும், பேதஜ்ஞாநத்தால் ‡ த்ரி பதார்த்தங்களும் வெவ்வேறு வகைப்படக் காணப்படு வன வென்றும், அபேத ஜ்ஞாநத்தால் த்ரிபதார்த்தங்களும் பரஶிவப் பொருளே யென்றும், அபேத ஜ்ஞாநமே ஜ்ஞாந

வீரஶைவ ஸமயம் வைதிக மென்பது.

* கைவல்யோபநிஷத்:—அநேக வேதங்களால் யானறியப்படுவோன். வேதத்தை வெளியிட்டவனும், ஆக்கினவனும், அறிந்தவனும் யானே.

முக்திகோபநிஷத்:—யான் வேதாந்தத்தில் நன்கு விளங்குகிறவன். வேதாந்தத்தைக் கைக்கொள்வாயாக.

வேதாந்தவிசாராத்த்யாயம்:—இவ் வேதாந்த மார்க்கத்தை விட்டு, ஏனைய மார்க்கத் தைக் கைக்கொள்பவன் கையிற் கிடைத்த பாயஸத்தை யிழந்து முழங்கையை நக்குபவ னவன். வேதமார்க்கத்தாலன்றி ஏனைய மார்க்கத்தால் ஜீவர்கள் முக்தியடைவார்களாயின், இருட்டில் கடமாதியவற்றைப் பார்ப்பார்கள். ஆதலின், வேதத்தில் ஓதியுள்ள பொருள் ஸத்யம் ஸத்யம் என்றது.

† வேதத்திற்கு ஶிரஸ்ஸு போன்றதா யிருப்பதனால் வேதஶிரஸ்ஸு எனப்படும். வேதத் தின் அந்தத்திருப்பதனால் வேதாந்தம் எனப்படும். முமுக்ஷுக்கள் ஸத்விசாரஞ்செய்து, நிஷ்டைகூடி, அஜ்ஞாநம் ஒழிந்து, முக்தர்களாவதற்கு ஸர்வ ஸாதநமாயுள்ள ப்ரஹ்ம வித்யை யாதோ, அது உபநிஷத் எனப்படும்.

‡ பதி பஶு பாஶம்.

மென்றும், அப் பரமஶிவத்தை யறிந்தவனே ப்ரஹ்மமென்றும் ஓதுகின்றன. இங்ஙனமோதுமுபநிஷத்வாக்யங்களால் வேதாந்தமென வழங்குவது ஶிவாத்வைத ஸித்தாந்தத் துண்மையேயெனத் தெளிதற்பாலதாம். ஆதலின், வேதாகமங்களுடன் முரணுறாது காணப்படும் ஸமயஶாஸ்த்ரங்கள் எவையோ, அவை வைதிகமெனக் கோடற்றகுதியுடைத் தென்பர் ஆன்றோர்.

திவ்யாகமங்களின் ஸாரமாகிய சிந்தாந்தசிகாமணி யென்னும் இவ் வுத்தம க்ரந்தத்தில் போதிக்கப்படும் முக்ய விஷயங்கள் மேற்கூறிய முறையானே உபநிஷத்வாக்ய விஷயங்களையே அநுஸரித்திருத்தலானும், வாக்யங்களும் பெரும்பான்மையும் உபநிஷத் வாக்யங்களாகவே அமைக்கப்பட்டிருக்தலானும், வேதாந்தமென்னும் ஶிவாத்வைதத்தையே முறையுறப் போதித்தலானும் இது வைதிகமென்பது இனிது விளங்குகிறது. அவ்வாற்றான், அறிஞர் இவ்வுத்தமோத்தம க்ரந்தத்தை அங்கீகரிப்பரென்பதே துணிபு.

மேலும், ஶிவாகமங்களினும் * பலபேதங்கள் காணப்படுவனவாயினும், காமிகாதி வாதுளாந்தமாயுள்ள இருபத்தெட்டாகமங்களின் உத்தரகாண்டமனைத்தினும் ஓதப்பட்டிருக்கும் வீரஶைவம் என்னும் ஶிவாத்வைதமே இந்தச் சித்தாந்தசிகாமணியால் நன்கு போதிக்கப்படுமாதலின், இது இறைவன் அருளிய திவ்யாகமங்களுக்கு இணங்கியதாமென்றறிக. இவ்வாறுராய்வதனால் பெறப்படுவதியாதோவெனின், அதனைக்கூறுவாம். † வீரஶைவ ஸமயமானது மற்ற ஸமயங்களைப் போன்று ஏகதேஶமுறாது ஸமஸ்தாகமங்களி னுத்தர காண்டங்களினும் சிறப்பாக வீராகம வாதுளாகமாதிகளின் பூர்வோத்தர காண்டங்கண் முற்றினும் எடுத்தோதப்பட்டிருத்தலானும், இவ்வாகமங்களும் வேதப்பொருளினையே ஓதலானும், அநாதியாய் நிற்றலானும், ஜ்ஞாநவான்களெல்லோராலும் தழுவப்படுதலானும் வேதாகமோக்த ஸமயமாமென்பதே திண்ணம். இந் நூலில் கூறியுள்ளதாவது:—

> "வேதமோ டாக மங்கள் வேறுபா டின்றி நல்குந்
> தீதறு பொருளை யெல்லாந் திரிவற வுலகிற் காட்டு
> மாதவ னனைய விந்நூல்......"

---

* பாஷாணவாதஶைவம், ஸங்க்ராந்தவாதஶைவம், அவிகாரவாதஶைவம், பரிணாமவாதஶைவம், ஶுத்தஶைவம், பேதஶைவம் ஆகிய இவைமுதலியன.

† வீரஶைவஸமயம் வேதங்களிலும் ஆகமங்களிலும் புராணங்களிலும் ஏனைய நூல்களிலும் கூறப்பட்டுளது:—

(க.) அடியில் வரும் சரித்ரம் காமிகாகமத்தில் காணப்படுகிறது:— "அஜாமிளா வென்பவர் தம் மனைவியுடன் வழிப்ரயாணம் போகையில், இவர்களைச் சில திருடர்கள் எதிர்ப்பட்டுத் தாக்கினார்கள். அதுகண்ட அஜாமிளா வென்பவர் தம் மனைவியின் சூழ்ச்சியைக்கொண்டு, உடனே தன்னிடத்திருந்த விலையுயர்ந்த ஆபரணங்களைக் கழற்றி ஓர் வஸ்திரத்திலிட்டு லிங்கமாக முடிந்து, வீரஶைவராகத் தோன்றும்படிக் கழுத்திற் றரித்துக்கொண்டனர். இவ் வுபாயத்தினால் அவர்கள் க்ஷேமமடைந்தனர். எவ்வாறெனின், அத் திருடர்குழாங்களுக்குத் தலைவனான மித்ரகுப்தன் பார்த்து, வீரஶைவர்களிடம் சிறந்த பக்திமானாதலான் அவர்களை வருத்தக் கூடாதென்னுஞ் சித்தம் பிறந்து, மற்றைத் திருடர்களை நோக்கி, அவர்களை உடனே விட்டு விடும்படி உத்திரவளித்தனன். இதனால், வீர

இனி, இந்த க்ரந்தத்தில் ஸர்வாத்வைதநிரஸநஸ்த்தலம், அஷ்டமூர்த்தி நிரஸநஸ்த்தலம், ஸர்வகதநிரஸநஸ்த்தலமாதியான அவாந்தரஸ்த்தலங்களில் வேதவாக்யங்களுக்கு விருத்தமாக த்வைதம் கூறப்பட்டிருத்தலான், வீரசைவ ஸமயம் வைதிகமெனத்துணிதல் எவ்வாற்றானுவ்வுமோ வெனின், நன்கு ஒவ்வும். என்னை? கர்மமார்க்கத்திலே செல்லும் வீரமாஹேஶ்வரர்களென்னும் அதிகாரிகளை நோக்கி உபாஸநாநுகூல்யமாக ஓதப்பட்டிருத்தலன்றி வேதத்திற்கு விருத்தமாக ஓதவந்ததன்றென்றுணர்க.

மேலும், கர்மமும் ஜ்ஞாநமும் ஒன்றை யொன்றவாவியிருத்தலான் அவ் வுபய ஸ்த்தலத்தினையும் கைப்பற்றல் வேண்டியதென க்ரியாகமஸ்த்தலத்தில் ஓதப்பட்டுள்ளது. ஆதலின், மேற்போந்த ஸ்த்தலங்களில் த்வைதத்தைக்

---

சைவமானது காமிகத்திற்கு முற்பட்டிருந்ததென்பதும் அக்காலத்தில் திருடர்களும் வீரசைவ ஸமயத்தில் ஓர் மதிப்பினை வைத்திருந்தனரென்பதும் பெறப்பட்டது.

(உ.) மஹாபாரதத்தில் அநுஶாஸந பர்வத்தில் தர்மராஜருக்கும் பீஷ்மருக்கும் நடந்த ஸம்பாஷணையினால் அக்காலத்தில் வீரசைவ ஸமய மிருந்ததாகத் தெரிய வருகிறது.

(ங.) வேதவ்யாஸரருளிய ஸ்கந்தபுராணம் ஶங்கரஸம்ஹிதையில் ஸ்வேதன் குமாரனான பிங்கலனென்னுமோரந்தணன் ஸதாநந்தமுநிவரால் வீரசைவராயினர் என்பதோர் சரித்ரம் காணப்படுகிறது.

(ச.) ஸ்ரீபஸவேஶ்வரரைப்போல ஸ்ரீ ஶங்கராசார்யருடைய தாய்தந்தையரும் வெகு காலமாகப் பிள்ளை யில்லாதிருந்தார்கள். அவர்கள் சைவர்களாதலான், ஶிவபெருமானை நோக்கித் தவஞ்செய்ய; பெருமான் கடாக்ஷத்தினால் ஶங்கரர் பிறந்தனர். ஶங்கரர் தாயார் சிவபிரானை ஜங்கம ரூபமாகப்பாவித்து பூஜித்தது * ஶங்கரவிஜயம் த்விதீய ஸர்க்கத்தினால் தெரியவருகிறது. இதனால், அக்காலத்தில் ஜங்கமாகளைப்பற்றிய விஷயம் ஶங்கராசார்யரின் தாய்தந்தையருக்குத் தெரிந்திருந்ததென்றும் ஜங்கமர்களிடத்தில் இந்துக்களெல்லோரும் விஶ்வாஸமுள்ளவர்களா யிருந்தனரென்றும் கூறுவர்.

(ரு.) வீரசைவஸமயத்திற் சேர்ந்தவர்கள்:— கி. பி. 12 - ம் நூற்றாண்டின் கன்னட பாஷையின் கல்வித்திறத்தைக் குறித்த சரித்ரத்தில் காணப்படுவதாவது:—

"கி. பி. 1165 - ம் ஆண்டில் த்ரிபுவநதாதா வென்னுமோரந்தணர் வீரசைவ பண்டிதரான பத்மராஜ-ப என்பவரோடு ஸமயக்கொள்கை கல்வித்திறங்களைக் குறித்து வாதஞ்செய்து தோல்வியடைந்து வீரசைவராகி அடிமையாயினர்.

கி. பி. 1195 - ம் ஆண்டில் சக்ரபாணிரங்கநாதரென்னுமோர் வைஷ்ணவ பண்டிதர் கவிவாணரான பால்குருகி ஸோமநாதாராத்ரியரோடு ஸமயக்கொள்கையைக் குறித்து வாதஞ்செய்து தோல்வியடைந்து வீரசைவராயினர்."

(சா.) பேர்பெற்ற ஆங்கில பண்டிதர்களான ப்ரொபஸர் உல்ஸன்துரை, ப்ரொபெஸர் உல்லியம்ஸ்துரை, ரெவரெண்ட் கிட்டல்துரை, ரெவரெண்ட் பார்த்துரை, மூர் துரை, டெஷ்பாண்டிதுரை, காட்டிதுரை, டாக்டர் பார்நட்துரை ஆகிய இவர்கள் வீரசைவ ஸமயமானது புராதநமான தென்று தங்கள் தங்கள் வ்யாஸங்களிற் கூறியுள்ளார்.

---

* ஶங்கரவிஜயம்.

[illegible Grantha verse, two lines]

கூறியது உபாஸனை நிலைப்பதன் பொருட்டேயாம். அன்றியும், வீரசைவ ரநுஷ்டிக்கும் * பஞ்ச ஶிவயஜ்ஞாதி கர்மமானது ஜ்ஞாந ஹேதுவின் பொருட்டேயன்றி, அல்ப பலனைத்தருவதும் ப்ராணஹிம்ஸைசெய்வதுமாகிய யஜ்ஞாதி கர்மகாண்டநெறியினை எவ்வாற்றானும் குறித்ததன்று. யாதுபற்றியாதோவெனின், என்றுமழியாத ஸுகப்ராப்தியிலன்றி, சின்னாளிலழிவடையும் அப் பதப்ராப்தியில் எத்துணையேனும் நாட்டமின்றென்க.

இனி, லிங்கதாரணாதியான விதி இந்த க்ரந்தத்தில் கூறப்பட்டுள்ளனவே, முன்னர் நிரூபித்த முறையானே உபநிஷத்துக்களில் காணப்படவில்லையே, இதனை வைதிகமென்பது எங்ஙனமொவ்வும்? என்னும் ஆஸங்கை நிகழுமன்றே? அதற்குத்தரம் கூறுவாம்.

லிங்க தாரணஞ் செய்தல் வேதாக மோக்த விதியே யென்பது.

ஶாஸ்த்ரங்களும் கர்மகாண்டமெனவும், ஜ்ஞாநகாண்டமெனவும் இருவகைப்படும். கர்மமானது சித்தஶுத்தி மூலமாய் ஜ்ஞாநத்திற்கு ஹேதுவாதலான், ஜ்ஞாநகாண்டமே முக்யமெனப் பெறப்படும். ஜ்ஞாநத்தினாலேயே முக்தி யடையப்படுமென்று ஸகல வேதஶாஸ்த்ரங்களும் ஓதுகின்றன. என்றால், ஸகல புருஷார்த்தங்களும் முக்திக்குத் தாழ்வுடையனவென்றறிக. இம் முறையானே முக்தியானது பரமாயதோர் நிலை என்றேற்படுதலானும், அவ்வாற்றான முக்திநெறியையுபதேஶிக்கும் ஜ்ஞாநகாண்டம் முற்றினும் வேதநெறி நிற்றலானும், அந் நன்னெறியை வைதிகமெனத் துணிதலே சான்றாகும். வ்யாஸரது ப்ரஹ்ம ஸூத்ரங்களின் மேனிகழ்ந்த நீலகண்ட பாஷ்யத்தின் காரிகையாகும் க்ரியாஸாரத்தின் இரண்டாம் காண்டம், ௨௩-ம் படலத்தில் க்ரந்தகர்த்தா கூறுவதாவது:—வேதங்களில் லிங்கதாரணம் விதிக்கப்பட்டுள்ளதென்றும், ஶைவர்கள் யஜ்ஞோபவீதம் தரிப்பதுபோல வீரஶைவர்கள் லிங்கம் தரிக்கின்றார்களென்றும், அதனால் அது நாம் அடிக்கடி † ஶிவ ஸம்பந்த மாதற்குரியதோர் அடையாளமா யிருப்பதென்றுமறிதற்பாலதாம்.

---

* ஆகமாந்தவாக்யங்கள்.

ஶிவார்ச்சநாதிகர்மேஜ்யம் ஶாஸ்த்ரம் யாமாதிநோதிதே ।
ஜபம் பஞ்சாக்ஷரஸ்யாஸௌ ப்ரணவாத்யஸ்ய சைவ வா ।
ருத்ராத்யாயாதிகஸ்யாஸௌ ந வேதாத்யயநாதிகம் ।
த்யாநம் ஶிவஸ்வரூபஸ்ய நாதி விஷ்ணுநாத்ராதிசிந்தநம் ।
ஶிவாகமாத்யவிஜ்ஞாநம் ஜ்ஞாநம் நாநாத்யவேதநம் ।
இதி பஞ்சப்ரகாரோऽயம் ஶிவயஜ்ஞ: ப்ரகீர்த்தித: ॥

† திருமூலர்.

சைவஞ் சிவனுடன் சம்பந்த மாவது
சைவந் தனையறிந் தேசிவஞ் சாருதற்
சைவஞ் சிவந்தன்னைச் சாராம னீவுதற்
சைவஞ் சிவானந்தஞ் சாயுச் சியமே.

*அன்றியும், இந்த க்ரந்தத்தில்*

பங்கயற் கிறைவ னின்மேய் பவித்திர மேனவி ருக்கோன்
றிங்குரைப் பதனுற் றாய்தா விலங்குறுஞ் சிவலிங்கந் தான்
றங்குறத் தரிக்கத தக்க தாகுமச் சைவ லிங்க
மங்கலம் புனித தீக்கை மருவுறு னடைந்தி டானல், * என்னும்

ருக்வேத *ப்ரமாணத்தானும்,*

உன்றநு வகோர மாகி யுருத்ரபா வத்தி னீங்கு
மென்றேசு ருரைத்த லாலே லிங்கதா ரகனுஞ் சைவன்
துன்றுபா வங்க ளெல்லாந் தொலைப்பவ னென்பர் மேலோர்
தென்றலங் குன்றி னுற்ற செஞ்சடை முனிவ ரேறே, என்னும்

யஜுர்வேத *ப்ரமாணத்தானும்,*

ஓ புத்ரனுன ஷண்முக! ஆசார்யனுல் பூஜிக்கப்பட்டுத் தந்த யாதொரு இஷ்டலிங்கத்தை ஹஸ்தம் என்னும் பீடத்தில் வைத்து, அம் மஹாலிங்கத்தில் லயித்த மனமுள்ளவனுகி பாஹ்ய க்ரியைகளில் பற்றற்று பூஜை செய்கிறவனே வீரஶைவனெனப்படுவன், என்னும்

ஶங்கரஸம்ஹிதா *ப்ரமாணத்தானும்,*

வீராகமம், வாதுளாகமம், பாரமேஶ்வராகமம், ஸ்வாயம்புவாகமம், ஸுப்ர போதாகமம், விஜயாகமம், மகுடாகமம், சந்த்ரஜ்ஞானாகமம், ஶாந்தாகமம், வீரஶைவதர்மஶிரோமணி, வீரஶைவ பாஷ்யங்கள், க்ரியா ஸாரம், லிங்கதாரணசந்த்ரிகா என்னும்

*ஶ்ருதிப்ரமாணங்களானும்,*

*லிங்கதாரணஞ்செய்தல் வேதாகமவிதியாமென்றறிக. அவ்வாற்றானே விபூதிதாரணமும், ருத்ராக்ஷதாரணமும், பஞ்சாக்ஷரஜபமுமாம்.*

---

* சித்தாந்தசிகாமணி ருக்வேதம் யஜுர்வேதம் தைத்திரீயோபநிஷத்வாக்யங்கள்.

𑌵𑍇𑌦𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌪𑍁𑌰𑌾𑌣𑍇𑌷𑍁 𑌕𑌾𑌮𑌿𑌕𑌾𑌦𑍍𑌯𑌾𑌗𑌮𑍇𑌷𑍁 𑌚 ।
𑌲𑌿𑌙𑍍𑌗𑌧𑌾𑌰𑌣𑌮𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌵𑍀𑌰𑌶𑍈𑌵𑌸𑍍𑌯 𑌨𑌿𑌶𑍍𑌚𑌯𑌾𑌤𑍍 ॥
𑌋𑌗𑌿𑌤𑍍𑌯𑌾𑌹𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂𑌤𑍇 𑌵𑌿𑌤𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌸𑍍𑌪𑌤𑍇 ।
𑌤𑌸𑍍𑌮𑌾𑌤𑍍𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂 𑌤𑌲𑍍𑌲𑌿𑌙𑍍𑌗𑌂 𑌧𑌾𑌰𑍍𑌯𑌂 𑌶𑍈𑌵𑌮𑌨𑌾𑌮𑌯𑌮𑍍 ॥
𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑍇𑌤𑌿 𑌲𑌿𑌙𑍍𑌗𑌮𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑌃𑌪𑌤𑌿 𑌰𑍀𑌶𑍍𑌵𑌰𑌃 ।
𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂𑌤𑌦𑍍𑌧𑌿𑌵𑌿𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌤𑌤𑍍𑌸𑌂𑌪𑌰𑍍𑌕𑌾𑌤𑍍𑌤𑌨𑍁𑌶𑍍𑌶𑍁𑌚𑌿𑌃 ॥
𑌅𑌤𑌪𑍍𑌤𑌤𑌨𑍂𑌰𑌜𑍍𑌞𑍋𑌵𑍈 𑌶𑍍𑌰𑍁𑌤𑍇𑌸𑍍𑌸𑌂𑌸𑌾𑌰𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 ।
𑌦𑍀𑌕𑍍𑌷𑌯𑌾𑌰𑌹𑌿𑌤𑌸𑍍𑌸𑌾𑌕𑍍𑌷𑌾 𑌨𑍍𑌨𑌾𑌧𑌾𑌰𑍍𑌯𑌂 𑌲𑌿𑌙𑍍𑌗𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥
𑌦𑍇𑌵𑌾𑌸𑍁𑌰𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑌾𑌣𑌾𑌂 𑌸𑌿𑌦𑍍𑌧𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌧𑌰𑍇𑌷𑍁 𑌚 ।
𑌉𑌕𑍍𑌤𑌂𑌤𑌤𑍍𑌸𑌰𑍍𑌵𑌵𑍇𑌦𑌾𑌨𑌾𑌂 𑌲𑌿𑌙𑍍𑌗𑌧𑌾𑌰𑌣𑌮𑍁𑌤𑍍𑌤𑌮𑌮𑍍 ॥
𑌅𑌘𑍋𑌰𑌾𑌪𑌾𑌪𑌕𑌾𑌶𑌿𑌨𑍀 𑌯𑌾𑌤𑍇𑌰𑍁𑌦𑍍𑌰𑌶𑌿𑌵𑌾𑌤𑌨𑍂𑌃 ।
𑌯𑌜𑍁𑌷𑌾𑌧𑍀𑌯𑌤𑍇𑌯𑌸𑍍𑌮𑌾𑌤𑍍 𑌤𑌸𑍍𑌮𑌾𑌦𑍍𑌧𑌾𑌰𑍍𑌯𑍋𑌽𑌵𑌵𑌰𑍍𑌜𑌿𑌤𑌃 ॥

இனி, ஸங்க்ரஹித்துக் கூறுமிடத்து, * வீரஸைவன் அநுஷ்டிக்க வேண்டிய முக்ய விதிகளாவன:—

(க.) அஷ்டாவரணம். †
(உ.) தபம் ; ஸரீரக்லேஸம்.
(ரு.) வேள்வியின்றிய ஸிவபூஜை.
(ச.) வேதாத்ய்யயநம்.

ஆயினும், இவற்றுள் அஷ்டாவரணத்தைச் சிறப்பு விதியாகக் கொண்டுள்ள க்ரந்தமானது வீரஸைவதர்ம ஸிரோமணியாம்.

இவ்வாறு வேதாகம விதிப்படி நின்ற தேவாதியர்களும் லிங்கதாரணம் பெற்றவர்களென்பதைக் குறித்து,

வேதனே டரிய ரன்சீர் விண்முழு தாளி யாதி
மாதிர மன்ன ரீண்டு மனிதர்கந் தருவர் சித்தர்
தீதறு முனிவ ரெல்லாஞ் சிந்மய மாய கத்துட்
சோதிகோள் பரமா நந்த லிங்கமே துணிந்து காண்பார், எனவும்,

பனிமல ரயன்மா லாதிப் பண்ணவர் கோத மாதி
முனிவர ரனைவ ருந்தம் முடிமிசை யென்றுங் கோள்வர்
தனிவரு மிலிங்கம் வாட்கட் போறிமுதற் சத்தி யெல்லாம்
புனைமல ரளக மீது போருந்துறத் தரிப்பர் மன்னே, எனவும்,

இந்த க்ரந்தத்திற் கூறப்பட்டுள்ளது.

மேற் சொல்லியபடி, ஜ்ஞாந ஸாஸ்த்ர ஸ்ரேஷ்டமாகிய ஸிவாத்வைத ஸமயமே உண்மையாகிய நிலையை யடைதற்குரிய ஸந்மார்க்கமாகி, ஜ்ஞாந பாகத்தில் முற்றினும் வேதங்களாகிய உபநிஷத்துக்களையும், ஆசாரபாகத்தில் முற்றினும் ஸிவாகமங்களையுந்தழுவி, விபூதிருத்ராக்ஷலிங்கதாரணாதிகளின் விஸிஷ்டங்களை நன்கு போதிக்கும்.

இந்நூல் அங்கஸ்த்தல ‡ லிங்கஸ்த்தல லக்ஷணங்களைக் கூறுகிறது.

வீரஸைவதத்வார்த்த நிர்ணயம்.

அங்கஸ்த்தலமானது பக்தஸ்த்தலம், மாஹேஸ்வரஸ்த்தலம், ப்ரஸாதிஸ்த்தலம், ப்ராணலிங்கிஸ்த்தலம், சரணஸ்த்தலம், ஐக்யஸ்த்தலம் என்னுமாறு முக்ய ஸ்த்தலங்களை

---

* நேபாளம் முதலாக பம்பாய் ராஜதானி வரையிலும் மத்யப்ரதேஸங்களிலும் வீரஸைவன் அல்லது லிங்காயிதன் எனவும், ஆந்த்ரதேஸங்களில் வீரஸைவன் அல்லது ஸீலவந்தன் எனவும், தென்தேஸங்களில் வீரஸைவன் அல்லது ஸிவாசாரன் எனவும், தமிழ்ப் பாகங்களில் சிலரை கன்னடியர் எனவும் பெயர் வழங்குவர்.

† க. குரு, உ. லிங்கம், ரு. ஜங்கமம், ச. விபூதி, ரு. ருத்ராக்ஷம், சு. பஞ்சாக்ஷரம், எ. தீர்த்தம், அ. ப்ரஸாதம். ஆவரணம் - கோட்டை.

‡ ஸ்த்தலம்:—லிங்கம் அறுவகைப்படும் ; அங்கமும் அவ்வாறே ; ஒவ்வொரு லிங்கத்துடன் ஒவ்வொரு அங்கம் ஐக்யப்படுதலே ஸ்த்தலமென்பதாம் ; அவஸரம் அல்லது அவஸ்த்தா அல்லது ஸமயமெனினுமாம்.

யுடையது. லிங்கஸ்த்தலமும் அம் முறையானே ஆசாரலிங்கஸ்த்தலம், குரு லிங்கஸ்த்தலம், ஶிவலிங்கஸ்த்தலம், ஜங்கமலிங்கஸ்த்தலம், ப்ரஸாதலிங்க ஸ்த்தலம், மஹாலிங்கஸ்த்தலம் என்னும் ஆறு முக்ய ஸ்த்தலங்களை யுடையது. இவற்றுள், முதலாவதான அங்கஸ்த்தலத்தைச் சற்று விளக்குவாம்.

(க.) பக்தஸ்த்தலம் : — * பலகோடி ஜந்மங்களில் நற்குணம் நிறையப் பெற்று நற்செய்கை செய்யப்படுமாயின் ஆஸ்திகத்வமுண்டாம். அவ்வாஸ்தி கத்வத்திற்கின்றியமையாத அடையாளமாயுள்ளது பக்தியாம். அந்தபக்தியோ ஸகல நன்மைகளுக்கு மூலமாயிருத்தலான் பக்தஸ்த்தலம் முற்கூறப்பட்டது.

(உ.) மாஹேஶ்வரஸ்த்தலம் : — இனி, பக்தியின் பயன் மஹேஶ்வரனை த்ருப்தி செய்தலாம். அவ்வாறு த்ருப்தி ஹேதுவாகிய கார்யங்களை பக்த னுக்கு மஹேஶ்வரன் விதிப்பவனாதலான் பக்தஸ்த்தலத்தின் பின் வைக்கப் பட்டது. †

---

* ஸ்ரீ மணிவாசகர்.

புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்து
ளெல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்.
பத்திவலையிற் படுவோன்காண்க.

† மாஹேஶ்வர பூஜையாவது: — குரு லிங்க ஜங்கமர்களான மாஹேஶ்வரனுக்கும் ஶிவனுக்கும் யாதொரு பேதம் நினைக்காமல் அம் மாஹேஶ்வரனை வேதாகம விதிப்படி ஸர்வோபசாரத்துடன் பூஜித்து, பரமபவித்ரமான குருலிங்கப்ரஸாதத்தை ஸ்வீகரித்து, பவிகளல்லாத லிங்காங்கி ஸமூஹத்துடன் லிங்கார்ப்பணஞ் செய்தலாம்.

ஸர்வோபசாரமாவது:— ஆஸநம், பாத்யம், அர்க்யம், ஸ்நாநம், வஸ்த்ரம், உபவஸ்த் ரம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்யம், மந்த்ரபுஷ்பம், அஷ்டாங்கநமஸ்காரம்.

சிவஞானதீபம்.

சூரியனு லனலுமிழுங் காந்தந்தன்னுற் சுடவரிதாம் வேறுகிச் சூழும்பஞ்சைச்
சீருலவுங் கனலுமுறற் றீப்போன்றன்னுற் றீராது விடமதுவும் வேறுமாகி
லோரிலவை வேறறவே றுகின்ற வுண்மைபோ லநன்னியமா மொருமையாகு
நேரியலுங் குருலிங்க வேடமாகி நின்றுயிர்கட் கருள்புரியு நிலைமைதானே.

சிவஞானசித்தியார்.

அறிவரியான் றனையறிய யாக்கையாக்கி யங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத்தருளாற்
செறிதலினுற் றிருவேடஞ் சிவனுருவேயாகுஞ் சிவோகம்பா விக்குமதத்தாற் சிவனுமாவர்
குறியதனு லிதயத்தே யரனைக்கூடுங் கொள்கையினு லரனுவர் குறியொடுதாமழியு
நெறியதனுற் சிவமேயாய் நின்றிடுவ ரென்றுனே சத்தாற்றெழுதிடுநீ பாசத்தார் விடவே.

உண்மைவிளக்கம்.

அப்பாலிம் முத்திக் கழியாத காரணந்தான்
செப்பா யருளாலே செப்பக்கே—ளொப்பில்
குருலிங்க வேடமெனக் கூறிலிவை கொண்டார்
கருவொன்றி நில்லார்கள் காண்.

(௩.) ப்ரஸாதிஸ்த்தலம்:—அங்ஙனம் விதித்த கர்மங்களைச் செய்வதாயின், அரசனது ஆணைக்குட்பட்டு அடங்கி நடப்பவர்களிடத்தில் ராஜாங்கத்தாருக்கு எவ்வாறு த்ருப்தி யுண்டாகுமோ, அவ்வாறே மஹேஸ்வரனுக்கு மாஹேஸ்வரனிடத்தில் த்ருப்தியுண்டாகும். அவ்வாறுண்டாகவே, மஹேஸ்வரனது ப்ரஸாதத்திற்குரியனாதலான் மாஹேஸ்வரஸ்த்தலத்தின் பின் வைக்கப்பட்டது.

(௪.) ப்ராணலிங்கிஸ்த்தலம்:—மஹேஸ்வரனது ப்ரஸாத மிராவிடின், மோக்ஷாபேக்ஷை யுண்டாகாது. அவனது ப்ரஸாதமே மோக்ஷ ஹேதுவாகும். ஆதலின், ப்ரஸாதத்தைப் பெற்ற பின்னர், அந்த ப்ரஸாதி துக்ககரமாகிய இந்த ஸம்ஸாரபந்தத்தி னின்றும் விடுதலைப்பெறுத லெங்ஙனம்? பந்தமாவது என்னை? மோக்ஷமாவது என்னை? என வினவத் தொடங்கி, முழுமுதல்தத்வ அகண்ட பரிபூர்ண ஸச்சிதாநந்த ஜ்யோதிர்மய ஶிவஸ்வரூபமான ப்ரஹ்மலிங்கமானது இத் தன்மைத்தென்று ஸாமாந்யமா யறிதற்பொருட்டு விருப்பமுண்டாகு மாதலான் ப்ரஸாதிஸ்த்தலத்தின் பின் வைக்கப்பட்டது.

(௫.) சரணஸ்த்தலம்:—மேற் கூறிய ப்ராணலிங்கமாகிய ஶிவஸ்வரூபத்தைக் கேட்டறிந்தவுடனே, ப்ரபஞ்சம் துச்சமெனவும் ஶிவாநந்தமே பரமெனவும் காணும் புத்தியுதித்து, அந்த ஶிவத்திலேயே கற்புடைய நாயகியைப் போன்று முக்ய நாட்ட முற்றவனாகிய ப்ரஸாதியே ஶிவனைச் சரணமடைவானாதலான் ப்ராணலிங்கிஸ்த்தலத்தின் பின் வைக்கப்பட்டது.

(௬.) ஐக்யஸ்த்தலம்:—இனி, இவ்வாறு சரணமடைந்து பரமாசார்யரின் உபதேஶத்தால் ஶிவஜ்ஞாநமுதிக்க, அஜ்ஞாந ராகத்வேஷாதிகள் நீங்கி, ஶிவாநந்தத்தை யடைவதாகிய ஶிவைக்யலாபம் கிடைக்குமாதலான் சரணஸ்த்தலத்தின் பின் வைக்கப்பட்டது.

இவ்வாறு, ஸித்தியடைந்த அங்கஸ்த்தலஸம்பந்நன், இனி ஜீவன்முக்திப் பலம் கிடைக்கப்பெறுவான் பின்னும் மிகவுழைத்தல் வேண்டும். அவன், ஆதி யென்பதில்லாத ஸம்ஸாரத்திலேயே நெடுங்காலம் உழன்றுநின்றவனாதலானும், ஜ்ஞாநமுதிப்பினும் பலகாலம் ப்ரதிபந்திக்குமாதலானும், பின்னும் முன்போலவே பலகாலம் ஶிவத்திலேயே நாட்டமுற்று, உலகநன்மையை விரும்பி, தர்மாசாரங்களைக் கைப்பற்றி, ஜ்ஞாநத்திலேயே பேராதரவாகிப் பழகினாலன்றி, ப்ரதிபந்தகம் நீங்கி, தடையற்ற ஶிவாநுபவமுண்டாகி,

---

*கற்று மனம்போற் கசிந்துகசிந் தேயுருகி*
*யுற்றுசான் லிங்க முயர்வேடம்—பற்றுக*
*முத்தித் தலைவர் முழுமலத்தை மோசிக்கும்*
*பத்திதனி னின்றிடுவர் பார்.*

**சிவப்பிரகாசம்.**

*தொண்டர்க டாமும் வானோர் தொழுந்திரு மேனி தானு*
*மண்டருங் கண்டி லாத வண்ணலே யெனவ ணங்கி*
*வெண்டர ளங்கள் சிந்த விழிமொழி குழற மெய்யே*
*கண்டுகொண் டிருப்பர் ஞானக் கடலமு தருந்தி னோரே.*

ஜீவன் முக்தியடையப் பெறுகுதலான் அங்கஸ்த்தலங்களின் பின் முறையே லிங்கஸ்த்தலங்கள் வைக்கப்பட்டன.

இனி, லிங்கஸ்த்தலங்களினும் மேற்கூறிய முறையானே பல அரிய விஷயங்களை விளக்கி, ப்ரபஞ்சத்தை மறந்து, ஶிவாநந்தாநுபவ மாத்ரமாய் நிற்றலாகிய ஸமாதிநிலையின் ரஹஸ்யம் விஶேஷமாய் விதிப்படி உபதே ஶிக்கப்பட்டுள்ளது. இந்த ரஹஸ்யத்தை யறிந்து, அப்யாஸஞ்செய்து ஶிவா நந்தத்தை யநுபவித்துக்கொண்டுவரும் ஶிவயோகி, ப்ரதிபந்தகங்கள் நீங்கி அநுபவமுதித்து ஜீவன்முக்தி நிகழவே, நிகரில்லாத உபநிஷத்துக்களெடுத் தோதாநின்ற ஶிவாநந்தாமிர்தத்தை யருந்தி, ப்ரபஞ்சத்தை மறந்து, பதார்த் தத்தில் பேதஜ்ஞாநம் நஶித்து, சித்த வ்ருத்தி யுதியாத வரிஷ்டநிலை யென் னும் ஶிவாத்வைதமாகிய * அங்கலிங்கைக்யம் ஸித்திக்கப் பெறுகின்றுறு தலால் பாவாபாவலயஸ்த்தலம் ஜ்ஞாநஶூந்யஸ்த்தலம் என்பவை முடிவில் வைக்கப்பட்டன.

இந்த க்ரந்தத்தில் மேற்சொல்லிய அங்கஸ்த்தல லிங்கஸ்த்தலப் பகுப்புக் களே யன்றி, அங்கஸ்த்தலத்திற்கு நாற்பத்து நான்கும் லிங்கஸ்த்தலத்திற்கு ஐம்பத்தேழுமாகச் சேர்ந்து நூற்றொரு ஸ்த்தலங்கள் † வகுத்துக் கூறப் பட்டுள்ளன. அவை வருமாறு:—

| | | | |
|---|---|---|---|
| பக்தஸ்த்தலம் | கரு | ஆசாரலிங்கஸ்த்தலம் | கூ |
| மாஹேஶ்வரஸ்த்தலம் | கூ | குருலிங்கஸ்த்தலம் | கூ |
| ப்ரஸாதிஸ்த்தலம் | எ | ஶிவலிங்கஸ்த்தலம் | கூ |
| ப்ராணலிங்கிஸ்த்தலம் | ரு | ஜங்கமலிங்கஸ்த்தலம் | கூ |
| சரணஸ்த்தலம் | ச | ப்ரஸாதலிங்கஸ்த்தலம் | கஉ |
| ஐக்யஸ்த்தலம் | ச | மஹாலிங்கஸ்த்தலம் | கூ |
| | ஆக சச. | | ஆக ருஎ. |

இவற்றின் பெயர்களை விஷய அட்டவணையிற்காண்க.

அன்றியும், ஷட்ஸ்த்தல ஸம்பந்தமான அங்கஸ்த்தலத்தினும் லிங்கஸ்த் தலத்தினும் பூர்வார்த்தத்தில் க்ரியாஸம்பந்தமான ஆசரணைகளும் உத்தரார்த் தத்தில் ஜ்ஞாநஸம்பந்தமான ஆசரணைகளும் சொல்லப்பட்டுள்ளன. இனி,

* ஷட்ஸ்த்தல ஸம்பந்தமான அங்கலிங்கைக்யத்தை உபதேஶிக்கும் ஆகமாதிகளா வன:—வாதுளம், அதன் உபாகமங்களான உத்தரவாதுளம் அல்லது வாதுளோத்தரதந்த் ரம், லைங்க்ய ஶைவ ஆதித்ய புராணங்கள், ஸ்காந்தத்தின் ஶங்கரஸம்ஹிதாதிகள்.

**சிவஞானதீபம்.**

எவ்வுயிரும் பராபரன்சந் நிதியதாகு மிலக்குமுயி ருடலினைத்து மீசன்கோயி
லெவ்வுயிரு மெம்முயிர்போ லென்றுநோக்கி யிரங்காது கொன்றருந்து மிழிஞரை
வவ்வியமன் றூதரருந் தண்டஞ்செய்து வல்லிரும்பை யுருக்கியவர் வாயில்வார்த்து
வெவ்வியதீ யெழுநரகில் வீழ்த்திமாறு வேதனைசெய் திடுவரென வோதுநூலே.

† இருநூற்றிரண்டு ஸ்த்தலங்களென்பாருமுளர்; ஆயினும், அவ்வாறு கூறுதல் எவ் வாதாரங்கொண்டோ வறிந்திலம்.

அங்கஸ்த்தலத்திற்கும் லிங்கஸ்த்தலத்திற்கும் பேதமென்னை? ஸம்பந்த மென்னை? எனின், ஷட்ஸ்த்தலமானது பக்திஜ்ஞானவைராக்யக்ரியாயோகங் களினுற் கூடின ஆசாரவிஶிஷ்டமானதென்று போதிக்கப்பட்டுள்ளது.

அவ்வாருயின், மேனிகழ்தல் யாதோவெனின், அதையுங் கூறுவாம். அங்கஸ்த்தலத்தில் போதிக்கும் ஆசரணையினுல் அங்கியாகி, தத்ஸம்பந்த லிங்கஸ்த்தலத்தில் போதிக்கும் ஆசரணையினுல் லிங்கியாகி, உபயாசரணையி னுல் அங்கலிங்கஸங்கியாதலே விதியாமென்றறிக. இனி, ஆசாராதிலிங்க ஸ்த்தலங்களைப்பற்றிச் சற்று விளக்குவாம்.

(க.) பக்தஸ்த்தல ஆசரணையினுல் ஶ்ரத்தாபக்தி ஸமேதனுகி தத்ஸம் பந்த லிங்கஸ்த்தல ஆசரணையினுல் ஆசாரலிங்கமே தானுதலும்,

(உ.) அந்த ஆசாரலிங்கமானவன் மாஹேஶ்வரஸ்த்தல ஆசரணையினுல் நிஷ்டாபக்தி ஸமேதனுகி தத்ஸம்பந்த லிங்கஸ்த்தல ஆசரணையினுல் குரு லிங்கமே தானுதலும்,

(ங.) அந்த குருலிங்கமானவன் ப்ரஸாதஸ்த்தல ஆசரணையினுல் அவ தாநபக்தி ஸமேதனுகி தத்ஸம்பந்த லிங்கஸ்த்தல ஆசரணையினுல் ஶிவ லிங்கமே தானுதலும்,

(ச.) அவ்வாறு ஶிவலிங்கமானவன் ப்ராணலிங்கிஸ்த்தல ஆசரணையினுல் அநுபவபக்தி ஸமேதனுகி தத்ஸம்பந்த லிங்கஸ்த்தல ஆசரணையினுல் ஜங்கம லிங்கமே தானுதலும்,

(ரு.) அங்ஙனம் ஜங்கமலிங்கமானவன் சரணஸ்த்தல ஆசரணையினுல் ஆநந்தபக்தி ஸமேதனுகி தத்ஸம்பந்த லிங்கஸ்த்தல ஆசரணையினுல் ப்ரஸாத லிங்கமே தானுதலும்,

(சு.) அந்த ப்ரஸாதலிங்கமானவன் ஐக்யஸ்த்தல ஆசரணையினுல் ஸமரஸபக்தி ஸமேதனுகி தத்ஸம்பந்த லிங்கஸ்த்தல ஆசரணையினுல் * மஹா லிங்கமே தானுதலும்,

திவ்யாகமங்கள் ஓதுகின்றன.

* திருமூலர்.

*தன்மேனி தற்சிவ லிங்கமாய் நின்றிடுந்*
*தன்மேனி தானுஞ் சதாசிவ மாய்நிற்குந்*
*தன்மேனி தற்சிவன் றற்சிவா நந்தமாந்*
*தன்மேனி தானுகுந் தற்பரந் தானே.*

*அப்பினிற் கூர்மை யாதித்தன் வெம்மையால்*
*உப்பெனப் பேர்பெற் றுருச்செய்த தவ்வுரு*
*அப்பினிற் கூடிய தொன்ருகு மாறுபோற்*
*செப்பிடிற் சீவன் சிவத்து ளடங்குமே.*

*ஒன்று மிரண்டு மிலதுமா யொன்ருக*
*நின்று சமய நிராகார நீங்கியே*
*நின்று பராபரை நேயத்தைப் பாதத்தாற்*
*சென்று சிவமாதல் சித்தாந்த சித்தியே.*

நானென்றுந் தானென்று நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவ நல்கலாற்
றானென்று நானென்றுஞ் சாற்றகி லேனே.

நானென்றுந் தானென்று நாடினே னாடலு
நானென்றுந் தானென் றிரண்டில்லை யென்பது
நானென்ற ஞான முதல்வனே நல்கினான்
நானென்று நானு நினைப்பொழிந் தேனே.

உய்யவல் லார்கட் குயிர்சிவ ஞானமே
உய்யவல் லார்கட் குயிர்சிவந் தெய்வமே
உய்யவல் லார்கட் கொடுக்கம் பிரணவம்
உய்யவல் லாரறி வுள்ளறி வாமே.

பரத்தலே யொன்றா யுள்ளாய்ப் புறமாகி
வரத்தினுண் மாயவ னாயய னாகித்
தரத்தினுட் டான்பல தன்மைய னாகிக்
கரத்தினு ணின்று கழிவுசெய் தானே.

பதிபசு பாச மெனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம நாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசநில் லாவே.

மானுட ராக்கை வடிவு சிவலிங்க
மானுட ராக்கை வடிவு சிதம்பர
மானுட ராக்கை வடிவு சதாசிவ
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே.

சீவ னெனச்சிவ னென்ன வேறில்லை
சீவனார் சிவ னாரை யறிகிலர்
சீவனார் சிவ னாரை யறிந்தபின்
சீவனார் சிவ னாயிட் டிருப்பரே.

வேதாந்த தொம்பத மேவும் பசுவென்ப
நாதாந்த பாசம் விடநின்ற நன்பதி
போதாந்த தற்பதம் போயிரண் டயிக்கியஞ்
சாதர் ரணஞ்சிவ சாயுச்சிய மாமே.

சிவமான வேதாந்த சித்தாந்த மாகும்
அவமவ மாகு மவ்வவ் விரண்டுஞ்
சிவமாஞ் சதாசிவன் செய்ததொன் றானான்
நவமான வேதாந்த ஞானசித் தாந்தமே.

சித்தாந்தத் தேசீவன் முத்திசித் தித்தலாற்
சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்
சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலாற்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே.

**ஸ்ரீமணிவாசகர்.**

நமச்சிவாய வாழ்க! நாதன்றாள் வாழ்க
இமைப்பொழுது மென்னெஞ்சி னீங்காதான் றாள்வாழ்க!
கோகழி ஆண்ட குருமணிதன் றாள்வாழ்க!
ஆகம மாகிநின் றண்ணிப்பான் றாள்வாழ்க!
ஏகன் அநேகன் இறைவன் அடிவாழ்க!

தேவரு மறியாச் சிவனே காண்க!
பெண்ணா ணலியெனும் பெற்றியன் காண்க!
கண்ணாலி யானுங் கண்டேன் காண்க!
அருணனி சுரக்கு மமுதே காண்க!
கருணையின் பெருமை கண்டேன் காண்க!
புவனியிற் சேவடி தீண்டினன் காண்க!
சிவனென யானுந் தேறினன் காண்க!

இன்றெனக் கருளி யிருள்கடிந் துள்ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று
நின்றநின் றன்மை நினைப்பற நினைந்தே னீயலாற் பிறிதுமற் றின்மை
சென்றுசென் றணுவாய்த் தேய்ந்துதேய்ந் தொன்றாந் திருப்பெருந் துறையுறை சிவனே!
ஒன்றுநீ யல்லை யன்றியொன் றில்லை யாருன்னை யறியகிற் பாரே?

தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச் சங்கரா ஆர்கொலோ சதுரர்?
அந்தமொன் றில்லா வானந்தம் பெற்றே னியாதுநீ பெற்றதொன் றென்பால்?
சிந்தையே கோயில் கொண்டவெம் பெருமான் திருப்பெருந் துறையுறை சிவனே!
எந்தையே! ஈசா! உடலிடங் கொண்டா யானிதற் கிலனோர்கைம் மாறே.

பந்தவிகார குணங்கள்பறிந்து மறிந்திடுமாகாதே!
பாவனையாய கருத்தினில்வந்த பராவமுதாகாதே!
அந்தமிலாத வகண்டமுநம்மு ளகப்படுமாகாதே!
ஆதிமுதற்பர மாயபரஞ்சுட ரண்ணுவதாகாதே!
செந்துவர்வாய்மட வாரிடரானவை சிந்திடுமாகாதே!
சேலனகண்க ளவன்றிருமேனி திளைப்பனவாகாதே!
இந்திரஞால விடர்ப்பிறவித்துய ரேகுவதாகாதே!
என்னுடைநாயக னாகியவீச னெதிர்ப்படுமாயிடிலே!

மண்ணினின்மாயை மதித்துவகுத்த மயக்கறுமாகாதே!
வானவரும்மறி யாமலர்ப்பாதம் வணங்குதுமாகாதே!
கண்ணிலிகால மனைத்தினும்வந்த கலக்கறுமாகாதே!
காதல்செயும்மடி யார்மனமின்று களித்திடுமாகாதே!
பெண்ணலியாணென நாமெனவந்த பிணக்கறுமாகாதே!
பேரறியாத வநேகபவங்கள் பிழைத்தனவாகாதே!
எண்ணிலியாகிய சித்திகள்வந்தெனை யெய்துவதாகாதே!
என்னையுடைப்பெரு மானருளீச னெழுந்தருளப்பெறிலே!

**ஸ்ரீ தாயுமானவர்.**

ஐந்துவகை யாகின்ற பூதமுத னாதமு மடங்கவெளி யாகவெளிசெய்
தறியாமை யறிவாதி பிரிவாக வறிவார்க ளறிவாக நின்றநிலையில்
சிந்தையற நில்லென்று சும்மாவி ருத்திமேற் சின்மயா னந்தவெள்ளந்
தேக்கித் திளைத்துநா னதுவா யிருக்கநீ செய்சித்ர மிகநன்றுகாண்

மேற்கூறியவாறு, ஷட்ஸ்த்தல ஸத்விசாரத்தால் ஜீவன்முக்தி லப்யமாகிறது. ஆயினும், * சொல்லுக்கும் பொருளுக்குமுள்ள பேதமென்னும் ஸம்யோக மிருத்தல்போன்று, † லிங்காங்கங்க ஸம்யோகங்கள் தன்னிடத்தே நிகழ்வனவாம். இந்த பேதாபேதங்களை விட்டிருத்தலே ஐக்யமென்றுணர்க.

---

எந்தைவடபாற் பரம குருவாழ்க ! வாழவரு ளியநந்தி மரபுவாழ்க !
 என்றடியர் மனமகிழ வேதாக மத்துணி பிரண்டில்லை யொன்றென்னவே
வந்தகுரு வே ! வீறு சிவஞான சித்திநெறி * மௌனஉப தேச குருவே !
 மந்த்ரகுரு வே ! யோக தந்த்ரகுரு வே ! மூலன் மரபில்வரு மௌன குருவே !

வேதமுட னுகம புராணமிதி காசமுதல் வேறுமுள கலைகளெல்லா
 மிக்கான வத்துவித துவிதமார்க் கத்தையே விரிவா யெடுத்துரைக்கும்
ஓதரிய துவிதமே யத்துவித ஞானத்தை யுண்டுபணு ஞானமாகும்
 ஊகமறு பவவசந மூன்றுக்கு மொவ்வுமீ துபயவா திகள்சம்மதம்
ஆதலி னெனக்கினிச் சரியையா திகள்போது மியாதொன்று பாவிக்கநான்
 அதுவாத லாலுன்னை நானென்று பாவிக்கி னத்துவித மார்க்கமுறலாம்
ஏதுபா வித்திடினு மதுவாகி வந்தருள்செ யெந்தை நீ ! குறையுமுண்டோ !
 இகபர மிரண்டினிலு முயிரினுக் குயிராகி யெங்குநிறை கின்றபொருளே !

## திருப்புகழ்.

ஐந்துபூதமு மாறுசமயமு மந்த்ரவேதபு ராணகலைகளு
 மைம்பதோர்வித மானலிபிகளும் வெகுரூப
அண்டராதிச ராசரம்முயர் புண்டரீகனு மேகநிறவனு
 மந்திபோலுரு வானுநிலவொடு வெயில்காயுஞ்
சந்த்ரசூரியர் தாமுமசபையும் விந்துநாதமு மேதுவடிவுமோர்
 தன்சொரூபம தாகிநிகழ்வது சிவயோகந்
தங்களாணவ மாயைகருமம லங்கள்போயுப தேசபரகுரு
 சம்ப்ரதாயமொ டேயுநெறியது பெறுவேனோ !

## உண்மைவிளக்கம்.

ஆறாறு தத்துவமே நாணவமே தன்றேதான் †
மாறா வினையேது மற்றிவற்றின்—வேறாகா
நானேது நீயேது நாதனட மஞ்செழுத்துத்
தானேது தேசிகனே சாற்று.

* பேதவகையான், சொற்பொருள் போன்ற உபமானங்கள் மற்றுமுள - அவை :— சந்த்ரன் சந்த்ரிகை, ஆகாயம் வாயு, புஷ்பம் மணம், பனிக்கட்டி ஜலம்.

† லிங்காங்கஸம்யோகம், லிங்காங்கஸங்கம், லிங்காங்கஸாமரஸ்யம், நிவ்ருத்தி, அத்வைதம், ஐக்யம், ஸாயுஜ்யம், விஸ்ராந்தி, பரமபதவி, பரமுக்தி, ஸுகப்ராப்தி என்பன பன்மொழி யொருபொருள. இவற்றுள், முதன் மூன்று பதங்களின் பொருள் என்னையெனின், தத் என்பது லிங்கம் ; த்வம் என்பது அங்கம்; இவ்விரண்டின் ஐக்யம் ஸம்யோகம் அல்லது ஸாமரஸ்யமென்பதாம்; எனவே, தத்வமஸிமஹாவாக்யமே லிங்காங்க ஸம்யோக மென்றறிக.

---

* சிவஞானசித்திநெறி என்றது ஶிவோஹம்பாவநாநுபவ மார்க்கத்தை.

† அன்று என்றது ஶிவைக்யமுற்ற நாளை.

ஓவ்வொரு ஸமயத்தாரும் தத்தம் ஸமயத்தில் உண்மையுளதெனவும், பத முக்தியடையப் பெறுவதெனவும் முடிவுரைத்தலே * ஸித்தாந்தமென்பதோர் வழக்கம் தொன்றுதொட்டு வருகின்றது. அவ்வாறு கூறும் எல்லா ஸமயஸித்தாந்தங்களுக்கும் ஶிரோரத்நமா யிருத்தலானும், இதற்கொத்ததோர் முடிவின்மையானும், பரமேஶ்வரன் அருளிய திவ்யாகமங்களின் உத்தரகாண்ட முற்றினும் போதிப்பது ஸித்தாந்தமென அவ்வவ்வாகமங்களில் ஓதப்பட்டிருத்தலானும், அதுவே ஆகமாந்தமெனக் கூறுதலானும், அவ்வாகமாந்தத்தினுட்கிடைப்பொருள்களையே இந்த க்ரந்தமானது நன்கு போதித்தலானும், இவ்வுத்தம ஜ்ஞாநஶாஸ்த்ரத்திற்குச் சித்தாந்தசிகாமணியென்னும் பெயர் அமைந்ததென்றறிக.

சித்தாந்த சிகாமணியென்னும்பெயர் புனைந்திருத்தற்குக் காரணம்.

வேதாந்தம் ஆதியான † அத்வைத ஸமயநூல்கள் பரப்ரஹ்ம ஸ்வரூப லக்ஷணமட்டும் போதிக்கும். அதற்குரிய ந்யாய ஶாஸ்த்ரங்களும் வ்யாஸங்களும் அநேகமுள்ளன. ஆயினும், ஷட்ஸ்தல ஸம்பந்தமான ஶிவாத்வைத ஶாஸ்த்ரமானது பர

முடிவுரை.

---

வாதுளாகமம் அநுபவ ஸூத்ரம்.

ஶிவஷட்ஸ்தலஶாஸ்த்ரம் ச ஶிவாத்வைதம் ஸமீரிதம் ।
தயோஶ்ஶிவாத்மநோஸ் ஸம்யக் ஜ்ஞாநம் ஸம்யோக ஸம்பவம் ॥
[illegible] ।
ஸம்யோகோ ஜீவஶிவயோ: [illegible] ॥

திருமூலர்.

தொம்பதந் தற்பதந் தோன்று மசிபத
நம்பிய சீவன் பரஞ்சிவ னாய்கிற்கும்
அம்பத மேலைச் சொருபமா வாக்கியஞ்
செம்பொரு ளாண்டருள் சீர்நந்தி தானே.

* ஸித்தாந்தம் என்பதற்கு முடிவு அல்லது உண்மை அல்லது தீர்மானமெனப் பொருள் கொள்வர்.

ஆகமாந்தம் என்பது நாதாந்தம், நாத்யாந்தம், சித்தாந்தமென வழங்கி வருகிறது. இதையே வீரஶைவம், ஶக்திவிஶிஷ்டாத்வைதம், ஶிவாத்வைத ஸித்தாந்தம், ஶுத்தாத்வைத ஶைவஸித்தாந்தம், ஶிவஸித்தாந்தம், ஶைவஸித்தாந்தம், ஶைவதர்ஶநம், வைதிக மஹா பாஶுபதம், மந்த்ரம், தந்த்ரம், வீரமாஹேஶ்வரம் என்னும் இவைபோன்ற பதங்களை வெவ்வேறு க்ரந்தகர்த்தர்கள் வெவ்வேறு பெயரால் ஆண்டு வருகிறார்கள்.

† ஸ்ரீ ஶங்கராசார்ய ரருளிய க்ரந்தங்களின்படி ஶிவனுடன் அத்வைதமாய்க் கலந்திருத்தல் மேலான பதவியெனத் தெரிகிறது. ஆனால், வீரஶைவஸமயமானது அதனினும் மேலதாய் ஒரே ஜந்மத்தில் ஶிவாத்வைதமென்னும் அங்கலிங்கைக்யபலம் இடைத்தலைப் போதிக்கும்; இதன் விரிவை ஸூக்ஷ்மாகமம், ௭-வது படலத்திற் காண்க.

வீரஶைவம் அநாதியென்பதும், சில தேவதாநவமாநவாதியோர்களுக்கு ஸ்தாவர லிங்கபூஜையும், ரேவணாராத்ரியர், மருளாராத்ரியர், ஏகோராமாராத்ரியர், பண்டிதாராத்ரியர், விஶ்வாராத்ரியர், மகாரி, காலாரி, புராரி, ஸ்மராரி, வேதாரி ஆகிய இவர்களுக்கு

ப்ரஹ்மஸ்வரூப லக்ஷணத்தை யறிவிப்பதும், த்ருடவைராக்ய முதிக்கச்செய்வதும், ஆசார முகத்தானே நிரேநிரே அப்யஸிக்க அப் பரஶிவப்ரஹ்மமே தானெனத் தெளியச்செய்வதும், அங்கலிங்கைக்யமே தத்வமஸிமஹா வாக்யப் பொருளென்றுணர்த்துவதும், ஓர் * ஜந்மத்திற்றானே ஜீவன்முக்தி ஸித்திக்கச் செய்வதும், அதற்குரிய ஸாதநங்களைப் போதிப்பதும், எவ்வகை ப்ரபஞ்சோத்பவப் பொருளினிடத்தும் க்ரமேண விராகபுத்தி யுண்டாக்குவதும், தனக்கந்யமாகத் தோற்றும் சராசரப்பொருள்களை எத்துணையேனும் நிந்தனைசெய்தற்கிடந்தராது ஸதா பாதுகாப்பதும், ஸர்வமும் ஶிவமயமாகக் காணக்கூடியதோர் பரமநிலையினை யடையச்செய்வதுமாகிய ஸந்மார்க்கத்தினை நிகமாகமவிதிப்படி யுபதேஶித்து விளங்குமோர் † ஜ்ஞாநதீபமேயாம். ஆதலின் ஆகமாதிகள் வீரஶைவஸமயமானது ஸகல ஸமயங்களினும் மேம்பாடுடையதென ஓதலானும், இந்த க்ரந்தத்திலும் நான்கு வேதங்களினுமுள்ள உபநிஷத்வாக்யங்களையே யெடுத்தோதி மெய்ம்மை விளக்கியுள்ள தாதலானும், உண்மை யாராய்ச்சியில் விருப்பமுள்ளோர் வேதாகமாதிகளை யுணர்ந்த ‡

---

ஜங்கமலிங்கபூஜையும் விதிக்கப்பட்டுள்ளது. ¶ ப்ராக்ருத ஸம்பந்தமான ஸ்த்தாவரலிங்கபூஜையினால் ஒரு மனிதன் மூன்று ஜந்மத்திற்குப் பின்னரே முக்தி அல்லது சர்யாக்ரியாயோகஜ்ஞாநங்களினாலாய க்ரமமுக்தி யடையப்பெறுவனென்றும், அப்ராக்ருத ஸம்பந்தமான ஜங்கமலிங்கபூஜையினால் இந்த ஜந்மத்திலேயே முக்தியடையப்பெறுவனென்றும், இதற்காக வேறு எவ்விதமான மார்க்கங்களிற் சுழன்று திரியவேண்டியதின்றென்றும் ஆகமங்கள் வற்புறுத்தி ஓதா நிற்கும்.

* ஆகமாந்தவாக்யங்கள்.

[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible] ॥

† வாதுளாகமம்.

[illegible]
[illegible] ।
[illegible]
[illegible] ॥

‡ சிவஞானதீபம்.

நிலையுறுதி யாசார மொழுக்கஞ்சீல நிறையறிவு கருணைதவ நெறிநிலாமற்
கொலைகளவு கட்காம முதலாயுள்ள கொடும்பவமே தவமாகக் கொள்ளுந்தீயோ
ருலகிலருஞ் சிவனருணூ லோதலாகா தோதினுமாங் கவருரைகொள் ளொணாதுநீலம்
புலையர்மரு விடுந்தெருவிற் பொல்லாக்கும்பி பொருந்தியிடுங் குழியதனுட் பூத்ததாமே.

¶ ப்ராக்ருதம்—நாமரூப ப்ரபஞ்சத்தில் ராகம்.

ஸத்குருவை யடுத்து உபதேசம்பெற்று, இந்த க்ரந்தத்தில் போதித்துள்ள தர்மாசாரங்களைக் கடைப்பிடித்து, வைதிகசிவஸித்தாந்தத்தை யறிந்து, அவ்வைதிகநெறி நின்று, வேதசிகைகளா லோதப்படும் ஸகல புருஷார்த்தங்களையும் பெற்றுய்தலே மாநுடப் பிறப்பினையடைந்த நலனெனக் கொள்ளக் கடவர்.

சித்தாந்த சிகாமணியை உரையுடன் வெளிப்படுத்தற்குக் காரணம்.

யோகம் ஸாங்க்யம் ந்யாயம் வைசேஷிகம் பூர்வமீமாம்ஸா உத்தரமீமாம்ஸா என்னும் ஷட்தர்சநங்களில் வ்யாஸமுநிவரால் இயற்றப்பட்ட உத்தரமீமாம்ஸாவுக்கு வேதாந்தமென்னும் உபநிஷத்துக்களே மூலமாம். இவ் வேதாந்த ஸூத்ரங்களுக்கு * ஸ்ரீ நீலகண்டசிவாசார்யர் சிவாத்வைத பரமான பாஷ்யத்தைச் செய்தனர்; இதனை நீலகண்ட பாஷ்யமெனக் கூறுவர். ஸ்ரீசங்கராசார்யர் அதே ஸூத்ரங்களுக்கு அத்வைத பரமான பாஷ்யத்தைச் செய்தனர்; இதனை சங்கரபாஷ்யமெனக் கூறுவர். சங்கராசார்ய மதாவலம்பிகளிற் சில புலவர்கள் பஞ்சதசி, ப்ருஹத்வாஸுதேவமநநம், லகுவாஸுதேவமநநம், ப்ரஹ்மாநந்தீயம் ஆதியான அத்வைத ப்ரகரணங்களை எளிய நடையில் செய்திருக்கின்றனர். அதன் பின்பு, த்ராவிடம், ஆந்த்ரம், மலையாளம், மஹாராஷ்ட்ரம் ஆகியான தேசங்களிலிருக்கும் அத்வைத மதஸ்தரான வடதேசப்பண்டிதர்கள் அத்வைதமத ப்ரகரணத்தைத் தங்கள் தங்கள் தேசபாஷைகளிலியற்றி யுள்ளாரேனும், அத்வைத பரமான ஜ்ஞாநவாஸிஷ்டம் வேதாந்தசூளாமணி யாதியான நூல்களும் தென்மொழியில் வந்துள்ளன. மேலும், இந்திபாஷையினின்று மொழிபெயர்க்கப்பட்ட அத்வைதநூல்களும் ந்யாயநூல்களும் வெளிவந்துள்ளன. இதுவுமன்றி, வீரசைவபரமான சிவாத்வைதவிஷயமான நூல்களும் வடமொழியினின்றும் கன்னடத்தினின்றும் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. ஆயினும், உண்மையில் வீரசைவ தத்வவிசாரம் செய்பவர் தென்தேசங்களில் † சிறுபாலாரேனும், அதனுண்மைப்பொருளைப் பெரும்பாலாருமறியவேண்டியது ஆவஸ்யகமே! எற்றே

* ஸ்ரீ நீலகண்டசிவாசார்யரும் ஸ்ரீ சங்கராசார்யரும் ஒரே காலத்திலிருந்தவர்கள். இவர்களது காலம் ஏறக்குறைய கி. பி. எ - ம் நூற்றாண்டெனத் தெரியவருகிறது. இவ் வ்யாஸ சூத்ரங்களுக்கே வீரசைவ பரமான பாஷ்யங்கள் ஸ்ரீ ஸோமநாதாராத்ரியராலும் ஸ்ரீகரராலும் செய்யப்பட்டு, ஸோமநாதபாஷ்யம் ஸ்ரீகரபாஷ்யமெனப் பெயர்பெறும். இதுவுமன்றி, வீரசைவ பரமான பாஷ்யங்கள் அநேகமுள; ஸமயம் நேர்ந்துழியெடுத்துரைப்பாம். ஸ்ரீராமாநுஜர் விசிஷ்டாத்வைத பரமான பாஷ்யத்தையும் ஸ்ரீமாத்வாசார்யர் த்வைத பரமான பாஷ்யத்தையும் செய்தனர்; ஸ்ரீவல்லபாசார்யரும் ஸ்ரீபாஸ்கரரும் பாஷ்யஞ் செய்திருக்கின்றனர்.

† இதர ஸமய ஸித்தாந்தத்தை, ஒரே பாஷையிற் பயின்று அதிநுட்பமாகப் பூர்வபக்ஷம் செய்வோர் சிலர்; பல ந்யாயங்களை யெடுத்துக்காட்டி வ்யாக்யாநஞ் செய்வோர் சிலர்; அநேக பாஷைகளிற் பயின்று ஸமாதாநங் கூறி உண்மை யுரைப்போர் சிலர்; இவ்வாறன்றி, தாம் கேள்விப்பட்டவாறும் அல்லது தமது புத்தியில் ந்யாயமென்றுதித்தவாறுங் கூறுவோர் சிலர்; உண்மை யின்னதென்று அறிந்தும் தம் மதச்சார்பும் பிறமதத்வேஷமுங்கொண்டு விபரீதமாகக் கூறுவோர் சிலர்; ஆயினும், இவ்வாறு விளக்குவது லோகோபகாரமாதற்பற்றி யாவரும் நன்றி பாராட்டத்தக்கதேயாம். அன்னோர் அவ்வாறு

வெனின், வேதாகம ரஹஸ்யங்களை யுணர்ந்த ஸத்குருவை வரன்முறை யானே கேட்டுணராத வீரசைவர்களு மற்றுமுள்ள பேதைகளாரும் பிறர் வசனங்களைக் கைக்கொண்டு, அவை பொய்யிலக்கணமென்றறிய மாட்டாராய் மயங்கி அவத்தொழிலி லிடர்ப்படாதகலுவா ரென்றறிக.

வீரசைவ * ஸமயமானது அத்வைத விசாரமட்டும் செய்து அதனுல் ஸ்வரூபலக்ஷணத்தை மாத்ரம் உபதேசித்து ஈச்வரநிந்தைக்கிடமாக்காது, ஆசாரவாயிலாக ஸ்வஸ்வரூப சிவஜ்ஞாநபலம் ஸித்திக்கச்செய்யும் வேதா

---

அன்பு கூர்ந்து இயற்றிய நூல்களில் வீரசைவத்தைக்குறித்த சில விஷயங்கள் விருத்த மாகக் காணப்படுகின்றன. ஈண்டு அவைகளை உதஹரிப்பாம். மேதாவிகள் ஆராய்ந் துண்மை யறியக்கடவர்.

"பிரபுலிங்கலீலை — இது உருத்திரன் கூறுய் விளங்கிய அல்லமதேவன் உமையின் கூறுய் விளங்கிய மாயையோடாடி மற்றவள் வலிபுறங்கண்ட வரலாறும், வீரசைவ மாகேசுரர்களான சரணர் பலர்க்கு அவன் ஞானோபதேசமருளிய வரலாறும் பிறவும் எடுத்தோதும். இஃது ஓர் ஐக்யவாத சைவபுராணம்.

வைராக்யசதகம், வைராக்யதீபம், அவிரோதவுந்தி, சிவஞானதீபம், சித்தாந்த சிகா மணி, அத்துவிதவெண்பா வென்பன ஐக்யவாதசைவக் கொள்கையைப் போதிப்பன. ஐக்ய வாதசைவம் அகப்புறச் சமயத்தின்பாலதா யகச்சமயமாறற்குமயலாய் நிற்பதோர் சமயம்.

நிமித்தகாரணமாகிய முதல்வன் மாயையோடுங்கூடி முதற்காரணமுமாய் பரிண மிப்பனென்பதே சிவாத்துவித சைவர் கொள்கையென்க."

"சைவ சமயிகளாய் ஓராகம விதிப்படி தீக்கைபெற்ற ஒழுக்கினருட்சிலர் சிவநேத்திர மாய கண்மணியை விடுத்து இலிங்கதாரணஞ்செய்து வருகின்றனர். அங்ஙனந் தரிப் பது குற்றமன்று. ஆயினும், அதனுல் வரும்பலம் அற்பமென்றதனுலோ சுத் வித்தை களிலொன்ருய சூதசங்கிதையில் 'மெய்திகழுஞ் சிவாகமத்து மேவுதீக்கையர் சில் லோரைதிலிங்கதாரணஞ் செய்வாரதுவுங்கூடாது."

"நகுலீச பாசுபதமதம் † (வீரசைவம்)."

"பன்னிரண்டாம் நூற்றுண்டில் வசவரென்பவர் வீரசைவமென்றும் இலிங்காயத மென்றுஞ் சொல்லப்படும் ஒரு சைவமத விசேஷத்தைச் சிருஷ்டித்துவிட்டார்."

* இது கடலினலைகள் போன்று முதன் முதல் உத்தரதிசையிலுள்ள காஶ்மீர தேஶத்தில் ப்ரதிபிஜ்ஞரான அபிநவகுப்தர் என்பவரால் உத்தாரணத்தினிமித்தம் தொடங் கப்பட்டு, அவ்விடத்தினின்று மத்யப்ரதேஶத்திற் சென்று, ஸ்ரீபசவேஶ்வரர் என்பவரால் நன்கு வளர்ந்துத் தழைத்தோங்கிப் பரவப்பெற்று, அவ்விடத்தினின்றும் வெளிப்பட்டு, தென்தேஶத்திற் குடிபுகுந்து திருவெண்ணெய்நல்லூர் மெய்கண்டதேவர் என்பவ ரால் இறுதியில் நிலைநிறுத்தப்பட்டு விளங்கியதென்றும், ஸ்ரீ பஸவேஶ்வராவதாரமில்லை யாயின் இதுகாறும் இந்த தேஶமுற்றினும் ஶைவஸமயமானது விளங்காது மழுங்கி சமண்முதலிய புறச்சமயங்கள் அடர்ந்துபோயிருக்குமென்றும் டாக்டர் பார்நட்துரை தம் வ்யாஸத்திற் கூறியுளர்.

---

† இதனை லகுலீஶ அல்லது லகுடீஶ பாஶுபதம் எனக் கூறுப.

கமோக்த ஸந்மார்க்கமாம். ஆதலின், வீரசைவஸமயத்தி னுண்மை யறிவது லோகோபகாரமாதல்பற்றி அதை விளக்கும் ஜ்ஞாநஸாதக ஶாஸ்த்ரங்கள் வெளிவரல்வேண்டுமென்னும் பேரவா நெடுநாளாயென்னைப் பற்றிக்கொண்டு இருந்தது. அது ஒருவாறு நிறைவேறுமாறு முதன் முதல் இந்தச் சித்தாந்த சிகாமணியை உரையுடன் வெளிப்படுத்தற்குத் திருவருள் கூட்டுவித்தது. இது தொடங்கி சுமார் மூன்று வருஷகாலமாயிற்று. இது ஸம்பூர்ண மாகாது கைசோர்ந்து போக இடை யிடையில் ப்ரதிபந்தகங்கள் பற்பல நேர்ந்தன. இவை என் நண்பர் அனைவரும் அறிந்தனவே. ஆயினும், இது முடிவெய்துமாறு விடாமுயற்சி செய்யத் துணிய, யான் மனோ த்ருட மடைதற்குக் காரணமாயுள்ள குருலிங்கஜங்கமர்களின் திருவருளை த்ரிகரணஶுத்தியுடன் வழுத்தி, மேலும் இந்நூல் உலகில் நடைபெறச் சிந்தியாநின்றேன்.

---

இ. பி. 1160 - 1170 - ம் ஆண்டின் மத்யகாலத்தில் அதாவது இற்றைக்குச் சுமார் ௭௫0 வருஷங்களுக்கு முன்னர் வீரசைவ ஸமயோத்தாரணத்தினிமித்தம் த்விதீய ஶம்புவான ஸ்ரீநந்திகேஶ்வரர் * திருக்கல்யாணபுரியென்னுமோர் திவ்யக்ஷேத்ரத்தின்கண் லோகரக்ஷகராகத் திருவவதாரஞ்செய்து ஸ்ரீ பஸவேஶ்வரரெனத் திருநாமம் பெற்றனர். இவர் பரமஶிவத்தைச் சற்றேனும் விட்டகலாத பரமபக்தர். இதுபற்றியன்றே, நம்மிந்த்யா தேஶத்திலுள்ள ஸர்வ ஶிவாலயங்களிலும் ஶிவஸந்நிதியில் நந்திகேஶ்வரர் வீற்றிருத்தலை நாம் காண்கிறோம். எனவே, நந்திகேஶ்வரரில்லாத ஶிவாலயமும் வ்ருஷபவாஹந அதிகாரநந்திவாஹந ஸேவைகளில் பக்தியில்லாத மாக்களும் கிடையா. நந்திகேஶ்வரரிடத்தில் ஓர்விதமான பக்தி விஶிஷ்டங்கள் குடிகொண்டிருத்தலானன்றே, ஒவ்வொரு ப்ரதேஶங்களினுமுள்ள வீரசைவர் இதுகாறும் அவரது திருநாமத்தினைத் தங்கள் ப்ராணன் போன்று போற்றி வழிபட்டுக்கொண்டு வருகின்றனர். பஸவபுராணம் இவரது திவ்ய சரித்ரத்தை விரிவாயெடுத்தோதும். இவரது மான்மியம் ஸமயம் நேர்ந்துழி வெளிப்படுத்துவாம்.

ஈஶ்வரவாக்யம்.

பகாரோ ப்ரஹ்மரூபஞ்ச ஸகாரோ விஷ்ணுருச்யதே ।
வகாரோ ருத்ரரூபஞ்ச த்ரிதயம் பஸவாஹ்வய: ॥

பகாரோ நாதரூபஞ்ச ஸகாரோ பிந்துரூபகம் ।
கலாரூபம் வகாரஸ்ஸ்யாத் த்ரிவர்ணம் பஸவாஹ்வய: ॥

ஸத்த்வம் ரஜஸ்தமஶ்ச பஸவேத்யக்ஷரத்ரயம் ।
ஸதாஸக்த்யா ஜவேயஸ்து வாவதத்ரௌஷ்டஸந்நிப: ॥

வாதுளம்.

ஶ்ருதிஸ்ம்ருதீதிஹாஸேஷு ஶிவயோகாதிஶாஸ்த்ரகே: ।
கத்யதே ஶிவவிஜ்ஞாந தத்த்வம் ஷட்ஸ்தலநிர்ணயம் ॥

---

* இது பிஜாபூர் ஜில்லாவில் உள்ளது.

விஜ்ஞாபநம்.

வீரஶைவமானது கால தேஶ வர்த்தமானங்களினால் இத் தென் தேஶங்களில் பரவாதிருந்ததாகக் காணப்படுகின்றது. வீரஶைவ ஸமயத்தை விளக்கும் நூல்கள் வடமொழியிலும் கன்னடத்திலும் இந்தியிலும் அநேகமுள. அவற்றுள், முக்யமானவைகளைச் சேகரித்தும், இன்னும் சேகரிக்க முயன்று கொண்டும் வருகிறேன். இவைகள் மொழிபெயர்க்கப்பட்டு வருமாயின் மிகவும் லோகோபகாரமாயிருக்கும். ஆதலால், அவைகளை ஒன்றன் பின்னொன்றாய்ப் பதிப்பித்து வெளிப்படுத்த ஊக்கமுள்ளவனாயிருக்கிறேன். ஈஶ்வரனருள் புரிவாராக. இவ்வமயம் இச் சமயநூலுடையார் யாவரேனும் எந்த பாஷையிலிருப்பினும் அவைகளை யுதவிபுரிவரேல், அவரிடம் யான் பெருநன்றி பாராட்டக் கடமைப்பட்டவனாயிருக்கிறேன்.

வீரஶைவ ஸிம்ஹாஸநாதியான மடாதிபதிகளும், ஸமயாபிமாநிகளும், கனதனவான்களும், மற்றுமுள்ள பக்தர்களும் இவ் விஷயத்தில் இயன்றவரையில் உபகரித்து, வீரஶைவஸமயம் உத்தாரணமாதற்கும் வீரஶைவ க்ரந்தங்கள் அச்சேறி வெளிப்படுத்தப்படுவதற்கும் சற்றுக் கவனிப்பரேல்,

---

ஶிவாகமேஷு ஶிவாகமேஷ்வேத ஸஹஸ்ரேஷ்வபராத்ருதேஷு ।
கத்யதே ஶிவஸித்தாந்த தந்த்ரம் ஷட்ஸ்தலநிர்ணயம் ॥

ஸர்வேஷ்வபி ச வேதேஷு புராணேஷ்வாகமேஷு ச ।
கத்யதே ஶிவஸித்தாந்த தந்த்ரம் ஷட்ஸ்தலநிர்ணயம் ॥

ஶ்ரீதத்த்வஸாரேஷ்வத்யந்த ப்ராதாந்யேந ஸம்மதம் ।
கத்யதே ஶிவஸித்தாந்த தந்த்ரம் ஷட்ஸ்தலநிர்ணயம் ॥

மோக்ஷஸாதநஶாஸ்த்ராந்த தத்த்வஸ்ய ப்ரணவம் ।
கத்யதே ஶிவஸித்தாந்த தந்த்ரம் ஷட்ஸ்தலநிர்ணயம் ॥

மோக்ஷஸாதநஶிவஜ்ஞாநாம் வ்யாக்யாநேஷூ
நிரஸ்யகர்மவாதாந் வ்யாஸேந ஸம்ப்ரதாய ।

ஸர்வஶாஸ்த்ரஸ்ய ஶ்ரேஷ்டாசார்யஶிஷ்யா
த்ரயந்த தத்ஸம்வாதாய ப்ரஜ்ஞயோக்தம் ॥

ஸத்தர்காஶேஷஸம்வாதாய ஸம்ப்ரதாயஸாதநம்
ஶிவோக்தம் ஶிவஸித்தாந்ததந்த்ரம் ஸமஸ்த ஸாரம் ॥

உத்தரவாதுளம்.

ஶிவ நாமஸ்மரணம் ஶைவஸித்தாந்தஸம்மதம் ।
ஸர்வஜ்ஞத்வம் ஶைவஸித்தாந்ததம் ॥

வேதவேதாந்தங்களும் ஶிவாகமங்கள் இருபத்தெட்டும் எடுத்தோதுவதும், அவ் வேதாகமநெறிநின்ற ஸகலதேவர்கள், ஸ்ரீ பஶுபதிப்ரமதகணங்கள், மஹர்ஷியாதியர்கள் போற்றுவதுமாகிய ஶிவாத்வைதஸமயம் முன்போலவே தழைத்தோங்கி நிலைபெறுதலேயன்றி, அவர்களும் ஶிவப்ரஸாதத்திற்குப் பாத்ரபூதராவார்களென்பது திண்ணம்.

வேண்டுகோள்.

பெருஞ் சிறப்பு வாய்ந்த இந்தச் சித்தாந்தசிகாமணி யென்னும் ஶாஸ்த்ரத்தைச் சற்றும் அதிகாரியல்லாத யான் நாணிழந்து என்சிற்றறிவுக்கெட்டியவரை ஓர் உரை எழுதத்துணிந்தது, யாவரும் எளிதில் ப்ரயோஜநமடையும்பொருட்டு அளவு கடந்தெழுந்த பேரவாவன்றி வேறன்று. ஆதலின், இந்த க்ரந்தத்தை வாசிக்கும் புண்யவான்கள் குற்றங்களைந்து குணங்கைக்கொண்டு அன்புகூர்ந்து ஏற்றுக்கொள்வரென ப்ரார்த்திக்கின்றனன். மேலும், இதில் இன்னும் வேறுமுக்ய விஷயங்கள் யாதேனும் விடுபட்டிருப்பதாயறிந்து, அவைகளைத் தயைசெய்து தெரிவிப்பரேல், அவர்களுக்கு வந்தனமளித்து இரண்டாம் பதிப்பில் வெளிப்படுத்துவேன்.

வித்யாதாநஞ்செய்தவர்களின் நன்றிபாராட்டல்.

இந்தச் சித்தாந்தசிகாமணியானது முடிவெய்தும் வரையில் வடமொழியினும் இலக்கண இலக்கியங்களினும் நிகழ்ந்த ஸந்தேஹங்களைத் தெளிவித்து பூர்ண ஸஹாயஞ்செய்த ஸ்ரீமத். மருவூர் - கணேஶஶாஸ்த்ரியாரவர்களுக்கும், மஹாவித்வான் காஞ்சி - ராமாநந்தயோகிகளுக்கும் மிகவும் க்ருதஜ்ஞனாயிருக்கிறேன்

இந்த க்ரந்தமானது அச்சேறி முடிவெய்தும் வரையில் என் நண்பர்கள் மதுரைத் தமிழ்ச்சங்கத்து வித்வான் சித்தாந்தசரபம் பூவை. கலியாணசுந்தர முதலியாரவர்களும் சென்னை வேப்பேரி எஸ். பி. ஜி. ஹைஸ்கூல் தமிழ்ப் பண்டிதர் கா. ரா. நமச்சிவாயமுதலியா ரவர்களும் செய்த உதவியை மறக்கற்பாலதன்று. அன்றியும் இது விரைவில் வெளிவர அப்போதைக்கப்போது ஞாபகமூட்டித் தூண்டுகோலாயிருந்த ஸத்ஸங்க மஹான்களுக்கும் அன்பு பாராட்டா நின்றேன்.

[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ॥

46, அநுமந்தராயன் தெரு,
இடப்பாளையம்,
சென்னை, 9—11—10.

இங்ஙனம்:
செ. நாகிசெட்டி.

உ

சிவமயம்.

# சிவப்பிரகாசசுவாமிகள்

## வரலாறு.



கடல் சூழ்ந்த இப் பூவுலகத்திலே, முற்காலத்திலே, வேதாகமங்கள் மறைய, இல்லற முதலிய நல்லறநெறிகள் குறைய, சமண் முதலிய புறச்சமயங்கள் நிறைய, சைவசமயமும் அதற்குரிய விபூதி ருத்ராக்ஷ சாதனங்களும் நாடோறுந் தேய்ந்தன. அதுகண்டு, சித்தர்களும் ருஷிகளும் ஒருங்கு சேர்ந்து, திருக்கைலையிற்சென்று, திருநந்திதேவரநுமதிபெற்று, சந்நிதியை யடைந்து, சிவபெருமானைத் தரிசித்து, கைகளைச் சிரமேற்குவித்துத் தோத்திரஞ் செய்து நின்றார்கள். அப்பொழுது, சிவபெருமான் அவர்மீது கருணை கூர்ந்து, "அன்பர்களே! உங்களுக்கு யாது குறை?" என்று வினவியருள; அச் சித்தர்முதலியவர்கள் அடியற்ற மரம்போலே நிலத்திலே வீழ்ந்து நமஸ்கரித்து, எழுந்து நின்று, "எம்பெருமானே! பூமியிலே வேதசிவாகமங்களிற் கூறப்படும் சைவசமயந் தழைக்கவும், சமண் முதலிய புறச்சமயங்கள் நசிக்கவும் திருவருள்செய்யவேண்டும்" எனப் பிரார்த்தித்து, அங்ஙனமே அநுக்கிரகிக்கப் பெற்று, தங்கள் தங்களிடத்தைச் சார்ந்து, சைவசமயந் தழைத்தோங்குங் காலத்தை எதிர்பார்த்திருந்தார்கள். அது நிற்க.

உலகமாதாவாகிய உமாதேவியார் ஓர்நாள், நீர்விளையாடலை விரும்பி, திருக்கைலாசமலையின் ஓர் பக்கத்தில் சண்பக முதலிய மரங்களடர்ந்த ஓர் சோலையையும் அதன் நடுவே நாற்புறமுங் கோப்புவாய்ந்த ஓர் தடாகத்தையும் சிருட்டித்து, கணநாதராகிய சங்குகன்னரை யழைத்து, "யாம் நீராடிவரும் வரையில் ஒருவரையும் உள்ளேவிடாதொழிக" என வற்புறுத்தி ஆஞ்ஞாபித்து, அவரை வாயிற்காவலராக நிறுத்தி, சரஸ்வதி லக்ஷ்மி முதலாகிய தெய்வப்பெண்களோடு பாங்கியரும் புடைசூழத் தடாகத்திலிறங்கி, நீர்விளையாடுகையில், திருக்கைலாசமலைச் சாரலிலுள்ள சிறப்புக்களைக் கண்ணுற்று, அங்கெழுந்தருளிய சிவபெருமான் சோலையையும் அதனடுவிலுள்ள தடாகத்தையுங் கண்டு அதிசயித்து, அத் தடாகத்தின் வாயிலை யடைந்து, அங்கு நின்ற சங்குகன்னர் ஒன்றும் விண்ணப்பஞ்செய்யாது, அஞ்சி வாளா நின்றமையால் உள்ளே செல்ல; நீர்விளையாடிக்கொண்டிருந்த உமாதேவியார் கண்டு வெள்கி, தெய்வமகளிரோடும் ஓர் பக்கத்திலொளித்தனர். எம்பெருமான் அதை உற்றுணர்ந்து, விரைந்து வாயிலையடைந்து, சங்குகன்னரை நோக்கி, "உமையினது நீர்விளையாடலை நமக்கு உணர்த்தாத குற்றத்தால் நீ பூமியிலே மனிதப்பிறப்பை அடைவாயாக" என்று சபிக்க; அதுகேட்டு

சங்குகன்னர் மனங்கலங்கி, சிவபெருமானுடைய திருவடிகளிலே விழுந்து நமஸ்கரித்து, "எம்பெருமான் றந்த இச் சாபம் நீங்குநாள் எந்நாள்" என்று பிரார்த்தித்தனர். உடனே கடவுள் கிருபைகூர்ந்து, "நீ பூமியிலே பிறந்து வேதசிவாகமங்களை விளக்கி, சைவசமயத்தை விர்த்திசெய்து, எப்பொழுது நமது குமாரனுகிய சுப்பிரமணியனுேடெதிர்த்து யுத்தஞ்செய்வாயோ, அப்பொழுதே இச் சாபம் நீங்கி, சின்னுளிலே நம்முருவத்தையும் பெறுவாய்" என்று அநுக்கிரகித்தனர்.

பின்பு, சங்குகன்னர் பூமியிலே யோனிவாய்ப்பட்டுப் பிறவாது, சிவந்த ஜடையையும், குண்டலம் பொருந்திய காதையும், கல்லாடையோடு விபூதி ருத்ராக்ஷம் சிவலிங்கம் விளங்கும் உறுப்புக்களையும், சின்முத்திரையோடு கூடிய வலக்கரத்தையும், விபூதிப்பையையும் மாத்திரைக்கோலையும் தாங்கிய இடக்கரத்தையும், லங்கோடு கௌபீநம் பொருந்திய திருவரையையும், திருப்புன்முறுவலோடுகூடிச் சிவாகமத்தை யுபதேசித்தருளும் செவ்வாயையும், அஞ்செழுத்தை அகலாதுச்சரிக்கும் நாவையும் பெற்று, பத்து வயதோடு விளங்கும் மாநுடத்திருமேனி தாங்கி, ஞானசூரியன்போல மயூராசலத்துக்குச் சமீபமாகக் கீழைச்சமுத்திரத்திலே யுதித்து, அந்தச் சமுத்திர தீரத்திலே ஓராச்சிரமங் கண்டு, அதில் சில சித்துக்கள் விளங்க சிவயோக சமாதியோடு எழுந்தருளியிருந்துகொண்டு, தம்மிடத்து அன்பு பூண்டடைந்த சித்தர் முதலிய அடியவர்களுக்கு வேதாகமங்களிற் கூறப்படும் ஞான சித்திகளை யுபதேசித்து, சிலகாலம் வீற்றிருந்து, பின்பு பெருமுக்கன்மலை முதலிய பல மலைகளினும் வனங்களினுஞ் சென்று, அங்குள்ள சித்தர்கள் முதலாயினேர்க்கும் அநுக்கிரகித்து, அச் சமுத்திரதீரத்திலுள்ள ஆச்சிரமத்திலே மீளவும் வந்திருந்தார். பாலவயதோடு சமுத்திரத்தில் திருவவதாரஞ்செய்து சித்திகளில் வல்லராயிருந்தமையால், இவருக்குப் பாலசித்தர் என்னுந் திருநாம முண்டாயிற்று.

இவ்வாறு பாலசித்தர் அவ் வாச்சிரமத்தில் வீற்றிருக்கு நாளில், ஓர்நாள் சிவபெருமானது ஆஞ்ஞையின்படி த்ரிலோகங்களிலும் சஞ்சரிக்கின்ற நாரதமுனிவர் சித்தரிடம் வந்து, அவராற் செய்யப்பட்ட உபசாரத்தைப் பெற்று மகிழ்ந்து, அவரை நோக்கி, "இவ்வாச்சிரமத்திற்கு மேற்றிசையிலே மயூராசலம் என்று ஓர் திவ்யக்ஷேத்ர மிருக்கின்றது: அது, தன்னையடைந்தவர்கள் வேண்டிய வரங்களை வேண்டியவாறே பெறும்படி, மயூரமானது மலையுருக்கொண்டு முருகக்கடவுளை வழிபட்டு வாகனமாகப்பெற்றது" என்று குறிப்பால் விளகக; சித்தர், "அச் சரித்திரத்தை விரித்துரைத்தல் வேண்டும்" என்று வேண்டிக்கொண்டனர். முனிவர், "முன்னே முருகக் கடவுளது வேலாயுதத்தினுற் கிழிக்கப்பட்டு யுத்தத்திலே மயிலுருக்கொண்ட சூரனுனவன், பின்னே ஞானத்தை யடைந்து, அக் கடவுளை வணங்கி நின்று, 'சுவாமீ, அடியேனை வாகனமாகக் கொண்டருளவேண்டும்' எனப் பிரார்த்திக்க; கடவுள், 'நீ இப் பிறப்பிற் செய்த பாவங்கள் ஒழியும் வண்ணம் தொண்டைநாட்டிலே பெண்ணைநதிக்கும் மாவிந்தியபர்வதத்திற்கும் நடுவி

லுள்ள பூமியிலே தவஞ்செய்து சுத்தனானபின், நாம் அவ்வாறே கொண்டருள்வோம்' என்று ஆஞ்ஞாபித்தனர். அதனால், அவன் அவ்விடஞ் சென்று, மயில்வடிவாயமைந்த மலேரூபமாயிருந்து, முருகக்கடவுளைக்குறித்து ஒரு வருஷந் தவஞ்செய்ய; எம்பிரான் எழுந்தருளிவந்து, அவனை வாகனமாகக் கொண்டருளி, 'இன்னும் வேண்டும் வரம் கேள்' என்று கட்டளையிட்டனர். உடனே சூரன் பணிந்து, 'அடியேனை வாகனமாகக் கொண்டதன்றியும் இம் மலை என்னுடைய அம்ஸத்தால் மயூராசலமென வழங்கவும், இதில் தேவரீர் எந்நாளும் வீற்றிருந்து அடியார்களுக்கு அருள்பாலிக்கவும் வேண்டும்' என்று வேண்டிக்கொள்ள, கடவுள், 'இம் மலையின்கண்ணே பாலசித்தன் என்பவன் சிவபெருமானாற் றனக்குக் கிடைத்த சாபத்தை நீக்கிக் கொள்ளுமாறு நம்மைக்குறித்துத் தவஞ்செய்வான்; யாம் அவனுக்கு அநுக்கிரகிக்கவேண்டி இம் மலையின்கண்ணே வந்து, அன்றுமுதல் எந்நாளும் நீக்கமின்றி வீற்றிருப்போம்' என்று திருவாய்மலர்ந்தருளினார். ஆகையால், 'அதனை யடைந்து அருந் தவமியற்றில் எண்ணிய கருமம் எளிதிற்கைகூடும்" என்றுணர்த்தி விடைபெற்றுக்கொண்டு சென்றனர்.

அப்பொழுதே மயூராசலத்தை யடைந்து, அம் மலையினுச்சியிலேறி, அங்குள்ள சுனையில் ஸ்நானஞ்செய்து, விபூதி ருத்ராக்ஷந் தரித்து, சிவபூஜை முடித்து, பத்மாசநமாக இருந்து, முருகக்கடவுளைக்குறித்து முப்பத்தைந்து வருஷம் தவயோகமும், பின் பஞ்சாக்நிமத்தியிலிருந்து சிலகாலங் கடுந்தவமும் புரிந்தும் கடவுள் பிரசன்னமாகாமையினால், அவருடைய தேவிமார்களைக்குறித்துப் பலநாள் தவஞ்செய்தார். அக்காலத்தில், வள்ளி நாயகி முருகக்கடவுளை நோக்கி, "நம்மைக்குறித்து நெடுங்காலமாகத் தவஞ் செய்கின்ற பாலசித்தனிடஞ் சென்று அநுக்கிரகிக்கவேண்டும்" எனப்பிரார்த்திக்க; கடவுள் வள்ளிநாயகியைப் பார்த்து, "அந்தப் பாலசித்தன் சிவாபராதியாதலால் அவனுக்கு அருள்பாலித்தல் முறையன்று" எனக் கட்டளையிட்டும் மேலுமேலும் தேவியார் வேண்டல் கண்டு முனிந்து, "பெண்ணே! நீ சிவாபராதியிடத்தில் இரக்கம் வைத்திருக்கின்றாயாகலின் நமதருகில் நில்லாது அகலுதி" என்று மேல்விளைவை நோக்கி மறுத்தருளினார். உடனே, தேவிமாரிருவரும் சித்தகன்னிகைகளாக வடிவங்கொண்டு சித்தருக்கு முன் வந்துநிற்க; அதுகண்ட சித்தர் முருகக்கடவுளுடைய தேவிமார்களே நம்மை யாட்கொள்ள இவ் வுருக்கொண்டு எழுந்தருளினாரெனத் துணிந்து உபசரித்து, "நீயிர் யாவர்? இங்கு வந்தகாரணம் யாது?" என்று வினவினர். அக் கன்னியர்கள், "இவ்விடத்தில் சித்தர்கள் இருப்பதை யறிந்து நாமும் வசிக்க விரும்பி வந்தோம்; நீர் எங்களைப் புத்திரிகளாகப் பாவித்து ஆதரிக்க வேண்டும்" என்று கூறி, அதற்கு அந்தச் சித்தர் மனமகிழ்ந்து உடன்பட்டமை கண்டு, தேவதச்சனால் அம் மலையின்மேல் ஒரு மாளிகை சிருட்டிப்பித்து, அதிலே தாம் வீற்றிருந்துகொண்டு, "யாவர் வரினும் உள்ளே விடவேண்டுவதில்லை" என்று சித்தரை வாயிற்காவலராக நிறுத்தி, அவரால் தினமுங் கொடுக்கப்பட்ட காய் கனி கிழங்கு முதலியவைகளை உண்டு வந்தார்கள்.

தேவிமார் இங்ஙனமிருக்குநாட்களில், ஓர்நாள் முருகக்கடவுள் திருவுளங் கலங்கி, இவர்களை எங்குந்தேடி இளைத்தவர் போல நடித்துக்கொண்டு, மயூரா சலத்தை யடைந்து, அம் மலையின்மேலேறி, அதன்மேல் அதிவிசித்ரமாக நவமணிகளால் அமைக்கப்பட்டிருக்கும் மாளிகையை உற்றுநோக்கி, அதனு ள்ளேசென்று,தேவிமார்களைப் பார்க்கவேண்டுமென்னும் ஆசையால் ஓர் அரச குமாரவடிவங்கொண்டு, கையிலே வேல் வாள் வில் முதலியவற்றை யேந்தி, அம் மாளிகையின் வாயிலிலே நுழையப் போக; அத் தருணத்தில், காவலராக நின்ற சித்தர் சிவபிரான் றந்த சாபசம்பந்தத்தால் அவரை முருகக்கடவுளெனத் துணியாது, "இராஜகுமாரனே! இம் மாளிகையில் சித்தகன்னியர்கள் வசிக் கின்றார்கள்: நீயோ யுத்தசந்நத்தனாய் வந்திருக்கின்றாய்: நின்னோடெதிர்த்துச் சமர்புரிவார் இங்கொருவருமில்லை: அன்றியும், மநுநீதி யறிந்த அரசர்களுக்கு ஒத்த வரசர்களோடன்றிச் சித்தர்முதலியவர்களோடு யுத்தஞ்செய்வதும் அற மன்று: ஆகையால், இதை விட்டு போவதே தகுதி" என்றார். இவ்வாறுரை த்தும் கேளாது, கடவுள் உள்ளே செல்லத்துணிதலை சித்தர் அறிந்து, உள்ளே யிருக்கும் தேவிமார்களைத் தியானித்து, அவர்களால் அத்திர சத்திர வித்தை யுபதேசத்தோடு ஆயுதங்களையும் தேர் முதலியவற்றையும் சிருட்டித்தரு ளப்பெற்று, அவர்கள்கிருபையால் முருகக்கடவுளோடெதிர்த்து, அவரால் விடப்பட்ட ஆயுதங்களனைத்தையும் தடுத்தமையேயன்றி, அவர் விடுத்த வேலாயுதத்தையும் தேவிமார் தியானபலத்தால் கைப்பற்றினர். அக்காலையில், கடவுள் மிகுதியும் கோபமுடையவர்போல வில்யுத்தத்தை விடுத்து, மல்ல யுத்தந்தொடங்கிச் சித்தரது மார்பிலே யறைந்து கீழேதள்ளி, எலும்புகளொடி யும் வண்ணம் குற்ற; அதனால், சித்தர் மிகவும் சோபத்தை யடைந்தும், கடவு ளைப் பரிசிக்கப்பெற்றதால் விரைவில் வருத்தம் நீங்கி, இவர் முருகக்கடவுளே யென்று உணர்ந்தெழுந்து, நமஸ்கரித்துத் துதித்து, "சுவாமீ! அடியேன் செய்த இக் குற்றத்தைப் பொறுத்து, சாபத்தையும் நீக்கி யருளல்வேண்டும்" என்று பிரார்த்தித்தார்.

முருகககடவுளும் அவ்வாறே யருள்செய்து, உள்ளே யெழுந்தருளிச் சிங்காசனத்திலே வதிந்திருக்க; உடனே சித்தரும் தேவிமார்களை யலங்கரிப்பி த்து, அழைத்துவந்து, அவர்களோடும் வணங்கிநின்று, "அடியேன் புத்திரிக ளாகப் பாவிக்கப்பட்ட இக் கன்னியர்களைத் தேவரீர் திருமணமுடித்து, இந்த ஸ்த்தலத்திலேயே எந்நாளும் வீற்றிருந்தருளல்வேண்டும்" என்று, வேலாயு தத்தையும் சந்நிதியில் வைத்து விண்ணப்பித்தார். கடவுளும் அதற்கியைந்து, சிவபெருமான் உமாதேவியாரோடும் கணங்கள் சூழ எழுந்தருளும்படி தியா னிக்க; எம்பிரானும் அவ்வாறே தேவியாரோடு மெழுந்தருளி, மயன் வகுத்த மணமண்டபத்திலே வீற்றிருந்தார். முருகக்கடவுள் சிவபெருமானுடைய ஆஞ்ஞையால் பிரமதேவர் திருமணச்சடங்கு நடத்த, சித்தர் தத்தநீர் வார்க்க, கன்னியரிருவரையுந் திருமணம்புரிந்தார். அவ்வயமத்தில், சிவபெருமான் சித்தரை நோக்கி, "நம்முடைய சாபத்தினின்று நீங்கிய நீ இந்த ஸ்த்த லத்தில் நமது குமாரனாகிய சுப்பிரமணியனோடு இன்னும் ஐந்நூறுவருடமி

ருந்து, உலகத்தில் சைவசமயத்தை விர்த்திசெய்து, பின் நம்மிடத்திற் கலப்பாயாக" என்று கட்டளையிட்டு, தமது திருவருட்குறியாகிய ஓர் சிவ லிங்கமும் அங்கே தோன்றும்படி அநுக்கிரகித்து எழுந்தருளினர்.

அவ்வாறே சித்தர் முருகக்கடவுளோடு மயூராசலத்தி லிருக்கும்போது, ஓர்நாள் கடவுள் சித்தரை நோக்கி, "நீ நம்பெருமான் ஆக்கினைப்படியே பூமி யிற்சென்று பக்குவர்களுக்கு ஞானோபதேசஞ்செய்து வரக்கடவை" என்று கட்டளையிட்டு, முத்துச்சிவிகை முதலியவற்றையுங் கொடுத்து அனுப்பி யருள; சித்தர் சிவிகையிலேறி, அடியார்கூட்டத்தோடும் பலதேசங்களினுஞ் சென்று, அங்கங்குள்ள அன்பர்களுக்கு வேதாகமங்களினுயர்ச்சியையும், அவற் றிற் கூறப்படும் சைவசமயத்தினருமையையும், அதற்குரிய விபூதி ருத்ராக்ஷ பஞ்சாக்ஷரங்களின் பெருமைகளையும், இவற்றைக் கைக்கொண்டு சிவபெரு மானை வழிபட்டாலன்றி முத்திப்பேறில்லையென்பதையும் உபதேசித்து, தம் முடைய ஆச்சிரமத்தை யடைந்து, அங்கே பிரசன்னராக விளங்கும் முருகக் கடவுளை நமஸ்கரித்து நின்றனர். சிவஞானத்தை யாவருக்கும் உபதே சித்து வந்தமையால் சித்தருக்கு சிவஞானபாலசித்தர் என்னுந் திருநாமமுண் டாயிற்று. அவ்வேளையில், எம்பிரான் சித்தரை நோக்கி, "வேண்டியவரங்க ளைப் பெற்றுக்கொள்" என்று கட்டளையிட; சிவஞானபாலசித்தர் நமஸ்க ரித்து நின்று, "ஐயனே, அடியேனாலுண்டாக்கப்பட்ட இந்த மடத்திலே அடியேனுடைய சிஷ்யன் ஆசார்யாபிஷேகம் பெற்று, மாணாக்கர்களுக்கு ஞானோபதேசம் புரிந்துகொண்டு விளங்கும்படி தேவரீருடைய திருவருளைப் பதிவித்தல்வெண்டும்" என்று விண்ணப்பஞ்செய்துகொண்டார்.

முருகக்கடவுள், இதற்குமுன்னே *பச்சைக்கந்ததேசிகர் மரபிலே புத்திரப் பேறில்லாமல் வருந்திய அம்மவ்வை யென்பவள் பெருமுக்கன்மலையை யடை ந்து பாலசித்தர் திருவுளப்பாங்கின்படியே தினந்தோறும் திருவமுது கொள் ளும்படி சதுரக்கள்ளிப்பாலைக் கறந்துகொடுத்துக்கொண்டிருக்க, ஓர்நாள் தயைகூர்ந்து அப் பாலசித்தர் அளித்த பாற்பிரசாதசேடத்தாலுதித்து, அருகே தொண்டுபூண்டொழுகி நிற்கும் புதல்வரை யழைத்து, சந்நியாசாச்சிரமந் தந்து, ஆசார்யாபிஷேகமும் ஞானோபதேசமும் புரிந்து, தமது அம்ஸத்திலே ஓரம்ஸம் அவரிடத்திலே பதியும்படிசெய்து, "நீ பாலே யுணவாகக்கொண்டு சிஷ்யபரம்பரையோடு சிவஞானதேசிகனென வாழ்வாயாக" என்று அநுக்கிர கித்து, மடத்திலிருத்தி, பின்பு சித்தரை நோக்கி, "பிரமநிலையுணர்ந்த நீ பால வயதோடும் சித்தனாகத் தங்கியிருந்தமையால் இவ் வாச்சிரமத்திற்கு † பிரம

* இவ் வாசிரியர் கன்னடதேயத்திலே யவதரித்து, மல்லிகார்ஜுந பர்வதத்திலே சிலகாலந் தவம்புரிந்து, சிவாநுக்கிரகம் பெற்று, பின்னர் தென்றிசைநோக்கி வருங்கால், வழியிலே சோமேசர் கட்டமுதளிக்க வுண்டு, மலையனூரை யடைந்து, அங்கே சலத்திற் பதிந்துகிடந்த மரகதக் கடகமானது தானே வந்து தமது திருமேனியிலே பச்சையொளி பரப்பிப் பிரகாசிக்கும்படி அற்புதங் காட்டியருளி, அதுகண்ட அரசனால் யானைமுதலிய பலவிருதுகளுந்தந்து உபசரிக்கப்பெற்று, சிதம்பரத்தையடைந்து, தெய்வீகமுற்று விளங்கி யிருந்தவர். பச்சக்கந்தவுடையர் என்பதும் வழக்கம்.

† பிரமபுரம் என்பது பொம்மபுரமென்றாகி பொம்மையபாளையம் என மருவிற்று.

புரம் எனவும் பாலசித்தர்மடம் எனவும் பெயர்வழங்குக" என்று திருவாய்மலர்ந்து, அவருடன் மயூராசலத்தை யடைந்து, முன்னர் சூரனுக்கருளிய வரத்தின்படியே தமது தேவிமார்களோடும் வீற்றிருந்தருளினர். சித்தரும் அம்மலையிலே சிலகாலமிருந்து மிதுனமாதத்தில் திருவாதிரை நக்ஷத்ரத்திலே அம் முருகக்கடவுளுடைய சந்நிதிக்குத் தென்பக்கத்தில் விளங்கும் * சிவலிங்கமயமாயினர்.

சிவஞானதேசிகர் அதுகண்டு அற்புதமுடையராய், பலவாறு துதித்து, முருகக்கடவுளுக்கும் சிவலிங்கப்பெருமானுக்கும் நித்திய நைமித்திகங்களைக் காலந்தோறும் வழுவாமல் நடத்திக்கொண்டு மயூராசலத்திலும் பொம்மபுரத்திலும் சிலகால மிருந்தனர். பின்பு காஞ்சீபுரத்தை யடைந்து, ஏகாம்பரநாதரைத் தரிசித்து, அன்பர்கட்கு அருள்பாலித்து இருக்கும்பொழுது, விஷந்தீண்டியிறந்த ஒருவனை அன்பர் வேண்டுகோளின்படி உயிர்ப்பித்து, அவ்விடத்திலே எக்காலமும் விஷவாதனையில்லாதிருக்கவும் அநுக்கிரகித்தனர். அதுகேட்டு அந் நாட்டையாளும் நபாபு வென்பவன், தன்மனைவிக்கு நேரிட்டிருக்கும் கொடிய சூலைநோயைத் தணிப்பித்துக்கொள்ளும் உத்தேசமுடையவனாய்ச் சந்நிதியை யடைந்து வணங்கி விண்ணப்பஞ் செய்துகொள்ள; அவனை நோக்கி, "ஏகாம்பரநாதர்சந்நிதி முதலியவற்றில் உன்னாற் குறைக்கப்பட்ட நித்திய நைமித்திகங்களை முன்போல நடத்துவையாயின் இந் நோய் நீங்கும்" என்று கட்டளையிட்டு, விபூதியால் அந் நோயைத் தணித்து, ஆலயங்கட்கு முன்னையினுமதிகமாக நிபந்தனைகளை நடத்துவித்து, அங்கே அவனால் விளைநில முதலியவை விடுத்துக் கட்டுவிக்கப்பட்ட திருமடத்தில் அடியார்களால் மாகேசுரபூஜை முதலியவற்றை நடத்திக்கொண்டு எழுந்தருளியிருந்தனர்.

சிலநாட்சென்றபின் அங்ககன்று, வழியிலுள்ள ஸ்த்தலங்களைத் தரிசித்துக்கொண்டு, செய்யூரை † யடைந்து, அங்கே வேளாளரிற் சிலர் பரிசோதனையினிமித்தம் ஓர் புதுக்குடத்தில் நிறைத்து மறைத்துக் கொண்டுவந்த வெண்மணலைச் சருக்கரையாக்கி, யாவருக்குமளித்து, அவர்களால் நில முதலியவைவிடுத்துக் கட்டுவிக்கப்பட்ட திருமடத்தில் வதிந்திருந்து, பின்பு தக்ஷிணயாத்திரையை விரும்பி, சிதம்பரத்தை யடைந்து ஸ்ரீநடேசப்பெருமானைக் காலந்தோறும் தரிசித்துக்கொண்டு சிலதினம் வசித்து நீங்கி, இடையிலுள்ள ஸ்த்தலங்களையும் தரிசித்து, மதுரையை யடைந்து, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு தங்கியிருந்தனர். அக்காலையில், தையல்வேலை செய்பவனொருவன் புதல்வற்பேற்றை விரும்பி, அதுகாரணமாக மீனாக்ஷியம்மையின் சந்நிதியிற் கட்டுதற்கு அறுபத்துநான்கு திருவிளையாடல்களையும் நெடுங்காலமாக தையலாற் சித்திரித்த ஓர் அரிய படாத்தை அந்த அம்பிகையின் கட்டளைப்படியே சிவஞானதேசிகர் சந்நிதியில் வைத்து, மனைவியுடன்வணங்கி, விண்ணப்பஞ் செய்துகொள்ள; உடனே அச் சித்திரபடாத்தை நோக்கி திருவுளமகிழ்ந்து,

---

* இச் சரித்திரவிரிவை மயூராசலபுராணத்துட் காண்க.

† சேயூர் என்பது செய்யூர் என வழங்குகின்றது.

அவ் விருவருக்கும் மூப்பை யகற்றி, இளமையைத் தந்து, புத்திரப்பேற்றையு மளித்து, அந்த ஸ்த்தலத்தினீங்கி, மற்றைய ஸ்த்தலங்களையுந் தரிசித்து, விருத்தாசலத்தை யடைந்து, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, சிலநாள் வாசஞ் செய்து, பொம்மபுரியைச் சேர்ந்து, தெய்வீகசித்தியோடு விளங்கியிருந்தார்.

இங்ஙனம் விளங்குநாட்களில், ஜீவகருணையால், அநேகருக்கு விபூதி யளித்துக் கூன் குருடு முடம் முதலிய அங்கவீனங்களையும், குட்டநோய் வெப்பு நோய் காச முதலிய கொடிய வியாதிகளையும், மாந்திரிகர்களால் நீங்காது வருத்திநின்ற வலிய பேய் முதலியவற்றையும் நீக்கியருளினர். இவற்றை அடுத்த கூனிமேட்டில் இருந்த ஓர் மாந்திரிகன் கண்டு, பொறாமைகொண்டு, செஞ்சியை யடைந்து, திரியம்பகமகாராஜாவைக் கண்டு, "ஐயா! தங்களாளுகையிலமைந்த பொம்மபுரத்திலிருக்கும் சிவஞானதேசிகர் என்பவர் மிகவும் சித்துடையவர் போல நடித்துச் சனங்களை வஞ்சிக்கின்றனர்; ஆகையால், அவரைப் பரீக்ஷித்து நமது நாட்டைவிட்டகற்றுவதே தகுதி" என்றனன். அதுகேட்ட அரசன் உடனே இளமை தொடுத்து நரைமுதிர்ந்த கூந்தலையுடைய தன் பெண்ணையும் அழைத்துக்கொண்டுவந்து சிவஞானதேசிகரை யடைந்து, தன் கருத்தை அச்சத்தோடு விண்ணப்பஞ்செய்துகொள்ள; அப்பொழுதே திருநீற்றினால் அந் நரையை மாற்றுவித்தருளினர். அதுகண்ட மாந்திரிகன் இவரை ஓர்வகையாக மருட்டி ஊரைவிட்டகற்றவேண்டுமென்னும் உத்தேசங்கொண்டு, அரசனை நோக்கி, "எங்களிருவருள் கடலினுள்ளே மூழ்கிக் கரையேறுபவர்களே சித்தியில் வல்லவர்கள்" என்று வீண்வாதஞ்செய்ய; அரசன் ஞானதேசிகர் அநுமதிபெற்று, அவர்களோடு தோணியேறிச்சென்று, அவ் விருவரும் கடலினுள்ளே மூழ்கியவுடன் கரையை யடைந்து, அதற்கு முன்னமே அங்கு வந்து வீற்றிருக்கும் ஞானதேசிகரைக் கண்டு, அதிசயித்து வணங்கி, அம் மாந்திரிகன் ஒரு மீனால் விழுங்கப்பட்டதை அவ்வாசிரியராற் கேள்வியுற்று, மனம் வருந்தி, "ஐயனே! தேவரீருக்கு அபராதியாகிய அம் மாந்திரிகனை மீன்வாயினின்றும் வரவழைத்தருளல்வேண்டும்" எனப் பிரார்த்தித்தனன். அவ் வரசன் வேண்டுகோளின்படியே அவனை யுயிர்ப்பித்து, நல்லறிவு போதித்து, அடிமையாக்கிக் கொண்டருளினர்.

அப்பொழுது, அரசன் மனமகிழ்ந்து பொம்மபுரத்திலே ஒரு பெரிய திருமடங் கட்டுவித்து, அதிலே எவர்கள் எப்பொருளை விரும்பினும் ஈதற்கு வேண்டும் சில கிராமங்களைச் சர்வமானியமாகச் சிலாசாசனமெழுதி நியமித்துவிட்டு, யானைமுதலிய பற்பல விருதுகளையுங் காணிக்கையாகக்கொண்டு ஞானதேசிகர் சந்நிதியை யடைந்து, "எம்பெருமானே! இவற்றை அங்கீகரித்து அடியேங்களைச் சந்ததிபரம்பரையாக ஆட்கொண்டருள்வதுமல்லாமல், இப்பொழுது அடியேனுக்கு மிகுதியும் சத்துருக்களாயுள்ளவர்களை வெல்லும் ஆற்றலையும் தந்தளித்தல்வேண்டும்" என வணங்கிப் பிரார்த்திக்க; தேசிகர் அவ்வாறே வென்று அரசாளும்படி ஆசீர்வதித்துத் திருநீறளித்து, * அணுக்கத்தொண்டராகக்கொண்டு, அவரால் சில திவ்யஸ்த்தலங்களில் அடியவர்கள்

* அணுக்கம்—சமீபம்.

ஆராதனையின் பொருட்டுத் திருமடங்கட்டுவித்து, மயூராசலத்திலும் போம்ம புரத்திலும் முருகக்கடவுளுக்கும் சிவபெருமானுக்கும் மாகேசுரபூஜை முதலியவற்றிற்கும் வேண்டும் நிபந்தனைகளை யேற்படுத்தியருளினார். அன்றியும், நடுநாட்டிலே, சிலபாகத்தை யாண்டுகொண்டிருந்த சிதம்பரபூபதி யென்பவர், தமதரசுரிமையை வேற்றரசன் கவர்ந்துகொண்டமையால், ஓர்வகை வெறுப்புத் தோன்றி, இனி பிச்சை யெடுத்துண்டு பெரியோர் பணியியற்றி யுய்தலே தகுதியெனத் துணிந்து, போம்மபுரத்தை யடைந்து, இயன்ற பணிகளை இயற்றிக்கொண்டிருக்க; ஓர் தினம் தேசிகர் திருவருள்கூர்ந்து, அவர் பக்கத்திலிருந்த சில சேனைகளைக்கொண்டே பகைவனை வென்று, அரசாளும்படி யாசிர்வதித்துத் திருநீறளித்து, இவரையும் அடிமையாகக்கொண்டு, தாம் தம்மை யடைந்த மாணுக்கர்களுக்கு ஞானோபதேசம் புரிந்துகொண்டு சிவ யோகசமாதியில் வீற்றிருந்தருளினார். இது நிற்க.

காஞ்சீபுரத்திலே, ஏறக்குறைய முந்நூற்றுப்பத்து வருஷங்களுக்கு முன் தொண்டைமண்டல வேளாளர்க்குத் தீக்ஷாகுருவாகக் குமாரசுவாமிதேசிகர் என்பவர் ஒருவரிருந்தார். அவர், திருக்கார்த்திகைத் தரிசனத்திற்காகத் திருவண்ணாமலை யாத்திரைக்குப் புறப்பட்டு, ஓர்நாள் வழியில் ஒரு நந்தநவனத்திற் றங்கிச் சிவபூஜைமுடித்து, அன்று சாயங்காலமே தாங்குறித்த அந்த ஸ்த்தலத்தை யடைந்து, அங்குள்ள ஈசாங்யதீர்த்தத்திலே அநுஷ்டானஞ் செய்துகொண்டு, பூஜைப் * பேடகம் எங்கே? என்று பரிஜனர்களிடத்து வினவ; அவர்கள், பகலிலே தங்கியிருந்த இடத்தில் வைத்து மறந்து வந்ததாக அச்சத்தோடு விண்ணப்பஞ்செய்தனர். அதுகேட்டு, மிக மனக் கலக்கமுற்று, அப் பரிஜனர்களை பகற்றங்கியிருந்த நந்தநவனம் வரையும் பரிசோதித்து வரும்படி அனுப்பிவிட்டுத் தாம் ஓரிடத்திற் போய், நம்முடைய ஆன்மார்த்தமாகிய உடையவரை விட்டுப் பிரியும்படி நேரிட்டதே! என்னும் வருத்தத்தால் அன்றிரவு முழுதும் நித்திரையின்றிச் சிவத்தியானஞ் செய்துகொண்டிருந்தனர். அத் தருணத்தில், அவரது சிவபுண்ணிய முதிர்ச்சியினாலே திருவண்ணாமலையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான், ஓர் ஜங்கமத் திருவுருவங்கொண்டு, அவரிடத்திற் கெழுந்தருளி, தம்மெதிர் வந்து தமக்கு நிகழ்ந்த ஆபத்தைத் தெரிவித்து, அன்பொடு வணங்கிநின்ற அவர்மீது கிருபாநோக்கஞ்செய்து, "நீர் அங்கம் வேறு இலிங்கம் வேறாக இருந்தமையால் இவ்வாறு பிரியும்படி நேரிட்டது: இலிங்காங்கசம்பந்தி யாகவிருந்தால் இவ் வண்ணம் நேரிடுதலியலாது: உமது பூஜைப்பேடகம் நாளை யுதயத்தில் வந்துசேரும்: நீர் இதுமுதல் லிங்கதாரணஞ் செய்துகொள்ளும்" என்று அநுக்கிரகிக்க; அவர், இச் செய்கை தமது சிஷ்ர் பந்துக்கள் முதலானவர்களுக்கு விரோதமாக இருக்கும் என்பதை விண்ணப்பித்து நின்றனர். அதுகேட்ட சிவபெருமான், "அந்தச் சிஷ்ர் முதலியோரால் பெறப்படும் பயன் சிறிதுமில்லை: நமது கட்டளைப்படி நீர் சிவலிங்கதாரணஞ்செய்து கொண்டால உமக்கு மூன்று புத்திரர்களும் ஒரு புத்திரியும் பிறப்பார்கள்:

* பெட்டகம் என்பதும் வழக்கம்.

அவர்களால் இம்மை மறுமை யின்பங்களும் முத்தியுஞ் சித்திக்கும். ஆதலால், இவ் வாலயத்திற்குத் தெற்குவீதியிலுள்ள மடத்திலிருக்கும் குருதேவ ரிடத்திலே தாரணதீக்ஷை செய்துகொள்ளும்" என்று வற்புறுத்தி ஆஞ்ஞா பித்து, வீரசைவசமயாசார நெறிகளையும் போதித்து, அவ்வாறே குருதேவ ருக்குங் கட்டளையிட்டு மறைந்தருளினர்.

மறுநாட்காலையில், சிவபெருமானது திருவாக்கின்படியே பூஜைப்பேட கம் வரப்பெற்று, ஸ்ரீகுருதேவரால் அனுப்பப்பட்ட அடியார்களோடு மடா லயத்தை யடைந்து, குருதேவரைத் தரிசித்து, அவராலே தாரணதீக்ஷை செய்யப்பெற்று, திருக்கார்த்திகைத்திருவிழா நிறைவேறியபின் குருதேவரிடத் தில் விடைபெற்றுக்கொண்டு, காஞ்சீபுரத்திற்கு வந்து, தமது அநுஷ்டானப் படியே சிஷ்யர்களுக்குந் தாரணதீக்ஷை செய்துகொண்டிருக்க; அக்காலத்திலே, அவருக்கு அண்ணாமலையார் அநுக்கிரகித்தபடியே மூன்று புத்திரர்களும் ஒரு புத்திரியும் அவதரித்தார்கள். தந்தையராகிய குமாரசுவாமிதேசிகர், களிகூர்ந்து அவர்களுக்கு முறையே சிவப்பிரகாசம், வேலாயுதம், கருணைப் பிரகாசம், ஞானம்பிகை என்று நாமகரணந் தரித்து, முதன் மூவரும் கல்வியிற் பயின்று வருங்காலத்தில் தாம் சிவலிங்கைக்யமாயினர்.

பின்பு, மூத்தவராகிய சிவப்பிரகாசசுவாமிகள், தமது சகோதரர் முதலிய வர்களோடு திருவண்ணாமலைக்குப் போய் குருதேவரைத் தரிசித்து, அங்கே வாசஞ்செய்துகொண்டு, தமது கல்விமுயற்சியிற்றளராது வாழும் நாள்களுள், ஓர்நாள் அந்தச் சோணசைலத்தை ப்ரதக்ஷிணஞ்செய்து வரும்போதே, சோணசைலமாலை யெனப்பெயரிய நூறுசெய்யுள்களால் அதனைத் தோத் திரம் பண்ணினர். பின்னும், பேரிலக்கணங்களைப் பெரிதுங் கற்க விரும்பி, தமது சகோதரர்களுடனே தக்ஷிணதேசத்திற்குப் பிரயாணமுற்று, வாலி கண்டபுரத்திற்குத் தென்பாகத்திலுள்ள துறைமங்கலம் என்னும் நகரத்தைச் சார்ந்த ஒரு நந்தநவநத்தில் சிவபூஜை செய்துகொண்டிருந்தனர்.

அந்நாளிலே, துறைமங்கலத்திலே, பண்டகுலத்திலே, வல்லகோலாதிபதி யென்னும் பட்டப்பெயர்பெற்று குறுநிலமன்னவராய் லிங்காரெட்டியார் என்பவர் ஒருவரிருந்தார்.

அவர் கல்வியறிவு வொழுக்கங்களினும், குருலிங்கஜங்கம பக்தியினும், வீரசைவாநுஷ்டாநத்தினும் மிகச் சிறப்புற்றவராய் வாழுநாளில், ப்ரதோஷ காலத்திலே, சிவதரிசனஞ்செய்தே போஜனஞ் செய்யவேண்டு மென்னும் நியமமேற்கொண்டு, தமது நகரத்திற்கும் விருத்தாசலத்திற்கும் சுமார் நான்கு காவதமிருக்கவும், அந்த ஸ்த்தலத்தில் வீற்றிருக்கும் பழமலைநாதரிடத்தும் பெரியநாயகியம்மையாரிடத்தும் அத்யந்த பக்தியுடையராய்ப் ப்ரதோஷ கட்டளை யேற்படுத்தி, தமது அருந்தவத்தாலுதித்த அண்ணாமலைரெட்டியார் என்னும் சற்புத்திரரோடு, அப் புண்ணியகாலந்தோறும் தவறாமற்சென்று தரிசனஞ்செய்துவந்தார்.

அக்காலத்திலே ஓர்நாள், ப்ரதோஷதினத்திலே, தரிசனத்தின்பொருட்டுத் தமது புத்திரரோடு புறப்பட்டுவருங்கால், பேராறு என்கிற வெள்ளாறு இருகரையினும் பெருகி, ஓடமுதலியவும் செல்லுதற்கு இடங்கொடாதிருப்பதை நோக்கி, லிங்காரெட்டியார் மனம் நைதலோடு, "யாங்கள் சிவபெருமானுக்குத் தொண்டராயின் இந் நதி வழிவிடுக; இன்றேல், இதிலிறப்பதே தகுதி" எனப் பிரதிக்ஞைசெய்துகொண்டு, துணிவோடு அந் நதியிலிறங்கலும், அது சிவபெருமான் திருவருளால் வழிவிடக்கண்டு, "எளியேங்களிடத்தும் எம்பெருமான்றிருவருள் இருந்தவாறு என்னை!" என்று வியந்து, புத்திரரோடு சென்று, பழமலைநாதரையும் பெரியநாயகியம்மையாரையும் தரிசித்து, மனமுருகிப் பலவாறு துதித்து, தமக்குச் சிவபெருமான் பாலித்த திருவருளைச் சிந்திக்குந்தோறும் பேராநந்தமுடையவராய், அந்த ஸ்த்தலத்திலேயே தங்கினர். அன்றிரவிலே, பழமலைநாதர் அவர்கள் சொப்பனத்திலே, ஒரு ஜங்கமர்போலத் தோன்றி, "நீங்கள் ஏன் இவ்வாறு கஷ்டத்தை யடைகின்றீர்கள்; யாம் உங்கள் ஆளுகையிலமைந்த திருவேங்கை நகரத்திலே இன்ன ஸ்தாநத்திலே திருவுருக்கொண்டு வீற்றிருக்கின்றோம்; ஆலயமமைத்து வழிபடுவீராக; அமைக்குங்கால், வடதேசத்திலிருந்து க்ஷாமத்தினால் மெலிந்து சில சிற்பர்கள் வருவார்கள்; அவர்களாலே திருப்பணி பூர்த்தியாகும்" என்று கட்டளையிட்டு மறைந்தருளினர்.

அவ் வாஞ்ஞையின்படியே திருவேங்கை நகரத்தை யடைந்து, குறிப்பித்த ஸ்தாநத்திலே பரிசோதிக்க; அங்கே பூமிக்குள், ஒரு சிவலிங்கமும், அம்பிகை முதலிய சில மூர்த்தங்களும் இருக்கக்கண்டு, அளவிடப்படாத ஆநந்தசாகரத்தின் மூழ்கி, திருவருளைப் பரவி, அப்பொழுதே சுவாமிக்குப் பழமலைநாத ரெனவும், தேவிக்குப் பெரியநாயகியம்மை யெனவும் திருநாமந் தரித்து, சிறிய ஆலயம் அமைத்து, நித்யபூஜை ஏற்படுத்தினர். அந்நாளிலே, சிவாக்கினையின்படியே வடதேசத்திலிருந்து சில சிற்பர்கள் வர; அவர்களுடைய நாலுணர்ச்சி முதலிய உத்தமகுணங்களனைத்தையும் நோக்கி, அதிசயித்து, வேண்டும் பொருள்களை வெறுக்கக் கொடுத்து, அவர்களை அந்த ஸ்த்தலத்திற்றானே குடியேற்றி, திருப்பணிகளை யியற்றிவருங்கால், லிங்காரெட்டியார் சிவலிங்கைக்யமாய்விட்டமையால், அண்ணாமலைரெட்டியாரே தலைவராகவிருந்து, அவரினும் மிகச் சிறப்பாக நடத்திவந்தார்.

ஒரு தினத்திலே, அச் சிற்பர்களுக்குத் தலைவனானவன் கர்ப்பக்ருஹத்தின்கீழே கட்டப்பட்டிருக்கும் சாரத்தின்மேலிருந்துகொண்டு, வேலைக்காரனை வெற்றிலைமடித்துக் கொடுத்தற்பொருட்டு அழைக்க; அவன் அத் தருணம் அங்கில்லாமையால் அண்ணாமலைரெட்டியார் அவ் வேலை முட்டுப்படாவண்ணம் தாம் கீழிருந்து, மடித்துக்கொடுத்தனர். அச் சிற்பன் சாரத்தினது மறைப்பால் இன்னாரெனத் தெளியாது, இடதுகரத்தால் வாங்கியுட்கொண்டபின் உண்மை தெளிந்து, ஓஹோ! என்செய்தோமெனப் பெரிதும் இடரின் மூழ்கி, அபசாரஞ்செய்த அந்தக் கரத்தைத் துணிக்க எத்தனித்தலும்; ரெட்டியார் அவனை நோக்கி, "கரத்தைத் துணிப்பது தகுதியன்று; அக்

காரத்தைக்கொண்டு உனக்குத் தெரிந்துள்ள அரிய வேலைகளெல்லாம் அமைய இத் திருப்பணியைப் பூர்த்திசெய்யின், என்றும் நின் பெயர் நிலைபெறுவதன்றியும், நினக்கு எய்துதற்கரிய சிவகதி பெறுதற்கும் இதுவே ஏதுவாகும்” என்று வற்புறுத்தினார். சிற்பனும் இவ் வுத்தமோத்தம உறுதிவாக்கியத்தைக் கேட்டு, பெருமகிழ் சிறந்து, முன்கட்டிய கர்ப்பக்ருஹத்தை முற்றும் பிரித்துவிட்டு, இத் திருப்பணிபோல யாண்டுமில்லையென யாவருங்கொண்டாட அதிவிசித்ரமாக அமைத்து முடித்தனன்: கண்டவர் கண்களிகூரப் பெற்றார்கள்.

அதுகண்ட அண்ணாமலைரெட்டியாரும் அகங்களிகூர்ந்து, அர்த்தமண்டப முதலிய திருப்பணிகளை ஒருவாறு முடித்து, * சாலிவாஹன சகாப்தம் ௧௫௪௫ ௵ ஆகிய உருத்திரோற்காரி ௵ வைகாசி மாசத்தில் பூர்வபக்ஷ துவாதசியும் ஹஸ்தா நக்ஷத்ரமுங் கூடிய குருவார சுபதினத்திலே, ஆபதோத்தாரண சிவாசாரியார் குமாரர் பிழைபொறுத்தசிவாசாரியரால், விநாயகர் முதலியசகலமூர்த்தங்களுடன் பழமலைநாதரையும்பெரியநாயகியம்மையாரையும் ப்ரதிஷ்டை செய்வித்து, கும்பாபிஷேகமும் நடத்துவித்து, பின்னும், வேண்டிய பெரும்பொருள் செலவிட்டு, மஹாமண்டபம் நிருத்தமண்டபம் இரண்டு பிராகாரம் கோபுரம் திருமதில் திருக்குள முதலிய திருப்பணிகளைக் குறைவற இயற்றிக்கொண்டிருந்தனர். ரெட்டியார் சுவாமிகளுடைய அற்புத மகிமைகளைக் கேள்வியுற்று அங்கடைந்து, தரிசித்த மாத்திரத்திலே அவர்களிடத்தே அநுக்கிரகம்பெற விரும்பி, அடிமைபூண்டு, “சுவாமீ! தேவரீர் இவ்விடத்தில் வாசஞ்செய்தருள வேண்டும்” என்று பிரார்த்தித்து, உடன்படுத்தி, தங்கள்குருவாகிய சென்னவசவையர் மடத்திற்கு மேற்றிசையில் ஒரு திருமடங் கட்டி, அதில் சுவாமிகளை யெழுந்தருளுவித்து, அகோராத்ரம் † பிரிவின்றி அணுக்கத்தொண்டராயமர்ந்திருக்க; சுவாமிகள் அவருக்குச் சன்மார்க்கங்களைப் போதித்துக்கொண்டு, இரண்டு வருஷம் வரையில் அங்கே வீற்றிருந்தார்.

அதன்பின்பு, தாங் கொண்டகருத்தை நிறைவேற்ற விரும்பி, தக்ஷிண தேசத்திற்குச் செல்லல்வேண்டு மென்பதை அவருக்கறிவுறுத்தித், திருநெல்வேலியை யடைந்து, தாமிரபர்ணி நதிதீரத்தி லிருக்கின்ற சிந்துபூந்துறையில் தருமபுர வாதீனத்து வெள்ளியம்பலவாணசுவாமிகள் இலக்கண விலக்கியங்களில் அதிவல்லவர்களாய் இருக்கின்றார்கள் என்பதைக் கேள்வியுற்று, அவ்விடத்திற் சென்று சுவாமிகளைக் கண்டு, தாம் இலக்கணங் கற்கவேண்டி வந்தமையைத் தெரிவித்துக்கொண்டனர். அச் சுவாமிகள், சுவாமிகளுடைய

* இது மேற்படி அண்ணாமலைரெட்டியார் சந்ததியாராய்ச் சுமார் முப்பதுவருஷங்களுக்குமுன் சிவநேசமிக்க விருத்தாசலரெட்டியார் முன்னிலையில் அந்த ஸ்தலத்திலுள்ள சிலாசாசனத்திலிருந்து எடுத்தெழுதப்பட்டது; ஆனால், அண்ணாமலை ரெட்டியாரே திருப்பணிமுடித்துக் கும்பாபிஷேகம் நடத்துவித்திருக்கவும், அவர் பிதா நடத்துவித்ததாக அச் சாசனத்திலிருப்பது அவர் முதலிலே திருப்பணி தொடங்கியமை நோக்கிக் குறிப்பித்திருக்கலாம். † அகோராத்ரம்=பகலிரவு.

இலக்கியப் பயிற்சியை அறிதற்பொருட்டு, "கு, என்பதை முதற்கொண்டு ஊருடையான் என்பதை இடைப்பெய்து, கு, என்பதையே ஈற்றினுங் கொண்டு முடியும்படி ஒரு வெண்பாப் பாடுக" என்று கூற; சுவாமிகள்,

(க.) குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழன்
முடக்கோடு முன்னமணி வாற்கு—வடக்கோடு
தேருடையான் றெவ்வுக்குத் தில்லைதோன் மேற்கொள்ள
லூருடையா னென்னு முலகு.

என்னும் வெண்பாவைத் திருவாய்மலர்ந்தருளினர். மேலைவெண்பாவினுள் வடக்கோடுதேருடையான் என்று அமைத்தமையை அச் சுவாமிகள் வியந்து பாராட்டி, சுவாமிகளைத் தழுவித் தம்மருகிருத்தி, சுவாமிகள் சகோதரர்களாகிய வேலையசுவாமிகள் கருணைப்பிரகாசசுவாமிகள் என்னும் இருவருக்கும் ஒரு பக்ஷத்துள் பஞ்சலக்ஷணங்களையும் பாடஞ்சொல்லிமுடித்தார். அது கண்ட சிவப்பிரகாசசுவாமிகள் பேருவகையுற்று, அண்ணாமலைரெட்டியார் என்பவர் தங்களுக்கு வழிச்செலவிற்குபகரித்த முந்நூறு பொன்னையும் குருதக்ஷிணையாகவைத்து உபசரிக்க; அச் சுவாமிகள், "இது நமக்குவேண்டுவதில்லை: நம்மைத்தூஷித்தலையே இயல்பாகக்கொண்டு திருச்செந்தூரில் வசிக்கும் தமிழ்ப்புலவரொருவரைத் தங்கள்முன்னிலையில் வெற்றிகொண்டு அவர் வந்து நம்மை வணங்கும்படி செய்துகோடலே குருதக்ஷிணையாகும்" என்று மறுத்தருளினர்.

அவர்கருத்தறிந்த சுவாமிகள் அதற்குடன்பட்டு, அவர் மாணாக்கரோடும் திருச்செந்தூருக்குப் போய், முருகக்கடவுளைத் தரிசனஞ்செய்து, ப்ரதக்ஷிணம் வரும்போது; அச் சுவாமிகளாற் சுட்டப்பட்ட தமிழ்ப்புலவர் எதிர்ப்பட்டுச் சிவப்பிரகாசசுவாமிகளை யாவரென்று அவருடன் வந்த மாணாக்கரிடத்திற் றானே வினவி, மேற்படி சுவாமிகளிடத்திற் பாடங்கேட்ட சுவாமிகள் என்பதை அறிந்துகொண்டு, அவர்களைத் தமது வழக்கப்படியே தூஷிக்கத் தலைப்பட்டார். அப்பொழுது சுவாமிகளுக்கும் புலவருக்கும் கலகநேரிட; புலவர், சுவாமிகளை நூதனவகையாற்பாடி வெற்றிபெறுவோமெனத்துணிந்து, "நாமிருவரும் நிரோஷ்டகயமகம் பாடுவோம்: முன்னர்ப் பாடிமுடித்தவருக்கு அஃதியலாதார் அடிமையாவோம்" என்று வாக்குத்தத்தஞ்செய்தார். சுவாமிகள், தங் கருத்து நிறைவேறுதற்கு வாயில் இதுவே என்று கருதி, அதற்கிசைந் தருளி, அவரோடு பாடத்தொடங்கி, உடனே அந்த ஸ்த்தலத்து முருகக்கடவுண்மீது நிரோஷ்டகயமகவந்தாதித் தொடையாக முப்பதுகட்டளைக்

---

(க.) இ-ள். குடக்கு ஓடுவான் எயிறு கொண்டாற்கு - மேற்றிசையை நோக்கியோடுகிறவனாகிய சூரியனது பற்களைத் தகர்த்தவருக்கு, கேழல் முடம் கோடு முன்னம் அணிவாற்கு - பன்றியினது வளைவாகிய கொம்பை முற்காலத்தில் அணிந்தவருக்கு, வடக்கு ஓடு தேர் உடையான் தெவ்வுக்கு - வடதிசையை நோக்கி யோடுகின்ற (தென்றலாகிய) தேரையுடையவனாகிய மன்மதனது பகைவருக்கு, தில்லை ஊர் - தில்லைநகரம் ஊராகும், தோல் உடை - யானைத்தோல் புலித்தோல்கள் வஸ்திரமாகும், மேல் கொள்ளல் ஆன் - ஊர்தல் இடபமாகும், என்னும் உலகு - என்று உலகத்தார் சொல்லுவர், எ-று.

கலித்துறை பாடிமுடித்தருளினார். அதுகண்ட புலவர், தாம் ஒரு செய்யுளேனும் பாடிமுடியாமையை யுணர்ந்து, சுவாமிகளுடைய திருவடிகளை வணங்கி, "அடிமையாயினேன்" என்று விண்ணப்பஞ்செய்ய; சுவாமிகள், தமதடிமையாயமைந்த அப் புலவரை ஆதீனத்திற்கழைத்துவந்து அச் சுவாமிகளுக்கு அடிமை யாக்கிவிட்டார், அச் சுவாமிகள் திருவுளமகிழ்ந்து, சிவப்பிரகாச சுவாமிகளைப் பார்த்து, "தாங்கள் பாடிய செய்யுளில் சிவபெருமானுக்குரிய ஸ்த்தலம் சிதம்பரமே யெனச்சுட்டிக் குறிப்பால் விளக்கினமையால், அந்த ஸ்த்தலத்திலே சிலகாலம் வாசஞ்செய்தருளுக" என்று விடைகொடுத்தனுப்பியருளினார்.

சுவாமிகள் அவ்விடத்தினின்றும் நீங்கி, சிவஸ்த்தலங்கடோறுஞ்சென்று, சுவாமிதரிசனஞ்செய்து, துறைமங்கலத்தைச் சார்ந்து, முன்போலவே அண்ணாமலைரெட்டியார் என்பவருக்குத் திருவருள்பாலித்து, அவரது வேண்டுகோளின்படி அவராளுகையிலமைந்த திருவெங்கைமாநகரத்திலே, தம்பொருட்டு அவரால் கட்டப்பட்ட திருமடத்தில் வீற்றிருந்துகொண்டு, அந்த ஸ்த்தலத்தைச் சுட்டித் தாமருளிச்செய்த திருவெங்கைக்கோவை திருவெங்கைக் கலம்பகம் திருவெங்கையுலா திருவெங்கையலங்காரம் என்னும் நான்கு பிரபந்தங்களுள்ளே, உலாவில் (௭௪) வது கண்ணிமுதல் (௭௯) வது கண்ணி வரையும் அண்ணாமலைரெட்டியார் பெருமையையும் திருப்பணியி னருமையையும் பாராட்டி யருளினமையேயன்றி, கோவையினும் "வல்லகோலுக்கு வல்ல அண்ணாமலையார் கட்டு கோயில்" எனவும், "கருப்ப இல்லிற்கிணையில்லை யென்னும் திருவெங்கை" எனவும் சிறப்பித்து, அப் பிரபந்தங்களைச் சந்நிதியிலரங்கேற்றி, சின்னாள் வசித்திருந்தார். அக்காலத்தில் ஓர்நாள், அவ் வூர்ப் பிடாரியாரது உற்சவ ரதத்தால், அடியார்க்குபயோகமாகத் திருமடத்தெதிரிலிருந்த முருங்கைமரம் அழிந்தமை கண்டு, சுவாமிகள்,

(௨.) திருந்துதமி ழிலக்கணவைந் திணைக்கோவை விருத்தகிரிச் செல்வற் கோதும்
பெருந்தகைமை யுடையம்யாம் விடுமோலை வெங்கைநகர்ப் பிடாரி காண்க
இரும்புவியி லோருமுருங்கைக் கோம்பொடியா மற்காத்திங் கிருக்கு நீநம்
முருங்கைதனை வேரோடுங் களைந்தனையேன் றுலுனக்கு முறைய தாமோ.

என்னும் திருவிருத்தத்தை அருளியமாத்திரத்தே, அந்த ரதம் அழிந்து முருங்கைமரம் செழிக்க; தாம் சிலகால மங்கிருந்து, துறைமங்கலத்தை யடைந்தருளினார்.

---

(௨.) இ - ள். திருந்து தமிழ் இலக்கணம் ஐந்திணைக்கோவை - திருத்தமாகிய தமிழிலக்கணமமைந்த ஐந்திணைக்கோவையை, விருத்தகிரி செல்வற்கு ஓதும் - விருத்தாசலத்திலுள்ள சிவபெருமான்மீது பாடிய, பெரும் தகைமை உடையம் யாம் - பெருந்தன்மை யுடையோம் யாம், விடும் ஓலை - அனுப்பும் ஓலையை, வெங்கைநகர் பிடாரி காண்க - வெங்கனூர்ப் பிடாரி அறிவதாக, இரு புவியில் - பெரிதாகிய இவ் வுலகத்தில், ஒரு முருங்கைக்கொம்பு ஒடியாமல் காத்து - நீ வாழ்கின்ற முருங்கைமரத்தின் ஒரு கிளையும் ஒடியாமல் காத்து, இங்கு இருக்கும் நீ - இங்கே யிருக்கிற நீ, நம் முருங்கைதனை வேரோடும் களைந்தனை என்றால் - எமது முருங்கைமரத்தை வேருடன் களைந்தாயானால், உனக்கு முறை அது ஆமோ - உனக்கு அது (நல்ல) முறையாகுமோ, எ - று.

அக்காலத்திலே, அண்ணாமலைரெட்டியார் என்பவர், சுவாமிகளை "தேவரீர் விவாகம்செய்துகொள்ளவேண்டும்" என்று பிரார்த்திக்க; சுவாமிகள்,

(௩.) செய்கொண்டா ருங்கமலச் செம்மலுட னேயரவப்
பாய்கொண்டா னும்பரவும் பட்டீச்சு ரத்தானே
நோய்கொண்டா லுங்கொளலா நூறுவய தளவிருந்து
பேய்கொண்டா லுங்கொளலாம் பெண்கொள்ள லாகாதே, எனவும்,

(௪.) நிட்டையிலே யிருந்துமனத் துறவடைந்த பெரியோர்க ணிமலன் றாளைக்
கிட்டையிலே தொடுத்துமுத்தி பெறுமளவும் பெரியசுகங் கிடைக்குங் காம
வெட்டையிலே மதிமயங்குஞ் சிறுவருக்கு மணம்பேசி விரும்பித் தாலி
கட்டையிலே தொடுத்துநடுக் கட்டையிலே கிடத்துமட்டுங் கவலை தானே,

எனவும், விடையளித்தருளினார். சுவாமிகள் கருத்துணர்ந்து, பின்பு வேலைய சுவாமிகளைப் பிரார்த்திக்க; அவர், சிவப்பிரகாசசுவாமிகளுடைய கட்டளை எவ்வாறோ என்னுங் கருத்தால் உடன்படல் மறுத்த லென்னும் இரண்டு மின்றி மௌனராயினர். பின்னர் யாத்திரையினின்றும் வந்த கருணைப்பிரகாச சுவாமிகளிடத்தில் தமது வேண்டுகோளை விண்ணப்பஞ்செய்த மாத்திரத்தில், அவர் அதற்குத்தரமாக,

(௫.) நாணி யென்பதை நாரியேன் றுரைத்திடு நசையால்
வேணு வானது வளைந்துபோய்ப் புகுந்தது வென்றாற்
காண லாவதோ ருருவமெய்ந் நாரியைக் கண்டாற்
பூணு வார்மயல் காளைய ரென்பதும் புதிதோ.

என்னும் கலித்துறையைப்பாடித் தமது கருத்தை உள்ளபடி தெரிவித்தார்.

---

(௩.) இ-ள். செய் கொண்டு ஆரும் - செந்நிறத்தைக் கொண்டிருக்கிற, கமலம் - தாமரைமலரில் வீற்றிருக்கும், செம்மலுடனே - பெரியோனாகிய பிரமனுடன், அரவம் பாய் கொண்டானும் - சர்ப்பசயனத்தையுடையவனாகிய திருமாலும், பரவும் - துதிக்கா நின்ற, பட்டீச்சுரத்தானே - பட்டீச்சுரம் என்னும் திருப்பதியி லெழுந்தருளினவனே, நோய்கொண்டாலும் கொளலாம் - நோய்கொள்ளப்பெற்றாலும் பெறலாம், நூறுவயது அளவு இருந்து - நூறுபிராயம் வரையிலும் உயிரோடிருந்துகொண்டு, பேய்கொண்டாலும் கொளலாம் - பேய்பிடிக்கப்பெற்றாலும் பெறலாம், பெண்கொள்ளல் ஆகாது - பெண்ணைக் கலியாணஞ்செய்து கொள்ளலாகாது, எ - று.

(௪.) இ-ள். நிட்டையிலே இருந்து - யோகத்திலிருந்து, மனத்துறவு அடைந்த பெரியோர்கள்—, நிமலன் தாளை - நிர்மலனாகிய சிவபெருமானது திருவடியை, கிட்டையிலே தொடுத்து - அடுத்தகாலந் தொடங்கி, முத்திபெறும் அளவும் - மோக்ஷமடையுமளவும், பெரிய சுகம் கிடைக்கும் - (அவர்களுக்குப்) பேரின்பங் கிடைக்கும், காமவெட்டையிலே மதி மயங்கும் - காமச்சூட்டால் புத்தி மயங்குகிற, சிறுவருக்கு மணம் பேசி - சிறுவருக்குக் கலியாணம் பேசி, விரும்பி தாலி கட்டையிலே தொடுத்து - விரும்பித் தாலிகட்டியதுமுதல், (இறந்தபின் சுடலையிற் கொண்டுபோய்த் தகனத்தின்பொருட்டுப் பரப்பிய) நடுகட்டையிலே கிடத்துமட்டும் - கட்டையின் மத்தியில் வளர்த்தும் வரையில், கவலைதான் - கவலையேயாகும், எ - று.

(௫.) இ-ள். நாணி என்பதை - நாணி என்னும் மொழியை, நாரி என்று - நாரி யென்று, உரைத்திடும் நசையால் - சொல்லப்படுத லுளதாகிய விருப்பத்தால், வேணு வானது வளைந்துபோய்ப் புகுந்தது என்றால் - மூங்கிலானது வளைந்துபோயிற்றென்றால்,

சிவப்பிரகாசசுவாமிகள், தம் பின்னோராகிய இருவர் கருத்தையும் உணர்ந்து, அவர்களுக்குத் தாம் துறவறம் பூண்டமையைத் தெரிவித்து, மணம் புரிவித்து, அத் தருணத்திலே யாவரும் பேருவகையுறும்படி விநோதமாக,

பதினான்குசீர்விருத்தம்.

(சு.) ஐயநின் சென்னிமிசை யுறைகின்ற மடமங்கை
யாரென்ன வுமை வினவவு
மன்னதொரு மடமங்கை யன்றுவெண் டிரைகொழித்
தழகொழுகு தண்புன லெனத்
துய்யவொளி யானனங் கரியவிழி காதுவாய்
தோயத்தி லுண்டோ வெனச்
சொல்லருங் கமலமலர் காவிமலர் கொடிவள்ளை
தூயசெங் குமுத மென்னப்
பொய்யென நினைத்துநற் கொங்கையுங் கூந்தலும்
புனலினிடை யுண்டோ வெனப்
புற்புதஞ் சைவலம தெனவே மறுத்துப்
புகன்றிடுதி நங்கா யெனத்
தையலவ ளேனென்ன * நாணொடு வணங்கியென்
றன்பிழை பொறுத்தி டென்றே
சங்கர னுரைத்திடத் திருவுள மகிழ்ந்தசிவ
சங்கரி யுமைக் காக்கவே, எனவும்,

---

காணலாவது - காணக்கூடுவதாகிய, ஓர் உருவம் - ஒப்பற்ற உருவத்தையுடைய, மெய் நாரியைக் கண்டால் - உண்மையதாகிய நாரியைக் கண்டால், மாலையர் - இளைஞர், மயல் பூணுவார் என்பதும் - மயல் கொள்ளுவாரென்பதும், புதிதோ - புதுமையோ, எ - று.

(சு.) இ - ள். ஐய - ஐயனே, நின் சென்னி மிசை - உன் சிரமீது, உறைகின்ற மடமங்கை - வசிக்கின்ற இளம்பெண், யார் என்ன - யார் என்று, உமை வினவவும் - உமாதேவி கேட்கவும், அன்னது - அப்படி உனக்குத் தோற்றுவது, ஒரு மடமங்கை அன்று - ஒரு இளம்பெண்ணல்லள், வெள் திரை கொழித்து - வெண்மையாகிய அலைகளை வீசி, அழகு ஒழுகு தண் புனல் என்ன - அழகொழுகாநின்ற குளிர்ந்த நீரென்று சொல்ல, துய்ய ஒளி - பரிசுத்தமாகிய வொளியையுடைய, ஆநநம் - முகமும், கரிய விழி - கருங்கண்களும், காது - செவிகளும், வாய் - வாயும், தோயத்தில் உண்டோ என்ன - நீரிலுண்டோவென்று கேட்க, (முக முதலியவாகத் தோற்றுவது) சொல் அரு - சொல்லுதற்கரிய, கமலமலர் - தாமரைமலரும், காவிமலர் - கருங்குவளைமலரும், கொடிவள்ளை - வள்ளைத்தண்டும், தூய செங்குமுதம் - பரிசுத்தமாகிய செவ்வல்லிமலருமேயாம், என்ன - என்று சொல்ல, பொய் என நினைத்து - பொய்யென்று நினைத்து, நல் கொங்கையும் கூந்தலும் - அழகிய தனங்களும் கூந்தலும், புனலினிடை உண்டோ என்ன - நீரினிடத்துண்டோ வென்று கேட்க, (அப்படித்தோற்றுவது) புற்புதம் சைவலம் என்னவே மறுத்துப் புகன்றிடுதி - நீர்க்குமிழியும் பாசியுமா மென்றே மறுத்துச் சொல்வாய், நங்காய் என்ன - பெண்ணே

---

* "தையலவளேயென்ன" எனப் பாடமோதி, புற்புதம் சைவலம் என்னவே மறுத்து - நீர்க்குமிழியும் பாசியுமா மென்றே (சொல்லித்) தடுத்து, நங்காய் புகன்றிடுதி என்ன - உமையே! மேலே நீ வினவத்தக்கதை வினவுதி என்று சொல்ல, அவள் தையலே என்ன - அவள் (அப்படித்தோற்றுவது) பெண்ணே என்று கூறலும், எனப் பொருள் கொள்வர்.

(எ.) அரனவ னிடத்திலே யைங்கரன் வந்துதா
ஊயவென் செவியை மிகவு
மறுமுகன் கிள்ளினு னென்றே சிணுங்கிடவு
மத்தனவே லவனை நோக்கி
விரைவுடன் வினவவே யண்ணனென் சென்னியில்
விளங்குகண் ணெண்ணின னென
வெம்பிடும் பிள்ளையைப் பார்த்துநீ யப்படி
விகடமேன் செய்தா யென
மருவுமென் கைந்நீள முழமளந் தானென்ன
மயிலவ னகைத்து நிற்க
மலையரைய னுதவவரு முமையவளை நோக்கிநின்
மைந்தரைப் பாரா யெனக்
கருதரிய கடலாடை யுலகுபல வண்டங்
கருப்பமாப் பெற்ற கன்னி
கணபதியை யருகழைத் தகமகிழ்வு கொண்டனள்
களிப்புட னுமைக் காக்கவே, எனவும்,

(அ.) அம்பிகை யரன்றன்னை நோக்கியுன் னுபரண
மரவமென வுமையை நோக்கி

---

யென்று சொல்ல, தையலவள் ஏன் என்ன - (தன்னை யழைத்ததாயெண்ணி) அந்தக் கங்கையானவள் ஏனென்றதும், நாணொடு வணங்கி - வெட்கத்தோடு பணிந்து, என்றன் பிழை பொறுத்திடு என்று - என் பிழையைப் பொறுக்கவேண்டுமென்று, சங்கரன் உரைத்திட - சிவபெருமான் சொல்ல, திருவுள்ளம் மகிழ்ந்த - மனமகிழ்ந்த, சிவசங்கரி உமை காக்க - சிவசங்கரி உங்களைக் காக்கக்கடவள், எ - று.

(எ.) இ - ள். அரனவன் இடத்திலே - பரமசிவனிடத்தில், ஐங்கரன் வந்து - விநாயகன் வந்து, ஐய - ஐயனே, என் செவியை - என் காதுகளை, மிகவும் - மிகுதியாக, அறுமுகன் கிள்ளினன் என்று சிணுங்கிடவும் - முருகன் கிள்ளினனென்று சொல்லிச் சிணுங்குதலும், அத்தன் - பரமசிவன், அ வேலவனை - அம் முருகனை, நோக்கி - பார்த்து, வுடன் வினவவே - விரைவாகக் கேட்டலும், அண்ணன் - தமையன், என் சென்னியில் விளங்கு கண் எண்ணினன் என்ன - என் தலையிலுள்ள கண்களைக் கணக்கிட்டானென்று சொல்ல, வெம்பிடும் - வருந்துகின்ற, பிள்ளையைப் பார்த்து—, நீ அப்படி விகடம் ஏன் செய்தாய்—, என்ன - என்று கேட்க, மருவும் - பொருந்திய, என் கை நீளம் - என் துதிக்கையின் நீளத்தை, முழம் அளந்தான் என்ன - முழம்போட்டானென்று சொல்ல, மயிலவன் - முருகன், நகைத்து நிற்க - சிறித்துக்கொண்டு நிற்க, மலையரையன் - பர்வதராஜன், உதவ வரும் - பெற வந்த, உமையவளை நோக்கி—, நின் மைந்தரைப் பாராய் என்ன—, கருது அரிய - நினைத்தற்கரிய, கடல் ஆடை - கடலாகிய ஆடையைத் தரித்த, உலகு - உலகத்தையும், பல அண்டம் - பல அண்டங்களையும், கருப்பமாய்ப் பெற்ற - கருப்பமாகக் கொண்டு பெற்ற, கன்னி - உமாதேவியானவள், கணபதியை அருகு அழைத்து—, அகமகிழ்வு கொண்டனள் - மனமகிழ்ச்சி கொண்டனள், (அவ் வுமாதேவியானவள்) களிப்புடன் உமை காக்க—, எ - று.

(அ.) இ - ள். அம்பிகை - உமாதேவியானவள், அரன் தன்னை நோக்கி - பரமசிவனைப் பார்த்து, உன் ஆபரணம் அரவம் என்ன - உன் பூஷணமாயிருப்பது

யரியரவ சயநத்தை யரவுருவ மானத்தை
யறியாய்கொல் சிறிது மென்ன
நம்பிமனை தோறுமிரந் துணுமாண்டி நீயென்ன
நான்றாத னறிவே னென
நவையுறும் பொய்புகன் றீரெனப் பாரத
நடந்ததே கரியா மென
வெம்பியொரு வன்பிரம் பாலடித் தானெனா
விளங்கிழை யொருத்தி தாம்பால்
வீசினது சொல்லென்ன வெண்ணா யிரம்பெண்கண்
மிகுகற்பை நீக்கினை யெனப்
பம்புகற் பினிலோ ரிரட்டிப்பு நீக்கினது
பதறாம னீகே ளெனப்
பரமருட னிவ்வாறு விளையாடு பச்சைப்
பசுங்கொடி யுமைக் காக்கவே, எனவும்,

(௯.) அச்சுத னளிப்பனில முமதுநே யன்வித்தை
யருளுவன் பலபத் திர
னலமுதவு வன்சமன் பகடீவ னந்தமக்
கானதோ ரெருது * முண்டே
முச்சிர வயிற்படையினைக் கொழுவ தாக்குவோ
மொய்ம்புட னிழுத் திறக்க
முந்திய வடக்கயிற் றுடன்மற்று நமதன்பர்
முன்போ யிரந்து கொள்வோ

பாம்பென்று சொல்ல, (அதற்கு) நம்பி - சிவபெருமான், உமையை நோக்கி—, அரி - திருமால், அரவ சயநத்தை - சர்ப்ப சயநமுடையதையும், அரவுருவம் ஆனத்தை - சர்ப்ப ரூபமானதையும், சிறிதும் அறியாய் கொல் என்ன—, நீ மனைதொறும் இரந்து உண்ணும் ஆண்டி என்ன—, நான்—, தாதன் - தாதனை, அறிவேன் என்ன—, நவை உறும் - குற்றமிகுந்த, பொய் புகன்றீர் என்ன—, பாரதம் நடந்ததே—, கரி ஆம் என்ன - சாக்ஷியென்று சொல்ல, வெம்பி - கோபித்து, ஒருவன் பிரம்பால் அடித்தான் என்ன—, விளங்கு இழை ஒருத்தி - பிரகாசிக்கின்ற ஆபரணங்களையுடைய பெண்ணொருத்தி, தாம்பால் வீசினது சொல் என்ன - தாம்புக்கயிற்றால் அடித்ததைச் சொல்லென்று சொல்ல, எண்ணாயிரம் பெண்கள் மிகு கற்பை நீக்கினை என்ன—, பம்பு கற்பினில் - மிகுந்த கற்பினில், ஓர் இரட்டிப்பு நீக்கினது —, பதறாமல் நீ கேள் என்ன —, பரமருடன் - பரமசிவனோடு, இவ்வாறு விளையாடு—, பச்சைப் பசுங்கொடி - உமாதேவியானவள், உமை காக்க—, எ - று.

(௯.) இ - ள். அச்சுதன் - திருமால், நிலம் அளிப்பன் - (நாம் வேண்டும்) பூமியைக் கொடுப்பான், உமது நேயன் - உமது தோழனாகிய குபேரன், வித்தை அருளுவன் - விதையைக் கொடுப்பான், பலபத்திரன் அலம் உதவுவன் - பலராமன் கலப்பையை உதவி செய்வான், சமன் பகடு ஈவன் - யமன் எருமைக்கடாவைக் கொடுப்பான், நம் தமக்கு ஆனது ஓர் எருதும் உண்டே - நமக்காக விருக்கும் ஒரு எருதும் உளதே, முச்

* "ஆளதோரெருது" எனப் பாடமோதி, ஆளாயிருப்பதாகிய ஒரு எருதும், எனப் பொருள்கொள்வர்.

மிச்சையுடை நமதிளைய தநயனா கியகந்த
னினிமையோடு மாடு மேய்ப்ப
னினியுழுது பயிரிடுத னன்றுநன் றிதைவிட்
டிரந்துண்ப தீன மெனவே
கச்சுமுலை மாதுமை யுரைத்திடும் புத்தியைக்
கைக்கொண் டுளத்தி லிதுநற்
காரிய மெனக்கருதி மெத்தக் களித்திடுங்
கண்ணுத லுமைக் காக்கவே, எனவும்,

(௧0.) கவுரிகம லாயர னிரந்தசோ றுணவெனக் *
கமலைமண் கண்டே னெனக்
காளையொன் றேயரற் கெனமாடு மேய்த்ததைக்
கட்டிடைய னாரோ வெனச்
சிவனொருவர் தூதென்ன வத்தூது சென்றகதை
செப்பிலொரு பாரத மெனச்
சேரோடு திருடினா னரனெனக் கட்டுண்ட
செய்திநா மறிவோ மென
வவையினட மாடினா னரனேன்ன வவ்வாட
லரவமறி யாதோ வென
வாலமதை யுண்டன னரனேன்ன மண்ணுண்ட
வதனையறி யாமோ வென

சிரம் அயில் படையினை - முத் தலைச் சூலத்தை, கொழு ஆக்குவோம் - கொழுவாக்கிக் கொள்வோம், மொய்ம்புடன் இழுத்து இறுக்க - வலிமையோடு இழுத்திறுக்குதற்கு, முந்திய வடம் கயிற்றுடன் - முதன்மையாகிய வடக்கயிற்றோடு, மற்றும் - மற்றும் வேண்டுவன யாவும், நமது அன்பர்முன் போய் இரந்து கொள்வோம் - நமது அன்பரிடத்திற் சென்று யாசித்துக் கொள்வோம், இச்சை உடை - விருப்பத்தையுடைய, நமது இளைய தநயன் ஆகிய கந்தன் - நமது இளைய குமாரனாகிய முருகன், இனிமையொடு மாடு மேய்ப்பன் - இனிதாக மாடு மேய்ப்பான், இனி உழுது பயிரிடுதல் நன்று நன்று - இனி உழுது பயிரிடுதலே நல்லது நல்லது, இதை விட்டு - இதனை விட்டு, இரந்து உண்பது - யாசித்துண்பது, ஈனம் என்ன - இழிவென்று, கச்சு முலை மாது உமை உரைத்திடும் புத்தியை - கச்சணிந்த தனங்களையுடைய உமாதேவி சொல்லும் புத்தியை, கைக்கொண்டு - ஏற்றுக்கொண்டு, உளத்தில் - மனத்தில், இது நல் காரியம் என்னக் கருதி - இது நல்ல காரியமென்று நினைத்து, மெத்த களித்திடும் - மிகவும் மகிழ்கின்ற, கண்ணுதல் - நெற்றிக் கண்ணையுடைய பரமசிவன், உமை காக்க - உங்களைக் காக்கக்கடவன், எ - று.

(௧0.) இ - ள். கவுரி - உமாதேவியானவள், கமலாய் - திருமகளே, அரன் இரந்த சோறு உணவு என்ன - சிவன் யாசித்து வந்த அன்னம் உணவென்று சொல்ல, கமலை - திருமகளானவள், மண் கண்டேன் என்ன-மண்ணைத்தான் நான் கண்டேனென்று சொல்ல, அரற்கு காளை ஒன்றே என்ன - சிவனுக்கு எருது ஒன்றேயென்று சொல்ல, மாடு மேய்த்து அதை கட்டு இடையன் ஆரோ என்ன - எருதை மேய்த்து அதைக் கட்டுகின்ற இடையன் யாரோ வென்று கேட்க, சிவன் ஒருவர் தூது என்ன - சிவன் ஒருவனுக்குத் தூதுபோனா

* "சோறிதுவென" என்று பாடமோதி, அன்னம் இது தானென்று, எனப் பொருள் கொள்வர்.

விவரமோடு மலைமகளு மலர்மகளு மிவ்வாறு
விளையாடு மிவர்க ளேயா
மேவிவரு புத்ரமித் திரகளத் திரருடன்
மேன்மேலு மிக வாழியே, எனவும்,

சில செய்யுள்களால் ஆசீர்வதித்தருளினர்.

பின்பு, தம்மிடத்தன்பு பூண்ட அண்ணாமலைரெட்டியாரோடு சிதம்பரத்திற்கு எழுந்தருளி, அங்கே ஒரு திருமடங்கட்டுவித்து அதில் வீற்றிருந்து சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு, சிவப்பிரகாசவிகாசம், தருக்கபரிபாஷை, சதமணிமாலை, நால்வர்நான்மணிமாலை என்னும் பிரபந்தங்களைச் செய்தருளி, அந்த ஸ்தலத்தை அருமையாகநீங்கி, பிற ஸ்தலங்களையும் வணங்கி, திருக்காட்டுப்பள்ளியை யடைந்து, சுவாமிதரிசனஞ் செய்துகொண்டு தங்கியிருந்தனர். அங்கிருக்கும்போது, கல்வியறிவிற் சிறந்த ஒரு பெண் வீதியினிடத்தே உப்பு விற்றலைக் கண்டு, இரக்கமுற்றுத் சக்ஷுதீக்ஷைசெய்து, அவளது நல்லூழையும் பரிபக்குவத்தையும் உணர்ந்து, அவளுடைய புலமையைப் பிறர்க்குப் புலப்படுத்தத் திருவுளங்கொண்டு,

(கக.) நிறைய வுளதோ வெளிதோ கொளுவேம்
பிறையை முடிக்கணிந்த பெம்மா - னுறையுந்
திருக்காட்டுப் பள்ளி திரிபாவாய் நீயிங்
கிருக்காட்டுப் பள்ளி யெமக்கு.

என்னும் வெண்பாவைத் திருவாய்மலர்ந்தருளிய மாத்திரத்தே, அப் பெண்,

னென்று சொல்ல, அ தூது சென்ற கதை செப்பில் ஒரு பாரதம் என்ன - அந்தத் தூது போன கதையைச் சொன்னால் ஒரு பாரதமென்று சொல்ல, அரன் சேர் ஓடு திருடினான் என்ன - சிவன் தன்னிடத்தில் வைக்கப்பட்ட ஓட்டைத் திருடினானென்று சொல்ல, கட்டுண்ட செய்தி நாம் அறிவோம் என்ன - கட்டுண்ட சங்கதியை யாம் அறிவோமென்று சொல்ல, அரன் அவையில் நடம் ஆடினான் என்ன - சிவன் சபையில் கூத்தாடினானென்று சொல்ல, அ ஆடல் அரவம் அறியாதோ என்ன - அந்த ஆட்டத்தைப் பாம்பு அறியாதோ என்று சொல்ல, அரன் ஆலமதை உண்டனன் என்ன - சிவன் நஞ்சை யுண்டானென்று சொல்ல, மண் உண்ட அதனை அறியாமோ என்ன - மண்ணுண்டதை அறியோமோ என்று சொல்ல, விவரமொடு - விவரத்துடன், மலைமகளும் - மலையரையன் மகளாகிய பார்வதியும், மலர்மகளும் - திருமகளும், (ஆக) இவ்வாறு விளையாடும் இவர்கள் துணை ஆ - இப்படி விளையாடுவோர்களாகிய இவர்களைத் துணையாகக்கொண்டு, மேவி வரு - பொருந்தி வருகின்ற, புத்ர மித்திர களத்திரருடன் - புத்ரமித்ரகளத்ரரோடு கூடி, மேல் மேலும் மிக வாழி - மேலும் மேலும் மிகுதியாய் வாழக்கடவீர், எ - று.

(கக.) இ - ள். பிறையை முடிக்கு அணிந்த பெம்மான் உறையும் - பிறைச்சந்திரனைச் சிரத்திலணிந்த சிவபெருமான் வாழ்கின்ற, திருக்காட்டுப்பள்ளி திரி பாவாய் - திருக்காட்டுப்பள்ளியில் திரிகின்ற பெண்ணே, நீ இங்கு இரு —, உப்பு அள்ளி எமக்குக் காட்டு —, நிறைய உளதோ—, வெளிதோ - வெண்மையாயிருக்கிறதோ, (நிறைவாயும் வெண்மையாயும் இருக்குமாயின்) கொளுவேம் - விலைக்கு வாங்குவேம், எ - று.

(கஉ.) தென்னோங்கு தில்லைச் சிவப்பிரகா சப்பெருமான்
பொன்னோங்கு சேவடியைப் போற்றினோ - மன்னோன்
றிருக்கூட்ட மத்தனைக்குந் தெண்டனிட்டோந் தீராக்
கருக்கூட்டம் போக்கினோங் காண்.

என்னும் வெண்பாவைப் பாடிக்கொண்டு, தரிசனவேதியி னெதிர்ப்பட்ட இரும்புபோல மனமுருகி, மிக்க விரைவொடு விழுந்து, நமஸ்கரித் தெழுந்து கூப்பிய கரத்தினளாய் நிற்க; அப் பெண்ணிற்கு உண்மைஞான முண்டாகும் படி க்ருபாநோக்கஞ் செய்தருளினர்.

அதன்பின், காஞ்சீபுரத்தைத் தரிசிக்க விரும்பி, அண்ணாமலைரெட்டியாரோடும் பிரயாணப்பட்டு வரும்போது, வழியிலே சாந்தலிங்கசுவாமிகளைக் கண்டு கலந்து களிகூர்ந்தபின், அவரை நோக்கித் "தாங்கள் பேரூர் என்னுந் திவ்ய ஸ்த்தலத்தினின்றும் எதை யுத்தேசித்து எழுந்தருளியது" என்று வினவ; அவர், "சிவஞானபாலையதேசிகரைத் தரிசித்தல்வேண்டு மென்னும் பெருங்காதலால் வந்தேன் என்றுரைத்தருளினர். பின்னர், பேருவகையுற்றுப் பொம்மையபாளையத்துக்குச் சமீபமாகிய புத்துப்பட்டு என்னும் நகரத்தை யடைந்தவுடன், சாந்தலிங்கசுவாமிகள் சுவாமிகளை நோக்கி, "நாமிருவரும் சிவஞானபாலையதேசிகரைத் தரிசிக்கவேண்டியிருப்பதால் அவர்கண்மீது சிலதோத்திரங்கள் பாடுக" என்று பிரார்த்திக்க; சுவாமிகள், "நாம் நரஸ்துதி பண்ணுகிறதே யில்லை" என்று மறுத்துவிட்டு, சுவாமிகள் சாந்தலிங்கசுவாமிகளோடு அவ் வூரிலுள்ள ஐயனார்கோயிலின் புறம்பில் அன்றிரவு துயில்கொண்டார். அப்பொழுது, முருகக்கடவுள் மயூரவாஹநாரூடராய் எழுந்தருளி ஒரு பாத்திரத்தில் விடுபுஷ்பங்களை வைத்து "இவற்றை மாலையாகத் தொடுத்து நமக்கு அணியக்கடவாய்" என்று திருவாய்மலர்ந்து மறைந்ததாகக் கனவு கண்டு சாந்தலிங்கசுவாமிகளுக்குத் தெரிவிக்க; அவர், "சிவஞானபாலையதேசிகர் முருகக்கடவுளிடத்து அதிபத்திமைபூண்ட உள்ளத்தோடு விளங்கியிருத்தலால், அதுபற்றியே அக் கடவுள் தங்களுக்குச் சொப்பனத்தில் அத் தேசிகர் மகிமையை இவ்வாறாகப் புலப்படுத்தினர்" என்று வலியுறுத்தினர். அந்தத் தேசிகர் மீது தாலாட்டு, நெஞ்சுவிடுதூது என்னும் பிரபந்தங்களைப் பாடி, சந்நிதானத்திலே அரங்கேற்றி, ஞானோபதேசம்பெற்று, அந்த ஞானாசாரியரது கட்டளைப்படியே தமது தங்கையாகிய ஞானாம்பிகையைச் * சாந்தலிங்கசுவாமி

(கஉ.) இ - ள். தென் † ஓங்கும் - தென்னமரங்கள் ஓங்கி வளர்கின்ற, தில்லை - சிதம்பரத்தி லெழுந்தருளியிருக்கும், சிவப்பிரகாசப்பெருமான் - சிவப்பிரகாசசுவாமிகளது, பொன் ‡ ஓங்கும் - அழகாகிய, சேவடியை - சிவந்த திருவடிகளை, போற்றினோம் - துதித்தோம், அன்னோன் - அவனது, திருக்கூட்டம் அத்தனைக்கும் தெண்டனிட்டோம்—, (அவ்வாறு துதித்து வணங்கவே) தீராக் கருக் கூட்டம் - (என்றும் விட்டு) நீங்காத பிறவிக் கூட்டத்தை, போக்கினோம் - ஒழித்துக்கொண்டோம் (யாம்), எ - று.

* சாந்தலிங்கசுவாமிகள் பின்னர்த் துறவு பெற்றவர்.

† தென் ஓங்கும் - அழகு மிகுந்த வெனினுமாம்.

‡ பொன் ஓங்கும் - பொன்போலும் கிடைத்தற்கரிய வெனினுமாம்.

களுக்கு விவாகஞ்செய்துகொடுத்துவிட்டு, தம்மை கொளாகப் பிரியாது அத்யந்தப்ரீதியுடையராய் உடன்றொடர்ந்துவந்த அண்ணாமலேரெட்டியாரைத் துறைமங்கலத்துக்குப் போகும்படி ஆஞ்ஞாபித்து, ஞானசாரியரைத் தரிசித்துக்கொண்டு, அவ்விடத்திற்றானே இருந்தார்.

சிலகாலஞ் சென்றபின், ஞானசாரியரிடத்தே விடைபெற்றுக் காஞ்சீபுரத்தை யடைந்து, சுவாமிதரிசனஞ்செய்து அங்கிருக்கும்பொழுது, நிஜகுணயோகி யென்பவரால் கன்னடபாஷையிற் செய்யப்பட்டிருந்த விவேகசிந்தாமணியின் ஓர் பாகமாகிய வேதாந்தபரிச்சேதத்துக்கு வேதாந்தசூடாமணியெனப் பெயர் தந்து அதனையும், ரேணுகரென்னுங் கணத்தலைவரால் அகஸ்த்ய மஹாமுனிவருக்கு உபதேசித்ததை வடமொழியினின்று மொழிபெயர்த்த சித்தாந்தசிகாமணியையும், அல்லமப்ரபுதேவர் திருவிளையாடற் சரிதத்தை வடமொழியினின்று மொழிபெயர்த்த பிரபுலிங்கலீலையையும் தமிழிற் பாடியருளி, ஞானசாரியரைத் தரிசிக்கவேண்டு மென்னும் பேராசையால் அவர் மீது திருப்பள்ளியெழுச்சி, பிள்ளைத்தமிழ் என்னும் இரண்டு பிரபந்தங்களையுஞ் செய்துகொண்டு, அங்ககன்று, இடையிலுள்ள ஸ்த்தலங்களைத் தரிசித்து, கூவம் என்னும் ஸ்த்தலத்தை யடைந்து, அங்குள்ள வேளாளர்கள் முதலியோர் வேண்டுகோளின்படி திருக்கூவப்புராணம் பாடி அரங்கேற்றி, ஞானசாரியரை யடைந்து தரிசனஞ்செய்து, மேற்சொல்லிய பிரபந்தங்க ளனைத்தையும் சந்நிதியிலரங்கேற்றி உடன் வசித்திருந்தனர். அந்நாளிலே ஓர்நாள், சாயங்கால அநுஷ்டாநமுடித்துக்கொண்டு ஞானசாரியரிடத்துத் தாம் ஏகாந்தமாயிருந்து, ஷட்ஸ்த்தல லிங்காநுபவ முதலியவற்றை ஆராய்ந்துகொண்டு இன்புறும்பொழுது எதிரெழுந்த சந்த்ரோதயத்தைக் கண்டு,

(கரு.) கடன்முரச மார்ப்பக் கதிர்க்கயிற்று லேறி
யடைமதி விண்கழைநின் றாடக் - கொடைமருவு
மெங்கள் சிவஞான வேந்த லிறைத்தமணி
தங்கியவே தாரகைக டாம்.

என்னும் வெண்பாவை அருளிச்செய்தனர்.

பின்னர், ஞானசாரிய ரநுக்கிரகித்தபடியே விருத்தகிரியை யடைந்து, பழமலைநாதனையும் பெரியநாயகியம்மையாரையுந் தரிசித்து வணங்கி, அவ்விடத்திலே தம்பொருட்டு ஒரு திருமடமமைத்து எதிர்கொண்டு வணங்கிநிற்கும் சிதம்பரபூபதியைச் சிறப்பித்து,

---

(கரு.) இ - ள். கடல் முரசம் ஆர்ப்ப - கடலாகிய பேரிகை சத்திக்க, கதிர்க் கயிற்றால் ஏறி - கிரணமாகிய கயிற்றைப் பிடித்துக்கொண்டு மேலே யேறி, அடைமதி - சேர்ந்த சந்திரனானவன், விண்கழை நின்று ஆட - ஆகாயமாகிய மூங்கிலில் நின்று (கழைக்) கூத்தாட, கொடை மருவும் - வள்ளற்றன்மை பொருந்திய, எங்கள் சிவஞான * ஏந்தல் - எங்களுடைய சிவஞான சுவாமிகள், இறைத்த மணி - (பரிசாகச்) சிதறிய ரத்நங்கள், தங்கியவே - தங்கியிருந்தவேயாம், (அவை யாவை யெனின்) தாரகைகள் - நக்ஷத்ரங்கள், எ - று.

* ஏந்தல் - பெருமையிற் சிறந்தோன்.

(கச.) வேங்கைப் பழமலை யார்மீது கோவை வியந்துரைக்கு
மேங்கட் கினிய சிவஞான தேவ னிசைவுகோடு
திங்கட் பவனி யிருகான் முதுகுன்றர் சேர்மறுகின்
மங்குற் சிதம்பர பூபதி நல்கு மடமிதுவே.

என்னும் கட்டளைக்கலித்துறையைப் பாடியருளி, அத் திருமடத்தடைந்து வீற்றிருந்து, பழமலையந்தாதி, பிக்ஷாடநநவமணிமாலை, கோச்சகக்கலிப்பா, பெரியநாயகியம்மை நெடுங்கழிநெடிலாசிரியவிருத்தம், பெரியநாயகியம்மை கட்டளைக்கலித்துறை என்னும் பிரபந்தங்களைத் திருவாய்மலர்ந்தருளினர். ஓர் நாள், மணிமுத்த நதியிலே ஸ்நானஞ்செய்து வரும்பொழுது, அதனருகிருந்த மாஞ்சோலையில் புறத்து வறிதே விழுந்துகிடந்த மாங்கனியைக் கண்டு, இது சிவலிங்கப் பெருமானுக்கு நைவேத்தியத்திற்கு உபகரணமாகுமென்று கருதி யெடுக்க; அதுகண்ட அச் சோலைக்காவலாளன், இவரது மகிமை யறியாது மடிபிடித்திழுத்து மனவருத்தஞ்செய்தனன். சுவாமிகள், அவன் சிவாபராதி யாயிருத்தலின், அவனைத் தண்டித்துச் சுத்தனுக்கத் திருவுளங்கொண்டு,

(கரு.) அடுத்துவருந் தொண்டனுக்கா வந்தகனைத் தாளா
லடர்த்ததுவுஞ் சத்தியமே யானு—லெடுத்ததொரு
மாங்கனிக்கா வென்னை மடிபிடித்த மாபாவி
சாங்கனிக்கா தித்தன்வரத் தான்.

என்னும் வெண்பாவைப்பாடி, சூரியன் கந்யாராசியி லுதயமானவுடன் உயிர் துறக்கும்படி சபித்து, அவனை நற்கதியிலடைவித்தருளினர்.

இங்ஙனம் இருக்குநாளிலே, சிவஞானதேசிகர் தமக்கு ஐந்நூறு வயது பூர்த்தியாயினமையால், உலகின்கணிருத்தலில் உவர்ப்புத் தோன்றி, அப்பொழுது சகல பற்றுக்களையும் ஒழித்து விளங்கும் சிவப்பிரகாசசுவாமிகளுடைய சித்தவிரக்தியைத் தாமறிந்திருப்பதால், பரிபக்குவராகிய வேறோர் மாணுக்கருக்கு ஆசார்யாபிஷேகஞ்செய்து, ஞானோபதேசம் புரிந்து, அவரைத் தமக்குப் பதிலாக நியமித்துவிட்டு, வைகாசிமாதத்தில் பௌர்ணிமைத்

---

(கச.) இ - ள். வெங்கைப் பழமலையார் மீது - திருவெங்கனூரில் எழுந்தருளியிருக்கும் பழமலைநாதர் பேரில், கோவை வியந்து உரைக்கும் - ஓர் கோவையை அதிசயித்துப் பாடிய, எங்கட்கு - எங்களுக்கு, இனிய - இனியனுகிய, சிவஞானதேவன் இசைவு கொடு - சிவஞானசுவாமிகளின் சம்மதியைக்கொண்டு, திங்கள் பவனி இருகால் - மாதம் இரண்டுமுறை உலா வரும், முதுகுன்றர் - பழமலைநாதர், சேர் மறுகில் - அடையும் வீதியில், மங்குல் சிதம்பரபூபதி நல்கும் மடம் இதுவெ - (கைம்மாறு எதிர்நோக்காத) மேகம்போல் வழங்கும் சிதம்பரபூபதி யென்பவர் கொடுத்த திருமடம் இதுவேயாகும், எ - று.

(கரு.) இ - ள். அடுத்துவரும் தொண்டனுக்கு ஆ - ஆசிரயத்து வந்த அடியவனுக்காக, அந்தகனை - யமனை, தாளால் அடர்த்ததுவும் - திருவடியால் உதைத்ததுவும், சத்தியமே ஆனால் - சத்தியமேயாயின், எடுத்தது ஒரு மாங்கனிக்கு ஆ - எடுத்ததொரு மாம்பழத்தின்பொருட்டு, என்னை மடிபிடித்த மா பாவி - என்னை மடிபிடித்திழுத்த பெரும்பாவியானவன், கன்னிக்கு ஆதித்தன் வர - கந்யாராசியில் சூரியன் வர, சாம் - சாவான், எ - று.

திதியோடுகூடிய விசாக நக்ஷத்ரத்திலே, சிவயோகசமாதியிற்கூடி, சித்தியால் திருமேனியை விபூதிமயமாக்கியொடுக்கி, தாம் இஷ்டலிங்க பரசிவத்திலே கலந்தருளினார். இதனை யறிந்த சிவப்பிரகாசசுவாமிகள் மனங் கலங்கி, பொம்மபுரத்தை யடைந்து, ஆசிரியரொடுங்கிய குகையுட்சென்று, அடியற்ற மரம்போல விழுந்து, பலமுறை நமஸ்கரித்துத் துதித்து, "கருணாநிதியே! இக் கடையேனையும் விரைவிலே திருவடியிற்சேர்த்தருளுக" என்று பிரார்த்தித்து, தாமியற்றிய கலம்பகத்தையுஞ் சந்நிதியிலரங்கேற்றி, அக் குகையுள்ளே ஞானசாரியரை பாவநாரூபமாக வழிபட்டுக்கொண்டு, மூன்றும் பட்டத்துச் சுவாமிகளோடு தங்கியிருந்தனர். ஓர்நாள் தனிமையாய்ச் சமுத்திர தீரத்தை யடைந்து அங்குள்ள நறுமணற்பரப்பிலே தாமெழுதிய நன்னெறி வெண்பா நாற்பதையும் எழுதிவரும்படி தம் பின்னோராகிய கருணைப்பிரகாசசுவாமிகளுக்குக் கட்டளையிட்டு, ஞானசாரியரிடத்தே விடைபெற்றுக்கொண்டு, திருப்பதிகம்பெற்ற திருத்தலங்கடோறும் யாத்திரைபுரிந்து வந்தனர். அக் காலத்திலே, அகராதிசெய்த வீரமாமுனிவர் என்பவர் எதிர்ப்பட்டு ஏசுமதமாகிய தங் கொள்கையை நாட்டுதற் பொருட்டுத் தருக்கஞ்செய்ய; உடனே, அக் கொள்கையை மறுத்து, ஏசுமதநிராகரணம் எனப் பெயரிய ஓர் நூலை அருளிச்செய்து, ஒவ்வொரு ஸ்த்தலங்களையும் இவ்விரண்டு வெண்பாக்களாற் றோத்திரஞ்செய்து முடித்து, நல்லாற்றூரை யடைந்து, ஞானசாரியரது திருமடத்தில் வீற்றிருந்தார்.

இவரிடத்து விடைபெற்றுச்சென்ற கருணைப்பிரகாசசுவாமிகள் இஷ்டலிங்கவகவல் பாடிமுடித்து, சீகாளத்திபுராணத்தைப் பாடத்தொடங்கி, சீகாளத்திசருக்கம் வரையும் தமிழில் மொழிபெயர்த்தருளி, திருவெங்கைமாநகரத்தில், பதினெட்டாம் வயதில் சிவலிங்கைக்ய மாயினார். அதனை யறிந்த சிவப்பிரகாசசுவாமிகள் அவ்விடத்தே சென்று,

(கரு.) முன்னமொரு தமிழ்ப்புலவன் றனையுண்டு கண்டசுவை
முதிர்ச்சி யாலே
தன்னியலை முழுதுமுரைத் தமையாமுன் னினைக்கவர்ந்து
தடங்கா ளத்தி
மன்னவனுண் டானெனது மாதவத்தின் வலிதீர
மண்ணின் மீதே
யென்னுடன்வந் தவதரித்த விளங்கருணைப் பிரகாச
னென்னுங் கோவே.

என்னும் விருத்தத்தைப் பாடி நிற்க; வேலையசுவாமிகள்,

---

(கரு.) இ - ள். மண்ணின் மீது - மண்ணுலகின் மேல், என்னுடன் வந்து அவதரித்த - என்னோடுகூடப் பிறந்த, இளங் கருணைப்பிரகாசன் என்னும் கோவே - என் தம்பியாகிய கருணைப்பிரகாசனென்னும் இறைவனே, முன்னம் ஒரு தமிழ் புலவன் தன்னை - முற்காலத்தில் ஒரு தமிழ்ப்புலவனை (அப்பர்சுவாமிகளை), உண்டுகண்ட சுவை முதிர்ச்சியாலே - உண்டறிந்த சுவை மிகுதியால் (சிவலிங்கப்பெருமான் விழுங்கியதால்), தன் இயலை - தன் தன்மையை, முழுதும் உரைத்து அமையாமுன் - முழுதுஞ் சொல்லி

(௧௭.) ஆண்டதனு லெனையோவ்வாய் வித்தையினிற் றமையனினு
மதிக மென்றே
பூண்டவுல கதனினுள்ளோர் புகல்வதுகேட் டிருந்துமென்ன
புதுமை தானே
காண்டகுகண் மணியேநல் லிளங்கருணைப் பிரகாசக்
காளாய் நீதான்
மாண்டனையென் றறிந்திருந்து முயிர்தரித்தேன் யானுமிகு
வன்னெஞ் சேனே.

என்னும் விருத்தத்தைப் பாடித் துக்கித்துக்கொண்டு, சுவாமிகளைப் பிரியலாற்றாது வருந்திநின்றனர். அவரை ஒருவாறு தேற்றி நிறுத்திவிட்டு, தாம் நல்லாற்றூரை யடைந்து, திருமடத்திலிருந்துகொண்டு, சிவநாமமகிமையும், இஷ்டலிங்க பெருமான்மீது அபிஷேகமாலையும், நெடுங்கழிநெடிலும், குறுங்கழிநெடிலும், நிரஞ்சநமாலையும், கைத்தலமாலையும், சீகாளத்திபுராணத்தில் கண்ணப்பச் சருக்கமும் நக்கீரச் சருக்கமும் செய்தருளி, சிவாநுபவச்செல்வராய்ச் சிலகாலம் வாழ்ந்திருந்து, முப்பத்திரண்டாம் வயதில், கன்னிமதியில், பௌர்ணிமைத் திதியில், இஷ்டலிங்க பரசிவத்திற் கலந்தருளினார்.
அப்பொழுது வேலையசுவாமிகள்,

(௧௮.) அல்லிமலர்ப் பண்ணவனு மாராய்ந் தறிகவிதை
சொல்லு மிருவரிடைத் தோன்றியயான் - முல்லை
யரும்பிற் பொலியு மணிமுறுவ னல்லாய்
கரும்பிற் கணுநிகர்த்தேன் காண்.

என்னும் வெண்பாவைப் பாடி, அளவிடப்படாத அருந் துயர்க் கடலின் மூழ்கி, ஒருவாறு தெளிந்து, சிவப்பிரகாசசுவாமிகளது சமாதிதரிசனஞ்செய்து

---

யமையா முன்னமே, நின்னை கவர்ந்து - உன்னைப் பற்றி, தடம் காளத்தி மன்னவன் - பெரிய காளத்திநாதன், எனது மா தவத்தின் வலி தீர உண்டான் - என் பெருந்தவத்தின் வலிமை நீங்கும்படி உண்டுவிட்டான், எ - று.

(௧௭.) இ - ள். காண் தகு கண்மணியே - நோக்குதற் குரிய கண்மணியே, நல் - அழகிய, இளம் - இளமைப் பருவமுள்ள, கருணைப்பிரகாசக் காளாய் - கருணைப்பிரகாசன் என்னுங் காளையே, நீதான்-நீ, ஆண்டு அதனால் என்னை ஒவ்வாய்-வயதினால் என்னை நிகர்க்காய், வித்தையினில் தமையனினும் அதிகம் என்று - கல்வியில் தமையனைக் காட்டினும் அதிகப்பட்டவனென்று, பூண்ட உலகதனில் உள்ளோர் - நிரம்பிய உலகத்திலுள்ளவர்கள், புகல்வது - சொல்லுவதை, (நான்) கேட்டிருந்தும்—, என்ன புதுமைதானே - இதென்ன ஆச்சரியமோ, (நீ) மாண்டனை என்று அறிந்திருந்தும்—, உயிர்தரித்தேன் - உயிர்தாங்கி நின்றேன், யானும் மிகு வல் நெஞ்சேன் - நானும் மிக்க வலிய மனமுள்ளவன், எ - று.

(௧௮.) இ - ள். முல்லை அரும்பின் - முல்லையரும்புபோல, பொலியும் - விளங்குகின்ற, அணி முறுவல் நல்லாய் - அழகிய பல்வரிசையை யுடைய பெண்ணே, அல்லிமலர் பண்ணவனும் - அகவிதழ்களையுடைய தாமரைமலரில் வீற்றிருக்கின்ற தேவனும், ஆராய்ந்து அறி - ஆராய்ந்தறிதற்குரிய, கவிதை சொல்லும் - கவி பாடவல்ல, இருவர் இடை தோன்றிய யான் - இருவருக்கிடையே பிறந்த நான், கரும்பில் கணு நிகர்த்தேன் - கரும்பின் கண்ணுள்ள கணுவை நிகர்த்திருக்கின்றேன், எ - று.

கொண்டு, அவ்விடத்தினின்றும் நீங்கி, நல்லூர்ப்புராணம், இஷ்டலிங்கக்கைத் தலமாலை, கும்பகோணச் சாரங்கதேவர் சரித்திரமாகிய வீரசிங்காதனபுராணம், குகைநமச்சிவாயதேசிகர் சரித்திரமாகிய நமச்சிவாயலீலை, கிருஷ்ணசரித்திரமாகிய பாரிசாதலீலை, மயிலத்திரட்டைமணிமாலை, மயிலத்துலா என்னும் பிரபந்தங்களைச் செய்தருளி, சீகாளத்திபுராணத்தையு முடித்து, பெருமத்தூர் மடத்தில், எழுபத்திரண்டாம் வயதில் சிவலிங்கைக்யமாயினர்.

அண்ணாமலைரெட்டியாரும் பிரிவாற்றாமையால் உடன்சென்று சிற்சபாநாயகரையும் சிவகாமியம்மையையும் தரிசித்து, அங்கே சுவாமிகள் எழுந்தருளியிருத்தற்கு ஒரு திருமடங் கட்டுவித்து, சிலநாள் வாசஞ்செய்து, அநுமதிபெற்றுச் சென்று, துறைமங்கலத்தில் இருந்துகொண்டு, சிவப்பிரகாசசுவாமிகள் தரிசனத்தின்பொருட்டு எந்த ஸ்த்தலத்திற் கெழுந்தருளினும் தாமும் அந்த ஸ்த்தலங்கடோறுஞ் சென்று தரிசித்து மீளுவர். அன்றியும், அன்புமேலீட்டால் தாம் அங்கே ஒரு தூணிலமைத்துவைத்த சிவப்பிரகாசசுவாமிகள் திருவுருவத்திற்கு நித்ய பூஜையும், பழமலைநாதருக்கு நித்தியநைமித்திகங்களும் திருவிழாவும் மிகு சிறப்பாக நடத்துவித்து, காலந்தோறும் தரிசனஞ் செய்துகொண்டு, திருவருட்குப் பாத்திரராகச் சிலகாலம் வாழ்ந்திருந்து சிவலிங்கைகியமாயினர்.

## சிவப்பிரகாசசுவாமிகள் முதலிய மூவர்களின் திருத் தந்தையாரான குமாரசுவாமிகள் பாடியது.



கட்டளைக்கலித்துறை.

கயல்வாய்த்த கண்ணி யுலகீன்ற வல்லிபங் காவுனது
செயல்வாய்த்த வன்பர்க்கு மல்லாத வர்க்குஞ் சிரிப்பல்லவோ
இயல்வாய்த்த வெந்தைக் கியான்வாய்த் ததுவுமிங் கென்றனக்கு
வயல்வாய்த்த துமனை வாய்த்தது மைந்தர்கள் வாய்த்ததுமே.

இ - ள். கயல் வாய்த்த கண்ணி - சேல்போன்ற கண்களை யுடையவளும், உலகு ஈன்ற வல்லி - உலகங்க ளெல்லாவற்றையும் பெற்ற கொடிபோல்பவளுமாகிய உமாதேவியை, பங்கா - ஒரு பாகத்தில் உடையவனே! இயல் வாய்த்த எந்தைக்கு யான் வாய்த்ததுவும் - இல்லறவியல் படைத்த என் தந்தைக்கு நான் உண்டானதும், இங்கு என்றனக்கு - இவ்விடத்தில் எனக்கு, வயல் வாய்த்ததும் - வயல் கிடைத்ததும், மனை வாய்த்ததும் - மனைவி கிடைத்ததும், மைந்தர்கள் வாய்த்ததும் - புதல்வர் கிடைத்ததும், உனது செயல் வாய்த்த அன்பர்க்கும் - உன் திருவருள்பெற்ற அன்பர்க்கும், அல்லாதவர்க்கும் - மற்றவர்க்கும், சிரிப்பு அல்லவோ - நகைப்பல்லவோ, எ - று.

முற்றுப்பெற்றது.

சிவப்பிரகாசசுவாமிகள்திருவடிவாழ்க.

சிவமயம்.

# சிவப்பிரகாசசுவாமிகள்முதலிய
## மூவருமருளிய பிரபந்தங்கள்.

---

இருபத்தெண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தெருள்சிவப்பிரகாசவடிகளருளியநூல்கள்சீர்ச்சோணசைலமாலை
செந்திலந்தாதிவெங்கைக்கோவைவெங்கைக்கலம்பகம்வெங்கையினுலா
செப்பரியவெங்கையினலங்காரமேசிவப்பிரகாசநல்விகாசஞ்
சேர்தர்க்கபரிபாஷைநால்வர்நான்மணிமாலைதிரிபில்சதமணிமாலையே
யருளூறுஞ்சிவஞானிநெஞ்சுவிடுதூதுதாலாட்டுபிள்ளைத்தமிழ்கலம்
பகமொடும்பள்ளியினெழுச்சிகூவப்புராணம்பிரபுலிங்கலீலை
யமையும்வேதாந்தசூடாமணிசித்தாந்தசிகாமணிநல்பழமலையினந்
தாதிபிக்ஷாடநநவமணிமாலையுடனறைகொச்சகக்கலிப்பா
மருளதனைமாற்றுபெரியம்மைக்கலித்துறைவளர்நெடுவிருத்தம்ஏசு
மதநிராகரணநன்னெறியோடுசிவநாமமகிமைதலவெண்பாமுறை
வதியிஷ்டலிங்கவபிஷேகமாலையுநெடுங்கழிநெடில்குறுங்கழிநெடில்
மாநிரஞ்சநமாலைகைத்தலமாலையாமற்றுவேலையர்நூல்கள்
வெருளில்கைத்தலமாலைநல்லூர்ப்புராணமலர்விரிபாரிசாதலீலை
வீரசிங்காதனபுராணமயிலாசலவிரட்டைமணிமாலையொடுலா
மிளிர்குகைநமச்சிவாயர்லீலைகருணைப்ரகாசர்நூலிஷ்டலிங்க
விதியகவல்சீகாளத்திப்புராணந்தனைவிரித்தனரிம்மூவருமரோ.

ஆக நூல்கள் - ௪௨.

---

உ

சிவமயம்.

தென்தேஸத்து

# வீரசைவசமயாசார்யர் துதி.

## சிவப்பிரகாசசுவாமிகள்.

எவர்க்குமெய்ஞ் ஞான சோதி யீயுமா ணிக்க மாகி
யுவப்பொடு வெறுப்பு மாகி யுற்றிடு விடயத் தெய்தும்
பவப்பெரும் புணரி நீந்தப் பாரதி யாகு மெங்கள்
சிவப்பிர காச தேவன் றிருவடி சென்னி சேர்ப்பாம்.

## சாந்தலிங்கசுவாமிகள்

போந்தெ முயிர்க்குயி, ராந்துணை யொத்த
சாந்தையர் தம்பத, மேந்து கருத்தே.
ஆய்ந்த வின்பம், வாய்ந்துள நிறையச்
சாந்தை யன்பதம், யாந்தொழு வோமே.

## குமாரதேவசுவாமிகள்.

ஐந்தொழிலி னுலகற்றி யநுக்கிரக மொன்று
மருளுடனே கொண்டுபர திருஞான வடிவாய்
வந்தருளித் தீவகத்தாற் பறவையகப் படுத்து
மாறதுபோ னாயேனை வழியடிமை கொண்டு
சிந்தைதனிற் சிவஞானப் பேரொளியைக் காட்டித்
திரிமலவல் லிருடுரந்து சிற்சுகத்தே வைக்கு
நந்துலவு நதிபுடைசூழ் முதுகிரிவாழ் குமர
நாயகனைத் தூயவுளத் தேமிகவைத் திடுவோம்.

## சிதம்பரசுவாமிகள்.

நவகுண முக்கு றும்பு நவைகண்மற் றனைத்துந் தீர்ந்து
பவகுலை சற்றுந் தாக்காப் பரமயோ கிகளாய் நின்ற
சிவகுணச் செல்வர் போற்றுஞ் சிதம்பர தேவா வென்ற
னவகுணம் போக்கி யாள்வ தையநின் கடன தாமால்.

## குகைநமச்சிவாயதேசிகசுவாமிகள்.

அன்னமயம் பிராணமய மனோமயம் விஞ்ஞான
மானந்த மயத்தினுட னைங்கோசமாய
வின்னன்மய நீங்கியமெய்ஞ் ஞானியுளங் குகையா
வெப்பொழுது நீங்காம லிசைந்துமிக வாழ்வோன்
பன்னரிய விரிவுயரஞ் சமனதிக மிவைகள்
பகர்வரிதாய்ப் பிரமன்முதற் பண்ணவர்த முளத்து
முன்னரிய வோநமச்சி வாயகுரு ராய
னுபயசர ணமதுளத்து முச்சியினும் வைப்பாம்.

சிவமயம்.

# செய்யுள்முதற்குறிப்பகராதி.


| செய்யுள். | பக்கம். |
|---|---|
| **அ** | |
| அகத்தினிற் | ௨௯௫ |
| அகத்துறுதி | ௪௫ |
| அகத்துறுப | ௧௬௫ |
| அகந்தையா | ௨௫௩ |
| அகமுறு | ௧௬௮ |
| அகம்புறங்க | ௨௫௪ |
| அகன்றிட | ௨௮௬ |
| அகிலமுஞ் | ௧௯௫ |
| அகிலமும | ௨௭௭ |
| அக்கமா | ௮௩ |
| அங்கண | ௧௭ |
| அங்கத்தி | ௧௭௬ |
| அங்கலிங்க | ௧௮௮ |
| அங்கலிங்கி | ௧௭௮ |
| அச்சிவ | ௧௩௩ |
| அஞ்செழுத்து | ௧௦௪ |
| அஞ்செழுத்தெ | ௮௫ |
| அணங்கறு | ௧௫௫ |
| அண்டறா | ௩௧௪ |
| அண்டபிண்ட | ௨௯௯ |
| அண்டமொ | ௨௫௮ |
| அண்டர்க | ௧௨ |
| அண்ணலாகிய | ௨௪௫ |
| அண்ணலீ | ௧௧௪ |
| அத்தட | ௧௬௮ |
| அத்தல | ௨௮௨ |
| அத்தன | ௧௧௩ |
| அத்தனை | ௫௬ |
| அத்தனே | ௧௩௪ |
| அத்துவா | ௨௦௮ |
| அந்தணக் | ௮௧ |
| அந்தணு | ௧௯௩ |
| அந்தரம் | ௨௭௮ |
| அந்தரா | ௨௯௬ |
| அந்நதோ | ௧௦௬ |
| அப்பரகா | ௨௩௭ |
| அப்பரயோ | ௨௨௬ |
| அப்பெருஞ் | ௨௭௩ |
| அப்பெரும | ௨௦ |
| அயன்மு | ௨௩௩ |
| அரக்கர் | ௩௩௧ |
| அரவணி | ௧௫௪ |
| அரற்குயர் | ௧௨௫ |
| அரியகூடத்த | ௨௨௧ |
| அரியமாதவ | ௨௧௪ |
| அரியவேதாகம | ௭௭ |
| அரியவேதாந்த | ௨௭ |
| அருகி | ௯௧ |
| அருக்கிய | ௩௩௫ |
| அருட்குரு | ௧௪௭ |
| அருணிலை | ௧௦௯ |
| அருந்த | ௨௩ |
| அருந்துயர்க்கி | ௨௬௭ |
| அருந்துயர்வடி | ௧௬ |
| அருளி | ௧௧௫ |
| அருள்செய | ௨௫௧ |
| அலர்கதிர் | ௧௪௦ |
| அலையில்பே | ௨௮௫ |
| அழிதரு | ௧௮௯ |
| அழிவற | ௫௨ |
| அழைத்தரு | ௧௩ |
| அறத்தனி | ௧௫ |
| அறநெறிமு | ௨௩௯ |
| அறநெறிவா | ௪௫ |
| அறமுறுமி | ௨௩௯ |
| அறமொடு | ௧௫௩ |
| அறிவ | ௩௫ |
| அறிவினர் | ௨௨௭ |
| அறிவுமேனி | ௨௧௩ |
| அறிவுருவாகி | ௧௬௩ |
| அறிவுருவாந் | ௧௯௭ |
| அறிவுருவாம் | ௧௯௯ |
| அறிவெனு | ௨௮௬ |
| அறிவொரு | ௧௯௬ |
| அறைந்தறா | ௩௩௩ |
| அறைந்தவ | ௨௬௮ |
| அனைத்தினுக் | ௨௧௨ |
| அனைத்தினும | ௨௭௬ |
| அனைத்தினுமி | ௧௯௮ |
| அனையர் | ௩௫ |
| அனையவர் | ௧௦ |
| அன்னபாவ | ௨௧௭ |
| அன்னமா | ௧௧ |
| அன்னிய | ௧௦௨ |
| **ஆ** | |
| ஆகமசார | ௩௩௪ |
| ஆகிய | ௨௭௭ |
| ஆக்கை | ௨௩௪ |
| ஆசறுசித | ௧௯௯ |
| ஆசறுபிரா | ௧௬௨ |
| ஆசறுமன | ௪௪ |
| ஆடக | ௫௪ |
| ஆடறல் | ௧௬௬ |
| ஆணவ | ௨௬௪ |
| ஆண்டரு | ௪௯ |
| ஆதலால | ௧௩௭ |
| ஆதலாற்சிவமெ | ௮௬ |
| ஆதலாற்சிவயோ | ௧௨௦ |
| ஆதலான | ௧௧௫ |
| ஆதிதனி | ௩௨ |
| ஆதிநாயக | ௩௪௨ |
| ஆதியத் | ௪௧ |
| ஆதியாகிய | ௨௫௨ |
| ஆதியாயசி | ௩௧௭ |
| ஆதியாய்ச் | ௧௪௭ |
| ஆதியிலநா | ௭ |
| ஆதியிற்பெ | ௩௧௭ |
| ஆயவிவ் | ௮௪ |
| ஆய்ஞ்ச | ௨௪ |
| ஆரியனருளினுல | ௧௪௯ |
| ஆரியனருளினுலே | ௨௮௩ |
| ஆரியனருளு | ௨௬௪ |
| ஆரியனேடு | ௨௮௨ |
| ஆரியன்றன | ௨௫௯ |
| ஆலயத்தினி | ௩௪௦ |
| ஆவிமாளி | ௧௨௬ |
| ஆவிமுன் | ௪௧ |
| ஆறெனுந் | ௨௦௧ |
| ஆனகாலை | ௩௪௧ |
| இங்குறு | ௨௯௧ |
| இச்சகஞ் | ௧௯௫ |
| இத்தலத்திற | ௧௭௮ |
| இந்தயோகி | ௨௪௪ |
| இந்தவஞ்செழுத் | ௮௮ |
| இந்தவாயுநற் | ௨௫௦ |
| இந்தியங்கட | ௨௪௭ |

| செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். |
|---|---|---|---|---|---|
| இந்தியங்களா | ௨௫௪ | உண்டெனு | ௨௭௫ | எண்ணிலாகமம் | ௯௩ |
| இந்தியங்களை | ௨௫௩ | உத்தரங் | ௯௧ | எண்ணிலாவகை | ௩௪0 |
| இந்தியவழக்க | ௩0௨ | உத்தரதி | ௪௮ | எண்ணில் | ௩௧௧ |
| இந்திரனே | ௭௭ | உயிரிலீ | ௯௭ | எம்முறை | ௧௩௨ |
| இந்திரன் | ௧௧ | உயிரின் | ௩௯ | எய்திய | ௧௮ |
| இந்திலைமகேச | ௧௪0 | உரம்பெறு | ௫௯ | எழுமுறை | ௭௫ |
| இந்திலையோகி | ௨௪௧ | உருத்திரகி | ௧௩௭ | எறிசுட | ௨௩௨ |
| இப்பரிசருளி | ௩௩௪ | உருத்திரன் | ௧௧௩ | எனக்கு | ௩௩௭ |
| இம்முறை | ௧௨௩ | உருத்திராக்க | ௭௯ | என்றுதன் | ௨௫௧ |
| இரத்தல் | ௧௧௮ | உருவஞான | ௨௨௩ | என்றுநல் | ௧௩௪ |
| இரவியாயி | ௧௮௩ | உரைத்தநன் | ௧௨௧ | என்றுபெற் | ௧0௨ |
| இருடருந்தம | ௧௮௧ | உரைத்தனைம | ௧௪௧ | என்றுமெய்ச்சிவலி | ௧0௩ |
| இருந்திடு | ௧௩௬ | உரைத்தனைவி | ௨௮௧ | என்றுமெய்ச்சிவநா | ௨௬௨ |
| இருந்துள | ௨௧ | உரைப்பதென் | ௧௭௩ | என்றுரை | ௨௨ |
| இரும்பவ | ௨௭௧ | உரைமனமிறந்த | ௧௬௭ | என்னிக | ௧௬ |
| இலகுறு | ௧௯௪ | உ.ரைமனமிறந்து | ௨௭௩ | என்னுரு | ௧௭ |
| இலக்கண | ௫0 | உலககா | ௯ | ஏ | |
| இலங்க | ௩0௭ | உலகஞான | ௩௧௨ | ஏகமாகியே | ௩௨௧ |
| இலங்குழி | ௫0 | உலகமுற்றிடு | ௨0௯ | ஏகமாஞான | ௨௩௩ |
| இலங்கை | ௩௩௮ | உலகமெனு | ௨ | ஏகமாகினைவு | ௨௭௫ |
| இலங்கொளி | ௧௬௩ | உலகனைத்தினுக் | ௮௫ | ஏகனுற்ற | ௨௬ |
| இறப்ப | ௧௧௮ | உலகனைத்தினுமோ | ௧௧௪ | ஏணுற | ௧0௮ |
| இறப்பினு | ௧0௫ | உலகிற | ௩௪ | ஏத்துறு | ௨௯௧ |
| இறைசிவ | ௧௯௮ | உலகினிலு | ௨௯௨ | ஏயுமா | ௧0௪ |
| இறையவனிட | ௧0௬ | உலகினிலெ | ௨௯௭ | ஏழிரண்டு | ௮௧ |
| இறையவனிய | ௧௩௨ | உலகினுக் | ௨௭0 | ஐ | |
| இறைவனை | ௧௫௫ | உலகினை | ௧௨௩ | ஐந்து | ௮௮ |
| இனையநாம | ௮௭ | உலகின்மலி | ௬ | ஐந்தொ | ௮0 |
| இனையநான்கு | ௧௭௮ | உலகுரு | ௧௫0 | ஐயநீக்குப | ௨௧௧ |
| இனையவா | ௮௧ | உலகெலாந்த | ௧௭௪ | ஒ | |
| இனையவெந் | ௪௨ | உலகெலாந்தோ | ௧௭௫ | ஒண்டளிர் | ௧௩௮ |
| இன்பவெள்ள | ௨௪௫ | உலகெலாமொ | ௨௩௮ | ஒப்பறுக | ௧௬௧ |
| இன்றுகாறு | ௩௪௧ | உலகொரு | ௩0௫ | ஒப்பறுப | ௨௩௩ |
| இன்றுநான் | ௩௩௩ | உள்ளத்தி | ௫௪ | ஒப்பறுமொ | ௧௧௧ |
| இன்றுநீ | ௩௩௭ | உள்ளுறுஞ்சி | ௨௪௭ | ஒருகண | ௧௯௨ |
| இன்னண | ௧௨ | உறுதிகொள் | ௧௫௩ | ஒருதனி | ௧௭௬ |
| இன்னவாற | ௨௬0 | உற்றிடுபரனில் | ௨௯௩ | ஒருபொரு | ௨௭௨ |
| ஈ | | உற்றிடுமுடலு | ௩௮ | ஒழிந்து | ௨௨௧ |
| ஈங்கு | ௩௨௨ | உன்றறு | ௬௧ | ஒழிவறு | ௨௬௨ |
| ஈசனோர் | ௩௧௫ | உன்னரும் | ௨௮௭ | ஒள்ளழ | ௨௨௬ |
| ஈசன்மேனி | ௨௪௫ | ஊ | | ஒன்றொரு | ௧௧௧ |
| ஈண்டொளி | ௧0௨ | ஊனமாம் | ௫௫ | ஓ | |
| உ | | எ | | ஓங்கிய | ௧௯ |
| உகந்துள | ௧௧௧ | எக்குரு | ௧0௮ | ஓங்குபுகழ் | ௩ |
| உடம்பறு | ௨௬௬ | எக்கொ | ௧௧௯ | ஓங்கும் | ௨௪ |
| உடம்பினுக்கு | ௨௫0 | எங்கணுகி | ௧௩௬ | ஓங்குறு | ௧௫௧ |
| உடம்பொடு | ௧௯௩ | எங்கணுமொ | ௨௭0 | ஓங்கொளி | ௨௧௯ |
| உடலுயி | ௩௯ | எங்கணெய் | ௨௪௮ | ஓதியா | ௪௩ |
| உடைத்திடு | ௨௯0 | எண்ணரும் | ௯௮ | ஓதுமக்கா | ௯௮ |
| உட்புறம் | ௨௭ | எண்ணிகழ்ந்த | ௩ | ஓதுமண்ட | ௩௧௬ |

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| ஓதுவாம | ௨௫ |
| ஒவ்வுறு | ௨௭௧ |
| **க** | |
| கடத்தினு | ௨௯௯ |
| கடைக்க | ௨௧௩ |
| கணங்க | ௩௪௨ |
| கண்டவர் | ௧௬ |
| கண்டன | ௧௦௩ |
| கண்டித | ௨௧௫ |
| கண்டு | ௨௫௨ |
| கண்ணிலன் | ௨௨௭ |
| கண்ணிலானெ | ௨௩௧ |
| கண்ணிலான் | ௨௨௯ |
| கண்ணுதல்கயிலை | ௩௩௫ |
| கண்ணுதல்பூசை | ௧௦௦ |
| கண்ணுதற்பெருங் | ௨௫ |
| கதிர்க்க | ௭௯ |
| கயிற்றர | ௧௩௯ |
| கரசர | ௧௪௬ |
| கரணமோடுறு | ௨௪௮ |
| கரிய | ௯௬ |
| கருதுநம் | ௪௩ |
| கருதுறு | ௨௨௭ |
| கருமம் | ௨௫௬ |
| கருமவேது | ௧௩௨ |
| கருமவேர் | ௧௬௯ |
| கருமவேள் | ௯௨ |
| கலயமுத | ௭௩ |
| கழிந்துள | ௧௪ |
| கனவிடைக் | ௨௭௮ |
| **கா** | |
| காட்டுமோ | ௯௦ |
| காட்டுலர் | ௭௩ |
| காணுறு | ௧௧௯ |
| காண்பன | ௧௯௪ |
| காந்தனே | ௧௭௯ |
| காயமிந்தியம் | ௨௪௪ |
| காரணகாரி | ௨௯௪ |
| காரிய | ௧௩௫ |
| காலங் | ௩௧௯ |
| **கி** | |
| கிரியைக | ௩௦௨ |
| கிரியைந | ௨௨௫ |
| கிரியைந | ௨௩௨ |
| கிரியைபா | ௨௩௦ |
| கிரியையெ | ௨௧௫ |
| **கீ** | |
| கீடசிந்தனே | ௨௨௯ |
| **கு** | |
| குடத்தினி | ௨௧௫ |
| குரவனல்கு | ௨௬௧ |
| குரவனுற் | ௧௮௬ |
| குரவனேபரத | ௧௮௪ |
| குரவனேபரம | ௨௮௦ |
| குருபரன் | ௧௫௮ |
| குருவிவன் | ௧௯௭ |
| குருவுநா | ௧௯௮ |
| குருவை | ௨௫௭ |
| குருவொடு | ௧௫௨ |
| **கூ** | |
| கூறருங்கு | ௨௦௮ |
| கூறருந்த | ௨௩௮ |
| கூறுசீவனும் | ௩௮ |
| **கொ** | |
| கொண்டுறு | ௧௨௮ |
| **ச** | |
| சகந்தனக் | ௧௯௫ |
| சகமெலாஞ் | ௩௦௩ |
| சங்கரசம் | ௪ |
| சங்கரபத்தி | ௩௩௬ |
| சங்கரனுகு | ௧௩௯ |
| சங்கரனுணே | ௮ |
| சங்கரனென | ௨௩௪ |
| சச்சிதாநந்தமாகும் | ௫௫ |
| சச்சிதாநந்தமாங் | ௨௯௩ |
| சதுமறை | ௬௦ |
| சத்துடன | ௨௮௦ |
| சத்தையாஞ் | ௧௬௪ |
| சந்திரகா | ௪௯ |
| சந்திரசே | ௧௫௨ |
| சந்திரம | ௭ |
| சமதரிச | ௧௯௩ |
| சம்புபூ | ௧௨௬ |
| சம்புவி | ௧௪௪ |
| சரணடை | ௧௮௬ |
| சரத்தொடு | ௧௦௯ |
| சரமுட | ௫௩ |
| சலந | ௨௫௫ |
| சற்குரு | ௧௪௨ |
| **சா** | |
| சாக்கிர | ௩௧௩ |
| சாங்கமோ | ௯௯ |
| சாங்கி | ௨௪ |
| சாதமி | ௧௫ |
| சாதமேவ | ௩௦௭ |
| சாதியா | ௩௭ |
| சாத்திரப்பொ | ௨௦௮ |
| சாந்த | ௧௨௦ |
| சாந்திதா | ௨௩௭ |
| சாந்தியா | ௨௫௦ |
| சாருறு | ௧௯௧ |
| சார்ந்த | ௧௦௮ |
| சாற்றரும் | ௫௩ |
| சாற்றிய | ௨௩௪ |
| சாற்றினே | ௧௨௧ |
| சாற்றுகார | ௩௨௬ |
| சாற்றுமுறை | ௭௩ |
| சாற்றுறுங் | ௯ |
| சாற்றுறுபு | ௧௪௧ |
| **சி** | |
| சிகையி | ௮௦ |
| சிதம்பர | ௨௦௦ |
| சித்த | ௨௬ |
| சிந்தனே | ௧௪௨ |
| சிரமதிலீ | ௭௪ |
| சிரமொடு | ௫௯ |
| சிவபத்தி | ௪ |
| சிவமய | ௧௫௦ |
| சிவமுறு | ௧௦௧ |
| சிவமெனுங் | ௮௬ |
| சிவமெனும் | ௨௪௯ |
| சிவம்பெறு | ௨௮௧ |
| சிவனே | ௧௮௬ |
| சிறந்தசச்சிதா | ௨௧௯ |
| சிறந்தவஞ்செழுத் | ௯௩ |
| சிறப்புறு | ௨௮௮ |
| சிற்கலே | ௧௩௩ |
| சிற்கன | ௧௦௪ |
| **சீ** | |
| சீடனக்குரு | ௨௯௦ |
| சீடனதுயிரை | ௫௦ |
| சீரணிசி | ௨௨௮ |
| சீரணித | ௧௪௫ |
| **சு** | |
| சுத்தம | ௪௦ |
| சுத்தமா | ௧௧௫ |
| சுத்தமெ | ௩௬ |
| சுத்தர்க | ௧௪௦ |
| சுரர்நரர் | ௨௭௮ |
| **சூ** | |
| சூனியம்பெறு | ௩௨௫ |
| **செ** | |
| செங்கண்மால் | ௨௧ |
| செங்கதி | ௨௯௮ |
| செப்பிய | ௧௦௧ |
| செப்பும் | ௨௬ |
| செயத்தகு | ௨௪௧ |
| செயலறு | ௧௯௦ |
| செவ்வியகு | ௧௦௯ |
| செவ்வியவா | ௭௬ |

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| சென்ற | ௩௩௯ |
| சென்றுறு | ௧௯௨ |
| சென்னி | ௭௫ |
| சொ | |
| சொற்பனந்த | ௨௯௨ |
| சொற்புனப்பொ | ௨௪௬ |
| சோ | |
| சோகமெ | ௯௦ |
| சோதிமா | ௧௮ |
| சோதியாம் | ௨௩௬ |
| சோதிலிங்கத | ௨௧௯ |
| சோதிலிங்கந | ௧௨௮ |
| சோதிலிங்கநி | ௩௦௯ |
| ஞா | |
| ஞானசீலமே | ௩௨௧ |
| ஞானதேசி | ௨௧௩ |
| ஞானநல் | ௧௭௫ |
| ஞானம | ௨௩௧ |
| ஞானமா | ௨௪௨ |
| ஞானமி | ௨௪௩ |
| ஞானவா | ௨௮௦ |
| ஞே | |
| ஞேயமாக | ௩௨௫ |
| த | |
| தகுஞ்செய | ௧௫ |
| தகைபெறு | ௫௧ |
| தக்க | ௩௬ |
| தணந்திடும் | ௨௭௫ |
| தத்தம் | ௨௪௯ |
| தத்துவங்க | ௩௧௫ |
| தத்துவசுத்தியே | ௧௪௩ |
| தத்துவமாந்திரை | ௧௯௦ |
| தத்துவமுப்ப | ௨௯௬ |
| தம்பொரு | ௫௯ |
| தயங்குறு | ௧௬௨ |
| தரங்கமா | ௩௦௩ |
| தரிசந | ௧௫௧ |
| தலங்குலவு | ௬ |
| தலத்தொடு | ௨௮ |
| தலைவ | ௯௬ |
| தவநிகழ் | ௧௬௦ |
| தளைந்துள | ௧௯௦ |
| தறிபவ | ௧௪ |
| தனக்குறு | ௧௪௧ |
| தனக்கென | ௧௪௩ |
| தனையடை | ௧௫௭ |
| தன்னுடைய | ௭௬ |
| தன்னுறு | ௨௬௬ |
| தன்னுள | ௧௯௬ |
| தன்னெறிதன் | ௧௦௬ |
| தன்னெறியொ | ௧௦௨ |
| தன்னையே | ௨௨௩ |
| தன்னையோ | ௨௭௧ |
| தன்னொருச | ௧௩௮ |
| தன்னொருமா | ௧௦௭ |
| தன்னொளி | ௨௬௯ |
| தா | |
| தாநமு | ௧௧௭ |
| தாமதநி | ௧௮௮ |
| தாமரை | ௧௪௯ |
| தாவிலாதமா | ௨௪௩ |
| தாவிலாதுயர் | ௧௨௦ |
| தாவிலாவ | ௧௮௫ |
| தி | |
| திகழுறும் | ௩௧௮ |
| திங்களா | ௪௬ |
| திங்களு | ௨௮௮ |
| திங்கள் | ௩௧௭ |
| திரம்பெறு | ௫௭ |
| திருத்தி | ௧௨௦ |
| திருமறு | ௧௪ |
| திரைநுரை | ௩௦௦ |
| தீ | |
| தீங்கறு | ௪௭ |
| தீண்டலான் | ௮௨ |
| தீதகற்று | ௧௧௪ |
| தீதகன்ற | ௨௭ |
| தீதறு | ௨௮௮ |
| தீர்ந்த | ௨௨௧ |
| து | |
| துரியா | ௩௧௩ |
| துன்ப | ௨௨௦ |
| துன்னும் | ௧௮௦ |
| தூ | |
| தூயதாகு | ௯௭ |
| தூலசூக்கும | ௨௧௮ |
| தெ | |
| தெரிந்திடு | ௨௩௧ |
| தெளிதரு | ௧௦ |
| தெள்ளுசோ | ௧௧ |
| தெள்ளுறு | ௨௬௫ |
| தே | |
| தேகிக | ௨௯௮ |
| தேசகாலமற் | ௩௨௧ |
| தேசிகற் | ௧௧௬ |
| தேசிகன | ௨௬௭ |
| தேசிகன்சி | ௨௭௯ |
| தேசிகன்மன | ௨௫௮ |
| தேய்ந்து | ௨௧௨ |
| தேவர்க | ௮ |
| தேவல | ௨௬௬ |
| தொ | |
| தொலைந்த | ௨௦௬ |
| தோ | |
| தோன்றியிடு | ௭௧ |
| தோன்றுபாவமு | ௩௨௩ |
| ந | |
| நங்குலம் | ௩௩௭ |
| நட்டுறுஞ் | ௧௮௭ |
| நண்ணுறு | ௨௨௦ |
| நந்துறுபேத | ௧௯௧ |
| நந்துறுமரிய | ௧௫௦ |
| நந்தை | ௭௨ |
| நலங்கொள் | ௯௫ |
| நல்லிட | ௨௭௪ |
| நவின்றிடும் | ௨௩௦ |
| நவையில் | ௩௦௯ |
| நற்குரு | ௧௪௬ |
| நற்ப | ௧௧௩ |
| நற்பிரசாதி | ௨௬௩ |
| நன்றுறு | ௧௬௫ |
| நா | |
| நாடுமா | ௨௮௫ |
| நான்முக | ௮ |
| நி | |
| நிட்கள | ௧௪௫ |
| நித்தலு | ௬௧ |
| நித்தியகரும | ௨௪௦ |
| நித்தியகா | ௭௨ |
| நித்தியந்திகழ் | ௮௨ |
| நித்தியா | ௪௩ |
| நிந்தனை | ௧௨௫ |
| நியமங் | ௧௨௭ |
| நிரஞ்சந | ௨௬௫ |
| நிரந்தர | ௨௨௯ |
| நிரம்பியசிதாந | ௨௯௧ |
| நிரம்பியசிவோக | ௨௭௨ |
| நிருமலன் | ௧௪௩ |
| நிலமுத | ௧௩௫ |
| நிறைந்தவ | ௧௩௬ |
| நிறைந்திடு | ௨௯௩ |
| நிறையுறுபராந | ௨௮௯ |
| நிறைவுறுமது | ௩௦௧ |
| நிறைவொடு | ௨௮௬ |
| நீ | |
| நீங்கரும் | ௧௮௫ |
| நீங்கியதோ | ௭௮ |
| நீங்கியவு | ௩௦௦ |
| நீங்கு | ௨௫௧ |
| நீடுயர் | ௧௦௪ |

| செய்யுள். | பக்கம். |
|---|---|
| நீரினீரும் | ௩௨௪ |
| நீறுக | ௧௨௭ |
| நீற்றினை | ௭௫ |
| நீற்றின் | ௭௮ |
| நீற்றொளி | ௧௮ |
| நூ | |
| நூனெறி | ௫௧ |
| நெ | |
| நெடியவான் | ௨௯௫ |
| நெளிதிரை | ௯௯ |
| ப | |
| பகர்ந்திடி | ௨௬௪ |
| பகர்ந்திடு | ௧௭௬ |
| பகவனாகிய | ௨௧௫ |
| பகுதியை | ௨௩௫ |
| பகுத்து | ௩௨௨ |
| பங்கயமலரவ | ௧௫௯ |
| பங்கயற் | ௬0 |
| பங்கயனாதிய | ௧௨௪ |
| பசுத்துவ | ௧௯௧ |
| பண்டொ | ௩௪ |
| பண்ணிய | ௧௫௭ |
| பத்தரோடு | ௧௧௯ |
| பத்தனே | ௨0௬ |
| பத்தனோ | ௧௬௧ |
| பத்திகொண்ட | ௧௧௨ |
| பத்திநெறி | ௩௩ |
| பத்திர | ௧௪௪ |
| பந்தநாச | ௨௬௨ |
| பந்தமோவிய | ௩௨௩ |
| பந்தனையகன்று | ௧0௧ |
| பந்தனைவினை | ௧௫௪ |
| பரசிவவங்கி | ௨௪0 |
| பரசிவனுயர் | ௧௪௬ |
| பரசிவாத் | ௨௭௯ |
| பரந்தசொற்க | ௯௫ |
| பரந்ததாகிய | ௩௧௫ |
| பரமசிவ | ௩௩ |
| பரமஞானமற் | ௩௭ |
| பரமஞானிக் | ௨௯0 |
| பரமனா | ௩௩௩ |
| பரமமெய் | ௨௬௯ |
| பரமலி | ௧௨௭ |
| பரமன | ௯௨ |
| பரமனுண் | ௧௧௫ |
| பரமனையடை | ௧௫௭ |
| பரமனையருச் | ௧0௫ |
| பரனிரு | ௧௪௪ |
| பராபரத்தினை | ௩௨௪ |
| பராபரற் | ௧௮௧ |
| பராபரன் | ௧௩௨ |
| பரிதியு | ௧௬௩ |
| பரித்திடும் | ௨௮௩ |
| பரித்துட | ௩௩௬ |
| பரிந்து | ௨௧0 |
| பலமொழி | ௧௬0 |
| பவப்பிணி | ௧௫௩ |
| பவமெனும் | ௧௮0 |
| பழுதி | ௭௯ |
| பற்பலகரும | ௨௬௬ |
| பற்பலகலை | ௨௨ |
| பற்பலமொழி | ௧௪௮ |
| பற்றறுஞ் | ௧௨௯ |
| பற்றுறும் | ௧௮௭ |
| பற்றெனுஞ் | ௧௭௯ |
| பனிமல | ௬0 |
| பன்னரு | ௨௨௩ |
| பா | |
| பாகமாகிய | ௩௮ |
| பாகுபாடுறு | ௩௪௨ |
| பாசமற் | ௧௩0 |
| பாசமோச | ௮௭ |
| பாடுவர் | ௧௨ |
| பாதமென் | ௨௮௩ |
| பாத்திர | ௧௧௯ |
| பார்புன | ௧௩௫ |
| பாவசு | ௨௫௫ |
| பாவஞா | ௨௧௯ |
| பாவந | ௨௫௭ |
| பாவமா | ௧௫௨ |
| பாவமு | ௨௯௧ |
| பாவனை | ௨௪0 |
| பி | |
| பிச்சை | ௨௨0 |
| பிரமநா | ௨௭௩ |
| பிரமமே | ௨௫௬ |
| பிரமமோ | ௨௫ |
| பிறகட | ௧௪௮ |
| பிறங்கொளி | ௧௬௮ |
| பிறந்தவர் | ௪0 |
| பிறப்புமு | ௧௮௪ |
| பிறப்பெறி | ௨௭௬ |
| பிறப்பெனு | ௧0௮ |
| பிறர் | ௧௨௫ |
| பிறவிந | ௨௫௮ |
| பிறவிநா | ௧௮௪ |
| பிறவிநோ | ௧௮0 |
| பின்னரங் | ௨0 |
| பின்னரம் | ௧௭௭ |
| பீ | |
| பீடுறுங்குரு | ௨௫௯ |
| பு | |
| புகலென | ௧௫௯ |
| புகழ்தல் | ௯௬ |
| புகன்றுள | ௧௬௭ |
| புண்ணியம | ௫௧ |
| புண்ணியமு | ௨௨ |
| புரக்குமீ | ௧௭௯ |
| புரங்கள் | ௭௯ |
| புறத்தி | ௨௧௬ |
| புறத்து | ௫௪ |
| புறந்திரியாது | ௧௫௮ |
| புறந்திரிவதனாற் | ௧௬௯ |
| புறப்பொரு | ௧௬௪ |
| புறமுற | ௧00 |
| புனலுறு | ௧௯௪ |
| புனிதமா | ௪௬ |
| புனிதனாய் | ௨௭௬ |
| பூ | |
| பூசனைசெ | ௧௩௧ |
| பூசனைநி | ௧௩௭ |
| பூதிதனை | ௭0 |
| பூதியா | ௮௨ |
| பூதியென | ௭௧ |
| பூப்புறு | ௧0௫ |
| பூரண | ௨௪௨ |
| பூருவா | ௧௨௨ |
| பெ | |
| பெண்டெழு | ௪0 |
| பெரிதுயர் | ௧௪௮ |
| பெருகு | ௯௭ |
| பெருமல | ௧௨௪ |
| பெரும்பவ | ௨௩௭ |
| பெறலரு | ௧௫௭ |
| பே | |
| பேதமாகிய | ௨௧0 |
| பேதமாறிய | ௩௨௪ |
| பேதமிலாத | ௨௭௪ |
| பேதவிச்சை | ௨௩ |
| பேரறிவு | ௧௬௧ |
| பேரறிவு | ௨௩௬ |
| பொ | |
| பொங்குசெங் | ௨௧௨ |
| பொங்குறும் | ௧௧௩ |
| பொய்த்திடா | ௪௧ |
| பொருந்துறு | ௧௭௩ |
| பொருப்பின் | ௧௮௫ |
| பொருளறு | ௨௨௯ |
| பொருளுறு | ௩0௫ |

| செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். |
|---|---|---|---|---|---|
| பொருளெ | ௧௨௬ | மனவன | ௧ | முத்திகார | ௩௦௬ |
| பொறிகளாலு | ௩௧௧ | மனிதர் | ௧௨௯ | முத்தியை | ௨௪௨ |
| பொறிகளின் | ௪௪ | மனுந்தல | ௧௮௯ | முந்துறுமெச் | ௫ |
| பொறிகள்யா | ௨௫௪ | மன்னிய | ௧௯௭ | முந்தை | ௧௩௦ |
| பொறிவிட | ௧௬௬ | **மா** | | முப்பொழுதி | ௭௭ |
| பொற்புறு | ௨௬௩ | மாசறுசக | ௧௨௨ | முப்பொறி | ௯௯ |
| **போ** | | மாசறுஞானு | ௩௦௧ | முழுமை | ௩௦௨ |
| போதகஞ் | ௨௦௯ | மாசறுநிகழ் | ௧௭௪ | முளையில் | ௯௮ |
| போதகத் | ௨௦௯ | மாசறுமன | ௪௬ | முற்றுமே | ௧௮௧ |
| போதகா | ௧௪௩ | மாசிராச | ௧௮௨ | முற்றுறுகா | ௧௫௦ |
| போதமாகிய | ௩௦௮ | மாசிலா | ௯௪ | முற்றுறும | ௨௬௮ |
| போதமாபலன் | ௨௬௧ | மாட்சி | ௫௮ | முனிவ | ௨௩ |
| போதமென் | ௧௧௯ | மாதர் | ௧௮௭ | முன்புற | ௨௨௫ |
| போதமேனி | ௩௧௯ | மாதுரு | ௩௦௮ | முன்னரொ | ௨௦௭ |
| போதிலொ | ௯௩ | மாயைகொ | ௩௭ | முன்னரோ | ௮௫ |
| போத்துறு | ௨௬௯ | மாயைத | ௩௧௦ | முன்னர்நஞ் | ௧௨௨ |
| போற்றுறு | ௧௦௭ | மாயைபெ | ௨௨௨ | முன்னர்நன் | ௪௮ |
| **ம** | | மாயையாத | ௩௧௦ | முன்னர்மெ | ௯௪ |
| மடிவி | ௩௬ | மாயையால் | ௧௫௫ | முன்னிகழு | ௭௧ |
| மண்ணில | ௨௧௬ | மாயையின் | ௧௬௪ | முன்னுறு | ௨௩௧ |
| மண்ணினிற் | ௧௩௮ | மாயையெனு | ௨ | **மூ** | |
| மண்ணொடு | ௧௧௦ | மாயைவல் | ௨௮௬ | மூடமாசி | ௧௮௫ |
| மதிதனை | ௨௬௮ | மாரிபெய்க | ௩௪௩ | மூர்த்த | ௩௩௮ |
| மதியுறு | ௧௩ | மாலய | ௧௨௪ | மூலகாரணமாய் | ௫௨ |
| மதியெனு | ௨௮௪ | மானசந்தனை | ௨௫௫ | மூலகாரணனென | ௧௦௭ |
| மத்திமை | ௭௬ | மானமின்றி | ௨௪௮ | மூலமாக | ௧௮௩ |
| மந்திரங் | ௧௧௦ | மானிட | ௧௬ | மூலம் | ௯௧ |
| மந்திரஞ் | ௯௧ | மானுடர் | ௨௮௭ | மூவகை | ௪௭ |
| மந்திரமகா | ௧௫௯ | **மி** | | மூன்றுகோடியா | ௩௩௯ |
| மந்திரமதனை | ௪௭ | மிகுதி | ௩௬ | மூன்றுகோடிலி | ௩௩௮ |
| மந்திரமே | ௭௦ | மிக்குறுபர | ௨௯௬ | **மெ** | |
| மயக்குறு | ௨௩௫ | மிக்குறுபவ | ௧௯௨ | மெய்த்த | ௮௪ |
| மயங்குமஞ் | ௧௯௧ | மிக்குறுபாவ | ௧௫௩ | மெய்ப்பரசிவ | ௧௫௧ |
| மயலிலா | ௨௨௪ | மிடைந்திடு | ௧௩ | மெய்ப்பரசுக | ௨௮௭ |
| மரங்கல் | ௨௧௬ | மித்தையாகு | ௩௧௪ | மெய்ம்மைசா | ௧௮௨ |
| மரமடுத்து | ௩௧௮ | மித்தையாஞ் | ௨௬௦ | மெய்ம்மையா | ௨௫௯ |
| மரித்தல் | ௮௨ | மித்தையென் | ௨௫௬ | மெய்யுட | ௨௬௫ |
| மருவுமாதா | ௫௩ | மிறையுறு | ௨௮ | **மே** | |
| மருவுமாதி | ௨௧௬ | மின்னி | ௪௨ | மேவுநற்குண | ௨௬௦ |
| மலசல | ௪௩ | **மீ** | | **மை** | |
| மலயச | ௧௯ | மீனொடு | ௪௧ | மைந்த | ௨௬௦ |
| மலர்தலை | ௪௪ | **மு** | | **மொ** | |
| மலிதரு | ௧௮௮ | முக்கணன | ௩௩௨ | மொழிதரு | ௧௫௯ |
| மறைநெறி | ௪ | முக்கணனே | ௧௫௬ | **யா** | |
| மறைப்புறு | ௧௯௦ | முக்கிய | ௩௦௪ | யாகமாதிய | ௨௧௪ |
| மறையவ | ௧௫௪ | முக்கியா | ௩௦௮ | யாண்டொரு | ௧௦௩ |
| மறையுண | ௯௪ | முக்குண | ௨௧௮ | யாதினற் | ௨௦௭ |
| மறையுரை | ௨௬ | முண்டக | ௭௪ | யாதினிலொ | ௨௭௦ |
| மறையொடு | ௧௭ | முத்தனுகி | ௮௫ | யாதுதானொரு | ௨௫௩ |
| மனமொழி | ௧௫௬ | முத்தனுக் | ௩௦௫ | யாதொரு | ௨௮௪ |

| செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். | செய்யுள். | பக்கம். |
|---|---|---|---|---|---|
| யூவரோடு | ௧௮௩ | வானமே | ௩௨0 | வினைபல | ௨௮௯ |
| யாவர்க்கு | ௨௨௭ | வானின் | ௩௧௩ | வினையிலி | ௨௩௮ |
| யாவர்த | ௨௯௭ | | | வினைவழி | ௩௯ |
| யாவனற் | ௧௭௭ | **வி** | | **வீ** | |
| யாவன்வா | ௨௧0 | விடுத்துநெ | ௧௧௭ | வீரசைவர் | ௯௭ |
| **யோ** | | விடுத்தும | ௧௨௭ | வீவுறு | ௨௨௮ |
| யோகசாங்கிய | ௨௪ | விடுத்துள | ௨௮௯ | **வெ** | |
| யோகம் | ௧௬0 | விடுத்துறு | ௧௫௬ | வெய்ய | ௧௮௨ |
| யோகிகண் | ௩00 | விட்டதே | ௨௨௪ | வெற்பெ | ௩௫ |
| யோகினு | ௨௪௯ | விண்ட | ௨௪௬ | | |
| **வ** | | விதித்திடு | ௨௨௬ | **வே** | |
| வடிவு | ௨௪௭ | விதிமுறை | ௭௪ | வேண்டுமா | ௨௨௨ |
| வந்துறு | ௧00 | விதியிது | ௯ | வேண்டுரு | ௩௩௫ |
| வந்தெதிர் | ௨0 | விதிவில | ௨௨௨ | வேதமா | ௫௨ |
| வருண | ௧௨௯ | வித்தை | ௨௭ | வேதமோ | ௩௪௩ |
| வருத்துறு | ௩௩௨ | விந்தமு | ௨௧ | வேதனுதிய | ௧௭௩ |
| வரைந்துள | ௨௮௪ | விமலனு | ௧௨௪ | வேதனுதியா | ௮௪ |
| வளிமுத | ௪௨ | விமலணு | ௨௩௯ | வேதனுரண | ௧௪௮ |
| வன்னமா | ௮௩ | விரத | ௯௩ | வேதனி | ௧0 |
| வன்னமோ | ௧௯௪ | விரவுறு | ௧௭௫ | வேதனே | ௫௫ |
| **வா** | | விரிந்துள | ௨௯௪ | வேதன் | ௨௧௪ |
| வாகுவிற் | ௮0 | விருப்பொடு | ௩0௪ | வேதியர் | ௮௧ |
| வாசிக | ௯௨ | விலகுறு | ௨௮ | வேதியன் | ௯௬ |
| வாசிகா | ௯௨ | விளங்குறு | ௧௯ | வேறுறு | ௩0௩ |
| வாமஞ் | ௨௫ | விளம்புமிக் | ௪0௬ | வேறுபட்டிடு | ௩௨0 |
| வானமா | ௩௨௫ | வினைதரு | ௨௩௬ | வேறுபாடுறு | ௩௧௬ |




சிவமயம்.

# விஷய அட்டவணை.




| எண். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| ,, | பாயிரம் | க |
| ,, | இரேணுகர்காதை | எ |
| ,, | உபதேசம் | உங |
| ,, | அங்கலிங்கோத்பவம் | உகூ |
| ,, | வீரசைவசமயவிசாரம் | சுக |
| ,, | லிங்கலக்ஷணம் | உ0உ |
| ,, | அங்கலிங்கஸம்பந்தம் | ஙஉஎ |
| ,, | அந்தியகதை | ஙஙஉ |
| ,, | வாழ்த்துகவிகள் | ஙசச |
| | **(க) அங்கஸ்த்தலம்.** | |
| | **க-வது. பத்தத்தலம்.** | |
| க | (க) பிண்டத்தலம் | ஙச |
| உ | (உ) பிண்டஞானத்தலம் | ஙஅ |
| ங | (ங) சமுசாரநீக்கத்தலம் | ச0 |
| ச | (ச) குருகாருணியத்தலம் | சச |
| ரு | (ரு) இலிங்கதாரணத்தலம் | சகூ |
| சா | (சா) விபூதிதாரணத்தலம் | எ0 |
| எ | (எ) உருத்திராக்கதாரணத்தலம் | எஅ |
| அ | (அ) பஞ்சாக்கரசெபத்தலம் | அங |
| கூ | (கூ) பத்தித்தலம் | கூரு |
| க0 | (க0) உபயத்தலம் | க0எ |
| கக | (கக) திரிவிதசம்பத்தித்தலம் | க0கூ |
| கஉ | (கஉ) சதுர்விதசாரத்தலம் | ககஉ |
| கங | (கங) உபாதிதாநத்தலம் | ககசா |
| கச | (கச) நிருபாதிகதாநத்தலம் | ககஎ |
| கரு | (கரு) சகசதாநத்தலம் | ககஅ |
| | **உ-வது. மாகேசத்தலம்.** | |
| கசா | (க) மாகேச்சுரத்தலம் | கஉங |
| கஎ | (உ) இலிங்கநிட்டைத்தலம் | கஉசா |
| கஅ | (ங) பூருவாச்சிரயநிரசநத்தலம் | கஉஅ |
| ககூ | (ச) அத்துவிதநிரசநத்தலம் | கஙக |
| உ0 | (ரு) ஆக்குவாநநிரசநத்தலம் | கஙங |
| உக | (சா) அட்டமூர்த்திநிரசநத்தலம் | கஙச |
| உஉ | (எ) சர்வகதநிரசநத்தலம் | கஙசா |
| உங | (அ) சிவஜகன்மயத்தலம் | கஙஎ |
| உச | (கூ) பத்ததேகிகதேவத்தலம் | கஙகூ |
| | **ங-வது. பிரசாதித்தலம்.** | |
| உரு | (க) பிரசாதித்தலம் | கசஉ |
| உசா | (உ) குருமான்மியத்தலம் | கசரு |
| உஎ | (ங) இலிங்கமான்மியத்தலம் | கசஎ |

| எண். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| ௨௮ | (௪) சங்கமமான்மியத்தலம் ... ... ... ... | ௧௪௧ |
| ௨௯ | (௫) பத்தமான்மியத்தலம் ... ... ... ... | ௧௫௨ |
| ௩௦ | (௬) சரணமான்மியத்தலம் ... ... ... ... | ௧௫௫ |
| ௩௧ | (௭) பிரசாதமான்மியத்தலம் ... ... ... .. | ௧௫௮ |
| | **௪-வது. பிராணலிங்கித்தலம்.** | |
| ௩௨ | (௧) பிராணலிங்கித்தலம் ... ... ... ... | ௧௬௨ |
| ௩௩ | (௨) பிராணலிங்கார்ச்சநத்தலம் ... ... ... ... | ௧௬௫ |
| ௩௪ | (௩) சிவயோகசமாதித்தலம் ... ... ... ... | ௧௬௭ |
| ௩௫ | (௪) இலிங்கநிசத்தலம் ... ... ... ... | ௧௭௩ |
| ௩௬ | (௫) அங்கலிங்கத்தலம் ... ... ... ... | ௧௭௫ |
| | **௫-வது. சரணத்தலம்.** | |
| ௩௭ | (௧) சரணத்தலம் ... ... ... ... ... | ௧௭௯ |
| ௩௮ | (௨) தாமசநிரசநத்தலம் ... ... ... ... | ௧௮௧ |
| ௩௯ | (௩) நிர்த்தேசத்தலம் ... ... ... ... | ௧௮௪ |
| ௪௦ | (௪) சீலசம்பாதநத்தலம் ... ... ... ... | ௧௮௬ |
| | **௬-வது. அயிக்கியத்தலம்.** | |
| ௪௧ | (௧) அயிக்கியத்தலம் ... ... ... ... ... | ௧௮௯ |
| ௪௨ | (௨) ஆசாரசம்பத்தித்தலம் ... ... ... | ௧௯௩ |
| ௪௩ | (௩) ஏகபாசநத்தலம் .. ... ... ... ... | ௧௯௫ |
| ௪௪ | (௪) சகபோசநத்தலம் ... ... ... ... | ௧௯௭ |
| | **(௨) லிங்கஸ்த்தலம்.** | |
| | **௧-வது. ஆசாரலிங்கத்தலம்.** | |
| ௪௫ | (௧) தீக்ஷாகுருஸ்த்தலம் ... ... ... ... | ௨௦௭ |
| ௪௬ | (௨) சிக்ஷாகுருஸ்த்தலம் ... ... ... ... | ௨௦௯ |
| ௪௭ | (௩) ஞானகுருத்தலம்... ... ... ... ... | ௨௧௧ |
| ௪௮ | (௪) கிரியாலிங்கத்தலம் ... .. ... ... | ௨௧௩ |
| ௪௯ | (௫) பாவலிங்கத்தலம் ... ... ... ... | ௨௧௫ |
| ௫௦ | (௬) ஞானலிங்கத்தலம் ... ... ... ... | ௨௧௭ |
| ௫௧ | (௭) சுயத்தலம் .. ... ... ... ... | ௨௧௯ |
| ௫௨ | (௮) சரத்தலம் ... ... .. ... ... | ௨௨௧ |
| ௫௩ | (௯) பரத்தலம் ... ... ... ... ... | ௨௨௪ |
| | **௨-வது. குருலிங்கத்தலம்.** | |
| ௫௪ | (௧) கிரியாகமத்தலம் ... ... ... ... ... | ௨௨௬ |
| ௫௫ | (௨) பாவாகமத்தலம் ... ... ... ... ... | ௨௨௮ |
| ௫௬ | (௩) ஞானாகமத்தலம் ... ... ... ... ... | ௨௩௦ |
| ௫௭ | (௪) சகாயத்தலம் ... ... ... ... ... | ௨௩௨ |
| ௫௮ | (௫) அகாயத்தலம் ... ... ... ... ... | ௨௩௪ |
| ௫௯ | (௬) பரகாயத்தலம் ... .. ... ... ... | ௨௩௫ |
| ௬௦ | (௭) தருமாசாரத்தலம் ... ... ... ... | ௨௩௭ |
| ௬௧ | (௮) பாவாசாரத்தலம் ... .. ... ... | ௨௩௯ |
| ௬௨ | (௯) ஞானாசாரத்தலம் ... ... ... ... | ௨௪௧ |
| | **௩-வது. சிவலிங்கத்தலம்.** | |
| ௬௩ | (௧) காயாநுக்கிரகத்தலம் ... ... ... ... | ௨௪௪ |
| ௬௪ | (௨) இந்திரியாநுக்கிரகத்தலம் ... ... ... ... | ௨௪௭ |

# விஷய அட்டவணை.


| எண். | விஷயம். | பக்கம். |
|---|---|---|
| சாரு | (௩) பிராணாநுக்கிரகத்தலம் ... ... ... ... | உசகூ |
| சாசா | (ச) காயார்ப்பிதத்தலம் ... ... ... ... | உருக |
| சாஎ | (ரு) கரணார்ப்பிதத்தலம் ... ... ... ... | உருஉ |
| சாஅ | (சா) பாவார்ப்பிதத்தலம் ... ... ... ... | உருரு |
| சாகூ | (எ) சீடத்தலம் .. ... ... ... ... | உருசா |
| எ0 | (அ) சிசுருடைத்தலம்... ... ... ... ... | உருகூ |
| எக | (கூ) சேவியத்தலம் ... ... ... ... ... | உசாக |
| | **ச - வது. ஜங்கமலிங்கத்தலம்.** | |
| எஉ | (க) ஜீவான்மத்தலம் ... ... ... ... ... | உசாச |
| எ௩ | (உ) அந்தரான்மத்தலம் ... ... ... ... | உசாஎ |
| எச | (௩) பரமான்மத்தலம் .. ... ... ... | உசாகூ |
| எரு | (ச) நிர்த்தேகாகமத்தலம் ... ... ... ... | உஎக |
| எசா | (ரு) நிர்ப்பாவாகமத்தலம் ... . ... ... | சாஎ௩ |
| எஎ | (சா) நட்டாகமத்தலம் ... ... ... ... | உஎச |
| எஅ | (எ) ஆதிப்பிரசாதித்தலம் ... ... ... ... | உஎசா |
| எகூ | (அ) அந்தியப்பிரசாதித்தலம் ... ... ... ... | உஎஎ |
| அ0 | (கூ) சேவியப்பிரசாதித்தலம் ... ... ... ... | உஎகூ |
| | **ரு - வது. பிரசாதலிங்கத்தலம்.** | |
| அக | (க) தீக்ஷாபாதோதகஸ்த்தலம் ... ... .. ... | உஅஉ |
| அஉ | (உ) சிக்ஷாபாதோதகஸ்த்தலம் ... ... ... .. | உஅச |
| அ௩ | (௩) ஞானபாதோதகத்தலம் ... ... ... ... | உஅரு |
| அச | (ச) கிரியாநிட்பத்தித்தலம் ... ... ... ... | உஅஎ |
| அரு | (ரு) பாவநிட்பத்தித்தலம் ... ... ... ... | உகூ0 |
| அசா | (சா) ஞானநிட்பத்தித்தலம் ... ... ... ... | உகூஉ |
| அஎ | (எ) பிண்டாகாசத்தலம் ... ... ... ... | உகூரு |
| அஅ | (அ) விந்தாகாசத்தலம் ... ... .. ... | உகூஎ |
| அகூ | (கூ) மகதாகாசத்தலம் ... ... ... ... | உகூகூ |
| கூ0 | (க0) கிரியாப்பிரகாசத்தலம் ... ... ... ... | ௩0க |
| கூக | (கக) பாவப்பிரகாசத்தலம் ... ... ... ... | ௩0௩ |
| கூஉ | (கஉ) ஞானப்பிரகாசத்தலம் ... ... ... ... | ௩0ச |
| | **சா - வது. மஹாலிங்கஸ்த்தலம்.** | |
| கூ௩ | (க) சுவிகிருதப்பிரசாதத்தலம் ... ... ... ... | ௩0அ |
| கூச | (உ) சிட்டோதநத்தலம் ... ... ... ... | ௩க0 |
| கூரு | (௩) சராசரலயத்தலம் ... ... .. ... | ௩கஉ |
| கூசா | (ச) பாண்டத்தலம் ... ... ... ... ... | ௩கச |
| கூஎ | (ரு) பாசநத்தலம் ... ... ... ... ... | ௩கசா |
| கூஅ | (சா) அங்கலேபத்தலம் ... ... ... . | ௩ககூ |
| கூகூ | (எ) சுபராஞ்ஞத்தலம் ... ... ... ... | ௩உக |
| க00 | (அ) பாவாபாவலயத்தலம் ... ... ... ... | ௩உஉ |
| க0க | (கூ) ஞானசூனியத்தலம் ... ... ... ... | ௩உச |

உ

சிவமயம்.

# நூற்றொருஸ்த்தலவிஷயஸூசனம்.

௧. ஜனன மரணமுள்ள சமுசாரத்தில் சக்கிரம்போல சுழலும் ஜீவன் கர்மபரிபாகத்தினால் சத்திநிபாதம் பதிந்து சுத்தாந்தக்கரண மடையும் பக்தனாதலின் பிண்டனென்னும் மூர்த்திப்ரஹ்மப்பெயரடைதல்.

௨. பக்தன் ஆத்மாக்களைவிட ஈஶ்வரன் பிரேரகனென்னும் ஞானமடைதல்.

௩. பக்தன் சமுசாரங்களைத் துச்சமாகக்காணும் வைராக்ய புத்தியடைதல்.

௪. பக்தன் ஸ்ரீஸத்குரு சந்நிதியடைந்து பஞ்சப்ரஹ்ம கலசாபிஷேகஞ் செய்யப்பட்டு இஷ்ட ப்ராண பாவநாதீக்ஷை செய்யப்பெறுதல்.

௫. பக்தன் தனது ஹ்ருதயகமலத்திலிருக்கும் சின்மூர்த்தியே பரசிவலிங்கமாமென்று ஸ்த்தூல ஸூக்ஷ்ம காரண தேஹங்களில் ஸ்ரீஸத்குருவானவர் விதிப்படி இஷ்ட ப்ராணபாவலிங்கங்களைத் தாரணைஞ்செய்து அவைகளைப் பூஜிக்கும் முறையை அவனுக்குபதேசிக்க, அதனால் தான் சிவபக்தனென்றறிதல்.

௬. சிவபக்தன் பவத்தையொழித்து மஹைதைஶ்வர்யமளிக்கும் பரசிவத்தின் விபூதி தாரணைஞ்செய்தல்.

௭. சிவபக்தன் பரசிவத்தின் ஞானநேத்ரத்தினின்றுதித்த சிந்தாமணியாகிய ருத்ராக்ஷத்தைத் தாரணஞ்செய்தல்.

௮. சிவபக்தன் சிவதத்வ ப்ரகாஶமாகும் ஸ்ரீபஞ்சாக்ஷரீ மந்த்ரத்தை ஸ்ருஷ்ட்யாதி க்ரமத்தை யறிந்து ஜபித்தல்.

௯. சிவபக்தன் நவவிதபக்தியுடன் சிவபெருமானையே பூஜித்தலும், சூதகங்களை விடுதலும், குருலிங்கஜங்கமத்தில் பக்தி செலுத்துதலும், சகசதானஞ்செய்தலுமாகிய பக்திமார்க்கத்தினையடைதல்.

௧௦. சிவபக்தன் லிங்கஸ்வரூபமும் ஸ்ரீஸத்குருவும் ஒருவரேயென்னும் புத்தியுடன் பூஜித்தல்.

௧௧. சிவபக்தன் குருலிங்கஜங்கமர்களிடத்தில் ஒரேவிதமான புத்தியுடன் பூஜித்தல்.

௧௨. சிவபக்தன் குருலிங்கஜங்கமபூஜையுடன் அவர்களின் ப்ரஸாதங்களையும் ஸ்வீகரித்தல்.

௧௩. சிவபக்தன் குருலிங்கஜங்கமர்களுக்குப் பலாபேக்ஷையினால் தானஞ்செய்தல் அதமமென்றறிதல்.

௧௪. சிவபக்தன் குருலிங்கஜங்கமர்களுக்குப் பலாபேக்ஷையின்றி தானஞ்செய்தல் மத்திமமென்றறிதல்.

௧௫. சிவபக்தன் குருலிங்கஜங்கமர்களுக்குத் தானஞ்செய்கையில் கொடுப்பவனும் ஏற்பவனும் தானப்பொருளும் சிவஸ்வரூபமென்றும் தான் கொடுக்கத்தக்கவனன்றென்றும் எண்ணித் தானஞ்செய்தல் உத்தமமென்றறிதல்.

௧௬. சிவபக்தன் பரமசிவன் ஒருவனே மிகச்சிறந்தவனென்றறிந்து அவனிடத்தில் வைராக்ய புத்தி யுள்ளவனாதலின் மாஹேஶ்வரனென்னும் பிண்டப்ரஹ்மப் பெயரடைதல்.

கஎ. மாஹேஶ்வரன் சிவலிங்கபூஜையென்னும் மஹா வ்ரதத்தை எஞ்ஞான்றுங் கைவிடாதிருத்தல்.

கஅ. மாஹேஶ்வரன் ஜாதிகுலஸம்பந்தத்தால் வரும் பூர்வதர்மங்களை யறவே கைவிடுதல்.

கக. மாஹேஶ்வரன் அத்வைதஞானத்தை விட்டு லிங்கமே பூஜ்யன் அங்கமே பூஜகன் என்னும் த்வைதஞானமடைதல்.

உ0. மாஹேஶ்வரன் இஷ்டலிங்கத்தில் பூஜைக்குரிய ஆஹ்வாநஞ்செய்தலை விடுதல்.

உக. மாஹேஶ்வரன் அஷ்டமூர்த்தங்கள் பசுக்களென்றும் சிவத்தினிடத்தில் அவைகள் ஏகத்வமடைந்தவைகளன்றென்றுமறிந்து அவைகளின் பேதத்தையறவே விடுதல்.

உஉ. மாஹேஶ்வரன் பூஜாகார்யத்திநிமித்தம் சிவன் எவ்விடத்திலுமிராமல் இஷ்டலிங்கத்திலேயே நிலைத்திருப்பனென்றறிதல்.

உந. மாஹேஶ்வரன் சிவன் ஸர்வ வ்யாபகனென்றறிதல்.

உச. மாஹேஶ்வரன் சிவபக்தர்களின் ஹ்ருதயகமலத்தில் சிவன் விசேஷமாய்ப் பிரகாசிப்பனென்றறிதல்.

உரு. மாஹேஶ்வரன் இஷ்டப்ராணபாவலிங்கங்களினிடத்தில் அர்ப்பிதமானபதார்த்தங்களையே நுகர்தலின் பிரஸாதியென்னும் சலாப்ரஹ்மப்பெயரடைதல்.

உசா. பிரஸாதி ஸகல சித்திகளைக்கொடுக்கும் பரிபூர்ண ஸாக்ஷாத் சிவமே ஸ்ரீஸத்குருவென்றறிதல்.

உஎ. பிரசாதி ஜ்ஞாநஸ்வரூபமும் சர்வகாரணமும் ஸ்வப்ரகாஶமும் ஸர்வோத்க்ருஷ்டமுமாக விளங்குதலே லிங்கமென்றறிதல்.

உஅ. பிரசாதி மண்ணையும் பொன்னையும் ஒருபடித்தாய்க்காணும் சிவஞானமடைந்தவனே ஜங்கமனென்றறிதல்.

உக. பிரசாதி குருலிங்க ஜங்கமர்களின் மஹிமைகளை யறிந்து காயத்தினாலும் மனத்தினாலும் வாக்கினாலுமாகிய கிரியைகளினால லிங்கரூபமான மஹாதேவனைப் பூஜித்தல்.

ந0. பிரசாதி பரமசிவனே மோக்ஷத்துக்குக் காரணனென்றறிந்து சரணடைதல்.

நக. பிரசாதி குரு லிங்கம் ஜங்கமன் சிவபக்தன் சரணன் இவர்களின் மஹிமாநுபவம் சிவப்பிரசாதத்தாலுண்டாவதென்றறிதல்.

நஉ. பிரசாதி தன் நாபிக்கிழங்கின் மத்தியிலிருந்து வெளிப்படும் ஜ்யோதியே பிராணலிங்கமென்றறிபவனாதலின் பிராணலிங்கியென்னும் ஆநந்தப்ரஹ்மப் பெயரடைதல்.

நந. பிராணலிங்கி பாவநாபுஷ்பாதி ஜ்ஞாநஸ்வரூபமான மாநஸிக த்ரவ்யங்களினால் பூஜித்து ப்ராணலிங்க ஸம்பந்தமாதல்.

நச. பிராணலிங்கி சிவோகம்பாவநாநுஸந்தாநஞ்செய்தல்.

நரு. பிராணலிங்கி லிங்கத்தின் அபரோக்ஷாநுபவமடைதல்.

நசா. பிராணலிங்கி ஜீவாத்மாவில் லிங்கமும் லிங்கத்தில் ஜீவாத்மாவும் ஸமரஸமாயிருக்கும் ஞானமுண்டாதலின் அங்கலிங்கியாதல்.

நஎ. பிராணலிங்கி கற்புடைய மங்கைபோன்று ஸதிபதியின் ஸம்யோகத்தினாலுண்டாகும் சுகாநுபவமடைதலின் சரணனென்னும் விஜ்ஞாநப்ரம்ஹமப்பெயரடைதல்.

நஅ. சரணன் தமோ ரஜோ குணங்களை விட்டு ஸத்வகுணங்களை யடைதல்.

நக. சரணன் தமோகுணங்களை நீக்கத்தக்க ஞானமடைதல்.

௪0. சரணன் பரதத்வத்தை யறியவேண்டுமென்னும் அபேக்ஷையும் ப்ரத்யக்ஷாநுபவமுமாகிய ஸிலங்களை யடைதல்.

௪௧. சரணன் சிவன் என்னும் லிங்கத்தில் ஏகத்வமடைதலின் ஐக்யனென்னும் பரப்ரஹ்மப்பெயரடைதல்.

௪௨. ஐக்யன் ஜாதி சூதகம் வர்ணம் முதலிய ஸ்வேச்சாசாரங்களில் ஸம்பந்தியாதிருத்தல்.

௪௩. ஐக்யன் தனக்கும் சிவனுக்கும் ஜகத்துக்கும் பேதமில்லாமல் எல்லாம் சிவமயமாகியே காணுதல்.

௪௪. ஐக்யன் தான் வ்யாபகனுதலின் தன்னில் சிவனையும் குருவையும் லோகத்தையும் ஏகரூபமாய் ஸம்யோகஞ்செய்து பிரபஞ்சத்தின் பின்னபாவத்தைக்கெடுத்தல்.

௪௫. ஐக்யன் சிறப்புற்ற சிவஞானத்தைக் கொடுப்பதும் மும்மலக்கட்டுகளை யறுப்பதுமாகிய தீக்ஷையைச் செய்பவனே தீக்ஷாகுருவென்றறிதல்.

௪௬. ஐக்யன் தீக்ஷாகுருவே வினுவிடைவாயிலாக சீஷனுக்கு ஸதாசாரங்களை விதிப்பவனுதலின் சிக்ஷாகுருவென்றறிதல்.

௪௭. ஐக்யன் சிக்ஷாகுருவே சீஷனுக்குச் சந்தேகங்களைநீக்கி ஜீவன் முக்திக்குத் தாயகமான சிவஞானத்தை யுண்டுபண்ணுபவனுதலின் ஞானகுருவென்றறிதல்.

௪௮. ஐக்யன் சீஷனது ஸத்க்ரியைகளெல்லாம் லயமடையும் இஷ்டலிங்கமே க்ரியாலிங்கமென்றறிதல்.

௪௯. ஐக்யன் சீஷனது பாவங்களெல்லாம் லயமடையும் பிராணலிங்கமே பாவலிங்கமென்றறிதல்.

௫0. ஐக்யன் சீஷனது பிராணலிங்கத்தைப் பிரகாசப்படுத்தும் ஞானம் லயமடைவதும், த்ரிமூர்த்திகளையும் முக்குணங்களையும் கடந்ததுமாக அறியப்பட்டுள்ள வஸ்துவே ஞானலிங்கமென்றறிதல்.

௫௧. ஐக்யன் சிவதத்துவப்பிரகாச ஞானம்பொருந்தி யொடுங்கு மெய்ஞ்ஞானமடைந்து உலகக் கூட்டுறவினின்று விடுபட்டவனுயிருப்பினும் கிரியை யுள்ளவனுகக் காணப்படுதலின் சுயன் என்னும் பெயரடைதல்.

௫௨. சுயன் ஜ்ஞானஸ்வரூபமொன்றையே தரித்து ஸாக்ஷாத் சிவஸ்வரூபனுகச் சஞ்சரிப்பவனுதலின் சரன் என்னும் பெயரடைதல்.

௫௩. சரன் தன்னைவிட வேறொருபதார்த்தமின்றென்பவனுதலின் பரன் என்னும் ஆசாரலிங்கப் பெயரடைதல்.

௫௪. பரன் விதிப்படி செய்யும் இஷ்டலிங்கபூஜைக்குரிய கிரியைகளே லோகத்தாருக்குச் சாஸ்திரமாதலின் கிரியாகமன் என்னும் பெயரடைதல்.

௫௫. கிரியாகமன் அகத்தும் புறத்தும் நோக்கும் சிவோஹம்பாவநாசின்னங்களே லோகத்தாருக்குச் சாஸ்திரமாதலின் பாவாகமன் என்னும் பெயரடைதல்.

௫௬. பாவாகமன் சிவத்தைவிட வேறுபதார்த்தமின்று நானே சிவனுயிருக்கின்றேன் என்னும் ஞானசின்னங்களே லோகத்தாருக்குச் சாஸ்திரமாதலின் ஞானுகமன் என்னும் பெயரடைதல்.

௫௭. ஞானுகமன் கிரியாஞான பூஜைகளுக்கு வேண்டியதாயிருக்கும் சரீரத்தை வைராக்யத்தினுல் அழியாதிருக்கச் செய்தலின் சகாயன் என்னும் பெயரடைதல்.

௫௮. சகாயன் தான் தேஹஸஹிதனாயிருப்பினும் மனிதனல்லன் தேவனல்லன் ராக்ஷஸனல்லன் சிவனாயிருக்கிறேன் என்னும் உணர்ச்சியினால் தேஹவ்யவஹாரங்களில்லாதிருத்தலின் அகாயன் என்னும் பெயரடைதல்.

௫௯. அகாயன் ஜ்ஞானானந்தனா யிருப்பினும் சரீரியாயிருத்தலானும் சிவமென்னும் ப்ரஹ்மமேதானென்றறிதலானும் பரகாயன் என்னும் பெயரடைதல்.

௬0. பரகாயன் தான் அனுஷ்டிக்கும் அஹிம்ஸை முதலிய தர்மாசாரங்களே உலகத்தாருக்குச் சாஸ்திரமாயிருத்தலின் தர்மாசாரன் என்னும் பெயரடைதல்.

௬௧. தர்மாசாரன் தான் செய்யும் ஸத்பாவமே உலகத்தாருக்குச் சாஸ்திரமாயிருத்தலின் பாவாசாரன் என்னும் பெயரடைதல்.

௬௨. பாவாசாரன் தான் சிவைக்யத்தினால் கூடின ஞானாசாரமே உலகத்தாருக்குச் சாஸ்திரமா யிருத்தலின் ஞானாசாரன் என்னும் குருலிங்கப் பெயரடைதல்.

௬௩. ஞானாசாரன் லோகானுக்கிரகத்தினிமித்தம் தேஹதாரணஞ் செய்துகொண்டிருத்தலின் காயானுக்கிரகன் என்னும் பெயரடைதல்.

௬௪. காயானுக்கிரகன் லோகானுக்கிரகத்தினிமித்தம் இந்த்ரியங்களுக்குரித்தாய ராகத்வேஷாதிகள் வெளிமுகஞ் செல்லாது உள்ளத்தில் சிவனிடம் லயிக்கச் செய்தலின் இந்த்ரியானுக்கிரகன் என்னும் பெயரடைதல்.

௬௫. இந்த்ரியானுக்கிரகன் லோகானுக்கிரகத்தினிமித்தம் தன் பிராணவாயுவைத் தடுக்கச் சிவலிங்கம் தனக்குத் தரிசனமாதலின் பிராணானுக்கிரகன் என்னும் பெயரடைதல்.

௬௬. பிராணானுக்கிரகன் லிங்கபூஜா விஷயத்தில் தேஹாபிமானத்தை த்யாகஞ்செய்தலின் காயார்ப்பிதன் என்னும் பெயரடைதல்.

௬௭. காயார்ப்பிதன் கரணங்களெல்லாவற்றையும் சிவலிங்கத்தில் புணர்த்திடுதலின் கரணார்ப்பிதன் என்னும் பெயரடைதல்.

௬௮. கரணார்ப்பிதன் லிங்கத்திற்கு மனோவிகாரங்களான பாவங்களைச் சமர்ப்பணஞ் செய்தலின் பாவார்ப்பிதன் என்னும் பெயரடைதல்.

௬௯. பாவார்ப்பிதன் சிவயோகியினால் சிக்ஷிக்கப்படுதற்கு யோக்யனாதலின் சிஷ்யனென்னும் பெயரடைதல்.

௭0. சிஷ்யன் குருவைக்குறித்து நித்யம் யாது? அநித்யம் யாது? ஜீவன் யாவன்? சிவன் யார்? என்று வினவுதலால் தன்னைச் சிஷ்யன் என்றறிதல்.

௭௧. சிஷ்யன் ஸ்ரீஸத்குருபதேசத்தினால் சிவாத்வைதஞானத்தைச் சம்பாதித்துக் கொண்டவனாதலின் சேவியன் என்னும் சிவலிங்கப் பெயரடைதல்.

௭௨. சேவியன் ஜீவபாவனையை விட்டு பரதத்வத்தைப்பாவித்தலின் ஜீவாத்மா என்னும் பெயரடைதல்.

௭௩. ஜீவாத்மா ஸ்வஸ்வரூபஜ்ஞானத்தினால் ஜீவபாவத்தை நாசஞ்செய்தலின் அந்தராத்மா என்னும் பெயரடைதல்.

௭௪. அந்தராத்மா சிவாத்வைதஜ்ஞானத்தினால் பரமாத்மாவினிடமுள்ள ஸாமரஸ்யம் ப்ராப்தமாதலின் பரமாத்மா என்னும் பெயரடைதல்.

௭௫. பரமாத்மா ஸ்த்தூலாதி தேஹஸம்பந்தங்களை நீக்கியிருத்தலின் நிர்த்தேஹாகமன் என்னும் பெயரடைதல்.

௭௬. நிர்த்தேஹாகமன் இந்த்ரிய விகாரமில்லாத மனோவ்யாபார ஸித்தியடைந்திருத்தலின் நிர்ப்பாவாகமன் என்னும் பெயரடைதல்.

௭௭. நிர்ப்பாவாகமன் த்ரிபுடிமயமான பிரபஞ்சம் சூனியமாய் பேதஞானம் நஷ்டமாதலின் நஷ்டாகமன் என்னும் பெயரடைதல்.

௭௮. நஷ்டாகமன் சிவன் அனைத்துக்கும் மூலகாரணனென்றறிந்து அவனது அநுக்கிரகத்தை யடைதலின் ஆதிப்பிரசாதி என்னும் பெயரடைதல்.

௭௯. ஆதிப்பிரசாதி சகல பதார்த்தங்களுக்கும் லயஸ்த்தானமான பரசிவனே அனைத்துக்கும் அந்தியனு யிருப்பவனென்றறிந்து அவனது அநுக்கிரகத்தை யடைதலின் அந்தியப்பிரசாதி என்னும் பெயரடைதல்.

௮0. அந்தியப்பிரசாதி அனைத்துக்கும் சிவனே தேசிகனென்றறிந்து அவனது அநுக்கிரகத்தை யடைதலின் சேவியப்பிரசாதி என்னும் ஜங்கமலிங்கப்பெயரடைதல்.

௮௧. சேவியப்பிரசாதி சிவதீக்ஷையினுல் த்வைதஞானம் நீங்கி குருசிஷர்களுக்கு அபேதஞானம் பிறந்து அதனுடன் ஆநந்தரஸம் ஐக்கியமாயிருத்தலின் தீக்ஷா பாதோதகன் என்னும் பெயரடைதல்.

௮௨. தீக்ஷாபாதோதகன் சிக்ஷாபாதோதகத்தையடைய, அதனுல் குருசிஷர்களின் அபேதஞானம் ஜங்கம லிங்கியைப் பிரேரேபிக்க, அதனுல் சிக்ஷா ஞானங்களின் ஸாமரஸ்ய முண்டாக, அதனுல் சுகாநுபவமடைதலின் சிக்ஷாபாதோதகன் என்னும் பெயரடைதல்.

௮௩. சிக்ஷாபாதோதகன் ஞானுநந்தத்தை யடைதலின் ஞானபாதோதகன் என்னும் பெயரடைதல்.

௮௪. ஞானபாதோதகன் ரஜ்ஜுவினிடத்தில் சர்ப்பப்ராந்தி யுண்டாவதுபோல க்ரியாஜந்யமான பலன் தன்னைப்பற்றுதிருத்தலின் கிரியாநிஷ்பத்திமான் என்னும் பெயரடைதல்.

௮௫. கிரியாநிஷ்பத்திமான் சுக்திரஜத நியாயத்தைப்போல பாவசம்பந்த மிருத்தலானும், அக்நியானது விறகு முதலானவற்றைத் தகித்துவிட்டுத் தானும் நசித்துப்போவதுபோல துக்கத்தைவிட்டு சிவபாவனையும் நீங்குவனுதலின் பாவநிஷ்பத்திமான் என்னும் பெயரடைதல்.

௮௬. பாவநிஷ்பத்திமான் நான் அறியத்தக்கவன் இது அறியத்தக்கது என்னும் வ்யவஹாரங்களில்லா திருத்தலானும் கனுப்போல் ஞானமேற்படுதலானும் ஞானநிஷ்பத்திமான் என்னும் பெயரடைதல்.

௮௭. ஞானநிஷ்பத்திமான் அத்வைதலக்ஷணயுக்தனுகி, கடத்தில் தோன்றும் ஆகாசம்போல ஆத்மா தேஹோபாதியா யிருப்பினும் பரிபூர்ணனுவனென்றறிந்து தியானஞ்செய்தலின் பிண்டாகாசன் என்னும் பெயரடைதல்.

௮௮. பிண்டாகாசன் உலகில் எவர்க்கும் மேலாயுள்ள ஆகாசத்தை வ்யாபகமென்றறிவதுபோல ஆத்மா வ்யாபகனுயிருப்ப னென்றறிதலின் விந்தாகாசன் என்னும் பெயரடைதல்.

௮௯. விந்தாகாசன் பிரமாண்ட பிண்டாண்டங்களை யடைந்திருக்கும் ஆகாசம் பின்னமாகா திருப்பதுபோல ஆத்மாவைப் பார்க்கினும் பரமாத்மா பின்னமாயிருப்பதின்றென்றறிதலின் மஹதாகாசன் என்னும் பெயரடைதல்.

௯0. மஹதாகாசனுன சிவயோகி சிவஸ்வரூபத்தை யநுஸந்தானஞ் செய்தலின் கிரியாப்பிரகாசன் என்னும் பெயரடைதல்.

# நூற்றொருஸ்த்தலவிஷயசூசனம்.

௯௧. கிரியாப்பிரகாசன் சமுத்திரத்திற்பிறந்த அலை முதலானவைகள் கடலினின்றும் வேறாகாததுபோல புத்தி முதலான பாவனைகள் ஆத்மாவினின்றும் வேறாயிருப்பனவன்றென்றறிதலின் பாவப்பிரகாசன் என்னும் பெயரடைதல்.

௯௨. பாவப்பிரகாசன் முக்யார்த்தமாகிய வாச்யார்த்தத்தில் பொருத்தமின்மையேற்பட லக்ஷணாவிருத்தியைப்பற்றுதலானும் அங்கம் லிங்கம் என்னும் ஜ்ஞாநத்வயத்தை ஏகபாவத்தினால் ஸம்யோகஞ்செய்தலானும் ஞானப்பிரகாசன் என்னும் பிரசாதலிங்கப் பெயரடைதல்.

௯௩. ஞானப்பிரகாசன் அங்கலிங்க ரூபமான ஸ்ரீவேஶ்வரர்களின் பேதத்தை நாசஞ்செய்து அபரோக்ஷ ஞானப்பிரகாசமுள்ளவனாகி சச்சிதாநந்த ஸ்வரூபமாய் விளங்கும் சிவனிடத்தில் விஷயங்களை சமர்ப்பித்து ஞானப்பிரகாசத்தை சுவிகரிப்பவனாதலின் சுவிகிருதப்பிரசாதி என்னும் பெயரடைதல்.

௯௪. சுவிகிருதப் பிரசாதி எஞ்சிநின்ற மாயாதத்வமாகிய சகல பதார்த்தங்களையும் ஸ்வஸ்வரூபத்தினால் கிரகித்துச் சுகித்து மாயை கிங்கரீபாவத்தையடையச் செய்தலின் சிஷ்டோதனன் என்னும் பெயரடைதல்.

௯௫. சிஷ்டோதனன் நானாவிதமான சராசரப்ரபஞ்சங்களில் வ்யாபித்திருக்கும் சிவனில் ஐக்யத்வமடைந்து, உலகத்தோற்றமொழிந்து, சிவனைவிட வேறொன்றுமறியாதாதலின் சராசரலயன் என்னும் பெயரடைதல்.

௯௬. சராசரலயனான சிவயோகி அநேககோடி ப்ரஹ்மாண்டங்களின் ஸ்ருஷ்ட்யாதிகளுக்கு ஆதாரமாயிருக்கும் பராசத்தி யென்னும் பாண்டத்தில் சமுத்திரத்தின் அலைபோன்று சக்திமுதல் பிருதிவி ஈறாகவுள்ள சகல தத்வங்களையுமுடையவனாகி பராஹந்தையடைந்து ஆத்மஸ்வரூபத்தில் நிற்பவனாதலின் பாண்டன் என்னும் பெயரடைதல்.

௯௭. பாண்டனான சிவயோகி வித்தில் மரமடங்கி யிருப்பதுபோல பரசிவன் என்னும் பிரமத்தில் நிலைபெற்றுள்ள விமரிசம் என்னும் பராசக்தியைத் தன்னிடம் அடக்கிக்கொண்டிருக்கும் சிவஸ்வரூபனாதலின் பாஜனன் என்னும் பெயரடைதல்.

௯௮. பாஜனனாகிய சிவயோகி புகை முதலியவற்றால் ஆகாசமானது லிப்தமாயில்லாததுபோல புண்யபாபகர்மங்களினால் லிப்தமாகாமலும் விதிவிலக்கு சங்கல்ப விகல்பங்களில்லாமலும் எல்லாம் தன் ஸ்வரூபமாகக் காண்டலின் அங்கலேபன் என்னும் பெயரடைதல்.

௯௯. அங்கலேபனாகிய சிவயோகி ஸ்வகத ஸஜாதீய விஜாதீய பேத சூனியமாகவும் சிதாநந்தஸ்வரூபமாகவுமிருக்கும் பரப்ரஹ்மத்தில் ஸாமரஸ்யத்தையடைந்து தன்னையாவது மற்றெதையாவது அறியானாதலின் சுபராஜ்ஞன் என்னும் பெயரடைதல்.

௧00. சுபராஜ்ஞன் நான் நீ என்னும் தன்மையில்லாது சூனியம்போன்று சிதாகாசமாகிய சிவத்தில் ஐக்யத்தையடைந்து எந்த வஸ்துவினிடத்தினும் பாவமும் அபாவமுமில்லாதிருத்தலின் பாவாபாவலயன் என்னும் பெயரடைதல்.

௧0௧. பாவாபாவலய ஸம்பந்நனான சிவயோகி தனக்குச் சிவனைவிட சர்வமும் சூனியமாகி, பாவாபாவ விவேகம் பரப்ரஹ்மத்தை யணுகாததுபோல சித்ரூபமாயுள்ள ஜ்யோதிர்லிங்கத்தில் தான் பின்னப்பொருளாகாது ஏகத்வமடைந்து, விருத்திஞானம் நசித்து, இரண்டாவதோர் வடிவமிலதாகி ஸ்வப்ரகாஶமுள்ள பராமுக்தனாதலின் ஞானசூனியஸம்பந்நனென்னும் மஹாலிங்கப் பெயரடைதல்.

உ

சிவமயம்.

# பிழை திருத்தம்.

இந்நூலை வாசிக்கு முன்னரே பிழையைத் திருத்திக்கொள்க.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩௨ | ௨௭ | லிங்கஸ்தலம் | அங்கஸ்தலம் |
| ௪௧ | ௨௮ | பொய்த்துருது | பொய்த்திடாது |
| ௮௯ | ௧௯ | லிங்கதத்திற்கு | லிங்கத்திற்கு |
| ௧௨௦ | ௨௭ | டார்ங்குமருட் | டார்க்குமருட் |
| ௧௨௨ | ௩௩ | வாகந | க்குவாந |
| ௧௨௨ | ௩௭ | ஆவாகநம் | என்று வருமிடங்கள்தோறும் ஆக்குவாநம் என்று திருத்திக்கொள்க |
| ௪௨௨ | ௪௧ | நிரஸாந்தல, ம் ஆவாகநம் | நிரஸாந்தலம், ஆக்குவாநம் |
| ௧௩௩ | ௩௪ | (தாபித்தல் எனினுமாம்.) | இதை முற்றிலும் அடித்துவிடுக |
| ௧௬௮ | ௩௮ | பரவசிவ | பரசிவ |
| ௪௬௪ | ௧௬ | ஓர் | ஓர் |
| ௨௨௫ | ௩௦ | குருலிங்கப்ராணி | சுரலிங்கப்ராணி |
| ௨௨௬ | ௧௮ | ஓள்ளழ | ஒள்ளழ |
| ௨௩௩ | ௪௩ | ஓப்பறு | ஒப்பறு |
| ௨௫௬ | ௪௯ | சுழறும் | கழறும் |
| ௨௬௨ | ௪௨ | ஓழிவறு | ஒழிவறு |
| ௨௬௨ | ௩௫ | ஶு-ருஷை | ஶுஶ்ருஷை |
| ௨௬௩ | ௩-௪ | | (பிராணலிங்கிக்குச்சேர்ந்த உட்பிரிவுகள்.) என்பதைச் சேர்த்துக்கொள்க. |
| ௨௭௨ | ௭ | ஓருபொரு | ஒருபொரு |
| ௨௮௩ | ௧ | | ஆரியனேடு—, என்பதற்குமுன் ஏரியல்முனிவ—, என்பதைச் சேர்த்துக்கொள்க |
| ௩௦௬ | ௩௦ | தாமங்க | தர்மங்க |
| ௩௦௯ | ௧௩ | சிவயோகி | (சிவ) யோகி |
| ௩௪௯ | ௨௦ | ஸவரூபனுகவும் | ஸ்வரூபனுகவும் |
| ௩௨௪ | ௪ | ஸவ்பரஜ்ஞாந | ஸ்வபரஜ்ஞாந |
| ௩௩௪ | ௨௩ | ஶீவபெருமான் | ஶிவபெருமான் |
| ௧௨௫ | ௮ | பொரூள | பொருள் |
| ௧௬௭ | ௩ | (௧.) | (௩.) |
| ௨௯௮ | ௧௧ | வாயுட | வாயுட |
| ௨௯௮ | ௧௪ | சிவன்தான்—, ஆன்மாவாய் | சிவன்தான் ஆன்மா—, (அவன்) ஆகு |
| | | **சிவப்பிரகாச சுவாமிகள் வரலாறு.** | |
| ௬ | ௪ | மத்தன | மத்தன் |
| ௧௬ | ௨௭ | அ அம் | இவற்றை அடித்துவிடுக |
| ௨௫ | ௧௭ | லிங்கைகிய | லிங்கைக்ய |
| ௨௬ | ௧௩ | எசு | ஏசு |

உ

ஸ்ரீசற்குருவேநம:

# சித்தாந்தசிகாமணி

## மூலமும் உரையும்.

### பாயிரம்.

#### விநாயக வணக்கம்.

கலிவிருத்தம்.

மனவ னத்தின் மதமெனும் யானையைச்
சினவி நிற்குந் திகழிள வெண்மதி
புனைநு தற்கட் புராரிய ளித்தரு
ணனைக வுட்களி நாகிள வேழமே.

(பதவுரை.)

திகழ் - விளங்குகின்ற, வெள் - வெள்ளிய, இளமதி - இளம்பிறையை, புனை - தரித்த, நுதல்கண் - நெற்றிக்கண்ணினையுடைய, புரம் அரி - திரிபுர சத்துருவாகிய சிவபெருமான், அளித்தருள் - ஈன்றருளின, நனை - மதநீரால் நனைந்த, கவுள் - கதுப்பினையுடைய, களி - களிப்போடு கூடிய, நாகு இளவேழம் - மிக்க இளமை பொருந்திய யானையானது, மனம் வனத்தில் - மனமாகிய காட்டில் சஞ்சரிக்கிற, மதம் என்னும் யானையை - மதமென்கிற யானையினை, சினவி நிற்கும் - கோபித்து நிற்கும், (என்றவாறு.)

(விசேடவுரை.)

ஆன்றோர் யாதானு மோர்நூல் செய்யப்புகுங்கால் முதற்கண் விநாயக வணக்கங் கூறன் மரபாதலானும், அவருதவியின்றி எடுத்துக்கொண்ட நூலினிது முடிவுபெறா தாதலானும் இந்நூலாசிரியரும் விநாயக வணக்கங் கூறலாயினர். மதிப்புனையெனப் பாடமோதி மதியினு லலங்கரிக்கப்பெற்ற வெனினுமாம். மனவனத்தின் மதமெனும் யானையென்பதும், புராரியளித்தருள் நனைகவுட்களி நாகிள வேழம் என்பதும்முறையே வநசரம் கிரிசரம் என்னும் யானை வகையினை யுணர்த்தின: வநசரம் - காட்டிற் சஞ்சரிக்கும் யானை, கிரிசரம் - மலை மலைச்சாரல்களிற் சஞ்சரிக்கும் யானை. மதமெனும் யானை மனவனத்திற் சஞ்சரித்தலால் அதனை வநசரம் என்றது பொருந்தும். புராரியளித்தருள் நனைகவுட்களி நாகிளவேழம் கிரிசரம் என்பது பொருந்துமா றென்னையெனின்,

“கார்கொண்ட கவுண்மதக் கடைவெள்ள முங்கட் கடைக்கடைக் கனலு மெல்லை
கடவாது தடவுக் குழைச்செவி முகந்தெறி கடைக்கா றிரட்ட வெங்கோன்
போர்கொண்ட வெண்டோட் பொலங்குவடு பொதியும்வெண் பொடிதுடி யடித்து வைத்
புழுதியாட் டயராவொ ரயிரா வணத்துலவு போர்க்களிறு” ஆதலினென்க. [துப்

இடையூறு புகாமைக் காப்பவன் கோவித்து நிற்றல் தகுதியென்பது தோன்ற சினவியெ ன்றும், படுத்திருத்தல் காவற்காரற்குத் தகுதியன் றென்பது தோன்ற நிற்கும் என்றும் கூறினர். துஷ்ட சிக்ஷையும் சிஷ்டரக்ஷையுஞ் செய்யவல்லராகிய நுதற்கட் புராரியளி த்தருள் நனைகவுட்களி றாகிளவேழ மாதலால், நூல்கட் கிடையூறுசெய்யப்புகு மதயா னையைச் சிக்ஷித்து நூல்செய்வோரை ரக்ஷிக்குமென்பது தெற்றெனை விளங்குமாறும் காண்க. நனைகவுட்களி நாகிள வேழம் என்றதும் காக்குந் திறனுடைத்தென்பதை யினிது விளக்கிற்று. எல்லா வுறுப்புக்களினுஞ் சிறந்த வுறுப்பாகிய தலை யானைத்தலையாதலால் வேழமென்றே கூறினர். அன்றியும், மதமெனும் யானையென்றதும், நுதற்கட் புராரியளி த்தருள் நனைகவுட்களி நாகிளவேழம் என்றதும் முறையே தோல்வி வெல்விகளை யுணர் த்தும், வேழம் நிற்குமென முடித்துக்கொள்க. விரிவஞ்சி யிப்மட்டி னிறுத்தலாயிற்று.

## பரசிவ வணக்கம்.

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

உலகமெனு மோவியங்க டிகழ்த்துமொரு படமாகி யொளிக ளெல்லா
மிலகுபர வொளியாகிச் சச்சிதா நந்தமா யேக மாகிப்
பலகலைகள் பரப்பிரமம் பரசிவமா லிங்கமெனப் பகரா நின்ற
திலகநுத லுமைகணவன் றிருவடித்தா மரைவணக்கஞ் செய்து வாழ்வாம்.

(ப - ரை.) உலகம் என்னும் ஓவியங்கள் - உலகங்களென்கிற சித்திரங்களை, திகழ்த் தும் - விளங்கச்செய்கின்ற, ஒரு படம் ஆகி - ஒரு படரூபமாகி, ஒளிகள் எல்லாம் - சுடர்களெல்லாம், இலகு - விளங்குதற்குரிய, பரவொளி ஆகி - பரஞ்சுடராகி, சத்து சித்து ஆநந்தம் ஆய் - சச்சிதாநந்த ரூபமாகி, ஏகம் ஆகி - ஒன்றாகி, பல கலைகள் - பல கலைகளும், பரப்பிரமம் என - பரப்பிரமமென்றும், பரசிவம் என - பரசிவமென்றும், மாலிங்கம் என - மஹாலிங்கமென்றும், பகரா நின்ற - சொல்லாநின்ற, திலகம் - பொட் டணிந்த, நுதல் - நெற்றியையுடைய, உமை கணவன் - உமாநாயகனது, திருவடித்தா மரை - திருவடியாகியதாமரை மலரை, வணக்கம்செய்து - வணங்கி, வாழ்வாம் - வாழ் வோம் (யாம்), எ-று.

(வி - ரை.) சுடர்கள் என்றது சோமசூரியாக்கினிகளென்கிற முச்சுடர்களை, பரஞ் சுடர் - மேலானவொளி, சத்து - உண்மை, சித்து - அறிவு, ஆநந்தம் - இன்பம். தாமரைத் திருவடியென்னாது திருவடித்தாமரையென்றதனால் திருவடிச்சிறப்புச்சிறந்து நிற்றல் பெறப்பட்டது. வணக்கம்செய்து ஒருசொல். வாழ்வாம் உளப்பாட்டுத்தன்மைப் பன்மை வினைமுற்று. வாழ்வாம் என்னும் வினைக்கு வினைமுதலாகிய யாம் என்பது வருவித்துரை க்கப்பட்டது. (௯)

## பராசத்தி வணக்கம்.

மாயையெனு மணல்கொடுலகெனுஞ்சிற்றி லிழைத்தாடும் வளமை யாளை
மூயமல விருளிரிக்குஞ் செழுஞ்சுடரை யுயிர்களெல்லா முன்னமீன்ற
தாயையொரு பரசிவனைப் பெயராக்குஞ் சமவாய சத்தி தன்னைத்
தூயவறி வானந்த வடிவாளை மலைமகளைத் தொழுதல் செய்வாம்.

(ப - ரை.) மாயை என்னும் மணல் கொடு - மாயையென்கிற மணலினால், உலகு என்னும் - உலகமென்கிற, சிறு இல் இழைத்து - சிறுவீட்டைக்கட்டி, ஆடும் - (அதில்) விளை யாடுகிற, வளமையாளை - செல்வமுடையவளை, மூய - மொய்த்த, மலம் - மலமாகிய, இருள் இரிக்கும் - இருட்டையோட்டுகிற, செழுஞ்சுடரை - செழுமையாகிய சோதியை, உயிர்கள் எல்லாம் - எல்லா உயிர்களையும், முன்னம் ஈன்ற - முன்னரே பெற்ற, தாயை -

அன்னையை, ஒரு - ஒப்பற்ற, பரசிவனை - பரமசிவனை, பெயர் ஆக்கும் - தன்பெயரிட்ட ழைக்கச்செய்கிற, சமவாயசத்திதன்னை - சமவாய சத்தியை, தூய - பரிசுத்தமாகிய, அறிவு ஆநந்தவடிவாளை - ஞாநாநந்த ரூபியை, மலைமகளை - பர்வதராஜகுமாரியை, தொழு தல் செய்வாம் - வணங்குவோம் (யாம்), எ - று.

(வி - ரை.) மணல்கொடு என்பதில் கொடு மூன்றுருவதன் சொல்லுருபு. மலம் - மும்மலங்கள், அவை ஆணவம் மாயை காம்யம் என்பன. தன்பெயரிட்டழைத்தலாவது பரசிவன் என்றழைத்தல். சமவாயசத்தி - சம்பந்தமுடையவளாய் பிரியாதிருக்குஞ்சத்தி. இதனால் ஞானக்கிரியாரூபங்களும் பெறப்பட்டன. தொழுதல் செய்வாம் ஒரு சொல். (௨)

## வசவதேவ வணக்கம்.

எண்ணிகழ்ந்த வண்டமெல்லாம் வலம்புரிந்த தெனவுமைமா னீன்ற வே ழந், தண்ணிகழ்ந்த நறுங்கொன்றைச் சடையொருவன் றனைச்சூழ்ந்த தகை மை போல, மண்ணிகழ்ந்த சிவசரணர் தமையெல்லாந் தொழுந்தகைமை வா ய்ப்ப வெங்க, ளுண்ணிகழ்ந்த வசவனெனும் பெயருடையோன் றனைவணங்கி யுவகை கூர்வாம்.

(ப - ரை.) எண் நிகழ்ந்த - மதிப்புப்பொருந்திய, அண்டம் எல்லாம் - எல்லா அண் டங்களையும், வலம் புரிந்தது என - வலஞ்செய்ததென்னும்படி, உமை மான் ஈன்றவேழம் - உமாதேவியாகிய மான் பெற்ற யானையானது, தண் நிகழ்ந்த - குளிர்ச்சிபொருந்திய, நறு - நறுமணமுள்ள, கொன்றை - கொன்றை மலர்மாலையையணிந்த, சடை - சடையினை யுடைய, ஒருவன் தன்னை - ஒப்பற்றவனாகிய சிவபிரானை, சூழ்ந்த - வலம்வந்த, தகைமை போல - தன்மைபோல, மண் நிகழ்ந்த - மண்ணுலகிலுள்ள, சிவசரணர் தம்மையெல்லாம் - சிவசரணரெல்லாரையும், தொழும் தகைமைவாய்ப்ப-வணங்கின பெருமை வாய்க்கும்படி, எங்கள் உள் நிகழ்ந்த - எமதுள்ளத்தில் வாழ்கின்ற, வசவன் எனும் - வசவதேவன் என் கிற, பெயர் உடையோன் தன்னை - பெயருடையவனை, வணங்கி - தொழுது, உவகைகூர் வாம் - களிப்பு மிகுவோம் (யாம்), எ - று.

(வி - ரை.) எண் இகழ்ந்த அல்லது இகந்த எனப்பாடமோதி அளவுகடந்த என்று ரைப்பினுமாம். வலம்புரிதல் - பிரதக்ஷிணம் செய்தல். உமை மான் ஈன்ற வேழம் என்றது விநாயகரை. மானீன்றவேழம் என்றது அதிசயோக்தி. கொன்றை - ஆகுபெயர். சிவச ரணர் - சிவ மாஹேஸ்வரர். (௩)

## நூல்வரலாறு.

ஓங்குபுகழ்ச் சித்தரா மேசனென வொருகுரவ னுளன வன்சேய்
தாங்குவிறற் சைவசிகா மணிமுத்தி தேவனவன் றநயன் மாயை
நீங்குகுணக் குன்றனைய சித்தநா தப்பெயரோ னிகழ்த்த வன்பால்
வாங்குதிரைக் கடற்கண்மதி போற்சிவயோ கிப்பெயரோன் வந்து தித்தான்.

(ப - ரை.) ஓங்கு - உயர்ந்த, புகழ் - புகழினையுடைய, சித்தராமேசன் என - சித்த ராமேசனென்னும்படி, ஒரு குரவன் உளன் - ஒரு தேசிகனுளன், அவன் சேய் - அவன் மகன், விறல் தாங்கு - வெற்றியைத்தரித்த, சைவசிகாமணி - சைவ சூளாமணியாகிய, முத்தி தேவன் - முத்திதேவனென்போன், அவன் தநயன் - அவன் மகன், மாயை நீங்கு - மாயை யொழிந்த, குணக்குன்று அனைய - குணமலைபோன்ற, சித்தநாதப்பெயரோன் - சித்தநாதனென்னும் பெயருடையோன், நிகழ்த்து - சொல்லப்பட்ட, அவன் பால் - அவ னிடத்தில், வாங்கு - வளைந்த, திரை - அலைகளையுடைய, கடல்கண் - கடலினிடத்து, மதி

போல் - சந்திரனுதித்தாற்போல, சிவயோகிப்பெயரோன் - சிவயோகியென்னும் பெயருடையவன், வந்து உதித்தான் - வந்துதோன்றினன், (எ - று.)

(வி - ரை.) சைவசிகாமணியென்றது சைவசமயிகட்குச் சிகாமணியென்றபடி. சிகாமணி, சூளாமணியென்பன முடி மணியையுணர்த்திற்று. நிகழ்த்தல் - சொல்லல். வாங்கல் - வளைதல். மதிபோலென்றதற்கேற்ப உதித்தான் என்றார். (ச)

சிவபத்தி யெனுமமுத மொடுவிளங்குஞ் சிவஞானத் திங்க ளீனு
முவமிக்க வரியதிருப் பாற்கடலாஞ் சிவயோகி யுலக முய்ய
அவவுற்ற வுளத்தினொடு காமிகமே முதலாய வாக மங்க
ணவையற்ற சிவபுரா ணங்களெனப் பட்டவெல்லா நயந்து பார்த்து.

(ப - ரை.) சிவபத்தி என்னும் அமுதமொடு - சிவபக்தியென்கிற அம்ருதத்துடன், விளங்கும் - பிரகாசிக்கிற, சிவஞானத்திங்கள் - சிவஞானமாகிய சந்திரனை, ஈனும் - பெற்ற, உவமிக்க அரிய - உவமித்தற்கரிதாகிய, திருப்பாற்கடல் ஆம் - திருப்பாற்கடல் போன்ற, சிவயோகி - சிவயோகியென்பவன், உலகம் உய்ய - உலகமுய்யும்பொருட்டு, அவா உற்ற உள்ளத்தினொடும் - விருப்பமுற்ற மனத்தினோடும், காமிகம் முதலாய ஆகமங்கள் - காமிக முதலாகிய ஆகமங்களையும், நவை அற்ற - குற்றமற்ற, சிவபுராணங்கள் என்னப்பட்ட எல்லாம் - சிவபுராணங்களென்று சொல்லப்பட்ட எல்லாவற்றையும், நயந்து பார்த்து - [illegible], (எ - று.)

(வி - ரை.) உவத்தல் - [illegible]). காமிகம் முதலா ஆகமங்களாவன:—காமிகம் முதல் வாதுளம் ஈறாகவுள்ள இருபத்தெட்டுமாம். சிவபுராணங்களாவன:—சைவம் முதல் பிரமாண்டம் ஈறாகவுள்ள பத்துமாம். அவா அவவெனக் குறுக்கல் பெற்றது. இச்செய்யுள் மேல்வரும் செய்யுட்களோடு முடிவதனால் குளகம் எனப்படும், "குளகம் பலபாட் டொருவினைகொள்ளும்" என்பதோத்தாகலின். ஏ - அசை. (ரு)

மறைநெறிகள் வழுவாம லயனெறிக டடுமாற மதிஞ ரெல்லா
மறிவமைதி பெறவீர சைவநெறி யனைத்துமொருங் கமைந்து காண
நிறைவுதரு மாகமவே தங்கள்புரா ணங்கடொறு நெற்றி நாட்டத்
திறைவனுமை யொடுமுருகற் கருளியதா யறிஞருள மிசைவ தாகி.

(ப - ரை.) மறைநெறிகள் - வேதமார்க்கங்கள், வழுவாமல் - தவறாமல், அயல்நெறிகள் தடுமாற - வேறுமார்க்கங்கள் தடுமாறவும், மதிஞர் எல்லாம் - அறிஞரெல்லாரும், அறிவு அமைதிபெற - ஞான நிறைவுபெறவும், வீரசைவநெறி அனைத்தும் - வீரசைவமார்க்கங்கள்யாவும், ஒருங்கு அமைந்துகாண - ஒருமிக்க அமைந்து தோன்றவும், நிறைவுதரும் - நிறைந்த, ஆகமவேதங்கள் புராணங்கள் தொறும் - ஆகமவேத புராணங்களிலெல்லாம், நெற்றி நாட்டத்து - நெற்றிக்கண்ணையுடைய, இறைவன் - சிவபெருமான், உமையொடு முருகற்கு அருளியதாய் - உமாதேவியோடு முருகனுக்கும் அருள்செய்ததாகி, அறிஞர் உள்ளம் இசைவது ஆகி - ஞானியர் மனத்திற் கிசைவதாகி, எ-று.

(வி - ரை.) மறைநெறி - வைதிகமார்க்கம். தடுமாற, அமைதிபெற, அமைந்துகாண என்பவற்றீற்றில் எண்ணும்மைகள் தொக்கன. நாட்டம் - கண், தொழிலாகுபெயர். உமையொடு முருகற்கு என்றது உமைக்கும், முருகற்கும் என்றபடி. (சு)

சங்கரசம் பிரதாய னயவிரே ணுகன்முனிவர் தங்கட் கெல்லாம்
புங்கவனு கியகலய முனிக்குரைத்த தாகியிவண் பொருந்தி யொன்று

தங்கடலை யிட்டவொரு நூறு * தலம் புணர்வீர சைவ நூலை
யிங்குரைசெய் தனனதனைத் தமிழ்ப்படுத்தி முறைபிறழா தியம்ப லுற்றேன்.

(ப - ரை.) சங்கர சம்பிரதாயன் ஆய - சங்கர சம்பிரதாயஸ்தனான, இரேணுகன் - இரேணுகமுனிவன், முனிவர்தங்கட்கு எல்லாம் - முனிவர்கட்கெல்லாம், புங்கவன் ஆகிய - சிரேஷ்டனாகிய, கலயமுனிக்கு - கும்பமுனிக்கு, உரைத்தது ஆகி - சொன்னதாகி, இவண்பொருந்தி - இவ்வுலகத்திற் பொருந்தி, ஒன்று - ஒன்றென்னு மெண்ணினை, தங்கள் தலையிட்ட - தங்களுக்கு முன்னேயிட்ட, ஒரு நூறுதலம்புணர் - ஒருநூறுதலங்கள் பொருந்தின, வீரசைவநூலை - வீரசைவநூலினை, இங்கு உரைசெய்தனன் - இவ்விடத்திற் சொல்லிவைத்தனன், அதனை - அந்த நூலை, தமிழ் படுத்தி - தமிழ்மொழியில் அமைத்து, முறை பிறழாது - முறை தவறாமல், இயம்பல் உற்றேன் - சொல்லத் தொடங்கினேன் (யான்), எ - று.

(வி - ரை.) கலயமுனி, கும்பமுனி யென்பன அகத்தியமுனிவர்க்கு நாமாந்தரங்கள். கலயம் கலசம் என்னும் வடசொற்றிரிபு. எண் - இலக்கம். தலை - முன். ஒன்று தங்கள் தலையிட்ட வொருநூறு தலம் என்றது நூற்றொருதலம் என்றவாறு. தலம் - இந்நூலினுட்பிரிவு. சங்கர சம்பிரதாயம் - ஈசுவர சிருஷ்டி. (எ)

## நூற்பெயர்.

முந்துறுமெச் சைவதந்தி ரங்களுக்கும் விளங்குதனி முடியாய் வீர
தந்திர முத் தரமாகித் தனக்குமே லிலாமையினாற் சாற்று நாமம்
நந்துறுசித் தாந்தசிகா மணியாகுஞ் சிவாத்துவித ஞானவாழ்வைப்
பந்தமறத் தருமிதன்கட் டிகழ்வீர சைவர்மனம் பட்டு நிற்கும்.

(ப - ரை.) முந்துறும் - எல்லாச்சமயங்களுக்கு முதன்மையாகிய, எச்சைவதந்திரங்களுக்கும் - எவ்வகைப்பட்ட சைவநூல்களுக்கும், விளங்கு - பிரகாசிக்கிற, தனி - ஒப்பற்ற, முடி ஆய் - சிரமாகி, வீரதந்திரம்-(இந்த) வீரசைவ நூலானது, உத்தரம் ஆகி - மேற்பட்டதாகி, தனக்குமேல் - தனக்குமேலே, இல்லாமையினால் - ஒன்றின்மை யுடைத்தாயிராமையால், சாற்றும் - சொல்லப்பட்ட, நாமம் - பெயர், நந்துறு - (நாட்கு நாள்) விருத்தியடைகிற, சித்தாந்த சிகாமணி ஆகும் - சித்தாந்த சிகாமணியென்று சொல்லப்படும், (இது) பந்தம் அற - பந்தம் ஒழிய, சிவாத்துவித ஞானவாழ்வைதரும் - சிவாத்வைத ஞானச்செல்வத்தைக் கொடுக்கும், இதன்கண் - இதனிடத்து, திகழ் - விளங்குகின்ற, வீரசைவர் மனம் - வீரசைவர் நெஞ்சானது, பட்டு நிற்கும் - பொருந்தியிருக்கும், எ - று.

(வி - ரை.) தந்திரம் - சித்தாந்த நூல். வாழ்வு - செல்வம். நந்தல் - விருத்தியடைதல். எல்லாச் சித்தாந்த நூல்களுக்கு முடிமணிபோன்று மேற்பட்டிருத்தலால், இதனை சித்தாந்த சிகாமணியென்றார். பந்தம் - பிறவிக்கட்டு. (அ)

---

* சச்சிதாநந்த லக்ஷண லக்ஷிதமான பரப்ரஹ்மம் மகத்தத்துவமுதலிய சமஸ்த தத்துவங்களுக்கு ஆஶ்ரயமா யிருத்தலானும், அத்தத்துவங்களைத் தன்னிடத்தி லடக்கிக்கொண்டிருத்தலானும், ஸ்தலம் என்று சொல்லப்படும். "ஸ்த" என்னும் சப்தத்திற்கு ஸ்தானம் என்றும், "ல" என்னும் சப்தத்திற்கு இலயம் என்றும் பொருளாம். ஸ்தலசப்த வாச்சியமான அப்பரப்ரஹ்மமே தன்னிடத்தில் இடையறாது வீறமாயிருக்கும் சிற்சத்தியின் ஸ்புரணத்தினால் நிஸ்தரங்க சமுத்திரத்தில் வாயுசலனத்தினால் அலைகள் பிறப்பனபோல, அங்கலிங்கமென்று இரண்டுவிதமாய் பின்னமாயிற்று. அங்கஸ்தலம் உபாசகமாகவும், லிங்கஸ்தலம் உபாசியமாகவும் ஏற்பட்டது. அந்த அங்கஸ்தலம் பக்தனாதியாக ஆறுவிதமாகவும், லிங்கஸ்தலம் ஆசாரலிங்கமாதியாக ஆறுவிதமாகவும் விபக்தமாயிற்று. ஒன்று இரண்டாகவும், இரண்டு பன்னிரண்டாகவும் விபக்த மானதுபோல, இத்தலம் நூற்றொன்றாய் விபாகிக்கப்பட்டிருக்கும்.

## அவையடக்கம்.

உலகின்மலி புகழ்படைத்த சிவயோகி தனதுபே ருணர்வி னாலே
மலைவதற வருளியவிச் சித்தாந்த சிகாமணியின் மதிசெ லுத்திக்
கலைமுழுது முணர்ந்தவர்மு னியான்மொழியக் கருதலொரு கடுகு நாட்டி
யலைகடலைக் கடைந்துசுவை யமுதெடுப்பக் கருதலொடொப் பாகு மன்றே.

(ப - ரை.) உலகில் - உலகின்கண், மலிபுகழ்படைத்த - மிக்க புகழைப்படைத்த, சிவயோகி - சிவயோகியென்பவன், தனதுபேர் உணர்வினாலே - தன் பேரறிவினாலே, மலைவு அற அருளிய - மயக்கமொழிய வருளிச்செய்த, இ சித்தாந்த சிகாமணியில் - இந்த சித்தாந்த சிகாமணியென்னும் நூலில், மதிசெலுத்தி - அறிவைச்செலுத்தி, கலைமுழுதும் உணர்ந்தவர்முன் - கலைகள் முற்றும் அறிந்தவர்க்கெதிரே, யான் மொழியக்கருதல் - நான் சொல்ல நினைத்தல், ஒருகடுகுநாட்டி - ஒருகடுகினை (தூணாக) நிறுத்தி, அலைகடலை கடைந்து - அலைகளையுடைய கடலைக்கடைந்து, சுவை அமுது எடுப்ப - சுவையுள்ள அமிர்தத்தை யெடுக்க, கருதலொடு - நினைத்தலோடு, ஒப்பு ஆகும் - இணையாகும், எ-று.

(வி - ரை.) மலிதல் - மிகுதல். கலை - நூல். நாட்டியென்பதற்கேற்ப தூணாகவென்பது வருவித் துரைக்கப்பட்டது. கலைமுழுது முணர்ந்தவர்முன் என்றதனால், யான் என்பதற்கு அக்கலையுணர்ச்சி சிறிதுமில்லாத யான் என்றுரைத்துக்கொள்க. (௯)

## ஆக்கியோன்பெயர்.

தலங்குலவு மலயமமர் கலயமுனிக் கிரேணுகன்றண் ணளியா லீந்த
நலங்குலவு சித்தாந்த சிகாமணியைத் தமிழ்க்கவியா னன்கு செய்தா
னிலங்குதமிழ்க் கடலையொரு நாவாயாற் கடந்துலக மிறைஞ்சா நின்ற [னே.
பொலங்கழலெம் பெருந்தகையாஞ் சிவப்பிரகா சையனெனும் பொருவி லா

(ப - ரை.) தலம் - உலகத்தில், குலவும் - விளங்குகின்ற, மலயம் - பொதிகைமலையில், அமர் - அமர்ந்திருக்கிற, கலயமுனிக்கு - கும்பமுனிக்கு, இரேணுகன் - இரேணுக முனிவன், தண்ணளியால் ஈந்த - பெருங்கருணையால் அருளிச்செய்த, நலம் குலவு - நன்மைவிளங்குகின்ற, சித்தாந்த சிகாமணியை - சித்தாந்த சிகாமணியென்னு மிந்நூலை, தமிழ்கவியால் - தமிழ்ப்பாடலால், நன்குசெய்தான் - நன்றாகச் செய்தருளினன், (அவன்யாவனெனின்,) இலங்கு - விளங்குகின்ற, தமிழ்கடலை - தமிழாகிய கடலினை, ஒருநாவாயால் - ஒருமரக்கலத்தினால், கடந்து - தாண்டி, உலகம் இறைஞ்சாநின்ற - உலகம் வணங்குகின்ற, பொலம் கழல் - பொற்கழலணிந்த, என் பெருந்தகை ஆம் - எனது பெருந்தகையாகிய, சிவப்பிரகாசையன் என்னும் - சிவப்பிரகாசையர் என்கின்ற, பொருவு இலான் - ஒப்பில்லாதவன், எ-று.

(வி - ரை.) தமிழ்க்கவியால் நன்குசெய்தான் என்றதனால் இது வடமொழியில் முன்னமே யுண்டென்பது பெறப்பட்டது. நாவாயால் என்பது கடல் என்பதற்கேற்ப மரக்கலமென்றும், தமிழ் என்பதற் கேற்ப வாயிலுள்ள நாவினாலென்றும் இருபொருள் பயந்து நின்றது. பொலம் - பொன். பெருந்தகை - பெருங்குணமுள்ளவன், இது ஆண்பாலில் வந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். (௧௦)

## பாயிரமுற்றும்.

---

# இரேணுகர் காதை.

## பிரபஞ்சோற்பத்தி.

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

ஆதியி லநாதி கன்மத் தாருயிர்க் குலக மாகச்
சேதந மயமா யொன்றுஞ் சித்தாந்த சிவன் றனது
பேதமில் சத்தி யாலே பெற்றதோர் மூர்த்தி யெய்தி
மாதொரு பாக னாகு மகேசனாய் வயங்கா நின்றான்.

(ப - ரை.) ஆதியில் - ஆதிகாலத்தில், அநாதிகன்மத்து - அநாதி கன்மத்தையுடைய, ஆர் உயிர்க்கு - நிறைந்த உயிர்களுக்கு, உலகம் ஆக - இருப்பிடமாக, சேதநமயம் ஆய் - அறிவுருவாகி, ஒன்று ஆம் - ஒரு பொருளாகிய, சித்தாந்த சிவன் - சித்தாந்த சிவபெருமான், தனது - தனது, பேதம் இல் - வேற்றுமையில்லாத, சத்தியாலே - சத்தியினால், பெற்றது - அடைந்ததாகிய, ஓர் மூர்த்தி எய்தி - ஓர்வடிவத்தை அடைந்து, மாது ஒரு பாகன் ஆகும் - மங்கை யொருபங்கினனாகிய, மகேசன் ஆய் - மயேச்சுரனாகி, வயங்கா நின்றான் - விளங்கா நின்றான், எ-று.

(வி - ரை.) அநாதிகன்மம் - பழவினை. சேதநம் - அறிவு. சத்தி - ஆற்றல். வயங்கல் - விளங்கல். தனது என்பதில் அது ஆறனொருமையுருபு. (க)

சந்திர மவுலி யெம்மான் சகமெலாம் படைக்கு முன்னம்
வந்துற விறைவ னாகு மலரயன் றன்னை நல்கி
யந்தமில் விச்சை யெல்லா மருளின னருளி னாலே
முந்துறு மயன் படைப்புத் தொழிலிடை முயற்சி பெற்றான்.

(ப - ரை.) சந்திர மவுலி - சந்திரசேகரராகிய, எம்மான் - எம்பெருமான், சகம் எல்லாம் படைக்கு முன்னம் - உலகமுழுதும் படைக்குமுன்னமே, வந்து உற - வந்து தோன்றும்படி, இறைவன் ஆகும் - இறைவனாகிய, மலர் அயன் தன்னை நல்கி - தாமரை மலரில் வசிக்கின்ற பிரம்மாவையுண்டாக்கி, அந்தம் இல் - முடிவில்லனவாகிய, விச்சை எல்லாம் - வித்தைகளெல்லாவற்றையும், அருளினன் - அருளிச்செய்தான், அருளினாலே - அவ்வருளைக்கொண்டு, முந்துறும்-முற்பட்ட, அயன் - பிரமன், படைப்பு தொழில் இடை - சிருட்டித்தொழிலில், முயற்சிபெற்றான் - முயன்றான், எ - று.

(வி - ரை.) சந்திரமவுலி இரண்டாம் வேற்றுமைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை, பிறையணிந்த திருமுடியையுடையவன் என்பது பொருள், மான் மஹான் என்னும் வடசொற்றிரிபு. சகம் ஜகம் என்னும் வடசொற்றிரிபு. தோன்றி யழிதன் மாலையது என்பது பொருள். இறைவன் - படைத்தற்றொழிற்குத் தலைவன். அயன் - அஜ: என்னும் வடசொற்றிரிபு, பிறவாதவன் என்பதுபொருள்; பிறப்பவனைப் பிறவாதவனென்றல் பொருந்துமாறென்னையெனின், இங்ஙனங்கூறல் மங்கலவழக்காதலாற் பொருந்துமென்க. நல்கல் - படைத்தல். விச்சை வித்யா என்னும் வடசொற்றிரிபு. அறமுதலிய நாற்பொருளையுமறிதற் கருவியாயுள்ளது என்பது பொருள். அயன் எனமேல்வருதலால் மலர் தாமரைமலரைக்குறித்தது. (உ)

சங்கர னாணை கொண்டு சகம்புரி தொழிலிற் புக்க
பங்கயன் மாயை மாலிற் பட்டளிக் குறுமு பாய
மங்குணர் கிலனாய் மீண்டு மரவணிப் பெருமான் பாதச்
செங்கம லங்கள் போற்றி நின்றிது செப்ப லுற்றான்.

(ப - ரை.) சங்கரன் ஆணைகொண்டு - சிவபெருமானுடைய ஆணையினால், சகம் புரி தொழிலில் புக்க - உலகம் படைக்குந்தொழிலில் பிரவேசித்த, பங்கயன் - பிரமன், மாயை மாலில் பட்டு - மாயை மயக்கத்திற் சிக்கி, அளிக்குறும் உபாயம் - சிருட்டிக்கும் உபாயத்தை, அங்கு உணர்கிலன் ஆய் - அங்கு அறியாதவனாய், மீண்டும் - மறுபடியும், அரவு அணி - சர்ப்பாபரணத்தையுடைய, பெருமான் - சிவபெருமானது, பாதம் - திருவடியாகிய, செம் கமலங்கள் - செந்தாமரை மலர்களை, போற்றிநின்று - வணங்கி நின்று, இது செப்பல் உற்றான் - இதனைச்சொல்லத் தொடங்கினான், எ - று.

(வி - ரை.) சங்கரன் - ஆன்மாக்களுக்கு இதம் செய்பவன். கொண்டு - மூன்றாவதன் சொல்லுருபு. ஆணை ஆஜ்ஞையென்னும் வடசொற்றிரிபு, கட்டளையென்பது பொருள். பங்கயன் - பங்கஜ: என்னும் வடசொற்றிரிபு, சேற்றிற்பிறப்பதென்பது பொருள்; ஆம்பல் முதலிய பிறவும் சேற்றிற்பிறப்பனவேயாயினும் காரணங்கருதியவழி அவற்றிற்கும் செல்லும், இடுகுறி கருதியவழி தாமரையொன்றற்கே செல்லுமாதலால் இதுகாரண விடுகுறிப்பெயர்; இதனை யோகரூடி நாமம் என்பர் வடநூலார். அரவணிபெருமான் எனப்பாடமோதி, சர்ப்பத்தை யாபரணமாகவணிந்த என்றுரைப்பினுமமையும். (ங)

தேவர்க டலைவ முக்கட் செல்வயான் முதலா யுள்ள
யாவையு மாக்க வல்ல விறைவமுற் றுணர்ந்த மேலோ
யோவரு மயலான் மாழ்கி யுணர்ந்திலேன் றமிய னேற்கு
மூவுல கினையு மாக்கு முபாயநீ மொழிதி யென்றான்.

(ப - ரை.) தேவர்கள் தலைவ - தேவர் பெருமானே, முக்கண் செல்வ - முக்கட்செல்வனே, யான் முதலாய் உள்ள யாவையும் - நான் முதலாயுள்ள எல்லாப்பொருள்களையும், ஆக்கவல்ல - படைக்கவல்ல, இறைவ - இறைவனே, முற்று உணர்ந்த மேலோய் - முழுதுமறிந்த மேலோனே, ஓ அரும் - நீங்குதலரிய, மயலால் மாழ்கி - மாயையால் மயங்கி, உணர்ந்திலேன் - அறிந்திலேன், தமியனேற்கு - தமியேனாகியவெனக்கு, மூ உலகினையும் - முச்சகத்தையும், ஆக்கும் - படைக்கின்ற, உபாயம் - தந்திரத்தை, நீ மொழிதி என்றான் - நீ சொல்லக்கடவையென்றான், எ - று.

(வி - ரை.) முற்றுணர்தல் - ஸர்வஜ்ஞத்வம். மாழ்கல் - மயங்கல். ஆக்கல் - படைத்தல். மூவுலகு என்றது ஸ்வர்க்க மத்ய பாதாளங்களை, க்ருதகம் அக்ருதகம் க்ருதகாக்ருதகம் என்று மூவகை யுலகங்களையெனினுமாம். (ச)

நான்முக னிதனைக் கூற நனையவிழ் கொன்றை வேணிக்
கூன்முக மதிய ணிந்த கொழும்பவ ளக்குன் றன்னான்
றான்முக மலர்ந்து ரைத்தான் சகம்புரி வகையு ரைத்துந்
தேன்முக மலரின் மேலோன் றெரிந்திலன் றியங்கிச் சொல்வான்.

(ப - ரை.) நான் முகன் - பிரமன், இதனை கூற - இதனைச்சொல்ல, நனை அவிழ் - அரும்பவிழாநின்ற, கொன்றை - கொன்றை மலர்மாலையணிந்த, வேணி - சடாபாரத்தில், கூன்முகம் - வளைந்த முகத்தையுடைய, மதி அணிந்த - சந்திரனையணிந்த, கொழும் பவளக் குன்று அன்னான் - கொழுமையாகிய பவளமலையை நிகர்த்தவனாகிய சிவபெருமான், சகம்புரிவகை - உலகம்படைக்கும் உபாயத்தை, முகம் மலர்ந்து உரைத்தான் -

முகமலர்ந்து சொல்லியருளினன், சகம் புரி வகை - உலகம் படைக்குமுபாயத்தை, உரைத்தும் - சொல்லியும், முகம் - தன்னிடத்து, தேன் - தேனையுடைய, மலரின் மேலோன் - தாமரை மலரின்மேல் இருப்பவனுகிய பிரமன், தெரிந்திலன் - அறிந்திலனுகி, தியங்கி சொல்வான் - மயங்கிச் சொல்வானுயினன், எ-று.

(வி - ரை.) கொன்றை - ஆகுபெயர். செந்திருமேனிய னுதலால் சிவபிரானைக் கொழும்பவளக் குன்றன்னுன் என்ருர். தேன்முகம் என்பதில் முகம் ஏழாவதனிடப் பொருளது. தியங்கல் - மயங்கல். தெரிந்திலன் - முற்றெச்சம். (ரு)

உலககா ரணப்ப டைப்பி னுபாயநீ யருளி னுலே
பலமுறை யுரைத்து நெஞ்சிற் பட்டதின் றமல நீமுன்
மலர்தலே யுலக மாக்கின் மற்றது கண்டு தேறி
யிலகுற வடிய னேன்பி னியற்றுவ லென்று சொன்னுன்.

(ப - ரை.) உலகம் - உலகத்தின், காரணம் - காரணமாகிய, படைப்பின் உபாயம் - படைப்புத்தந்திரத்தை, நீ அருளினுலே பலமுறை உரைத்தும்—, நெஞ்சில்பட்டது இன்று - என்மனத்திற் பட்டதில்லை, அமல - அமலனே, நீ—, முன் - முன்னே, மலர்தலை உலகம் - பரந்த இடத்தையுடைய உலகத்தை, ஆக்கின் - படைத்தால், அது கண்டு தேறி - அதைப் பார்த்துத் தெளிந்து, அடியனேன் - அடியேனும், இலகு உற - விளங்க, பின் இயற்றுவல் - பின்னே படைப்பேன், என்று சொன்னுன்—, எ-று.

(வி - ரை.) அமலன் - இயல்பாகவே மலமில்லாதவன்; மலம் ஈண்டு அபரிசுத்தத்தைக் குறித்தது; ஆணவம் மாயை காமியம் என்னு மும்மலங்களில்லாதவன் என்றலுமொன்று. மலர்தலை என்பதில் தலை ஏழாவதனிடப்பொருளது. தேறல் - தெளிதல். (சு)

ஈசுவரசிருஷ்டி.

விதியிது புகன்று நிற்ப மின்னவிர் சடையிற் கீற்று
மதிபுனை கடவு டன்போல் வளரொளி வடிவ ராகி
முதிரறி வுடைய ராகி முழுதையு மளித்த ழிக்கு
மதிசய நிலைய டைந்த கணங்களை யளித்தான் முன்னர்.

(ப - ரை.) விதி - பிரமனுனவன், இது புகன்று நிற்ப - இதனைச்சொல்லிநிற்க, மின் அவிர் சடையில் - மின்கொடிபோல விளங்குகின்ற சடையினிடத்து, கீற்றுமதி - பிறைச் சந்திரனை, புனை - தரித்த, கடவுள் - கடவுளாகிய சிவபெருமான், தன்போல் - தன்னைப் போலவே, வளர் ஒளி - மிக்கவொளியையுடைய, வடிவர் ஆகி - உருவுடையராகி, முதிர் அறிவு உடையர் ஆகி - முதிர்ந்த அறிவினையுடையவராகி, முழுதையும் - எல்லாப்பொருள்களையும், அளித்து - தோன்றுவித்து, அழிக்கும் - நாசஞ்செய்கிற, அதிசயநிலை அடைந்த - மேலான விசித்ர சக்தியை யடைந்திருக்கிற, கணங்களை - சிவகணங்களை, முன்னர் அளித்தான் - முன்னே படைத்தான், எ - று.

(வி - ரை.) விதி - வடசொற்றிரிபு, எல்லாவற்றையும் படைப்பவன் என்பதுபொருள். கீற்று மதி - பிளவுபட்ட சந்திரன் (பிறை). அளித்தல் - படைத்தல். (எ)

சாற்றுறுங் கணங்க டம்மு ளிரேணுக தாரு கப்பே
ரேற்றுள ரிருவ ரொங்க ளீசனுக் கினிய ரன்னே
ராற்றலை யாவ ராலு மறைந்திடற் கரியர் மாயை
மாற்றிடும் வலியர் விச்சை யாவையும் வல்ல ரம்மா.

(ப - ரை.) சாற்றுறும் - சொல்லப்பட்ட, கணங்கள் தம்முள் - சிவகணங்களுள்ளே, இரேணுக தாருகப்பேர் - இரேணுகன் தாருகன் என்னும் பெயர்களை, ஏற்றுஉளர் இருவர் -

பெற்றுளோர் இருவருளர், (அவர்கள்) எங்கள் ஈசனுக்கு இனியர் - எங்கள் ஈச்சுரனுக்கு இனியவர், அன்னோர் - அவர்களது, ஆற்றலை - வல்லமையை, யாவராலும் - எல்லாராலும், அறைந்திடற்கு அரியர் - சொல்லுதற்கு அரியவர், மாயை - மாயையை, மாற்றிடும் - ஒழிக்கத்தக்க, வலியர் - மனவுறுதியுடையவர், விச்சை யாவையும் வல்லவர் - வித்தைகளெல்லாவற்றிலும் வல்லவர், எ - று.

(வி - ரை.) சாற்றுறல் - சொல்லல், அறைந்திடல் - சொல்லல், இவ்விரண்டற்கும் முறையே சாற்றுறு அறைந்திடு என்பன பகுதிகள். அம்மா - வியப்பிடைச்சொல். (அ)

தெளிதரு முளத்தர் மாறாச் சிவாநந்த வமுத முண்டு
களிதரு நலத்தர் கல்விக் கடல்கரை கண்டோர் ஞான
வொளியினர் வேத சார முணர்ந்தவ ரகந்தை யில்லோர்
விளிவுற விடய மைந்து மெளிதென வென்ற வீரர்.

(ப - ரை.) தெளிதரும் உளத்தர் - தெளிந்தமனத்தை யுடையவர், மாறு சிவாநந்த அமுதம் உண்டு - ஒழியாத சிவாநந்தமாகிய அமிர்தத்தைப்புசித்து, களிதரு நலத்தர் - களிக்கின்ற நன்மையையுடையவர், கல்வி கடல்கரை கண்டோர்—, ஞான ஒளியினர் - ஞானப்பிரகாசத்தையுடையவர், வேதசாரம் உணர்ந்தவர்—, அகந்தை இல்லோர்—, விளிவுற - நாசமடையும்படி, விடயமைந்தும் - விஷயங்கள் ஐந்தும், எளிது என - எளிதாக, வென்ற - செயித்த, வீரர் - வீரத்தன்மையுடையவர், எ - று.

(வி - ரை.) தெளிதரும் என்பது ஒருசொல். தெளிதா பகுதி, களிதரு என்பதும் அது. அகந்தை - அகங்காரம். விடயமைந்து என்றது சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்பவற்றை. விளிவுறவிடயமைந்துமெளிதெனவென்ற வீரர் என்றமையால், விடயங்களைந்தனையும் வேறலருமையும் பிறவற்றை வேறல் வீரமன்றென்பதும் விளங்கின. (௯)

அனையவர் தம்மை நோக்கி யாலயத் துள்ளி லங்கும்
புனைமணி வாயில் காப்புப் புரிசடைக் கடவு ணல்க
வினிதென வவரு மேற்றவ் வேவலிற் சிறந்தோ ராகித்
தனிவிழி நுதலி மைக்குஞ் சங்கரன் பாலி ருந்தார்.

(ப-ரை.) அனையவர் தம்மை நோக்கி - அவர்களைப்பார்த்து, ஆலயத்துள் இலங்கும் - ஆலயத்துள்ளே விளங்குகின்ற, புனை - அலங்கரிக்கப்பெற்ற, மணி - இரத்தினமயமாகிய, வாயில் காப்பு - வாயிற்காவலை, புரிசடை - முறுக்கின சடையையுடைய, கடவுள் - சிவபெருமான், நல்க - நியமிக்க, அவரும் - அச்சிவகணத்தாரும், இனிது என ஏற்று - இனிதாக ஏற்றுக்கொண்டு, அ ஏவலில் - அந்தப்பணிவிடையில், சிறந்தோர் ஆகி - சிறந்தவராகி, தனிவிழி - ஒற்றைக்கண்ணானது, நுதல் இமைக்கும் - நெற்றியில் விளங்கப்பெற்ற, சங்கரன்பால் - சிவபெருமானிடத்து, இருந்தார்—, எ - று.

(வி - ரை.) ஆலயம் - கோயில். அவரும் என்றது இரேணுகன் தாருகன் என்பவரை. இமைத்தல் - பிரகாசித்தல். (௧0)

## கயிலைச்சிறப்பு.

கலிநிலைத்துறை.

வேத னிந்திரன் செங்கண்மால் புன்புகழ் மேவி
யோதி மங்களி றுவண னு யவர்தமை யுயர்த்த
வாதி யம்பிகை நாயகன் பெரும்புக ழவனைக்
காதல் கொண்டுதாங் குற்றது போன்றது கயிலை.

(ப - ரை.) வேதன் - பிரமன், இந்திரன்—, செங்கண் - செந்தாமரைக்கண்ணை யுடைய, மால் - திருமால், (என்பவர்) புன் புகழ் மேவி - அற்பமான புகழையடைந்து, (முறையே) ஓதிமம் - அன்னமும், களிறு - ஐராவதமென்னும் யானையும், உவணன் - கருடனும், ஆயவர்தமை - அன்னோரை, உயர்த்த - தாங்காநிற்க, கயிலை - கயிலாயமலையா னது, ஆதி - முதன்மையுள்ள, அம்பிகைநாயகன் - உமாபதியாகிய சிவபிரானது, பெரும் புகழ் - பெரும்புகழானது, அவனை - அச்சிவபிரானை, காதல்கொண்டு - ஆசைகொண்டு, தாங்குற்றது போன்றது - சுமக்கலுற்றதை நிகர்த்திருந்தது எ - று.

(வி - ரை.) வேதாதிகாரி யாதலால் பிரமனை வேதன் என்முர். இந்திரன் - பெருஞ் செல்வமுடையவன். ஆயவர்தமை யென்றது பிரமன் முதலிய மூவரை. புகழ் வெண்மை யாதலால் கயிலாயமலைக் குவமையாயிற்று. (கக)

தெள்ளு சோதியங் கயிலைமால் வரையினிற் சிறிது
வெள்ளி தான்கொடு திசைமுகக் கம்மியன் விரகா
லள்ளி வானிருள் விழுங்குவா னமைத்ததொன் றன்றோ
வெள்ளு ருமதி யென்பதிவ் வுலகங்க ளெல்லாம்.

(ப - ரை.) திசைமுகக்கம்மியன் - பிரமனாகியகம்மாளன், தெள்ளு - தெளிவாகிய, சோதி - ஒளியையுடைய, அம் - அழகாகிய, மால் - பெரிய, கயிலைமலையினில் - கயிலைமலை யில், சிறிது வெள்ளிகொடு - சிறிது வெள்ளியை யெடுத்து, விரகால் - தந்திரத்தால், வான் இருள் - பேரிருளை, அள்ளி விழுங்குவான் - வாரி யுண்ணும்பொருட்டு, அமைத்த - அமைத்துவைத்ததாகிய, ஒன்று அன்றோ - ஒருபொருளையல்லவா, இ உலகங்கள் எல் லாம் - இந்தவுலகத்தாரெல்லாரும், எள் உறு - பழிக்கப்படாத, மதி என்பது - சந்திர னென்று சொல்லுவது, எ - று.

(வி - ரை.) திசைமுகன் என்றது நான்கு முகங்களையுடையவனென்று குறிப்பித்தற் கென்க, திசைநான்காதலான். உலகம் - ஆகுபெயர். எள்ளல் - பழித்தல். தான் - அசை.

சபாமண்டபச்சிறப்பு.

அன்ன மாகயி லாயமோ ரருமறை யாகச்
சென்னி மாமொழி யாகுமோர் செம்பொனு லியன்ற
தன்னை நேர்மணி மண்டபத் தரியணை தன்னின்
முன்ன மோர்பக லுமையொடு முதல்வன்வீற் றிருந்தான்.

(ப - ரை.) அன்ன - அத்தன்மைத்தாகிய, மாகயிலாயம் - பெரிய கயிலாய மலையா னது, ஓர் அருமறைஆக - ஒப்பற்ற அரியவேதமாக, சென்னி - தலைமைபெற்ற, மா - அழ காகிய, மொழி ஆகும் - சொற்களாகிய, ஓர் செம்பொன்னால் இயன்ற - ஒரு செம்பொன் னாலமைக்கப்பட்ட, தன்னைநேர் - தன்னைத்தானே நிகர்த்த, மணிமண்டபத்து - ரத்நமண் டபத்தில், அரி அணை தன்னில் - சிங்காசநத்தின்மீது, முன்னம் - முற்காலத்தில், ஓர்பகல் - ஒருநாள், முதல்வன் - தலைவனாகிய சிவபெருமான், உமையொடு வீற்றிருந்தான்—, எ-று.

(வி - ரை.) அரி - சிங்கம். முதல்வன் என்பதில் வகரம் மெய்யீற்றுடம்படுமெய்; உடம் படு மெய்யல்லாத மெய்யெனவுங்கூறுப. (கரு)

மகாசபை கூடுதல்.

இந்தி ரன்சுர ரரியய னியக்கர்கந் தருவர்
சந்தி ரன்கதி ருரகர்சித் தர்கள்விறற் றகுவர்
முந்து றுங்கண நாயகர் முனிவரர் வசுக்கள்
வந்து கண்டன ருமையொடு பரமனை மகிழ்ந்து.

**(ப - ரை.)** இந்திரன்—, சுரர்—, அரி - விஷ்ணு, அயன் - பிரமன், இயக்கர்—, கந்தருவர்—, சந்திரன்—, கதிர் - சூரியன், உரகர்—, சித்தர்கள்—, விறல் - வெற்றியையுடைய, தகுவர் - தைத்தியர், முந்துறும் - முற்பட்டு நிற்கிற, கணநாயகர் - கணநாதர், முனிவரர்—, வசுக்கள்—, (என்பவர் யாவரும்) மகிழ்ந்து வந்து - சந்தோஷித்துவந்து, உமையொடு பரமனை கண்டனர்-உமாதேவியோடுகூடி யெழுந்தருளியிருக்கிற சிவபிரானை கண்டார்கள், எ - று.

**(வி - ரை.)** சுரர் - தேவர், இதுவடசொல்லாதலால் இதற்கு ஐசுவரியமுடையவரென்றும், நன்றாய் பிரகாசிப்பவரென்றும், பக்தியால் சமர்ப்பித்த ஹவிஸ் முதலானவற்றை நன்றாயேற்றுக்கொள்வோரென்றும், சுபத்தைச்சொல்வோ ரென்றும், பாற்கடலிற்றோன்றின அமிர்தத்தை யுடையவரென்றும், விரும்பினபொருளைத் தருவோரென்றும் பொருள் கூறுவர் வடநூலார். இயக்கர் - யக்ஷர். உரகர் - நாகர். (கச)

கலிவிருத்தம்.

பாடுவர் சிலர்சிலர் பணிவர் முன்னர்நின்
றாடுவர் சிலர்சில ரார்ப்பர் மென்மலர்
சூடுவர் சிலர்சிலர் துதிப்ப ரன்பினால்
வாடுவர் சிலர்சிலர் மகிழ்ந்து வாழ்த்துவார்.

**(ப-ரை.)** சிலர்பாடுவர்—, சிலர்பணிவர்—, சிலர் முன்னர்நின்று ஆடுவர்—, சிலர்—, ஆர்ப்பர் - ஆரவாரிப்பர், சிலர்மென்மலர் சூடுவர் - சிலர் மெல்லியமலர்களைச் சூட்டுவர், சிலர் துதிப்பர்—, அன்பினால்—, சிலர்வாடுவர்—, சிலர் மகிழ்ந்து வாழ்த்துவார்—, எ-று.

**(வி - ரை.)** பணிதல் - வணங்குதல். ஆர்த்தல் - பேரொலிசெய்தல். துதித்தல்-தோத்திரஞ்செய்தல். (கரு)

இன்னண மிவர்பல வியற்றல் கண்டுமை
தன்னொடு மரியணை தன்னின் மேவிய
மின்னவிர் சடையினன் விளங்கு பேரவை
முன்னுற நிகழ்ந்ததோர் முறைமை கூறுவாம்.

**(ப - ரை.)** இன்னணம் - இவ்வண்ணமாக, இவர் - இவர்கள், பல இயற்றல்கண்டு - பலவற்றைச்செய்தல் பார்த்து, உமைதன்னொடும்—, அரியணை தன்னில் மேவிய - சிங்காசநத்திலெழுந்தருளியிருந்த, மின் அவிர் - மின்கொடிகள்போல விளங்குகிற, சடையினன்- சடாபாரத்தையுடைய சிவபிரானது, விளங்கு பேர் அவை - (முன்) விளங்குகின்ற பெரிய சபையில், உற - மிகுதியாக, நிகழ்ந்தது - நடந்ததாகிய, ஓர்முறைமை கூறுவாம் - ஒரு முறைமையைச் சொல்லுவோம், எ - று.

**(வி - ரை.)** இன்னவண்ணமெனற்பாலது இன்னணம் என விகாரமாயிற்று. முன் - ஏழனுருபு. (கசு)

அண்டர்க டமக்கெலா மரிய தன்கவுட்
கொண்டருண் மெல்லிலை கொடுப்ப நாற்கடல்
கண்டிடு மிரேணுக கணேச னென்பவற்
பண்டுறு முவகையாற் பரன ழைத்தனன்.

**(ப-ரை.)** அண்டர்கள் தமக்கு எல்லாம் - தேவர்களுக்கெல்லாம், அரிய - அரிதாகிய, தன் கவுள் கொண்டருள் - தன் கதுப்பிற்கொண்டருளின, மெல் இலை - மெல்லிலையை, கொடுப்ப - கொடுக்கும்பொருட்டு, நாற்கடல் கண்டிடும் - நாற்கடற்கரையைக்கண்ட, இரேணுக கணேசன் என்பவன் - இரேணுக கணேசன் என்பவனை, பண்டு உறும் உவகையால் - பழமையாகிய சந்தோஷத்தினால், பரன் - சிவபெருமான், அழைத்தனன்—, எ-று.

(வி - ரை.) அண்டம் - விண்ணுலகாதலால் அதிலுள்ளாரை அண்டர் என்றார். கவுள் - கபோலம். கடல் என்றது கடற்கரையை. கணேசன் - கணநாதன். தன் கவுள்கொண்டருள் மெல்லிலை - தாம்பூலப்பிரசாதம். (கஎ)

அழைத்தரு ளுவகையா லவ்வி ரேணுகன்
றழைத்துயர் கல்வியந் தாரு கன்றனைப்
பிழைத்தனன் கடந்துநம் வினைபி ழைப்பவே
மழைத்திரு மிடற்றிறோன் மருங்கு வந்தனன்.

(ப - ரை.) அழைத்தருள் - அழைத்தருளின, உவகையால் - சந்தோஷத்தால், அ இரேணுகன் - அந்த இரேணுகன், தழைத்து உயர் - செழித்துயர்ந்த, கல்வி - கல்வியினையுடைய, அம் - அழகிய, தாருகன் தன்னை - தாருகனை, பிழைத்தனன் - பகைத்தவனாய், கடந்து - அவ்விடம்விட்டு, நம் வினை பிழைப்ப - நமது வினைகெட, மழை - மேகம்போன்ற, திருமிடற்றிறோன் - திருமிடற்றையுடையவனாகிய சிவபெருமானது, மருங்கு - பக்கத்தில், வந்தனன் - வந்தான், எ - று.

(வி - ரை.) மிடறு - கண்டம். (கஅ)

மிடைந்திடு தனதுபே ரவையின் மெய்யுணர்
வடைந்திடு தாருக நாமத் தன்பனைக்
கடந்துறு மிரேணுக கணேசற் பார்த்திது
மடங்கலந் தவிசுறை வள்ளல் கூறுவான்.

(ப - ரை.) மிடைந்திடு - நெருங்கின, தனது பேர் அவையில் - தனது பெரியசபையில், மெய் உணர்வு அடைந்திடு - மெய்யறிவுபெற்ற, தாருக நாமத்து - தாருகனென்னும் பெயரையுடைய, அன்பனை—, கடந்துறும் - கடந்துவந்த, இரேணுக கணேசன் பார்த்து - இரேணுக கணேசனை நோக்கி, அம் மடங்கல் தவிசு உறை - அழகாகிய சிங்காசநத்தில் வீற்றிருந்த, வள்ளல் - சிவபிரான், கூறுவான் - சொல்வானாயினன், எ - று.

(வி - ரை.) மிடைதல் - நெருங்குதல். அவை - சபை. கடத்தல் - அவமதித்தல். மடங்கல் - சிங்கம். தவிசு - ஆசநம். இம்மை மறுமை வீடு என்னும் எல்லாவற்றையுந் தந்தருள் செய்கிற பரமோதாரனாதலால் சிவபெருமானை 'வள்ளல்' என்றார். (ககூ)

மதியுறு மிரேணுக மன்னு பேரவை
யிதிலெம தடிமையா யிலங்கு தாருகற்
கதிதரு காலினாற் கடக்கப் பட்டதென்
விதிதவ றினையென விளம்பன் மேயினான்.

(ப - ரை.) மதி உறும் இரேணுக - அறிவையுடைய இரேணுகனே, மன்னு - நிலைபெற்ற, பேர் அவை இதில் - பெருஞ்சபையாகிய இதில், எமது அடிமையாய்—, இலங்கு - விளங்குகிற, தாருகன்-தாருகனை, கதி தரு காலினால் - வேகத்தோடுகூடிய காலினால், கடக்கப்பட்டது என் - அவமதித்தற்குக் காரணம் யாது, விதி தவறினை என - விதி தவறினாயென்று, விளம்பல் மேயினான் - சொல்லத்தொடங்கினான், எ - று.

(வி - ரை.) மதி உறும் என்பதற்கு அறிவு மிகுந்த என்றுரைப்பினுமாம். கதி - நடை, அது இங்கு விரைநடைக்காயிற்று. விதி - சாத்திரநியமம். (உ0)

## சிவபக்தர்கள்மகிமை.

கருதுநம் பத்தரைக் கடத்தல் கேட்டினுக்
கொருதனி மூலமா முடம்பி னுயுறு
மரிதுறு செல்வமுங் குலமு மன்றுதாம்
பெரிதுறு கீர்த்தியும் பெயர்த்த ழிக்குமால்.

(ப - ரை.) கருதும் - யாவரும் மதித்தற்குரிய, சம்பத்தனை கடத்தல்—, கேட்டினுக்கு - கெடுதிக்கு, ஒருதனி மூலமாய்—, உடம்பின் ஆயுளும் - உடம்போடுகூடி வாழ்தற்குரிய வாழ்நாளையும், அரிது உறு செல்வமும் - அரிதாகிய மிக்கசெல்வத்தையும், குலமும் - குலத்தையும்—, அன்று - அன்றி, தாம்—, பெரிது உறு - மிகுதியாயடைந்திருக்கிற, கீர்த்தியும் - கீர்த்தியையும், பெயர்த்து அழிக்கும் - நிலைபெயர்த்து அழித்துவிடும், எ - று.

(வி - ரை.) கடத்தல் - இகழ்தல். மூலம் - காரணம். கடத்தல், அழிக்கும் எனவியைத்துரைத்துக்கொள்க. உம்மைகள் எண்ணின்கண்வந்தன. அன்றியென்பது அன்று எனத்திரிந்து வந்ததனால் தகரம் இயல்பாயிற்று. (உக)

கழிந்துள மயலின்மார்க் கண்ட னாகுமென்
றொழும்புடை யவனைமுன் றொடர்ந்தி கழ்ந்தென
தெழுங்கழ லுதையினா லின்று முள்ளுறு
தழும்புறு முடலினன் றண்ட னாயினான்.

(ப - ரை.) தண்டன் - யமனானவன், கழிந்துள்ள மயலின் - மிகுந்துள்ள செருக்கினால், மார்க்கண்டன் ஆகும் - மார்க்கண்டனாகிய, என் தொழும்புடையவனை - என்தொண்டனை, முன் - முற்காலத்தில், தொடர்ந்து இகழ்ந்து - தொடர்ந்து அவமதித்து, எனது—, எழும் - எழுந்த, கழல் உதையினால் - காலுதையினால், இன்றும்—, உள்ளுறு - நினைத்தற்குரிய, தழும்பு உறும் - வடுப்பொருந்திய, உடலினன் ஆயினான்—, எ - று.

(வி - ரை.) தண்டாயுதத்தையுடையவனாதலால், யமனை, 'தண்டன்' என்றார். கழிந்துள மயலின் மார்க்கண்டன் என்பதற்கு மாயை மயக்கொழிந்திருக்கிற மார்க்கண்டன் என்றுரைத்தலுமாம். உடலினன் - உடம்பையுடையவன். (உஉ)

தறிபவ மரமுடைச் சங்கு கண்ணனு
மறிவுணர் பிருகுவு மாமென் றொண்டராற்
பறிபடு தலையனாய்ப் பவங்கள் பத்தினு
மறிபடு மாலென மதித்தி டாய்கொலோ.

(ப - ரை.) தறி - வெட்டப்பட்ட, பவம் - பிறவியாகிய, மரம் உடை - மரத்தையுடைய, சங்குகண்ணனும்—, அறிவு உணர் - அறிவையறிந்த, பிருகுவும்—, ஆம் - ஆகிய, என்தொண்டரால்—, மால் - திருமாலானவன், பறிபடுதலையன் ஆய் - தலைபறியுண்டவனாய், பவங்கள் பத்தினும் - பத்துப்பிறவிகளிலும், மறிபடும் என - மீட்டு மீட்டும் பிறந்துழல்வானானென்று, மதித்திடாய்கொலோ - மதித்திலையோ, எ - று.

(வி - ரை.) தறிபவமரம் உடைச்சங்குகண்ணன் என்பதற்கு பிறவியாகிய மரத்தை வெட்டின சங்குகண்ணன் எனப்பொருள்கொள்க. சங்குகர்ணன் - ஓர்சிவபக்தன். தொண்டரால் என்பது தொண்டர்களுக்குக் கெடுதி இழைத்ததனால் என்க. (உங)

திருமறு மார்பன்முன் செய்ய வென்றொழும்
புரமுறு ததீசியா லொடிந்த நேமியான்
பொருமற மிழந்தனன் புகழ்க்க ணேசரால்
வருமறி முகமொடு தக்கன் மாழ்கினான்.

(ப - ரை.) திருமறுமார்பன் - திருமாலானவன், முன் - முற்காலத்தில், செய்ய என் தொழும்பு - செவ்விய என்தொண்டின், உரம் உறு - வலிபெற்ற, ததீசியால்—, ஒடிந்த நேமியான் - சக்கரம் ஒடிந்தவனாய், பொரும் - போர்செய்தற்குரிய, மறம் இழந்தனன் - வீரத்தன்மையை யிழந்தான், புகழ் - புகழையுடைய, கணேசரால்—, தக்கன்—, வருமறி முகமொடு - கிடைத்த ஆட்டுத்தலையோடு, மாழ்கினான் - மயங்கினான், எ - று.

(வி - ரை.) திருமறுமார்பன் - இலக்குமியையும், ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவையும் உடைய மார்பையுடையவன். ததீசி - ஓர் முனிவன், இவன் இந்திரனுக்கு தன்முதுகெலும்பைக்கொடுக்க அதைக்கொண்டு அவன் நூறு முனைகளுள்ள வச்சிராயுதத்தைச் செய்துகொண்டு தன்பகைவரெல்லாரையும் வென்றானாதலாலும், பரோபகாரார்த்தமாகத் தன்முதுகெலும்பைத்தந்துயிர் துறந்தானாதலாலும், இம்முனிவன் பெருங்கொடையாளன் எனப்பெயர் பெற்றனன். கணேசரால் - கணநிபர்களையும் பக்தர்களையும் அவமதித்தலினால் என்க. (உச)

தகுஞ்செய லுடையநஞ் சுவேதன் றன்னைமுன்
னிகழ்ந்தனன் மறலியெம் மாலெ ரிந்தனன்
புகன்றிடி னின்னுநம் பொருவி றொண்டரா
லுகுந்திற லுடையவ ருளர நேகரே.

(ப - ரை.) தகும் - தக்க, செயல் உடைய - செய்கையையுடைய, நம் - நமது, சுவேதன்றன்னை—, முன் - முற்காலத்தில், மறலி - யமனானவன், இகழ்ந்தனன் - இகழ்ந்து, எம்மால் எரிந்தனன்—, புகன்றிடின் - சொல்லுமிடத்து, இன்னும் - மேலும், நம்-நமது, பொருவு இல் - ஒப்பில்லாத, தொண்டரால்—, உகும் - இழந்த, திறல் உடையவர் - வலியுடையவர், அநேகர் உளர்—, எ - று.

(வி - ரை.) சுவேதன் - காளாஞ்சநம் என்னும் புண்யதீர்த்தக்கரையிலே சிவனைநோக்கித் தவஞ்செய்திருந்தபோது யமன்வந்து பிடித்துப்போகக்கண்ட சிவபெருமான் யமனையுதைத்து விடுவிக்கப்பெற்ற ஒருராஜரிஷி. இகழ்ந்தனன் - முற்றெச்சம். உகுந்திறலுடையவர் - வலியிழந்தவர். (உரு)

## இரேணுகர் அவதரிக்கும் காரணம்.

சாதமி றாருகன் றனைக்க டந்தனை
யாதலி னிரேணுக வரவு தாங்குறு
மேதினி தனிலொரு பிறப்பு மேவென
வோதின னடியவர்க் குதவி செய்பவன்.

(ப - ரை.) சாதம் இல் - பிறவியில்லாத, தாருகன்றனை கடந்தனை ஆதலின் - தாருகனைக்கடந்தாயாதலால், இரேணுக - இரேணுகனே, அரவு தாங்குறும் - ஆதிசேடனால் சுமக்கப்பட்ட, மேதினி தனில் - பூமியில், ஒரு பிறப்பு மேவு என - ஒருபிறவி யெடுக்கக்கடவை யென்று, அடியவர்க்கு உதவி செய்பவன் - சிவபெருமான், ஓதினன் - சொல்லியருளினான், எ - று.

(வி - ரை.) சாதம் ஜாதம் என்னும் வடசொற்றிரிபு. தாங்குறுமேதினி என மேல் வருதலால் அரவு ஆதிசேடனை யுணர்த்திற்று. (உசு)

அறத்தனி முதல்வநீ யழைக்கு மோகைதான்
பெறப்பெறு மடியனேன் பேதைத் தன்மையாற்
சிறப்புறு தாருகற் கடந்த தீமையைப்
பொறுத்தரு ளெனவடி பணிந்து போற்றினான்.

(ப - ரை.) அறம் - தருமவுருவினனாகிய, தனிமுதல்வ - ஒப்பற்ற முதல்வனே, நீயழைக்கும்-நீயழைக்கின்ற, ஓகைதான் - உவகையையே, பெறப்பெறும்-பெறப்பெற்ற, அடியனேன் - அடியேனது, பேதைத்தன்மையால் - அறியாமையால், சிறப்பு உறு - சிறப்புப் பொருந்திய, தாருகன் கடந்த - தாருகனை அவமதித்த, தீமையை—, பொறுத்தருள் என—, அடிபணிந்து போற்றினான்—, எ - று.

(வி - ரை.) ஓகை உவகை யென்பதன் சிதைவு. அறவாழியந்தணனுதலால் சிவபிரானை 'அறத்தனி முதல்வ' என்றார். (உஎ)

அருந்துயர் வடிவமா யகன்ற மண்ணிடை
வருந்துறு பிறவியை மன்னி நின்னையான்
பிரிந்தன னலமரும் பெற்றி யென்கொலோ
திருந்தடி யவரிடர் தீர்க்கு மெந்தையே.

(ப - ரை.) திருந்து - திருந்திய, அடியவர் - தொண்டரது, இடர் - துன்பத்தை, தீர்க்கும் - ஒழிக்கின்ற, எந்தையே—, அருதுயர்வடிவம் ஆய் - அரிய துன்பவுருவாய், அகன்ற - பரந்த, மண்ணிடை - மண்ணுலகில், வருந்துறு - வருந்துதற்குரிய, பிறவியை—, மன்னி - அடைந்து, யான் - நான், நின்னைபிரிந்தனன் - உன்னைப்பிரிந்து, அலமரும் பெற்றி - உழலுந்தன்மை, என்கொலோ - யாதோ, எ - று.

(வி - ரை.) எந்தை என்தந்தை யென்பதன் மரூஉ. பிரிந்தனன் - முற்றெச்சம். அலமரும் என்பதற்குப்பகுதி அலமா. (உஅ)

மானிடப் பிறவியை மயக்கு மண்ணிடை
யானெடுத் திடாவகை யருள்செ யென்றலுந்
தேனெடுத் திதழவிழ் செய்ய கொன்றையோன்
றானுளத் தருளினாற் சாற்றன் மேயினான்.

(ப - ரை.) மயக்கும் - மயக்குகிற, மண்ணிடை - பூமியில், யான்—, மானிடப்பிறவியை எடுத்திடாவகை - மானிடப்பிறப்பை யெடுக்காதபடி, அருள்செய் என்றலும் - அருள் செய்க்கடவை யென்று சொல்லுதலும், தேன் எடுத்து - தேனையுடையதாய், இதழ் அவிழ் - இதழ்விரிகின்ற, செய்ய கொன்றையோன் - செவ்விய கொன்றைமலர் மாலையை யுடையவனாகிய சிவபிரான், உள்ளத்து அருளினால்—, சாற்றல் மேயினான் - சொல்லலுற்றான், எ - று.

(வி - ரை.) செய்ய - அழகிய. கொன்றை - ஆகுபெயர். (உகூ)

என்னிக ரிரேணுக வின்று மண்ணிடைத்
துன்னுறு பிறவியாற் றுயர மெய்தலை
யென்னடி யவர்தமக் கெவ்வி டத்தினு
மின்னல்வந் தடைகுவ தில்லை யில்லையே.

(ப - ரை) என்நிகர் - என்னைநிகர்த்த, இரேணுக - இரேணுகனே, இன்று - இப்பொழுது, மண்ணிடை - மண்ணுலகில், துன்னுறு பிறவியால் - எடுக்கிற பிறப்பினால், துயரம் எய்தலை - துன்பமடைய மாட்டாய், என் அடியவர்தமக்கு - என் தொண்டருக்கு, எவ்விடத்தினும்—, இன்னல் - துன்பமானது, வந்து அடைகுவது இல்லை இல்லை—, எ - று.

(வி - ரை.) மண் - ஆகுபெயர். அடியவர்தமக்கு என்பதில் தம், அ, சாரியைகள். இல்லையில்லை யென்ற அடுக்கு வற்புறுத்தற்பொருட்டு. (௩0)

கண்டவர் தமக்கெலாங் கயிலை காட்டுறும்
வண்டவர் பருப்பத மலையைத் தென்றிசை
கொண்டுளா தெலுங்கினிற் கொல்லி பாகமென்
றெண்டல மொன்றுளா துரைப்பி னாயிடை.

(ப - ரை.) கண்டவர்தமக்கு எல்லாம் - தன்னைத்தரிசித்தவரெல்லாருக்கும், கயிலை காட்டுறும் - கயிலாய வாழ்வைத் தருகிற, வள் தவர் - வளவிய தபோதார் வாழ்கின்ற, பருப்பத மலையை - ஸ்ரீபர்வதத்தை, தென் திசை கொண்டு உள்ள - தென்பக்கத்திற்

கொண்டிருக்கிற, தெலுங்கினில்-தெலுங்கதேசத்தில், கொல்லிபாகம் என்று—, ஓர் தலம் ஒன்று உளது - ஒப்பமாகிய தலமொன்றுண்டு, உரைப்பின் - சொல்லுமிடத்து, ஆயிடை - அவ்விடத்தில், எ - று.

(வி - ரை.) காட்டுறும் ஒருசொல். தலம் - திவ்யக்ஷேத்திரம். அவ்விடை யென்னுஞ் சுட்டு நீண்டு யகரந்தோன்றிற்று. இச்செய்யுள் மேல்வரும் செய்யுளோடு முடிதலால் குளகம். ஆயிடை மன்னுதி யெனவியையும். ஒப்பம் - அழகு. பருப்பதமலை, கொல்லிபாகம் முறையே ஸ்ரீசைலம், கொல்லிபாக்கம் என்று வழங்கிவருகின்றன. வீரசைவ சமயாசாரியர் ஐவருக்குரிய குருபீட சிம்மாசனங்களில் பர்வத சிம்மாசனம் ஒன்று. (௫க)

என்னுரு வாயசோ மேச னென்னவோர்
தன்னிகர் பரசிவ லிங்கந் தங்குமா
லன்னதின் மானிடப் பிறவி யன்றியே
மன்னுதி யுலகெலாம் வியக்கும் வண்ணமே.

(ப - ரை.) என் உரு ஆய - என் வடிவாகிய, சோமேசன் என்ன - சோமேசனென்று சொல்லத்தக்கதாய், ஓர் - ஒரு, தன் நிகர் - தன்னைத்தானே நிகர்த்த, பரசிவலிங்கம் - பரசிவலிங்கமானது, தங்கும் - இருக்கும், அன்னதில் - அந்த இலிங்கத்தில், மானிடப்பிறவி அன்றி—, உலகு எல்லாம் - உலகமுழுதும், வியக்கும் வண்ணம் - ஆச்சரியப்படும்படி, மன்னுதி - நிலைபெற்றிருக்கக்கடவை, எ - று.

(வி - ரை.) மானிடப்பிறவியன்றி - மனிதப்பிறப்பிற்பிறவாமல். வியத்தல் - ஆச்சரியப்படுதல். மன்னல் - நிலைபெறல். ஆல் - அசை. (௫உ)

மறையொடு மறைமுடி மதம தாகுமென் 1.11.13
னிறையுமத் துவிதநூ னிலத்தி லியாவரு
மறிவுற மொழிதியென் னடியர் மேன்மையுங்
குறைவிலென் மேன்மையுங் கொடுத்தி யெங்கணும்.

(ப - ரை.) மறையொடு - வேதத்தோடு, மறைமுடி மதமாகும் - வேதாந்த மதமாகின்ற, என் - எனது, நிறையும் அத்துவிதநூல் - நிறைந்த அத்வைத சாத்திரத்தை, நிலத்தில் - இவ்வுலகத்தில், யாவரும் - எல்லோரும், அறிவுற - அறியும் வண்ணம், மொழிதி - சொல்லக்கடவை, என் அடியர் மேன்மையும்—, குறைவு இல் - குறைவில்லாத, என் மேன்மையும்—, எங்கணும் கொடுத்தி-எவ்விடத்தும் வியாபிக்கச் செய்வாயாக, எ-று.

(வி - ரை.) மறையொடு மறைமுடிமதம் என்றது வேதசம்மதமான மதம் - வேதசிரமானமதம் எனக்கோடற்கு. என்னிறையு மத்துவிதம் என்றது சிவாத்வைதத்தை. (௫௩)

## இரேணுகர் உலகில் வருதல்.

அங்கண னிவ்வகை யருள மெல்லடிப்
பங்கய முடிமிசை படவி றைஞ்சியே
யெங்கண நாயகன் விடைகொண் டெய்தினன்
பொங்கொலி யுததிசூழ் புவியை நோக்கியே.

(ப - ரை.) அங்கணன் - சிவபெருமான், இவ்வகை அருள - இவ்வண்ணம் அருளிச்செய்ய, (அவனது) மெல் - மென்மையாகிய, அடி பங்கயம் - திருவடித்தாமரைமலர், முடிமிசை பட-தன் சிரத்திற்படும்படி, இறைஞ்சி - வணங்கி, எம் - எமது, கணநாயகன் - கணநாதனாகிய இரேணுகன், விடைகொண்டு - விடைபெற்று, பொங்கு ஒலி - மிக்க வோசையையுடைய, உததி சூழ் - கடல்சூழ்ந்த, புவியைநோக்கி - பூமியைநோக்கி, எய்தினன்- வந்தான், எ - று.

(வி - ரை.) அங்கணன் என்பதை அம்கண்ணன் எனப்பிரித்து, கருணையோடுகூடின கண்ணையுடையவன் எனப்பொருளுரைத்துக்கொள்க, "கண்ணுக்கணிகலம் கண்ணோட்டம்" என்பவாகலான் கண்ணுக்கழகாவது கருணையேயாமென்பது விளங்கும். விடை - உத்திரவு (விடுதல்). ஏ - அசை. (கூச)

### இரேணுகர் அவதரித்த ஸ்தலம்.

எய்திய விரேணுக னிறைவன் கூறிய
மெய்திக ழிலிங்கமெய் மேவித் தோன்றினன்
கொய்துணர் மலிபொழிற் கொல்லி பாகம்வாழ்
செய்தவ முடையர்தாஞ் சென்று கண்டனர்.

(ப - ரை.) எய்திய - வந்த, இரேணுகன் —, இறைவன் கூறிய - சிவபெருமான் சொன்ன, மெய் திகழ் - உண்மைவிளங்குகின்ற, இலிங்க மெய் மேவி - இலிங்க வடிவத்தில் பொருந்தி, தோன்றினன் - காணப்பட்டான், (அப்படிக்காணப்பட்டவனை) கொய் - பறிக்கப்படுகிற, துணர் - பூங்கொத்துக்கள், மலி - மிகுந்த, பொழில் - சோலை சூழ்ந்த, கொல்லிபாகம் வாழ் - கொல்லிபாக்கம் என்னும் தலத்தில் வாழ்கின்ற, செய்தவம் உடையர் - தவஞ்செய்பவர்கள், சென்று கண்டனர் —, எ - று.

(வி - ரை.) எய்தல் - வருதல். திகழ்தல் - விளங்குதல். மெய்திகழிலிங்கம் - சோமேசலிங்கம். (கூரு)

### இரேணுகர் அவதாரம்.

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.*

நீற்றொளி விளங்கக் கண்டி நிறையணி யணிந்து வேணி
தோற்றழ கிலங்க ஞானச் சோதியின் வயிற்றிற் றோன்றிப்
போற்றிளங் கதிர்போ னின்ற புண்ணியன் றன்னைக் கண்டோ
ராற்றவும் வியப்புற் றோரா யடியிணை பணிந்து சொல்வார்.

(ப - ரை.) நீறு ஒளி விளங்க - திருவெண்ணீற்றின் ஒளி பிரகாசிக்க, கண்டி - உருத்திராக்கமாலையாகிய, நிறை அணி அணிந்து - நிறைந்த ஆபரணத்தையணிந்து, வேணி தோற்று அழகு இலங்க - சடையின் காணப்படுகிற அழகுவிளங்க, ஞானச் சோதியின் வயிற்றில் தோன்றி —, போற்று இளம் கதிர்போல் நின்ற - யாவராலும் வணங்கப்படுகிற பாலசூரியன்போல் நின்ற, புண்ணியன் தன்னை - புண்ணியனாகிய இரேணுகனை, கண்டோர் —, ஆற்றவும் - மிகவும், வியப்பு உற்றோராய் - அதிசயித்தவராய், அடி இணை - இரண்டுபாதங்களையும், பணிந்து - வணங்கி, சொல்வார், — எ - று.

(வி - ரை.) கண்டி கண்டத்தி லணியப்படுவது. வியப்பு - அதிசயம். (கூசு)

சோதிமா லிங்கந் தன்னிற் றோன்றுநீ யாரை யென்ன
வாதியா மிறைவன் பாங்க ரமர்தரு மிரேணு கனியான்
வேதநா யகன்வி டுப்ப விடைகொண்டிங் கெய்தி னேனென்
றோதினன் வீர சைவத் தூதிய மாகி நின்றோன்.

(ப - ரை.) சோதி மா லிங்கம் தன்னில் - ஒளியையுடைய இந்த மஹாலிங்கத்தில், தோன்றும் நீ - காணப்படுகிற நீ, யாரை என்ன - யாரென்று கேட்க, வீரசைவத்து - வீரசைவ மதத்தினது, ஊதியம் ஆகி நின்றோன் - பயனாகி நின்றவனாகிய இரேணுகன், ஆதி ஆம் - முதல்வனாகிய, இறைவன் பாங்கர் - சிவபெருமான் பக்கத்தில், அமர் தரும் - அமர்ந்திருக்கும், இரேணுகன் யான் - இரேணுகனென்னும் கணநாதன் யான், வேதநாய

கன் விடுப்ப - சிவபெருமான் அனுப்ப, விடை கொண்டு - விடைபெற்று, இங்கு எய்தினேன் என்று - இங்கு வந்தேனென்று, ஓதினன் - சொல்லினன், எ - று.

(வி - ரை.) யானை யென்பதில் ஐ சாரியை. (கஎ)

இரேணுகர் போதிகை யடைதல்.

விளங்குறு சிவசித் தாந்த மென்பயிர் தன்னை வேறா
யுளங்கவல் சயின புத்த ராதிய ருணர்வி னூலாம்
வளர்ந்தெழு களைக ளைந்து வளர்ப்பதற் குற்றே னென்
றிளங்கதி ரனையான் வானத் தெழுந்துபோய் மலயத் துற்றான்.

(ப - ரை.) விளங்குறு - விளங்குகின்ற, சிவ சித்தாந்தம் - சிவ சித்தாந்தமென்கிற, மெல் பயிர் தன்னை - மென்மையாகிய பயிரை, வேறு ஆய் - வேறுபட்டு, உள்ளம் கவல் - மனங்கவல்கின்ற, சைனர் புத்தர் ஆதியர் - சைனர் புத்தர் முதலியோராது, உணர்வு இல் நூல் ஆம் - அறிவில்லாத நூல்களாகிய, வளர்ந்து எழு களை - ஓங்கி யெழுகின்ற களையை, களைந்து வளர்ப்பதற்கு - களைந்து பாதுகாப்பதற்கு, நான் உற்றேன் என்று - நான் வந்தேன் என்று சொல்லி, இளம் கதிர் அனையான் - பால சூரியனை ஒத்தவனாகிய இரேணுகன், வானத்து - ஆகாயமார்க்கமாக, எழுந்துபோய்—, மலயத்து உற்றான் - பொதிகை மலையைச் சேர்ந்தான், எ - று.

(வி - ரை.) கவலல் - துன்பப்படுதல். களை - ஓர்வகைப்புல். வானம் - ஆகுபெயர்.

போதிகைமலைச்சிறப்பு.

ஓங்கிய விந்த வெற்பங் கொருகரஞ் சுமக்க லாற்றா
தேங்குபு பிலத்தில் வீழக் கண்டவவ் விருடி தன்னைத்
தீங்கறு முனிவ ரெண்ணி லோரொடு சிகரந் தன்னிற்
றாங்கிய மலய வெற்பின் றன்மையார் சாற்ற வல்லார்.

(ப - ரை.) ஓங்கிய - உயர்ந்த, விந்த வெற்பு - விந்த மலை, அங்கு - அவ்விடத்து, ஒரு கரம் - ஒருகையை, சுமக்கல் ஆற்றாது - தாங்க மாட்டாமல், ஏங்குபு - ஏங்கி, பிலத்தில் - பாதாள லோகத்தில், வீழ கண்ட - விழச்செய்த, அ இருடி தன்னை - அந்த அகத்திய முனிவனை, தீங்கு அறும் - குற்றமற்ற, முனிவர் எண்ணிலோரொடு - அளவிறந்த முனிவர்களோடு, சிகரம் தன்னில் தாங்கிய - சிகரத்தால் சுமந்த, மலயவெற்பின் தன்மை - பொதிய மலையின் தன்மையை, சாற்ற வல்லார் யார் - சொல்ல வல்லவர் எவர்.

(வி - ரை.) ஏங்குபு செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; இது வீழ வென்னும் வினைகொண்டது. வீழ்தல் ஈண்டு அழுந்தலென்னும் பொருளில் வந்தது. சிகரந்தன்னிற்றாங்கிய என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றாவதன் கருவிப்பொருளில் வந்தது. ஒருகரத்தால் விந்தவெற்பை யழுத்தின அகத்தியரையும் அவர்போன்ற அநேக முனிவரையும் தன்னொரு சிகரத்தால் தாங்கின பொதிய மலையின் ஏற்றம் இச்செய்யுளாற் கூறிய வாறாயிற்று. (கஅ)

மலயச மென்று மிக்க மலயமா ருதமா மென்று
மூலகொரு மூன்றி னுந்த னோங்குறு புகழ்சென் றெய்த
நலமலி சந்துங் காலு நல்கிய வதுபோற் றன்பே
ரிலகுற மலைக ளுள்ளொன் றேனுமீந் ததுதா னுண்டோ.

(ப - ரை.) மலயசம் என்றும்—, மிக்க மலய மாருதம் ஆம் என்றும் - மேன்மையாகிய மலயமாருத மாகுமென்றும், உலகு ஒரு மூன்றினும் - ஒப்பற்ற மூவுலகத்தும், தன்தனது, ஓங்குறுபுகழ் - உயர்ந்த புகழானது, சென்று எய்த - சென்று அடைய, நலம் மலி

நன்மை மிகுந்த, சந்தும் - சந்தந மரத்தையும், காலும் - தென்றற்காற்றையும், நல்கிய அதுபோல் - ஈந்ததுபோல, தன்பேர் இலகுற - தன்பேர் விளங்கும்படி, மலைகளுள் ஒன்றேனும் - மலைகளுள் ஒன்றுயினும், ஈந்தது உண்டோ—, எ - று.

(வி - ரை.) மலயசம் - சந்தநமரம். மலயமாருதம் - தென்றற்காற்று. கால் - காற்று. ஈந்தது - கொடுத்தது. (சo)

இரேணுகர் அகத்தியனைக் காணுதல்.

அப்பெரு மலயந் தன்னை யடைந்தகத் தியனி ருக்குஞ்
செப்பரும் வளம லிந்த விடத்தினைச் சென்று கண்ணுற்
றொப்பரு முவகை கூர்ந்த வுளத்தொடு கணங்கள் கோமா
னெய்ப்பறு முனிவ ரோடங் கிருந்துள முனியைக் கண்டார்.

(ப - ரை.) அ-அந்த, பெரு மலயம் தன்னை - பெரிய பொதிகைமலையை, அடைந்து- சேர்ந்து, அகத்தியன் இருக்கும் - அகத்திய முனிவர் இருக்கின்ற, செப்பு அரும் - சொல் லுதற்கரிய, வளம் மலிந்த இடத்தினை - வளமிகுந்த இடத்தை, சென்று கண்ணுற்று-போய்ப்பார்த்து, ஒப்பு அரும் - ஒப்புச்சொல்லுதற்கரிய, உவகை கூர்ந்த - களிப்புமிக்க, உள்ளத்தொடு - மனத்தோடு, கணங்கள்கோமான் - கணநாதராகிய இரேணுகர், எய்ப்பு அறும் - அயர்வற்ற, முனிவரோடு அங்கு இருந்துள்ள - முனிவருடனே யங்கிருந்த, முனியை - அகத்திய முனிவனை, கண்டார் - பார்த்தனர், எ - று.

(வி - ரை.) எய்த்தல் - அயர்தல். செப்புதல் - சொல்லுதல். (சக)

வந்தெதிர் நின்ற ஞான வாரியைக் கண்ணிற் கண்டு
சந்திர மவுலி தன்பாற் சார்ந்துள விரேணு கப்பேர்
முந்துறு பவனு மென்று முனிவனு முணர்வாற் கண்டு
சிந்தனை மகிழ்ந்தெ ழுந்து திருவடித் தலத்தில் வீழ்ந்தான்.

(ப - ரை.) வந்து எதிர் நின்ற - வந்து எதிரே நின்ற, ஞானவாரியை - ஞானக்கடலை, கண்ணில்கண்டு—, சந்திரமவுலி தன்பால் - சந்திரசேகரராகிய சிவபிரானிடத்து, சார்ந்து உள்ள - சேர்ந்திருக்கிற, இரேணுகப்பேர் - இரேணுகரென்னும் பேரினால், முந்துறுபவன் ஆம் என்று - முன்னிற்பவனும் என்று, முனிவனும் - அகத்திய முனிவனும், உணர்வால் கண்டு - ஞானதிருஷ்டியால் பார்த்து, சிந்தனை மகிழ்ந்து எழுந்து - மனமகிழ்ந்தெழுந்து, திரு அடிதலத்தில் வீழ்ந்தான் - திருவடியில் வீழ்ந்தான், எ - று.

(வி - ரை.) ஞானக்கடல் என்றது இரேணுகரை. மவுலி - சிரசு. சந்திரசேகரர் - பிறையையணிந்த சிரத்தையுடையவர். (சஉ)

பின்னரங் கவனைத் தானோர் பெருந்தவி சுறவி ருத்தித்
தன்னிக ரமல லோபா முத்திரை தந்த நீராற்
பொன்னடி விளக்கி நூலிற் புகன்முறை யருச்சித் தேத்தி
யன்னவ னருகு வேறோ ராதனத் தமர்ந் திருந்தான்.

(ப - ரை.) பின்னர் - அதன் பின்னே, அங்கு அவனை - அங்கு வந்த அவ்விரேணுகனை, தான் - அகத்திய முனிவன், ஓர் - ஒரு, பெரும் தவிசு - பெரிய ஆசநத்தில், உற இருத்தி- வீற்றிருக்கச்செய்து, தன் நிகர் - தனக்குத்தானே நிகர்த்த, அமலம் - பரிசுத்தத்தன்மையுடைய, உலோபாமுத்திரை - உலோபாமுத்திரையானவள், தந்த - கொண்டுவந்துகொடுத்த, நீரால் - நீரினால், பொன் அடி விளக்கி - அவரது திருவடியை விளக்கி, நூலில் - சாத்திரங்களில், புகல் - சொல்லப்பட்ட, முறை - கிரமமாக, அருச்சித்து - அர்ச்சனை

பண்ணி, ஏத்தி - துதித்து, அன்னவன் அருகு - அந்த விரேணுகன் அருகே, வேறு ஓர் ஆதனத்து - மற்றொரு ஆசநத்தில், அமர்ந்து இருந்தான் —, எ - று.

(வி - ரை.) உலோபாமுத்திரை - அகத்தியர் மனைவி. (சுங)

இருந்துள முனியை நோக்கி யிரேணுக னன்றாய் நின்பா
லருந்தவ நடந்த தேயென் றருளினால் வினாய்நி னக்குப்
பொருந்துறு மிடையூ றெண்ணிப் புரிபவ ரியாவ ரென்று
திருந்திய வுளத்த னாகிச் செப்புவ னுவகை மாற்றம்.

(ப - ரை.) இருந்துள முனியை நோக்கி - அப்படியிருந்த அகத்திய முனிவனைப்பார்த்து, இரேணுகன் - இரேணுகரானவர், நின்பால் - உன்னிடத்து, அருந்தவம் - அருமையாகிய தவம், நன்றாய் நடந்ததே என்று - நன்றாய் நடக்கின்றதோ வென்று, அருளினால் வினாய் - அருளினால் வினவி, நினக்கு - உனக்கு, பொருந்துறும் - உண்டாகின்ற, இடையூறு - விக்கினத்தை, எண்ணி புரிபவர் - ஆலோசித்துச்செய்பவர், யாவர் என்று - யாரென்று, திருந்திய உளத்தனாகி - திருத்தமாகிய மனத்தை யுடையவனாகி, உவகை மாற்றம் செப்புவன் - சந்தோஷ வார்த்தையைச் சொல்வானாயினன், எ - று.

(வி - ரை.) நடந்ததே என்பதில் ஏகாரம் வினா. வினவல் - கேட்டல். புரிதல் - செய்தல். மாற்றம் - சொல். (சச)

விந்தமு நின்னாற் கீழ்போய் வீழ்ந்தது நகுட னின்னான்
முந்தர வுருவ மானான் முழங்குவெண் டிரைசு ருட்டுஞ்
சிந்துவு மருந்தப் பட்டுச் சேறலா தொழிந்த தன்று
வந்தொரு தகுவ னுன்றன் வயிற்றிடை யற்றா னன்றே.

(ப - ரை.) விந்தமும் - விந்தமலையும், நின்னால் - உன்னால், கீழ்போய் வீழ்ந்தது - கீழுலகிற்போய் விழுந்தது, நகுடன் - நகுடனென்பவன், நின்னால் - உன்னால், முந்து - முற்காலத்தில், அரவு உருவம் ஆனான் - பாம்புருவாயினன், முழங்கு - ஒலிக்கிற, வெள் திரை சுருட்டும் - வெள்ளிய அலைகளைச் சுருட்டுகிற, சிந்துவும் - கடலும், அருந்தப்பட்டு - உண்ணப்பட்டு, சேறலாது ஒழிந்தது - செல்லாதொழிந்தது, அன்று - அக்காலத்தில், ஒரு தகுவன் வந்து - ஒரு அரக்கன் வந்து, உன்றன் வயிற்றிடை - உன்வயிற்றில், அற்றான் அன்றே - சீர்ணித்தொழிந்தானல்லவா, எ-று.

(வி - ரை.) கீழ் - ஆகுபெயர். நகுடன் - சந்திரவமிசத்தனான புரூரவனுக்குப் பேரனும் ஆயுவுக்கு மகனுமாகிய ஓரரசன். ஒரு அரக்கன் என்றது வாதாபியை. (சரு)

செங்கண்மால் விடையா னல்குஞ் சிவதரு மோத்த ரத்தை
யெங்கண்மா முருக னாமத் திலங்கிலை வேலோ னல்க
வங்கண்மா ஞால முய்யப் பெற்றனை யருந்த வத்தோர்
தங்கண்மா நிதிய னாயுன் றனைநிகர் பவர்யார் சொல்லாய்.

(ப - ரை.) செம் கண் - சிவந்த கண்களையுடைய, மால் விடை யான் - பெரிய இடபத்தையுடையவனாகிய சிவபெருமான், நல்கும் - கொடுத்தருளின, சிவதருமோத்தரத்தை —, எங்கள் - எங்களுடைய, மா - பெருமைபொருந்திய, முருகன் - முருகனென்கிற, நாமத்து - பெயரினையுடைய, இலங்கு இலை - விளங்குகின்ற இலை வடிவினையுடைய, வேலோன் - வேலவன், நல்க - கொடுத்தருள, அம் கண் - அழகிய இடத்தையுடைய, மா - பெரிய, ஞாலம் - உலகத்தார், உய்ய - உய்யும்படி, பெற்றனை - கிடைக்கப்பெற்றாய், (ஆதலால்) அரும் தவத்தோர் தங்கள் - அருமையாகிய தபசிகளுடைய, மாநிதி அன்னாய் - பெருஞ் செல்வத்தை நிகர்த்தவனே, உன்தனை நிகர்ப்பவர் யார் —, சொல்லாய் —, எ-று.

(வி - ரை.) மால் - பெருமை, திருமால். சிவதருமோத்தரம் பன்னிரண்டியல்களை யுடையதோர் நூல்; இது மறைஞான சம்பந்தரால் செய்யப்பட்டது. (சசு)

என்றுரை செய்ய வெங்க ளிரேணுகன் முனிவன் கேளா
நின்றனி வரவெ னக்கே நேர்தலாற் றவத்தோன் யானே
நன்றிக ளனைத்து முள்ளேன் ஞானநல் விழியும் பெற்றேன்
வென்றனன் பவமு மேலாம் வீடடைந் துய்ந்தே னியானே.

(ப - ரை.) எங்கள் இரேணுகன்—, என்று உரைசெய - என்று இவ்வாறு சொல்ல, முனிவன் கேளா - அகத்தியமுனிவன்கேட்டு, நின் - உனது, தனி - ஒப்பற்ற, வரவு - வருகை, எனக்கே நேர்தலால் - எனக்கு நேர்ந்ததனால், யானே தவத்தோன் - நானேதவத்தினையுடையேன், நன்றிகள் அனைத்தும் உள்ளேன் - நன்மைகளெல்லாவற்றையு முடையேன், ஞான நல்விழியும் பெற்றேன் - ஞானமாகிய நல்ல கண்ணையும் பெற்றேன், பவமும் வென்றனன் - பிறவியையும் வென்றேன், மேல் ஆம் வீடு அடைந்து யான் உய்ந்தேன் - மேன்மையாகிய வீட்டினை அடைந்து யான் கடைத்தேறினேன், எ-று.

(வி - ரை.) கேளா - செய்தென்னும் வாய்பாட்டு வினையெச்சம். நேர்தல் - கிடைத்தல். மேலாம்வீடு - முத்தி. (சஎ)

புண்ணிய மூர்த்தி நீயென் பொருட்டிவ ணடைந்தாய் நின்னைக்
கண்ணுறில் வினைக ளெல்லாங் கதிரெதிர்ப் பனியை யொக்கும்
பண்ணிய தவநி றைந்து பயன்றரு காலத் தல்லா
லண்ணலுன் வரவெ வர்க்கு மரிதரி தென்று சொல்வான்.

(ப-ரை.) புண்ணிய மூர்த்தி நீ - தருமரூபியாகிய நீ, என்பொருட்டு—, இவண் அடைந்தாய்—, நின்னை—, கண்ணுறில் - தரிசித்தால், வினைகள் எல்லாம்—, கதிர் எதிர்-சூரியனுக்கு எதிர்ப்பட்ட, பனியை ஒக்கும்—, பண்ணிய தவம் நிறைந்து—, பயன் தரு காலத்து அல்லால் - பயன்தருகிற காலத்திலல்லாமல், அண்ணல் - பெரியோனே, உன் வரவு - உன் வருகை, எவர்க்கும் அரிது அரிது என்று சொல்வான்—, எ-று.

(வி - ரை.) இவண் - இங்கு. (சஅ)

பற்பல கலையு ணர்ந்தும் பற்றிலன் றுணிவு மாறா
வுற்பவ மொழியும் வண்ண முயிர்சிவத் தேக மாகும்
பொற்பரு ளுவதாய் வேதப் பொருள்படு சிவசித் தாந்தந்
சிற்பர யோகி நின்னாற் றெளிந்திட விழைவ லென்றான்.

(ப - ரை.) பற்பல கலை உணர்ந்தும் - பலபல நூல்களை அறிந்தும், துணிவு - நிச்சயமாகிய நிலையை, பற்றிலன் - பற்றினேனில்லை, மாறா-நீங்காத, உற்பவம் - பிறவியானது, ஒழியும் வண்ணம் - ஒழியும்படி, உயிர் - உயிரானது, சிவத்து - சிவமென்னும் பொருளோடு, ஏகம் ஆகும் - ஒன்றாகின்ற, பொற்பு - அழகை, அருளுவது ஆய் - அருள்செய்வதாய், வேதப்பொருள்படு - வேதப்பொருள் படுகின்ற, சிவ சித்தாந்தம் - சிவசித்தாந்தத்தை, சிற்பரயோகி - சிற்பரயோகியாகிய, நின்னால் - உன்னால், தெளிந்திட - தெரிந்துகொள்ள, விழைவல் என்றான் - விரும்புகிறேன் என்று சொல்லினன், எ - று.

(வி - ரை.) சிற்பரயோகி - ஞானத்தையுடைய மேலானயோகி. சிற்பரயோகி என்பது அண்மைவிளியாய் எட்டாம் வேற்றுமையிற் பொருட்படுத்தினு மமையும். விழைதல்-விரும்புதல். (சகூ)

இரேணுகர்காதை முற்றும்.

# உபதேசம்.

## இரேணுகர் அகத்தியருக்கு உபதேசம் செய்தல்.

கலிவிருத்தம்.

முனிவ னின்ன மொழிய வுளங்கொளா
வினிய னென்னுமி ரேணுகன் முக்கணன்
றனைநி னைந்து சமாதி யடைந்துபின்
னினைவ டைந்து நிகழ்த்துதன் மேயினன்.

(ப - ரை.) முனிவன் - அகத்திய முனிவன், இன்ன - இவற்றை, மொழிய - சொல்ல, உள்ளம் கொளா - திருவுளங்கொண்டு, இனியன் என்னும் - இனியனென்றற்குரிய, இரேணுகன்—, முக்கணன்றன்னை நினைந்து—, சமாதி அடைந்து—, பின் - பிறகு, நினைவு அடைந்து - நினைவைப்பெற்று, நிகழ்த்துதல் மேயினன் - சொல்லத்தொடங்கினன், எ - று.

(வி - ரை.) கொளா செய்யாவென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். முக்கணன் - த்ரிணேத்ரதாரியாகிய சிவபெருமான். சமாதியடைந்து - நிஷ்டைகூடி. நிகழ்த்தல் - சொல்லல். (க)

அருந்த வத்த ரரச வுனக்கிவண்
டிருந்து மெய்ச்சிவ ஞானத் தெளிவினைப்
பொருந்து மிக்கசித் தாந்தம் புகலுது
மொருங்கு சித்தத் துவந்து செவிக்கொளே.

(ப - ரை.) அரு - அருமையாகிய, தவத்தர் - தவத்தினருக்கு, அரச - அரசனே, உனக்கு—, இவண் - இங்கு, திருந்து - திருந்திய, மெய் - உண்மையாகிய, சிவஞானத் தெளிவினை - சிவஞானத்தெளிவை, பொருந்து - பொருந்தின, மிக்க - மேலான, சித்தாந்தம் புகலுதும் - சித்தாந்தத்தைச் சொல்லுவோம், ஒருங்கு - ஒருவழிப்பட்ட, சித்தத்து உவந்து - மனத்திற் சந்தோஷங்கொண்டு, செவிக்கொள் - செவியேற்கக்கடவை, எ - று.

(வி - ரை.) சாபாநுக்ரஹசக்தியையும் அட்டமாசித்தி முதலியவற்றையும் தருதற்குரியது தவமாதலால் அதனது பெருமைதோன்ற, அருந்தவம் என்றார். ஒருங்கு - முழுதும் எனினுமாம். ஏ - அசை. (உ)

பேத விச்சையிற் பின்னப் பொருள்களு
மோது பற்பல வாய வொழுக்கமு
மாதல் பெற்றிடு மாசில்சித் தாந்தநூன்
மாத வத்தர் வழுத்து முனிவனே.

(ப - ரை.) மா - பெரிய, தவத்தர் - தவசிகள், வழுத்தும் - துதித்தற்குரிய, முனிவனே—, பேதம் இச்சையின் - வேறுபாடான விருப்பத்தால், பின்னப்பொருள்களும் - வேறுபட்டபொருள்களும், ஓது - சொல்லப்பட்ட, பற்பல ஆய ஒழுக்கமும் - பலபலவாகிய ஒழுக்கங்களும், ஆதல் - ஆதலை, ஆசு இல் - குற்றமில்லாத, சித்தாந்தநூல்—, பெற்றிடும் - பெற்றிருக்கும், எ - று.

(வி - ரை.) பேதம் - வேற்றுமை. பின்னப்பொருள் - கண்டிக்கப்பட்ட பொருள். ஒழுக்கம் - ஆசாரம். பெற்றிருத்தல் - அமையப்பெற்றிருத்தல். வழுத்தல் - துதித்தல். சித்தாந்தநூல் என்றது பலசித்தாந்தங்களை குறித்தது என்க. (ங)

ஆய்ஞ்ச சாங்கிய மாசறு யோகநற்
பாஞ்ச ராத்திரம் பாசு பதத்தொடு
வாய்ஞ்ச வேத மிவைபிர மாணமாய்த்
தாஞ்செய் வாதத்திற் றள்ளுவ வல்லவாம்.

(ப-ரை.) ஆய்ஞ்ச - ஆராயப்பட்ட, சாங்கியம்—, ஆசு அறு-குற்றமற்ற, யோகம்—, நல் - நல்ல, பாஞ்சராத்திரம்—, பாசுபதத்தொடு—, வாய்ஞ்ச - வாய்த்த, வேதம்—, இவை - இவைகள், தாம் செய் வாதத்தில் - தாங்கள்செய்கிற (யுக்தி) வாதத்தில், பிரமாணமாய் - பிரமாணங்களாகி, தள்ளுவ அல்ல ஆம் - தள்ளத்தகுந்தன அன்றாகும், எ - று.

(வி - ரை.) ஆய்ந்த என்பது ஆய்ஞ்ச என்றாயிற்று. (௪)

சாங்கி யாதிகட் கென்றுந் தலைமையா
மோங்கு மாமறை யும்மற்றை யைத்தொடர்ந்
தீங்கு நின்றத னலவை யாவையுந்
தாங்கு மானத் தகைமைய வென்பவே.

(ப - ரை.) சாங்கியம் ஆதிகட்கு - சாங்கியம் முதலியவற்றிற்கு, என்றும் - எந்நாளும், ஓங்கு மா மறையும் - உயர்ந்த பெரிய வேதங்களும், தலைமை ஆம் - தலைமைபெற்றிருக்கும், மறையைத் தொடர்ந்து - வேதங்களைப்பின்பற்றி, ஈங்கு நின்றதனால் - இவ்வுலகத்தில் நிலைபெற்றிருத்தலால், அவையாவும்—, தாங்கும் - தாங்கப்பட்ட, மானத்தகைமைய - பெருமைத்தன்மையனவாம், என்ப -என்றுசொல்லுவர் (அறிஞர்), எ - று. (௫)

யோக சாங்கிய மோரைந்தி ராத்திர
மாகும் வேதத் தொருபுடை யன்னபோ
லேக தேச முறுமறை யெங்குமா
மாகம் வீழ்மலை மாதவ சைவமே.

(ப - ரை.) மாகம் வீழ் - சுவர்க்கத்தை விரும்புகிற, மலை-பொதியமலையில் வாழ்கின்ற, மாதவ - பெரியதவத்தினை யுடையவனே, யோக சாங்கியம் - யோக சாங்கியங்கள், ஓர் - ஒப்பற்ற, ஐந்து இராத்திரம்-பாஞ்சராத்திரம், (ஆகிய இவைகள்) வேதத்து ஒரு புடை - வேதத்தொருசார், ஆகும்—, சைவம் - சைவமானது, அன்ன போல் - அவைபோல, மறை-வேதம், ஏகதேசம் உறு - ஏகதேசத்தை யடையாது, எங்கும் ஆம் - எவ்விடத்தும்பொருந்தும், எ - று.

(வி - ரை.) மாகம்வீழ் என்பதற்கு ஆகாயத்தையளாவிய என்றுரைத்தலும் பொருந்தும். மாகம் வீழ் மலையென்றதனால் மலையினுயர்ச்சி தோன்றிற்று. ஏகதேசம் - சிறிதிடம். வேதத்து ஒருசார் - வேதங்களின் ஒவ்வொரு விஷயத்தில் நிற்குந்தன்மை. ஏகதேச முறுமறையெங்குமாம் என்பது வேதஸ்வரூபம் என்க. (௬)

ஓங்கும் வேதத் தொருபுடை யாகிய
சாங்கி யாதியிற் சைவஞ் சிறந்ததாய்த்
தீங்கில் வேதமெ லாந்தொடர் செய்கையா
னீங்கு பாச முனிவ நிலைக்குமால்.

(ப - ரை.) பாசம் நீங்கு - பாசம் நீங்கப்பெற்ற, முனிவ - முனிவனே, ஓங்கும் வேதத்து - உயர்ந்த வேதத்தின், ஒருபுடை ஆகிய - ஒருசாராகிய, சாங்கியம் ஆதியில் - சாங்கியம் முதலானவற்றுள், சைவம் - சைவமானது, சிறந்தது ஆய்—, தீங்கு இல் - தீமையில்லாத, வேதம் எல்லாம் - வேதமுழுதும், தொடர் செய்கையால் - தொடர்கின்ற செய்கையினால், நிலைக்கும் - (சிறப்புற்று) நிலைபெற்றிருக்கும், எ - று.

(வி - ரை.) பாசம் நீங்கு என்பது நீங்கு பாசம் என முன்பின்னாக நிற்கின்றது. ஆல் - அசை. (எ)

பிரம மோதுசித் தாந்தப் பெயர்பெறு
தரும சைவமென் றந்திர நான்மறைப்
பொருள தாகலி னம்மறை போலவே
வரமு தாம்பிர மாண மெனப்படும்.

(ப - ரை.) பிரமம் - பிரமப்பொருளையே, ஓது - சொல்லுகிற, சித்தாந்தப் பெயர் பெறு - சித்தாந்தமென்னும் பெயர்பெற்ற, தரும சைவம் - அறவுருவாகியசைவம், என் - என்கிற, தந்திரம் - தந்திரமானது, நான்மறைப்பொருளது ஆகலின் - சதுர்வேதார்த்தத் தையுடையதாதலால், அ - அந்த, மறைபோலவே - வேதம்போலவே, வரம்ஆம் - மேன் மையாகிய, பிரமாணம் எனப்படும்—, எ - று.

(வி - ரை.) பிரமம் ஓது என்பது சிவபெருமானால் சொல்லப்பட்டதாகிய எனப் பொருள் கொள்ளினுமமையும். அது - பகுதிப்பொருள்விகுதி. (அ)

கண்ணு தற்பெருங் கார ணாற்பல
வெண்ணு மாகமஞ் சைவமி லாகுளம்
பண்ணு பாசு பதமொடு சோமமென்
றண்ணன் மாமுனி யன்றறை யப்படும்.

(ப - ரை.) கண்ணுதல் - நெற்றிக்கண்ணனாகிய, பெரு - பெரிய, காரணனால் - மூலகாரணனாலே, பல - பலவாகி, எண்ணும் - எண்ணப்படுகிற, ஆகமம் - ஆகமங்கள், சைவம்—, இலாகுளம்—, பண்ணு - அலங்கரித்த, பாசுபதமொடு—, சோமம் என்று—, அண்ணல் மாமுனி - பெருமையிற்சிறந்த முனிவனே, அன்று - அக்காலத்திற்றானே, அறையப்படும் - சொல்லப்படும், எ - று.

(வி - ரை.) கண்ணுதல் - அன்மொழித்தொகை. (கூ)

ஓது வாம மொழிவறுந் தக்கண
மேதை யாகு மிசிர முனிவர
தீதி லாதசித் தாந்த மெனவரு
பேத நான்கு பெறும்புகல் சைவமே.

(ப - ரை.) முனிவர - முனிசிரேஷ்டனே, புகல் - சொல்லப்பட்ட, சைவம் - சைவமானது, ஓது - சொல்லப்பட்ட, வாமம்—, ஒழிவு அறும் - நீங்காத, தக்கணம்—, மேதை ஆகும் - அறிவுண்டாகத்தக்க, மிசிரம்—, தீது இல்லாத—, சித்தாந்தம்—, எனவரு - என்று சொல்லப்பட்டுவருகிற, பேதம் நான்கு பெறும் - நான்குவேறுபாடுகளை யடையும், எ - று.

(வி - ரை.) மேதை மேதா என்னும் வடசொற்றிரிபு. ஏ - அசை. (கo)

வாமஞ் சத்தி பரஞ்சொல் வயிரவர்க்
காமந் தக்கண மம்மி சிரத்தெழு
நாமங் கொண்டு மாதர் நணுகுவர்
ஏமஞ் செய்மறை யின்மத மற்றதே.

(ப - ரை.) ஏமம் செய் மறையில் - உயிர்களுக்குக்காவல் செய்கிறவேதத்திற் சொல்லப்படுகிற, மதம் அற்றது - சம்மதமற்றதாகிய, வாமம்—, சத்தி பரம்—, அம் - அழகிய, தக்கணம்-தக்ஷிணமானது, சொல் வயிரவர்க்கு ஆம்—, அ-அந்த, மிசிரத்து—, எழு நாமம் கொண்டு-ஏழுபெயர்களைக்கொண்டு, மாதர் நணுகுவார்-சப்தமாதர் அடைவார்கள், எ-று.

(வி - ரை.) ஏமம் - காவல். பரம் - பக்ஷம். சப்தமாதர்கள்-ப்ராம்ஹீ முதலிய மாதர்கள். வாமமானது சத்தியைப்பரமாய்க்கொண்டுள்ளதென்பதும், தக்ஷிணமானது வயிரவரைப் பரமாய்க்கொண்டுள்ளதென்பதும், மிசிரமானது சப்தமாதர்களைப் பரமாய்க்கொண்டுள்ளதென்பதும் பெறப்பட்டன. (கக)

மறையு ரைக்குந் தருமம் வகுத்தலாற்
புறம தத்தொடு நின்று பொருதலாற்
றிறம டுத்தசித் தாந்த சிவாகம
மறமு ரைக்கு மறைமத மாகுமால்.

(ப - ரை.) மறை உரைக்கும் - வேதங்கள் சொல்லுகிற, தருமம் - தருமத்தை, வகுத்தலால் - வகுத்துச்சொல்லுதலாலும், புறமதத்தொடு - அந்நியமதங்களோடு, நின்று பொருதலால் - நின்று போர்செய்தலாலும், திறம் அடுத்த - வலிபொருந்திய, சித்தாந்த சிவாகமம் - சித்தாந்தமென்னும் சிவாகமமானது, அறம் உரைக்கும் - தருமத்தைச்சொல்லுகிற, மறை மதம் ஆகும் - வேதசம்மத மதமாகும், எ - று.

(வி - ரை.) புறமதம் - பாஹ்யமதம் எனினுமாம். பொருதல் வாதித்தல் என்றலும் பொருந்தும். ஆல் - அசை. (கஉ)

செப்பும் வேதசித் தாந்த மபேதமா
மொப்பின் மெய்ப்பொரு ளொன்றே யுரைத்தலா
லிப்பெ ருஞ்சொற் கலைக ளிரண்டையும்
வைப்ப ரொப்பென மானத் தறிஞரே.

(ப - ரை.) செப்பும் - சொல்லப்படுகிற, வேத சித்தாந்தம் - வேதமும் சித்தாந்தமும், அபேதம் ஆம் - அபேத மாகிய, ஒப்பு இல் - ஒப்பற்ற, மெய்ப்பொருள் ஒன்றே உரைத்தலால் - உண்மைப்பொருளாகிய ஒன்றனையே சொல்லுதலால், இ - இந்த, பெருஞ் சொல் - பெரும்புகழையுடைய, கலைகள் இரண்டையும்—, மானத்து - பெருமை பொருந்திய, அறிஞர் - ஞானியர், ஒப்பு என வைப்பர் - (பிரமாணத் தன்மையில்) நிகராக வைப்பர், எ - று.

(வி - ரை.) அபேதம் - வேறுபாடின்மை. ஒன்றே யென்றது பிரமப்பொருளை. மானம் - பெருமை. ஏ - அசை. (கங)

வீரசைவவிளக்கம்.

ஏக னுற்றருள் காமிக மேமுத
லாக மத்தி னிறைந்திடு முத்தர
பாக முற்றும் பகர்வீர சைவமாஞ்
சோக மற்றுயர் தொன்மதந் தோன்றுமால்.

(ப - ரை.) ஏகன் - தனியானவனாகிய சிவபெருமான், உற்று அருள் - கருணை மிகுந்தருள் செய்த, காமிகம் முதல் ஆகமத்தில்—, நிறைந்திடும் - நிறைந்த, உத்தரபாக முற்றும்—, பகர் - சொல்லப்பட்ட, வீரசைவம் ஆம் - வீரசைவமாகிய, சோகம் அற்று உயர் - துன்பமற்றுயர்ந்த, தொல் மதம் - அநாதி மதமானது, தோன்றும்—, எ - று.

(வி - ரை.) உத்தர பாகம் - பிற்பகுதி. ஏகன் - அத்விதீயன். தோன்றுதல் - சிறந்து விளங்குதல். ஏ, ஆல் - அசைகள். காமிகம் முதல் ஆகமம் - சித்தாந்தமென்னும் காமிகம் முதலிய மஹாதந்திரங்கள். (கச)

சித்த மாகுஞ் சிவமய மாகிய
வித்தை யூடு விசேடம தாகியே
யெத்தி றலிங் கிரமிப்ப னன்னவன்
பொய்த்தி டாத புகழ்வீர சைவனே.

(ப-ரை.) எத்திறைல் - யாது காரணத்திறைல், சித்தம் ஆகும் - உறுதியான, சிவமயம் ஆகிய—, வித்தையூடு - வித்தையில், விசேடம் ஆகி - சிறந்ததாகி, இங்கு-இவ்வுலகில், இரமிப்பன் - ரமிப்பானே, (அக்காரணத்திறைல்) அன்னவன்-அம்மகாபாக்கியவானே, பொய்த்திடாத - பொய்த்துப் போகாத, புகழ் - புகழையுடைய, வீரசைவன் - வீரசைவனுவன்.

(வி - ரை.) ரமித்தல் - வடசொல். மகிழ்தல் என்பது பொருள். சிவமயம் - சிவஸ்வரூபம். அது - பகுதிப்பொருள் விகுதி. ஏ - அசை. (கரு)

தீத கன்ற சிவசீவ யிக்கியமாம்
வீத ரும்பெரு வித்தையி னன்குறச்
சாத மின்றி ரமிக்குமச் சைவன்மற்
ரோதி லன்னே னுயர்வீர சைவனே.

(ப-ரை.) வீ - வீ என்னும் சப்தத்தால், தரும் - தருகிற, தீது அகன்ற - தீமையொழிந்த, சிவ சீவ ஐக்கியம் ஆம் - சிவ சீவ ஐக்கியமாகிய, பெரு வித்தையில் - பெரிய வித்தையில், நன்கு உற - நன்மைமிக, சாதம் இன்றி - பிறத்தலில்லாமல், ரமிக்கும் - ரமிக்கின்ற, அ - அந்த, சைவன் - சைவனுனவன், ஓதின் - சொல்லுமிடத்து, அன்னேன் - அவனே, உயர் - உயர்ந்த, வீரசைவன் - வீரசைவனுவான், எ - று.

(வி - ரை.) சிவ சீவ ஐக்கியம் - சிவ சீவர்கள் ஒன்று படுதல். சாதம் ஜாதம் என்னும் வடசொற்றிரிபு. (கசு)

வித்தை யூடு விரவிய மாயையைக்
கைத்து நாயெனக் கண்டு விடுதலை
வைத்த வாதி வருண முணர்த்துறு
முத்தி யாலுயர் வீர மாகேசனும்.

(ப-ரை.) வித்தை யூடு விரவிய - வித்தையோடு கலந்த, மாயையை—, கைத்து - வெறுத்து, நாய் எனக்கண்டு - நாய்போலப் பார்த்து, விடுதலை வைத்த - விடுவதை நிலைபெறச்செய்த, ஆதி வருணம் - முதல் வருணத்தார், உணர்த்துறும் - அறிவிக்கிற, உத்தியால் - யுக்தியினுல், உயர் - உயர்ந்த, வீரமாகேசன் ஆம் - வீரமாகேசனுவான், எ - று.

(வி - ரை.) வீ - (சிவ) வித்தையில், ர - ரமித்து, மா - மாயையை, ஶ்வ - சுனகன் போல, ர - ரஹிதனுய்ச்செய்யவும், வீரமாஹேஶ்வரனுவான். (கஎ)

வேறு.

அரியவே தாந்தத்தி னுகு ஞானமே
மருவரும் வித்தையென் றுரைப்பர் மற்றதில்
விரவினேன் யாவன்மற்ற னையன்வீ ரனென்
றுரைதரு கிற்பர்மெய் யுணர்ந்து ளோர்களே.

(ப-ரை.) அரிய - அருமையாகிய, வேதாந்தத்தின் - வேதாந்தத்தினுல், ஆகும் - உண்டாகிற, ஞானமே - ஞானந்தானே, மருவு அரும் - அடைதற்கரிய, வித்தையென்று உரைப்பர்—, அதில் விரவினேன் யாவன் - அதிற்கலந்தவன் எவனே, அனையன் - அவனே, வீரன் என்று - வீரசைவன் என்று, மெய் உணர்ந்துளோர்கள் - உண்மையையறிந்தவர்கள், உரை தருகிற்பர் - சொல்லுவர், எ - று.

(வி - ரை.) வேதாந்தம் - வேதமுடிவு. விரவல் - கலத்தல். உரைதருகிற்பர் என்பதற்குப் பகுதி உரைதா, இல் ஆற்றற் பொருண்மை விகுதி. மற்று, ஏ - அசைகள். (கஅ)

உட்புறம் பூசனை யுடையர் சைவருந்
திட்பமா யேசரு மாவர் தேர்ந்திடிற்
கொட்பறு சிவன்ரன் போலக் கூறிய
பெட்புறு மவர்களும் பின்ன மாயிடார்.

(ப - ரை.) உள் - உள்ளும், புறம் - புறத்தும், பூசனை உடையர் - பூசையுடையவர்கள், (முறையே) சைவரும்—, திட்பம் - திடம் பொருந்திய, மாயேசரும் ஆவர்—, தேர்ந்திடின் - ஆராயின், கொட்பு அறு - சுழற்சியற்ற, சிவன் அரன் போல - சிவன் அரன் என்பவர் போல, கூறிய - சொல்லப்பட்ட, பெட்பு உறும் அவர்களும் - பெருமை பொருந்திய அவர்களும், பின்னம் ஆயிடார் - வேறுபடார், எ - று.

(வி-ரை.) உட்புறம் பூசனையுடையவர் சைவரும் திட்பமாயேசருமாவர் என்றது அகப்பூசையுடையவர் வீரசைவர், புறப்பூசையுடையவர் வீரமாயேசர் என்றபடி. தேர்தல்-ஆராய்தல். அவர்கள் என்றது வீரசைவர் வீரமாயேசர் என்பவர்களை. அரன் என்றது மகேசனை.

மிறையறுஞ் சைவர்மெய்ஞ் ஞான வேள்வியுங்
கறையின்மா யேசரொண் கரும வேள்வியும்
பெறுநரென் றுரைத்திடும் பெற்றி யாலகம்
புறமுறு நெறியினர் புகன்று ளோர்களே.

(ப - ரை.) மிறை அறும் சைவர் - மாறுபாடற்ற சைவர், மெய்ஞ்ஞான வேள்வியும்—கறை இல் - குற்றமில்லாத, மாயேசர்—, ஒள்-ஒட்பமாகிய, கருமவேள்வியும்—, பெறுநர் என்று - பெறுவாரென்று, உரைத்திடும் பெற்றியால் - சொல்லப்படுந் தன்மையால், புகன்றுளோர்கள் - மேற் சொல்லப் பட்டுள்ளோர், அகம் புறம் உறும் நெறியினர் - உள்ளும் புறமுமாகிய நெறியை யுடையவராவர், எ - று.

(வி - ரை.) மிறை - விரோதம் எனினுமாம். நெறி - வழி. ஏ-அசை. அகம் புறம் உறும் நெறியினர் என்றது வீரசைவரையும் வீரமாயேசரையும் உணர்த்திற்று. (உ0)

விலகுறு பலநெறி வீர சைவர்தா
மலைவறு பத்தன்முன் வழக்க பேதமுந்
தலநெறி விபேதமுந் தரிக்குந் தன்மையா
லிலகுவ ரறுவகை யினரென் றெண்ணவே.

(ப - ரை.) பலநெறி விலகுறு - அநேக மார்க்கமொழிந்த, வீரசைவர்—,மலைவு அறு-பிரமையற்ற, பத்தன்முன் - பக்தன் முதலாகிய, வழக்க பேதமும் - வழக்க வேறுபாடும், தலநெறி - தலதர்மவழியின், விபேதமும் - வேறுபாடும், தரிக்கும் தன்மையால் - பெறுகின்ற தன்மையினால், அறு வகையினர் என்று எண்ண - அறு வகையரென் றெண்ணும்படி, இலகுவர் - விளங்குவர், எ - று.

(வி - ரை.) பலநெறி விலகுறு வீரசைவர் என்றமையால், வீரசைவர் பலவழிகளிற் சென்றலையாமல் ஒருவழிப்பட்டு விளங்குவரென்றவாறாயிற்று. தாம் - அசை. விலகுறு பலநெறி என பாடபேதமுண்டு ; இதற்கு பிறவி மார்க்கத்தையொழித்த எனப்பொருள் கொள்க. (உக)

தலத்தொடு பலவகைத் தருமமாதலா
லிலக்கதி காரிகள் பேத மெய்தலால்
விலக்கரு மறிஞராம் வீர சைவர்தங்
கலைத்திற மதுவுமோ ராறு காண்டமாம்.

(ப - ரை.) தலத்தொடு - தலத்தோடு கூடி, பலவகை தருமம்ஆதலால்—, இலக்கு - இலக்காகிய, அதிகாரிகள்—, பேதம் எய்தலால் - வேறுபாடடைதலால், விலக்கு அரும் - விலக்குதற்கரிய, அறிஞர் ஆம் - ஞானியராகிய, வீரசைவர் - வீரசைவரது, கலைத்திறமதும் - நூல்வகையும், ஓர் ஆறு காண்டம் ஆம்—, எ - று.

(வி - ரை.) அறிஞர் என்பதில் ஞகரம் பெயரிடை நிலை. இலக்கு - லக்ஷயம் (குறி). காண்டம் - பிரிவு. தம் - சாரியை. அது - பகுதிப்பொருள் விகுதி. (உஉ)

உபதேசம் - முற்றும்.

ஓம்

பரப்ரஹ்மணே நம:

# அங்கலிங்கோத்பவம்.

*நிரஞ்சந லிங்கஸ்தலம் - சூந்ய லிங்கஸ்தலம் - நிஷ்கள லிங்கஸ்தலமாய் விளங்குவது மஹாஸ்தலம்.*

**நிரஞ்சநலிங்கஸ்தலமாவது,** வீரதந்திர விதிப்படி பிரபஞ்சோற்பத்திக்கு ஆதி (முதற்) காரணமாயுள்ளது. எவ்வாறெனின்:— முதல் நடு வீறும், நாத பிந்து கலைகளும், அவைவைத்தோடு கூடியுங் கூடாமலும், தத்துவ ரூபமான பிரமாண்டாதி யுலகங்களும், அஷ்டமூர்த்திகளும், நாமரூப க்ரியைகளும், உற்பத்தி ஸ்திதி லயங்களும், சாத்விகாதி முக்குணங்களும், அகங்கார மமகாரங்களும், ஞாஞ ஞ் ஞானங்களின் உற்பத்தியும், சுட்டிக் காட்டுபவரும், தன்னையும் பிறரையும் மற்றெவரையு மறிதலும், பாஹ்யாந்தரங்களும், குறிப்பிடும் அரி பிரம்மாதி சமஸ்த தேவர்களும், சிற்சத்தியென்னும் பெயரும், சூந்யா சூந்யங்களும், தத்பத த்வம்பத அசிபதங்களும், மற்றியாதும் இல்லாத காலத்தும் நித்யமாயுள்ளதெதுவோ அது.

**சூந்யலிங்கஸ்தலமாவது,** மேற்கண்ட நிரஞ்சநலிங்கமே அநிர்வாச்சிய சூந்யலிங்கமாய் தநு முதலியவைகளும், மனுதிகளும், காலகர்மங்களும், இந்திரிய வியாபாரங்களும், சுகதுக்கங்களும், ஆதியநாதித்துவங்களும், நாத பிந்து கலைகளின் தோற்றங்களும், ஆத்மாநாத்மாக்களும், அரி பிரம்மாதி தேவர்களும், சராசரப் பிரபஞ்சங்களும், சிற்சத்தியுற்பவமும், சச்சிதாநந்தாதி தத்துவ லட்சணங்களும், அண்டஜ முதலிய நால்வகைத் தோற்றங்களும், எல்லையுற்றதும் எல்லையற்றதும், கமனாகமனங்களும், புண்ய பாபங்களும், தர்ம கர்மங்களும், சுவர்க்க நரகங்களும், இம்மை மறுமைகளும், பஞ்சபூத பௌதிகங்களும், அநந்தகோடி பிரமாண்டங்களும், தன்மை முன்னிலை படர்க்கைகளும் இல்லாத காலத்தும் மஹா சூந்யமாயுள்ள தெதுவோ அது.

**நிஷ்களலிங்கஸ்தலமாவது,** மேற்கண்ட சூந்யலிங்கமே நிஷ்கள ஸ்வயம்பு லிங்கமாய் தந்தை தாய், நாமம் குறி, பிறப்பிறப்பு, பிரகாசம் அப்பிரகாசம், ரூபா ரூபம், தான் எதற்கும் எதிர்நிற்றல் தனக்கு எதிரில் ஒன்றிருத்தல், காரண காரியங்கள், முன் பின், மேல் கீழ், இடம் வலம், பற்றுதல் பற்றாமை, பார்த்தல் பாராமை, சொல்லல் சொல்லாமை, அறிதல் மறத்தல், சாத்யாசாத்யங்கள், பூஜிப்பவன் பூஜிக்கப்படுபவன், அங்கஸ்தல லிங்கஸ்தலப் பகுப்புக்கள், வேதாகம புராணேதிகாசங்கள், த்வைதாத்வைதங்கள், வெண்மை முதலிய பல நிறங்கள் ஆகிய இவைகள் இல்லாத காலத்தும், தான் ஒன்றைப் பற்றாமலும் எல்லாவற்றிற்கும் தான் பற்றுக்கோடாகவும், தனக்கோராதாரமின்றி எவற்றிற்கும் தானுதாரமாகவும், நிராதார சர்வாதார சர்வஜ்ஞ சர்வேஶ்வரனாய் அங்கஸ்தலமாறும், லிங்கஸ்தலமாறும், அறுவகைப் பக்தியும், அறுவகைச் சக்தியும், கர்ப்பீ கரித்துக்கொண்டு சச்சிதாநந்த நித்ய பரிபூர்ண சாக்ஷாத்காரமாய் நின்றதெதுவோ அது.

இவ்வித நிஷ்கள மஹாலிங்க ஸ்தலத்தில் அக்நியின் உஷ்ணம் போலுள்ள சிற்சத்தியின் ஸ்புரணத்தினால் கயிற்றின்கண் அரவு போலவும், நிஸ்தரங்க சமுத்திரத்தில் புற்புதாதிகள் (குமிழி-அலை-நுரை) உண்டாவது போலவும், ஆதியில் ஆத்மாங்கமும் (ஆன்மா), அவ்வாத்மாங்கத்தில் ஆகாயமும், அவ்வாகாயத்தில் வாயுவும், அவ்வாயுவில் தேயுவும், அத்தேயுவில் அப்புவும், அவ்வப்புவில் பிருதிவியும், அப்பிருதிவியில் முப்பத்தாறு தத்துவங்களும், அநந்தகோடி சூரிய சந்திரர்களும், பதினான்கு புவனங்களும், சப்த சாகரங்களும், நவ கண்டங்களும், அஷ்ட திக்குகளும், நக்ஷத்திர ராசிகளும், விஷ்ணு பிரம்மாதி தேவர்களும், யக்ஷர், ராக்ஷதர், கின்னரர், கிம்புருடர், கந்தருவர், கருடர், பூதப்ரேத பைசாசர், அண்டஜ ஸ்வேதஜ ஜராயுஜ உத்பிஜ்ஜங்கள், கேசர பூசர வநசர ஜலசரங்கள் வ்ருக்ஷம், கொடி, செடி, மலை, நதி, வனாந்தராதி சமஸ்த வஸ்துக்களு முண்டாயின.

இவ்வாறு பிரபஞ்சோற் பத்தியாகவும் அக்காலையில் ஒன்றேயாய்நின்ற சிவ சைதந்யமே பின்னர் தன்னில் மாயாப் பிரசஞ்சத்தை யடக்கிக் கொண்டு தானொன்று - மாயாப் பிரபஞ்சமொன்று - ஆக இரண்டாயிற்று. [இங்கு, சாமானிய ரீதியாய், இம்மாயாப் பிரபஞ்சத்தி லிருக்கும் வியவகாரிக ஜீவர்களே உபாசகராய் அங்க ஸ்தலத்தினராயினர். ஆதார பூதமாயிருக்கத் தக்க பாரமார்த்திக சைதந்யமே உபாசியமாய் லிங்க ஸ்தலமாயிற்று. பாவனா ரீதியாய், போஷ்ய போஷக விபேதத்தினாலும், ஆதேய ஆதார விபேதத்தினாலும், சதி பதி, சீடன் குரு, அர்ச்சகன் தேவன், பிரஜை ராஜன், சேவகன் யஜமான், குழந்தை தாய், வ்ருக்ஷம் பூமி, பூமி சூரியன், இத்யாதியாய் முந்தினவர் அங்க ஸ்தலத்தைப் பொருந்தினவராய், பிந்தினவர் லிங்க ஸ்தலத்தைப் பொருந்தினவரா யிருக்கிறார்கள். கிரம ரீதியாய், தாரகனான பக்தனது சரீரமே அங்கஸ்தலம், தாரியனான லிங்கமே லிங்க ஸ்தலமா யிருக்கிறது] இங்கு, கிரம ரீதியே யங்கீகரிக்கப் பட்டிருக்கிறது. அங்க ஸ்தலமே பூஜகன், லிங்கஸ்தலமே பூஜ்யன்; அங்கமே ஜீவாத்மா, லிங்கமே பரமாத்மா; சங்கமே ஐக்கியம்; அங்கலிங்க சங்கமென்றால் ஜீவ பரமைக்கியம்; ஆனதினால் அங்கமே த்வம்பதம், லிங்கமே தத்பதம், சங்கமே அசிபதம்; லிங்காங்க சங்கமென்றால் தத்வமசி மகா வாக்யார்த்த போதகமா யுள்ளது. நிஷ்கள லிங்கத்தில் சிற்சத்தி லீனமாயிருந்த தென்று மேலே சொல்லப்பட்டிருப்ப தன்றே? லிங்கம் இரண்டான வுடனே தத்கதமா யிருந்த (மகா) சத்தியும் ஸ்வஸ்வாதந்த்ரியத்தினாலும், (பர)சிவசமான தர்மத்தினாலும் பெரு நெருப்பானது வேறு வேறு சிறிய தீபங்களானது போல, பக்தியொன்று, (கலை அல்லது பரை அல்லது) சக்தி யொன்று என இரண்டாயிற்று. பக்தி அங்க ஸ்தலத்தையும், சக்தி லிங்க ஸ்தலத்தையும் சம்பந்தித்தன. இவைகளில் பக்தி பிரபஞ்சத்தின் லயத்தையும், சக்தி பிரபஞ்சத்தின் விருத்தியையும் விரும்புவது. பக்தி மாயா ரஹிதமாயுள்ளது, சக்தி மாயாசஹிதமாயுள்ளது. பக்தி ஊர்த்த்வமுகம், சக்தி அதோமுகம். பக்தி நிவிர்த்தி மார்க்கம், சக்தி பிரவிர்த்தி மார்க்கம். புகையில்லாதிருக்கும் சோதி போல பக்தி வாசனா ரஹிதமாய்ப் பிரகாசித்துக் கொண்டிருக்கும், நெருப்பின்சுவாலையானது புகையினால் மூடப் பட்டிருக்குங்காலையில் வெளிச்சத்தைப் பரவச்செய்யாமல் மழுங்கி யிருப்பதுபோல (கலை) சக்தி வாசனா சஹிதமாயிருக்கும். பக்தியினால் ரூபம் விரூபமாகிறது, சக்தியினால் விரூபம் ரூபமாகிறது. பக்திக்கு உபாசகத்துவம் உண்டானதினால் அது அங்க ஸ்தலத்தை யாஸ்ரயித்தது, சக்திக்கு உபாசியஸ்தலம் உண்டானதினால் அது லிங்கஸ்தலத்தை யாஸ்ரயித்தது. எக்காலத்தில் பிரபஞ் சோற்பத்தியானதோ அக்காலத்தே சகல ஜீவர்களும் மஹா லிங்கத்தில் ஒடுங்கி நிற்பதாயினும் வியவகார தசையில் லிங்கத்தினின்றும் பின்னமாய்த் தோன்றி சுகதுக்காதிகளை யநுபவித்து, மீளவும் தாங்கள் எவ்விலிங்கத்தினின்று உற்பவித்தனரோ அவ்விலிங்கத்திலேயே லயப்பட விரும்புவர். இவ்வாறு விருப்ப முள்ளவர்களில் பிண்ட ஸ்தல - பிண்டஞான ஸ்தல - சமுசார நீக்க ஸ்தலங்களைத் தாண்டி லிங்க தாரணத்திற்கு வரும் வீரமாஹேஸ்வரரே சிரேஷ்டர்; சிவஜீவைக்கியம் இவர்களுக்கு முதலில் சித்திக்கிறது; ஏனையோர் இவர்கட்குப் பிற்பட்டவரே.

இங்கு, மஹாஸ்தலத்திற்கு வாச்சியமானது பரப்ரஹ்மம், அதே பரசிவம், அதே மஹாலிங்கம் எனினுமாம்.

முற்காலத்தில் வடதேசத்தின்கண் புண்யஸ்தலமாகிய கல்யாணபுரியிலே சிவபக்தியை உத்தாரணம் செய்தற்காக அவதரித்தவர் ஸ்ரீவசவேசர். சிவபெருமானே ஜங்கம வடிவுதாங்கி குருமூர்த்தமாயெழுந்தருளி லிங்கதாரணம் செய்யப்பெற்றவரும் இவரே. தர்மஸ்வரூபியும், கருணாநிதியும், சதாகாலம் அநேகமாயிரம் சிவகணங்களுக்குத் திருவமுது படைத்த வள்ளலும் இவரே. விஜ்ஜல மகாராஜனுக்கு மந்திரியாயிருந்து மகிமையுடன் வேதபாஹ்யரான பாஷண்ட மதத்தினரையும், ஏனைய புறமதத்தினரையும் வென்ற வீரரும் இவரே. இவரது தமக்கைமாது சிரோமணியாகிய நாகாம்பையின் திருவயிற்றில் அவ

தரித்தவர் ஸ்ரீசென்னவசவேசர். சிவோபதிஷ்டமான அசாதாரண வீரசைவமத ஷட்ஸ்தல ஞானசாரத்தை உலகில் பரவச்செய்த மஹாபுருஷரும் இவரே. இவருக்கு ஜனன காலத்திலேயே விதிப்படி லிங்கதாரணமாயினும், அந்த லிங்கம் அத்வாசோதன கலா வாஹனங்களையடைந்து கொடுக்கப்பட்டு, அதை யார்ச்சிப்பதே வீரசைவ தர்மமாயிருப்பதினல் ஸ்ரீ சென்னவசவேசர் தனக்கு மாமனுரான ஸ்ரீவசவேசரையே குருபாவத்தினல் கண்டு, அவராலே மேற்கூறிய ஸம்ஸ்காரத்தை யடையப்பெற்றுர். தனக்கு மூத்தவரும் ஸம்ஸ்காராதிகாரியுமாயிருந்த ஸ்ரீவசவேசரை சென்னவசவேசர் குருபாவத்தினல் கண்டிருந்ததைப்போலவே, ஸ்ரீசென்னவசவேசரிடத்தில் சிவஞானதிக்யத்தைக்கண்டும், அவரால் ஷட்ஸ்தல சித்தாந்தபோதத்தை தான் அடைந்தும் ஸ்ரீவசவேசர் அந்த சென்னவசவேசரையும் பாவத்தினல் கண்டிருந்தார். ஸ்ரீ சென்னவசவேசர் சிவஞானமூர்த்தியே தாணு யிருந்ததினல் பூதலத்தில் ஸ்ரீவசவாதி ப்ரமதர் எல்லோருக்கும் காலோசிதமாய் ஞானேதயம் வரும்படியும் எச்சரித்து, எல்லோரையும் ஷட்ஸ்தல மார்க்க நிஷ்டராகும்படி செய்துகொண்டிருந்தார். ஸ்ரீவசவேசர் பக்தி பரவசத்தினல் ஜங்கமர்களிடத்தில் யோக்யதா விசேஷமொன்றையும் லக்ஷ்யம் செய்யாது தன் பிராணனைப்போலவே அவர்களைக் கண்டுகொண்டிருந்தார். ஸ்ரீ சென்னவசவேசர் அவ்வாறன்று. ஜங்கமர்கள் ஸ்வஸ்வரூப ஞானிகளா யிருக்கத்தக்கதே ஜங்கமலட்சணமென்று விதித்து, எல்லோரையும் அவ்விதமான ஞானிகளாகச்செய்தற்கு அவசியமான நிர்ப்பந்தத்தையும் கற்பித்திருந்தார். ஷட்ஸ்தல ஞானிகளல்லாதவர்கள் தன்னரண்மனைக்கு பிரவேசிக்கக்கூடாதென்று கடினமான உத்திரவுசெய்து, தன் அரண்மனையின் ஆறு வாயில்களிலும் ஆறு ஆட்களை (ஷட்ஸ்தல ப்ரஹ்மிகளை) காவல் வைத்து, வெளியிலிருந்து வருபவர்களையெல்லாம் ஷட்ஸ்தல விசாரமாய் வினவி, அதற்குத்தக்க விடையளித்தவர்களையே உள்ளே விடும்படி ஏற்படுத்தியிருந்தார். இக்காரணத்தினலேயே ஸ்ரீ சென்னவசவேசரை ஷட்ஸ்தல ஸ்தாபனுசாரியரென்று வீரசைவர்கள் நம்பியிருக்கிறுர்கள். இவர் பாலபிரமசாரியாயிருந்து க்ருஹஸ்தாஶ்ரமத்தை ஸ்வீகரிக்காமல் நிராபாரி (யதி) யாகியேமுக்தரானுர். இதன் விரிவை மஹாகாவ்யங்களில் காணலாம்.

இதுபற்றியன்றே ஸ்ரீமத் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய பிரபுலிங்கலீலை துதிகதியில் அடியில் வருமாறு சூசனை செய்யப் பட்டுள்ளது :—

"வெள்ள வேணிப் பெருந்தகைக்கி யாஞ்செய் யடிமை மெய்யாகக்
கள்ள வேடம் புனைந்திருந்த கள்வ ரெல்லாங் களங்கமறு
முள்ள மோடு மெய்யடியா ராக வுள்ளத் துள்ளுமருள்
வள்ள லாகும் வசவேசன் மலர்த்தா டலையால் வணங்குவாம்.

"பங்க வளற்று வழிமாற்றி யொரு நல்வழியைப் பகர்வார்போற்
றங்கண் மதியிற் பலபிதற்றுஞ் சமயருரைக டமை நீக்கி
யங்க நிலையிற் றிலிங்கநிலை யிற்றென் றருளும் வீரசைவ
சிங்க நிலைத்த வருட்சென்ன வசவன் றிருத்தாள் சிரத்தணிவாம்.

"பரசிவம் பிரம மென்னப் பட்டொரு திரிவு மின்றி
யுரைமன மிறந்து நின்ற வொருசிவ லிங்கந் தன்னின்
வருமுயர் சதாசி வன்றுன் மற்றவன் றனைப் பொருந்து
மருமைகொண் ஞான சத்தி யவர்களாற் சிவனு திப்பன்."

அங்கலிங்கோத்பவம் - முற்றும்.

# ப்ரதமபரிச்சேதம்.

# * அங்கஸ்தலம்.

## (இதன் பிரிவு.)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஆதிதனி லரும்பத்தத் தலமாகே சத்தலம்பி னடுக்கும் பின்னர்
சாதமுறும் பிரசாதித் தலமதன்பின் பிராணலிங்கித் தலமா கும்பின்
போதுசர ணத்தலமா ருவதயிக் கியத்தலமாம் புகன்ற வற்றுண்
மாதவமுன் புறுபத்தத் தலமொடதன் றிறமுரைத்து மகிழ்ந்து கேண்மோ.

(ப - ரை.) ஆதிதனில் - முதலில், அரும் - அருமையாகிய, பத்தத்தலம்—, மாகே சத்தலம்—, பின் அடுக்கும் பின்னர் - பின்பு அடுத்தடுத்து வருகிற, சாதம் உறும் - தோன்றுதலையுடைய, பிரசாதித்தலம்—,அதன் பின்—, பிராணலிங்கித் தலம் ஆகும்—, பின் போது - பின்னே வருகிற, சரணத்தலம்—, ஆருவது அயிக்கியத்தலம் ஆம்—, புகன்றவற்றுள் - சொல்லிய வற்றுள், மாதவ - பெருந்தவத்தோனே, முன்பு உறு - முன்னுள்ள, பத்தத்தலமொடு—,அதன் திறம் உரைத்தும் - அதனிலக்கணத்தையும் சொல்லுவோம், மகிழ்ந்து கேள் - மகிழ்ந்து கேட்பாயாக, எ - று.

(வி - ரை.) போதுதல் - வருதல். புகலல் - சொல்லல். மோ - அசை. (க)

---

* மற்றேருபிரிவு.— அங்கஸ்தலம் ஸ்தூல சூக்ஷ்ம காரணம் என மூன்றுவிதமாம்; அவை த்யாகாங்கம் - போகாங்கம் - யோகாங்கம் என்பன; அவற்றுள் சமுசாரபிராந்தி பரித்யாகமே லட்சணமாயுள்ளது த்யாகாங்கம்; சிவப்பிரசாத சேவையினுலுண்டான சுக பரிணமமே லட்சணமாயுள்ளது போகாங்கம்; சிவத்தின் ஐக்யாநுசந்தானமே லட்சணமாயுள்ளது யோகாங்கம். ஸ்தூலதேகயுக்தமானது த்யாகாங்கம்; சூக்ஷ்மதேகயுக்தமானது போகாங்கம்; காரணதேகயுக்தமானது யோகாங்கம். ஜீவாத்மஸம்ஞையுள்ளது த்யாகாங்கம்; அந்தராத்ம ஸம்ஞையுள்ளது போகாங்கம்; பரமாத்மஸம்ஞையுள்ளது யோகாங்கம். த்யாகாங்கலிங்கசம்பந்தம் தாரணையோகமென்று சொல்லப்படும்; போகாங்கலிங்க சம்பந்தம் தியானயோகமென்று சொல்லப்படும்; யோகாங்கலிங்கசம்பந்தம் சமாதியோகமென்று சொல்லப்படும்.

திரிவித லிங்கஸ்தலம் ஆசார பேதத்தினுல் ஆறுபேதங்களாயின. எவ்வாறெனின், த்யாகாங்கம் - பக்தன் மாஹேஸ்வரன் என இரண்டுபேதமாயிற்று; போகாங்கம் - பிரசாதி பிராணலிங்கியென இரண்டு பேதமாயிற்று; யோகாங்கம் - சரணன் ஐக்யன் என இரண்டு பேதமாயிற்று. இந்த ஆறு அங்கஸ்தலத்திற்கும் முறையே பிருதிவி - அப்பு - தேயு - வாயு - ஆகாயம் - ஆத்மா என்பவைகள் அங்கங்களா யிருக்கின்றன; சித்தம் - புத்தி-அகங்காரம்- மனம் - ஞானம் - பாவம் என்பவைகள் ஹஸ்தங்களா யிருக்கின்றன; க்ராணம் - ஜிஹ்வா - சக்ஷுஸ் - த்வக்கு - ஶ்ரோத்ரம் - ஹ்ருதயம் என்பவைகள் முகங்களா யிருக்கின்றன. சிரத்தாபக்தி - நிஷ்டா பக்தி - அவதான பக்தி - அநுபவ பக்தி - ஆநந்த பக்தி - சமரச பக்தி என்பவைகள் பக்திகளா யிருக்கின்றன. சந்தனுதி திரவியம் - மதுரமாதி திரவியம் - ஶ்வேதாதி திரவியம் - ம்ருத்வாதி திரவியம் - நாதாதி திரவியம் - பரிணும திரவியம் என்பவைகள் சமர்ப்பிக்கத்தக்க பதார்த்தங்களா யிருக்கின்றன.

உ

## ௧-வது. பத்தத்தலம்.

[அதாவது—சரீர பிராண தர்மாதிகளெல்லாமும் ஸ்த்திரமென்று தோன்றிக்கொண்டிருப்ப தாயினும் தன் க்ரியா விசேஷத்தினால் அந்த பிராந்தியை விட்டு சித்தத்தை என்றும் சிவபக்தி சதாசாரங்களில் செலுத்தி யிருத்தல் என்பது.]

(இதனுட்பிரிவு.)

பரமசிவ பத்தியுள னெவனவனே பத்தனெனப் படுவ னன்னோன்
றருமமுரை செய்திடுத லமாகு மதன்றிறத்த தலமூ வைந்தா
நிரையினவை பிண்டமதன் ஞானமொடு சமுசார நீக்க மாசா
னருளிலிங்க நீறுமணி முறைதரித்த லஞ்செழுத்து மறிந்து கூறல்.

(ப - ரை.) பரமசிவ பத்தி உளன் எவன் - பரமசிவனது பக்தியுடையவன் எவனோ, அவனே பத்தன் எனப்படுவன்—, அன்னோன் - அவனது, தருமம் உரை செய்திடுதல் - தருமத்தைச் சொல்லுதல், (பத்தத்) தலம் ஆகும்—, அதன் திறத்த - அதன் வகையினவாகிய, தலம் - தலங்கள், மூவைந்து ஆம் - பதினைந்தாகும், நிரையின் - வரிசையில், அவை பிண்டம்—, அதன் ஞானமொடு சமுசார நீக்கம்—, ஆசான் அருள் - குரு காருணியம், இலிங்கம்—, நீறு—, மணி—, முறை தரித்தல் - முறையே தரித்தல், அஞ்சு எழுத்தும் - ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தையும், அறிந்து கூறல் - அறிந்து உச்சரித்தல், எ - று.

(வி - ரை.) நீக்கம் - ஒழிவு, காருணியம் - கருணை, நீறு - விபூதி, மணி - கண்மணி (உருத்திராக்கம்). பிண்டம் என்பது பிண்டத்தலம்; அதன் ஞானமொடு சமுசார நீக்கம் - பிண்ட ஞானத்தலம், சமுசார நீக்கத்தலம்; ஆசான் அருள் - குருகாருணியத்தலம்; இலிங்கம் நீறு மணி முறை தரித்தல்-இலிங்கதாரணத்தலம், விபூதிதாரணத்தலம், உருத்திராக்கதாரணத்தலம்; அஞ்சு எழுத்தும் அறிந்து கூறல் - ஸ்ரீபஞ்சாக்கர ஜபத்தலம். (௧)

பத்திநெறி குருலிங்க வந்தனைசங் கமபூசை பகர்ந்த வன்னோர்
வைத்தபிர சாதவுண வவரிடத்திற் செயுந்தான வகையு பாதி
மெய்த்தநி ருபாதியொடு சகசமென மூதறிஞர் விளம்பா நின்ற
வித்தலத்தில் வருநெறிக ளனைத்து மியற் றுதல் * பத்தர்க் கியல்பு மாதோ.

(ப - ரை.) பத்திநெறி—, குருலிங்க வந்தனை—, சங்கம பூசை—, பகர்ந்த - சொல்லப்பட்ட, அன்னோர் வைத்த - அவர்கள் வைத்த, பிரசாத உணவு - பிரசாதத்தை யுண்ணுதல், அவரிடத்தில் செய்யும் தான வகை—, உபாதி—, மெய்த்த நிருபாதியொடு சகசம் என—, மூதறிஞர் - பேரறிவினர், விளம்பாநின்ற - சொல்லாநின்ற, இத்தலத்தில் வரும் நெறிகள் அனைத்தும்—, இயற்றுதல் - செய்தல், பத்தர்க்கு இயல்பு - பக்தர்களுக்கு இயற்கையாகும், எ - று.

(வி - ரை.) பத்திநெறி என்றது பக்தமார்க்க க்ரியாத்தலம்; குருலிங்க வந்தனை - குருலிங்கார்ச்சனோபயத்தலம்; சங்கம பூசை - ஜங்கமார்ச்சநாரூபத்ரிவிதசம்பத்தித் தலம்; பகர்ந்த அன்னோர் வைத்த பிரசாத உணவு - சதுர்விதஸாராயத்தலம்; உபாதி - உபாதிதானத்தலம்; நிருபாதி - நிருபாதிதானத்தலம்; சகசம் - சகஜதானத்தலம். வந்தனை - ஆராதித்தல். பிரசாதம் - உச்சிட்டசேடம். தானவகை - கொடையின்வகை.

---

* மற்றொரு பிரிவு :—அதாவது பக்தனானவன் குருபக்தன் லிங்கபக்தன் ஜங்கமபக்தன் என மூன்றுவகைப் படுவான். குருபக்தன் லிங்கபக்தன் ஜங்கமபக்தன் முறையே காயிகக்ரியையினாலும், மானஸிகக்ரியையினாலும், ஞானக்ரியையினாலும் உடல் பொருள் ஆவி ஆகிய இவைகளை சமர்ப்பணம்செய்தல். பக்தனை மூர்த்திப்ரஹ்மம் என வழங்குதலுமுண்டு.

ஓம் சிவாயநம:

## முதலாவது

# (க.) பிண்டத்தலம்.



[அதாவது—இருசிஜ்ஞனய், மலத்ரயத்தினுல் கூடிச் சரீராபிமானத்தைத் துறக்காமல் அவித்யா மோஹிதனுய், ப்ரஹ்மைக்ய ஞான தூரனுய், தன் கர்மாநுசாரமான தேவ திர்யங் மநுஷ்யாதி ஜந்மங்களை யடைந்து ஜநந மரணாத்மகமான சமுசார சக்கிரத்தில் சுழன்று கொண்டிருக்கும் ஜீவன் தன் கர்ம பரிபாகத்தினுல் மலத்ரயங்களைப் போக்கிக் கொண்டு எக்காலத்தில் சுத்தாந்தக்கரணனுமாவானே அக்காலத்தில் பிண்டம் என்னும் ஸம்ஜ்ஞை யுள்ளவனுகிறுன் என்பது.]

கலித்துறை.

பண்டொ ராயிரம் பிறவியிற் பயின்றபுண் ணியத்தான்
மண்டு தீவினைப் பரப்பறப் புனிதமா மனத்தைக்
கொண்ட தேகியே கடல்குடித் துயர்குறு முனிவ
பிண்ட நாமமுற் றிடுமென வறைகுவர் பெரியோர்.

(ப - ரை) கடல் குடித்து - கடல்நீரை யாசமநம் பண்ணி, உயர் - உயர்ந்த, குறுமுனிவ - அகத்தியனே, பண்டு - முற்காலத்தில், ஓர் ஆயிரம் பிறவியில்—, பயின்ற - செய்த, புண்ணியத்தால்—, மண்டு-மிகுதியாகிய, தீவினைப் பரப்பு அற-தீவினையின் பெருக்கமொழிய, புனிதம் ஆம் - பரிசுத்தமாகிய, மனத்தைக்கொண்ட—, தேகியே - புருடனே, பிண்ட நாமம் - பிண்டப்பெயரை, உற்றிடும் என - அடைவானென்று, பெரியோர் அறைகுவர் - பெரியோர் சொல்லுவர், எ - று.

(வி - ரை.) ஆசமநம் பண்ணல் - நீரைச் சிறுகப் பருகல். அங்குஷ்டப் பிரமாண ஸ்த்ராதலால் அகத்தியரை, குறுமுனி என்றார். தேகி - தேகத்தை யுடையவன். (க)

மேற்போந்த மூன்றுசெய்யுட்களில் கூறியுள்ள பக்தன் முதல் ஐக்யனீருன ஆறு தலங்கள் இவைகளுக்கு முறையே ஆசாரலிங்கமுதல் மஹாலிங்கமீருன ஆறுதலங்கள் ஆகிய தலவகைகளினிலையைப் பெறுவான், இச்செய்யுளிலும் மேல்வரும் செய்யுட்களிலும்கூறியவாறு ஓர் ஆயிரம் அதாவது அநேக ஜன்மங்களெடுத்து இனி ஜன்மமில்லாது ஒரே ஜன்மத்தில் பிண்டஸ்தலம் சித்தித்து, முக்தனுகிறவனே சிரேஷ்டனுன ஷட்ஸ்தல ப்ரஹ்மியென்பது இனிது விளங்க மஹாதந்திரங்களில் கண்டவாறு, உலகில்காணும் க்ரிமிகளினும் விசேஷம் புழுக்கள், அவைகளினும் அதிகம் இறகுகளையுடைய பறவைகள், அவைகளினும் சிறந்தன மிருகங்கள், அந்த மிருகங்களினும் பசுஜாதிகள், அந்த பசுஜாதிகளினும் மனிதர்கள், அந்தமனிதர்களினும் விப்ரர்கள், அந்த விப்ரர்களினும் க்ருதபுத்திகள், அந்த க்ருதபுத்திகளினும் யஜ்ஞகர்த்தர்கள், அந்தகர்த்தர்களினும் சந்நியாசிகள், அந்த சந்நியாசிகளினும் விசேஷஞானிகள், அந்தஞானிகளினும் சிவார்ச்சகர்கள், அந்த சிவார்ச்சகர்களினும் சிவலிங்கசங்கிகள், அந்தலிங்காங்க சங்கிகளினும் ஷட்ஸ்தலஞானிகள், அந்த ஷட்ஸ்தல ஞானிகளே சிரேஷ்டராவார்.

உலகி றந்துசின் மயவவி காரியா யொளியா
யிலகு றும்பர சிவன்றன தஞ்சமா யிருந்த
வலகி றந்துள சீவர்க ளநாதியா மவித்தை
மலமு றும்பரி சாற்பல பிறவியின் வருவார்.

(ப - ரை.) உலகு இறந்து - எல்லா வுலகங்களையும் கடந்து, சின்மய அவிகாரியாய் - அறிவுருவாகிய அவிகாரியாய், ஒளி ஆய்—, இலகுறும் - விளங்குகிற, பரசிவன் தனது

அஞ்சம் ஆய் இருந்த - பர சிவனது அமிசமாயிருந்த, அலகு இறந்துள்ள - அளவு கடந்திருக்கிற, சீவர்கள்—, அநாதி ஆம் அவித்தை - அநாதியாகிய அஞ்ஞான ரூபமாகிய, மலம் உறும் பரிசால் - மலமிகாநின்ற தன்மையால், பல பிறவியின் வருவார் - பல பிறவியோடு உலகில் வருவார்கள், எ - று.

(வி - ரை.) இறத்தல் - கடத்தல். அவிகாரி - விகார மில்லாதவன். அஞ்சம் அம்சம் என்னும் வடசொற்றிரிபு. அநாதி - முதலில்லாதது (பழமை). உறுதல் - மிகுதல். அநாதியாகிய அவித்தையின் சம்பந்தத்தால் சிவனுடைய அமிசமாயுள்ளவன் சீவன். பல பிறவி என்றது தேவர் - திர்யக் - மனிதன் முதலியோர்களை. (உ)

அனையர் நெஞ்சிடை யியக்கும யேசனுற் றருள்வன்
பனிய விந்துகாந் தத்தினிற் புனல்கதிர்ப் பளிங்கிற்
கனலும் வெவ்வழல் வித்தினின் முளையெனக் கலந்து
முனிவர் சிங்கமென் றுரைத்திட மலையொடு முனிவோய்.

(ப - ரை.) முனிவர் சிங்கம் என்று உரைத்திட - முனிவர் சிங்கமென்று யாவரும் புகழும்படி, மலையொடு - விந்த மலையோடு, முனிவோய் - கோபிப்பவனே, அனையர் நெஞ்சிடை - அவரது மனத்தில், பனிய - குளிர்ச்சியையுடைய, இந்து காந்தத்தினில் புனல் என - சந்திர காந்தத்தில் நீர் போலவும், கதிர்ப்பளிங்கில் கனலும் வெவ்வழல் என - சூரிய காந்தத்தில் சுடுகின்ற கொடிய நெருப்புப் போலவும், வித்தினில் முளை என - வித்தில்முளைபோலவும், கலந்து-சேர்ந்து, இயக்குறும் - இயங்கப்பண்ணுகிற, மயேசன்—, உற்றருள்வன் - கலந்தருள்வான், எ - று.

(வி - ரை.) முனிவோய் என மேல் வருதலால் மலை விந்தமலைக்காயிற்று. சந்திர காந்தம் - ஓர்கல், இது சந்திரனைக்காணின் நீரைக் கக்குவது. கனலல் - சுடுதல். (ங)

வெற்பெ ழுங்கதி ரிடத்தில்விம் பப்பதி விம்ப
முற்ப வம்பெறு மாறென வொருபிர மத்தின்
முற்ப கர்ந்திடு சீவனோ டீசனா முறைமை
கற்பி தம்பெறு மென்பர்பல் கலைநெறி கற்றோர்.

(ப - ரை.) பல் கலை - பல கலைகளையும், நெறி கற்றோர் - வழியாகக் கற்றவர்கள், வெற்பு - உதயகிரியில், எழும் - உதிக்கிற, கதிரிடத்தில் - சூரியனிடத்தில், விம்பப் பதி விம்பம் - விம்பப்பிரதிவிம்பங்கள், உற்பவம் பெறும் ஆறு என - தோன்றுவது போல, ஒரு பிரமத்தில் - ஒன்றாகிய பிரமப்பொருளில், முன் பகர்ந்திடு - முன் சொல்லப்பட்ட, சீவனோடு ஈசன் ஆம் முறைமை—, கற்பிதம் பெறும் என்பர் - கற்பிதமாயுண்டாமென்று சொல்லுவர், எ - று.

(வி-ரை.) நெறி-கற்க வேண்டியமுறை. கதிர் என்பது முச்சுடருக்குப் பொதுவேயாயினும் வெற்பெழும் என்ற அடையால் சூரியனையுணர்த்திற்று. கற்பிதம்-கற்பனை (பொய்).

அறிவ தேவடி வாம்பர தத்துவ மதனி
னிறைவ தாகிய பிரேரகத் துவமொடு நிலைத்த
மறிவில் போத்துருத் துவமிகு போக்கியம் வருமாற்
குறைவி லாதெழு முக்குண பேதமே கொண்டு.

(ப - ரை.) அறிவதே வடிவு ஆம்-அறிவே யுருவாகிய, பரதத்துவமதனில் - பரதத்துவத்தில், குறைவு இல்லாது எழும்-குறைவில்லாமலுண்டாகிற, முக்குண பேதமேகொண்டு-முக்குண வேறுபாட்டினால், நிறைவதாகிய - நிறைவாகிய, பிரேரகத்துவமொடு நிலைத்த - பிரேரகத்துவத்துடனே நிலைபெற்ற, மறிவு இல் - தடையில்லாத, போத்துருத்துவம் - போத்ருத்வமும், மிகு போக்கியம் - மிகுந்த போக்யமும், வரும்-உண்டாகும், எ - று.

(வி - ரை.) பரதத்துவமதனில் என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி, அன் சாரியை, இவ்வாறன்றி பரதத்துவமாகிய அதில் என்றுரைத்தலும் பொருந்தும். முக்குணம்-சாத்துவிகம் ராஜஸம் தாமஸம். பிரேரகம்-காரியம் நடத்துதல். போக்த்ருத்வம் - அநுபவத்தன்மை. போக்யம் - அநுபவப்பொருள். போக்த்ருத்வம் போக்யம் கூறப்பட்டதினால் போக்தாவையும் குறித்தது என்க. (௫)

மடிவி லாதமுக் குணவடி வாகிய மாயை
முடிவி லாதமெய்ச் சிவத்துறு மக்குண மூன்றும்
விடம மேவுற விளம்புமுப் பொருட்பெயர் விரியுங்
கடிவி லாநிலைப் பிரமமா மொருபொருட் கண்ணே.

(ப - ரை.) மடிவு இல்லா - அழிவில்லாத, முக்குண வடிவு ஆகிய மாயை—, முடிவு இல்லாத—, மெய் - உண்மையாகிய, சிவத்து உறும் - சிவத்தின்கண் பொருந்தியிருக்கும், அக்குணம் மூன்றும்—, விடமம் மேவுற - விஷமம் பொருந்த, கடிவு இல்லா நிலை - விலக்கவொண்ணாத நிலையினையுடைய, பிரமம் ஆம் - பிரமமாகிய, ஒருபொருட்கண்ணே - ஒரு பொருளினிடத்திற்றானே, விளம்பும் - சொல்லப்பட்ட, முப்பொருட்பெயர்விரியும் - முப்பொருளின் பெயர்கள் விரிந்துதோன்றும், எ - று.

(வி - ரை.) மாயை என்றது சத்தியை. விடமம் - வருத்தம். கடிதல் - விலக்கல். முப்பொருள் - ஜகஜீவபரங்கள். (௬)

தக்க சத்துவ வுபாதிகொள் பிரமசை தந்ய
மொக்க வீசனாஞ் சத்துவ ரசோமய முயிரா
மிக்க தாமத முடையதே போக்கிய விளைவா
மிக் கணக்கின்முப் பொருளும்வந் துறுஞ்சிவத் திசைந்து.

(ப - ரை.) தக்க - தகுதியாகிய, சத்துவ வுபாதி கொள் - சத்துவ குணோபாதியைக் கொண்ட, பிரமசைதந்யம்—, ஒக்க ஈசன் ஆம் - யாவருமொப்புக்கொள்ளும்படி ஈசன் ஆம், சத்துவ ரசோ மயம் உயிர் ஆம் - சத்வ ரஜோ மயங்கள் சீவனாகும், மிக்க - மிகுந்த, தாமதம் உடையதே—, போக்கிய விளைவு ஆம் - போக்யப்பயனாகும், இக்கணக்கின் - இந்தக்கணக்கினால், சிவத்து-சிவமென்னும் பொருளில், முப்பொருளும்—, வந்து இசைந்து உறும் - வந்து பொருந்தியிருக்கும், எ - று.

(வி - ரை.) உபாதி - அவஸ்த்தை. மயம்-உரு. போக்யம் - அநுபவப்பொருள். (எ)

சுத்த மென்றுள வுபாதியிற் றோய்ந்திடு மீசன்
மெய்த்தி டும்பதி யாகிய பிரேரகன் மிசிர
முய்த்த போத்துருப் பசுவென வறைவர்பே ருணர்வோ
னத்த னவ்வுயிர் சிற்றுணர் வுடையதென் றறியே.

(ப - ரை.) சுத்தம் என்றுள - சுத்தமென்று சொல்லப்பட்டுள்ள, உபாதியில்—, தோய்ந்திடும் - கலக்கின்ற, ஈசன்—, மெய்த்திடும் - உண்மையாகிய, பதி ஆகிய பிரேரகன்—, மிசிரம் உய்த்த போத்துரு - மிசிரத்தோடு கலந்த போக்த்ருவானவன், பசு என - பசுவென்று, அறைவர் - சொல்லுவர், அத்தன் - ஈசன், பேர் உணர்வோன் - பேரறிவினன், அவ்வுயிர்—, சிற்றுணர்வுடையது என்று அறி - சிற்றறிவுடையதென்றறிவாயாக, எ - று.

(வி - ரை.) பிரேரகன்-செலுத்துவோன். பசு-ஜீவன். மிசிரம் - கலப்பு. பேருணர்வை ஸர்வஜ்ஞத்வம் என்றும் சிற்றுணர்வை கிஞ்சிஜ்ஞத்வம் என்றும் கூறுப வடநூலார். (அ)

மிகுதி கொண்மறை யுணர்வதவ் வியத்தமாம் பெயர்கொள்
பகுதி நண்ணினர்க் கமோககா ரணியெனும் பரையே
தகுதி கொண்டிடு சுத்தமா மசுத்தமுஞ் சாற்றிற்
றொகுதி கொண்டிடு மோககா ரணியெனத் துணியே.

(ப - ரை) மிருதிகொள் மறை உணர்வது - மிருதியைக்கொண்ட வேதத்தையறிவது, அவ்வியத்தம் ஆம் பெயர்கொள் - அவ்யக்தமென்கிற பெயரைக்கொண்ட, பகுதி நண்ணினர்க்கு - ப்ரக்ருதியைப்பொருந்தினவர்க்கு, அமோக காரணி என்னும்பரையே—, தகுதி கொண்டிடும் சுத்தம் ஆம் - தகுதியைக்கொண்ட சுத்தமாகும், அசுத்தமும் சாற்றின் - அசுத்தத்தையும் சொல்லுமிடத்தில், தொகுதி கொண்டிடும் - கூட்டங்கொண்ட, மோக காரணி என்னும் பரை—, எனதுணி - என்று நிச்சயித்துக்கொள், எ - று.

(வி - ரை.) அமோககாரணி என்னும்பரை - தனது ஆஸ்ரயத்திற்கு அஞ்ஞானத்தையுண்டுபண்ணுததாகிய பராசத்தி. அவ்யக்தம் - வெளிப்படாதது. மோககாரணி - தனது ஆஸ்ரயத்தை மோகிக்கச்செய்யும் சத்தி. (கூ)

மாயை கொண்டிறை பற்பல மூர்த்திகண் மருவுந்
தூய தன்றெனு மவித்தையாற் றோன்றுவர் பலரா
யேய சீவர்க ளநாதியே முத்தனவ் வீசன்
றீய பந்தனை யநாதியே யுற்றுளர் சீவர்.

(ப - ரை.) மாயைகொண்டு - மாயையால், இறை - இறைவன், பற்பல மூர்த்திகள் மருவும் - பற்பலவுருவங்களைப் பொருந்துவன், தூயது அன்று என்னும் - சுத்தமெனன வொண்ணுத, அவித்தையால் - அஞ்ஞானத்தால், ஏய சீவர்கள் - பொருந்திய சீவர்கள், பலர் ஆய் தோன்றுவர்—, அ - அந்த, ஈசன்—, அநாதியே முத்தன்—, சீவர்—, தீய பந்தனை - கொடிய பந்தத்தை, அநாதியே உற்றுளார் - அநாதி காலத்திற்றனே யடைந்துளர்.

(வி - ரை.) கொண்டு மூன்றுவதன் சொல்லுருபு. தூயது - பரிசுத்தமானது. முத்தன் - விடுபட்டவன். பந்தம் - கட்டு. ஈசன் - மஹேசன். (க0)

பரம ஞானமற் றநாதியாம் பாசமுற் றநாதி
கரும வேதுவா லடுத்துள காயங்கண் மருவி
மிருக மாதியாம் பற்பல பிறவியின் விரவித்
தெரும ருஞ்சுழன் றிடும்பெருந் திகிரிபோற் சீவன்.

(ப - ரை.) சீவன்—, பரமஞானம் அற்று-மேலான ஞானமற்று, அநாதி ஆம் பாசம் உற்று - அநாதியாகிய பாசத்தைப்பொருந்தி, அநாதி கருமம் - அநாதி கர்மங்களாகிய, ஏதுவால் - காரணத்தால், அடுத்துள்ள - பொருந்தியுள்ள, காயங்கள்மருவி - சரீரங்களை யெடுத்து, மிருகம் ஆதி ஆம் பற்பலபிறவியில் - மிருகமுதலாகிய பற்பல பிறவிகளில், விரவி - கலந்து, பெருந்திகிரிபோல் - பெரியசக்கரம்போல, தெருமரும் சுழன்றிடும் - தெருமரா நிற்பன் சுழலாநிற்பன், எ - று.

(வி - ரை.) விரவல் - கலத்தல், தெருமரும் என்பதற்குப்பகுதி தெருமா. (கக)

சாதி யாயுவோ டுணவது தரும்விட மத்திற்
கேது வாயுறுங் கருமமெந் திரமெனச் சுழல்வோர்க்
காதி யாமிறை யியக்குவோ னுய்க்கரி யாகிப்
போத கம்புரிந் தருளுநன் னெறியினைப் பொருந்தி.

(ப - ரை.) விடமத்திற்கு ஏதுவாய் உறும் கருமம் - கெடுதிக்கேதுவாயிருக்கிற கர்மங்கள், சாதி ஆயுவோடு உணவு தரும்—, எந்திரம் எனச்சுழல்வோர்க்கு—, ஆதி ஆம் இறை - ஆதியாகிய இறைவன், இயக்குவோன் ஆய் - இயங்குவிப்பவனுகி, கரி ஆகி-சாக்ஷியாகி, நல்நெறியினை பொருந்தி—, போதகம் புரிந்தருளும் - ஞானத்தை யுண்டாக்கி யருள்வன், எ - று

(வி ரை.) ஏது - காரணம். இயக்குவோன் - தொழிற்படுத்துவோன். நன்னெறி - ஸன்மார்க்கம். ஆயு - ஆயுள். உணவு - போகம். (கஉ)

கூறு சீவனும் வினைபரி பாகமே கொண்டு
மாறு மாமல வாதனை மருவினோ னாகி
யாறு மாமுடி புனைந்தருள் பரசிவ னருளின்
பேறு கூடுறச் சுத்தமா மனமொடு பிறக்கும்.

(ப - ரை.) கூறு சீவனும் - சொல்லப்பட்டசீவனும், வினைபரிபாகமேகொண்டு—, மாறும் - மாறுபட, மா - பெரிய, மல வாதனை - மலவாசனையை, மருவினோன் ஆகி - பொருந்தினவனாகி, மாமுடி - பெரியதிருமுடியில், ஆறு - கங்கையாற்றை, புனைந்தருள் - தரித்தருளின, பரசிவன் அருளின் - பரசிவனருளினால், பேறு கூடுற - வீடுபேறடைய, சுத்தம் ஆம் மனமொடு பிறக்கும் - சுத்தமாகிய மனத்துடனே பிறப்பான், எ - று.

(வி - ரை.) வினைபரிபாகம் - இருவினையொப்பு. மாறுமாமலவாதனை - என்றது மல வாதனை மாறின என்றபடி. (கரு)

பாக மாகிய நல்வினைப் பயன்கொடு சுத்த
மாகு மாமன முன்னிடத் தங்கண னருளா
லேக மாஞ்சிவ பத்திதோன் றுறுமவ னீற்றுத்
தேக மோடுநற் பிண்டமென் பெயர்கொடு செறியும்.

(ப - ரை.) பாகம் ஆகிய - பக்குவமடைந்த, நல்வினைப்பயன்கொடு - நல்வினைப்பயனால், சுத்தம் ஆம் ஆறு - சுத்தம் ஆகும் வண்ணம், மனம் முன்னிடத்து - மனம் மூந்தின காலத்தில், அங்கணன் அருளால் - ஈசனருளினால், ஏகம் ஆம் - அத்விதீயமாகிய, சிவபத்தி தோன்றுறும்—, அவன்—, ஈற்று தேகமோடு - ஈற்றுடம்போடு, நல்-நல்ல, பிண்டம் என் பெயர் கொடு - பிண்டமென்னும் பெயரோடு, செறியும் - உலகில் சஞ்சரிப்பன், எ - று.

(வி - ரை.) நல்வினைப்பயன் - புண்ணியம். கொடு - மூன்றுருவதன் சொல்லுருபு. ஈற்றுதேகம் - முடிவானவுடம்பு. (கச)

பிண்டத்தலம் - முற்றும்.

உ

ஓம் மஹேஶ்வராயநம:.

இரண்டாவது

## (உ) பிண்டஞானத்தலம்.

[அதாவது - சரீரங்கள் நஶ்வரமானவைகள், ஆத்மாக்களைப் பார்க்கிலும் ஈஶ்வரன் பின்னனும் அவைகளுக்குப் பிரேரகனுமா யிருப்பவன் என்னும் ஞானம் பிண்டனானவனுக்கு எக்காலத்திலுண்டாகுமோ அக்காலத்தில் பிண்ட ஞானி என்பது.]

கலிவிருத்தம்.

உற்றிடு முடலுயி ருணர்வி வேகமே
பெற்றவ னெவனவன் பிண்ட ஞானியென்
றற்றம தறுமலை யமர்ந்த மாதவ
கற்றறி புலவர்மெய் கழறு வாரரோ.

(ப - ரை.) உற்றிடும் - (தான்)அடைந்த, உடல் - உடம்போடு கூடிய, உயிர் - உயிரானது, உணர் - (எல்லாவற்றையும்) அறிதற்குரிய, விவேகமே பெற்றவன்—, எவன் - எவனோ—, அவன் பிண்டஞானி யென்று—, கற்று அறி புலவர்—, மெய் கழறுவார் - உண்மையாகச் சொல்லுவர், அற்றம் அறும்-குறைவற்ற, மலை அமர்ந்த - பொதிய மலையில் வாழ்கின்ற, மாதவ - பெருந்தவத்தோனே, எ - று.

(வி - ரை.) உற்றிடல் - அடைதல். அமர்ந்த என்பதற்கு விரும்பின என்றுரைப்பினு மாம். அரோ - அசை. அது - பகுதிப்பொருள் விகுதி. (க)

உடலுயி ரெனுமுல காய தன்பொறி
யடலுயி ரென்னுமற் றொருவ னன்றியே
புடைவரு புத்தியே யென்னும் புத்தனிவ்
விடலுறு மிவைகளான் மாவின் வேறவாம்.

(ப - ரை.) உலகாயதன்—, உடல் உயிர் என்னும் - உடம்பே உயிர் என்பான், மற் றொருவன்—, பொறி - பொறிகளே, அடல் உயிர் என்னும்-வலிய வுயிரென்பான், அன்றி யே—, புத்தன்—, புடைவரு - நம்மிடத்துண்டாகிய, புத்தியே—, என்னும் - என்பான், இவ் - இவை யாவும், விடல் உறும் - விட்டொழியத் தகும், (மற்றென்னெனின்) இவை கள்—, ஆன்மாவின் வேற ஆம் - ஆன்மாவுக்கு வேறாயினவாம், எ - று.

(வி - ரை.) புடை - ஏழனுருபு இடப்பொருளது. (உ)

உயிரின்வே றாகிநின் றுணரப் பட்டிடுஞ்
செயிருறு முடலொ டிந்திரிய புத்தியி
னயலழி வரியவான் மாவுண் டாமென
நயமுட னுணர்பவன் பிண்ட ஞானியே.

(ப - ரை.) உயிரின் - உயிரினும், வேறு ஆகி நின்று—, உணரப் பட்டிடும் - அறியப் படுகிற, செயிர் உறும் - குற்றம் பொருந்திய, உடலொடு—, இந்திரிய புத்தியின் - இந்தி ரிய புத்திகளினும், அயல் - வேறாக, அழிவு அரிய - அழிவற்ற, ஆன்மா உண்டாம் என—, நயமுடன் - நன்மையாக, உணர்பவன்—, பிண்டஞானி - பிண்ட ஞானியென்று சொல் லப்படுவன், எ - று.

(வி - ரை.) உயிரின் என்பதில் இன் ஐந்தாவதுறழ்ச்சிப்பொருளது. அரிய என்பதில் அருமை இன்மைப் பொருட்டு. (௩)

வினைவழி திரிதரு மெய்யும் வேறதாய்
நினைவரு நித்தவான் மாவு நித்தமா
யனையவான் மாவின்வே றாய வீசனும்
பினமுற வறிபவன் பிண்ட ஞானியே.

(ப-ரை.) வினைவழி - வினையின் வழியே, திரிதரும்-சஞ்சரிக்கிற, மெய்யும்-உடம்பை யும், வேறு ஆய்—, நினைவரும்-நினைத்தற்குரிய, நித்தம் - சாசுவதமாகிய, ஆன்மாவையும் —, நித்தமாய்—, அனைய - அத்தன்மையாகிய, ஆன்மாவின் - ஆன்மாவினும், வேறு ஆய ஈசனும் - வேறாகிய ஈசனையும், பின்னம் உற அறிபவன் - வெவ்வேறாயறிவோன், பிண்ட ஞானி—, எ - று.

(வி-ரை.) திரிதரும் என்பதற்குப் பகுதி திரிதா. நினைவரும் என்பதை நினைவு அரும் எனப் பிரித்து நினைத்தற்கரிய என்றுரைப்பினுமாம். ஏ - அசை. அது - பகுதிப்பொருள் விகுதி. (௪)

பிண்டஞானத்தலம் - முற்றும்.

உ

ஓம் ஸம்பவேஸம:॥

மூன்றாவது

# (௩.) சமுசார நீக்கத்தலம்.

[அதாவது-இங்ஙனம் பிண்ட ஞானோதயமான மஹாத்மாவுக்கு ஸம்ஸ்கார வல்லமையினால் மனைவி, புதல்வன், உடல், பொருள் முதலிய சமுசாரங்களைத் துச்சமாய்க்காணும் புத்தியுண்டாய் வைராக்கிய முள்ளவனாதல் என்பது.]

கலிவிருத்தம்.

சுத்தம துறுமனந் தோன்று நித்தியா
நித்திய விவேகிபா னின்ற வாதனா
சத்தியின் மிகுசமு சாரம் விட்டொழி
புத்திவந் துறுமெனப் புகல்வர் கற்றுளார்.

(ப - ரை.) சுத்தம் உறும் மனம் தோன்றும் - சுத்தமாகிய மனமுண்டாகும், நித்தியாநித்திய விவேகிபால் - நித்யாநித்யவஸ்து விவேகியினிடத்தில், நின்ற - நிலைபெற்ற, வாதனா சத்தியின் - (புண்ணிய) வாசனா சத்தியினால், மிகு - மிகுந்த, சமுசாரம் விட்டு ஒழி - சம்சாரத்தை விட்டொழிக்கிற, புத்தி வந்து உறும் என - புத்தியுண்டாகுமென்று, கற்றுளார் - கற்றறிந்துள்ளவர், புகல்வர் - சொல்லுவர், எ - று.

(வி - ரை.) நித்தியா நித்திய வஸ்து விவேகி - அழியாப் பொருள் அழியும் பொருள்களை யாராய்ந்தறியும் அறிவுள்ளவன். வாசனாசத்தி - லோகவாசனையின் வலி. அது - பகுதிப்பொருள் விகுதி. (௧)

பெண்டெழு வாய்தரு பேறி மைப்பினில்
விண்டிடு மிம்மையு மேய புண்ணிய
முண்டொழி துயர்முத லுறுது றக்கமுங்
கண்டெவர் விரும்புவார் கற்று ளோரினே.

(ப - ரை.) பெண்டு எழுவாய் தரு - பெண் முதலானவைகளால் தரப்படுகிற, பேறு - பயன், இமைப்பினில் விண்டிடும் - இமைப்பொழுதில் நீங்கிப் போகாநின்ற, இம்மையும் - இம்மைச் சுகமும், மேயபுண்ணியம் - பொருந்திய புண்ணியப்பயனை, உண்டு ஒழி - நுகர்ந்தொழித்தற் கிடமாகிய, துயர் முதல் உறு - துன்ப முதலானவையுள்ள, துறக்கமும் - சுவர்க்க வின்பமும், கற்றுளோரின் - கற்றுளோர்களுக்குள்ளே, எவர் கண்டு விரும்புவார்—, எ - று.

(வி - ரை.) இம்மைச் சுகம் - இவ்வுலக வின்பம். நுகர்தல் - அநுபவித்தல். எவர் கண்டு விரும்புவார் என்றவினா ஒருவரும் விரும்பமாட்டாரென எதிர்மறைப்பொருளுணர்த்தி நின்றது. (௨)

பிறந்தவர்க் குண்மையே பெறுமி றப்புமற்
றறிந்தவர்க் கன்னதே பிறப்பு மிவ்வகை
செறிந்துள பிறப்புட னிறப்பிற் சீவனு
மறிந்திடு சகடமே போல வந்துறும்.

(ப - ரை.) பிறந்தவர்க்கு—, பெறும் இறப்பும் உண்மையே—, அறிந்தவர்க்கு பிறப்பும் அன்னதே—, இவ்வகை செறிந்துள - இவ்வகையாகப் பொருந்தியுள்ள, பிறப்புடன் இறப்பில் - பிறப்பிறப்புக்களில், சீவனும்—, மறிந்திடு சகடமே போல வந்து உறும் - மீண்டு மேல் கீழாய் வருகிற சகடம் போலவே வந்து பொருந்தும், எ - று,

(வி - ரை.) சகடம் - பண்டி, இது இதன் சக்கரத்தை யுணர்த்தலால் ஆகுபெயர். அன்னதே என்பதில் ஏகாரம் தேற்றம். மற்று - அசை. (௩)

மீனொடு கமடமே வெண்பற் பன்றிமா
மானிட வரிமுத லாக வந்துள
வேனைய பிறப்பினு மெய்து மாயவன்
றானுமம் மரணநோய் தள்ள வல்லனோ.

(ப - ரை.) மீனொடுகமடம் - மீனோடு ஆமை, வெண்பல் பன்றி—, மா - பெருமை பொருந்திய, மானிட அரி முதலாக வந்து உள்ள - நரசிங்க முதலாக வந்திருக்கிற, ஏனைய பிறப்பினும் - மற்றைய பிறவிகளினும், எய்தும் மாயவன் தானும் - வந்துதோன்றுகிற மாயோனும், அ - அந்த, மரணநோய் தள்ளவல்லனோ—, எ - று.

(வி-ரை.) தள்ளவல்லனோ என்னும் ஓகார வினா தள்ளவல்லனல்லன் என்னும்பொருள் பயந்து நிற்றலால் எதிர்மறை. (௪)

ஆவிமுன் வினைவசத் தந்த ணதியாய்
மேவுறு சாதியின் விரவித் தோன்றியே
தாவுற வடருமுத் தாப வங்கியால்
வேவுறு நிலைமையாம் விளம்ப வேண்டுமோ.

(ப - ரை.) ஆவி - உயிர், முன்வினை வசத்து - முன்னை கர்மவயத்தால், அந்தணதியாய் மேவுறு சாதியின்-அந்தணர் முதலிய சாதிகளில், விரவி தோன்றி - கலந்து பிறந்து, தாவுற அடரும் - மேலே தாவிப்படர்கிற, முத்தாபம் அங்கியால் - முத்தாப மாகிய நெருப்பினால், வேவுறு நிலைமை - வேகிற நிலையை, யாம் விளம்ப வேண்டுமோ - யாம் சொல்லவேண்டுமோ, எ - று.

(வி - ரை.) அங்கி அக்கியென்னும் வடசொற்றிரிபு. முத்தாபம் - ஆதியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதைவிகம். விளம்பவேண்டுமோ என்னும் ஓகாரம் எதிர்மறை. (௫)

பொய்த்திடா தடையுறும் வினையிற் போதரு
மத்தியான் மிகமுத லாய வெந்துயர்க்
கொத்தினுன் மிகுமிடர் கொண்டு ளோர்தமக்
கெய்த்திடா தமைதலெவ் விடத்துண் டாகுமோ

(ப - ரை.) பொய்த்துறுது - பொய்த்துப் போகாமல், அடையுறும் - வந்து சேர்கிற, வினையின் - வினையினுல், போதரும் - உண்டாகிற, அத்தியான்மிகம் முதலாய—, வெம் துயர்க்கொத்தினுல் - வெவ்விய துன்பக்கூட்டத்தால், மிகும் இடர் கொண்டுளோர் தமக்கு—, எய்த்திடாது அமைதல் - இளையாமல் அமைந்திருத்தல், எவ்விடத்து உண்டாகும்—, எ - று.

(வி - ரை.) வினையின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றுவதன் கருவிப்பொருளில் வந்தது. எய்த்தல் - இளைத்தல். எவ்விடத்துண்டாகும் என்றது எவ்விடத்தும் உண்டாகாதென்றபடி. எய்த்திடாது அமைதல் - ஒழிவு. (௬)

ஆதியத் தியான்மிகம் பவுதி கம்பினு
மோதுதெய் வீகமூன் றுவ தாகுமாற்
போதுமத் தியான்மிகம் புறமுட் கொண்டிரு
பேதமுற் றிடுமெனப் பேசு வாரரோ.

(ப - ரை.) ஆதி அத்தியான்மிகம் - முதலாவது அத்யாத்மிகமும், பின் ஆம் பௌதிகம் - அதன் பின்னாகிய பௌதிகமும், ஓது தெய்வீகம் - சொல்லப்பட்ட தெய்விகமும்

ஆக—, மூன்றுவது ஆகும்—, போதம் - உண்டாகிய, அத்யான்மிகம்—, புறம் உட்கொண்டு - புறம் அகம் என்பவற்றைக்கொண்டு, இருபேதம் உற்றிடும் என-இரண்டுவகையினையுடைத்தாமென்று, பேசுவார் - சொல்லுவர் (அறிஞர்), எ - று. (எ)

வளிமுத லனதர வரல்பு றத்தது
முளினது மடிவில்கா மாதி யுய்க்குதல்
களியர சாதிநோய் பவுதி கங்கழு
தளியிடர் முதலதெய் வீக மாகுமால்.

(ப - ரை.) வளி முதலன தர - வாதமுதலானவை கொடுக்க, வரல் - உண்டாதல், புறத்தது ஆம்—, உள்ளினது - அகத்தது, மடிவு இல் காமாதி உய்க்குதல் - அழிவில்லாத காமாதிகளில் செலுத்தல், களி-களித்தற்குரிய, அரசு ஆதி நோய்—அரசர்முதலாகியவர்களாலும் பிருதிவியாதி பூதங்களாலும் உண்டாகிற நோய், பவுதிகம் - பௌதிகமாகும், கழுது - பேயினுல், அளி - தரப்படுகிற, இடர் முதல - இடர்முதலியவை, தெய்வீகம் ஆகும்—, எ - று.

(வி - ரை.) வளிமுதலன - வாத பித்த சிலேஷ்மங்கள். காமாதி - காமமுதலியன, அவை காமம் குரோதம் உலோபம் மோஹம் மதம் மற்சரம் என ஆறும். அரசர் முதலாயினோராலுண்டாவன ராஜதண்டனை முதலாயின. கழுது என்பதினுல் கிரஹம் முதலியவைகளும் வருவிக்கப்பட்டன. (அ)

இனைய வெந்துயர் பலவிசைந் துகட்டுறும்
வினையொடு திரிதரு முயிர்க்கு விண்ணிடை
யெனினுமிம் மண்ணிடை யெனினு மோர்கணந்
துனியறும் படிசிறு சுகமு மின்றரோ.

(ப - ரை.) இனைய - இத்தன்மையவாகிய, வெம் துயர் பல இசைந்து-வெப்பமாகிய பலதுன்பங்களைப்பொருந்தி, கட்டுறும் - பந்தப்படுகிற, வினையொடு திரிதரும் உயிர்க்கு - வினையொடுதிரிகிற சீவனுக்கு, விண்ணிடையெனினும் - விண்ணுலகத்திலாயினும், இம்மண்ணிடையெனினும் - இந்தமண்ணுலகத்திலாயினும், ஓர்கணம் - ஒருகணப்பொழுதும், துனி அறும்படி - அச்சமின்றியிருக்க, சிறு சுகமும் இன்று - அற்பமாகிய இன்பமுமில்லை, எ-று.

(வி - ரை.) வினை-தொழில். விண் மண் என்பன ஆகுபெயர்கள். சிறுசுகமும் என்னும் உம்மை இறந்தது தழீஇயவெச்சவும்மை. (கூ)

மின்னினு மலையினும் விளக்கெ ழுஞ்சிகை
தன்னினு நிலையறத் தபுசெல் வத்தினை
மன்னுறு பொருளென மதிப்ப ரோகண
மென்னினு மறிஞரோ டிருந்து ளோருமே.

(ப - ரை.) கணம் என்னினும் - கணப்பொழுதாயினும், அறிஞரோடு இருந்துளோரும் - அறிஞரோடுகூடி யிருந்தவர்களும், மின்னினும் - மின்னலைப்பார்க்கிலும், அலையினும் - அலையைப்பார்க்கிலும், விளக்கு எழும் - விளக்கிலெழுகின்ற, சிகைதன்னினும் - கொழுந்தைப்பார்க்கிலும், நிலை அற - நிலையில்லாமல், தபு - கெடுகின்ற, செல்வத்தினை - செல்வத்தை, மன்னுறு பொருள் என - நிலையாகிய பொருளென்று, மதிப்பரோ - எண்ணுவரோ, எ - று.

(வி - ரை.) மின்முதலாயின நிலையின்மைக் கெடுத்துக்காட்டுவனவாகிய உவமைப் பொருள்கள். மன்னல் - நிலைபெறல். மதித்தல் - நினைத்தல். மதிப்பரோ வென்னு மோகாரம் எதிர்மறை. அறிஞர் என்பதில் ஞகரம் பெயரிடைநிலை. (௧0)

மலசல நிறைதரு கடத்தை வன்றுய
ரலைபடு துரும்பினை யழியு மின்னினு
நிலையறு மிவ்வுட றன்னை நிந்தைசெய்
புலைமனை தன்னையார் பொருந்து வார்களே.

(ப - ரை.) மலசலம் - மலசலங்கள், நிறைதரு கடத்தை - நிறைந்த குடத்தை, வல் துயர் அலை படு துரும்பினை-வலியதுன்பக்கடலிலகப்பட்ட துரும்பை, அழியும் மின்னினும்-தோன்றியழிகின்றமின்னலினும், நிலைஅறும்-நிலையற்ற, இவ்வுடல்தன்னை - இந்தவுடம்பை, நிந்தைசெய் - நிந்தித்தற்குரிய, புலைமனைதன்னை - நீசமாகிய வீட்டை, யார் பொருந்து வார்கள்—, எ - று.

(வி - ரை.) கடம் - வடசொல். குடம் துரும்பு புலைமனை என்பன இவ்வுடம்பைக் குறித்துநின்றன. ஒருவரும் பொருந்தமாட்டார்கள் என்றற்கு யார்பொருந்துவார்கள் என்றார். (கக)

நித்தியா நந்தசிற் சொரூப நின்றிட
மித்தையா மியல்புடைத் துயர வீடென
வைத்தவா கத்தினை மகிழ்ந்தி ருந்திடும்
புத்தியார் செய்குவர் புலவர் தம்மினே.

(ப - ரை.) நித்தியம் - சாசுவதமான, ஆநந்தம் - இன்பத்தைத்தருகிற, சிற்சொரூபம் நின்றிட - ஞானசொரூபம்நிற்க, மித்தை ஆம் - பொய்யாகிய, இயல்பு உடை - இயற்கையையுடைய, துயரம் வீடு என வைத்த - துன்பவீடென்றேற்படுத்திவைத்த, ஆகத்தினை - உடம்பை, மகிழ்ந்து இருந்திடும் - மகிழ்ந்திருக்கிற, புத்தி - புத்தியை, புலவர்தம்மில் - அறிஞரில், யார்செய்குவர் - யார்பண்ணுவார்கள், எ - று.

(வி - ரை.) மித்தை மித்யா என்னும் வடசொற்றிரிபு. ஆகம் - உடம்பு. புலம்-அறிவு. யார்செய்குவர் என்றது ஒருவரும் செய்யாரென்றபடி. சிற்சொரூபம் நின்றிட - சித் ரூபனாகிய ஆன்மதத்துவத்தை விடுத்து. (கஉ)

ஓதியா னிடர்தரு முடம்பின் மக்களின்
மாதரி னுறவினின் மற்று ளோர்தமிற்
கோதுறு தனத்தினிற் குலத்திற் போக்குறு
காதலி னநித்தியங் காண்ப னென்றுமே.

(ப - ரை.) ஓதியான் - (அறிவு நூல்களைக்) கற்றவன், இடர் தரும் உடம்பில் - துன்பத்தைத்தருகிற வுடம்பினிடத்தும், மக்களில் - மக்களிடத்தும், மாதரில் - பெண்டிரிடத்தும், உறவினில் - உறவினரிடத்தும், மற்றுளோர் தம்மில் - மற்றையோரிடத்தும், கோது உறு - குற்றமுள்ள, தனத்தினில் - செல்வத்தினிடத்தும், குலத்தில் - குலத்தினிடத்தும், போக்குறு காதலின் - நிராசையால், என்றும் - எக்காலத்தும், அநித்தியம் காண்பன் - நிலையின்மையையே காண்பான், எ - று.

(வி - ரை.) ஓதியான் என வாளா கூறினரேனும் ஈண்டைக்கேற்பச் சுத்தமாகிய மனமுடையவனும், நித்தியாநித்தியப் பொருள்களையறிந்தவனும், நிச்சயிக்கப்பட்ட ஆத்மசுகாவிர்ப்பாவமுடையவனு மாகிய விவேகி என்றுரைக்கலாயிற்று. மாதர் - ஆகுபெயர். செல்வத்தின் மீதுள்ள விருப்பம் பெருங்கேடுபயக்கும் என்பது தோன்ற கோதுறு தனம் என்றார்; "பொன்னை நினைக்கப் பொறுதுகாண்" என்றார் பிறரும். நிராசை - ஆசையின்மை. (கங)

பொறிகளின் விரத்தியாய்ப் பொருவி றம்மையே
யறிவுற விழைவுடை யறிஞர்க் காழ்துயர்
மறிவுறு குடும்பநோய் மாற்று மேதுவிற்
செறிவுறு முளமெனச் செப்பு வாரரோ.

(ப - ரை.) பொறிகளில் - ஐம்பொறிகளிலும், விரத்தியால் - வெறுப்புடையராய், பொருவு இல் - நிகரில்லாத, தம்மையே—, அறிவுற - அறிய, விழைவுடை-விருப்பமுள்ள, அறிஞர்க்கு—, ஆழ்துயர் - ஆழ்ந்ததுன்பம், மறிவுறு - தடுக்கப்படுகிற, குடும்பநோய்—, (இவைகளை) மாற்றும் ஏதுவின் - நீக்குங்காரணத்தால், உள்ளம் - (அவரது) மனம், செறிவுறும் என - அடங்குமென்று, செப்புவார் - சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) ஐம்பொறி - பஞ்சேந்த்ரியங்கள். பொறிகளில் விரக்தி - இந்த்ரியஜயம். விழைவு - விருப்பம். ஏதுவின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றுவதன் கருவிப் பொருளில் வந்தது. தம்மையே யறிவுற விழைவுடை யறிஞர் என்றது ஆன்மாவினிடம் பற்றுள்ளவனுன விவேகியை. அரோ - அசை. (கச)

ஆசறு மனமுட னநித்த நித்தமுந்
தேசுற வுணர்ந்துநற் றெய்வ வாழ்வினு 1. 46. 3
நேசம கன்றுள நெறியி னேனிடைப்
பாசம தறுசிவ பத்தி தோன்றுமால்.

(ப - ரை.) ஆசு அறும் - குற்ற மற்ற, மனமுடன் - மனத்துடனே, அநித்த நித்தமும் - அநித்ய நித்யங்களையும், தேசு உற உணர்ந்து - தெளிவாயறிந்து, நல் - அழகாகிய, தெய்வ வாழ்வினும் - சுவர்க்க வாழ்வினும், நேசம் அகன்றுள்ள - விருப்பமொழிந்துள்ள, நெறியினேன் இடை - நன்னெறியை யுடையவனிடத்தில், பாசம் அறு - பாசம் அறுதற் கேதுவாகிய, சிவபத்தி தோன்றும்—, எ - று.

(வி - ரை.) அநித்தம் - அழிவு, நித்தம் - அழிவின்மை. தேசு - ஒளி, அது இங்குத் தெளிவுக் காயிற்று. தெய்வம் - ஆகுபெயர். வாழ்வினும் என்றவும்மை இறந்தது தழீஇய வெச்சம், உயர்வு சிறப்புமாம். நெறியென வாளா கூறினரேனும் ஈண்டைக்கேற்ப நன்னெறி யென்றுரைக்கலாயிற்று. அது - பகுதிப்பொருள் விகுதி. ஆல் - அசை. (கரு)

சமுசாரநீக்கத்தலம் - முற்றும்.

ஓம்பிநாகிநேநம:.

நான்காவது

## (ச.) குருகாருணியத்தலம்.



[அதாவது - முற்கூறிய பிண்டஞானி சமுசார நீக்கத்தல சம்பந்நனாகவும் ப்ரஹ்ம ஜ்ஞான சம்பாதநார்த்தமாய் ஸ்ரீ ஸத்குருசந்நிதியை யடைந்து த்ரிவித தீக்ஷையை யடைதல் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மலர்தலை யுலக மெல்லா மலிபெரும் புகழோ டொன்றி
யிலனென விவறன் மோக மிரித்துத்தத் துவமு ணர்ந்து
புலநெறி கடந்து சாந்தம் பொருந்திச்சித் தாந்த மோடு
புலகலை தெரிவுற் றையம் பாற்றிட வல்ல னாகி.

(ப - ரை.) மலர்தலை - பரந்த இடத்தையுடைய, உலகம் எல்லாம்—, மலி-நிறைந்த, பெரும்புகழோடு ஒன்றி - பெரும்புகழோடு பொருந்தி, இலன்எனஇவறல் - (பொருளிலே னென்று) லோபஞ்செய்தலும், மோகம் - மோகமும் ஆகிய இவற்றை, இரித்து - ஓட்டி, தத்துவம் உணர்ந்து - மெய்ப்பொருளை யறிந்து, புலநெறி கடந்து - ஐம்புல வழிச்செலவை வென்று, சாந்தம் பொருந்தி—, சித்தாந்தமோடு பலகலை—, தெரிவுற்று - தெரிந்து, ஐயம் - சந்தேகத்தை, பாற்றிட வல்லன் ஆகி - ஓட்ட வல்லவனாகி, எ - று.

(வி - ரை.) இவறல் - பிசுநத்தனம். இரித்தல் - ஓட்டல். தத்துவம்-ஆகுபெயர். ஐம் புலன்களாவன - சத்த பரிச ரூப ரச கந்தங்கள். செலவு - செல்லுதல். பாற்றல் - ஓட்டல். ஆகி யெனவருஞ்செய்யுளை யவாவி நிற்றலால் இது குளகச்செய்யுள். தத்துவம் - ஆத்மா நாத்ம விவேகம். சித்தாந்தம் என்றது வீரசைவசித்தாந்தத்தை. (௧)

அறநெறி வாய்மை மேவி யாரிய குலத்தாற் போந்த
முறைநெறி யொழுக்க மெய்தி முத்திநே யத்த னாகிப்
பொறையொடு பொருந்தி யக்க மணிதிகழ் பூதி யென்று
நிறைவுற வணிந்தி லிங்க நிலைபெற வுடற ரித்து.

(ப - ரை.) அறநெறி வாய்மை மேவி - தருமமார்க்கத்தின் உண்மையை யுடையனாகி, ஆரிய குலத்தால் போந்த - ஆசாரிய பரம்பரையால் வந்த, முறைநெறி ஒழுக்கம் எய்தி—, முத்திநேயத்தன் ஆகி—, பொறையொடு பொருந்தி-பொறுமையோடு கூடி, அக்கமணி—, திகழ் - விளங்குகிற, பூதி—, என்றும் நிறைவுற அணிந்து—, இலிங்கம்—, நிலைபெறஉடல் தரித்து—, எ - று.

(வி - ரை.) முத்தி நேயம் - மோக்ஷதாஹம். பொறை - தொழிற் பெயர், இது இங் குப் பொறுமையாகிய குணத்தைக் குறித்தலால் ஆகுபெயர். அக்கம் அக்ஷம் என்னும் வட சொற்றிரிபு, கண் என்பது பொருள். அக்கமணி - உருத்திராக்க மணி. பூதி யென்றும் நிறைவுற அணிந்து என்பதினால் விபூதி தாரணத்தினால் வியாபிக்கப்பட்டவனும், விபூதி தத்துவ முணர்ந்தவனும், திரிபுண்டரம் தரித்துக்கொள்வதில் ஆவல் உள்ளவனும் எனப் பெறப்பட்டன. (௨)

அகத்துறு தியாந மேவி யருச்சனை புரிவோ னாகி
யுகப்புறு மங்க லிங்க யோகதத் துவமு ணர்ந்தே
யிகப்பறு தலங்க ளோர்வுற் றெய்தியத் துவித ஞானந்
தகச்சிவ முணர்த்த வல்ல தயங்குஞ்சீர்க் குரவன் றன்னை.

(ப - ரை.) அகத்து - மனத்தில், உறு தியானம் மேவி - மிக்க தியானத்தைப் பொருந்தி, அருச்சனை புரிவோன் ஆகி—, உகப்புறும் - விரும்பத்தக்க, அங்கலிங்க யோக தத்துவம் உணர்ந்து—, இகப்பு அறு - நீங்குதற் கரிய, தலங்கள் ஓர்வுற்று - தலங்களை யாராய்ந்து, எய்தி - அடைந்து, அத்துவித ஞானம் தக - அத்வைத ஞானமுண்டாக, சிவம் - சிவமென் னும் பொருளை, உணர்த்தவல்ல—, தயங்கு சீர் குரவன் றன்னை-விளங்குகின்ற சிறப்பினை யுடைய ஆசாரியனை, எ - று.

(வி - ரை.) அங்கலிங்க யோக தத்வம் என்றது லிங்காங்கஸம்யோக தத்வத்தை :— அதாவது, லிங்கமென்றால் ப்ரஹ்மம், அங்கமென்றால் ஆத்மா, இவைகளின் நித்ய சம் பந்தமே ஸம்யோகம் என்று சொல்லப்படும். லிங்கமே தத்பதவாச்சியம், அங்கமே த்வம் பதவாச்சியம், ஸம்யோகமே அசிபதவாச்சியம். லிங்கமே நாதம், அங்கமே பிந்து, ஸம் யோகமே கலை. இலிங்கமே சன்மாத்திரம், அங்கமே சின்மாத்திரம், ஆநந்தமே யோகம். இதே மஹாலிங்காங்கஸம்யோகம். தன் மூன்றுவித சரீரத்தி லிருக்கும் மூன்றுவித லிங்க த்தையும் அவஸ்தாத்ரயங்களில் விஸ்வ - தைஜஸ - ப்ராஜ்ஞ ரூபனாய் உபாசித்துக்கொண்

டிருப்பதே லிங்காங்கஸம்யோகம். ஸம்யோகம் என்பது த்வைத நாசம்; அந்த நாசமே நிவிர்த்தி ; நிவிர்த்தியே விஸ்ராந்தி ; அந்த விஸ்ராந்தியே முக்தி.

இகத்தல் - நீங்கல். சிவத்தை யுணர்த்தல்வன்மைதோன்ற சிவம் உணர்த்தவல்ல என்றார் ; அதாவது சிவோபதேசம் செய்தல் என்றபடி.

மாசறு மனத்த னாகி மதியுடை விராகி யானோன்
பாசம தனைத்து நீக்கும் பரசிவ முணரத் தோன்று
நேசமோ டடைவன் பாம்பி னெளிதிரைக் கடல்வ றப்ப
வாசம நஞ்செய் தோங்கு மகத்தியப் பெயரி னானே.

(ப - ரை.) பாம்பின் - பாம்புபோல, நெளி - நெளிகின்ற, திரை - அலைகளையுடைய, கடல் வறப்ப - கடல் சுவற, ஆசமநம் செய்து—, ஓங்கும் - உயர்ந்த, அகத்தியப் பெயரினானே - அகத்தியனென்னும் பெயரை யுடையவனே, மாசு அறும் - குற்றமற்ற, மனத்தன் ஆகி—, மதி உடை-அறிவுடைய, விராகி ஆனோன் - வைராக்யசாலியானவன், பாசம் அனைத்தும் நீக்கும் பரசிவம் உணர—, தோன்றும் - உண்டாகிற, நேசமோடு அடைவன்-பக்தியோடு அடைவான், எ - று.

(வி - ரை.) பாம்பின் என்பதில் இன் ஐந்தாவதன் ஒப்புப் பொருளது. திரை - ஆகுபெயர்; அலை யென்பதுமது. வறத்தல் - சுவறல். ஆசமநம் செய்தல் - பருகுதல். விராகி-பிரபஞ்சத்தில் வெறுப்புள்ளவன். நேசம் பத்தியென்பன அன்பின் பரியாயங்கள். அது-பகுதிப் பொருள் விகுதி. (ச)

திங்களா றேனு மாண்டொன் றாயினுந் தேசி கன்றன்
பொங்கருள் காணுங் காறும் புரிந்துநற் பணிகள் காணி
னங்கருள் சீல சீட னஞ்சலி செய்து நின்றே
பங்கமாம் பிறவி நோயெற் பரிந்தருள் புரிக வென்பான்.

(ப - ரை.) திங்கள் ஆறு ஏனும் - ஆறுமாசமாயினும், ஆண்டு ஒன்று ஆயினும் - ஒரு வருடமாயினும், தேசிகன்றன் - ஆசாரியனது, பொங்கு அருள் - மிக்க அருளை, காணுங் காறும் - காணும் வரைக்கும், நல் பணிகள் புரிந்து-நல்ல தொண்டுகள் செய்து, காணின்-கண்டால், அங்கு - அவ்விடத்து, சீல சீடன்-ஒழுக்கத்தை யுடைய சீடன், அஞ்சலிசெய்து நின்று—, பங்கம் ஆம் - கெடுதியாகிய, பிறவிநோய் - பிறவி நோயினையுடைய, என்-எனக்கு, பரிந்து - இரங்கி, அருள் புரிக என்பான் - அருள் செய்க வென்று பிரார்த்திப்பான்.

(வி - ரை.) அஞ்சலி செய்தல் - கை குவித்து நிற்றல். பரிதல் - இரங்குதல். அருள் காணுங் காறும் - அநுக்கிரகம் செய்யும் வரையில். (ரு)

புனிதமா ணாக்க னின்ன புகன்றரு ளிரந்து நிற்ப
வனையவன் றனது சத்தி பாதமுற் றறிந்து பின்னர்
வினைதபு * தீக்கை யோடு மேவுவித் தருள்வ னென்ப
தனிவரு பரமா நந்த தத்துவக் குரவ னன்றே.

(ப - ரை.) புனிதம் - பரிசுத்தனாகிய, மாணாக்கன்—, இன்ன புகன்று - இவற்றைச் சொல்லி, அருள் இரந்து நிற்ப—, அனையவன்றனது - அவனது, சத்தி பாதம் உற்று அறிந்து - சத்திநிபாதத்தை யாராய்ந் தறிந்து, பின்னர் - பிறகு, வினைதபு - வினைகளைக் கெடுக்கிற, தீக்கையோடு - தீக்ஷையுடனே, மேவுவித்து அருள்வன் - பொருந்துவித்தருள்

* தீக்கை என்பது "தீக்ஷா" என்னும் வடசொற்றிரிபு. தீ க்ஷ என்னும் இரண்டு அக்ஷரங்கள், குருவினது அநுக்கிரகத்தினால் சிவஞான சம்பந்தம் (தீயதே) கொடுக்கப் படுவது, மலத்ரயம் (க்ஷீயதே) நாசப் படுத்துவது என்ப்பொருள் கொள்க.

வன், என்ப - என்று சொல்லுவர் (அறிஞர்), (யாவன் எனின்) தனிவரு - ஒப்பற்ற, பரமாநந்தத் தத்துவக் குரவன்—, எ - று.

(வி - ரை.) மாணுக்கன் - சீடன். இரத்தல் - வேண்டல். சத்தி நிபாதம் - அருட்சத்தியின் பதிவு, இது சத்திபாதம் என விகாரமாயிற்று. தபுதல் - கெடுதல். பரமாநந்த தத்துவக் குரவன் - பேரின்பத்தினுண்மையறிந்த ஆசாரியன். அன்று, ஏ - அசைகள். வினைதபு தீக்கை என்பதுசிவஞானம் கொடுத்தலும் பாசக் கட்டைத் தகர்த்தலுமாம்.(௬)

மூவகை யுறுமத் தீக்கை முறைதரு வேதா * வென்றும்
தாவின்மந் திரம தென்றுந் தகுதிகொள் கிரியை யென்று
மேவுறு மவற்றுள் வேதா மெய்க்குரு காட்சி யானே
யாவிகொள் சிவம்வி ளங்க லத்தமத் தகயோ கத்தால்

(ப - ரை.) அத்தீக்கை - அந்தத் தீக்ஷையானது, முறை தரு வேதா என்றும் - முறையாகிய வேதாதீக்ஷை யென்றும், தா இல் மந்திரம் என்றும் - கெடுதியில்லாத மந்திர தீக்ஷையென்றும், தகுதிகொள் கிரியை என்றும் - தகுதியைக்கொண்ட கிரியா தீக்ஷை யென்றும், மூவகைஉறும் - மூன்று வகையாயிருக்கும், மேவுறும் - பொருந்திய, அவற்றுள்—, மெய்க்குரு காட்சியால் - மெய்க்குருவின் கடாக்ஷத்தாலும், அத்த மத்தக யோகத்தால் - ஹஸ்த மஸ்தக ஸம்யோகத்தாலும், ஆவிகொள் - உயிரைக்கொண்ட, சிவம் விளங்கல்-சிவமென்னும் பொருள் விளங்குவது, வேதா-வேதாதீக்ஷையெனப்படும், எ-று.

(வி - ரை) கடாக்ஷம் - கடைக்கண்ணோக்கம். ஹஸ்த மஸ்தக ஸம்யோகம்-ஆசாரியன் கரத்தை மாணுக்கன் சிரமீதுவைத்தல். அது - பகுதிப் பொருள் விகுதி. (௭)

மந்திர மதனை யேதன் மைந்தனுக் குபதே சித்தல்
சிந்தைசெய் † மந்தி ரப்பேர்த் தீக்கையாங் குண்ட மாதி
தந்திரங் கொண்டு செய்த றக்கநற் ‡ கிரியை யென்ப
ரந்தம தடைந்த வந்தக் கிரியையை யறைது மாதோ.

(ப - ரை.) மந்திரமதனையே - மந்திரத்தையே, தன் மைந்தனுக்கு உபதேசித்தல்—, சிந்தை செய் - சிந்தித்தற்குரிய, மந்திரப் பேர் தீக்கை ஆம் - மந்திரமென்னும் பெயரையுடைய தீக்ஷையாகும், குண்டம் ஆதி தந்திரம் கொண்டு செய்தல்—, தக்க நல் கிரியை என்பர்—, அந்தம் அடைந்த - இறுதியாகிய, அந்தக் கிரியையை—, அறைதும் - சொல்வோம், எ - று.

(வி-ரை.) மந்திர மதனையே என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி, அன் சாரியை, மந்திரமாகிய அதையே யெனினுமாம். குண்டமாதி - குண்ட மண்டல வேதிகைகள். கிரியை - கிரியாதீக்ஷை. மைந்தன் - மகன், அது இங்குச் சீடனுக்காயிற்று. மாதோ-அசை.

தீங்கறு திங்க ணல்ல திதிகால வார மொன்ற
வோங்குறு பூதி தாம்பூ லத்தொடு முதவிப் பத்தர்க்
கீங்கற லாட லாதி யியற்றிவெண் டுகில்பு னைந்து
பாங்குறு சீடன் றன்னைப் பகர் முறை யருக ழைத்து.

((ப - ரை.) தீங்கு அறு-தீமையற்ற, திங்கள்-மாசம், நல்ல திதி—, காலம் வாரம்—, ஒன்ற - பொருந்த, ஓங்குறு-உயர்ந்த, பூதி-விபூதி, தாம்பூலத்தொடும்பத்தர்க்கு உதவி—, ஈங்கு - இவ்விடத்து, அறல் ஆடல் ஆதி - நீராடல் முதலியவற்றை, இயற்றி - செய்து,

* பாவ லிங்கத்தை காரண சரீரத்தில் நிலைக்கச் செய்தல்.

† பிராணலிங்கத்தை சூக்ஷ்மசரீரத்தில் ஸ்தாபித்தல். மநுதீக்ஷை என்றும் சொல்லப்படும்.

‡ இஷ்ட லிங்கத்தை ஸ்தூல சரீரத்தில் தாரணம் செய்தல்.

வெள் துகில் புனைந்து - வெள்ளாடை யணிந்து, பாங்கு உறு - பக்கத்திலுள்ள, சீடன் றன்னை—, பகர் முறை - சொல்லப்பட்ட முறையாக, அருகு அழைத்து—, எ - று.

(வி - ரை.) பத்தர் - அன்பர். அறல் - நீர். தீங்கு அறு திங்கள் - மாகம்முதலிய சுபமாசங்கள். நல்ல திதி - பஞ்சமி முதலிய சுப திதிகள். காலம் - அமிர்த கடிகை முதலிய சுப முகூர்த்த காலங்கள். வாரம் - சோமவாரம் முதலிய சுபதினங்கள். அறல் ஆடல் ஆதி என்பதினால் பொழுது விடிவதற்கு மூன்றே முக்கால் நாழிகைக்கு முன் எழுந்து சௌசம் தந்தசுத்தி நீராடல் முதலிய காலைக் கடனைக் குறித்தது என்க. (௯)

உத்தர திசையை நோக்கி யுற்றதன் பாங்கர்ச் செய்த
சித்திர மண்ட பத்திற் குணக்கெனுந் திசையை நோக்கி
வைத்தருள் புரியு மாசான் மலிசிவத் துதிக டாஞ்செய்
வித்தக விருளி ரிக்குந் தியாநமும் விரவு விப்பன்.

(ப - ரை.) உத்தர திசையை நோக்கி—, உற்றதன் பாங்கர் செய்த - தன் பக்கத்திற் செய்யப்பட்ட, சித்திர மண்டபத்தில்—, குணக்கு என்னும் திசையை நோக்கி—, வைத்து அருள் புரியும் ஆசான்—, மலி - மிகுந்த, சிவத்துதிகள் செய்வித்து—, அகம் இருள் இரிக்கும் - உள்ளிருளை யோட்டுகிற, தியாநமும் விரவுவிப்பன்-தியாநமும் செய்விப்பன், எ-று.

(வி - ரை.) உத்தர திசை - வடதிசை. பாங்கர் - பக்கம். குணக்கு என்னும் திசை-கீழ்த்திசை. ஆசான் - ஆசாரியன். துதி - தோத்திரம். தாம் - அசை.

உத்தர திசையை நோக்கி என்றதினால் ஆசான் வடக்கு நோக்கினவனா யிருந்து எனவும், குணக்கு என்னும் திசை நோக்கி என்றதினால் சீடன் கிழக்கு நோக்கினவனாய் உட்காரச்செய்து எனவும் பொருள் கொள்க. தியாநம் என்றது சிவ நாமோச்சாரணத்தையும் சிவத்தியாநத்தையும் குறித்தது. (௧0)

முன்னர்நன் னீற்றுப் பட்ட மொழியிடம் வழாத ணிந்து
பின்னர்மெய்க் குரவ ராயைம் பிரமமே வடிவா யுற்ற
தன்னிகர் கும்ப நீரச் சற்குரு வழியின் வந்த
செந்நெறி யுடைய வாசான் சிதறுக சீடன் மீது.

(ப - ரை.) முன்னர் - முன்னமே, நல் - நல்ல, நீற்றுப் பட்டம் - திருநீற்றுப் பட்டத்தை, மொழியிடம் - நூல்களாற் சொல்லப்பட்ட இடங்களில், வழாது அணிந்து - தவறுமல் தரித்து, பின்னர் - பிறகு, மெய்க்குரவர் ஆய் - மெய்யாசாரியராய், ஐம்பிரமமே வடிவாய்—, உற்ற - பொருந்திய, தன்நிகர் - தனக்குத் தானே சமாநமான, கும்பநீர் - கடஜலத்தை, அ சற்குருவழியின் வந்த-அந்தச் சற்குரு பரம்பரையில்வந்த, செந்நெறியுடைய-செவ்விய மார்க்கத்தை யுடைய, ஆசான்—, சீடன்மீது சிதறுக - சீடன்மேல் சிதறக்கடவன், எ - று.

(வி - ரை.) நீற்றுப்பட்டம் - திருநீற்று இரேகை. வழுவல் - தவறல். சிதறுதல் - மும்முறை ப்ரோக்ஷித்துக் கொள்ளச் செய்தல்.

ஐம்பிரமம்-பஞ்சப் பிரமம்: அதாவது, பரசிவன் குருலிங்கஜங்கமமென்னும் மூன்று விதமான பேதத்தைக் கொண்டிருப்பார். இன்னும் தன் விநோதத்தினால் சிவசாதாக்கியம் - அமூர்த்திசாதாக்கியம் - மூர்த்திசாதாக்கியம் - கர்த்துருசாதாக்கியம் - கர்மசாதாக்கியம் என்னும் பஞ்ச சாதாக்கியங்களையும், சாந்தியாதீதை - சாந்தி - வித்யா - பிரதிஷ்டா - நிவிர்த்தியா - என்னும் பஞ்ச கலைகளையும், பரா - ஆதி - இச்சா - ஞான - கிரியா என்னும் பஞ்ச சக்திகளையும் பொருந்தி, ஈசானம், தற்புருடம் - அகோரம் - வாமதேவம்-ஸத்யோஜாதம் என்னும் பஞ்சப்ரஹ்மமூர்த்தியாயிருப்பார். தீக்ஷாமண்டபத்தில்ஸ்தாபித்திருக்கும் பஞ்சகலசங்களில் இந்தப் பஞ்சமூர்த்திகள் பிரதிஷ்டை செய்யப்பட்டிருப்பார்கள். இந்தப் பஞ்சமூர்த்திகளே வீரசைவசமயாசாரிகள். ஆகமங்களில்விரிவைக் காண்க. ()

ஆண்டரு கிருந்த சுத்த ஞகிய மாணுக் கன்றன்
மாண்டகு வலக்கா தின்கட் பவப்பிணி மருந்தாய் நல்லோர்
வேண்டுமஞ் செழுத்து மெல்ல விளம்புபு சொருபஞ் சந்தம்
காண்டகு மிருடி மிக்க கடவுணன் னியாசஞ் சொல்க.

(ப - ரை.) ஆண்டு - அங்கே, அருகு இருந்த—, சுத்தன் ஆகிய மாணுக்கன்றன்—, மாண்தகு - மேன்மை பொருந்திய, வலக்காதின்கண்—, பவப்பிணி - பிறவிப் பிணிக்கு, மருந்து ஆய்—, நல்லோர் வேண்டும் - நல்லோரால் விரும்பப்படுகிற, அஞ்சு எழுத்து-திருவைந்தெழுத்தை, மெல்ல விளம்புபு-மெல்லச்சொல்லி, சொருபம் சந்தி காண்தகும் இருடி மிக்க கடவுள் நல்நியாசம் சொல்க—, எ - று.

(வி - ரை.) வலக்காது - வலது செவி. அஞ்செழுத்து - ஸ்ரீ பஞ்சாக்ஷரம், இதன் சொருபம் - சந்தம் - ரிஷி - தேவதை முதலிய விவரமெல்லாம் குருமுகமா யறிதற்பாலவாதலால் ஈண்டு விரித்திலம். பஞ்சமயப்ரஹ்மங்களாகிய தீர்த்தத்தினுல் அபிஷேகம் பெற்றவன் ஆனதினுல் சுத்தனுகிய மாணுக்கன் என்றதாயிற்று. விளம்புபு செய்பு என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். (௬௨)

குருகாருணியத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் பரமேசுவராயநம:

ஐந்தாவது

## (௫.) இலிங்கதாரணத்தலம்.



[அதாவது-எந்த வஸ்துவினிடத்தில் இந்தச் சராசராத்மகமான ஜகத்துலீநமாய் மீளவும் உத்பத்தியாவதெதுவோ, ஸர்வ ஸாக்ஷியாயும் சிதாநந்தமாயுமுள்ள தெதுவோ, லிங்கமென்னும் அபிதானமுள்ளதெதுவோ, அந்தப்பரப்ரஹ்மமே பாஹ்யேந்த்ரியங்களுக்ககோசரமாய்ப் பாவனைக்கதீதமாய்ச் சித்ரூபமாயிருக்கிற அந்த ஜ்யோதிர்லிங்கம்என்று அநுசந்தாந பூர்வகமாய் ஸத்குரு தத்தமான இஷ்டலிங்கத்தைச் சீடன் அந்தர்லிங்காநுசந்தாநநா யிருப்பினும் அல்லது அஸத்மர்த்தனு யிருப்பினும் இதை அபேத புத்தியினுல் ஸ்தூல சரீரத்தில் தரித்துக்கொண்டே யிருத்தல்வேண்டும்; ஏனெனின், - ஸத்குருவின் கருணையுடன் கூடி மோக்ஷார்த்தியான சீடனது ஹ்ருதயத்திலிருக்கும் சின்மூர்த்திதாரணமாதலான் என்க.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சந்திர காந்தத் தேனுந் தபநகாந் தத்தி லேனுஞ்
சுந்தர சயிலந் தன்னிற் ருேன்றிய சிலேயி லேனும்
வந்துறு படிகத் தேனு மகிழ்வாண லிங்கத் தேனு
முந்தழ குறுமி * லிங்க மொன்றுகொள் கிற்க மன்னே.

(ப - ரை.) சந்திர காந்தத் தேனும் - சந்திர காந்தத்தி லாயினும், தபந காந்தத்திலேனும் - சூரிய காந்தத்தி லாயினும், சுந்தர சயிலம் தன்னில் தோன்றிய - அழகியமலையினுண்டான, சிலேயிலேனும் - கல்லிலாயினும், வந்துறு படிகத் தேனும் - உண்டாயிருக்கிற

* அத்யதிஷ்டத்தசாங்குல, நிருபம, நித்ய, நிராமய, நிர்க்குண, நிரஞ்ஜந, நிர்த்வந்த்வ, அவ்யக்த, அவ்யய, பராத்பர, அத்விதீய ப்ரஹ்மம் என்னும் பதத்திற்கு வாச்யமான பரவஸ்துவே இந்த லிங்கம்.

படிகத்திலாயினும், மகிழ் - மகிழ்தற் குரிய, வாணலிங்கத்தேனும் - வாணலிங்கத்திலாயி னும், முந்து அழகுறும் - முற்பட்ட அழகு மிகுந்த, இலிங்கம் ஒன்று - ஒரு லிங்கத்தை, கொள்கிற்க - கொள்ளக் கடவன், எ - று.

(வி - ரை.) தபநன் - சூரியன். சந்திரகாந்தம் - சந்திரனைக் கண்டு நீரை யுமிழுங்கல். தபநகாந்தம் - சூரியனைக் கண்டு நெருப்பை யுமிழுங்கல். வாணலிங்கம் - நர்மதா நதியி லுண்டான சிவலிங்கம். சுந்தரசைலம் என்றது ஸ்ரீசைலத்தை. மன்னோ - அசை. (௬)

இலக்கண முழுது மொன்றி யிலங்குமா னைந்து மாடிக்
குலக்கடி மலர்சந் தாதி கொண்டருச் சிக்கப் பட்டு
விலக்கரு மநுவாற் சுத்த மேவுமவ் விலிங்கந் தன்னிற்
கலைக்கதி வழாது சைவ கலையையுய்த் திடுவ னாசான்.

(ப - ரை.) இலக்கணம் முழுதும் ஒன்றி - இலக்கண முழுதும்பொருந்தி, இலங்கும் - விளங்குகிற, ஆன் - பசுவினது, ஐந்தும் ஆடி - ஐந்தினையுமாடி, குலம் - மேன்மையாகிய, கடி - வாசனை பொருந்திய, மலர் —, சந்து ஆதி கொண்டு - சந்தநமுதலியவற்றால், அருச் சிக்கப்பட்டு —, விலக்கு அரு - தள்ளுதற் கரிய, மநுவால் - மந்திரத்தால், சுத்தம் மேவும் - சுத்தி யடைந்த, அ - அந்த, இலிங்கம் தன்னில் - லிங்கத்தில், கலை கதி வழாது - நூனெறி தவறாமல், சைவ கலையை - சிவ கலையினை, ஆசான் —, உய்த்திடுவன் - ஆவாகநம் பண்ணு வான், எ - று.

(வி - ரை.) ஆனைந்து - பஞ்சகவ்வியம் (கோஜலம், கோமயம், பால், தயிர், நெய்). ஆவாகநம் - பிரதிஷ்டை. (௭)

சீடன துயிரை யந்தச் சிவலிங்கந் தன்னி லுய்த்துப்
பீடுறு மிலிங்க மன்னோன் பிராணனி லுறவி ருத்தி
யேடென விரும்பு மாசா னிவ்வகை யேக பாவங்
கூடுற வியலி லிங்கங் கொடுக்கவச் சீடன் கையில்.

(ப - ரை.) சீடனது உயிரை - சீடனது பிராணனை, அந்தச் சிவலிங்கந் தன்னில் —, உய்த்து - செலுத்தி, பீடு உறும் - பெருமை பொருந்திய, இலிங்கம் - (அங்கமான) லிங் கத்தை, அன்னோன் - அவனது, பிராணனில் —, உற இருத்தி - பொருந்த இருத்தி, ஏடு என விரும்பும் - கண்ணிமைபோல விரும்பப்படுகிற, ஆசான் —, இவ்வகை - இவ்விதமாக, ஏகபாவம் கூடுற - ஐக்யபாவம் பொருந்த, இயல் இலிங்கம் - இலக்கண மமைந்த லிங்கத்தை, அச்சீடன் கையில் —, கொடுக்க - தரிக்கக் கடவன், எ - று.

(வி - ரை.) இருத்தி - இருக்கச் செய்து. உய்த்து - ஆகர்ஷணம் செய்து. உற இரு த்தி - ஸ்தாபித்து. (௮)

இலங்குழிப் பிராண லிங்க மினியநின் பிராண னேபோற்
சலந்தவி ருனக்கு மைந்த தரிப்பதெவ் விடத்து மென்றும்
விலங்குவ தன்றெங் கேனும் வீழ்ந்திடின் மெய்யி னின்று
நலங்கிளர் முத்தி சேர்வா னல்லுயிர் விடுக வல்லே.

(ப - ரை.) இலங்குழி - இயங்கும் காலத்தில், பிராணலிங்கம் —, இனிய நின் பிரா ணனேபோல் —, சலம் தவிர் உனக்கு - சலநமற்ற வுனக்கு, மைந்த - மகனே, தரிப்பது —, எவ்விடத்தும் —, என்றும் —, விலங்குவது அன்று - (உன்னை விட்டு) விலகி யிருப்பது அன்று, எங்கு ஏனும் - எங்கேயாயினும், மெய்யில் நின்றும் - உடம்பில் நின்றும், வீழ்ந் திடின் —, நலம் கிளர் - நன்மை விளங்குகின்ற, முத்தி சேர்வான் - முத்தி யடையும்பொரு ட்டு, வல்லே - விரைவாக, நல் உயிர் விடுக - உனது நல்ல வுயிரை விட்டுவிடக்கடவை, எ - று.

(வி - ரை.) இயங்குங் காலம் - சஞ்சரிக்கிற காலம். தரிப்பது - தாரணம் செய்வது. நல்லுயிர் என்றார் கிடைத்தற் கரிய வுயிர் என்பதை விளக்குதற்கு. வீழ்ந்திடின் - அஜாக்கிரதையால் ஒருகால் கீழே விழுமாயின். (௪)

நூனெறி முழுது மாய்ந்த நுண்ணுணர் வுடையோன் றன்னாற்
றானினி திவ்வா றோதிச் சாற்றிடப் பட்ட சீடன்
மேனியி லுயிர்வாழ் காறும் விடாதுநன் குறத்த ரிக்க
கூனிள மதிய ணிந்த குழகன்மெய்ச் சிவலிங் கத்தை.

(ப - ரை.) நூல் நெறி முழுதும் - நூல் வழி முற்றும், ஆய்ந்த - ஆராய்ந்த, நுண் உணர்வு உடையோன் தன்னால் - நுண்ணுணர்வினை யுடையவனாகிய ஆசானால், தான்—, இவ்வாறு இனிய ஓதி - இப்படி யினிதாகச் சொல்லி, சாற்றிடப்பட்ட - உரைக்கப்பட்ட, சீடன்—, மேனியில் - தன்னுடம்பில், உயிர் வாழ் காறும் - உயிரிருக்கு மளவும், விடாது - விடாமல், கூன் இளமதி அணிந்த - வளைவாகிய விளமை பொருந்திய சந்திர கண்டத்தை யணிந்த, குழகன் - சிவபிரானது, மெய் - வடிவமாகிய சிவலிங்கத்தை, நன்கு உற தரிக்க - நன்றாய்த் தரிக்கக் கடவன், எ - று.

(வி - ரை.) நுண்ணுணர்வு - கூர்மையான அறிவு. இளமதி-பிறை. சந்திரகண்டம்-சந்திரகலை. குழகன் - அழகன். கூன் இளமதி யணிந்த என்ற விசேடணத்தால் குழகன் என்றது சிவபிரானைக் குறித்தது. நன்கு உற என்பது பிராண லிங்க ஐக்ய ஸம்பந்தத்துடன் என்க. ஓதி சாற்றிடப்பட்ட சீடன்-அறிவுறுத் துரைக்கப்பட்டவனாய்க் கொண்ட சீடன். (௫)

புண்ணிய மனைத்தி னுக்கும் புகலிட மாகி நின்றங்
கெண்ணரும் பவம கற்று மிலிங்கதா ரணம தென்று
கண்ணுத லருளிச் செய்த காமிகா திகளை யோர்ந்த
நுண்ணுணர் வுடைய வெல்லா முனிகளு நுவல்வ ரன்றே.

(ப - ரை.) கண்ணுதல் - நெற்றிக் கண்ணராகிய சிவபிரான், அருளிச் செய்த—, காமிகம் ஆதிகளை - காமிக முதலிய ஆகமங்களை, ஓர்ந்த-ஆராய்ந்த, நுண் உணர்வு உடைய-நுண்ணறிவினையுடைய, எல்லா முனிகளும் - முனிவரெல்லாரும், இலிங்க தாரணம்-இலிங்கதாரணமானது, புண்ணியம் அனைத்தினுக்கும் - எல்லாப் புண்ணியங்களுக்கும், புகலிடம் ஆகி நின்று - அடைக்கல ஸ்தானமாக நின்று, அங்கு - அவ்விடத்து, எண் அரும்பவம் - கணக்கிட வொண்ணாத பிறவிகளை, அகற்றும் என்று - நீக்குமென்று, நுவல்வர் - சொல்லுவர், எ - று.

(வி - ரை.) இலிங்கதாரணம் - இலிங்கத்தைத் தரித்தல். அன்று, ஏ - அசைகள். (௬)

தகைபெறு பரம லிங்க தாரணை முட்பு றம்பாம்
வகைபெற விரண்டா மென்பர் மாதவ ரவற்று ளாதி
பகவனென் பெயர்பு னைந்த பரமசிந் மயலிங் கத்தை
யகமதி லுறத்த ரித்த லாந்தர மாகு மன்றே.

(ப-ரை.) தகைபெறு - பெருமை பெற்ற, பரமம் - மேலான, லிங்கதாரணம்—, உள் புறம்பு ஆம் - உள்ளும் புறம்பு மாகிய, வகைபெற - வகையை யடைய, மாதவர் - பெருந் தவத்தினர், இரண்டு ஆம் என்பர்—, அவற்றுள்—, ஆதிபகவன் என்பெயர் புனைந்த - ஆதி பகவனென்னும் பெயரைத் தரித்த, பரமம் - மேலான, சிந்மய லிங்கத்தை - ஞானரூபமாகிய (சிவ) லிங்கத்தை, அகமதில் உறதரித்தல் - உள்ளே பொருந்தத் தரித்தல், ஆந்தரம் ஆகும்—, எ - று.

(வி-ரை.) லிங்கதாரணம் - லிங்கத்தைத்தரித்தல். ஆந்தரம் - ஆந்தரலிங்க தாரணம். ஆதிபகவன் - சிவன். அகமதில் உற தரித்தல் - மனத்தினால் ஏகாக்ரமாய் த்யாநித்தல். அன்று, ஏ - அசைகள். (எ)

மூலகா ரணமாய் ஞான மூர்த்தியா யின்ப மாகி
மேலதா யுண்மை யாகி விகற்பமோ டழிவு மின்றி
மாலிலா துலகி றந்த பிரமமா மாலிங் கந்தான்
சாலவீ டுறுதல் வேண்டுந் தக்கவ ரடைத லாமே.

(ப-ரை.) மூலகாரணம் ஆய் - மூலகாரணமாகி, ஞான மூர்த்தி ஆய் - ஞானவடிவமாகி, இன்பம் ஆகி - ஆநந்த ரூபமாகி, மேலது ஆய் - மேலதாகி, உண்மை ஆகி—, விகற்பம் ஒடு - வேறுபாட்டோடு, அழிவும் இன்றி - நாசமுமில்லாமல், மால் இல்லாது - மயக்கமில்லாமல், உலகு இறந்த - உலகங்களைக் கடந்த, பிரமம் ஆம் - பிரமமாகிய, மாலிங்கம் - மஹாலிங்கத்தை, சால - மிகுதியாக, வீடு உறுதல் வேண்டும் - முத்தியடைய விரும்புகிற, தக்கவர் - தகுதியுடையோர், அடைதல் ஆம் - அடையலாகும், எ - று.

(வி-ரை.) மேலது - மேற்பட்டது. இறத்தல் - கடத்தல். தான், ஏ-அசைகள். (அ)

வேதமா முடிய னைத்தும் விளங்குறப் பிரம மென்னுஞ்
சோதிமா லிங்க மெல்லா வாவிக டோறு நிற்கு
மாதி *யா தாரமாசி லகமெனு †மிதய நன்றிக்
கேதுவாம் ‡புருவ நாப்ப ணெனவரு மூன்றிடத்தும்.

(ப-ரை.) ஆதி ஆதாரம் - மூலாதாரம், மாசு இல் - குற்றமில்லாத, அகம் என்னும் - இடமென்கிற, இதயம் - இருதயம், நன்றிக்கு ஏது ஆம் - நன்மைக்குக் காரணமாகிய, புருவம் நாப்பண் - புருவநடு, எனவரும் மூன்று இடத்தும் - என்று சொல்லப்பட்டு வருகிற மூன்றிடத்தும், வேதம் - வேதத்தினது, மா - பெருமை பொருந்திய, முடி அனைத்தும் - சிரங்களி லெல்லாம், விளங்குற - பிரகாசிக்க, பிரமம் என்னும் - பிரம மென்கின்ற, மா - பெருமை பொருந்திய, சோதிலிங்கம் - ஜோதிலிங்கமானது, எல்லா ஆவிகள் தோறும் - எல்லாவுயிர்களினிடத்தும், நிற்கும் - நிலைபெற்றிருக்கும், எ - று.

(வி-ரை.) ஷடாதாரங்களில் முதலாதாரமாதலால், அதனை ஆதியாதாரம் என்றார். இதயம் - ஹ்ருதயம் என்னும் வடசொற்றிரிபு. வேதமாமுடி - வேதாந்தம். (கூ)

அழிவற வரிதா யென்று மகண்டமாய்ப் பிரம மென்னு
மொழிபெறு பரம லிங்க முத்திநே யத்த ராகி
வழிபடு பவர்க்கா கத்தன் மாயையாற் கண்டி தப்பட்
டொழிவற விருக்கு மென்றே யுரைப்பர்நுண் ணுணர்வி னோரே.

(ப-ரை.) அழிவு அற - நாசமில்லாமல், அரிது ஆய் - அரிதாகி, என்றும் - எந்நாளும், அகண்டம் ஆய் - அகண்டமாகி, பிரமம் என்னும் - பிரமமென்கின்ற, மொழி பெறு - பேரைப் பெற்ற, பரமலிங்கம்—, முத்தி நேயத்தர் ஆகி - மோக்ஷதாஹ முடையவராகி,

---

* பாயுவுக்கும் லிங்கத்திற்கும் நடுவில் (நான்கிதழுடைய) முக்கோணவடிவாகிய இடமானது மூலாதாரமென்று சொல்லப்படும்.

* அநாஹதம் எனப்படும் பன்னிரண்டிதழுடைய இடமானது ஹ்ருதயம் என்று சொல்லப்படும்.

‡ புருவத்திற்கு நடுவிலுள்ள ஆக்ஞை எனப்படும் இரண்டு இதழுடைய இடமானது புருவ நாப்பண் என்று சொல்லப்படும்.

இவ்வாறு யோகசிகோபநிஷத்தில் கூறப்பட்டிருத்தல் காண்க.

வழிபடுபவர்க்கு ஆக - வழிபடுவோர் பொருட்டு, தன் மாயையால் - தனது மாயையினால், கண்டிதப்பட்டு - பின்னப்பட்டு, ஒழிவு அற - நீக்கமற, இருக்கும் என்று—, நுண் உணர்வினோர் - நுண்ணறிவுடையோர், உரைப்பர் - சொல்லுவர், எ - று.

(வி - ரை.) அகண்டம் - கண்டிக்கப்படாதது. வழிபடல்-முக்கரணத்தாலும் வணங்கல். நுண்ணறிவுடையோர் - ஞானியர். ஒழிவு அற, முக்காலத்திலும் என்றபடி. (க0)

சரமுட னசரமென்னச் சாற்றிய வுலகு திக்குங்
கருமமோ டிலய மெய்துங் காரண மதனு லென்று
முரைமன மிறந்து ஞான வொளியுரு வாகி நின்ற
பிரமம திலிங்க நாமம் பெறுமென விசைப்பர் தக்கோர்.

(ப - ரை.) சரமுடன் அசரம் என்ன - சரமுடன் அசரமென்று, சாற்றிய - சொல்லப்பட்ட, உலகு - பிரபஞ்ச மானது, உதிக்கும் கருமமோடு - தோன்றுகின்ற செய்கையோடு, இலயம் எய்தும் - லயத்தை யடைகின்ற, காரணம் அதனால் - காரணத்தால், என்றும்—, உரை மனம் இறந்து - வாக்கு மனங்களைக் கடந்து, ஞான ஒளி உருவு ஆகி நின்ற - ஞானப் பிரகாசமே தனது உருவ மாய் நிலைபெற்ற, பிரமம் - பிரமப் பொருளானது, இலிங்க நாமம் பெறும் என - இலிங்க மென்னும் பேரைப்பெறுமென்று, தக்கோர் இசைப்பர் - தகுதி யுடையோர் சொல்லுவர், எ - று.

(வி - ரை.) சரம் - இயங்கியற் பொருள், அசரம் - நிலையியற் பொருள் (சஞ்சரிக்கும் பொருள், சஞ்சரியாப் பொருள்). இலயம் - அழிவு. தக்கோர் - மேலோர் (ஞானியர்). அது - பகுதிப் பொருள் விகுதி.

இச்சராசரமாகிய பிரபஞ்சம் எதனிடம் ஒடுங்குகின்றதோ, எதனிட மிருந்து மீண்டு மீண்டு தோற்ற முறுகின்றதோ அது சாஸ்வதமாகிய பிரமமென்னு மிலிங்கமாம் என்பது இச்செய்யுளால் விளங்கிற்று. (கக)

சாற்றரும் பரம தாய சச்சிதா நந்த லிங்க
மாற்றவும் பெரிதாந் தன்மை யடைதலி னுலு மன்றித்
தோற்றுறு முலகி னுக்குக் கருப்பமாந் தொடர்பி னுலும்
போற்றுறும் பிரம நாமம் பொருந்துமென் றறிந்து கொண்மோ.

(ப - ரை.) சாற்று அரும் - சொல்லுதற்கரிய, பரம் ஆய - மேலாகிய, சச்சிதாநந்த லிங்கம்—, ஆற்றவும்-மிகுதியும், பெரிது ஆம் தன்மை - பெரிதாகிற தன்மையை, அடைதலினுலும் - அடைதலாலும், அன்றி - அல்லாமல், தோற்றுறும் - தோன்றுகின்ற, உலகினுக்கு - உலகத்திற்கு, கருப்பம் ஆம் - கருப்ப மாகிய, தொடர்பினுலும் - சம்பந்தத்தாலும், போற்றுறும் - (யாவராலும்) புகழப்படுகிற, பிரமம் நாமம் - பிரமமென்னும் பெயரை, பொருந்தும் என்று - அடையுமென்று, அறிந்து கொள்—, எ - று.

(வி - ரை.) கருப்பம் - பிறப்பிடம். அது - பகுதிப்பொருள் விகுதி. (கஉ)

மருவுமா தாரத் தேனு மிதயநன் மலரி னேனும்
புருவமா நடுவி லேனும் பொருந்திய வொன்றி லென்றும்
விரவுமா சோதி லிங்கம் விடாதநு சந்தா னந்தா
னிரவிலாந் தரலி லிங்க தாரண மென்பர் மேலோர்.

(ப - ரை.) மேலோர்—, மருவும் ஆதாரத் தேனும் - பொருந்திய மூலாதாரத்திலாயினும், நல் - நல்ல, இதய மலரில் ஏனும் - இதய தாமரை மலரிலாயினும், மா - அழகிய, புருவ நடுவில் ஏனும் - புருவ நடுவிலாயினும், பொருந்திய ஒன்றில் - பொருந்திய ஓரிடத்தில், என்றும்—, விரவும் - கலந்திருக்கிற, மா சோதி-பரஞ்சோதியாகிய, லிங்கம் - லிங்

கத்தை, விடாது - ஒழியாமல், அநுசந்தானம் - அநுசந்தித்தல், இரவு இல் - இருளற்ற, ஆந்தரலிங்கதாரணம் என்பர் - ஆந்தரலிங்கதாரண மென்று சொல்லுவர் (அறிஞர்).

(வி - ரை.) அநுசந்தித்தல் - த்யானித்தல். ஆந்தரலிங்க தாரணம் - உள்ளிலிங்க தாரணம். தாரணம் - தரித்தல். (௧௩)

ஆடக வுருவ மாக வணிகொண்மூ லாதா ரத்திற்
பாடல வொளியி மைக்கும் பவளம்போ லிதயந் தன்னி
னீடொளி யுபலம் போல நிகழ்தரு புருவ நாப்ப
ணுடரு முணர்வி லிங்க ஞானயோ கிகள்சிந் திப்பார்.

(ப - ரை.) நாடு அரும் உணர்வு - தேடுதற்கரிய வறிவினையுடைய, இலிங்க ஞான யோகிகள் —, அணிகொள் - அழகைக்கொண்ட, மூலாதாரத்தில் —, ஆடகம் உருவம் ஆக - பொன்னுருவ மாகவும், இதயம் தன்னில் - இதயத்தில், பாடல ஒளி இமைக்கும் - பாதிரி மலரின் ஒளியைப் போலப் பிரகாசிக்கும், பவளம்போல் - பவளம் போலவும், நிகழ்தரு - பிரகாசிக்கின்ற, புருவ நாப்பண் - புருவ நடுவில், நீடு ஒளி - பேரொளியையுடைய, உபலம் போல - படிகக்கல் போலவும், சிந்திப்பார் - தியானிப்பார்கள், எ - று.

(வி - ரை.) பாடலம் - ஆகுபெயர். இமைத்தல் - பிரகாசித்தல். உபலம் - கல், இது இவ்விடத்துக்கேற்பப் படிகக்கல் என்றுரைக்கப் பட்டது. (௧௪)

புறத்துறு தார ணத்திற் புகல்கோடி மடங்கு மிக்க
சிறப்புறு மகவி லிங்க தாரணந் தீர்ந்து பாதி
பிறப்பிடை மறிதல் செய்யார் பிறங்கொளி யிலிங்கந் தன்னைத்
துறப்பற விதய மொன்றத் துணிவொடு தரித்து ளோரே.

(ப - ரை.) புறத்து உறு - புறத்தே பொருந்திய, தாரணத்தின் - லிங்க தாரணத்திலும், அக இலிங்க தாரணம் —, புகல் - சொல்லப் பட்ட, கோடி மடங்கு —, மிக்க சிறப்பு உறும் - மிக்க மேன்மையை யடையும், (ஆதலால்) பிறங்கு ஒளி - விளங்குகின்ற வொளியினையுடைய, இலிங்கம் தன்னை —, துறப்பு அற - விடாமல், இதயம் ஒன்ற - இதயத்திற் பொருந்த, துணிவொடு - மனவுறுதியோடு, தரித்துளோர் - தரித்திருப்பவர், உபாதி தீர்ந்து - துன்பம் ஒழிந்து, பிறப்பிடை - பிறவியில், மறிதல் செய்யார் - மீட்டும் வாரார், எ - று

(வி - ரை.) அகவிலிங்க தாரணம்- ஆந்தர லிங்கதாரணம். துறப்பு - விடுதல். (௧௫)

உள்ளத்தி லிலிங்கந் தன்னை யொழிவற விடாது பற்ற
றெள்ளுற்ற வான்ம வித்தை சேர்ந்தமை வுறுத லம்ம
வள்ளற்றண் ணளிநல் லாசான் மகிழ்செய்குற் றேவ லென்னத்
தள்ளற்ற விவைக டாமே காரணந் தனிமுத் திக்கே.

(ப - ரை.) உள்ளத்தில் - மனத்தில், இலிங்கம் தன்னை —, ஒழிவு அற - நீங்காமல், விடாது பற்றல் - விடாது பற்றுதலும், தெள்ளுற்ற - தெளிந்த, ஆன்மவித்தை - ஆத்ம ஞானத்தை, சேர்ந்து அமைவு உறுதல் - பொருந்தி அமைந்திருத்தலும், வள்ளல் - வள்ளலாகிய, தண்ணளி - கருணையை யுடைய, நல் ஆசான் - நல்ல ஆசானை, மகிழ்செய் - களிக்கச் செய்கிற, குற்றேவல் - குற்றேவல் செய்தலும், என்ன - என்று சொல்லத்தக்க, தள் அற்ற - தள்ளுதற் கரிய, இவைகள் தாமே - இவைகளே, தனி முத்திக்கு - ஒப்பற்ற வீடு பேற்றுக்கு, காரணம் - ஏதுவாகும், எ - று.

(வி - ரை.) நல்லாசான் - சற்குரு. குற்றேவல் - சிறுதொண்டு. உள்ளம் - ஹ்ருதயம். எல்லாச் செல்வத்தினு மேலான முத்திச்செல்வத்தை யளிப்பவனாதலால் ஆசானை வள்ளற் றண்ணளி நல்லாசான் என்றார். (௧௬)

ஊனமாம் விடய நீத்தே யுளந்தடு மாற மில்லா
மானமா யோகி கட்கு மனத்தெழுந் திலங்கா நின்ற
ஞானமா லிங்கத் தன்றி நவின்றுள புறத்தி லென்றுந்
தானுறு துளவி ருப்பென் றுணருதி தவத்தின் மேலோய்

(ப - ரை.) தவத்தின் மேலோய் - தவத்தினால் மேலோனே, ஊனம் ஆம் விடயம் நீத்து - கெடுதியாகிய விஷயங்களை யொழித்து, உள்ளம் தடுமாறல் இல்லா - மனந்தடுமாறுதல் இல்லாத, மானம் - பெருமை பொருந்திய, மா யோகிகட்கு-பெரிய யோகியர்களுக்கு, மனத்து எழுந்து - மனத்திற் றோன்றி, இலங்கா நின்ற - விளங்குகின்ற, மா - பெருமைபொருந்திய, ஞான லிங்கத்து அன்றி - ஞானலிங்கத்தி லல்லாமல், நவின்றுள-சொல்லப்பட்டுள்ள, புறத்தில் - வெளியில், உள்ள விருப்பு - மன விருப்பம், என்றும் உறுது என்று - எந்நாளு முண்டாகாதென்று, உணருதி - அறியக் கடவை, எ - று.

(வி - ரை.) தவத்தின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றுவதன் கருவிப்பொருளில் வந்தது. (௧௭)

வேதனோ டரிய ரன்சீர் விண்முழு தாளி யாதி
மாதிர மன்ன ரீண்டு மனிதர்கந் தருவர் சித்தர்
தீதறு முனிவ ரெல்லாஞ் சின்மய மாய கத்துட்
சோதிகொள் பரமா நந்த லிங்கமே துணிந்து காண்பார்.

(ப - ரை.) வேதனோடு - பிரமனோடு, அரி - விஷ்ணு, அரன் - உருத்திரன், சீர்-சிறப்புப் பொருந்திய, விண்முழுதாளி - இந்திரன், ஆதி - முதலாகிய, மாதிர மன்னர் - திக்குப்பாலகர், ஈண்டும் - நெருங்கின, மனிதர்—, கந்தருவர்—, சித்தர்—, தீது அறும் - தீங்கற்ற, முனிவர்—, (ஆகிய) எல்லாம் - எல்லோரும், சின்மயம்ஆய் - ஞான ரூபமாய், அகத்துள் - மனத்தினுள்ளே, சோதி கொள் - ஒளியைக் கொண்ட, பரமாநந்த லிங்கமே - பரமாநந்த லிங்கத்தையே, துணிந்து காண்பார் - உறுதியாகக் காண்பார், எ - று.

(வி - ரை.) மாதிரம் - திக்கு. பரமாநந்தம் - பேரின்பம்.

இச்செய்யுளிலும் மேல்வரும் செய்யுட்களிலுங் கூறியபடி, தேவர்கள் லிங்கதாரணம் செய்யப்பட்டவர் என்பது பெறப்பட்டது. மஹா தந்திரங்களில் கண்டபடி, பவானி மௌத்திக லிங்கத்தையும், விஷ்ணு நீல லிங்கத்தையும், பிரமன் சிலாலிங்கத்தையும், இந்திரன் வஜ்ர லிங்கத்தையும், மற்ற தேவர்கள் தங்களுக்கு இஷ்டமான லிங்கங்களையும் அநேகமாய்ப் பெற்று, முறையே மஸ்தகத்திலும், ஹ்ருதயத்திலும், தோளிலும், கரத்திலும், தங்களுக்கு இஷ்டமான ஸ்தானங்களிலும் பக்தியினால் தரித்துப் பூசிப்பார்கள். அகத்தியர், துர்வாசர், நந்தி, மஹாகாளர், ததீசி, கணாதர், பாணினிஸ்கந்தர், ப்ருங்கிரிஷி, வீரபத்திரர் என்னும் ருஷிப் ப்ரமதர்கள், விஷ்ணு ப்ரம்மேந்திராதி தேவர்கள், பாணாசுரன், இராவணாதி இராக்கதர், வைதிகரானவசிஷ்டர், வால்மீகி, பரத்வாஜர், அத்திரி, கௌதமர் ஆகிய எல்லோரும் பரமசைவர் எனப்பட்டுச் சிவப்பிரசாதம் ஸ்வீகரித்தல், சிவத்யாநம், சிவார்ச்சனை, சிவலிங்க தாரணம், சிவதரிசனம் முதலிய வாய்ந்த கர்த்தர் எனப்பட்டுச் சிரேஷ்டரானார்கள். (௧௮)

சச்சிதா நந்த மாகுந் தற்பர லிங்கந் தன்னை
யிச்சையா லறிஞ னானே னெத்திறத் தானு மென்று
மச்சமார் துயர மெல்லா மருக்கன்முன் னிருளே போல
வெச்சமாய் நிலாது பொன்ற விதயத்திற் றியானஞ் செய்க.

(ப - ரை.) சச்சிதாநந்தம் ஆகும் - (ஆதலினால்) சச்சிதாநந்த வுருவாகிய, தற்பரலிங்கம் தன்னை—, இச்சையால் - விருப்பத்தால், அறிஞன் ஆனோன் - அறிஞனானவன், எத்

திறத்தானும் - எவ்வகையானும், என்றும்—, அச்சம் ஆர் - அச்சத்தோடுகூடிய, துயரம் எல்லாம்—, அருக்கன் முன் - சூரியனுக்கெதிரே, இருளே போல - இருள் போலவே, எச்சம் ஆய் நில்லாது பொன்ற - சேடமாய் நில்லாமல் நசிக்கும்படி, இதயத்தில் தியாநம் செய்க - இதயத்தில் தியாநம் செய்யக் கடவன், எ - று.

(வி - ரை.) அறிஞன் - ஞானி. எச்சம் - மிச்சம். பொன்றல் - நசித்தல். (௧௧)

அத்தனை யகந் தரிக்க வசத்தனு யினும தாஅன்று
சத்தனே யெனினு ஞான தற்பர லிங்க மேயென்
புத்தியின் றிட்ப மெய்திப் புறத்திலிங் கந்த ரிக்க
வித்தக னெறி யுணர்ந்த வீரசை வர்கடா மன்றே.

(ப - ரை.) அத்தனை - இறைவனை, அகம் தரிக்க - உள்ளத்திற் றரிக்க, அசத்தன் ஆயினும் - அசக்தனே யானாலும், அதான்று - அதுவன்றி, சத்தனே எனினும் - சக்தனே யானாலும், ஞான தற்பர லிங்கமே—, என் - என்கின்ற, புத்தியின் - புத்தியினது, திட்பம் எய்தி - வலியை யடைந்து, புறத்து - வெளியே, இலிங்கம் தரிக்க - சிவலிங்கத்தைத் தரிக்கக் கடவர், (அவர் யாவரெனில்) வித்தகன் நெறி உணர்ந்த - இறைவனது நெறியை யறிந்த, வீரசைவர்கள்—, எ - று.

(வி - ரை.) அசத்தன் - சக்தியற்றவன். சத்தன் - சக்தியுள்ளவன். வித்தகன் என்றது சிவபெருமானை, சர்வஜ்ஞனாதலால் என்க. தாம், அன்று, ஏ-அசைகள்.

திரிவித லிங்கக் கிரம விசேஷம்:—ஜீவியானவன் சிவ வஸ்துவினிடத்தில் கலக்க வேண்டுமென்னும் உத்தேச மிருத்தலினால், இந்தக்காரியத்திற்கு யோக்யதா பேதத்தினால் மந்தாதிகாரி, மத்திமாதிகாரி, தீவிராதிகாரி என்று மூன்று விதமான அதிகாரிக ளிருக்கிறார்கள். முதல் முதல் வஸ்துவைக் கிரகித்தல் அசமர்த்தரானவர்கள் சாகாகரத்தில் சந்திரனிருக்கிறானென்று தடஸ்த லக்ஷணத்தினால் அறிவதுபோலப் பகிர் திர்ஷ்டி கோசரமான இஷ்டலிங்கத்தில் பரவஸ்து விருக்கிறதென் றறிந்து பக்தியினால் பூஜித்தல்வேண்டும்; இது மந்தாதிகாரிகளுக்கு எளிதான மார்க்கமா யிருக்கிறது. பின்பு இவ்வித ஜட பதார்த்தங்களின் குணம் பரவஸ்துவின தல்லவென்று ஏதத்வ்யாவ்ருத்தி லக்ஷணத்தினா லறிந்து யோக மார்க்கத்தினால் மனதினிடத்தில் பிராணலிங்காபிதானமுள்ள வஸ்துவைச் சிந்தித்தல் வேண்டும்; இது மத்திமாதிகாரிகளுக்கு எளிதில் கிரகிக்கும்வழியா யிருக்கிறது. அதன்மேல் ப்ரக்ருஷ்ட பிரகாச ஸ்வரூபனே சூரியனென்று ஸ்வரூப லக்ஷணத்தினா லறிவதுபோலச் சச்சிதாநந்த நித்யபரிபூர்ணஸ்வரூபமே பாவலிங்காபிதானமுள்ள வஸ்துவின் லக்ஷணமா யிருக்கிற தென்றும், அப்படிப்பட்ட வஸ்துவே தானாயிருப்பதென்றும் அநுபவத்தினா லறிதல்வேண்டும்; இது தீவிராதிகாரிகளுக்கு எளிதான நெறியா யிருக்கிறது. முதலில் அக்ஷராப்பியாசம் பின்னர் சப்தபட நாப்பியாசம், அதன்மேல் வாக்யரசநாப்பியாசம் செய்வதுபோல, முதலில் இஷ்டலிங்க பூஜனப்பியாசம், பின்னர் பிராணலிங்க தியாநாப்பியாசம், அதன்மேல் பாவலிங்கா நுபவாப்பியாசம் செய்தல் வேண்டும். ஆயினும் இஷ்ட பிராண லிங்கங்களை விட பாவலிங்கமொன்றே போதுமென்றும், அல்லது இஷ்ட பாவ லிங்கங்களை விட பிராணலிங்க மொன்றே போதுமென்றும், அல்லது பிராண பாவ லிங்கங்களை விட இஷ்டலிங்க மொன்றே போதுமென்றும் சிலர் சொல்லலாம். பாவ லிங்க மில்லாமல் இஷ்ட பிராண லிங்கங்களை மாத்திரம் பூஜிக்கலாம்; அல்லது பிராண பாவ லிங்கங்க ளிரண்டு மில்லாமல் இஷ்டலிங்கத்தை மாத்திரம் பூஜிக்கலாம்; இஷ்ட லிங்கமில்லாமல் எஞ்சிய இரண்டுலிங்கங்களைப் பூஜித்தலாகாது. ஏனெனின்,—முற்கூறிய திருஷ்டாந்தத்தில் வாக்கியரசநாப்பியாச மில்லாமல் அக்ஷராப்பியாசம் சப்தபடநாப்பியாசம் செய்யலாம்; அல்லது சப்தபடநாப்பியாசம் வாக்கியரசநாப்பியாச மில்லாமல் அக்ஷராப்பியாசம் செய்யலாம். அக்ஷராப்பியாச மில்லாமல் எஞ்சிய இரண்டு அப்பியா

சங்கள் செய்வதாவதில்லை. ஏனெனின்,— அக்ஷரங்க ளில்லாமல் சப்தவாக்கியங்களாவ தில்லை. ஆதலால், இஷ்டலிங்கமில்லாமல் எஞ்சிய இரண்டு லிங்கங்களை யுபாசிப்பது வீர சைவ மார்க்க விருத்தமாகும். ஆதலால், திரிவித லிங்கங்களையும் சர்வத்ர வீரசைவன் ஆராதித்துக்கொண் டிருத்தல் வேண்டும். (௨௦)

திரம்பெறு மிலிங்க மூன்று திறத்ததாந் தூல லிங்கம்
பரம்பெறு சூக்கு மம்பின் பராற்பர மென்னத் தூலங்
கரம்பெறு மிட்ட லிங்கங் கருத்தது சூக்கு மந்தா
னிரம்புறு மிலிங்கந் தானே நிகழ்பராற் பரமென் றோர்வாய்.

(ப - ரை.) திரம் பெறும் - உறுதி பெற்ற, இலிங்கம் - இலிங்கமானது, தூல லிங்கம் என - தூல லிங்க மென்றும், பரம் பெறு - மேன்மை பெற்ற, சூக்குமம் என - சூக்கும லிங்க மென்றும், பின் - அதன்பின், பராற்பரம் என்ன - பராத்பர லிங்கமென்றும், மூன்று திறத்தது ஆம் - மூன்று வகையினை யுடையதாகும், (அவற்றுள்) கரம் பெறும் - கையை யிடமாகப் பெற்ற, இட்டலிங்கம் - இஷ்டலிங்கமானது, தூலம் என்று - தூலலிங்க மென்றும், கருத்தது - மனத்தினிடத்துள்ளது, சூக்குமம் தான் என்று - சூக்கும லிங்க மென்றும், நிரம்புறும் - எவ்விடத்தும் நிறைந்திருக்கிற, இலிங்கம்தானே - இலிங்கமே, நிகழ் - விளங்குகிற, பராற்பரம் என்று - பராத்பர லிங்கமென்றும், ஓர்வாய் - அறியக் கடவாய், எ - று.

(வி - ரை.) திறம் - வகை.

திரிவித லிங்கம் வெகுவித பாவனை:—தநு இஷ்டலிங்கம், மனம் பிராணலிங்கம், ஆத்மா பாவலிங்கம்|| ஸ்தூல தநு இஷ்டலிங்கம், சூக்ஷ்ம தநு பிராணலிங்கம், காரண தநு பாவலிங்கம்|| ஜீவாத்மா இஷ்டலிங்கம், அந்தராத்மா பிராணலிங்கம், பரமாத்மா பாவலிங்கம்|| விஸ்வன் இஷ்டலிங்கம், தைஜஸன் பிராணலிங்கம், ப்ராஜ்ஞன் பாவ லிங்கம்|| சத்பாவம் இஷ்டலிங்கம், அநுபாவம் பிராண லிங்கம், நிர்பாவம் பாவலிங்கம்|| அதோமுகம் இஷ்டலிங்கம், அபிமுகம் பிராணலிங்கம், ஊர்த்வ முகம் பாவலிங்கம்|| ஸாங்கம் இஷ்டலிங்கம், பிரத்யாங்கம் பிராணலிங்கம், உபாங்கம் பாவலிங்கம்|| இடம் இஷ்டலிங்கம், வலம் பிராணலிங்கம், நடு பாவலிங்கம்|| காயிகம் இஷ்டலிங்கம், வாசிகம் பிராணலிங்கம், மானஸிகம் பாவலிங்கம்|| நடை இஷ்டலிங்கம், நுடி பிராணலிங்கம், நடைநுடி இரண்டின் கூட்டம் பாவலிங்கம்|| நிற்றல் இஷ்டலிங்கம், உட்கார்தல் பிராண லிங்கம், படுத்தல் பாவலிங்கம்|| ஜாக்ரம் இஷ்டலிங்கம், ஸ்வப்நம் பிராணலிங்கம், சுஷுப்தி பாவலிங்கம்|| தீக்ஷாகுரு இஷ்டலிங்கம், சிக்ஷாகுரு பிராணலிங்கம், மோக்ஷகுரு பாவலிங்கம்|| ஆசாரம் இஷ்டலிங்கம், மந்திரம் பிராணலிங்கம், ஐக்யம் பாவலிங்கம்|| ஸ்வயஜங்கமன் இஷ்டலிங்கம், சரஜங்கமன் பிராணலிங்கம், பரஜங்கமன் பாவலிங்கம்|| குருபாதோதகம் இஷ்டலிங்கம், லிங்கபாதோதகம் பிராணலிங்கம், ஜங்கமபாதோதகம் பாவலிங்கம்|| சுத்தப் பிரசாதம் இஷ்டலிங்கம், சித்தப் பிர[illegible]ணலிங்கம், பிரசித்தப் பிரசாதம் பாவலிங்கம்|| கரதலத்தில் அர்ச்சிக்கத் த[illegible]ங்கம், மனதில் தியானிக்கத் தக்கது பிராணலிங்கம், அநுபவத்தில் அறி[illegible]வலிங்கம்|| மஹாலிங்கமே சகளமாய்க் கண்ணுக்கு கோசரித்து ஆநந்த ரூ[illegible]டலிங்கம், அதே சகள நிஷ்களமாய் மனதிற்குக் கோசரித்துச் சித்ரூபமான[illegible]கம், அதே நிஷ்க்ளமாய்ப் பாவத்திற்குக் கோசரித்து ஸத்ரூபமானது பா[illegible]தவாச்யம் இஷ்டலிங்கம், த்வம்பதவாச்யம் பிராணலிங்கம், அசிபதவா[illegible]கம்|| இரியாதீக்ஷையால் ஸ்தூல சரீரத்தில் தரித்தல் இஷ்டலிங்கம், ம[illegible]ல் சூக்ஷ்ம சரீரத்தில் மந்திரோபதேச பூர்வகமாய் நிலைக்கச் செய்தல் பிரா[illegible]ா தீக்ஷையினால் காரண சரீரத்தில் குருவானவர் ஹஸ்த மஸ்தக ஸம்யோ[illegible]ஷ்டித்தல் பாவலிங்கம்.

திரிவித லிங்கங்களின் சம்பந்தாசாரங்களாவன:—குரு ஜங்கம பக்த சமூக மத்தியில் சரணன் என்னும் வதுவுக்கும் லிங்கம் என்னும் வரனுக்கும் விவாகமா யிருப்பதினுல் எக்காலத்தும் லிங்கத்தை அங்கத்தினின்றும் நீக்கக் கூடாதென்னும் கட்டளையை யறிந்து, பூமியிலிருக்கும் ஸ்தாவர பவி சைவ தேவர்களுக்கு வந்தனை செய்யாது, ம்ருத நிஷ்டைநிலை கொண்டிருப்பதே இஷ்டலிங்காசாரம்; மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விசுத்தி, ஆஜ்ஞேயம் என்னும் சக்கரங்களில் நான்கு இதழ், ஆறு இதழ், பத்து இதழ், பன்னிரண்டு இதழ், பதினுறு இதழ், இரண்டு இதழ்களுள்ள கமலங்களின் நடுவில் நிலைக்கச் செய்திருக்கும் ஆசாரலிங்கம், குருலிங்கம், சிவலிங்கம், ஜங்கமலிங்கம், பிராண லிங்கம், மஹாலிங்கங்களுக்கு முறையே நாசி, ஜிஹ்வை, சக்ஷுஃ, த்வக்கு, ஶ்ரோத்ரம், ஹ்ருதயம் என்னும் முகங்களின் பூர்வகமாய், சந்தனுதி திரவியம், மதுரமாதி திரவியம், ஶ்வேதாதி திரவியம், ம்ருத்வாதி திரவியம், நாதாதி திரவியம், பரிணும திரவியங்களை சமர்ப்பணம் செய்து, கந்தப் பிரசாதம், ரசப் பிரசாதம், ரூபப் பிரசாதம், ஸ்பரிசப் பிரசாதம், திருப்திப் பிரசாதங்களைப் படைப்பதே பிராணலிங்காசாரம்; பிறையிடுவதில் பால் அடங்கி யிருத்தல் போலவும், கண் மணியில் சூரிய சந்திராக்நி பிரகாசங்க ளடங்கி யிருத்தல் போலவும், மூப்பில் பாலியமடங்கி யிருத்தல் போலவும் அர்ப்பிதாவதாந முக்கிய க்ரியைகளில் நிஷ்பத்தியாவதே பாவலிங்காசாரம்.

இஷ்டலிங்கமானது ஆசாரலிங்கம் குருலிங்க மென்றும், பிராணலிங்கமானது சிவலிங்கம் ஜங்கமலிங்க மென்றும், பாவலிங்கமானது பிரசாதலிங்கம் மஹாலிங்கம் என்றும் ஒவ்வொன்று இரண்டு பிரிவுகளா யிருக்கும்: ஆசாரலிங்கம் முதல் மஹாலிங்க மீறுயுள்ள ஆறு ஸ்தலத்திற்கும், முறையே கிரியா சக்தி, ஞான சக்தி, இச்சா சக்தி, ஆதிசக்தி, பராசக்தி, சித்சக்திகள் சக்திகளா யிருக்கின்றன. நிவிர்த்தி, பிரதிஷ்டா, வித்யா, சாந்தி, சாந்த்யாதீத, சாந்த்யாதீதோத்தர கலைகள் கலைகளா யிருக்கின்றன. கர்மசாதாக்கியம், கர்த்துரு சாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், சிவ சாதாக்கியம், மஹா சாதாக்கியங்கள் சாதாக்கியங்களா யிருக்கின்றன. கந்தப்பிரசாதம், ரசப்பிரசாதம், ரூபப் பிரசாதம், ஸ்பரிசப் பிரசாதம், சப்தப் பிரசாதம், திருப்திப் பிரசாதங்கள் படைக்கத்தக்க பிரசாதங்களா யிருக்கின்றன. பக்தி, கர்ம க்ஷயம், நிர்மலமதி, விசாரம், தர்ப்ப ஸம்க்ஷயம், ஸம்யக்ஜ்ஞானங்கள் பலன்களா யிருக்கின்றன. (உக)

மாட்சியாய்ப் பிரம *மிக்க சிவமென மருவி யன்றே
யாட்சியா மநிட்ட மெல்லா மகற்றியே யிட்ட மாகிக்
காட்சியா னிகழ்வ தாஞ்சிற் கனபரி ணுமலிங்கம்
பூட்சியூ டகலா தென்றும் புலமையோர் தரிக்க மாதோ.

(ப - ரை.) சிற்கனம் - ஞானமாகிய மேன்மை பொருந்திய, பரிணும லிங்கம் - பரிணும லிங்கமானது, பூட்சியூடு - உடலின் கண், அகலாது - இடையருமல், என்றும் - எக்காலத்தும், புலமையோர் - அறிவுடையோர், தரிக்க-தரிக்கும்படி, மாட்சியாய்-மேன்மையுடையதாய், பிரமம் - பிரமப் பொருளானது, மிக்க - மேலான, சிவம் என - சிவமென்று சொல்லும்படி, மருவி அன்றே - பொருந்தியல்லவா, ஆட்சியாம் - ஆளுதற்குரிய, அநிட்டம் எல்லாம் - அநிஷ்டங்களை யெல்லாம், அகற்றி - நீக்கி, இட்டம் ஆகி - இஷ்டலிங்கமாகி, காட்சி[illegible]னத்திஞல், நிகழ்வது ஆம் - விளங்குவதாகும், எ - று.

(வி[illegible]) ப[illegible]மம் - பரிணமித்தல் (ஒன்று திரிந்தோன்றுதல்). அநிட்டம் - விரும்பத்தக[illegible], காட்சி - அறிவு (ஞானம்). மாதோ - அசை. (உஉ)

---

[illegible]ரமம் என்றதிஞல் இவ்விஷ்டலிங்கத்தை யாதோ ஒரு லிங்கமென்று நி[illegible]ஸ்வரூபமென்று பாவிக்கவேண்டும் என்பதாம்.

சிரமொடு களநன் மார்பு சிவந்துள வுதரங் கக்கங்
கரமெனு மிவற்றி லொன்றின் கட்சிவ லிங்கந் தாங்கல்
வரமிழி நாபி யின்கீழ் வார்சடை நுதியிற் பின்பாற்
புரைதரு மிடத்தி லென்றும் பொருந்துறத் தரிக்கொ ணாதால்.

(ப - ரை.) சிரமொடு - தலையுடன், களம் - கழுத்து, நன்மார்பு - அழகியமார்பு, சிவந்துஉள்ள உதரம் - சிவந்திருக்கின்ற வயிறு, கக்கம் - கட்சம், கரம் - கை, என்னும் - என்கின்ற, இவற்றில் - இவற்றுள்ளே, ஒன்றின்கண் - ஒருறுப்பில், சிவலிங்கம் - சிவலிங்கத்தை, தாங்கல் - தரித்தல், வரம் - மேன்மையாகும், நாபியின்கீழ் இழி - நாபியின்கீழ்தரிப்பது இழிவாகும், வார்சடைநுதியில் - நீண்டசடையினுனியிலும், பின்பால் - பின்புறத்திலும், புரைதரும் இடத்தில் - குற்றமுள்ள விடத்திலும், என்றும் - எக்காலத்தும், பொருந்துற - பொருந்துமாறு, தரிக்க ஒண்ணாது - தரிக்கக்கூடாது, எ - று.

(வி - ரை.) நாபி - கொப்பூழ், கக்கம் - அக்குள். புரை - குற்றம். ஆல் - அசை. (உ௩)

தம்பொரு ளாமி லிங்கந் தன்னைவள் ளிதழ விழ்ந்த
வம்பலர் கந்த மாதி மருவுற முறையிற் கொண்டு
கம்பமின் மனத்தி னேடு கரபீடத் தினிலர்ச் சிப்ப
ரிம்பரி னென்றுஞ் சுத்த ரெனப்படும் வீர சைவர்.

(ப - ரை.) இம்பரில் - இவ்வுலகத்தில், என்றும் - எக்காலத்தும், சுத்தர்எனப்படும் - சுத்தரென்று சொல்லப்படுகின்ற, வீரசைவர் —, தம்பொருள் ஆம் - தம்பொருளாகிய, இலிங்கம்தன்னை —, வள் இதழ் அவிழ்ந்த - வளவியவிதழ்விரிந்த, வம்பு - வாசனை பொருந்திய, அலர் - மலர்களையும், கந்தம் ஆதி - சந்தன முதலியவைகளையும், மருவுற - பொருந்த, முறையின்கொண்டு - கிரமமாக வெடுத்துக்கொண்டு, கம்பம் இல் - சலனமில்லாத, மனத்தினேடு —, கரபீடத்தினில் - கையாகிய பீடத்தில்வைத்து, அர்ச்சிப்பர் - அருச்சிப்பார், எ - று.

(வி - ரை.) பீடம் - ஆசநம். கம்பம் இல் மனத்தினேடு - ஏகாக்ர சித்தத்தோடு.

வீரசைவர்கள் பஶ்சிம திக்கான அநுக்ரகஹ க்ருத்தியத்தைச்செய்யும் ஸத்யோஜாத முகத்தில் எதிராக இருந்து, லயக்கிரமமாய் ஸத்யோஜாதாதியாக மந்த்ர உச்சாரணத்தோடு அத்வைதமாய்க் கரதலபீடத்தில் அங்குஷ்ட பாரிசங் கோமுகமிருக்கச் சிவலிங்கத்தை யெழுந்தருளச்செய்து பூசிக்க என வாதுளாகமம் அசிந்தியாகமமுதலிய ஆகமங்களில் உத்தரபாகத்திற் சொல்லிய விதிப்படி பூசித்தல்வேண்டும். (உ௪)

உரம்பெறு முத்தி நேய மூற்றமாம் வீர சைவர்
நிரந்தரம் விடாது பற்று நிகழ்கர பீட பூசை
பரம்புற மியற்றும் பீட பூசையிற் பராரை வெற்பி
லிருந்துமை பாக னேடொப் பென்பதை யுணர்த்[illegible]

(ப - ரை.) பரு அரைவெற்பில் - பருத்த அடிவாரத்தினையுடைய ம[illegible]ந்து - இருத்தலால், உமைபாகனேடு ஒப்பு என்பதை - உமாநாயகனுக்கு நிகரெ[illegible]ர்த்த வல்லோய் - தெரிவிக்க வல்லவனே, உரம்பெறும் - உறுதிபெற்ற, மு[illegible]மாகிய விருப்பத்தில், ஊற்றம் ஆம் - உத்ஸாகத்தையுடைய, வீரசைவர் —, நி[illegible]ாகாலமும், விடாது பற்றும் - விடாமற் பற்றுகிற, நிகழ் - விளக்கமாகிய, [illegible]கரபீட பூசையானது, புறம் இயற்றும் - பிறவிடங்களிற்செய்கிற, பீடபூசை[illegible]யினும், பரம் - சிறந்தது, எ - று.

(வி - ரை.) உமைபாகன் - சிவபெருமான். கரபீடம் - கை[illegible] (உ௫)

பனிமல ரயன்மா லாதிப் பண்ணவர் கோத மாதி
முனிவர ரனைவ ருந்தம் முடிமிசை யென்றுங் கொள்வர்
தனிவரு மிலிங்கம் வாட்கட் பொறிமுதற் சத்தி யெல்லாம்
புனைமல ரளக மீது பொருந்துறத் தரிப்பர் மன்னோ.

(ப - ரை.) பனிமலர் அயன் - குளிர்ந்த தாமரைப்பூவில் வசிக்கிற பிரமன், மால் - திருமால், ஆதி - முதலாகிய, பண்ணவர் - தேவர்கள், கோதமன் ஆதி - கோதமன் முதலாகிய, முனிவரர் - முனிசிரேஷ்டர், (ஆகிய) அனைவரும் - எல்லாரும், தம் முடி மிசை - தமது சிரத்தின்மீது, என்றும் - எக்காலத்தும், தனிவரும் இலிங்கம் - ஒப்பற்ற விலிங்கத்தை, கொள்வர் - தரித்துக்கொள்வார்கள், வாள் - வாள்போன்ற, கண் - கண்களையுடைய, பொறி முதல் சத்தி எல்லாம் - இலக்குமிமுதலிய மாதரெல்லாரும், புனைமலர் அளகமீது - அலங்கரிக்கப்பட்ட மலரையுடைய கூந்தலின்மீது, பொருந்துற தரிப்பர் - பொருத்தமாகத் தரித்துக்கொள்வார்கள், எ - று.

(வி-ரை.) பனி-குளிர்ச்சி. அயன் என மேல்வருதலால் மலர் தாமரைமலரைக்குறித்தது.

சதுமறை யுள்ளு மிக்க சாத்திரங் களினு மீரொன்
பதுவித புராணத் துள்ளும் பகர்தரு காமி கந்தான்
முதல்வரு மாக மத்து மொழிந்திடப் பட்டி டுஞ்சந்
ததமுமெய் விடாவி லிங்க தாரணம் * விறற்சை வர்க்கே.

(ப - ரை.) விறல்சைவர்க்கு - வெற்றியுள்ள சைவர்களுக்கு, சந்ததமும் - சதாகாலமும், மெய்விடா - உடம்பைவிட்டு நீங்காத, இலிங்கதாரணம் - இலிங்கதாரணமானது, சதுமறையுள்ளும் - நான்கு வேதங்களிலும், மிக்க சாத்திரங்களினும் - மேன்மையான சாஸ்திரங்களிலும், ஈர் ஒன்பது வித புராணத்துள்ளும் - பதினெண் புராணங்களிலும், பகர்தரு - சொல்லப்பட்ட, காமிகம்தான் முதல்வரும் ஆகமத்தும் - காமிகமுதலாகிய (இருபத்தெட்டு) ஆகமங்களிலும், மொழிந்திடப்பட்டிடும்—, எ - று.

(வி - ரை.) விறல் சைவர் - வீரசைவர். (உஎ)

பங்கயற் கிறைவ னின்மெய் பவித்திர மெனவி ருக்கொன்
றிங்குரைப் பதனாற் றூய்தா யிலங்குறுஞ் சிவலிங்கந் தான்
றங்குறத் தரிக்கத் தக்க தாகுமச் சைவ லிங்க
மங்கலம் புனித தீக்கை மருவுறா னடைந்தி டானால்.

(ப - ரை.) பங்கயற்கு - பிரமனிலும், இறைவனின் - இறைவனது, மெய் - உடம்பு, பவித்திரம் என - பரிசுத்தமென்று, இருக்கு ஒன்று - ருக் என்னும் ஒருவேதமானது, இங்கு உரைப்பதனால் - இங்கு சொல்லுவதனால், தூய்து ஆய் இலங்குறும் - பரிசுத்தமாய் விளங்குகின்ற, இலிங்கம் தான் - சிவலிங்கமானது, தங்குற தரிக்கத் தக்கது ஆகும் - பொருந்துமாறு தரித்துக்கொள்ளத் தகுதியுடையதாகும், அ - அந்த, சைவலிங்கம் - சிவலிங்கத்தை, மங்கலம் - மங்கலகரமாகிய, புனிததீக்கை - பரிசுத்த தீக்ஷையை, மருவுறான் - பெறாதவன், அடைந்திடான் - அடைய மாட்டான், எ - று.

(வி - ரை.) தூய்து ஆய் இலங்குறும் என்றதினால் பிரமம் என்று சிவலிங்கம் கூறப்பட்டுள்ளது; அந்தச் சிவலிங்கத்திற்கும் பதியானவர் ஈச்சுரன்; அந்த சிவலிங்கமன்றோ பரிசுத்தமென்று சொல்லப்பட்டது; அதன் சம்பந்தத்தினால் சரீரமானது சுத்தமாகின்றது.

* சங்கர ஸம்ஹிதை கோஷிப்பதாவது:—ஓ! புத்திரனான ஷண்முக, யாதொருவன் குருவினால் பூஜிக்கப்பட்டுக் கொடுத்த தனது இஷ்டலிங்கத்தைக் கரம் என்னும் பீடத்தில் வைத்து அந்த மஹா லிங்கத்தில் லயித்த மனமுடையவனாய் பாஹ்யக்ரியையில் பற்றில்லாதவனாய்ப் பூஜிக்கின்றானோ அவன் வீரசைவன் என்பது.

ருக்வேதம் கோஷிப்பதாவது:— ஓ! ப்ரஹ்மத்திற்கும் இலிங்கத்திற்கும் பதியாயுள்ளவரே (வேதத்திற்கு அல்லது ஸத்யோஜாதாதி பஞ்சப்ரஹ்மத்திற்கு நாதராயுள்ளவரே), உமது (லிங்கமானது) பரவியதும் (சிவாதிபூமியந்தம் வியாபித்துள்ளதும்), பரிசுத்தமுமானது; ஆதலால், குற்றமற்றதும், சிவசம்பந்தமானதும், பரிசுத்தமானதுமான அந்தலிங்கத்தைத் தரித்துக்கொள்ள வேண்டியது என்பது. (௨௮)

உன்றநு வகோர மாகி யுருத்ர பாவத்தி னீங்கு
மென் * றெசு ருரைத்த லாலே லிங்கதா ரகனாஞ் சைவன்
றுன்றுபா வங்களெல்லாந் தொலைப்பவ னென்பர் மேலோர்
தென்றலங் குன்றி னுற்ற செஞ்சடை முனிவ ரேறே. 137 ·
140 ·

(ப - ரை.) உன் தநு - உன்னுடம்பு, அகோரம் ஆகி—, உருத்ர பாவத்தில் - உருத்திர பாவத்தில் நின்றும், நீங்கும் என்று - ஒழியுமென்று, எசுர் உரைத்தலாலே - யஜுர்வேதமானது சொல்லுதலாலே, இலிங்கதாரகன் ஆம் - லிங்க தாரகனாகிய, சைவன் - வீரசைவன், துன்று - நெருங்கிய, பாவங்கள் எல்லாம்—, தொலைப்பவன் என்பர் - ஒழிப்பவனென்று சொல்லுவர், (அவர் யாவரெனின்) மேலோர் - மேன்மைக் குணமுடையார், தென்றல் அம் குன்றின் உற்ற - பொதிகை மலையில் வீற்றிருக்கின்ற, செம்சடை - செவந்த சடையையுடைய, முனிவர் ஏறே - முனிசிரேஷ்டரே, எ - று.

(வி - ரை.) அகோரம் - சாந்தம். (௨௯)

நித்தலு நியமஞ் செய்து நிமலபூ சையின்கட் பட்ட
சித்தம துடைய னான சிவலிங்க தாரகன்றா
னெத்திற மலமு நீங்கா விருடெறு கதிரின் மாய்க்குஞ்
சுத்தம துறும்வி பூதி தோன்றுறப் புனைவ னன்றே.

(ப - ரை.) நித்தலும் - நாள்தோறும், நியமம் செய்து - நியமம் பண்ணி, நிமல பூசையின்கண் பட்ட - சிவ பூசையின் கண்ணே பொருந்திய, சித்தமது உடையன் ஆன - மனத்தினையுடையவனாகிய, சிவலிங்க தாரகன் தான் - சிவலிங்க தாரகனே, நீங்கா - ஒழியாத, இருள் தெறு - இருட்டை யழிக்கின்ற, கதிரின்-சூரியனைப்போல, எத்திற மலமும் - எவ்வகைப்பட்ட மலங்களையும், மாய்க்கும் - கெடுக்கின்ற, சுத்தம் உறும் விபூதி - பரிசுத்தத்தை யடைந்த விபூதியை, தோன்றுற - விளங்கும்படி, புனைவன் - தரிப்பன், எ - று.

(வி - ரை.) அது - பகுதிப் பொருள் விகுதி. அன்று, ஏ - அசைகள். (௩௦)

இலிங்கதாரணத்தலம் - முற்றும்.

உ

சிவமயம்.

## வீரசைவ சமய விசாரம்.



இதுவரையில் பிண்டத் தலம், பிண்ட ஞானத் தலம், சமுசார நீக்கத் தலம், குருகாருணியத்தலம், இலிங்கதாரணத்தலம் என்பன சொல்லப்பட்டன; இவற்றால் முறையே, ஸத்வாசனா ரூபமான சக்திபாதத்திற்குச் சமீபமான ஈற்றுத்தேக பாவமுள்ளவனெவனோ அவன் பிண்டன் என்பதும், இந்தத் தேகத்தில் நித்யா[illegible]முள்ள விவேகியானவனெவனோ அவன் பிண்டஞானி என்ப[illegible] வெறுப்புத்தோன்றி

* யஜுர்வேதம் கோஷிப்பதாவ[illegible]ரு (லிங்கரூபமாகிய) தேகமானது மங்கல ஸ்வரூபமாயும், [illegible]டம் விளங்குவதாயுமுளதென்பது. இக்காரணத்தினால் சிவ[illegible] பாவமற்றவன்.

மோக்ஷதாஹ முள்ளவ னெவனோ அவன் சம்சாரத்தி னின்றும் விடுபட்டவன் என்பதும், இவ்வித வெறுப்புள்ள சீடனைச் சம்சாரத்தி னின்றும் தீக்ஷையினால் விடுவிக்கக் கருணையுள்ளவ னெவனோ அவன் தீக்ஷா குரு என்பதும், அந்தச் சற்குருவின் கருணையினால் பிராண லிங்க ஐக்ய சம்பந்தமுள்ள சீடனெவனோ அவன் லிங்கதாரகனென்பதும் பெறப்பட்டன. இவ்விதமான சீடனே வீரசைவன் என்பதும், அவனுக்குத் தீக்ஷையும் லிங்க தாரணமும் அத்யாவசியமாய் விதிக்கப்பட்டன என்பதும், அன்னோனது லக்ஷணம் இத்தன்மைத்து என்பதும் நன்கு அறியப்பட்டன. அந்த வீரசைவனது லக்ஷண மறியப்படினும் ஏனைய சமயிகளின் லக்ஷணங்களையுமறிதல் அவசியமாதலால் அவை ஆகம புராணங்களில் விரிவாய்ச் சொல்லப்பட் டிருப்பினும், வடமொழியில் முக்கியமாய் விளங்கும் பாகங்களைமட்டும் ஈண்டுத் தமிழில் எழுதலாயிற்று. அவை வருமாறு:—

## பாரமேஶ்வராகமம்.

ஸம்யக்கான ஜ்ஞானத்தைக் கொடுப்பது, பாசங்களின் ஸமூஹத்தைக் கெடுப்பது, இந்தத் தாநக்ஷபனங்கள் என்னும் இரண்டின் ஶாஸனத்தில் தீக்ஷாசப்தம் பிரசித்தம்.

அந்தத் தீக்ஷையானது நிராதார தீக்ஷை யென்றும், ஸாதார தீக்ஷை யென்றும் இரு வகைப்படும். அவற்றுள், சிவபிரான் நிராஶ்ரயனாய்த் தீவிர சக்தி நிபாதத்தினால் விஞ்ஞான கலர் பிரளயாகலர் இவர்களுக்குச் செய்யும் தீக்ஷையே நிராதார தீக்ஷையென்று சொல்லப்படும். குருமூர்த்தியை யாஶ்ரயித்து மந்த சக்தி நிபாதத்தினால் சகலர்களுக்குச் செய்தலே ஸாதார தீக்ஷை யென்று சொல்லப்படும்.

## காரணாகமம்.

பின்னும், ஸாதார தீக்ஷையானது ஸபீஜ தீக்ஷை, நிர்பீஜ தீக்ஷை, சின்மய தீக்ஷை என்று மூன்று வகைப்படும். அவை முறையே, கர்ம பக்தி ஞான காண்டங்களுக்குரிய தீக்ஷைகள் எனப்படும்,

## பாரமேஶ்வராகமம்.

அவற்றுள், நிர்பீஜ தீக்ஷையானது ஸத்யோநிர்வாண தீக்ஷை, சிரந்நிர்வாண தீக்ஷை யென்று இரண்டு பேதமுள்ளதா யிருக்கும். அவற்றுள், அத்யந்த விரக்தனான சீடனது அநேக பவங்களில் செய்யப்பட்ட சஞ்சித கர்மங்களையும், மற்றும் அந்தச் சஞ்சித கர்ம ராசியில் அக்காலத்தில் தரித்திருந்த சரீரத்தைக் கைப்பற்றி அநுபவித்துக் கொண்டிருந்த ப்ராரப்த கர்மங்களையும், பின்னர் பவாந்தரங்களில் அநுபவிக்க வேண்டிய ஆகாமி கர்மங்களையும் சோதித்து, ஸத்யோ முக்தியைக் கொடுக்கும் தீக்ஷையே ஸத்யோ நிர்வாண தீக்ஷை யென்று சொல்லப்படும். இன்னும், சீடனது சஞ்சித கர்மங்களையும் ஆகாமி கர்மங்களையும் கெடுத்து, தீக்ஷோத்தர க்ரியாவஸாந பர்யந்தம் அநுபவித்துக்கொண்டிருந்த ப்ராரப்த கர்மங்களின் போகாந்தத்தில் முக்தியை யடைவிக்கும் தீக்ஷையே சிரந்நிர்வாண தீக்ஷையென்று சொல்லப்படும்.

## காமிகாகமம்.

பின்னும், அந்தச் சிரந்நிர்வாண தீக்ஷையானது ஆஜ்ஞாதீக்ஷை, உபமாதீக்ஷை, ஸ்வஸ்திகாரோஹணம், விபூதிபட்டம், கலசாபிஷேகம், லிங்காயதம், லிங்கஸ்வாயதம் என்று ஏழுவகைப்படும். அவற்றுள், குருவினது ஆஜ்ஞா பரிபாலநத்தில் சமர்த்தமானதே ஆஜ்ஞாதீக்ஷையாம். புராதநர்களின் சமயாசாரத்திற்கு ஸத்ருஶமானதே உபமா தீக்ஷையாம். ஸ்வஸ்திகம் என்னும் மண்டலத்தின்மேல் சீடனை யுட்காருவித்து, மந்திர ந்யாசத்தைச் செய்து, மந்திர பிண்டமாகச் செய்தலே ஸ்வஸ்திகாரோஹணமாம். ஆகமோக்த ஸ்தானங்களில் அவ்வம்மந்திரங்களினால் விபூதி தாரணத்தைச் செய்தலே விபூதிபட்டமாம். பஞ்ச கலசங்களில் தீர்த்தோதகத்தை நிறைத்து, சிவகலா ஸ்தாபநத்தைச் செய்து

அந்தக் கலசோதகத்தினால் சீடனுக்கு ஸ்நபநம் செய்வித்தலே கலசாபிஷேகமாம். ஆசாரியன் சீடனுக்கு உபதேசித்து அளிக்கவேண்டிய லிங்கத்தை அர்ச்சனைசெய்து சீடன் காணும்படி செய்தலே லிங்காயதமாம். அந்த ஸ்ரீகுருநாதனால் உபதேசிக்கப்பட்ட ப்ராணலிங்கத்தைச் சீடன் பக்தியினால் ஸ்வீகரித்து, தனது உத்தமாங்காதி ஸ்தானங்களில் தரித்தலே லிங்கஸ்வாயதமாம்.

## வாதுளாகமம்.

பின்னும், அந்த ஸ்வாயத தீக்ஷையானது வேதா தீக்ஷை, க்ரியா தீக்ஷை, மந்த்ர தீக்ஷை என்று மூன்று விதப்படும். அவை யெவ்வாறெனின்:—குருவானவர் சீடனது மஸ்தகத்தில் ஆகமோக்த விதானத்தினால் சிவஸாஸந (மந்திர) த்தைத் தியானித்து அவ்வவ்விடங்களில் செய்யவேண்டிய சிவதத்வ தீக்ஷையே வேதாதீக்ஷையாம். தீக்ஷோத்தர க்ரியையோடு ப்ராண லிங்கோபதேசம் செய்தலே க்ரியா தீக்ஷையாம். தேவதா பீஜ கீலக முதலியவைகளுடன் மந்த்ரோபதேசம் செய்தலே மந்த்ரதீக்ஷையாம்.

## கிரணாகமம்.

பின்னும், சிவபிரான் ஸர்வாநுக்ரஹ கர்த்ருவா யிருத்தலால், சிறுவர் மூடர் போகாஸக்தர் முதலியவர்களுக்கும் அநுக்ரஹம் செய்வது யுக்தமெனின், அந்தந்த அநுக்ரஹம் அவரவர்களின் ஸம்ஸ்கார பூர்வகமா யிருக்கும். அந்த ஸம்ஸ்காரத்தினாலேயே முக்தி யுண்டா மெனின், க்ரியை, ஜ்ஞானம், வ்ரதம் முதலான உபாயங்களுக்குக் காரண மில்லாமற் போகும். இவ்வாறான ஆக்ஷேபங்களை பரிஹரிக்கிறார். சிலர் எவ்வாறிருப்பினும் அவர்களுக்கு அவ்வாறே சிவபிரான் அநுக்ரஹம் செய்வார். அது எவ்வாறெனின்:— சிலர் க்ரியா யோக்யர். அவர்களுக்கு அந்த க்ரியையினாலே மோக்ஷ முண்டாகும். சிலர் ஜ்ஞான யோக்யர், சிலர் சர்யா யோக்யர், சிலர் யோக யோக்யர். இவ்விதமாய் எவர்களுக்கு எவ்விதத்தினால் மோக்ஷ ப்ராப்தி கூறப்பட்டதோ, அது சிவபிரான் க்ருபையினாலாகும். அக்காரணத்தினால், ஜ்ஞாநாத்யுபாயங்களுக்குத் தீக்ஷையே காரணமென்பது விரும்பத்தக்கது. ஆதலால், தீக்ஷையானது மோக்ஷ சாதனமா யிருக்கும். உபாயமே நியாமகமா யிருக்கும். இன்னும், சிவபிரான் ஸர்வாநுக்ரஹத்திற்குக் கர்த்ருவான காரணத்தினால் உபாயங்கள் சிவபிரானால் சொல்லப்பட்டுள்ளன.

## கருடவாசகம்.

பின்னும், பரம காரணனான சிவபிரான் ஸர்வாநுக்ரஹனாக இருப்பினும், ப்ராஹ்மணாதிகள் உயர்வு தாழ்வு பாவங்களினா லிருக்கும் காரணத்தினால், அவரவர்களின் ஸம்ஸ்காரம் அவ்வாறே யாகவேண்டும். ஆனால், பலன் அவ்வாறு வேண்டுவதில்லை என்னும் ஆசங்கையை ப்ரஸ்நோத்தர முறையால் பரிஹரிக்கிறார். ஸம்ஸ்காரம் ஆத்மாவுக்காகும். ஜாதிக்கு மில்லை சரீரத்திற்கு மில்லை. ஜாதிக்கு ஸம்ஸ்காரமாயின், ஒருவன் தீக்ஷிதனானகையில் யாவரும் தீக்ஷிதராதல் வேண்டும். ஆதலால், ஜாதிக்கு ஸம்ஸ்காரமில்லை. சரீரம் ஜடமாதலால் அதற்கும் ஸம்ஸ்காரமில்லை. ஆதலால், ஸர்வாநுக்ரஹரான சிவபிரான் சித்ரூபரான ஆத்மாக்களை யநுக்ரஹிப்பன்.

பின்னும், சமஸ்த பாசங்களும் நீங்கும் பொருட்டுத் தீக்ஷை செய்யப்பட்டது. தீக்ஷை செய்தும் கர்மாதிகள் எக்காரணத்தினால் நீங்குவதில்லையென்னும் ஆசங்கையைக் கிரணாகமத்தில் ப்ரஸ்நோத்தர முறையில் த்ருஷ்டாந்த பூர்வகமாய்ப் பரிஹரிக்கிறார். எவ்வாறெனின்:—சித்த மந்திரங்களினால் அமூர்த்தமான (சரீரமில்லாத) விஷ சக்திக்கு க்ஷய முண்டாவதுபோலவும், அங்குரோத்பத்திக்குக் காரணமான விதையானது வறுக்கப்படுவதுபோலவும், தீக்ஷாகாலத்தில் பிரசித்தமான மந்திரங்களினால் அநேக பவங்களில் செய்யப்பட்ட பவபீஜங்களான கர்மங்கள் தடுக்கப்படும். ப்ராரப்த கர்மம் போகாந்தத்தில் தசிக்கும்.

பின்னும், தீக்ஷையினால் சமஸ்த பாசங்கள் தொலைவதாயின், தீக்ஷையாகியும் சரீர ஸ்திதியானது எவ்வாறு சம்பவிக்கும் என்னும் ஆசங்கையை த்ருஷ்டாந்த பூர்வகமாய்ப் பரிஹரிக்கிறார். கடமானது நிர்மாணமாயினும் சுழன்றுகொண் டிருக்கும் குலால சக்ரம் போல, தீக்ஷையாகியும் தீக்ஷோக்த க்ரியா ஸ்தான பர்யந்தமாய் ப்ராரப்த கர்மவாசனை யினால் சரீர ஸ்திதியானது சம்பவிக்கும். இன்னும், கடத்தினுள் ளிருக்கும் தீபமானது கடம் உடைந்துபோகையில் எல்லாப் பக்கத்திலும் எவ்வாறு பிரகாசிக்குமோ அவ்வாறு தீக்ஷிதன் தேஹாவஸாநத்தில் பரமுக்தனுவான். இவ்வாறு கிரணுகமம் கூறுகின்றது.

இந்தப் பூர்வோக்தமான ஸபீஜாதி தீக்ஷைகளினால் அமலனுனவனே முக்தன் எனப் படுவான். அந்தச் சிவதீக்ஷைக்கு யோக்கியமான சிவ சமயத்தைச் சொல்லுகிறார்:—

## வாதுளாகமம்.

ஓ! ஷண்முக, சிவசம்பந்தமான தரிசனம் என்றால் மதமானது நான்கு விதமா யிருப்பதென்று அறியவேண்டும். அந்தச் சதுர்வித சைவத்தைச் சொல்லுகிறேன் கேட்கக் கடவை. அவை முறையே சாமானியசைவம், மிசிரசைவம், சுத்தசைவம், வீரசைவம் என்பனவாம்.

அந்த நான்கு விதமான சைவங்களில் முதலில் சாமானியசைவ லட்சணத்தைச் சொல்லுகிறேன்.

ஒரு சாமானிய சைவன் விபூதிபட்டம் மாத்திரத்தானே சுத்தனுய் ஸ்வயம்பு லிங்க த்தையாயினும், தேவ தாநவ மாநவாதிகளினால் பிரதிஷ்டைசெய்த லிங்கத்தையாயி னும் எவ்வெக்காலங்களில் காண்பானே அவ்வக்காலங்களில் அர்ச்சனையையாயினும், பிரதக்ஷிண நமஸ்காரங்களையாயினும் செய்தல் வேண்டும். சிவநாம சங்கீர்த்தநம், சிவவச னம், சிவபக்தரிடத்தில் பிரீதி இவைக ளுள்ளவனு யிருத்தல் வேண்டும். இந்தச் சிவார்ச்ச நாதிகளில் ஸம்பூர்ண நியமமில்லா திருந்தால் சாத்தியமாகும் வரையிலாயினும் செய்தல் வேண்டும்.

இம்மட்டும் சாமானிய லக்ஷணம் நிரூபிக்கப்பட்டது. இனி மிசிர சைவ லக்ஷணத்தை நிரூபிக்கிறேன்.

மிசிர சைவன் ஸிம்ஹாஸநத்தில் ஸ்தாபிக்கப்பட்ட சிவலிங்க பூஜையையும், ஆவரண ஸ்தான விஷ்ணு பார்வதி ஷண்முகன் விக்நேஸ்வரன் சூரியன் இவர்களின் பூஜையை யும் நன்றாய் ஆசரித்தல் வேண்டும்.

இவன் பூர்வோக்தர்களான பஞ்சாவரணர் முதலான சமஸ்த தேவர்க ளிடத்திலும், அந்தர்க்தத் தேவதா மந்திரங்க ளிடத்திலும் கலந்திருத்தலினால் சமான பக்தியுடன் சமஸ்த தேவர்களையும் சிவ பரிபூர்ண பாவத்தினால் சிவலிங்கத்தில் பரிணமம் செய்தல் வேண்டும்.

இம்மட்டும் மிசிரசைவம் சொல்லப்பட்டது. இனிச் சுத்தசைவத்தைச் சொல்லு கிறேன்.

சிவத்தை யுத்தேசித்திருப்பதினால் சுத்தத்துவ சப்தமும், சிவத்தின் தசையினால் பிற ந்த காரணத்தினால் சைவ சப்தமும் உண்டாயின. சுத்த - சைவ என்னும் சப்த ஸமூஹம் சுத்த சைவமென்று சொல்லப்படும்.

அந்தச் சுத்த சைவனது தசையினால் பிறந்தவர் சிவப் பிராஹ்மணரெனப்படுவர்.

சிவத்விஜர் என்று சொல்லப்படுகிற அந்தப் பிராஹ்மணர் ஆதிசைவரெனப்படுவர். அவர் யாவரெனின்:—

கௌசிகன், கச்யபன், பரத்வாஜன், அத்திரி, கௌதமன் இந்த ஐவரும் சிவபிரானது பஞ்சமுகங்களில் தீக்ஷிதரானவர்கள்.

இந்தக் கௌசிகாதி ரி[illegible] பிறந்தவர்கள் சிவத்விஜ[illegible]னப்படுவோர்கள்.

காமிகாகமம் முதலிய இருபத்தெட் டாகமங்களிலும், வேத சாஸ்திர முதலியவை களிலும், கிரமத்துடன் செய்யப்பட்ட அப்பியாச முள்ளவனும் சிவ வ்ரதமுள்ளவனுமா யிருப்பன்.

கர்ஷணம் முதல் பிரதிஷ்டை யீறான கர்மங்களையும், சிவலிங்கப் பிரதிஷ்டை முதல் நித்யோத்ஸவ மீறான கர்மங்களையும், நித்யோத்ஸவ முதல் பிராயச்சித்த மீறான கர்மங் களையும் அறிந்து எல்லாவற்றையும் ஆசரித்தல்வேண்டும்.

ஸிம்ஹாஸநாதி மந்திரங்களினாலும், அந்தந்த மந்திரங்களின் யந்திர க்ரியைகளினா லும், மஹா முத்திரை முதலான முத்திரைகளினாலும், ஷடங்க முதலான நியாசங்களி னாலும், ஆஹ்வாநம் ஸ்தாபநம் ஸந்நிரோதநம் முதலானவைகளினாலும், ஷோடசோப சாரங்களினாலும், லிங்கத்தை ஸிம்ஹாஸநத்தில் பூஜித்தல் வேண்டும்.

இந்தக் கிரமத்தினால் செய்யப்பட்ட சிவலிங்க பூஜையானது ஆத்மார்த்த பூஜை யென்றும் பரார்த்த பூஜை யென்றும் இரண்டு வகைப்படும்.

தனது ஆசாரியனால் கொடுக்கப்பட்ட லிங்கத்தினிடத்திலும், ஸ்தண்டிலத்தினிடத்தி லும், ஹ்ருதயத்தினிடத்திலும் செய்யும் பூஜையானது ஆத்மார்த்த பூஜை யென்று சொல் லப்படும். பரார்த்தபூஜை பின்னர்க் கூறப்படும்; கேட்பாயாக.

யாதொரு காரணத்தினால் தேவர்ஷி தாநவ மாநவாதிக ளினால் நிர்மிக்கப்பட்டுக் கிரா மம் கிரி கஹ்வர முதலானவைகளில் பிரதிஷ்டை செய்யப்பட்ட சிவலிங்கத்தின் பூஜையே பரார்த்தபூஜை யென்று அறிதல் வேண்டும். அந்தப்பூஜையானது சகல பிராணிகளுக்கும் இதம் செய்யாநிற்கும்.

இவ்விதமாய்ச் சொல்லப்பட்ட இரண்டு விதமான பூஜையானது சிவ த்விஜனால் செய்யப்படத்தக்கது.

சிவாவரணங்களிலன்றி வேறேயிடங்களிலுள்ள விஷ்ணு முதலிய அந்யதேவர்களின் பூஜையைச் சுத்தசைவன் ஸ்வார்த்தமாகியும் பரார்த்தமாகியும் செய்யக்கூடாது. மறத்த லின் தசையினாலாயினும், சம்சாரத்தின் லோபத்தின் தசையினாலாயினும் அவ்வாறுயாதா யினும் செய்வானாயின், அந்த ராஜ்யத்திற்கும் அந்த ராஜனுக்கும் கேடுண்டாகும். இவ் வர்த்தத்தை வ்யக்தம் செய்கிறோம்.

ஓ ஷண்முக! பரார்த்த பூஜையைச்செய்யும் சுத்தசைவன் சமஸ்த சிவாவரணஸ்த ரான ப்ரஹ்ம விஷ்ண்வாதி தேவர்களைச் சிவத்தின் பரிவாரபாவனையினால் நன்றாய்ப் பூஜித்தல் வேண்டும். சிவாவரணஸ்த ரல்லாதிருந்த பிரமன் விஷ்ணு சப்தமாதர்கள் முத லான தேவர்களைப் பூஜித்தலாகாது.

சிவமந்திர பிண்டமான தனது ஹ்ருதய கமலத்தில் ஆஹ்வாநத்தின் தசையினால் ஸம் யுக்தமான சிவலிங்கத்தில் மந்திரபதியான வர்ணவாஸமுதல் சிவாவாஸ பர்யந்தமான ஆவாஸமந்திர பாவத்தைப்பார்க்கிலும் லிங்கபூஜை அதிகமாம்.

அந்தரங்கார்ச்சனையைச் செய்யும் சுத்தசைவன் மந்திர ஸ்வரூபமான சரீரமுள்ளவ னாவன். ஆதலால், அவன் பரசிவமாயிருப்பன்.

இவ்விதமாய்ச் சுத்தசைவமானது நிரூபிக்கப்பட்டது. இனி வீரசைவத்தைக் கேட் பாயாக.

ஓ தேவீ! சமஸ்தசைவங்களில் வீரசைவமே அத்யுத்தமமானது. அந்த வீரசைவன் செய்யும் சிவபூஜை எளிதானது. பூஜாதிகளின் கிரியையும் எளிதானது.

ஓ மஹாதேவீ! வீரசைவமானது அற்ப க்ரியையினாலே வெகு பலன்தருவது. இவ் வீரசைவமல்லாமல் எஞ்சிய சமஸ்த சைவங்களும் வெகு கிரியைக ளுள்ளனவாயும் அற்ப பலன்தருவனவாயு மிருக்கும்.

ஆதலால், நானுவிதத்தாலும் வீரசைவமதமானது சுகமானதாகும்.

அறிவினு லடைவதற்கு யோக்யமானதும், கோப்யமானதும், மோக்ஷபதத்திற்குக் காரணமானதும் எந்தச் சைவமோ, அதுவே வீரசைவம் என்று சொல்லப்படும்.

எந்தக் காரணத்தினுல் ஒருவன் இந்த ஜகமுழுவதிலும் விசேஷப்பட்டவனென்று சொல்லப்படுவனே, அவனே வீரன் என்று சொல்லப்படுவன்.

சிவபெருமானிமித்தம் கொடுக்கப்பட்ட ஜீவத்வ தசையினுலும், வீராகமத்தில் உதயமானதின் தசையினுலும், வீர-சைவ என்னும் பதத்வயத்தின் ஸம்யோகதசையினுலும் வீரசைவம் அறியப்பட்டது.

ஓ புத்திரனே! வீரமாஹேஶ்வராகமத்தில் வீரசைவமானது சாமானியவீரசைவம், விசேஷவீரசைவம், நிராபாரவீரசைவம் என மூன்றுவகையாகச் சொல்லப்பட்டிருக்கும்.

அந்த த்ரிவித வீரசைவத்தில் சாமானிய வீரசைவ லக்ஷணத்தைச் சொல்லுகிறோம்.

வீரசைவாசாரியனது ஹஸ்தத்தினதும் வீரமாஹேஶ்ரவனது மஸ்தகத்தினதும் பரஸ்பர சம்பந்த தசையினுலும், விபூதிபட்டத்தைத் தரிப்பதின் தசையினுலும், அந்தச் சிஷன் லிங்கதேஹி என்று அறியப்படத்தக்கவன். அப்படிப்பட்ட மாஹேஶ்வரன் எல்லாப் பாவங்களினின்றும் விடப்படுவன்.

ஸ்ரீகுருவினுல் கொடுக்கப்பட்ட சிவலிங்கத்தை ஸ்ரீபஞ்சாக்ஷரீ மந்திரத்தினுல் சிரத்தினிடமாயினும், கண்டத்தினிடமாயினும், கக்ஷத்தினிடமாயினும், வயிற்றினிடமாயினும், மார்பினிடமாயினும் தரித்தல் வேண்டும்.

ஒரு காலத்தி லாயினும், இரண்டு காலங்களி லாயினும், மூன்று காலங்களி லாயினும் சிவபூஜை செய்தல் வேண்டும்.

சாமானிய வீரசைவனுனவன் ஸ்ரீகுருவினிடத்திலும், சிவலிங்கத்தினிடத்திலும், ஸ்ரீ விபூதியினிடத்திலும், எக்காலத்தும் பக்திசெய்தல் வேண்டும்.

இவ்விதமாய்ச் சாமானியவீரசைவம் சொல்லப்பட்டது. இனி விசேஷ வீரசைவத்தைக் கேட்பாயாக.

வீரசைவ தீக்ஷாகர்த்ருவான தேசிகோத்தமன் சுத்தசைவ தீக்ஷாவிதானத்திற்கு எவ்வாறே, அவ்வாறே மண்டப நடுவிலிருக்கும் வேதிகையின் மேலதான வர்ணமண்டலமுள்ள ஸ்தண்டிலத்தின்மேல் சிவகும்பத்தை ஸ்தாபித்து, அந்தக் கும்பத்தில் சிவபிரானைப் பூஜித்து, தீக்ஷோத்ஸவத்திற்குவந்த பெரியோர்களையும் பக்தர்களையும் விபூதி தாம்பூலம் முதலானவைகளினுல் சந்தோஷப்படுத்தல் வேண்டும்.

சிவாசாரியன் எஞ்சிய தீக்ஷாக்ரமம் எல்லாவற்றையும், மலத்ரய நிரஸநத்தையும், வீரமாஹேஶ்வர தீக்ஷாபடலத்தில் கூறியவாறு செய்து, சிஷனை க்ருபாத்ருஷ்டியால் பார்த்து, தத்வ தேஹமாகும்வண்ணம் சிந்தித்தல் வேண்டும்.

சிவகும்பத்திலிருந்த தீர்த்தோதகத்தினுல் ஸ்ரீபஞ்சாக்ஷரீ மந்திரஜபத்துடன் அபிஷேகம் செய்தல் வேண்டும். நாதம் என்னும் சக்தியையும், பிந்து என்னும் சிவத்தையும், கலைகள் என்னும் சிவாவயவங்களையும் பாவித்து, அந்தந்த ஸ்தலங்களில் நியாசஞ்செய்தல் வேண்டும்.

ஓ ஷண்முக! ஷட்கர்மத்தையும், ஷடங்கத்தையும், ஷடத்வாவையும், பூர்வோக்தமான சிவாங்காவயவங்களில் நியாசம் செய்தல் வேண்டும். அதன்பிறகு, பஞ்சப்ரஹ்ம நியாசம் செய்தல் வேண்டும்.

பின்னும், மந்திரங்களுக்கு மூலமான ஸ்ரீபஞ்சாக்ஷரீ மந்திரத்தை யுபதேசித்தல் வேண்டும். அம் மந்திரோபதேசமான பின்பு ப்ராணலிங்கோபதேசம் செய்தல் வேண்டும்.

எஞ்சிய ஸமஸ்த க்ரியைகளையும் வீரசைவ தீக்ஷா மார்க்கத்தில் சொல்லப்பட்ட முறை யுடன் ஆசரித்தல் வேண்டும்.

இவ்விதமாய் வீரசைவ தீக்ஷிதனான வீரமாஹேஸ்வரன், தேஹ ப்ராணங்களின் வர்த் தனை வேறாகாதபடி ஏகமாய்க்கூடித் தன் ப்ராணத்தை லிங்கத்தில் கல்பித்தல்வேண்டும். அந்த நீக்கமில்லாத பாவத்தின் ஸமூஹ தசையினால் ப்ராணம் லிங்கம் என்னும் இரண்டும் ஏகத்வத்தை யடையச் செய்தல் வேண்டும்.

ஒரு பவி த்ருஷ்டி விழுந்த வஸ்துவுண்டோ அதை விடல் வேண்டும். சுத்த திரவியத் தைச் சம்பாதித்து லிங்காங்க ஸ்தலங்களின் அர்ப்பணாவதானங்களை நடத்தல் வேண்டும்.

இத்யாதி வ்ரதங்களுள்ளவனே விசேஷவீரசைவன் என்று சொல்லப்படுவன்.

இவ்விதமாய் விசேஷ வீரசைவம் என்னும் பக்தஸ்தலம் சொல்லப்பட்டது. இனி நிராபாரம் என்னும் ஜங்கமஸ்தலத்தைக் கேட்பாயாக.

நிராபார வீரசைவன் ஸமஸ்த சம்சார சுகங்களைவிட்டு, தண்டம் கௌபீனம் காஷா யாம்பரம் ஜடாபந்தம் வல்கலம் முதலியவைகளைத்தரித்து, சம்சார வியாபாரங்களினால் விடப்பட்ட சித்தத்தைச் சிவலிங்கத்திலே லயிக்கச்செய்தல் வேண்டும்.

முண்டித சிரமுள்ளவனா யிருப்பினும், வ்யாக்ராஜிநம் க்ருஷ்ணாஜிநம் முதலிய சிவ லீலாகதாங்களைச் சூசிப்பிக்கும் சின்னங்களைத் தரித்தல் வேண்டும். பிக்ஷாடந போஜி யாய், நியதாஹார முள்ளவனாய், அற்பசுகமுள்ள சம்சாரத்தினால் விடப்பட்டவனா யிருத் தல் வேண்டும்.

இவை முதலிய ஜங்கமஸ்தலத்தின் ப்ரவர்த்தனை யுள்ளவன் நிராபார வீரசைவன் என்று அறியப்படத்தக்கவன். இவனே உத்க்ருஷ்டனான சிவன்.

இவ்விதமாய் நிரூபிக்கப்பட்ட வீரசைவ க்ரமம் ப்ராயச்சித்த மில்லாதிருத்தலாம்.

இந்த வீரசைவனுக்கு ப்ராணலிங்க தாரணமானது விசேஷ வ்ரதம் என்று சொல் லப்படும்.

ப்ராணலிங்க வ்ரதத்திற்கு லோபமாயின், ப்ராணத்யாகத்தைக் காட்டிலும் வேறு ப்ராயச்சித்தமில்லை. ஆதலால், சாவதானனாய்ச் சிவலிங்கத்தைத் தரித்தல் வேண்டும்.

ஹஸ்தபீடத்தில் லிங்கத்தை ப்ரமாதமில்லாமல் தரித்தல் வேண்டும். ப்ரமாதத்தினால் லிங்கம் நழுவுமாயின், அந்த லிங்கத்தின்கூடவே ப்ராணனை விடல் வேண்டும்.

ப்ராணலிங்கம் பதிதமாகக்கண்டும் எந்த மனிதனானவன் ப்ராணதாரணை செய்து கொண்டிருக்கிறானோ அவனைச்சண்டாளன் என்று அறிதல் வேண்டும்.

பின்னும், அவன் சிவத்ரோஹியா யிருப்பதினால் அவனை ஸ்பரிசிக்கலாகாது.

சுத்தசைவன் லிங்கபதந முதலான சைவ வ்ரத லோபத்தில், ப்ராயச்சித்த விதா நத்தினாலும், அகோராதி மந்திர யந்திரங்களின் ஆசரணையின் தசையினாலும் சுத்தனாவன்.

சுத்தசைவன் தனது இஷ்டலிங்கம் பதநமாயினும், கெடினும், சுடப்படினும், சோர னால் களவாடப்படினும், எலி காகம் சுனகன் வானரம் என்பவைகளால் கொண்டுபோ கப்படினும், அகோரமந்திரத்தை ஒரு லக்ஷ உரு ஜபித்து, சாஸ்த்ரோக்த ப்ரகாரமாய் ஆசா ரியனால் லிங்கத்தைப் பிரதிஷ்டை செய்துகொண்டு, சுத்தி யடையச்செய்து பூஜித்தல் வேண்டும். பீட விஷயத்திலும் இவ்வாறே செய்தல் வேண்டும்.

சைவ வ்ரதங்களின் க்ரியாலோபத்தில், நூற்றெரு தரம் காயத்ரீ மந்திரத்தை ஜபிப்பதாயின் வ்ரதாதிகள் சுத்தத்தை யடையும்.

ஓ ஷண்முக! இந்த சாமானியசைவம், மிசிரசைவம், சுத்தசைவம், வீரசைவம் என்னும் சதுர்வித சைவ ஸர்வஸ்வயத்தை ஸம்க்ஷேபித்து உனக்குச் சொன்னோம்.

இவ்விதமாய் சிவதீக்ஷைகளினுல் மோக்ஷமடையும் சிவசமயம் சொல்லப்பட்டது.



முக்தனுனவனே வென்றால், ஜீவன்முக்தன், அபரமுக்தன், பரமுக்தன் என மூன்று விதமா யறியப்படுவான். எவ்வாறெனின்:—

## ஸ்கந்தபுராணம்.

பூர்வோக்தமான சிரந்திர்வாண தீக்ஷையினுல் தீக்ஷிதனுன வீரசைவன் ஜீவன்முக்தன் என்று சொல்லப்படுவான். ஸாலோக்யம், ஸாமீப்யம், ஸாரூப்யம், ஸாயுஜ்யம் என்னும் சதுர்வித மோக்ஷங்களில், ஸாலோக்யாதி த்ரிபதஸ்தரான மந்த்ரேஶ்வரர், மந்த்ரமஹேஶ்வரர், புவனேஶ்வரர் முதலானவர்கள் அபரமுக்தரெனப்படுவோர்கள். ஸாயுஜ்யமுக்தரே பரமுக்தரென்று சொல்லப்படுவோர்கள். அவர்களில் ஜீவன்முக்தரைப்பற்றிச்சொல்லுகிறார்.

அந்தச் சிரந்திர்வாண தீக்ஷை யாவனிடமிருப்பதோ, அவனது ஜீவநம் வறுக்கப்பட்ட விதைபோல் மீளவும் பவத்திற்கு வராததாம். அவனது சம்சாரதரிசனம் ப்ராரப்த கர்ம போகமே அந்தமாயுள்ளதாம். அப்படிப்பட்ட வீரமாஹேஶ்வரன் தனது தேஹாவஸாநத்திலேயே ஜீவனுேபாதியில் பரமுக்தியை யடைந்தவனுன காரணத்தினுல் ஜீவன்முக்தன் என்று சொல்லப்படுவான்.

ஜீவன்முக்தரின் அங்கஸ்தலம் லிங்கஸ்தலம் என்னும் நூற்றொரு ஸ்தலங்களும் சொல்லப்பட்டன.

ஈண்டு, அடியில் வரும் செய்யுட்களைக் கவனிக்க:—

## சிவஞானசித்தியார்.

புறச்சமய நெறிநின்று மகச்சமயம் புக்கும்
புகன்மிருதி வழியுழன்றும் புகலுமாச் சிரம
வறத்துறைக ளவையடைந்து மருந்தவங்கள் புரிந்து
மருங்கலைகள் பலதெரிந்து மாரணங்கள் படித்துஞ்
சிறப்புடைய புராணங்க ளுணர்ந்தும் வேதச்
சிரப்பொருளை மிகத்தெரிந்துஞ் சென்றாற் சைவத்
திறத்தடைவ ரிதிற்சரியை கிரியா யோகஞ்
செலுத்தியபின் ஞானத்தாற் சிவனடியைச் சேர்வார்.

## பிரபுலிங்கலீலை.

எவ்வகைச் சமயத்திற்கு மிறைவனே யெனினு நேயஞ்
சைவநற் சமயத் துற்றான் சைவத்தும் வீர சைவத்
தவ்வவர் பிறவிநீக்கு மல்லமன் விருப்ப முள்ளான்
மைவரிக் கயனெ டுங்கண் மடவரா லென்றான் வள்ளல்.

உரைக்குமெச் சமயத் திற்கு முத்தர பாகஞ் சைவந்
தரிக்குமச் சைவத் திற்குத் தரமென வீர சைவந்
தெரிக்குநற் காமி காதி சிரத்தினிற் றிகழுங் கண்டா
யரிக்குரற் சிலம்ப ரற்று மடிமலர்த் தடங்க ணல்லாய்.

புறந்தரு சமயம் புக்குப் புறமலர்ச் சமயத் தெய்தி
யறந்திகழ் சைவ முற்றுஞ் சரிதிற்சரி தாதி யாற்றிச்
சிறந்துள வீர சைவஞ் சேர்ந்தபின் வீடு நண்ணு
நறுந்தளிர் கவற்று மேனி நனைமலர் வல்லி யன்னாய்.

அருமறை முடியுஞ் சீர்சா லாகம முடியு மொத்துப்
பொருமற மிலாமன் முற்றும் பொருளினை விளக்கக் காட்டித்
தருமுறை யதனுல் வீர சைவமே தலைமைத் தாமிவ்
விருமறு வறுநன் னூலு மிதிற்பிர மாண மாகும்.

ஆவுறு பிணிகெட வாவின் பால்கறந்
தாவினை யூட்டல்போ லாண வங்கெட
ஆவியு ளமலனை யங்கை தந்துபின்
ஆவியு ளமைவுற வாக்கு மாரியன்.

ஆகமம் புகனெறி யடைவ னுயினுஞ்
சோகமில் சைவநற் றுறையை நன்றெனச்
சேர்குத லரிதது சேர்வ னுயினும்
ஏகலிங் கயிக்யனு குதலன் றெண்மையே.

## சுத்தசாதகம்.

இருக்குமுன் னுன்கின் முடிவிலெண் ணுன்கா யிலங்கிடு முபநிட மவையே
வருக்கமு மிரண்டாம் பூருவ மென்றும் வயங்கிடு முத்தர மென்றும்
சுருக்கம தின்றி யத்தியான் மீகம் சொற்றிடும் பூருவ பாகத்
திருக்குக ளின்றி யங்கலிங் கைக்யஞ் செப்பிடு முத்தர பாகம்.

விட்டலக் கணையும் விடாதலக் கணையும் விட்டுவிடாத லக் கணையும்
திட்டம துறவே தேர்ந்திடிற் பந்தந் தீர்ந்திடல் விட்டலக் கணையாம்
இட்டநல் லதிட்டா னம்மது தானு யிருத்தலே விடாதலக் கணையாம்
எட்டரு சிவத்துக் கங்கமா யிருத்தல் விட்டுவி டாதலக் கணையே.

மேலொரு வடிவை யெடுத்ததே யாகின் மேவுமிவ் வுடலிங்கே வீழும்
மேலொரு வடிவை யெடுத்த தின்றாகின் மேவுமிவ் வுடலிங்கே வீழா
மேலொரு சிவத்தைச் சீவன்சென் றடையு மேவுமிவ் வுடலிங்குத் தானே
மேலொரு சிவத்தின் வடிவதா மருளாய் வெளியதா யுலகுகண் டிடவே.

## சகசநிட்டை.

பொதுவுறத் தருமம் பண்ணிப் புகல்வினைச் சமம தாகி
அதுவிது வென்னுஞ் சித்த மமலமா யநித்த நித்தம்
இதுவென வுணர்ந்த நித்தத் திகபரத் திச்சை யற்ற
சதுரர்க ளிடத்திற் பாசந் தகர்ந்திடும் பத்தி தோன்றும்.

பத்திதான் பதிந்த காலைப் பகரங்கத் தலம டைந்து
சுத்தியா யங்க மந்தத் தொல்லருட் சத்தி யாகி
நித்தியா நந்த லிங்க நேரதாய்த் தரிக்கப் பட்டுத்
தித்தியா நின்ற வின்பந் திருத்தியிற் களிக்கு மென்றும்.

## கணபாஷித ரத்தினமாலை.

அட்ட விதங்களி னுலிட்ட லிங்கத்தை யர்ச்சித்ததை
விட்டக லாதுன்னல் பிராணலிங் கார்ச்சனை மெய்த்திலிங்கத்
துட்டன் மனம்லயித் தாற்பாவ லிங்கமி தொள்ளியமா
நிட்டைமெய்ப் பூசை யிதுவாகு மூன்றி னியமங்களே.

## சிவஞானதீபம்.

திருந்திய கற்பக லாத மட நல்லார்க்குஞ்
சிவலிங்க தாரணையாஞ் செம்மை யோர்க்கு
மருந்தவ மாகிய பிரமசாரி யோர்க்கு
மருமறை யினந்த முணர்ந்தங்கி மூன்றும்
பொருந்துமுப சாதகர்க்கு முலக வாழ்வு
பொய்யெனவே மெய்யுணர்ந்த பொலிவி னோர்க்கு
மிருந்தலமே லாசுச மில்லை யாகு
மிரவியெதி ரிருளணுகா வியல்பி னுமே.

வீரசைவ சமய விசாரம் - முற்றும்.

---

உ

ஓம் வாமதேவாய நமஃ

## ஆறுவது

## (கூ.) விபூதிதாரணத்தலம்.

[அதாவது - சதாசாரத்திலும் சத் க்ரியையிலும் சிரேஷ்டனான பக்தனுக்கு மநோ பாவகரணங்களில் ஜ்ஞானரூபமான லிங்கதாரணம் அவசியமா யிருத்தல்போல, சிவபெருமானுடைய மஹைஶ்வரிய மளிக்கும் விபூதிதாரணம் வேதவிதிப்படியே ஆசரணீய மானது. ஏனெனின், அவ்விதமான தாரணம் கர்மகுணம் சேராது பவத்தையொழித்துச் சுத்தம் செய்யாநிற்கு மாதலான் என்க.]

*அறுசீர்க்கழிநெடி லடியாசிரிய விருத்தம்.*

பூதிதனை யணிந்ததனிற் பட்டகலாக் கருத்தொடுநற் புனித னாகிச்
சோதிமய மாயசிவ மெனும்பொருளை விளக்குதலாற் றூய்தாம் வெண்ணீ
றோதலுறு பசிதமொடு பசுமமெனப் பட்டிடுமென் றுளத்திற் கொண்டு
போதுமவ னியாவனவ னுயர்ந்தவனிங் குபாதியறும் பூதி யுள்ளோன்.

(ப - ரை.) பூதிதனை அணிந்து - விபூதியைத் தரித்து, அதனில் பட்டு அகலா - அதிற் பொருந்தி நீங்காத, கருத்தொடு - மனத்துடனே, நல் புனிதன் ஆகி - மிக்க பரிசுத்தனாகி, சோதி மயம் ஆய-ஒளி யுருவாகிய, சிவம் என்னும் பொருளை விளக்குதலால்-சிவம் என்கிற பொருளை விளங்கச் செய்தலால், தூய்து ஆம் - பரிசுத்தத்தை யுடையதாகிய, வெண் ணீறு - திருவெண்ணீறானது, ஓதல் உறு-சொல்லப்பட்ட, பசிதமொடு பசுமம் எனப்பட்டிடும் என்று—, உள்ளத்திற் கொண்டு—, போதும் அவன் - நடப்பவன், யாவன்-எவனோ, அவன் - அவனே, உயர்ந்தவன்—, இங்கு உபாதி அறும் - இவ்வுலகத் துன்பமறுதற்கேது வாகிய, பூதி உள்ளோன் - விபூதி தாரணன், எ - று.

(வி - ரை.) பூதி விபூதி யென்பன ஐசுவரிய மெனப் பொருள்படுஞ் சொற்களாதலால் சிவாநுபூதிச் செல்வ முடையவன் எனினும் பொருந்தும். (க)

மந்திரமே முதலாய நெறிவழா தழலினிடை வந்து தோன்றுஞ்
சுந்தரமா கியநீற்றை யுபாதிகமென் றறைகுவர்நா றணிந்த நல்லோர்
பந்தமறு மதனுமம் விபூதியொடு பசிதமணி பசுமஞ் சார
நிந்தையறு மிரக்கையெனக் காரணமமர் தற்றலகி னிகழு மன்றே.

(ப - ரை.) மந்திரமே முதல் ஆய - மந்திர முதலாகிய, நெறி வழாது - நெறிதவறு மல், அழலினிடை வந்து தோன்றும் - சிவாக்கினியில் வந்து தோன்றுகிற, சுந்தரம் ஆகிய நீற்றை—, நூல் துணிந்த நல்லோர் - நூற் பொருள்களை நிச்சயித்தறிந்த நல்லோர், உபா திகம் என்று அறைவர்—, பந்தம் அறும்-பந்தம் அறுதற் கேதுவாகிய, அதன் நாமம் - அதன் பெயர், விபூதியொடு—, பசிதம்—, அணி - அழகிய, பசுமம்—, சாரம்—, நிந்தை அறும்-பழிப்பற்ற, இரக்கை—, என-என்று சொல்லும்படி, காரணம் ஐந்து உற்று - ஐந்து ஏதுக்களை யுடையதாகி, உலகில் நிகழும் - உலகத்தில் விளங்கும், எ - று.

(வி - ரை.) பந்தம் - பிறவிக்கட்டு. இதனால் திருவெண்ணீறானது விபூதி, பசிதம், பசுமம், சாரம், இரக்கை யென்னும் ஐந்து பெயர்களோடு கூடி விளங்குமென்பது விசத மாயிற்று. அன்று, ஏ - அசைகள். (உ)

பூதியெனப் படுஞ்செல்வ வேதுவினாற் சிவமாகும் பொரு டிகழ்த்து
மேதுவினிற் பசிதமிகு பாவங்க டமையச்சத் திசைத்த லாலே
யோதலுறும் பசுமமா மிடரிடைநின் றகற்றுதலா லொன்றுஞ் சாரந்
தீதகல வனைவரையு மளித்தலினா லிரக்கையெனச் செப்பு நூலே.

(ப - ரை.) செல்வ ஏதுவினால் - பெருஞ் செல்வத்துக்குக் காரண மாதலால், பூதி எனப்படும்—, சிவம் ஆகும் பொருள் திகழ்த்தும் ஏதுவினால் - சிவமாகியபொருளை விளக் குங் காரணத்தால், பசிதம்—, மிகு பாவங்கள் தமை - மிக்கபாவங்களை, அச்சத்து இசைத் தலாலே - அச்சத்திற் புகுவித்தலாலே, ஓதலுறு பசுமம் ஆம் - சொல்லப்பட்ட பசுமமா கும், இடரிடை நின்று அகற்றுதலால் - துன்பத்தினின்றும் நீக்குதலால், சாரம்ஒன்றும்- சாரமென்னும் பெயரை யடையும், தீது அகல - தீமை யொழியும்படி, அனைவரையும் அளித்தலினால் - எல்லாரையும் காத்தலால், இரக்கை என - இரக்கை யென்று, நூல்செப் பும் - நூல்கள் சொல்லா நின்றன, எ - று.

(வி - ரை.) பாவங்கள்தமை யென்பதில் தம் சாரியை. அச்சத்திற் புகுவித்தல் - அஞ் சப் பண்ணுதல். அளித்தல் - காப்பாற்றல். சாரம் இரக்கை முறையே க்ஷாரம் ரக்ஷை யென்னும் வடசொற் றிரிபுகள். (௩)

தோன்றியிடு நந்தைபத் திரைசுரபி சுசீலையொடு சுமனை யென்ன
வான்றிறமோ ரைந்துமெழிற் சத்தியோ சாதமுத லரன்மு கத்தி
லேன்றமுறை கபிலைநிறங் கருமைமிகும் வெண்மையெழுந் திலங்கு செந்தீக்
கான்றபுகை நிறஞ்செம்மை யெனுமைந்து மவற்றினிறங் கண்டு கொண்மோ.

(ப-ரை.) தோன்றியிடும்-தோன்றுகின்ற, நந்தை பத்திரை சுரபி சுசீலையொடு சுமனை யென்ன—, ஆன்திறம் ஓர் ஐந்தும் - பசுவின் வகையோரைந்தும், எழில் - அழகாகிய, சத்தியோசாதம் முதல் - சத்தியோசாத முதலான, அரன் முகத்தில் - சிவபெருமான் ஐந்து திருமுகங்களில், ஏன்ற முறை - தோன்றின முறையாகும், (இவற்றுள்) கபிலைநிறம் கருமை மிகும் வெண்மை—, எழுந்து இலங்கு - கிளர்ந்து விளங்குகிற, செந்தீ கான்ற - செந்தீயினால் உண்டாக்கப்பட்ட, புகை நிறம்—, செந்நிறம்—, (ஆகிய) ஐந்தும்—, (முறையே) அவற்றின் நிறம்—, கண்டுகொள்—, எ - று.

(வி - ரை.) சிவபெருமான் திருமுகங்களைந்தும் சத்தியோசாதம், வாமம், அகோரம், தற்புருடம், ஈசானம் எனப் பெயர் பெறும். கபிலை நிறம்-கருமை கலந்த பொன்னிறம். (௪)

முன்னிகழும் விபூதிசத்தி யோசாதந் தனில்வாம முகத்தின் கண்ணே
தன்னிகர்நற் பசிதமகோ ரத்தினிரும் பசுமமெழிற் சாரமென்ப
துன்னலரும் புருடத்தி னீசானத் திரக்கையடைந் துதிக்கு மென்பர்
பன்னுமுறை நந்தைமுத லாயபெரும் பெயர்படைத்த பசுக்க டாமே.

(ப - ரை.) பன்னுமுறை - சொல்லப்பட்ட முறைமையினால், நந்தை முதல் ஆய - நந்தை முதலாகிய, பெரும் பெயர் படைத்த பசுக்கள்—, முன் நிகழும் - முன்னே விளங்குகிற, விபூதி—, சத்தியோசாதம் தன்னில் - சத்தியோசாதத்திலும், தன் நிகர் நல் பசிதம் - தன்னைத்தானே நிகர்த்த அழகிய பசிதம், வாமமுகத்தின் கண்ணே - வாமமுகத்திலும், இரும் பசுமம் - பெருமை பொருந்திய பசுமம், அகோரத்தில் - அகோரத்திலும், எழில் சாரம் என்பது—, உன்னல் அரு - நினைத்தற் கரிய, புருடத்தில் - (தற்) புருடத்திலும், இரக்கை—, ஈசாநத்து - ஈசாநத்திலும், அடைந்து - அடைதலால், உதிக்கும் என்பர் - பிறக்குமென்று சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) பன்னுதல் - சொல்லுதல். என்பர் என்னும் பயனிலைக்கு வினை முதலாகிய அறிஞர் என்பது வருவித்துரைக்கப்பட்டது. இதனால் விபூதி முதலிய ஐவகைத் திருவெண்ணீறும் சிவபெருமானது திருமுகங்களில் தோன்றிய முறை கூறப்பட்டது. அடைந்து அடைதலால் எனப்பொருள்படுதலால் காரணப் பொருட்டாகிய வினையெச்சம்.

நித்தியகா ரியமதனில் விபூதிநை மித்திகத்தி னிகழா நின்ற
சுத்தமா கியபசிதம் பசுமமே பரிகாரத் தொழிற்க ணன்றி
முத்தியாம் வினையதனி லிரக்கையெலாக் கருமத்து மொழியின் சாரம்
புத்தியா னுயர்வீர சைவரணி குவரெனவே புகல்வ ரன்றே.

(ப - ரை.) புத்தியான் உயர் - அறிவினாற் சிறந்த, வீரசைவர்—, நித்திய காரிய மதனில் - நாடோறும் நடக்கிற காரியங்களில், விபூதி - விபூதியையும், நைமித்திகத்தில்—, நிகழா நின்ற - விளங்கா நின்ற, சுத்தம் ஆகிய பசிதம் - பரிசுத்தமான பசிதத்தையும், பரிகாரத் தொழிற் கண் - பிராயச்சித்த கர்மத்தில், பசுமம் - பசுமத்தையும், அன்றி - அல்லாமல், முத்தி ஆம் வினையதனில் - வீடு பேற்றுக் குரிய காரியத்தில், இரக்கை - இரக்கையையும், எல்லாக் கருமத்தும் - எல்லாக் காரியங்களிலும், மொழி - சொல்லப்பட்ட, சாரம் - சாரத்தையும், அணிகுவர் என - தரிப்பார்களென்று, புகல்வர் - சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) புகல்வர் என்னும் பயனிலைக்கு வினைமுதலாகிய அறிஞர் என்பது வருவித்துரைக்கப்பட்டது. வினையதனில் என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி.

நித்தியகாரியம் - நாடோறுஞ் செய்யும் பூசைமுதலியன. நைமித்திகம் - நாடோறுஞ் செய்யும் வபநாதி காரியங்களால் நேர்தற்குரிய ஆசௌசத்தை யொழிக்கும்பொருட்டுத் தரித்தல். (௬)

நந்தைமுத லாயவற்றி னிறமாகுங் கபிலாதி நவின்ற வன்ன
மைந்துமுறை விபூதிமுத லைந்தினுக்கு மாகுநீ றாத னான்கா
மந்தமலி கற்பமநு கற்பமுப கற்பமுட னகற்ப மென்றே
முந்தையுள கற்பமே சிறந்ததுமற் றேனையவு முறையி னுமால்.

(ப - ரை.) நந்தை முதலியவற்றின் நிறம் ஆகும் - நந்தை முதலியவற்றின் நிறங்களாகிய, கபிலாதி நவின்ற - கபில முதலாகச் சொல்லப்பட்ட, வன்னம் ஐந்தும் - ஐந்துநிறங்களும், முறை - முறையே, விபூதி முதல் ஐந்தினுக்கும்—, ஆகும்—, அந்தம் மலி - அழகு மிகுந்த, கற்பம்—, அநுகற்பம்—, உபகற்பமுடன்—, அகற்பம் என்று—, நீறு ஆதல் நான்காம்—, (அவற்றுள்) முந்தை உள்ள - முன்னே யிருக்கிற, கற்பமே சிறந்தது—, மற்று ஏனையவும் - (கற்ப மில்லாவிடில்) மற்றவைகளும், முறையின் ஆம் - முறையே சிறந்தனவாகும், எ - று.

(வி - ரை.) மற்று ஏனை என்பன ஒருபொருட் பன்மொழி. வன்னம் வர்ணம் என்னும் வடசொற்றிரிபு. நந்தை முதலாய என்றது நந்தை முதலாகிய பசுக்களென்றபடி. (௭)

சாற்றுமுறை வழாதுநவ கோமயத்தைச் சத்தியோ சாதந் தன்னு
லேற்றருள்செய் பிண்டமது வாமதே வத்தினுற விழைத்து லர்த்திப்
போற்றலுறு புருடத்தாற் சுட்டதனை யகோரமதுப் புகன்றீ சாநத்
தூற்றமுற வெடுத்திருத்தல் கற்பமறு கற்பாதி யுரைத்து மன்றே.

(ப - ரை.) சாற்று முறை வழாது - (சிவாகமங்களில்) சொல்லப்பட்ட முறை தவறு மல், நவ கோமயத்தை - புதிய கோமயத்தை, சத்தியோசாதத்தினல் ஏற்று - சத்தியோ சாத மந்திரத்தை ஜபித்துக்கொண் டெடுத்து, வாமதேவத்தின் உருள் செய்த - வாம தேவ மந்திரோச்சாரணம் செய்து கொண்டு (கோமூத்திரத்தினல்) உருண்டை செய்த, பிண்டம்-பிண்டத்தை, அகோரமது புகன்று - அகோரமந்திரத்தை யுச்சரித்துக்கொண்டு, சுட்டதனை —, ஈசாநத்து - ஈசாநமந்திரம் ஜபித்துக்கொண்டு, ஊற்றமுற எடுத்து இருத் தல் - உற்சாகமா யெடுத்து வைத்தல், கற்பம் - கற்பமாம், அநுகற்பாதி - அநுகற்ப முத லியவற்றை, உரைத்தும் - இனிச் சொல்வோம், எ - று.

(வி - ரை.) கோமயம் - கோமலம் (சாணம்). (அ)

காட்டுலர்கோ மயம்பொடித்தம் முறைசுடுத லநுகற்பங் கடையர் தீக்க
ணீட்டுபொடி துகில்கொடுசோ தித்துருட்டி யானீர்விட் டிசைத்த வாறே
மூட்டுமழற் சுடுவதுப கற்பமென லாகுமிவண் மொழிந்த வன்றிக்
கூட்டுதிரு நீறகற்ப மெனச்சிவா கமமனைத்துங் கூறு மன்றே.

(ப - ரை.) காட்டு உலர் - காட்டில் உலர்ந்த, கோமயம் பொடித்து—, அம்முறைசுடு தல்—, அநுகற்பம்—, கடையர் - கடைக்காரரது, தீக்கண்-தீயில், ஈட்டு பொடி - சேர்த்த நீற்றை, துகில் கொடு சோதித்து - துணியால் வடிகட்டி, உருட்டி—, ஆன் நீர் விட்டு- பசுநீர் விட்டு, இசைத்தவாறே - சொன்ன வண்ணமே, மூட்டும் அழல் சுடுவது—, உப கற்பம் என்னலாகும்—, இவண் மொழிந்த அன்றி-இங்கே சொன்னவையே யன்றி, கூட்டு திருநீறு - (வேறுவகையால்) சேர்த்ததிருநீறு, அகற்பம் என—, சிவாகமம் அனைத்தும் கூறும்—, எ - று.

(வி - ரை.) ஆன்நீர் - கோஜலம். இவண் மொழிந்தவன்றி என்றதினல் மந்திர மற்ற மற்றவர்களால் என்க. கடையர் தீக்கண் ஈட்டு பொடியென்றது கடைக்காரரால் விற்கப் படும் விபூதி. (கூ)

கலயமுத லாயபாத் திரத்துளமர் நீறொன்று கவர்ந்து மூன்று
நலமருவு சந்திகளி லெனினுமெப்போ தெனினுமதை நானஞ் செய்த
நிலையதனிற் புதுப்புனலாற் கரம்விளக்கி மவுனியாய் நீற்றை யெண்காற்
பலமுதவு மூலமறுக் கொண்டபிமந் திரித்துப்பின் பகர்ந்த வாறே.

(ப - ரை.) கலய முதலாய பாத்திரத்துள்—, அமர் - பொருந்திய, நீறு ஒன்று கவர் ந்து - ஒரு நீற்றை யெடுத்து, மூன்று ஆம் நலம் மருவு சந்திகளில் எனினும் - முச்சந்தி யிலாயினும், எப்போது எனினும்—, அதை-அதனை, நானஞ்செய்த நிலையதனில் - ஸ்நானஞ் செய்த நிலையில், புதுப்புனலால் கரம் விளக்கி—, மவுனியாய்—, நீற்றை—, எண்கால்- எட்டு தரம், பலம் உதவு - பலத்தைக் கொடுக்கிற, மூல மநுக்கொண்டு - மூல மந்திரத் தால், அபிமந்திரித்து—, பின் - பிறகு, பகர்ந்தவாறே - சொல்லப்பட்டபடியே, எ - று.

(வி - ரை.) கலயம் கலசம் என்னும் வடசொற்றிரிபு. ஒருநீறு என்றது ஐவகைத் திருநீற்று ளொன்று. புதுப்புனல் - புதுநீர். கரம் விளக்கி - கையைச் சுத்திசெய்து. பலம் - பயன். அபிமந்திரித்தல் - நன்ருக மந்திரித்தல். எப்போதெனினும் என்பதினல் சம்பவிக்கும் இரண்டொரு காலத்தாயினும் என்பது பெறப்பட்டது. (௰)

சிரமதிலீ சாநத்தாற் புருடத்தான் முகமதனிற் றீர்கோ ரத்தா
லுரமதனில் வாமதே வத்தினாற் குய்யத்தி னொன்ப தத்தில்
வரமருவு சத்தியோ சாதத்தாற் பிரணவமா மந்தி ரத்தாற்
புரமுழுதும் புனைந்திடுக வநாதிமல விருடுமிக்கும் பூதி தன்னை.

(ப - ரை.) அநாதி மல விருள் துமிக்கும் - பழமையான மலவிருளைச் சேதிக்கிற, பூதி தன்னை—, ஈசாநத்தால் சிரமதில் - ஈசாநத்தாற் சிரத்திலும், புருடத்தால் முகமதனில்—, தீர் கோரத்தால்—, உர மதனில்-மார்பிலும், வாமதேவத்தினால் குய்யத்தில்—, வரம் மருவு - மேன்மை பொருந்திய, சத்தியோசாதத்தால்—, ஒன்பதத்தில் - ஒட்பமாகிய பாதத்திலும், பிரணவமா மந்திரத்தால்—, புரம் முழுதும் - சரீரமுழுதும், புனைந்திடுக—, எ - று.

(வி - ரை.) துமித்தல் - சேதித்தல் (அறுத்தல்). உரமதனில் என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி. குய்யம் - ஆண் குறி.

விபூதியை சிரம் முதலிய அவயவங்களில் மந்திர பூர்வகமாய் நனையச் செய்வதற்கு முன்னரே சுத்தமாகிய ஜலத்தால் கை கால்களைச் சுத்திசெய்து இடது கைப்பிரதேசத்தில் விபூதியை வைத்துக்கொண்டு மற்றொரு கையினால் மூடிக்கொண்டு பின்பு வாய்பேசாது மூலமந்திரத்தால் எட்டுமுறை விபூதியை யபிமந்திரித்தல்வேண்டும். தீர் என்றது அ என்னும் எதிர்மறை உபசர்க்கப் பொருளைத் தருதலால் தீர் கோரம் என்றது அகோரமென்றவாறு. (௧௧)

விதிமுறையின் விபூதிதனின் மூழ்குறுதல் கங்கைமுதல் விரிநீ ராட்டி
னதிகமென வறிகபுற மாசொழிப்ப தாகிச்சிற் றுவி மாயு
நதியறலின் மூழ்குதலின் விருப்பென்கொ லுண்மலிந நசித்து மிக்க
முதிருமறி வுதவியிடர்ப் பகுதிநீக் குறுநீற்றின் மூழ்கு வோர்க்கே.

(ப - ரை.) விதி முறையின் - விதி முறையாக, விபூதி தனில் மூழ்குறுதல்—, கங்கை முதல் - கங்கை முதலாகிய, விரிநீர் ஆட்டின் - பெருந் தீர்த்தங்களில் ஸ்நாநஞ் செய்வதினும், அதிகம் என அறிக—, புறம் மாசு ஒழிப்பதாகி—, சிற்றுவி - சிற்றுயிர், மாயும்- மாய்தற் கேதுவாகிய, நதி அறலில் - யாற்று நீரில், மூழ்குதலின் விருப்பு - முழுகவேண்டுமென்னுமாசை, உள் மலிநம் நசித்து—, மிக்க முதிரும் அறிவு உதவி—, இடர்ப் பகுதி நீக்குறும் - துன்பப் பகுதியை யொழிக்கிற, நீற்றில் மூழ்குவோர்க்கு—, என்கொல்-யாது காரணத்தா லுண்டாகும், எ - று.

(வி - ரை.) விதி - சாத்திர நியமம். மூழ்குறுதல் - முழுகுதல். புறம் - வெளி. மாசு- அழுக்கு. அறல் - நீர். மலிநம் - அழுக்கு. விதி முறையின் விபூதி தனில் மூழ்குறுதல் என்றது பூதியால் விதிக்கப்பட்ட (அக்கியின் சம்பந்த முடையதாகிய) ஆக்நேய ஸ்நாநத்தை. நதியறலில் மூழ்குதல் - வாருண ஸ்நானம். இந்திரியங்களை வென்றவர்களான சந்நியாசிகள் ஆக்நேய ஸ்நானம் செய்கிறார்கள். ஜலஸ்நாநத்தில் நிச்சயமாய்ப் பிராணி வதை நிகழுமாதலின் ஆக்நேய ஸ்நாநம் சிரேஷ்டமானது. ஜலத்தையோவெனில் (சுக்ல சோணிதங்கள் ஜலமாயிருத்தலால் பாசமாகிய) ப்ரக்ருதி என்று அறிக. அந்த ப்ரக்ருதி பந்தத்தைச் செய்வதென்று பெரியோர்கள் அறிகின்றனர். ப்ரகிருதியை நாசம் செய்வதினிமித்தம் பஸ்மஸ்நாநம் வேண்டப்படுகிறது. (௧௨)

முண்டகனே முதலாய வானவர்கா ரதன்முதலா முனிவர் மிக்க
வண்டர்புகழ் சநகன்முதல் யோகிகள்வா னுதியா மசுர ரெல்லாம்
வெண்டிருநீ றணிபவராய் விமலசிவ பத்தியொடு விளங்கி நெஞ்சிற்
கொண்டவரிப் புனிதநித்த சுத்தரா யினரெனவே கூறு நூலே,

(ப-ரை.) முண்டகனே முதலாய வானவர் - பிரமன் முதலாகிய தேவர்கள், நாரதன் முதலா முனிவர் —, மிக்க அண்டர் புகழ் - மேலான தேவர்கள் புகழ்கின்ற, சநகன் முதல் யோகிகள்—, வாணன் ஆதியாம் அசுரர் எல்லாம்—, வெள் திருநீறு அணிபவராய்—, விமல சிவபத்தியொடு விளங்கி—, நெஞ்சிற் கொண்டவர்—, இ - இந்த, புனிதம் - பரிசுத்தமாகிய, நித்தம் - சாசுவதமான, சுத்தம் ஆயினர் என—, நூல் கூறும் - நூல்கள் சொல்லா நின்றன, எ - று.

(வி - ரை.) முண்டகம் - தாமரை மலர், அதிலிருப்பவன் முண்டகன் (பிரமன்). நூல் என்றது சைவாகமங்களை. (கரு)

எழுமுறையைந் தெழுத்தோதி யுடன்முழுதுத் தூளநஞ்செய் திட்டுப் பின்னர்
வழுவகல வுயர்திரிபுண் டரமிடுக வன்றிமுனம் வருமுத் தூளம்
விழுமியவொண் புண்டரத்தோ டொவ்வாமை யாலதனை விடுத்தே யேனுஞ்
செழுமைதரு புண்டரமே யிடுகவென வறைந்திடுவர் தீத கன்றோர்.

(ப - ரை.) எழுமுறை - ஏழுதரம், ஐந்தெழுத்து ஓதி—, உடல் முழுது உத்தூளநம் செய்திட்டு—, பின்னர்—, வழு அகல—, உயர் திரிபுண்டரம் இடுக—, அன்றி—, முன்னம் வரும் உத்தூளம்—, விழுமிய - மேலான, ஒள்புண்டரத்தோடு ஒவ்வாமையால்—, அதனை விடுத்தேயேனும் - அதை விட்டே யாயினும், செழுமைதரு புண்டரமே இடுக—, என - என்று, தீது அகன்றோர் அறைந்திடுவர்—, எ - று.

(வி - ரை.) ஐந்தெழுத்து - நமசிவாய என்னும் ஸ்ரீ பஞ்சாக்ஷரம். உத்தூளநம் - பூசுதல். வழு - குற்றம். உத்தூளநம் விடுத்தேயேனும் என்றதினால் உத்தூளநத்தை விலக்க வந்ததன்று, மற்றென்னையோ வெனின் உத்தூளந மாத்திரத்தானே யிராமல் திரிபுண்டரமும் தரிக்கவேண்டியது என்பது. (கச)

சென்னியொளிர் நுதல்செவிகள் களம்புயங்க ளகலிதயஞ் சிறந்த வுந்தி
மன்னுபிட ரிருவாகு வொடுகருத்தே சங்கவின்கூர் மணிபந் தங்க
ளென்னவரு மூவைந்து தானத்தும் புனல்கலந்த வினிய நீற்று
லுன்னலரும் புகழ்த்திரிபுண் டரமிடுவர் மூலமநு வுரைத்து நல்லோர்.

(ப - ரை.) நல்லோர்—, மூல மநு உரைத்து, சென்னி—, ஒளிர் நுதல்—, செவிகள்—, களம்—, புயங்கள்,— அகல் இதயம்—, சிறந்த உந்தி—, மன்னுபிடர்—, இருவாகுவொடு—, கருத்தேசம்—, கவின்கூர் - அழகு மிகுந்த, மணி பந்தங்கள்—, என்னவரும்—, மூவைந்து தானத்தும்—, புனல் கலந்த இனிய நீற்றால்—, உன்னல் அரு - நினைத்தற்கரிய, புகழ் - புகழினையுடைய, திரிபுண்டரம் இடுவர்—, எ - று.

(வி-ரை.) மூலமநு - மூலமந்திரம். சென்னி - தலை, நுதல்-நெற்றி, களம் - கழுத்து, புயம் - தோள், உந்தி - கொப்பூழ், வாகு - தோள் (கை), கருத்தேசம் - முதுகு, பந்தம் - கட்டு, மூவைந்து தானம் - பதினைந்திடம், புனல் - நீர், திரிபுண்டரம் - மூன்று வரியாய்ப் பூசும் விபூதிப் பூச்சு. நல்லோர் இடுவர் என்றியைத் துரைத்துக் கொள்க. (கரு)

நீற்றினையொள் வாமகரங் கொண்டுவலக் கரமதனு னெறியின் மூடித்
தோற்றுறுமக் கினிரிதியென் பதுமுதலா கியமநுக்க டொட்டிங் கேழ்காற்
போற்றிமுனம் புகன்றவிடங் களிற்புனலாற் குழைத்தவெழிற் புனித நீற்று
லேற்றதிரி புண்டரமிட் டிடுபவன்மெய்ப் பரசிவனை யெய்து வானல்.

(ப - ரை.) நீற்றினை—, ஒள் வாமகரம் கொண்டு—, வலக்கரமதனால் நெறியின் மூடி—, தோற்றுறும் - தோன்றுகின்ற, அக்கினி ரிதி யென்பது முதலாகிய மநுக்கள் தொட்டு—, இங்கு—, ஏழ்கால்—, போற்றி - அபிமந்திரித்து, முன்னம் புகன்ற இடங்க

னில்—, புனலால் குழைத்த—, எழில் புனிதம் நீற்றால்—, ஏற்ற திரிபுண்டரம் இட்டிடு பவன்—, மெய் பரசிவனை எய்துவான்—, எ - று.

(வி - ரை.) வாமகரம் - இடது கை. நீற்றினையிடுபவன் பரசிவனை யெய்துவான் என்றியைத் துரைத்துக் கொள்க. பரசிவனை எய்துவான் என்றது சுபம்தருவோனும் ராகத்வேஷ மற்றவனுமாகிய சிவனையடைதல் சந்தேகமில்லை யென்க. (௧௬)

தன்னுடைய வலக்கரத்தி னடுவிரல்கண் மூன்றுகொடு தயங்கு நீற்றான்
மன்னுதலி னீளமறு விரலளவா யினுங்கடைக்கண் மட்டா யேனு
முன்னளக வளவேனும் வயங்குதிரி புண்டரஞ்சொன் முறையிற் சாத்திற்
பன்னலுறு மழற்பொறிபோற் பவமனைத்துந் தொலைக்குமெனப் பகர்வர் நல்லோர்.

(ப - ரை.) தன்னுடைய வலக்கரத்தின் நடு விரல்கள் மூன்று கொடு—, தயங்கும்-விளங்குகிற, நீற்றால்—, மன்னும் நுதல் - நிலைபெற்ற நெற்றியில், அறுவிரல் நீளம் அளவு ஆயினும்—, கடைக்கண் மட்டா யேனும் - கடைக்கணளவா யாயினும், முன் அளக அள வேனும் - முன் மயிரினளவாயினும், வயங்கு-விளங்குகிற, திரிபுண்டரம்—, சொல் முறை யின் - சொல்லப்பட்ட முறையோடு, சாத்தின் - அணிந்தால், பன்னலுறும் - சொல்லப் பட்ட, அழல் பொறிபோல்—, பவம் அனைத்தும்—, தொலைக்கும் என—, நல்லோர் பகர்வர்—, எ - று.

(வி - ரை.) விரல் - அங்குலம். முன் அளகம் - முற்புறத்து மயிர். அழல் பொறி-நெருப்புப் பொறி. பவம் - பாவம், பிறவி யெனினுமாம். தொலைக்கும் என்னும் வினைக்கு வினை முதல் த்ரிபுண்ட்ரதாரணம் எனக் கண்டுகொள்க. ஆறுவிரல் நீளம் என்றது நெற்றி யளவு நீட்டத்தை எனப் பொருள் கொள்க. (௧௭)

மத்திமையோ டநாமிகையங் குட்டமெனு மிவ்விரலான் மறைகளெல்லாம்
வைத்ததிரி புண்டரத்தை யநுலோம விலோமத்தால் வயங்க மல்கு
பத்திகொடு திருநுதலி லிடுபவனே யுருத்திரனும் பகரி னிந்த
மெய்த்தவுரை தனினைய மிலைமலயத் திருந்துதவம் விளைக்கு மேலோய்.

(ப - ரை.) மலயத்து இருந்து - பொதிய மலையிலிருந்து, தவம் விளைக்கும் மேலோய்-தவஞ் செய்கிற மேலோனே, மத்திமையோடு அநாமிகை அங்குட்டம் என்னும் இவ்விர லால்—, மறைகள் எல்லாம் வைத்த திரிபுண்டரத்தை—, அநுலோம விலோமத்தால் — வயங்க மல்கு-விளங்க நிறைந்த, பத்திகொடு—, திரு நுதலில் இடுபவனே—, உருத்திரன் ஆம் - உருத்திரனுவான், பகரின்-சொல்லின், இந்த மெய்த்த உரைதனில் - இந்த உண்மை யாகிய சொல்லில், ஐயம் இல்லை—, எ - று.

(வி - ரை.) மத்திமை - நடுவிரல், அநாமிகை - ஆழி விரல் (மோதிர விரல்), அங்குட் டம் - பெருவிரல். அநுலோம விலோமத்தால் - வலமாயும் இடமாயும். பகர்தல் - சொல் லுதல். (௧௮)

செவ்வியவா யொன்றொடொன்று புணராது நயந்துமிகச் சேர்ந்த வெண்மை
யெவ்வமறு செவியளவா யினையவிலக் கணமுழுது மிசைந்து மிக்க
வவ்வியமி லாததிரி புண்டரதா ரணஞ்சித்தி யனைத்து மாமென்
றிவ்வுலகின் மறைமுதலாங் கலையுணர்ந்த முதறினு ரெல்லாஞ் சொல்வர்.

(ப - ரை.) செவ்வியவாய் - செம்மை யுடையனவாய், ஒன்றொடொன்று புணராது-ஒன்றோடொன்றுசேராமல், நயந்து மிகச்சேர்ந்த-விரும்பி மிகவுஞ்சேர்ந்த, வெண்மை—, எவ்வம் அறு - குறைவற்ற, செவி அளவாய்—, இனைய இலக்கண முழுதும் இசைந்து—,

மிக்க அவ்வியம் இல்லாத—, திரிபுண்டரதாரணம்—, சித்தி அனைத்தும் ஆம் என்று—, இவ்வுலகில் மறை முதலாம் கலையுணர்ந்த மூதறிஞரெல்லாம்—, சொல்வர்—, எ - று.

(வி - ரை.) அவ்வியம் - குற்றம். திரிபுண்டர தாரணம் - திரிபுண்டரம் தரித்தல். சித்தி - பலிதம். மயக்கு மிகச் சேர்ந்த என்பது இடையிலே விட்டுப் போகாமல் ஒரே தொடர்பாய்ச் சென்றதும் அடர்ந்ததும் எனப் பொருள் கொள்க. (கக)

முப்பொழுதி னொருபொழுதா யினுந்திருவெண் ணீற்றினான் முறை வழாம
லப்புனித வருந்திரிபுண் டரமிடுவோ னுருத்திரனே யைய மில்லை
யிப்பரிசு நற்றிரிபுண் டரமிடுவோ னிறைதருமத் திசைவுற் றன்னோ
னொப்பரிய மும்மூர்த்தி மயனுவ னெனச்சுருதி யுரைக்கு மன்றே.

(ப - ரை.) முப்பொழுதின் ஒரு பொழுதாயினும்—, திருவெண்ணீற்றினால்—, முறை வழாமல்—, அ - அந்த, புனிதம் - பரிசுத்தமாகிய, அரு - அரிய, திரிபுண்டரம் இடுவோன்—, உருத்திரனே—, ஐயம் இல்லை—, இப்பரிசு - இத்தன்மையாக, நல் திரிபுண்டரம் இடுவோன்—, இறை தருமத்து இசைவுற்று - சிவதருமத்திற் பொருந்தி, அன்னோன் - அவ்விறைவனது, ஒப்பரிய மும்மூர்த்திமயன் ஆவன் என—, சுருதி உரைக்கும்—, எ - று.

(வி - ரை.) முப்பொழுது - காலை மாலை உச்சி. மும்மூர்த்தி மயன் - திரிமூர்த்தி வடிவுடையவன். இறை தருமத்திசைவுற்று என்பது உருத்திர தருமம் உடையவனாய் (அதாவது சிவாசார முடையவனாய்) எனப்பொருள் கொள்க. (உ0)

இந்திரனே முதலாய விமையவரு மலர்த்தவிசி லிருப்போன் றானு
முந்திமலர் தனிலுலகம் பூத்தலையா ழியினரவி லுறங்கு வானு
முந்துபுக ழுருத்திரனும் வதிட்டனே முதலாய முனிவர் தாமுஞ்
சுந்தரமா கியதிரிபுண் டரமணிந்து விளக்கமொடு தோன்று வாரே.

(ப - ரை.) இந்திரனே முதலாய இமையவரும்—, மலர்த்தவிசில் இருப்போன் தானும்—, உந்தி மலர்தனில் உலகம் பூத்து-திருவுந்தித் தாமரையில் உலகத்தைத்தோன்று வித்து, அலை - அலைகளையுடைய, ஆழியில் - பாற்கடலில், அரவில் உறங்குவானும்—, முந்துபுகழ் உருத்திரனும்—, வதிட்டனே முதலாய முனிவர் தாமும்—, சுந்தரம் ஆகிய (விபூதியால்) திரிபுண்டரம் அணிந்து—, விளக்கமொடு தோன்றுவார்—, எ - று.

(வி - ரை.) இமையவர் - தேவர், மலர் - தாமரை மலர், தவிசு - ஆசனம், பூத்தல் - உண்டாக்கல். அலை - ஆகுபெயர். அரவில் உறங்குவான் - சேஷசாயி (திருமால்). சுந்தரம் - அழகு. வதிட்டனே முதலாய முனிவர் என்பதில் வேதங்களை நன்குணர்ந்தவர்களும் மஹா பாக்யவான்களு மாகிய வசிஷ்டர் முதலிய முனிவர் என்பதைக் குறித்தற்குத் தேற்றே காரம் வந்தது. (உக)

அரியவே தாகமங்க ளனைத்தும்விரி புராணங்க ளனைத்து மெல்லா
மிருதிகளு மிதிகாச கற்பங்க ளியாவுமெழில் விளங்கு நீற்றாற்
புரியுமிணை தவிர்திரிபுண் டரம்விதிக்கப் படுமினைய புண்ட ரந்தா
னுரியரெனுஞ் சைவர்களாற் சிறப்பினணி யப்படுமென் றுரைக்கு நூலே.

(ப - ரை.) அரியவேதாகமங்கள் அனைத்தும்—, விரிபுராணங்கள் அனைத்தும்—, எல்லா மிருதிகளும்—, இதிகாச கற்பங்கள் யாவும்—, எழில் விளங்கும் நீற்றால்—, புரியும் இணைதவிர் - ஒப்பிடுதற் கரிதாகிய, திரிபுண்டரம் விதிக்கப்படும்—, இனைய புண்டரந் தான்—, உரியர் என்னும் சைவர்களால்—, சிறப்பின் - மேன்மையாக, அணியப்படும் என்று நூல் உரைக்கும்—, எ - று.

(வி - ரை.) எழில் - அழகு. உரியர் - அணியத் தகுந்தவர். சைவர்களாற்சிறப்பினணி யப்படும் என்றது சைவர்கள் முக்கியமாய்த் தரித்துக்கொள்ளுதலு மன்றி, ஏனையோர் களும் தரிக்கவேண்டியது என்னும் பொருள் தோன்றற்கென்க. (௨௨)

நீங்கியதோ ரொழுக்கமுடை யவனாகித் தீயொழுக்க நெறிநின் றோனாய்த்
தீங்குபுரி நாத்திகனே யெனினுமிள நிலவெறிக்குந் திருவெண் ணீற்றி
னோங்குதிரி புண்டரதா ரகன்மிகுபா வங்களெல்லா மொழிந்து நிற்பன்
வாங்குதிரைக் கடலுலகிற் குறுமுனியென் றுயர்ந்தபெரு மாத வத்தோய்.

(ப-ரை.) வாங்கு - வளைந்த, திரை - அலைகளையுடைய, கடல் - கடல் சூழ்ந்த, உலகில் —, குறுமுனி யென்று உயர்ந்த பெரு மாதவத்தோய் —, நீங்கியது ஓர் ஒழுக்கம் உடை யவனாகி —, தீயொழுக்க நெறி நின்றோனாய் —, தீங்குபுரி - தீமையே செய்கிற, நாத்தி கனே எனினும் —, இள நிலவு எறிக்கும் - இள நிலவினொளி வீசுகிற, திருவெண்ணீற்றின்- திருவெண்ணீற்றினால், ஓங்கு - உயர்ந்த, திரிபுண்டர தாரகன் —, மிகு பாவங்களெல்லாம் ஒழிந்து நிற்பன் —, எ - று.

(வி - ரை.) வாங்கல் - வளைதல். நீங்கியதோ ரொழுக்க முடையவன் - நல்லொழுக் கம் நீங்கினவன், தீயொழுக்க நெறியெனமேல் வருதலால் இது நல்லொழுக்கமெனப் பட் டது. நாத்திகன் - தெய்வமில்லை யென்பவன் (சூந்யவாதி). நிலவு - ஆகுபெயர். மேற்போ ந்தசெய்யுட்களில் கூறிய சிவசாருபம் முதலியவைகளை வெண்ணீற்றுத் திரிபுண்டர மணி த்தலால் அச்சிறப்புத் தோன்ற இச்செய்யுளில் திரு வென்னும் விசேடணம் புணர்க்கப் பட்டது. (௨௩)

விபூதிதாரணத்தலம் - முற்றும்.



ஓம் விரூபாக்ஷாய நமஃ.

ஏழாவது

## (எ.) உருத்திராக்கதாரணத்தலம்.

[அதாவது—சிவத்தின் ஜ்ஞாந நேத்திரத்தினின் றுதித்த மந்த்ரமூல கூட பத சிந்தா மணியென்பதெதுவோ, அங்கத்தில் ருத்திர முத்திரையுண்டாயிருப்ப தெதுவோ, ருத்திர னுடனைக்யப்படுத்துவ தெதுவோ அந்த ருத்திராக்ஷத்தை, மஹா ஜ்ஞாநமய பஸ்மத்தை க்ரியாமுகத்தில் தரித்த லிங்கதாரகனானவன் அதன் மகிமையை யாதியந்தமா யறிந்து விதிப்படி தரித்தல் வேண்டும் என்பது.]

கலிவிருத்தம்.

நீற்றின் மூழ்கிநன் னெற்றியிற் புண்டரந்
தோற்ற வீசனைத் தொண்டினர்ச் சிப்பவன்
போற்றி யக்க மணியும் புனைகவென்
றாற்றன் மிக்குய ராகம மோதுமால்.

(ப - ரை.) நீற்றின் மூழ்கி - திருவெண்ணீற்றில் மூழ்கி, நல் நெற்றியில் புண்டரம் தோற்ற —, ஈசனை —, தொண்டின் அர்ச்சிப்பவன் —, போற்றி - விசுவசித்து, அக்க மணியும் புனைகவென்று —, ஆற்றல் மிக்கு உயர் - ஆற்றலால் மிகவு முயர்ந்த, ஆகமம் ஓதும் —, எ - று.

(வி - ரை.) தொண்டின் - தொண்டினோடு. அக்கமணி - கண்மணி (உருத்திராக்கம்). ஓதுதல் - சொல்லுதல். (க)

புரங்கள் மூன்றும் பொடித்துறுங் காலரன்
றிரங்கொ ணாட்டந் திறப்பப் பஃறுளி
பரந்த வன்னவற் றிற்படு பன்மணி
வரங்கொ ளக்க மணியென வோதுவார்.

(ப - ரை.) புரங்கள் மூன்றும் பொடித்துறுங்கால் - மூன்று புரங்களையும் பொடிபடுத்தும் காலத்தில், அரன் - உருத்திரன், திரம் கொள் - உறுதியைக் கொண்ட, நாட்டம் - கண்ணை, திறப்ப - திறக்க, பல் துளி பரந்த - பல நீர்த்துளிகள் சிந்தின, அன்னவற்றில் - அவற்றில், படு - உண்டாகிய, பன்மணி - பலமணிகளை, வரம் கொள் - மேன்மையைக் கொண்ட, அக்கமணியென ஓதுவார் - உருத்திராக்க மணியென்று சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி-ரை.) நாட்டம் - ஆகுபெயர். படுதல் - உண்டாதல். ஓதுவார் என்னும் வினைக்கு வினை முதலாகிய அறிஞர் என்பது வருவித்துரைக்கப்பட்டது. (உ)

உருத்தி ராக்கத் துதித்திடுந் தன்மையா
லுருத்தி ராக்கப் பெயர்பெறு மொண்மணி
யிருக்கு முப்பதொ டெண்வகை பேதமாய்த்
தரித்து ளோர்வினை சாடுவ வாகியே.

(ப - ரை.) உருத்திரன் அக்கத்து - உருத்திரன் கண்ணில், உதித்திடும் தன்மையால் - தோன்றின தன்மையால், உருத்திராக்கப் பெயர் பெறும் - உருத்திராக்க மென்னும் பெயரைப்பெற்ற, ஒள்மணி - அழகிய மணிகள், தரித்துள்ளோர் - (தம்மைத்) தரித்திருப்பவரது, வினை - வினைகளை, சாடுவ ஆகி - அழிப்பன வாகி, முப்பதொடு எண்வகை பேதமாய் - முப்பத்தெட்டு வகையினை யுடைய வாகி, இருக்கும் —, எ - று.

(வி - ரை.) சாடுதல் - அழித்தல். (௩)

கதிர்க்க ணாறிரண் டாகுங் கபிலமாய்
மதிக்க ணீரெட்டு மன்னுறும் வெண்மையை
யுதிக்குந் தீக்கணிற் பத்தொண் கருமையாய்
விதித்த வீசன் விழிமணி யென்பவே.

(ப - ரை.) விதித்த - விதிக்கப் பட்ட, ஈசன்விழி மணி - உருத்திராக்க மணிகள், கதிர்க்கண் ஆறிரண்டு - சூரிய காந்தியையுடைய கண்கள் பன்னிரண்டும், கபிலமாய் ஆகும் - கபில நிறமாயிருக்கும், மதிக்கண் ஈரெட்டு - சந்திர காந்தியையுடைய கண்கள் பதினாறும், வெண்மையை மன்னுறும் - வெண்ணிறமா யிருக்கும், தீக்கண்ணில் பத்து - நெருப்புக் கண்ணிலுதித்த பத்தும், ஒள் கருமையாய் உதிக்கும் - ஒள்ளிய கரு நிறமாயிருக்கும், என்ப - என்று சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) கதிர் மதி யென்பன ஆகுபெயர்கள். ஆறிரண்டு, ஈரெட்டு, பத்து, என்பவற்றீற்றில் எண்ணும்மைகள் தொக்கன. (௪)

பழுதி லாது பசும்பொ னிறத்தவா
யழகு கூர்ந்தய லாரணி யாமணி
முழுது ணர்ந்த முதல்வனைப் பூசைசெய்
விழுமி யோன்புனை கிற்பன் விழைவினால்.

(ப - ரை.) பழுது இல்லாது - குற்ற மில்லாமல், பசும்பொன் சிறந்த ஆய்—, அழகு கூர்ந்து - அழகு மிகுந்து, அயலார் அணியாமணி—, முழுதுணர்ந்த முதல்வனை—, பூசை செய் - பூசைபண்ணுகிற, விழுமியோன் - மேலானவன், விழைவினுல் - விருப்பத்தோடு, புனைகிற்பன் - தரிப்பான், எ - று.

(வி - ரை.) கூர்தல் - மிகுதல். அயலார் - அன்னியர் (மற்றவர்கள்). விழுமியோன் என்றது சைவனை. விழைவு - விருப்பம். புனைகிற்பன் என்பதில் கில் ஆற்றலுணர்த்த வந்தது. (ரு)

சிகையி னோர்முகத் தொன்று சிரத்தினின்
முகமி ரண்டுமூன் றுறிரண் டுள்ளமூன்
றிகலில் பன்னொன் றிசையுமா றுறுதாம்
புகழு றுந்தலை தன்னிற் புனைகவே.

(ப - ரை.) சிகையின் - சிகையில், ஓர் முகத்து ஒன்று - ஒருமுகத்தினையுடைய வொன்றினையும், சிரத்தினில்—, முகம் இரண்டு மூன்று ஆறிரண்டு உள்ள மூன்று - இரண்டு முகம் மூன்று முகம் பன்னிரண்டு முகமுள்ளன வாகிய மூன்றினையும், புகழ் உறும் தலை தன்னில்—, இகல் இல் - குற்றமில்லாத, பன்னொன்று இசையும் ஆறுறு - பதினொரு முகத்தினையுடைய முப்பத்தாறினையும், புனைக - தரிக்கக் கடவன், எ - று.

(வி - ரை.) சிகை - குடுமி. சிரம் - தலை. தலை - கபாலம். (சு)

ஐந்தொ டேழுபத் துள்ளவவ் வாறுகா
துந்து மாறொடெட் டுள்ளவெண் ணுன்குநற்
கந்த ரம்முக நான்குள வைம்பதாய்
வந்த நன்மணி மார்பி லணிவரால்.

(ப - ரை.) ஐந்தொடு ஏழு பத்து உள்ள - ஐந்து ஏழு பத்து முகங்களை யுடையன, அவ்வாறு - அவ்வாறாக, காது - காதிலும், உந்தும் ஆறு ஒடு எட்டு உள்ள - பொருந்திய ஆறு எட்டு முகமுள்ளன, எண்ணான்கு - முப்பத்திரண்டினை, நல் கந்தரம் - நல்ல கழுத்திலும், முகம் நான்கு உள்ள - நான்கு முகமுள்ளன, ஐம்பதாய் வந்த நல் மணி - ஐம்பதாகிய நல்ல மணிகளை, மார்பில் - மார்பிலும், அணிவர் (அறிஞர்)—, எ - று.

(வி - ரை.) கந்தரம் - கழுத்து, இது வடசொல், இதற்கு சிரத்தைத் தாங்கிக் கொண்டிருப்பது என்பது பொருள். அணிவர் என்னும் பயனிலைக்கு வினை முதலாகிய அறிஞர் என்பது வருவித் துரைக்கப்பட்டது. (எ)

வாகு விற்பதின் மூன்றுள வேறுவே
றாக வீரெட்டங் காறிரண் டாறிரண்
டோகை நன்முக மொன்ப துடையவா
மோக வொண்மணி முன்கையிற் கொள்கவே.

(ப - ரை.) பதின் மூன்று உள்ள - பதின்மூன்று முகமுள்ளன, வேறு வேறு ஆக—, ஈரெட்டு - பதினாறு, வாகுவில் புயங்களிலும், அங்கு ஆறிரண்டு ஆறிரண்டு - பன்னிரண்டு பன்னிரண்டு விழுக்காடு, ஓகை - சந்தோஷத்தையுடைய, நல் முகம் ஒன்பது உடைய ஆம் மோக வொள்மணி - நல்ல முகமொன்ப துள்ளனவாகிய விரும்புதற்குரிய அழகிய மணியை, முன்கையில் கொள்க—, எ - று.

(வி - ரை.) மோகம் - மிகு விருப்பம். முன்கையில் என்பதற்கு மணிக்கட்டு ஒவ்வொன்றிலும் எனப்பொருள் கொள்க. (அ)

ஏழி ரண்டுமு கத்துநூற் றெட்டியர்
வாழ்வி லங்குப வீதம் வனைகுவர்
தாழி ருஞ்சடைத் தாணுவைப் பூசனை
யூழி லங்க வுஞற்றிடு முத்தமர்.

(ப - ரை.) தாழ் - தொங்குகிற, இரு சடை - பெரிய சடையையுடைய, தாணுவை - சிவபிரானை, ஊழ் இலங்க - முறைவிளங்க, பூசனை உஞற்றிடும் உத்தமர்—, ஏழிரண்டு முகத்து - பதினான்கு முகத்தினையுடையவற்றை, நூற்றெட்டு - நூற்றெட்டா யெண்ணித் தொடுத்து, உயர்வாழ்வு இலங்கு - உயர்ந்த செல்வமாய் விளங்குகிற, உபவீதம் வனைகுவர் - உபவீதமாயணிந்து கொள்வார்கள், எ - று.

(வி - ரை.) தாழ்தல் - தொங்குதல். இருமை - பெருமை. உத்தமர் - வடசொல், இதற்கு தமத்தைக் கடந்தவர் என்பது பொருள்; தமம் - அஞ்ஞான விருள். உபவீதம் - பூணூல். உஞற்றிடும் - இயற்றிடும். (கூ)

இனைய வாறிங் கிறைமணி யென்றுமே
புனைகு வார்நற் புலனறு மூடரே
யெனினு மங்கவர்க் கென்று மருவுதீ
வினையி னாமமு மின்றிது மெய்ம்மையே.

(ப - ரை) இனைய ஆறு - இந்தநெறியாக, இங்கு - இவ்வுலகில், இறைமணி - உருத்திராக்க மணியை, என்றும் புனைகுவார் - என்றும் தரிப்பவர், நல் புலன் அறும் - நல்லறிவற்ற, மூடரே யெனினும்—, அங்கவர்க்கு - அவர்களுக்கு, என்றும்—, மருவு தீவினையின் நாமமும் இன்று—, இது மெய்ம்மையே—, எ - று.

(வி - ரை.) இறை - உருத்திரன். நாமம் - பெயர். (க0)

கலிநிலைத்துறை.

வேதி யர்க்கனை யத்தனுக் கொண்மக வினுக்குத்
தீதி ழைத்தவன் கள்ளுணி செய்ந்நன்றி செற்றோன்
போத நற்குரு தற்பரன் பொன்கொளி யெனினும்
பாத கத்தினி னீங்குவன் பரன்மணி தரிப்போன்.

(ப - ரை.) பரன்மணி தரிப்போன் - உத்திராக்க மணியைத் தரிப்பவன், வேதியர்க்கு அன்னை அத்தனுக்கு ஒள்மகவினுக்கு—, தீது இழைத்தவன் - தீங்கு செய்தவனும், கள் உண்ணி - கள் உண்போனும், செய்ந்நன்றி செற்றோன் - செய்ந்நன்றி கொன்றவனும், போதம் - அறிவூட்டின, நற்குரு தற்பரன் - சதாசாரியனாகிய தற்பரனது, பொன்கொளி எனினும் - பொன்னைக் கவர்ந்தவனும் (ஆகிய யாவனாயினும்), (அவன்) பாதகத்தினில் நீங்குவன்—, எ - று.

(வி - ரை.) பரன்மணி - உருத்திராக்கமணி. அத்தன் - தந்தை. உண்ணி கொளி யென்பவற் றீற்றிகரங்கள் வினைமுதற் பொருண்மை விகுதிகள். செற்றோன் என்றார் அவா வசமாய் மறந்தோன் என்றற்கு. பாதகம் - பெரும்பாவம். (கக)

அந்த ணக்குலத் துதித்தவ னாயினு மன்றி
நிந்த னைப்புலைப் பிறப்பின னாயினும் புலமை
முந்து பெற்றவ னாயினு மூடனா யினுமே
சிந்து முற்பவ மனைத்தையுஞ் சிவன்மணி தரிப்போன்.

(ப - ரை.) சிவன்மணி தரிப்போன்-உருத்திராக்க மணியைத் தரிப்பவன், அந்தணக் குலத்து உதித்தவன் ஆயினும்—, அன்றி—, நிந்தனைப் புலைப் பிறப்பினன் ஆயினும்—, புலமை முந்து பெற்றவன் ஆயினும்—, மூடன் ஆயினும் (அவன்)—, முன்பவம் அனைத்தையும்-முன்னேசெய்த பாவங்களெல்லாவற்றையும், சிந்தும் - அழிப்பான், எ - று.

(வி - ரை.) புலமை முந்து பெற்றவன் - வித்வான் (கல்வி கற்றவன்). சிந்துதல் - அழித்தல். (கஉ)

தீண்ட லான்மனத் துன்னலாற் பூசனை செயலாற்
காண்ட லாலுடற் புனைதலான் மணிவினை களைவர்
வேண்டு மானொரு கோடியீத் துறுபலன் விளைவு
பூண்டு ளோன்றனக் கக்கமா மணியருள் புரியும்.

(ப - ரை.) மணி - அக்கமணியை, தீண்டலால்—, மனத்து உன்னலால்—, பூசனை செயலால்—, காண்டலால்—, உடல் புனைதலால்—, வினை களைவர் - வினைகளை வேரறுப்பர், அக்கமாமணி (யானது)—, பூண்டுளோன் தனக்கு - தன்னைத்தரித்தவனுக்கு—, வேண்டும் - விரும்பப்படுகிற, ஆன் - பசுக்கள், ஒருகோடி ஈத்து - ஒருகோடி (தானம்) கொடுத்து, உறுபலன் விளைவு அருள் புரியும் - உண்டாகும் பயனை அருள்புரியும், எ - று.

(வி-ரை.) அதிகரணேசிதமாய் மணி அக்கமணியை யுணர்த்திற்று. உன்னல் - நினைத்தல். உடல்புனைதல் - உடம்பிற்றரித்தல். புரிதல் - செய்தல். (கூ)

மரித்தல் சேர்வுறு காலையி னக்கமா மணியை
யுரைத்து நீரிடை யுமையொரு பாகனை யுவந்து
கருத்தி னாடியே குடித்திடிற் றுயரெலாங் களைந்து
திருத்த மாகிய வுருத்திர வுலகினைச் சேர்வார்.

(ப - ரை.) மரித்தல் சேர்வுறு காலையில் - மரணம் நேருங்காலத்தில், அக்கமாமணியை—, நீரிடை உரைத்து—, உமையொருபாகனை—, உவந்து கருத்தில் நாடி - மகிழ்ந்து மனத்தில் நினைத்து, குடித்திடின்—, துயர் எல்லாம் களைந்து—, திருத்தம் ஆகிய உருத்திர உலகினைச் சேர்வார்—, எ - று.

(வி - ரை.) மரித்தல் - இறத்தல். உமையொருபாகன் - சிவபெருமான். உருத்திர உலகு - சிவலோகம். (கச)

பூதி யாலுடன் முழுதுமுத் தூளநம் புரிந்து
சாத மேவரு மக்கமா மணியினைத் தரிக்கு
மேதை யானவ னுருத்திர னேயென விளம்பு
மாதி மாமறை யனைத்துமிவ் வுரைக்கிலை யையம்.

(ப - ரை.) பூதியால் - திருவெண்ணீற்றால், உடல் முழுதும் உத்தூளநம் புரிந்து—, சாதம் மேவு அரும் - பிறவியுண்டாகாத லருமையாகிய, அக்கமாமணியினை தரிக்கும் மேதையானவன்—, உருத்திரனேயென—, ஆதிமாமறை அனைத்தும் விளம்பும்—, இவ்வுரைக்கு-இந்தச் சொல்லுக்கு, ஐயம் இல்லை—, எ - று.

(வி - ரை.) உத்தூளநம் - பூச்சு. சாதம் ஜாதம் என்னும் வடசொற்றிரிபு. மேதை - பேரறிவினோன். (கரு)

நித்தி யந்திகழ் காமிய நிமித்திய நிகழ்த்து
மெத்தி றப்பெருங் கருமங்க ளியற்றுவோ னெனினும்
பத்தி யிற்றிரு நீற்றொடு பரன்மணி புனையா
னத்தி றக்கரு மங்களின் பலன்களை யடையான்,

(ப - ரை.) நித்தியம் - நாள்தோறும், நிகழ் காமிய நிமித்தியம் - விளங்குகின்ற தன் காமியார்த்தத்தின் பொருட்டு, நிகழ்த்தும் - சொல்லப்படுகிற, எத்திறப் பெரும் கருமங்கள் இயற்றுவோன் எனினும்—, பத்தியின் - பக்தியால், திருநீற்றொடு பரன்மணி புனையான் - விபூதியோடு அக்கமணியைத் தரியாதவன், அத்திறக் கருமங்களின் பலன்களை அடையான், எ - று.

(வி - ரை.) காமியம் - ஆகுபெயராய் காமியார்த்தத்தை யுணர்த்திற்று. காமியார்த்தம் - விரும்பின பொருள். கருமங்கள் - தொழில்கள். புனையான் அடையான் எனவே, புனைவான் அடைவான் என்றவாறாயிற்று. (கசு)

வன்ன மாச்சிர மத்தினின் மாசிலா சாரந்
தன்னி னிற்பவர் தம்முண்மெய் தயங்குநீற் றேடு
பொன்னெ னத்திக ழக்கமா மணிபுனை பவனே
சொன்னி ரைத்துயர் சுருதியு மிருதியுந் துதிப்பான்.

(ப - ரை.) வன்னம் ஆச்சிரமத்தினில் - வர்ணாச்சிரமங்களிலும், மாசு இல் ஆசாரம் தன்னில் - குற்றமில்லாத ஆசாரத்திலும், நிற்பவர்தம்முள்—, மெய்தயங்கும் - உடலில் விளங்குகிற, நீற்றேடு - திருவெண்ணீற்றுடன், பொன்எனதிகழ் - பொன்போல் விளங்குகிற, அக்கமாமணிபுனைபவனே—, சொல்நிரைத்து உயர் - சொல்லால் நிரம்பி யுயர்ந்த, சுருதியும் மிருதியும் துதிப்பான்—, எ - று.

(வி - ரை.) ஆசாரம் - ஒழுக்கம். சுருதியும் மிருதியும் - வேதத்தினுலும் ஸ்ம்ருதியினுலும். துதிப்பான் - துதிக்கப்படுவான், இது இல்வாழ்வானென்பான் என்றாற்போல்வது.

உருத்திராக்கதாரணத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் கபர்திநே நமஃ

எட்டாவது

## (அ.) பஞ்சாக்கரசெபத்தலம்.

[அதாவது - பஞ்ச பூதங்களும், இந்த்ரியங்களின் ஸமூஹமும், சப்தாதி விஷயங்களும், அகங்காரமும் நீங்கிச் சிவசம்பந்தியான மந்திரபாவனை யுள்ள தெதுவோ, சிவ தத்துவம் பிரகாசமாவ தெதுவோ, சிவ கருணாமிர்தம் சொரிந்து ரக்ஷிப்ப தெதுவோ, அந்த ஸ்ரீ பஞ்சாக்ஷரீ மந்திரத்தை மங்கலகரமாகிய விபூதி ருத்திராக்ஷங்க ளணிந்தவனும் சிவலிங்கதாரணனுமான வீரசைவன் ஸத்குருபதேசத்தினுல் ஸ்ருஷ்ட்யாதி க்ரமத்தை யறிந்து எக்காலத்தும் ஜபித்தல் வேண்டும் என்பது.]

கலிநிலைத்துறை.

அக்க மாமணி நீறணி யிலிங்கதா ரணன்றான்
மிக்க தாஞ்சிவ தத்துவம் விளங்குற விளக்கு
நக்க னாமமா மைந்தெழுத் தாகவே நவிலுந்
தக்க வித்தையை முறையினிற் செபித்திடத் தகுமால்.

(ப - ரை.) அக்கமாமணி நீறு அணி - அக்கமாமணியையும் விபூதியையும் தரிக்கிற, இலிங்க தாரணன்—, மிக்கது ஆம் சிவ தத்துவம் விளங்குற விளக்கும் - மேலாகிய சிவ தத்துவம் விளங்க விளக்குகிற, நக்கன் நாமம் ஆம் - சிவபிரானது பெயராகிய, ஐந்தெழுத்தாகவே நவிலும் - ஸ்ரீ பஞ்சாக்ஷரமாகவே சொல்லப்படுகிற, தக்க வித்தையை - தகுதியாகிய வித்தையை, முறையினில் - கிரமப்படியே, செபித்திடத் தகும்—, எ - று.

(வி - ரை.) இலிங்க தாரணன் - இலிங்கத்தைத் தரித்தவன். சிவ தத்துவம் - சிவத்தினது உண்மை. நக்கன் நக்நன் என்னும் வடசொற்றிரிபு ; இதற்கு நிர்வாணி யென்பது பொருள். இலிங்க தாரணன் செபித்திடத் தகும் என்றமையால் ஏனையர் செபித்திடத் தகாதென்றதுமாயிற்று. (க)

மெய்த்த வொண்சிவ தத்துவ மதனினு மேலாந்
தத்து வாந்தர மின்மைபோன் மறைகளின் றலையாய்
வைத்த வைந்தெழுத் தாகிய மந்திர மதனி
லுத்த ரம்பெறு மந்திர மிலையென வுணர்வாய்.

(ப - ரை.) மெய்த்த - மெய்யாகிய, ஒள் - ஒட்பமுள்ள, சிவதத்துவம் அதனினும்—, மேல் ஆம் - மேன்மையாகிய, தத்துவாந்தரம் இன்மை போல் - வேறு தத்துவ மில்லாததுபோல, மறைகளின் தலையாய் வைத்த—, ஐந்தெழுத்தாகிய மந்திர மதனில் - ஸ்ரீ பஞ்சாக்ஷரமாகிய மந்திரத்திலும், உத்தரம் பெறும் மந்திரம் இல்லை யென வுணர்வாய்—, எ - று.

(வி - ரை.) அந்தரம் - வேறு. மறைகளின் தலை - வேத முடி. உத்தரம்-உயர்வு. (உ)

ஆய விவ்வுல கந்தரு மூலகா ரணமாந்
தூய வொண்சிவ முணர்ந்திடின் மற்றுள சுரரான்
மேயு றும்பல னென்கொலைந் தெழுத்தையு முணரிற்
பாய மந்திரப் பரப்பினால் வருவதெப் பயனே.

(ப - ரை.) ஆய - உண்டாயிருக்கிற, இவ்வுலகம் தரும் மூல காரணமாம் - இவ்வுலகத்தைத் தோற்றுவித்த மூல காரணமாகிய, தூய ஒள் சிவம் உணர்ந்திடின் - பரிசுத்தமான அழகிய சிவத்தை யறிந்திடின், மற்றுள்ள சுரரால் - வேறுயுள்ள தேவர்களால், மேயுறும் பலன் - அடையும் பலன், என் - யாது, (அதுபோல்) ஐந்தெழுத்தையும் உணரின்—, பாய - பரவிக் கிடக்கிற, மந்திரப் பரப்பினால் வருவது—, எப்பயன் - எந்தப் பலன்—, எ - று.

(வி - ரை.) மந்திரப் பரப்பு - விஸ்தாரமான மந்திரங்கள். என் எப்பயன் என்ற வினாக்கள் யாதுமின்றென்னும் பொருள் பயந்து நின்றன. கொல் - ஐயம், அன்றி அசைநிலை யெனினுமாம். (ங)

வேத னாதியாம் விண்ணவர் குழாத்தினுள் விளங்கும்
பாதி வாண்மதி முடியுடைப் பரமனே போலப்
பேத மாமெழு கோடி மந்திரங்களிற் பெரிதாம்
போத வைந்தெழுத் தாகிய புனிதமந் திரமே.

(ப - ரை.) வேதன் ஆதி ஆம் - பிரமன் முதலாகிய, விண்ணவர் குழாத்தினுள்-தேவ சமூகத்தில், விளங்கும் - பிரகாசிக்கிற, பாதி வாள் மதி முடி உடை பரமனே போல—, பேதமாம்-வெவ்வேறு வகையாகிய, எழு கோடி மந்திரங்களில்—, போதம் - அறிவையுண்டாக்கத்தகுந்த, ஐந்தெழுத்தாகிய புனித மந்திரம்—, பெரிது ஆம் - பெரியதாகும், எ-று.

(வி - ரை.) பாதி வாள் மதி - ஒளியை யுடைய பிறைச் சந்திரன். பரமன் - சிவபெருமான். புனிதம் - பரிசுத்தம். "மாமறை நூல் ஏற்றிக் கிடக்கு மெழுகோடி மந்திரம் என்ன கண்டாய்" என்றார் பட்டணத் தடிகள். ஸப்த கோடி மஹா மந்த்ரம் என்பர் வடநூலாரும். நமஃ, ஸ்வாஹாஃ, வஷட், ஹூம், வவுஷட், பட், ஸ்வதா இதில் வர்க்கமொன்றுக்குக் கோடியாக ஏழு வர்க்கத்திற்கும் ஏழுகோடி மந்திரம் எனக்கொள்க. இதன் விரிவை வேதாகமங்களில் விசதமாய்க் கண்டு தெளிக. (ச)

உலக னைத்தினுக் குந்தனிக் காரண முரைக்குங்
கலைக ளுக் கரி தாகிய பரசிவங் கண்டாய்
பலம னுக்களுக் கேதுவாம் பரமவா சகமா
யிலகு மப்புக ழைந்தெழுத் தெனவுல கிசைக்கும்.

(ப - ரை.) கலைகளுக்கு அரிது ஆகிய பரசிவம்—, உலகு அனைத்தினுக்கும்—, தனிக் காரணம் - ஒப்பற்ற காரணமாக, உரைக்கும் - சொல்லப்படும், (அதுபோல) பல மனுக் களுக்கு - பல மந்திரங்களுக்கு, ஏது ஆம் - காரணமாகும், (எதுவெனின்) பரம வாசக மாய் இலகும் - பரசிவனை யுணர்த்தும் சொற்கூட்டமாய் விளங்குகிற, அப்புகழ் - அந்தப் புகழினையுடைய, ஐந்தெழுத்து என - ஸ்ரீ பஞ்சாக்ஷரமே யென்று, உலகு இசைக்கும்- உலகம் சொல்லும்—, எ - று.

(வி - ரை.) கலைகள் என்றது வேத சிவாகமாதிகளை. உலகு என்றது உயர்ந்தோரை. கண்டாய் - முன்னிலை அசையிடைச் சொல். (ரு)

அஞ்செ ழுத்தெனு மந்திர மப்பர மனுக்கு
விஞ்சு மற்புத நாமமவ் விமலனே நாமி
யெஞ்ச லற்றிடு நாமமு நாமியு மெனலா
னெஞ்ச ழுத்துமம் மந்திரத் தாலிறை நிகழும்.

(ப-ரை.) அஞ்செழுத்து என்னும் மந்திரம்—, அப்பரமனுக்கு—, விஞ்சும்-மேலான, அற்புத நாமம்—, அவ்விமலனே நாமி—, எஞ்சல் அற்றிடும் - குறைவற்ற, நாமமும் நாமி யும் எனலால்—, நெஞ்சு அழுத்தும் - மனத்திற் பதிக்கின்ற, அம்மந்திரத்தால்—, இறை- இறைவன், நிகழும் - விளங்குவான்,— எ - று.

(வி - ரை.) அற்புத நாமம் - சிறந்த பெயர். நாமி - பெயரை யுடையவன். இறை- ஆகுபெயர். ஸ்ரீ பஞ்சாக்ஷரமானது சிவபெருமானுக்குப் பெயராகிய மந்திரம்; அதற்குப் பொருள் அவ்விறைவனே; சொல்லும் பொருளுமா யிருத்தலின் ஸ்ரீ பஞ்சாக்ஷர மந்திர த்தை ஜபிப்பவன் பரசிவன் ரூபனாய் விளங்குவன் என்பதாம். (சு)

முன்ன ரோதுக நமவென விளம்புறு மொழியைப்
பின்ன ரோதுக சிவாயவென் றிங்ஙனம் பிறங்கு
மன்ன வஞ்செழுத் தாகிய மந்திர வரசைப்
பன்ன ருஞ்செழு மறைகளின் முடியெலாம் பரிக்கும்.

(ப - ரை.) நம என விளம்புறும் மொழியை - நமஃ என்று சொல்லப்பட்ட சொல்லை, முன்னர் ஓதுக—, சிவாய என்று பின்னர் ஓதுக—, இங்ஙனம் பிறங்கும் - இப்படி விளங் குகிற, அன்ன அஞ்செழுத்தாகிய மந்திர அரசை—, பன்அரும் - சொல்லுதற்கரிய, செழு மறைகளின் முடி யெல்லாம்—, பரிக்கும் - தாங்கும், எ - று.

(வி - ரை.) மந்திர அரசு என்றது இம்மந்திரத்தின் சிறப்பு நோக்கி யென்க. சிறப் பாவது எழுகோடி மந்திரங்க ளுள்ளும் தானே யொப்புயர்வின்றிச் சிறந்துநிற்றல்; இதனை மந்த்ர ராஜம், என்பர் வடநூலார். செழுமறைகளின் முடியெல்லாம் என்றது சகல உப நிடதங்களை. (எ)

முத்த னாகிநின் றநாதியே மும்மலங் களினுஞ்
சுத்த னாதலின் மங்கல முழுவதுந் தோன்றற்
குய்த்த தோரிட மாதலிற் சிவமென வுரைப்பர்
சத்த னாகிய சச்சிதா நந்தசங் கரனை.

(ப - ரை.) சத்தன் ஆகிய - சத்துப் பொருளாகிய, சச்சிதாநந்த சங்கரனை—, முத் தன் ஆகி நின்று—, அநாதியே—, மும்மலங்களினும் சுத்தன் ஆதலின்—, மங்கலம் முழு

வதும் தோன்றற்கு—, உய்த்தது - ஏற்படுத்தப்பட்டதாகிய, ஓர் இடம் ஆதலின்—, சிவம் என உரைப்பர் - சிவமென்று சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) சத்து-உண்மை. முத்தன் முக்தன் என்னும் வடசொற்றிரிபு; இதற்கு பாச நீக்க முள்ளவன் என்பது பொருள். மும்மலங்கள் - ஆணவ மாயை காமியங்கள். சொல்லுவர் என்னும் பயனிலைக்கு வினை முதலாகிய அறிஞர் என்பது வருவித் துரைக்கப் பட்டது. சிவம் என்பதற்கு மங்களம் எனப் பொருள் கூறுவர் வடநூலார். (அ)

சிவமெ னுந்திக ழீரெழுத் தொருமொழி சிறப்பாய்ப்
பவமகன்றுள பரப்பிர மந்தனைப் பயக்கு
நவைய கன்றுயர் சிவமெனும் பெயரலா நாம
மெவையு நீக்குறு கவுணமாய் விரியுமென் றிசைப்பர்.

(ப - ரை.) சிவம் என்னும் - சிவ மென்கிற, திகழ் - பிரகாசிக்கிற, ஈரெழுத் தொரு மொழி—, சிறப்பு ஆய் - முக்கியமாய், பவம் அகன்றுள்ள பரப்பிரமந்தனைப் பயக்கும் - பாப விமோசநமா யுள்ள பரப்பிரமத்தைத் தரும், நவை அகன்று - குற்றம் நீங்கி, உயர் - உயர்ந்த, சிவம் என்னும் பெயர் அல்லா நாமம் எவையும்—, நீக்குறு - ஒழிக்கத்தக்க, கவுணமாய் விரியும் என்று—, இசைப்பர் - சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) ஈரெழுத்தொரு மொழி - இரண்டெழுத்தாலாகிய வொருசொல். பவம் - பிறப்பென்றலு மொன்று. கௌணம் - முக்கியமல்லாதது. இச்செய்யுளிலும் மேல் வரும் செய்யுளிலும், சிவம் என்னும் திகழ் ஈரெழுத்தொரு மொழி சிறப்பு ஆய் பவம் அகன்றுள பரப்பிரமந்தனைப் பயக்கும் என்றது "சிவ" என்னும் இரண்டக்ஷரமானது முக்கிய மாய் (அபிதா விர்த்தியால்) பரப்ரஹ்மத்தை விளங்கச் செய்வதாம். ஈண்டு, முக்கிய விர்த் தியாவது ஒவ்வொரு சொல்லும் அதனதன் பொருளைக் காட்டிக் கொடுப்பதும் விவகாரத் தில் உள்ளதுமாம். அங்ஙனம் சொல்லை யுச்சரித்த மாத்திரத்தில் அது ஒரு பொருளை விளக்குவதற்கு ஏது ஒன்று இருத்தல்வேண்டும். அவ்வேதுவானது சொல்லுக்கும் பொரு ளுக்கும் உள்ள தோர் சம்பந்தமேயாம். உலகில் இந்தச் சொல்லால் இந்தப் பொருள் அறி யப்பட வேண்டுமென ஈஸ்வரனால் நியமிக்கப்பட்டுள்ளது. அத்தகைய நியமம் உலக வியவ காரங்களில் நடைபெற்று வருகின்றது. அதாவது, சொல்லின்கண் உள்ள வியாபாரமென வழங்கப்படும் விர்த்தியால் அச்சொல்லின் பொருள் போதிக்கப்படுகின்ற தென்பது துணிபு. இத்தகையவிர்த்தியானது அபிதை லட்சணை தாத்பர்யம் (அஃதில்லாவிடில் ஏனைய சிலரால் கொள்ளப்படும் வ்யஞ்ஜனை) என்று மூவகைப்படும். இவற்றுள், இச்சொல்லுக்கு இதுதான் பொருளென நிச்சயிக்கப்பட்டு வரும் பொருளை நேரில் விளக்குவது அபிதை யென்பதும், இனி நிச்சயிக்கப்பட்டதாகிய அபிதாப் பொருளைக் கொள்வதில் தாத்பர்யத் திற்கு முரண் ஏற்படுவதாயிருக்க, நிச்சயித்த பொருளோடு யாதேனுமோர் சம்பந்தத்தை யுடைய மற்றோர் பொருளை விளக்குவது லக்ஷணை யென்பதும், அபிதை லக்ஷணையென்னும் விர்த்திகளால் அறியக்கூடாத தாத்பர்யப் பொருளையாவது வியங்கியப் பொருளையாவது விளக்குவது, தாத்பர்யம் வ்யஞ்ஜனை யென்பதும் நூல்களின் துணிபு. இவற்றுள், அபிதை யென்பது முக்கிய விர்த்தியாம். இங்கு "சிவ" என்னும் சொல்லே முக்கிய விர்த்தியால் (அதாவது அபிதா விர்த்தியால்) பரப்ரஹ்மத்தைச் சொல்லுகின்றது. மற்ற சொற்கள் கௌண விர்த்தியால் (அதாவது லக்ஷணாவிர்த்தியால் அதாவது அமுக்கிய விர்த்தியால்) விளக்குகின்றன எனப் பொருள் கொள்க. (கூ)

ஆத லாற்சிவ மெனுமிரண் டெழுத்துமே யளவில்
சோதி யாயுறு சச்சிதா நந்தமாய்த் தோன்று
மாதி நாயகன் றனக்கு முக்கியப் பெயராமென்
றோது மாமறை முதலிய கலையெலா முவந்தே.

(ப - ரை.) ஆதலால்—, சிவம் என்னும் இரண்டெழுத்துமே—, அளவு இல் சோதியாய்—, உறு சச்சிதாநந்தமாய்த் தோன்றும்—, (அன்றியும்) ஆதிநாயகன் தனக்கு முக்கியப் பெயர் ஆமென்று—, மாமறை முதலிய கலையெல்லாம்—, உவந்து-மகிழ்ந்து, ஓதும்-சொல்லும், எ - று.

(வி - ரை.) ஆதிநாயகன் - சிவபெருமான். ஈண்டு, இச்செய்யுளைக் கவனிக்க:—

தனிப்பாடல்.

மும்மறையு ணடுமறையின் முனிவிலெழு காண்டத்திற்
செம்மைதரு நடுக்காண்டஞ் சேர்ந்தவெழு சங்கிதையி
லம்மநடுச் சங்கிதையி னுதியீ றெழித்தநடுப்
பொம்மலுற வமர்மறுவின் பொருளாவா னெவன்மைந்த.

இச்செய்யுளால், மூன்று வேதங்களாகிய ருக் யஜுர் ஸாமம் என்பவற்றினடுவிலுள்ளது யஜுர் வேத மென்பதும், அவ்வேதத்தின் ஏழுகாண்டங்களி னடுவிலுள்ளது நான்காவது காண்ட மென்பதும், அக்காண்டத்தின் ஏழு ஸம்ஹிதைகளி னடுவிலுள்ளது நான்காவது ஸம்ஹிதை யென்பதும், அந்த ஸம்ஹிதையி னடுவிலுள்ளது ஐந்தாவது ப்ரஸ்நமென்பதும், அந்த ப்ரஸ்நமே ஸ்ரீருத்ர மென்பதும், அந்த ஸ்ரீருத்ரத்தி னடுவிலுள்ளது "நமஃ ஸோமாயச" என்னும் அநுவாக மென்பதும், அந்த அநுவாகத்தி னடுவிலுள்ளது "நமஃ ஶிவாயச" என்னும் வாக்ய மென்பதும், அவ்வாக்யத்தி னடுவி லுள்ளது "ஶிவ" என்னும் இரண்டெழுத் தென்பதும், இவ்விரண்டெழுத்தே வேத ஹ்ருதய மென்னும் ஆதிநாயகற்கு முக்யப் பெயரா மென்பதும் பெறப்பட்டன. (கo)

இனைய நாமமுற் றஞ்செழுத் தென்னுமந் திரமா
மனைய மந்திர முத்தியின் விருப்புள னாகிப்
புனித நெஞ்சின னுயினே னாதரம் பொங்கத்
தனியி ருந்தறு தினமுமுச் சரித்திடத் தகுமால்.

(ப - ரை.) இனைய நாமம் உற்று-இந்தப் பெயரைப் பெற்று, அஞ்சு எழுத்து என்னும் மந்திரமாம் - ஸ்ரீ பஞ்சாக்ஷர மென்னும் மந்திரமா யுள்ளதாம், அனைய மந்திரம்—, முத்தியின் விருப்பு உளன் ஆகி—, புனிதநெஞ்சினன் ஆயினோன் —, ஆதரம் பொங்க - ஆசையதிகரிக்க, தனியிருந்து—, அறுதிநமும்—, (சிவபக்தனாகிய ஒருவன்) உச்சரித்திடத் தகும்—, எ - று.

(வி - ரை.) அனைய மந்திரம் - அந்த மந்திரத்தை, அதாவது சிவநாமத்தோடு கூடின மந்திரத்தை. (கக)

பாச மோசக னநாதியாம் பரசிவ மென்னு
மீச னுகுத லுண்மையவ் வாறென வோங்கித்
தேசு லாவிய வஞ்செழுத் துஞ்செறி பாச
நாச காரண மென்பர்மெய் தெரிந்துள நல்லோர்.

(ப-ரை.) அநாதி ஆம் பரசிவம் என்னும் ஈசன் பாசமோசகன் ஆகுதல் உண்மை—, அவ்வாறு என - அவ்வாறேபோல—, ஓங்கி - உயர்ந்து, தேசு உலாவிய - ஒளிபொருந்திய, அஞ்செழுத்தும்—, செறி - மிக்க, பாச நாச காரணம் என்பர்—, (யாரெனின்) மெய் தெரிந்துள நல்லோர்—, எ - று.

(வி - ரை.) பாசமோசகன் - பாசத்தை விடுவிப்பவன். பாசம் - சமுசாரம். (கஉ)

ஐந்து பூதமைம் பொறிகளோ டைம்புல னமர்ந்த
வைந்தெ னுங்கரு மேந்திய மைவர்கா ரணரா
மைந்தெ னுந்தொழி லைம்பெரும் பிரமங்க ளனைத்து
மைந்தெ ழுத்தினு லுணர்த்துவ ரறிவறிந் தவரே.

(ப - ரை.) அறிவு அறிந்தவர் - அறிவு நூற்பொருளை யுணர்ந்தவர், ஐந்து பூதம்—, ஐம்பொறிகளோடு - ஞானேந்திரியம், ஐம்புலன்—, அமர்ந்த ஐந்து என்னும் கருமேந்திரியம்—, ஐவர்காரணர் ஆம் ஐந்து என்னுந் தொழில்—, ஐம்பெரும் பிரமங்கள்—, அனைத்தும்—, ஐந்தெழுத்தினுல் உணர்த்துவர், எ - று.

(வி - ரை.) அறிவறிந்தவர் உணர்த்துவர் எனவியைத் துரைத்துக்கொள்க.

ஐந்து பூதங்கள் - பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம். ஐந்து பொறிகள் - சக்ஷுஸ்ரோத்ரம் ஜிஹ்வா க்ராணம் த்வக்கு. ஐந்து புலன்கள் - சப்தம் ஸ்பரிசம் ரூபம் ரசம் கந்தம். ஐந்து கர்மேந்திரியம் - வாக்கு பாணி பாதம் குஹ்யம் குதம். ஐந்து தொழில்கள் - சிருஷ்டி ஸ்திதி லயம் திரோதானம் அநுக்கிரகம். ஐந்து ப்ரஹ்மங்கள் - ஈசானம் தற்புருஷம் அகோரம் வாமதேவம் சத்யோசாதம், இவை முன்னரே (சஅ) வது பக்கத்தில் விளக்கப்பட்டிருக்கிறன. இந்தச் செய்யுளின் கருத்தின் விரிவை இனிவரும் த்விதிய பரிச்சேதமாகிய இலிங்கஸ்தலத்தில் காணலாம். எந்த வஸ்துக்கள் ஐந்தைந்தாய் ப்ரசித்தி பெற்றுள்ளனவோ, அப்பொருள்க ளெல்லாம் பஞ்சாக்ஷரத்தின் காரியங்களேயாம். (கங)

ஓது மக்கர மைந்துரு வாமுயர் மநுத்தா
னுதி யிற்பிர ணவந்தனைக் கொண்டிடு மதனுல்
வேத முற்றினு மாகம மனைத்தினும் விளங்க
வேத மற்றுயர் சடக்கர மென்றிடப் படுமால்.

(ப - ரை.) ஓதும் - சொல்லப்பட்ட, அக்கரம் ஐந்து உரு ஆம் - ஸ்ரீபஞ்சாக்ஷர ரூபமாகிய, உயர் மநுத்தான் - உயர்ந்த மந்திரமே, ஆதியில் - முதலில், பிரணவந்தனைக் கொண்டிடு மதனுல்—, வேதமுற்றினும்—, ஆகமம் அனைத்தினும் விளங்க—, ஏதம் அற்று உயர் - குற்ற மற்று யர்ந்த; சடக்கரம் என்றிடப்படும்—, எ - று.

(வி - ரை.) அக்கரம் அக்ஷரம் என்னும் வடசொற்றிரிபு. (கச)

இந்த வஞ்செழுத் தாகிய மந்திர விறைக்கு
முந்து றும்பிர ணவம்பர சிவன்றனை மொழியு
மந்த வக்கர மொன்றினு லகிலகா ரணமாய்
வந்த வச்சிதா நந்தமெய்ப் பரம்பொருள் வயங்கும்.

(ப - ரை.) இந்த அஞ்செழுத்தாகிய—, மந்திர இறைக்கு - மந்திர வரசுக்கு, முந்து உறும் - முன்னே பொருந்திய, பிரணவம்—, பரசிவன்தன்னை மொழியும்—, அந்த அக்கரம் ஒன்றினுல்—, அகில காரணமாய் வந்த—, அ - அந்த, சிதாநந்த மெய்ப் பரம்பொருள்—, வயங்கும் - விளங்கும், எ - று.

(வி - ரை.) அந்த அக்கரம் என்றது பிரணவாக்கரத்தை. அகில காரணம் - உலகத்திற்கு முதற்காரணம்.

ப்ரணவோத்பத்தி:— பரசிவத்தின் சித்தே சித் ப்ரணவமாயிற்று. அதனுல் நாதம் பிந்து கலைகள் பிறந்தன. அவைகள் முறையே அகார உகார மகாரங்களாயின. இம் மூன்றும் ஒன்று கூடி ஓங்காரம் என்னும் ப்ரணவமாயிற்று. இதனுல் தாரகம் தண்டகம் குண்டலம் அர்த்தசந்த்ரம் பிந்து என்னும் பஞ்ச லக்ஷணங்கள் பிறந்தன. அவைகளில், தாரகா க்ருதியே நகாரம், தண்டகா க்ருதியே மகாரம், குண்டலா க்ருதியே சிகாரம்,

அர்த்தசந்த்ரா க்ருதியே வகாரம், பிந்துவா க்ருதியே யகாரம். இந்தப் பஞ்சாக்ஷரங்களும் முன்னர்க் கூறிய சித் ப்ரணவம் என்னும் தாரகப்ரஹ்மத்துடன் பிறந்தன. இந்தப் பஞ்சாக்ஷரங்களினால் பஞ்ச ஸம்ஞைகள் பிறந்தன. அவைகளினால் பஞ்ச சாதாக்கியங்களாயின. அவைகளே பஞ்ச முகங்களாயின. அவைகளினால் பஞ்ச கலைகளும், பஞ்ச சக்திகளும், பஞ்சபூதங்களும், அந்தப்பூதங்களினால் இருபத்தைந்து தத்வங்களும்பிறந்தன. இவ்வாறு எல்லாவற்றிற்கும் மூலமானதே ப்ரணவ ஸஹிதமான ஸ்ரீபஞ்சாக்ஷரீ மந்த்ரம். இது அநேககோடி மந்த்ரங்களுக்கெல்லாம் தாய். இதை எக்காலத்தும் பஜிப்பவன் ப்ரத்யக்ஷ பரசிவனே யாவன். இம்மந்திரத்தினாலே பூஜாத்ரவ்ய ஶுத்தியைச்செய்தல் வேண்டும். அப்படிப்பட்ட உபகரணங்களினால் சிவார்ச்சனையைச் செய்தல்வேண்டும். எவ்வாறெனின்,— பாத்யம் அர்க்யம் ஆசமனங்களினாலும், க்ஷீரம் ததி முதலிய பஞ்சாமிர்தங்களினாலும், கந்தோதகம் புஷ்போதகம் மந்த்ரோதகம் ஸ்வர்ணோதகம் ஆகிய இவைகளினாலும் சிவலிங்கத்தை அபிஷேகம் செய்து, பின்னர் பாதோதகத்தைப் பரிக்ரஹித்தல் வேண்டும். அந்தப் பாதோதகமானது மூன்று வகைப்படும். அவை ஸ்ரீகுருவினது பாதோதகமே கருணோதகமென்றும், லிங்க பாதோதகமே விநயோதகமென்றும், ஜங்கம பாதோதகமே ஸமதோதக மென்றும் சொல்லப்படும். இந்த த்ரிவிதோதகத்தினால் சஞ்சிதம் ஆகாமி ப்ராரப்தம் என்னும் கர்மத்ரயங்கள் நசிக்கும். இதுவுமன்றி, பின்னும் த்ரிவிதோதகமுண்டு. அவை ஸ்ரீ பஞ்சாக்ஷரீ மந்த்ர புநஸ்சரணத்தினால் தன் கிருகத்திற்கு வெளியிலிருந்து எடுத்துக்கொண்டு வந்ததே மந்த்ரோதகம் என்றும், அதை இஷ்டலிங்கத்திற்கு அபிஷேகம் செய்ததே பாதோதகம் என்றும், அந்தலிங்கதத்திற்கு ஸமர்ப்பணம் செய்ததே ப்ரஸாதோதகம் என்றும் சொல்லப்படும். இவைகளில், மந்த்ரோதகத்தினால் சமையல் செய்தல் வேண்டும்; பாதோதகத்தினால் முகத்தைக் கழுவல் வேண்டும்; ப்ரஸாதோதகத்தைப் பருகல் வேண்டும். இனிச் சிவபூஜா க்ரமம் வருமாறு:—ஷோட ஶோப சாரங்களினாலும், அஷ்டவித பூஜையினாலும், பக்தியுடன் சிவலிங்கத்தை ஆராதித்து, ம்ருஷ்டாந்நத்தை நிவேதித்து, அந்த லிங்க ப்ரஸாதத்தைச் சிந்தாமல் தான் ஶ்ரத்தையுடன் நிஶ்ஶேஷமாய் புஜித்து, அதன் த்ரவத்தை அங்கத்திற்கு லேபித்துக்கொள்ளல் வேண்டும். இந்த ப்ரஸாதமானது சுத்த ப்ரஸாதம், சித்த ப்ரஸாதம், ப்ரசித்த ப்ரஸாதம் என்று மூன்று வகைப்படும். இவைகளில், குரு புஜித்த மிச்சிலே சுத்த ப்ரஸாதமாம்; சிவார்ப்பிதமே சித்த ப்ரஸாதமாம்; ஜங்கமம் உண்டு மீந்ததே ப்ரசித்த ப்ரஸாதமாம். முன்னர்க் கூறிய சிவ பூஜையானது ராஜஸ பூஜை, தாமஸபூஜை, ஸாத்விகபூஜை என்று மூன்று வகைப்படும். வேதாக மோக்த மந்த்ரவிதிகளை அநுசரிக்காமல் மனம்போனபடி பூஜித்தல் ராஜஸ பூஜையாம்; வேதாகமங்களில் உக்தமானதையும் அநுக்த மானதையும் ஒன்று கூட்டிச் செய்தல் தாமஸபூஜையாம்; வேதாகமோக்த க்ரியை விடாமல் அநுசரித்துப் பக்தியுடன் செய்தல் ஸாத்விக பூஜையாம். பின்னும், அந்த ஸாத்விக பூஜையானது ஶுத்தபூஜை மிஶ்ரபூஜை ஸங்கீர்ணபூஜை என்று மூன்று வகைப்படும். அகண்ட பரிபூர்ண தேஜோ ராஶியான பரசிவன் தன் லிங்கத்தில் நிலைத்திருப்பன் என்னும் த்ருட பாவனையினால் பூஜித்தல் ஶுத்த பூஜையாம்; அந்த லிங்கத்தை, ஐந்து முகங்கள் பதினைந்து நேத்திரங்கள் பத்துக் கரங்கள் ஶுத்த ஸ்படிகத்தின் வர்ணம் இவைகளுள்ள சதா சிவஸ்வரூபம் என்று பாவித்து பூஜித்தல் மிஶ்ர பூஜையாம்; அந்த லிங்கத்தில் ஹரி ப்ரஹ்மேந் த்ராதி தேவதைகளின் மத்தியில் பார்வதியுடன் கூடின பரசிவன் ப்ரகாசிப்பன் என்னும் பாவனையினால் பூஜித்தல் ஸங்கீர்ண பூஜையாம். பின்னும், இந்தப் பூஜையானது கர்மம், பக்தி, ஜ்ஞானம் என்று மூன்று வகைப்படும். வர்ணாஶ்ரம தர்ம கர்மங்களுடனும் பலாபேக்ஷையுடனும் செய்தல் ஸோபாதிக கர்ம பூஜையாம்; வர்ணாஶ்ரம தர்ம கர்மங்களைவிட்டு, பவி பக்தர்களின் பேதத்தை யறிந்து பலாபேக்ஷையில்லாமல் செய்தல் நிருபாதிக பக்தி பூஜையாம்; வர்ணாஶ்ரம தர்ம கர்மங்களெல்லாம் அப்ரயோஜநங்களென்று திரஸ்கரித்து, பல பதவிகளை யெல்லாம் மீறி, பூஜ்ய பூஜக வஸ்துக்க ளிரண்டிலும் ஏக பாவனையடைந்து,

ஸ்வாநுபவத்தினல் பூஜித்தல் ஸஹஜ ஜ்ஞாநபூஜையாம். இது ஸத்யோர் முக்தி பரமானது. இனிச் சிவதத்வ பேதம் வருமாறு:—அநாதி பரசிவத்தின் சித்தத்தில் ப்ரவ்ருத்தி ஸ்புரணமாகவும், அதனது சித்தே சிற்சத்தியாயிற்று. அதனுல் மஹாலிங்கம் உத்பவித்தது. அதனுல் பஞ்சகலைகள் பிறந்தன. அந்த மஹாலிங்கமானது பரம், கூடம், சரீரஸ்தம், லிங்கக்ஷேத்ரம், அநாதி என்று ஐந்து ஸம்ஜ்ஞைகளுள்ளதாயிற்று. ஸகல தத்வங்களுக்கும் பரமானதினுல் பரமென்றும், தான் மூர்த்தியா யிருப்பதன்றி ஸகல மூர்த்திகளையும் தன்னுலேயே பிறப்பித்துக் குப்தமாயிருக்கும் காரணத்தினுல் கூடமென்றும், ஸகல சராசர ப்ரபஞ்ச மெல்லாவற்றையும் தானே ஸ்ருஷ்டித்து அவைகளுக்கெல்லாம் தானே ஆதாரமாய் அவைகளிலெல்லாம் தானே வ்யாபித்திருப்பதினுல் சரீரஸ்தமென்றும், தன்னுலே பிறந்த சராசரத்தையெல்லாம் லயப்படுத்தித் தன்னிடத்திலே லீநமாக்கிக்கொள்வதினுல் லிங்கக்ஷேத்ர மென்றும், சிவாதி ருத்ராந்தமான ஸகல தத்வங்களுக்கும் தானே ஆதியென்றும் தனக்கு ஆதியானது மற்றென்றில்லா திருக்கும் காரணத்தினுல் அநாதி என்றும் சொல்லப்படும். முன்னர்க் கூறிய கலைகள் ஐந்து, சாதாக்கியங்கள் ஐந்து, பரசிவதத்வம் ஒன்று இவை பதினென்றும் லிங்க தத்வங்களாம்; இவற்றுடன் மேற்சொல்லப் பட்டுள்ள அங்க தத்வங்கள் இருபத்தைந்தும் சேர்ந்து முப்பத்தாறு தத்வங்க ளாயின. (கரு)

சோக மென்றுள சொரூபமே தூயமந் திரந்தா
ஞக நன்குற வறிகுவா ரஞ்சமென் பனதாம்
போக வந்தமி லோமெனப் புகலுமோ ரெழுத்தா
மேக மந்திர முதிக்குமென் றியம்புவர் பெரியோர்.

(ப-ரை.) சோகம் என்றுள சொரூபமே—, தூயமந்திரந்தான் ஆக—, நன்குறஅறிகுவார்—, அஞ்சம் என்பனதாம் போக—, அந்தம் இல்-முடிவில்லாத, ஓம் எனப் புகலும்—, ஓரெழுத்தாம்—, ஏக மந்திரம் உதிக்கும் என்று இயம்புவர்—, பெரியோர்—, எ-று.

(வி-ரை.) ஈண்டு இச்செய்யுளைக் கவனிக்க:—

பிரபுலிங்கலீலை.

தறிபோ லுடல நேரிருந்து தயங்கு மருங்கி னிருநாடி
நெறிபோய் மீளும் வளியதனை நிறுவிநடு நா டியிற் செலுத்தி
யறிவோர் சிறிதுஞ் சலியாம லன்னப் பெயர்மந் திரமாறிக்
குறிபோ யிருந்த வொருகுறியைக் குறித்துக் கொண்டங் கிருந்தனரால்.

சோகம் ஸோஹம் என்னும் வடசொற்றிரிபு. தூய மந்திரம் - பரிசுத்தமாகிய மந்திரம். தான் - அசைநிலை யெனினுமாம். அஞ்சம் ஹம்ஸம் என்னும் வடசொற்றிரிபு. ஏக மந்திரம் - ஒப்பற்ற மந்திரம். தூய மந்திரம் - பரமான்ம மந்திரம். (கசு)

காட்டு மோமெனு மெழுத்துநிட் களசிவன் றன்னை
யீட்டு மைம்பெரும் பிரமமாந் தறுவுடை யிறையைக்
கூட்டு மஞ்செழுத் துபயமா மொருபொருள் கொடுக்கு
மோட்டு றும்பவப் பிரணவ வஞ்செழுத் தொன்றி.

(ப-ரை.) ஓம் என்னும் எழுத்து—, நிட்கள சிவன் தன்னைக் காட்டும்—, அஞ்செழுத்து—, ஈட்டும் - சேர்க்கப்பட்ட, ஐம்பெரும் பிரமம் ஆம் தறுவுடை இறையைக் கூட்டும்—, ஓட்டுறும்பவம் - பிறவியை யோட்டுகிற, பிரணவ அஞ்செழுத்து ஒன்றி - பிரணவத்தோடு கூடின அஞ்செழுத்தானது (ஷடக்ஷரம்) பொருந்தி, உபயம் ஆம் ஒரு பொருள் கொடுக்கும் - இரண்டான (சகள நிஷ்களமாகிய) ஒப்பற்ற பொருள் என்னும் சிவத்தைக் கொடாநிற்கும், எ-று.

(வி - ரை.) பிரணவமாகிய மந்திரத்தால் நிஷ்களனான சிவன் அறியப்படுகிறான். ஸ்ரீபஞ்சாக்ஷரத்தால் பஞ்சப்ரஹ்ம தநுவாகிய சகளன் அறியப்படுகிறான். சகள நிஷ்களனான சிவன் ஷடக்ஷரமாகிய மந்திரத்தில் உளன். நிட்களம் - அருவம், நிர்க்குணம், போதவடிவம். சகளம் - உருவம், எல்லா ஸ்வரூபம், மூர்த்திகரம். (கஎ)

மூலம் வித்தைநற் சிவஞ்சைவ சூத்திர மொழியின்
மேலு மஞ்செழுத் தெனும்பெயர் மேவுமா மநுவவ்
வேலு மஞ்செழுத் தினைப்பிர ணவம்புணர்த் திசைப்பர்
மாலி லர்ச்சனை புரிபவர் மனமொரு மித்து.

(ப - ரை.) மா மநு - மஹா மந்த்ரமானது, மூலம் வித்தை நல்சிவம் - மூலம் வித்தை நற்சிவம், சைவ சூத்திரம்—, மொழியின் - சொல்லுமிடத்து, மேலும் அஞ்செழுத்து என்னும் பெயர் மேவும் - மேலும் பஞ்சாக்ஷரமென்னும் பெயரையும் பொருந்தும், (ஆதலால்) மால் இல் - மயக்கமில்லாத, அர்ச்சனை - அர்ச்சனையை, மனம் ஒருமித்து புரிபவர் - மனமொருங்கிச் செய்பவர், அ - அந்த, ஏலும் - பொருந்திய, அஞ்செழுத்தினை—, பிரணவம் புணர்த்து இசைப்பர் - பிரணவத்தோடு சேர்த்துச் சொல்லுவர், எ-று. (கஅ)

உத்த ரங்குண திசையினு ளொன்றினை நோக்கி
நித்தி யம்பிரா ணயாம மும்முறை நிகழ்த்தி
யத்த னம்பிகை பாகனை யணியுட னகத்தில்
வைத்தொ ருங்கிய மனத்தொடம் மந்திரஞ் செபிக்க.

(ப - ரை.) உத்தரம் குண திசையினுள் - (சிவ பக்தனானவன்) வடக்கு கிழக்கு என்னுமிரண்டு திசைகளுள், ஒன்றினை நோக்கி—, நித்தியம் - நாள்தோறும், பிராணயாமம் - பிராணயாமத்தை, மும்முறை நிகழ்த்தி - மூன்றுதரஞ் செய்து, அத்தன் - அத்தனாகிய, அம்பிகைபாகனை—, அணியுடன் - அழகோடு, அகத்தில் வைத்து-மனத்தில்வைத்து, ஒருங்கிய மனத்தொடு—, அ மந்திரம் செபிக்க - அந்த மந்திரத்தைச் செபிக்கக் கடவன், எ-று.

(வி - ரை.) அம்பிகைபாகன் - உமைபங்கன் (சிவபிரான்). (கக)

மந்தி ரஞ்செபித் திடும்விதி மூன்றுவா சிகமே
நந்து பாஞ்சுமா நதமென வினையெலா நசிக்கு
முந்து றுந்திரு வாசிக மொழிந்திடி னருகு
வந்தி ருந்துளோர் கேட்டிட வழாதறைந் திடலே.

(ப - ரை.) வாசிகம்—, நந்து-விருத்தியடைதற்கேதுவாகிய, உபாஞ்சு—, மாநதம்—, என - என்று, மந்திரம் செபித்திடும் விதி மூன்று—, வினையெல்லாம் நசிக்கும்—, முந்து உறும் திரு வாசிகம் மொழிந்திடின்—, அருகு வந்து இருந்துளோர் கேட்டிட—, வழாது-தவறாமல், அறைந்திடல் - செபித்தலாம், எ - று. (உ0)

அருகி லுற்றுளோர் கேட்டிடா தணியிதழ் தீண்டி
விரகின் வித்தையை மந்தமாய் விளம்புத லுபாஞ்சு
திரித லற்றிடு நாநுனி மெல்லிதழ் தீண்டா
தொருமை யுற்றுளத் துன்னுத லுயர்ந்தமா நதமே.

(ப - ரை.) அருகில் உற்றுளோர் கேட்டிடாது—, அணி இதழ் தீண்டி-அழகிய உதடு பொருந்தி, விரகின் வித்தையை - உபாயமாகிய வித்தையை, மந்தமாய் விளம்புதல் - மெல்லச் சொல்லுதல், உபாஞ்சு—, திரிதல் அற்றிடும் - சுழலுதலற்ற, நாநுனி—, மெல் இதழ் தீண்டாது—, ஒருமையுற்று - ஒருமைப்பட்டு, உள்ளத்து உன்னுதல்—, உயர்ந்த மாநதம்—, எ-று.

(வி - ரை.) உபாஞ்சு உபாம்ஸு என்னும் வடசொற்றிரிபு. உன்னுதல் - நினைத்தல். மாநதம் மாநஸம் என்னும் வடசொற்றிரிபு. (உக)

கரும வேள்விநல் விரதந்தா நங்கடுந் தவமாய்
மருவும் யாவுமா மந்திர வேள்விமா கலையி
னுருவ மோர்பதி னறிலொன் றினையுமொவ் வாவிவ்
விரவு மான்மியம் வாசிக செபத்தினை மேவும்.

(ப - ரை.) கரும வேள்வி—, நல் விரதம்—, தாநம்—, கடுந் தவமாய் மருவும் யாவும்—, மா மந்திரம் வேள்வி - மஹா மந்திர வேள்வியாகிய, மா கலையின் உருவம் - பெருங்கலையி னுருவத்தில், ஓர் பதினறில் ஒன்றினையும் ஒவ்வா—, இ - இந்த, விரவு மான்மியம் - பெருமை பொருந்திய மகிமை, வாசிக செபத்தினை மேவும்-வாசிக செபம் என்னும் பெயரைப் பொருந்தும், எ - று.

(வி - ரை.) கரும வேள்வி - கர்ம யாகம். மா மந்திர வேள்வி-ஸ்ரீ பஞ்சாக்ஷர மஹா மந்த்ர ஜபம். (உஉ)

வாசி கந்தனிற் சதகுண மடங்குள துபாஞ்சு
மாசி லன்னதி னுயிர மடங்குமா நதமாம்
பேசு றுஞ்செப மிரண்டினும் பெரும்பவ மொழிக்குந்
தேச டைந்துள தாகியே சிறக்குமா நதமே.

(ப - ரை.) வாசிகந்தனின் - வாசிகத்தினும், சதகுணமடங்குளது - நூறு பங்கு குண முள்ளது, உபாஞ்சு—, மாசு இல் - குற்ற மில்லாத, அன்னதின் - அதினும், ஆயிரமடங்கு மாநதம் ஆம்—, பேசுறும் - சொல்லப்பட்ட, செபம் இரண்டினும்—, தேசு அடைந்துள தாகிச் சிறக்கும் மாநதம்—, பெரும்பவம் ஒழிக்கும்—, எ - று.

(வி - ரை.) வாசிகம் - வாசிக ஜபம். உபாஞ்சு - அருகுளோர் கேட்க வொண்ணுமல் மெல்லச் செபித்தல். மாநதம் - மனத்தினுள்ளே எழுத்துருவமாய் ஜபித்தல், இதனை அஜப மந்த்ரம் என்றுங் கூறுவர். தேசு அடைந்து உளதாகிச் சிறக்கும் என்றது கோர மாகிய சமுசாரத்தை நாசம் செய்தலினுல் என்க. (உங)

வாசி காதியின் விதிமுறை வழாதுநன் மனத்தி
லீசன் மேவுற வஞ்செழுத் தெனும்பெரு வித்தை
பாச நாசக னும்படி செபிக்கமெய்ச் சிவமாந்
தேசு ளான்சிவ பூசனை செய்கவிம் மநுவால்.

(ப - ரை.) வாசிகாதியின் விதி முறை வழாது—, நல் மனத்தில் ஈசன் மேவுற—, அஞ்செழுத் தென்னும் பெருவித்தை—, பாச நாசகன் ஆம்படி செபிக்க—, மெய்ச் சிவம் ஆம் தேசு உளான்—, இம் மநுவால் சிவபூசனை செய்க—, எ - று.

(வி - ரை.) ஈசன் - சிவபெருமான். பாச நாசகன் - பாசத்தை நசிக்கச் செய்வோன். தேசு - ஒளி. (உச)

பரம னர்ச்சனை யஞ்செழுத் தறைந்துபத் தியினு
லொருப கற்புரி பவன்சிவ கதியினை யுறுவான்
விரத நற்றவ மகமிவை வித்தைகொண் டியற்று
மொருமை யர்ச்சனை தனிற்கோடி கூற்றிலொன் றெவ்வா.

(ப - ரை.) பரமன் அர்ச்சனை - சிவபிரானது அர்ச்சனையை, அஞ்செழுத்து அறைந்து - ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை யோதி, பத்தியினுல் ஒருபகல் புரிபவன்—, சிவகதியினை

உறுவான்—, விரதம் நல்தவம் மகம் இவை—, வித்தை கொண்டு இயற்றும் - வித்தையினால் செய்கிற, ஒருமை அர்ச்சனை தன்னில் கோடி கூற்றில் ஒன்று ஒவ்வா—, எ - று.

(வி - ரை.) சிவகதி - சிவலோக ப்ராப்தி. மகம் - யாகம். கூற்றில் - பங்கில். ஒருமை அர்ச்சனை - ஒரு அர்ச்சனை. (உரு)

விரத மேவிமெய் யிளைப்பவர் கால்புனன் மிசைவோர்
பரம னொண்பத மடைவுறுர் பதிதனே யெனினுந்
திரிவி லஞ்செழுத் தறைந்தொரு காற்சிவ பூசை
புரிப வன்பவ கோடிகள் போக்குமீ துண்மை.

(ப - ரை.) விரதம் மேவி மெய் இளைப்பவர்—, கால் புனல் மிசைவோர்—, பரமன் ஒள் பதம் அடைவுறுர்—, பதிதனே எனினும்—, திரிவு இல் - மாறுபாடில்லாத, அஞ்சு எழுத்து அறைந்து—, ஒருகால் சிவபூசை புரிபவன்—, பவகோடிகள் போக்கும் - கோடி பிறவிகளை யொழிப்பன், ஈது உண்மை—, எ - று.

(வி - ரை.) விரதம் மேவி - நோன்பு செய்து. மெய் - உடம்பு. கால் புனல் மிசைவோர் - காற்றையும் நீரையும் புசிப்பவர் (வாயுபக்ஷணி, ஜலபக்ஷணி). பதிதன் - பாவி. அறைந்து - ஜபித்து. புரிபவன் - செய்பவன். (உசு)

சிறந்த வஞ்செழுத் துயர்மறு வொருசிறி தேனு
மறைந்து ளாரெனி னவர்செயும் பாதக மனைத்து
மிறந்து போமிளங் கதிர்கடன் முகட்டினு ளெழலு
முறிந்து பேரிருட் படலைக ளிரிதரு முறைபோல்.

(ப - ரை.) சிறந்த அஞ்செழுத்து - சிறந்த ஐந்தெழுத்தாகிய, உயர் மறு - உயர்ந்த மந்திரத்தை, ஒரு சிறிது ஏனும்—, அறைந்துளார் எனின்—, அவர் செய்யும் பாதகம் அனைத்தும்—, இளங்கதிர் - பாலசூரியன், கடல் முகட்டினுள் எழலும்—, பேர் இருள் படலைகள் - பெரிய இருட்கூட்டங்கள், முறிந்து இரிதரும் முறைபோல் - முறிந்தோடுந் தன்மைபோல், இறந்துபோம் - அழிந்தொழியும், எ - று.

(வி - ரை.) எழலும் - உதித்தலும். இரிதல் - ஓடுதல். (உஎ)

எண்ணி லாகமம் புகலயன் மந்திர மெல்லாம்
பண்ணு றும்புரு டார்த்தமே நிரந்தரம் பயிலி
னண்ண லஞ்செழுத் தொருமுறை சிறிதறைந் தவர்க்கு
நண்ண நல்குறுஞ் சித்திக ளனைத்தையு நயந்தே.

(ப - ரை.) எண் இல்-கணக்கில்லாத, ஆகமம் புகல் - ஆகமங்கள் சொல்லுகிற, அயல் மந்திரமெல்லாம்—, நிரந்தரம் பயிலின் - சதாகாலமும் பழகினுல், புருடார்த்தமே பண்ணுறும் - புருஷார்த்தத்தை யளிப்பனவாம், அண்ணல் - பெருமைபொருந்திய, அஞ்சு எழுத்து ஒருமுறை சிறிது அறைந்தவர்க்கு—, சித்திகள் அனைத்தையும் நயந்து - சித்திகளெல்லா வற்றையும் விரும்பி, நண்ண நல்குறும் - அடையக் கொடுக்கும், எ - று.

(வி - ரை.) அண்ணல் அஞ்செழுத்து - சிவபெருமானது திருநாமமாகிய ஸ்ரீபஞ்சாக்ஷரம். அயல் மந்திரம் - வேறு மந்திரம். புருடார்த்தம் - புருடனுல் சம்பாதிக்கத்தக்கது, அது அறம் பொருள் இன்பம் வீடு என நான்கு வகையினை யுடையது. (உஅ)

போதி லொன்றினை யஞ்செழுத் தினைப்புகன் றமலன்
மீத ணிந்திடின் வாசப வேள்வியா யிரத்தி
னேது றும்பல மனைத்துமங் கவனடைந் துறுவான்
மாத வம்புரிந் துயர்தரு மலயவெற் பமர்வோய்.

(ப - ரை.) மா தவம் புரிந்து உயர்தரும் மலயவெற்பு அமர்வோய்—, அஞ்செழுத்தினைப் புகன்று—, அமலன் மீது—, போதில் ஒன்றினை - மலர்களிலொன்றை, அணிந்திடின்—, வாசப வேள்வி ஆயிரத்தின் - வாஜபேய மாயிரத்தினு ளுளதாமென்று, ஓதுறும் - சொல்லுகிற, பலம் அனைத்தும்—, அவன் அடைந்து உறுவான்—, எ - று.

(வி - ரை.) மாதவம் - பெருந்தவம். புரிதல் - செய்தல். மலயவெற்பு - பொதியமலை. மாதவம் புரிந்து உயர்தரும் மலயவெற்பு அமர்வோன் - அகத்தியன். போது - மலர். வாஜபேயம் - ஓர் மஹாவேள்வி. பலம் - பயன். (௨௯)

மறையு ணர்ந்துடன் மகம்பல வியற்றன்மா தாந
மறையு மின்னவை யஞ்செழுத் தருஞ்செபந் தன்னின்
றிறம ணைந்துள கோடிகூற் றொன்றையுஞ் சிவணாப்
பொறைபி லங்குறு மந்திரத் தியல்பையார் புகல்வார்.

(ப - ரை.) மறை உணர்ந்து—, உடன்-உடனே, மகம்பல இயற்றல்—, மா தாநம்,—அறையும் இன்னவை - சொல்லப்பட்ட இவைபோல்பவை—, அஞ்செழுத்து அருஞ்செபந் தன்னின்திறம் - அஞ்செழுத்தின் அரியசெபத்தினிடத்தில், அணைந்துள்ள - சேர்ந்துள்ள, கோடிகூற்று - கோடிபங்கில், ஒன்றையும் - ஒருபங்கினையும், சிவணா - ஒவ்வாத, பொறை இலங்குறும் - பெருமை விளங்குகிற, மந்திரத்து இயல்பை—, யார்புகல்வார்—, எ - று.

(வி - ரை.) மறை யுணர்தல் - வேதப்பொருளை யறிதல், அதாவது மூன்று வேதங்களை. மகம் - யாகம் அக்நிஹோத்ரம் முதலியன. திறம் - ஏழனுருபு. சிவணல் - நிகர்த்தல். மா தாநம் - ஏராளமான தக்ஷிணையை யுடையனவாகிய வேள்விகள். (௩0)

முன்னர் மெய்யறி வறிந்துள சாநந்த முனிவன்
பன்னி யஞ்செழுத் தாகிய பரமமந் திரத்தை
யின்னல் வெந்நர கத்துளோர் தமையெலா மெடுத்து
மன்னு றுந்துறக் கத்துற வைத்தனன் மன்னோ.

(ப-ரை.) முன்னர் - முற்காலத்தில், மெய்யறிவு அறிந்துள்ள—, சாநந்தமுனிவன்—, அஞ்செழுத்தாகிய பரம மந்திரத்தை பன்னி—, இன்னல் - துன்பத்திற்கிடமான, வெம் நரகத்து உள்ளோர் தம்மை எல்லாம் எடுத்து—, மன்னுறும் - நிலைபெற்ற, துறக்கத்து உற வைத்தனன் - சுவர்க்க லோகத்தில் இருக்க வைத்தான், எ - று.

(வி - ரை.) பரம மந்திரம் - மேலான மந்திரம். பன்னி - ஜபித்து. (௩௧)

மாசி லாவசிட் டாதிமா முனிவரிம் மறுவாற்
றேசு மேவினர் சித்திக ளனைத்தையுஞ் செறிந்தே
யாசி லாவய னாதியர் படைப்புமுன் னாகப்
பேசு மாதொழின் மந்திர வலியினாற் பெற்றார்.

(ப - ரை.) மாசு இல்லா வசிட்டாதி மா முனிவர்—, இம்மறுவால்—, சித்திகள் அனைத்தையும் செறிந்து—, தேசு மேவினர் - ஒளி படைத்தனர்—, ஆசு இல்லா அயன் ஆதியர்—, படைப்பு முன் ஆக - சிருஷ்டி முதலாக, பேசும் - சொல்லப்படுகிற, மா தொழில் - பெரியதொழில்களை, மந்திர வலியினால் பெற்றார்—, எ - று.

(வி-ரை.) இம்மறுவால் - இந்தமந்திரத்தால். தேசு - ஒளி, அது இங்குக் கீர்த்தியைக் குறித்தது. அயன் - பிரமன். மந்திர வலி - மந்த்ர பலம். ஆசு - குற்றம். (௩௨)

பரந்த சொற்களி னென்பயன் பத்தியாற் சிவனைத்
திருந்த வர்ச்சனை செய்பவ னாகியே சிறந்த
வரந்த ரும்பிர ணவமுத லாயவிம் மநுவை
நிரந்த ரஞ்செபிப் பவன்பர முத்தியி னிலைப்பான்.

(ப - ரை.) பரந்த சொற்களின் - விரிந்த சொற்களால், என் பயன் - யாதுபயன், பத்தியால் சிவனைத் திருந்த அர்ச்சனை செய்பவன் ஆகி—, சிறந்த வரம்தரும் - சிறந்த வரங்களைத் தருதற்குரிய, பிரணவம் முதல் ஆய - பிரணவத்தை முதலிலேயுடைய, இம் மநுவை—, நிரந்தரம் செபிப்பவன்—, பரமுத்தியில் நிலைப்பான்—, எ - று.

(வி-ரை.) பிரணவம் - பிரணவாக்கரம், அது ஓங்காரம். நிரந்தரம் - எப்பொழுதும். செபிப்பவன் - உச்சரிப்பவன். பரமுத்தி - மேலானமுத்தி. பதமுத்திகளை இழித்தற் பொருட்டு பரமுத்தி என்றும், பதமுத்திகளை யடைபவன் அவற்றில் நிலைத்திரான் என்பது தோன்ற பரமுத்தியில் நிலைப்பான் என்றும் கூறினர். (௬௬)

பஞ்சாக்கரசேபத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் நீலலோஹிதாய நமஃ.

ஒன்பதாவது

## (௯.) பத்தித்தலம்.



[அதாவது - நவவித பக்தியினும் பஞ்ச யஜ்ஞங்களினும் சிவபெருமானைப் பூஜித்தல், சிவபெருமானல்லாத பவி தேவர்களைப் பூஜியாதிருத்தல், பஞ்ச சூதகங்களை விட்டிருத்தல், ஸ்ரீ குருவினிடத்தும் ஆகமவாக்கியங்களினிடத்தும் பூர்ண நம்பிக்கை வைத்தல், லிங்கத்தினிடத்தும் ஜங்கமத்தினிடத்தும் பக்தியைச்செலுத்தல், பயனைக் கருதாமல் தானம் செய்தல் இவை முதலிய ஸத்கர்மங்களை எக்காலத்தும் செய்பவனும், ஸ்ரீ விபூதிருத்ராக்ஷங்களை யணிந்து பரிசுத்தனானவனும், ஜ்ஞாந மயமாகிய ஸ்ரீ பஞ்சாக்ஷர ஜபமுள்ளவனும், லிங்க தாரணனுமான வீரசைவனே சிவபக்தனென்று சொல்லப்படுவன் என்பது.]

கலிவிருத்தம்.

நலங்கொள் பூதி நயநத் திருமணி
யலங்கன் மேனிய ணிந்துபு னிதனாய்ப்
புலங்கொ ளஞ்செழுத் தொண்மநுப் போற்றுறு
மிலிங்க தாரணன் பத்த னெனப்படும்.

(ப - ரை.) நலம் கொள் - நன்மையைக்கொண்ட, பூதி - விபூதி, நயநத் திருமணி அலங்கல் - அழகிய அக்கமணி மாலை, (இவற்றை) மேனி அணிந்து - தன்னுடலில் தரித்து, புனிதன் ஆய் - பரிசுத்தனாகி, புலம்கொள் - ஞானத்தைக் கொண்ட, அஞ்செழுத்து - ஸ்ரீ பஞ்சாக்ஷரமாகிய, ஒள் மநு - ஒட்பமாகிய மந்திரத்தை, போற்றுறும்-போற்றுகின்ற, இலிங்கதாரணன்—, பத்தன் எனப்படும் - சிவபக்தனென்று சொல்லப்படுவான், எ - று.

(வி - ரை.) நயநத்திருமணி யென்பதை திருநயந மணியென நிறுத்தி அழகிய அக்க மணியென்க. நயநம் - கண். சிவபெருமான் கண்ணுதலால் திருவென்னும் அடை புணர்க்கப்பட்டது. அலங்கல் - ஆகுபெயர். (௧)

புகழ்தல் கேட்கை புனிதற் கருதுதன்
மகிழ்குற் றேவ லருச்சனை வந்தனை
தொகுநற் றொண்டொடு தோழமை நற்கொடை
பகரு மற்றிவை நன்னவ பத்தியே.

(ப - ரை.) புகழ்தல் - புகழ்தலும், கேட்கை - கேட்டலும், புனிதன் கருதுதல் - சிவபெருமானை நினைத்தலும், மகிழ் - அவன் மகிழ்தற்குரிய, குற்றேவல் - குற்றேவல் செய்தலும், அருச்சனை-அர்ச்சனை செய்தலும், வந்தனை-வந்தித்தலும், தொகு நல் தொண்டொடு-தொகுதியாகிய நல்ல தொண்டுடனே, தோழமை - சிநேகமும், நல் கொடை-நற்கொடையுமாக, பகரும் - சொல்லப்படுகிற, இவை - இவையே, நல் நவ பத்தி - சிறந்த நவ பத்தியெனப்படும், எ - று.

(வி - ரை.) குற்றேவல் - சிறுதொண்டு. வந்தித்தல் - வாழ்த்தல். நற்கொடை - பெருங்கொடை. நவ பத்தி - ஒன்பது வகையாகிய பக்தி. (உ)

கரிய கண்டக் கடவுள் புகன்றிடு
முரிய நன்னவ பத்தி யுலகினி
லரிய பாவத் தவர்கட் கறத்தினற்
பெரிய வர்க்குப் பெறுதற் கெளியவே.

(ப - ரை.) கரிய கண்டக்கடவுள் - நீலகண்டத்தையுடைய சிவபெருமான், புகன்றிடும் - சொன்ன, உரிய - செய்தற்குரிய வாகிய, நல் நவபத்தி—, உலகினில்—, பாவத்தவர்கட்கு - பாவிகளுக்கு, அரிய - அரியனவாம், அறத்தினல் பெரியவர்க்கு - அறத்திற் சிறந்தவர்க்கு, பெறுதற்கு எளிய - பெறுதற் கெளியனவாம், எ - று.

(வி - ரை.) மேலைச்செய்யுளிற் சொல்லப்பட்ட நவபத்தி பாவிகட் குண்டாதலில்லையென்பதும் புண்ணியருக் குண்டா மென்பதும் இதனாற் கூறப்பட்டன. (௩)

தலைவ னாயினுந் தாழ்ந்தவ னாயினு
மலைவி லாத மலிசிவ பத்திதா
னுலகில் யாரிடத் தொன்று மனையவ
னிலகு பத்த னெனப்படு வானரோ.

(ப - ரை.) தலைவன் ஆயினும்—, தாழ்ந்தவன் ஆயினும்—, மலைவு இல்லாத - பிரமமில்லாத, மலி-மிக்க, சிவபத்தி—, உலகில் யாரிடத்து—, ஒன்றும்-பொருந்தியிருக்குமோ, அனையவன் - அவனே, இலகு - விளங்குகிற, பத்தன் எனப்படுவான்—, எ - று.

(வி - ரை.) தலைவன் - முதல்வன். தாழ்ந்தவன் - கீழாயினோன். தலைவன் தாழ்ந்தவன் என்பவற்றிற்கு உயர்ந்த வருணத்தான் தாழ்ந்த வருணத்தான் என்றுரைத்தலுமாம். அனையவன் என்பதனீற்றில் தேற்றேகாரம் தொக்கது. (௪)

வேதி யன்புலைக் கீழென வேறிலை
யோத ருஞ்சிவ பத்தி யுடையனே
யேது மீசற் கினியவ னின்மையோ
னாதி வன்னத்த னாயினு மல்லனே.

(ப - ரை.) வேதியன் என - வேதியனென்றும், புலை கீழ் என - புலையனாகிய நீசனென்றும், வேறு இல்லை - வேறுபாடு இல்லை, ஓது அரு - சொல்லுதற்கரிய, சிவபத்தி யுடையனே—, ஏதும் - எவ்வகையாலும், ஈசற்கு இனியவன்—, இன்மையோன்—, ஆதி வன்னத்தன் ஆயினும்—, அல்லன் - இனியவனல்லன், எ - று.

(வி - ரை.) வேதியன் - பிராமணன், புலைகீழ் என்பன ஆகுபெயர்கள். ஏதும் என்பதில் மூன்றனுருபு தொக்கு நின்றது. புலைகீழ் என்றது மிலேச்சன் எனினுமாம். ஆதிவன்னத்தன் - முதல் வருணத்தான். (ரு)

வீர சைவர் விரும்புமப் பத்திதா
னோரி ரண்டிய லாமுட் புறத்தினாற்
சோர்வி லுள்ளது சூக்குமந் தூலமாந்
தேரின் மற்றைப் புறத்தது செப்பினே.

(ப - ரை.) வீரசைவர் விரும்பும் அ பத்தி தான்—, உட்புறத்தினால் - உட்புற வேறுபாட்டால், ஓரிரண்டு இயல் ஆம் - ஓரிரண்டு வகையாகும், சோர்வு இல்—, உள்ளது சூக்குமம் ஆம் - உள்ளே உள்ளது சூக்குமமாகும், மற்றைப் புறத்தது செப்பின்—, தேரின்—, தூலம் ஆம் - தூலமாகும், எ - று.

(வி-ரை.) புறத்தது - வெளியேயுள்ளது. செப்பின் - சொன்னால். தேரின்-ஆராயின்.

தூய தாகுமி டத்திற் சுடர்மணிச்
சீய மெல்லணை யாகிய செங்கையி
லாய மெய்ச்சிவ லிங்க வருச்சனை
மாயி ரும்புறப் பத்தி மதிப்பினே.

(ப - ரை.) தூயது ஆகும் இடத்தில்—, செங்கை ஆகிய - செவ்விய கையாகிய, சுடர் மணிமெல் சீய அணையில் ஆய - பிரகாசிக்கிற அழகிய மிருதுவாகிய சிம்ஹாஸநத்தில் அமர்ந்த, மெய் - உண்மையாகிய, சிவலிங்க அருச்சனை—, மதிப்பின் - கருதுமிடத்து, மா இரு - மிகப்பெரிய, புறப்பத்தி - புறப்பத்தியாம், எ - று.

(வி - ரை.) தூயதாகுமிடம் - பரிசுத்தமான இடம். சீயம் - சிங்கம். மதித்தல் - நினைத்தல். மெய்ச்சிவலிங்கம் - இஷ்டலிங்கம். (எ)

உயிரி லீச னுயிரரு ளீசனிற்
பயில வொன்றுபட் டொன்றையும் பற்றுறா
வியல்ப கத்ததி பத்தி யிசைந்துளோன்
செயல்வெ துப்பு விதையெனச் செப்புவார்.

(ப - ரை.) உயிரில் ஈசன்—, அருள் ஈசனில் உயிர்—, பயில-மிகுதியாக, ஒன்றுபட்டு-ஒற்றுமைப்பட்டு, ஒன்றையும் பற்றுறா இயல்பு - ஒன்றையும் பற்றாத இயற்கையே, அகத்து அதி பத்தி - மேன்மையாகிய அகப் பத்தியாம், இசைந்துளோன் - இந்தப் பத்தியுடையோனது, செயல் - தொழில்கள், வெதுப்பு விதையென செப்புவார் - வறுத்த வித்தென்று சொல்லுவர் (பெரியோர்), எ - று.

(வி - ரை.) இயல்பு என்பத னீற்றில் தேற்றேகாரம் தொகுத்தது. வறுத்த வித்து என்றது முளைத்தற் குரியதல்லாத வித்தென்றவாறு. அகப் பத்தியுடையோனது தொழில்கள் அவற்றின் பயன்றரா தொழியு மென்பது இதனாற் கூறப்பட்டது. பயன்றராதொழிதலாவது பிறப்பில்லையாதல். (அ)

பெருகு சொற்கொடென் பேறு பகர்ந்திடி
னுருகு பத்தி யெவற்று முயர்ந்ததா
மருவி மற்றதை மன்னின னேன்மல
விருளி ரிக்கு மிதிலிலை யையமே.

(ப - ரை.) பெருகு சொல் கொடு - விரிந்த சொற்களால், என்பேறு - என்ன பயன், பகர்ந்திடின் - சொல்லுமிடத்தில், உருகு பத்தி—, எவற்றும் - எவற்றினும், உயர்ந்தது

ஆம்—, அதை மருவி - அதை யுடையனாய், மன்னினனேல் - நிலைத்திருப்பானானால், மல இருள் இரிக்கும் - (அது) மல விருளை யழிக்கும், இதில் ஐயம் இல்லை—, எ - று.

(வி - ரை.) உருகு பத்தி - மன முருகுதற் குரிய பக்தி. மன்னுதல் - நிலைபெற்றிருத்தல். இரித்தல் - அழித்தல். மல இருள் இரிக்கும் என்றது முக்தி ப்ராப்தியை விளக்கும் என்றபடி. (கூ)

முளையில் வித்துமவ் வித்தின் முளையும்போற்
றளையில் பத்தி சிவப்பிர சாதமோ
டளவி யொன்றினொன் றாகுமப் பத்திதான்
வளமு றும்பிறப் பொன்றில் வருவதோ.

(ப - ரை.) முளையில் வித்தும் அ வித்தில் முளையும் போல்—, தளை இல் - தடையில்லாத, பத்தி—, சிவப் பிரசாதமோடு—, அளவி-கலந்து, ஒன்றின் ஒன்று ஆகும்-ஒன்றினின்றும் ஒன்றுண்டாகும், அ பத்தி தான்—, வளம் உறும் - வளமாகிய, பிறப்பு ஒன்றில் வருவதோ—, எ - று.

(வி - ரை.) அளவல் - கலத்தல். வருவதோ வென்னு மோகாரம் வினாவோ டெதிர்மறைப் பொருட்டு; அதாவது வாராது என்பதும், சிவாநுக்ரஹத் தாலேயே யுண்டாகும் என்பதும், அந்தச் சிவாநுக்ரஹம் பக்தியாலுண்டாகும் என்பதும் பெறப்பட்டன. (க0)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எண்ணரும் பிறப்பிற் சுத்த மெய்திநூ னெறிவ ழாமற்
பண்ணுறு மியல்பின் மேவிப் படர்புலன் றுறந்த ஞானிக்
கண்ணறன் னருள்பி றக்கு மாங்குடன் முத்த னாகி
நண்ணருஞ் சிவச மாக நணுகுவ னென்பர் மேலோர்.

(ப - ரை.) எண் அரும் பிறப்பில் - எண்ணுதற்கரிய பிறவிகளில், சுத்தம் எய்தி-சுத்தமடைந்து, நூல் நெறி வழாமல் - நூல் வழியிற் றவறாமல், பண்ணுறும் இயல்பின் மேவி - நல்லியற்கையிற் பொருந்தி, படர்புலன் துறந்த - விரிந்த புலன்களை விட்ட, ஞானிக்கு—, அண்ணல் தன் - சிவபெருமானது, அருள் பிறக்கும்—, ஆங்குடன் - அப்பொழுதே, முத்தனாகி—, நண் அரு - அடைதற்கரிய, சிவசமானம் நணுகுவன் - சிவ சாமியத்தை யடைவன், என்பர்—, மேலோர்—, எ - று.

(வி - ரை.) பண்ணுறல் - அலங்கரித்தல், இது இயல்பை விசேடித்து நிற்றலால் நல்லியற்கை யென்றதாயிற்று. படர்தல் - செல்லலாதலால் படர்புலன் என்பதற்கு விடயங்களின் மேற்செல்லும் புலன் என்றுரைத்தலுமாம். ஆங்குடன் - ஒரு சொல். முத்தன்-பாசநீக்கமுடையவன். அருள்பிறத்தலாவது பிரசன்னமாதல். சிவசாமியம் - சிவாபின்னம். சிவனுக்குச் சமாநன் என்று பொருளா யிருக்க இங்குச் சிவாபின்னன் என்று பொருள் கொள்ளுதல் எதனாலெனின்:—சிவ ஸ்வரூபத்தைக் கூறும் வேதம் ஆகமம் புராணம் ஆன்றோர் மொழி முதலிய சகலப் பிரமாணங்களிலும் சிவனுக்குச் சமாநனாவது அல்லது மேலானவனாவது உள்ளதாக சித்தாந்தப் படுத்தவில்லை. அவ்வாறு ஒப்புயர்வில்லாதவனென்று முழங்கப்படும் சிவனுக்குச் சமாநனென்று சொல்வது சகலப் பிரமாணங்களுக்கும் விருத்தமாகுமென்பது நிச்சயம். சிவன் ஒப்புயர்வில்லாதவனென்பதை ஶ்வேதாஶ்வதர உபநிஷத் முதலிய பிரமாணங்களில் காண்க. இவ்வாறான பிரமாணங்களுக்கு முரணாக சிவசமாநன் என்று பொருள் செய்தல் கூடாது. தைத்திரியோபநிஷத் முதலிய பிரமாணங்களில் அபேதத்தையே விளக்குகின்றமையால் இங்குச் சிவாபின்னன் என்று பொருள் கொள்வதே ஶ்ருதி யுக்தி அநுபவங்களுக் கிணங்கியதாம். இதனால், அபின்னன் என்பது ஈசனைப்போல ஈடும் எடுப்பும் இல்லாதவன் எனப் பொருள்பட்டது. (கக)

நெளிதிரைக் கடலு டுத்த நிலமிசை மக்க டம்முட்
டெளிசிவ பத்தி தானோர் சிறிதுளோ னெனினு மன்னோ
னெளிதினின் முப்பி றப்பின் மேற்பிறப் பெய்தா வண்ண
மொளியொடு மருவி நிற்கு முண்மையிம் மாற்ற மாதோ.

(ப - ரை.) நெளி திரை - தவழ்கின்ற அலைகளையுடைய, கடல் உடுத்த - கடல் சூழப் பெற்ற, நிலமிசை மக்கள் தம்முள்—, தெளி - தெளிவாகிய, சிவபத்திதான்—, ஓர் சிறிது உள்ளோன் எனினும்—, அன்னோன் - அவனே, எளிதினில்—, முப்பிறப்பின்மேல்—, பிறப்பு எய்தா வண்ணம்—, ஒளியொடு மருவி நிற்கும்—, இ மாற்றம் - இந்தச் சொல், உண்மை - மெய்யாகும், எ - று.

(வி - ரை.) சிறிதுளோன் எனினும் என்பதனீற்றும்மை உயர்வு சிறப்பு. அன்னோன் என்பதனீற்றில் தேற்றேகாரம் தொக்கது. எய்தா வண்ணம் - அடையாதபடி. முப்பிறப் பின்மேல் - மூன்று ஜன்மத்திற்குப் பின்னர். ஒளியொடு மருவி நிற்கும் என்றது சிவா நுக்ரஹ முண்டாகும் என்றபடி. (௧௨)

சாங்கமோ டியற்றி யென்றுந் தாங்கடைப் பிடிக்குஞ் சேவை
யாங்கது பத்தி மூன்று மகமன மொழிமெய்க் கூற்று
லீங்கிறை வடிவ மாதி யெண்ணுதன் மனத்த தாகும்
பாங்குறு செபாதி வாக்கின் பணிபூசை யாதி மெய்த்தாம்.

(ப - ரை.) சாங்கமோடு இயற்றி—, என்றும்—, தாம் கடைப்பிடிக்கும் சேவை-தாம் உறுதியாகப் பற்றுஞ் சேவையாகிய, ஆங்கது பத்தி - அந்த பக்தி, அகம் மனம் மொழி மெய் கூற்றுல் - மனோ வாக் காயங்களின் கூறுபாட்டால்—,மூன்று ஆம்—,ஈங்கு - இங்கு, இறை வடிவம் ஆதி எண்ணுதல் - இறைவனது உருவ முதலியவற்றை நினைத்தல், மனத்தது ஆகும்—, பாங்கு உறு - அழகாகிய, செபாதி - ஜப முதலியவை, வாக்கின் பணி - வாக்கின் தொழிலாகும், பூசை ஆதி - பூசை முதலியவை, மெய்த்து ஆம் - காயத்தின்தொழில் களாம், எ - று.

(வி - ரை.) சாங்கமோடு - அங்கத்தோடு கூடி. இறை - ஆகுபெயர். மனத்தது - மனோ (மானஸிக) பக்தி. வாக்கின் பணி - வாக் (வாசக) பக்தி. மெய்த்து-காயிக பக்தி. மெய் - உடம்பு. அகம் மனம் - ஒருபொருட் பன்மொழி. (௧௩)

முப்பொறி யியற்ற வந்த முப்பெருஞ் சேவை யென்றும்
பொய்ப்பரும் புறம கம்பின் புறவக மென்ன மூன்று
மெய்ப்பொரு ணினைத்த னெஞ்சம் விமலன்மெய்ப் பெயர்த்து வாக்கா
மொப்பின்முப் புண்ட ராதி யுளதுமெய் யொழிந்த வல்ல.

(ப - ரை.) முப்பொறி இயற்ற வந்த - முக்கரணங்கள் செய்ததனாலுண்டாகிய, முப்பெருஞ்சேவை—, என்றும்—, பொய்ப்பு அரும் - பொய்த்தலில்லாத, புறம் அகம் பின் புறவகம் என்ன மூன்று ஆம்—, மெய்ப்பொருள் நினைத்தல்—, நெஞ்சம் - மனோ சேவை, விமலன் மெய்ப் பெயர்த்து - சிவபிரானது உண்மையாகிய பெயர் சொல்வது, வாக்கு ஆம் - வாக் ஸேவையாம், ஒப்பு இல் - ஒப்பற்ற, முப்புண்டராதி உள்ளது - (சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட) திரிபுண்டர முதலியவாயுள்ளது, மெய் - சரீர சேவையாம், ஒழிந்த அல்ல - ஒழிந்தன சேவைகளல்ல, எ - று.

(வி-ரை.) முக்கரணங்கள் - மனோ வாக் காயங்கள். நெஞ்சம் வாக்கு மெய் என்பன மூன்றும் ஆகுபெயர்கள். சேவை மூவகைய வென்பதும் அவை யிவை யென்பதும் இதனாற் கூறப்பட்டன. (௧௪)

புறமுற வியற்றும் பூசை புறமகந் தன்னிற் றனே
யறிவுற வியற்றும் பூசை யகம்பர சிவனைப் போற்றும்
புறமக மடைந்து நிற்கு மனமதே புறவ கந்தான்
மறுவறு பணியோ ரைந்து வகைப்படு மதனை யுங்கேள்.

(ப - ரை.) புறம் உற இயற்றும் பூசை புறம்—, அகம் தன்னிற்றனே அறிவு உற இயற்றும் பூசை அகம்—, பரசிவனைப் போற்றும்—, புறம் அகம் அடைந்து நிற்கும் மனமதே புறவகந்தான்—, மறு அறு - குற்ற மற்ற, பணி—, ஓர் ஐந்து வகைப்படும்—, அதனையும் கேள்—, எ - று.

(வி-ரை.) பூசையானது புறப்பூசை அகப்பூசை புறவகப்பூசை யென மூன்று வகைய வென்பதும், அவை யிவை யென்பதும், அதாவது அன்னியரால் காணப்பட்ட தாகிய சிவார்ச்சனை முதலியன புறப்பூசை யென்பதும், அதுதனக்கு மாத்திர மறியப்படுமாயின் அகப்பூசை யென்பதும், மனமானது சிவபிரானிடமே பேராவலுடைய தாயின் புறவகப் பூசை யென்பதும் இச்செய்யுளாற் பெறப்பட்டன. பணி - சிவமகம். (கரு)

வந்துறு தவமே கன்மம் வண்செபந் தியாந ஞான
மைந்திவை முறையி னுகு மருந்தவ மீசற் காக
நொந்துட லிளைத்த லாகு மற்றுள நோன்பி னேதன்
முந்துள தவம தென்று மொழிந்திடப் படாது கண்டாய்.

(ப - ரை.) வந்து உறு - வந்து பொருந்துகிற, தவம் கன்மம் வள்செபம் தியாநம் ஞானம்—, (ஆகிய) ஐந்து இவை முறையின் ஆகும் - முறையே இவை யைந்துமாம், (அவற்றுள்) ஈசற்காக - சிவபிரானுக்காக, நொந்து - வருந்தி, உடல் இளைத்தல் அரும் தவம் ஆகும்—, மற்று உள்ள—, நோன்பின் - விரதங்களால், நோதல்—, முந்து உள்ள தவம் என்று மொழிந்திடப் படாது—, எ - று.

(வி-ரை.) உடல் இளைத்தல் - உடம்பு மெலிதல். நோன்பின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றுவதன் கருவிப்பொருளில் வந்தது. கண்டாய் - முன்னிலையசை யிடைச் சொல். மற்றுள நோன்பு என்றது க்ரிச்ச்ரத்தை, தவமெனினுமாம். இது ப்ராஜாபத்யம், ஸாந்தபநம், அதிக்ரிச்ச்ரம், தப்தக்ரிச்ச்ரம், பாரகக்ரிச்ச்ரம், சாந்த்ராயணக்ரிச்ச்ரம், எவசா[illegible] யணம், எதிசாந்த்ராயணம், சிசுசாந்த்ராயணம் எனப் பலவகைப்படும். இவை [illegible] பாவங்களை நீங்கச்செய்வனவும் சாந்த்ராதி புண்ய லோகத்தை யடையச் செய்வனவுமாம். இதன் விரிவை மநுஸ்ம்ருதி ப்ராயஶ்சித்த ப்ரகரணத்தில் காண்க. (கசு)

கண்ணுதல் பூசை செய்கை கருமமற் றுள்ள வல்ல
வண்ணறன் பிரண வத்தோ டஞ்செழுத் துருத்தி ராதி
நண்ணுறப் பயிலுந் தன்மை நற்செபம் வேத மாதி
பண்ணுறப் பயின்று நிற்கை பகர்தரு செபமா காவால்.

(ப - ரை.) கண்ணுதல் - சிவபிரானது, பூசை செய்கை—, கருமம்—, மற்று உள்ள அல்ல - வேறுள்ளவெல்லாம் கருமமல்ல, அண்ணல் தன் பிரணவத்தோடு—, அஞ்செழுத்து—, உருத்திராதி—, நண்ணுற - பொருந்த, பயிலும் தன்மை-உச்சரிக்கும்தன்மையே, நல் செபம் - நல்ல ஜபமாகும், வேதமாதி - வேதமுதலியவற்றை, பண்ணுறப் பயின்று நிற்கை - பண்ணேடு பொருந்த ஓதி நிற்பது, பகர் தரு - சொல்லப்பட்ட, செபம் ஆகா—, எ - று.

(வி - ரை.) கண்ணுதல் - அன்மொழித்தொகை. பிரணவம் - ஓங்காரம். உருத்தி ராதி - உருத்திர தியாந முதலியவை. உருத்திரம் என்றது ஸ்ரீருத்ரம் எனினுமாம். பண் - ஸ்வரம். அது உதாத்தம், அநுதாத்தம், ஸ்வரிதம், ப்ரசயம் என நால்வகைப்

படும். எடுத்தலோசையால் உச்சரிக்கப்படுவது உதாத்தம் என்றும்; படுத்த லோசையால் உச்சரிக்கப்படுவது அநுதாத்தமென்றும், நலிதலோசையால் உச்சரிக்கப்படுவது ஸ்வரித மென்றும், உழத்தலோசையால் உச்சரிக்கப்படுவது ப்ரசயமென்றும் கூறுப வடநூலார். மற்று உள்ள கருமமாவது வேள்வி முதலியன. பண்ணுறப்பயின்று நிற்கை - நியாகம்.

சிவமுறு படிவ மாதி சிந்தனை நியாகமாகு
மவமுறு மான்ம சிந்தை யாதிய நியாக மாகா
நவிறரு சிவாக மத்தி னற்பொரு டெரிதன் ஞானம்
பவமுறு மொழிந்த நூலின் பயனுணர் வன்று ஞானம்.

(ப - ரை.) சிவம் உறு படிவம் ஆதி - சிவத்தின் உருவ முதலியவற்றை, சிந்தனை - சிந்தனை செய்தல், நியாகம் ஆகும்—, அவம் உறும்-வீணாகிய, ஆன்ம சிந்தை ஆதிய-ஆன்ம சிந்தை முதலியவை, நியாகம் ஆகா—, நவில் தரு - சொல்லப்பட்ட, சிவாகமத்தின் நல் பொருள் தெரிதல்—, ஞானம்—, பவம் உறும் - பிறவிக்கேதுவாகிய, ஒழிந்த நூலின் - ஏனைய நூல்களின், பயன் உணர்வு - பொருளுணர்ச்சி, ஞானம் அன்று—, எ - று.

(வி - ரை.) அவம் - பயனின்மை. நவிலல் - சொல்லல். சிவ வடிவாதிய வற்றைச் சிந்தித்தலே நியாகமென்பதும், ஏனைய சீவன் முதலியவற்றைத் தியானித்தல் நியாகமாகா தென்பதும், சிவாகமப் பொருளுணர்ச்சியே ஞானமென்பதும், ஏனையநூல்களின் பொரு ளுணர்ச்சி ஞானமன்றென்பதும் இதனாற் கூறப்பட்டன.

செப்பிய முறையி னின்ன சிவமக மைந்தி னானும்
பைப்பொறி யரவ வணிந்த பரமனை யருச்சிக் கின்ற
மெய்ப்பணி புரியும் பத்தி மேவினே னியாவ னன்னோ
னொப்பறு பத்த னென்றே யுரைத்திடப் படுவ னன்றே.

(ப - ரை.) செப்பிய - சொல்லப்பட்ட, முறையின் - முறையால், இன்ன - இத் தன்மையவாகிய, சிவ மகம் ஐந்தினானும்—, பை பொறி அரவு - படப் புள்ளிகளை யுடைய பாம்பை, அணிந்த பரமனை அருச்சிக்கின்ற மெய்ப்பணி புரியும் பத்தி மேவினோன்—, யாவன் - எவனோ, அன்னோன் - அவன், ஒப்பு அறு பத்தன் என்றே உரைத்திடப் படுவன்—, எ - று.

(வி - ரை.) முறையின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது மூன்றுவ[illegible] கருவிப் பொருளில் வந்தது. சிவமகம் ஐந்தாவன - மேற்கூறிய தவம் முதலிய [illegible]ஞ்ச சிவ யஜ்ஞங்கள். மெய்ப்பணி - உண்மையாகிய தொண்டு. (கக)

பந்தனை யகன்று நின்ற பரசிவ பத்தன் றன்னை
வந்தனை புரியு நல்லோன் புண்ணிய வழியை நண்ணு
நிந்தனை செய்யுந் தீயோ னினைப்பினு முளம நடுங்கும்
வெந்தழ னிரய மெய்தி மெலிகுவ னைய மின்றே.

(ப - ரை.) பந்தனை அகன்று நின்ற - பிறவித்தளை யொழிந்து நின்ற, பரசிவபத்தன் தன்னை—, வந்தனை புரியும் நல்லோன்—, புண்ணிய வழியை நண்ணும்-தரும மார்க்கத்தை யடைவான், நிந்தனைசெய்யும் தீயோன்—, நினைப்பினும் உள்ளம் நடுங்கும் வெம் தழல் நிரயம் எய்தி—, மெலிகுவன் - தளர்வான், ஐயம் இன்று - சந்தேகமில்லை, எ - று.

(வி - ரை.) பந்தனை - கட்டு, அது ஈண்டைக்கேற்பப் பிறவித்தளை யென்றுரைக்கப் பட்டது. பத்தன் றன்னை யென்பதில் தன் சாரியை. புண்ணிய வழி - புண்ணியகதி (சுவர்க்கம்). நிரயம் - நரகம். (உo)

ஈண்டொளி யமல பத்த னிருஞ்சிவ பத்தி நீத்துக்
கோண்டரு மனத்து வெய்ய கொடியவன் றன்னை நோக்க
றீண்டுதல் புரித லாகா சேர்ந்தவ னுடனி ருத்தல்
வேண்டுவ தன்றெங் கேனும் விடுவதே யியல்பு மாதோ.

(ப - ரை.) ஈண்டு ஒளி - மிக்க வொளியினையுடைய, அமல பத்தன் - பரிசுத்தனும் பக்தன், இரு சிவபத்தி நீத்து - பெரிதாகிய சிவபக்தியை விட்டு, கோண் தரு மனத்து - கோணலாகிய மனத்தினால், வெய்ய கொடியவன் தன்னை—,நோக்கல்—, தீண்டுதல்—, (இவற்றை) புரிதல் ஆகா - செய்யலாகாது, அவனுடன் சேர்ந்திருத்தல் வேண்டுவது அன்று—, எங்கேனும் விடுவதே இயல்பு—, எ - று.

(வி - ரை.) கோண் - கோணுதல் (தொழிற்பெயர்). ஈண்டு ஒளி - மிக்க தேஜஸ் (ப்ரபாவம்). (உக)

என்றுபெற் றண்ண றீக்கை யிலிங்கதா ரணமே யாதி
யன்றுதொட் டமல பத்த னுயினேன் றன்னைப் போல
நின்றநற் சிவாக மத்தி னெறிவழா தொழுகி நீங்கு
புன்றொழிற் பத்தன் றன்னைப் பூசனை புரிக வன்றே.

(ப - ரை.) அண்ணல் தீக்கை—, இலிங்க தாரணம் ஆதி—, என்று பெற்று - என்று பெற்றுக்கொண்டதோ, அன்று தொட்டு—, அமல பத்தன் ஆயினேன்—, தன்னைப்போல நின்ற—, நல் சிவாக மத்தின் நெறி வழாது ஒழுகி—, புல் தொழில் நீங்கு - இழி தொழிலை யொழிந்து நின்ற, பத்தன் தன்னை—, பூசனை புரிக—, எ - று.

(வி - ரை.) அண்ணல் தீக்கை - சிவதீக்ஷை. இலிங்கதாரணமாதி - லிங்கதாரண முதலியவை. அமல பத்தன் - பரிசுத்தனான பக்தன். (உஉ)

தன்னெறி யொழுகி நிற்குஞ் சங்கர பத்தர் தம்பாற்
றுன்னுத லவர்தம் மில்லிற் றுய்க்குதல் செய்க பத்த
னன்னியர் மனையூ ணுகா வருவினைப் பவிக ணல்குங்
கொன்னிதி தன்வ சத்த தென்னினுங் கொள்ளொ ணுதால்.

(ப - ரை.) பத்தன் - பக்தனானவன், தன்நெறி ஒழுகி நிற்கும் சங்கரபத்தர் தம்பால் - தன் வழியிலொழுகி நிற்கிற சிவபக்தரிடத்தில், துன்னுதல் - சேர்தல், அவர்தம் இல்லில் - அவர் வீட்டில், துய்க்குதல் - உண்டல், (ஆகிய இவற்றை) செய்க - செய்யக் கடவன், அன்னியர் மனை ஊண் ஆகா—, அருவினை பவிகள் நல்கும் - அருவினைகளை யுடைய பாவிகள் கொடுக்கிற, கொன் நிதி - பெரும்பொருள், தன் வசத்தது என்னினும்—, கொள்ளொணாது—, எ - று.

(வி - ரை.) தன் நெறி - ஸ்வய மார்க்கம். சங்கர பத்தர் - சிவபக்தர். இல் - வீடு. ஊண் - உணவு, இது முதனிலை திரிந்த தொழிற் பெயர். கொன் - பெருமை. அருவினை என்றது ஸ்வய (வீரசைவ) மார்க்கத்தில் வழுவுதலும் பிரபஞ்சத்தில் சித்தம் வைத்தலும் எனினுமாம். அருவினை - சகித்தற்கரிய தீச்செயல்கள். (உ௩)

அன்னிய தெய்வ முன்னல் புகழ்தலர்ச் சித்த லாகா
வன்னிய தெய்வ சேட மருந்தொணு வமல பத்த
னன்னிய தெய்வ மேவு மகமுறுன் பூச னைக்க
ணன்னிய தெய்வ பூசை யாளியை நோக்கு றுனல்.

(ப - ரை.) அமல பத்தன்—, அன்னிய தெய்வம் உன்னல்—, புகழ்தல்—, அர்ச்சித்தல்—, (இவை) ஆகா—, அன்னிய தெய்வ சேடம் அருந்தொணு—, அன்னிய தெய்வம்

மேவும் அகம் உறான்—, பூசனைக் கண் - பூசையில், அன்னிய தெய்வபூசை ஆளியை-அந்ய தேவதையைப் பூஜிப்பவனை, நோக்குறான் - பார்க்கமாட்டான், எ - று.

(வி - ரை.) உன்னல் - நினைத்தல், சேடம் - நிவேதநம் (மிச்சில்). அருந்தல் - உண்டல். அகம் - இடம். ஆளி - ஆள்பவன் (செய்பவன்). நோக்குறான் என்பதற்குப் பிரதி நோக்குறா. (உச)

என்றுமெய்ச் சிவலிங் கத்தோ டிசைந்துநல் வீரசைவ
நன்றிகொ ணெறியி னின்ற நற்சிவ பத்த னானோன்
வன்றரை யிடங்கொண் டுற்று வயங்குதா வரலிங் கத்தி
னின்றநின் மாலி யந்தான் கொள்ளுத னெறியன் றாகும்.

(ப - ரை.) என்றும்—, மெய்ச் சிவலிங்கத்தோடு இசைந்து—, நல் வீரசைவம்-நல்ல வீரசைவமாகிய, நன்றி கொள் நெறியில் நின்ற—, நல் சிவபத்தன் ஆனோன்—, வல் தரை இடம் கொண்டு உற்று—, வயங்கு - விளங்குகின்ற, தாவர லிங்கத்தில் நின்ற—, நின் மாலியம் கொள்ளுதல்—, நெறி அன்று ஆகும்—, எ - று.

(வி - ரை.) நன்றி கொள் நெறி - ஸந்மார்க்கம். நின்மாலியம் - பூசித்துக் கழித்த பொருள். மெய்ச் சிவலிங்கத்தோடு இசைந்து - சிவனிடத்திலேயே நிஷ்டாபரனா யிருந்து. மெய்ச்சிவலிங்கம் என்றது இஷ்டலிங்கம் எனினுமாம். தாவர லிங்கம் - தேவர்ஷி மாநவ ப்ரதிஷ்டிதமான முற்கூறிய லிங்கங்கள். (உரு)

யாண்டொரு தாவரத்திற் கிடையூறு வரினும் பத்தர்க்
கேண்டரு சிவவே டத்தோர்க் கிடர்கள்வந் துறினு நில்லா
தாண்டுயிர் விடுத்தே யேனு மளிக்கமெய்ப் பரன்பொ ருட்டு
மாண்டவன் சிவனோ டொன்றும் பதத்தினை மருவு மன்றே.

(ப - ரை.) யாண்டு - எவ்விடத்திலாயினும், ஒரு தாவரத்திற்கு—, இடையூறுவரினும்—, பத்தர்க்கு—, ஏண்தரு - பெருமையைத் தருகிற, சிவ வேடத்தோர்க்கு—, இடர்கள் வந்து உறினும்—, நில்லாது - பார்த்து நில்லாமல், ஆண்டு - அவ்விடத்தில், உயிர் விடுத்தேயேனும்—, அளிக்க - (அவர்களை) காக்கக் கடவன், மெய்ப் பரன் பொருட்டு மாண்டவன்—, சிவனோடு ஒன்றும் பதத்தினை—, மருவும் - அடைவான், எ - று.

(வி - ரை.) தாவரம் - தாவரலிங்கம். இடர்கள்-துன்பங்கள். உயிர் விடுத்தேயேனும், உயிரை விட்டாயினும். அளித்தல் - காத்தல். சிவனோடொன்றும்பதம்-சிவசாயுஜ்யம்.(உசா)

கண்டன னாயின் முக்கட் கடவுளை நிந்திப் போனைத்
தண்டனை புரிந்து கொல்க வரிதெனிற் சபிக்க நின்று
மண்டனில் வலிய னன்றேல் வார்செவித் துணைகள் பொத்திக்
கொண்டவ ணகன்று செல்க குலைகுலைந் தமல பத்தன்.

(ப - ரை.) அமல பத்தன்—, மண்தனில் - உலகத்தில், முக்கண் கடவுளை நிந்திப்போனைக் கண்டனனாயின்—, தண்டனை புரிந்து கொல்க—, அரிது எனின் - (அப்படிச் செய்தல்) அரிதாயின், நின்று சபிக்க-நின்று சபிக்கக் கடவன், வலியன் அன்றேல் - (அது செய்யவும்) வலியிலனாயின், வார் - நீண்ட, செவித்துணைகள் பொத்திக்கொண்டு —, அவண் - அவ்விடத்தி னின்றும், குலை குலைந்து - நடுநடுங்கி, அகன்று செல்க - அகன்று போகக்கடவன், எ - று.

(வி - ரை.) முக்கட் கடவுள் - சிவபெருமான். பொத்திக்கொண்டு - மூடிக்கொண்டு. துணை - இரண்டு. (உஎ)

ஏயுமா சார நிந்தை யாண்டுள தவ்வி டத்திற்
போயுற லொழிக வென்றும் புகல்சிவ நிந்தை செய்வோன்
றீயக முறாது நிற்க சிவநிந்தை யவர்க்கு நூறாண்
டாயினும் பரிகா ரஞ்செய் தகற்றிடற் கரிது மாதோ.

(ப - ரை.) ஏயும் - பொருந்திய, ஆசார நிந்தை—, யாண்டு உளது - எவ்விடத்துளதோ, அவ்விடத்தில்—, போயுறல் ஒழிக—, என்றும்—, புகல் - சொல்லப்பட்ட, சிவ நிந்தை செய்வோன் - சிவநிந்தை செய்வோனது, தீ அகம் - கெட்ட இடத்தை, உறாது நிற்க - அடையா திருக்கக் கடவன், சிவ நிந்தை யவர்க்கு - சிவ நிந்தை செய்வோருக்கு, நூறு ஆண்டு ஆயினும்—, பரிகாரம் செய்து அகற்றிடற்கு அரிது—, எ - று.

(வி - ரை.) ஆசாரம் - நல்லொழுக்கம். போயுறல் - சென்று தங்கி யிருத்தல். சிவபிரான் சகல பூதங்களுக்கும் அதிபதியாதலால் சிவநிந்தை செய்பவர்களுக்கு நூறாண்டாயினும் பரிகாரம் இல்லையென்றபடி. (உஅ)

சிற்கன சிவலிங் கத்தைச் சேர்ந்துபூ சனைசெய் கின்றோன்
முற்கரு மங்கள் செய்யான் முயல்வனே லமல பூசை
நற்பய னிலையு யர்ந்த நடையினோன் றாழ்ந்த செய்யிற்
பற்பல கருட மெல்லாம் பயனறப் பதித னாவான்.

(ப - ரை.) சிற்கனம் - ஞானமாகிய பெருமையைத் தருகிற, சிவலிங்கத்தைச் சேர்ந்து பூசனை செய்கின்றோன்—, முற்கருமங்கள் செய்யான்—, முயல்வனேல்—, அமல பூசை நல் பயன் இல்லை—, உயர்ந்த நடையினோன்—, தாழ்ந்த செய்யின்—, பற்பல கருமம் எல்லாம் - (அவன் செய்கிற) பலப் பல கருமங்கள் யாவும், பயன் அற - பயன் தராதொழிய, பதிதன் ஆவான் - பாவியாவான், எ - று.

(வி - ரை.) முயல்வனேல் - முயற்சி செய்வனாயின். தாழ்ந்த - இழிந்தவற்றை. முற்கருமம் - முந்திய செயல். பதிதன்-ஆரூட பதிதன், மேலிருந்து கீழே நழுவினவன். (உகூ)

அஞ்செழுத் துபதே சங்கொள் பவனரர் தம்மைச் சென்று
நெஞ்சுறத் துதிப்பி னன்னோ னெறியலா நெறியி னின்றோ
னஞ்சுறப் படுமி லிங்கி யறிவில்புன் புலவ னூல்க
ளெஞ்சுறக் கற்றோ னேனுங் கற்றில னென்பர் மேலோர்.

(ப - ரை.) அஞ்செழுத்து உபதேசம் கொள்பவன்—, நரர் தம்மைச் சென்று நெஞ்சுறத் துதிப்பின்—, அன்னோன் - அவன், நெறியல்லா நெறியில் நின்றோன்—, அஞ்சுறப்படும் இலிங்கி - (யாவருங் கண்டு) அஞ்சுதற் குரிய இலிங்கியாவன், அறிவு இல் புல் புலவன்—, எஞ்சு அற—, கற்றோனேனும்—, நூல்கள் கற்றிலன்—, என்பர்—, மேலோர்—, எ-று.

(வி - ரை.) நரர் - மனிதர். துதிப்பின் - புகழ்ந்தால். புலவன் - கவிஞன். அஞ்சுறப் படும் இலிங்கி - லிங்க தாரணமாகப் பெற்றும் லிங்க தாரண மில்லாதவனும். இலிங்கி- இலிங்கத்தைத் தாரணம் செய்தவன். (௩0)

கலிவிருத்தம்.

நீடுயர் பத்திநன் னெறியி னின்றுளோன்
பாடுறு தயிலநீர் சருமபாத்திரங்
கோடனன் றன்றுதான் கொள்வ னேலவன்
வீடுவெந் நிரயமாய் மேவி னையுமே.

(ப-ரை.) நீடு உயர் பத்தி நல் நெறியில் நின்றுளோன்—, பாடு உறு தயிலம் நீர் (ஆகிய இவற்றை)—, சரும பாத்திரம்—, கோடல் - கொள்ளுதல், நன்று அன்று—, தான் கொள்வனேல்—, அவன்—, வெம் நிரயம் - கொடிய நரகமே, வீடாய் மேவி—, நையும் - வருந்துவன், எ - று.

(வி-ரை.) தயிலம் - எண்ணெய். சரும பாத்திரம் - தோற்பை. நிரயம் - ரௌரவ நரகம்.

இறப்பினு மிருநிலத் தெய்த வந்திடும்
பிறப்பினு மற்றினும் பிறந்த சூதக
மறப்பில தாமிலிங் காங்க மன்னினோற்
குறப்பெறு கிலசிறி தேனு முண்மையே.

(ப-ரை.) மறப்பு இலது ஆம் இலிங்காங்கம் மன்னினோற்கு—, இறப்பினும் - இறப்பினாலும், இரு நிலத்து - பெரிய மண்ணுலகில், எய்த வந்திடும் பிறப்பினும் - அடைய வருகிற பிறப்பினாலும், மற்றினும் - வேறு வழிகளாலும், பிறந்த சூதகம் - உண்டான சூதகம், சிறிது ஏனும் உறப்பெறுகில—, உண்மையே—, எ - று.

(வி-ரை.) இலிங்காங்கம் மன்னினோன் - பிராண லிங்கத்தோடு கூடிய சரீரத்தை யுடையவன் (லிங்கதாரணன்). சூதகம் - ஆசௌசம் (தீட்டு). உறப் பெறுகில - அடைய மாட்டா. (௯௨)

பூப்புறு துடக்கிலை புனிதன் பூசனை
வாய்ப்புறு மடவா ரனக்கு மற்றவட்
கேய்ப்புறு புதல்வனை யீன்று போந்துள
நீப்பருஞ் சூதக நிடேத மின்றரோ.

(ப-ரை.) புனிதன் பூசனை வாய்ப்புறு - சிவபெருமானது பூசை வாய்க்கப்பெற்ற, மடவரல் தனக்கு - மாதுக்கு, பூப்பு உறு துடக்கு இல்லை - பூப்பினுலுண்டாகும் சூதக மில்லை, மற்று - மேலும், அவட்கு—, ஏய்ப்பு உறு - பொருந்திய, புதல்வனை ஈன்று—, போந்துள - அதனாலுளதாகிய, நீப்பு அரு-ஒழித்தற்கரிய,சூதகநிடேதம் இன்று—, எ-று.

(வி-ரை.) நீப்பு - தொழிற்பெயர் (நீ பகுதி). நிடேதம் - விலக்கு.

லிங்கதாரணரான வீரசைவர்களுக்கு ஜாதி, ஜநநம், மரணம், ரஜஸ்ஸு, உச்சிஷ்டம் ஆகிய இந்த பஞ்ச சூதகங்கள் இல்லையென்று வீரசைவபுராணங்களில் கூறப்பட்டுள்ளது. ஸ்வபசையர், சிந்துமராளர், நிம்மவ்வை, தாசிநிம்மவ்வை, பிப்பபாசையர் ஆகிய வீரசைவசரணர்கள்முறையே சூதகங்களைவிட்டுப் பக்தி விசேஷத்தால் லிங்கபூசை செய்து முக்தியடைந்தார்கள் என்பது அவரவர்களின் சரித்திரத்தால் நன்குபுலப்படும்.

பரமனை யருச்சனை பயிலு மங்கைய
ரருமக வுயிர்த்திடு மகத்திற் சூதகம்
பரவுத லிலசிவ பாத நீருற
விரிதரு மருவிய பாவம் யாவுமே.

(ப-ரை.) பரமனை—, அருச்சனை பயிலும் - அருச்சனை செய்கிற, மங்கையர்—, அரு மக உயிர்த்திடும் அகத்தில் - அருமையாகிய குழவி யீன்றிடும் வீட்டில், சூதகம் பரவுதல் இல—, சிவபாத நீர் உற - சிவபாதநீர் படுதலால், மருவிய பாவம் யாவும்—, இரிதரும் - ஓடிப்போம், எ - று.

(வி-ரை.) சிவபாதநீர் - சிவபாததீர்த்தம். இரிதரல் - ஓடல், பகுதி இரிதா. (௯௪)

இறையவ னிடங்கொளு மிடங்க டீர்த்தங்கள்
பொறைதரு திருவிழா வணைந்து போற்றுக
வுறுசிவ பத்தரவ் வழியி னேகுவோர்க்
கறமுட னுதவுக வன்ன பானமே.

(ப - ரை.) இறையவன் - சிவபிரான், இடம் கொள்ளும் இடங்கள்—, தீர்த்தங்கள்—, பொறை தரு திருவிழா—, (என்பவற்றை) அணைந்துபோற்றுக - (இலிங்கதாரணன்) அடைந்து போற்றுதல் செய்க, உறு சிவபத்தர் - மிக்க சிவபக்தியுடையராய், அவ்வழியின் ஏகுவோர்க்கு - அவ்விடங்களிற் செல்வோருக்கு, அறமுடன் - தருமஞ் செய்தலோடு, அன்னபானம் உதவுக - அன்னபானங்களையு முதவுக, எ-று.

(வி - ரை.) பொறை தரு திருவிழா - (ஸர்வாபராதங்களையும் சிவபிரான்) க்ஷமித்தருளுதற் கேதுவாகிய உத்ஸவம். அன்னபானம் - சோறும் நீரும். உதவுதல் - கொடுத்தல். சிவபிரான் இடம் கொள்ளும் இடங்கள் - ஸ்ரீசைலாதி சிவக்ஷேத்ரங்கள். தீர்த்தங்கள் - த்ரிமகுடாதி தீர்த்தங்கள். திருவிழா - சிவயாத்ரோத்ஸவம். (௩௫)

அன்னதோ யத்தின்மே லான தானமு
மன்னுகொல் லாமைமேற் றவமு மற்றிலை
யென்னலா லன்னதோ யத்தை யீத்துறு
நன்னிலை யேசிவ பத்தர் நண்ணுவார்.

(ப - ரை.) அன்னதோயத்தின் - சோறு நீர்களைத் தருதலினும், மேலானதானமும்—, மன்னு - நிலைபெற்ற, கொல்லாமை மேல் தவமும் - கொல்லாமையினு மேலான தவமும், மற்று இல்லை—, என்னலால் - என்று நூல்களாலே சொல்லப்படுதலால், சிவபத்தர்—, அன்னதோயத்தை - அன்னபானத்தை, ஈத்து - கொடுத்து, உறும் - பொருந்தியிருக்கிற, நல் நிலையே நண்ணுவார் - நல்லநிலைமையையே யடைந்திருப்பார், எ - று.

(வி - ரை.) தோயம் - நீர். தானம் - கொடை. (௩௬)

தன்னெறி தன்குலஞ் சார்ந்த வர்க்குமா
நன்னெறி பெறுசிவ பத்த னல்குக
கன்னியை யனையவர் களிப்ப நல்குறு
மின்னனை யார்தமை விரும்பிக் கொள்கவே.

(ப-ரை.) தன் நெறி தன் குலம் சார்ந்தவர்க்கு—, மா நல் நெறி பெறு சிவபத்தன்—, கன்னியை நல்குக—, அனையவர்—, களிப்ப நல்குறும் - மனமகிழக் கொடுக்கிற, மின் அனையார் தமை - மின்கொடி போல்பவராகிய கன்னியரை, விரும்பிக்கொள்க—, எ-று.

(வி - ரை.) நன்னெறி - சிவாசாரம். கன்னி - விவாஹமாகாத பெண். (௩௭)

விளம்புமிந் நிலைபெறு வீர சைவர்தா
முளங்கொளு மன்புட னுவப்புற் றென்றுமே
கொளுங்குரு வொடுசிவ லிங்கங் கோதிலா
வளந்தரு பூசனை மதித்துச் செய்கவே.

(ப - ரை.) விளம்பும் - சொல்லப்பட்ட, இந்நிலைபெறு வீரசைவர்—, உளம் கொளும் அன்புடன்—, உவப்புற்று - மனமகிழ்ந்து, என்றும்—, கொள்ளும் குருவொடு சிவலிங்கம் - கொள்ளப்பட்ட குருவோடு சிவலிங்கத்தின், கோது இல்லா—, வளம் தரு பூசனை—, மதித்துச் செய்க—, எ - று.

(வி - ரை.) உவப்பு - மகிழ்ச்சி. கோது - குற்றம். (௩௮)

பத்தித்தலம் - முற்றும்.

ஓம் ஶங்கராய நமஃ

# பத்தாவது

## (௧0.) உபயத்தலம்.

[அதாவது—பராபர ஸ்வரூபமானது சிவலிங்கமென்றும், அந்த லிங்க ஸ்வரூபம் ஸத்குருவென்றும் அறிந்து இவ்விருவரையும் பூஜிப்பதில் எக்காலத்தும் சமான புத்தியுள்ள சிவபக்தனே உபயஸ்தல முள்ளவனென்று சொல்லப்படுவன் என்பது.]

கலிவிருத்தம்.

போற்றுறு குருபரன் பூசை யேயிள
வேற்றுயர் கொடியினேன் பூசை யென்பரால்
சாற்றுறு மிவரொரு தத்து வப்பொருள்
வேற்றுமை யில்லையோ ரிடத்து மெய்ம்மையே.

(ப - ரை.) போற்றுறு - வழிபடுதற்குரிய, குருபரன் பூசையே—, இள ஏறு உயர் கொடியினேன் பூசை—, என்பர்—, சாற்றுறும் - சொல்லப்பட்ட, இவர்-இவ்விருவரும், ஒரு தத்துவப் பொருள் - ஒரே யுண்மைப் பொருள்களாவர், மெய்ம்மையே—, ஓரிடத்தும்—, வேற்றுமை யில்லை—, எ - று.

(வி - ரை.) இள ஏறு - இளமையாகிய இடபம். உயர் - உயர்த்தின. கொடியினேன்- கொடியாகவுடைய சிவபெருமான். மெய்ம்மை - உண்மை. (௧)

மூலகா ரணனென முழுத ளித்திடும்
பாலலோ சநன்றனைப் பூசை பண்ணல்போல்
ஞாலமேல் வருகுரு பரனை நாடொறு
மேலவே யருச்சனை யியற்ற வேண்டுமால்.

(ப - ரை.) மூல காரணன் என—, முழுது அளித்திடும்—, பால லோசநன் தன்னை—, பூசை பண்ணல்போல்—, ஞாலமேல்வரு குருபரனை—, நாள்தொறும்—, ஏலவே - பொருந்தவே, அருச்சனை இயற்றவேண்டும்—, எ - று.

(வி - ரை.) மூல காரணன் - முதற் காரணன். முழுது அளித்திடும் - எல்லா வுயிர்களையும் காப்பாற்றுகிற. பால லோசநன் - நெற்றிக் கண்ணன் (பாலம் - நெற்றி, லோசநம் - கண்). ஞாலம் - உலகம். குருபரன்-ஆசாரிய சிரேஷ்டன். இயற்றல்-செய்தல். (௨)

தன்னொரு மாயையால் யார்க்குஞ் சங்கரன்
பன்னருங் காட்சியிற் படாதொ ளிக்குமால்
மன்னுறு குருபரன் வடிவந் தாங்கியே
முன்னுறு காட்சியின் முளைக்கு மென்பவே.

(ப - ரை.) யார்க்கும்—, சங்கரன்—, பன் அரு - சொல்லுதற் கரிய, காட்சியிற் படாது - காட்சிக்ககப்படாமல், ஒளிக்கும் - (ஆன்ம மாயையால்) மறைவான் (எனினும்), மால் மன்னுறு - பெருமை நிலை பெற்றிருக்கிற, குருபரன் வடிவம் தாங்கி—, முன்னுறு காட்சியில் முளைக்கும் என்ப - (பக்தி சித்திப்பதன் பொருட்டு) எதிரே காணப்படுகிற காட்சிக்கு விடயமாய்த் தோன்றுவன் என்று சொல்லுவர் (பெரியோர்), எ - று.

(வி - ரை.) காட்சி - தோற்றம். (௩)

பிறப்பெனுங் கடலினைக் கடக்கும் பெற்றிசேர்
மறப்பரி தாயமெய்ஞ் ஞானமாக் கலஞ்
சிறப்புற வருள்குரு தேவன் வந்தனை
யுறப்பெறு கிலனெனின் வரானு வந்தரோ.

(ப - ரை.) பிறப்பு என்னும் கடலினைக் கடக்கும் பெற்றி சேர்—, மறப்பு அரிது ஆய—, மெய் ஞானம் - உண்மை (சிவ) ஞானமாகிய, மா கலம் - பெருங் கப்பலை, சிறப்பு உற அருள் குருதேவன்—, வந்தனை - வந்தனையை, உற பெறுகிலன் எனின் - மிகுதியாகப் பெறுனுயின், உவந்து வரான் - மகிழ்ந்து வரான், எ - று.

(வி - ரை.) பெற்றி - தன்மை. (ச)

எக்குரு பரன்கடைக் கண்ணி லின்பமா
மெய்க்குறி யுடையதோர் விமல மெய்ச்சிவம்
புக்கது வாயுறுந் தன்மை போந்துறு
மக்குரு பரனெ வரருச்சிக் கப்படான்.

(ப - ரை.) எ - எந்த, குருபரன் - குருபரனது, கடைக் கண்ணில்—, இன்பம் ஆம் மெய்க்குறி உடையதோர் விமல மெய் சிவம்—, புக்கு - பிரவேசித்து, அது ஆய் உறும் தன்மை போந்துறும் - அந்தப் பரசிவமாய்க் காணப்படும் தன்மை தோன்றுமோ, அக் குருபரன்—, எவர் - யாவரால், அருச்சிக்கப் படான், எ - று.

(வி - ரை.) கடைக்கண் - கடாக்ஷம். மெய்க்குறி - உண்மையாகிய அடையாளம். விமலம் - பரிசுத்தம். எவர் அருச்சிக்கப்படான் என்ற வினு எல்லாராலும் அருச்சிக்கப் படுவன் என்னும் பொருள் தோன்றநின்றது. (ரு)

சார்ந்தநல் லுருவமாய்த் தயங்கு பாசநோய்
மாய்ந்திட வருசிவ ஞான மாநிதி
யாந்தகை பெறுகுரு பரனுக் காக்கையா
லேய்ந்துள பொருளினு லிதஞ்செய் கிற்கவே.

(ப - ரை.) சார்ந்த - பொருந்திய, நல் உருவம் ஆய்—, தயங்கு - விளங்குகிற, பாச நோய் மாய்ந்திட வரு சிவஞான மா நிதி ஆம்—, தகை பெறு - பெருமை பெற்ற, குரு பரனுக்கு—, ஆக்கையால் - சரீரத்தினுலும், ஏய்ந்து உள்ள பொருளினுல் - இசைந்துள்ள பொருளினுலும், இதம் செய் கிற்க - நன்மை செய்யக் கடவன், எ - று.

(வி-ரை.) தயங்கல் - விளங்கல். மா நிதி - பெருஞ் செல்வம். குருபரன் - ஆசாரியன். பாசநோய் - ராகத்வேஷம். ஆக்கையால் இதம் செய்தலாவது தொண்டு செய்தல். பொருளினுல் இதம் செய்தலாவது அந்நபாநாதிகளால் உபசரித்தல். (சு)

ஏனுறக் கதிவிழை யியல்பி னேன்குரு
வாணையைக் கடக்கொணு ததைக் கடந்திடிற்
காணுறச் சகமெலாங் காட்டு மீசனு
தாணையைக் கடந்தவ னுவ னுணையே.

(ப - ரை.) ஏண் உற - பெருமை பொருந்த, கதி விழை-நற்கதியை விரும்புகிற, இயல் பினேன் - இயல்பையுடையவன், குரு ஆணையை கடக்கொணுது—, அதை கடந்திடின்—, காண் உற - காணும்படி, சகம் எல்லாம் காட்டும் ஈசனது ஆணையை கடந்தவன் ஆவன்—, ஆணையே - சத்தியமாகவே, எ - று.

(வி - ரை.) கதி - சிவகதி. ஆணை - ஆஜ்ஞை. (எ)

உபயத்தலம் - முற்றும்.

ஓம் ஶூலபாணயே நம:.

# பதினொன்றாவது

# (கக.) திரிவிதசம்பத்தித்தலம்.



[அதாவது—ஸ்வதந்த்ரனான ஸ்ரீபரமேஸ்வரன் சகல பக்தர்களை அநுக்ரஹிக்கும் பொருட்டுக் குருலிங்க ஜங்கமாத்மகனாகவும் போகமோக்ஷங்களைத் தருபவனாகவு மிருக்கிறானென் றறிந்து, குரு லிங்க ஜங்கமங்களில் எக்காலத்தும் பக்தி பாவனை அர்ச்சனைகளினால் சமான புத்தியுள்ள சிவபக்தனே த்ரிவித ஸம்பத்துள்ளவனென்று சொல்லப்படுவன் என்பது.]

கலிவிருத்தம்.

செவ்விய குருவிடைச் சிவலிங் கத்திடை
யெவ்வகை யன்புட னினிய செய்துறு
மவ்வகை சங்கமந் தனினு மன்பினை
வெவ்விய வினைதபு விவேகி செய்யுமால்.

(ப - ரை.) வெவ்விய வினைதபு விவேகி - கொடிய வினையொழித்த விவேகியானவன், செவ்விய குருவிடை—, சிவலிங்கத்திடை—, எவ்வகை அன்புடன்—, இனிய - இனியவற்றை, செய்துறும் - செய்வானோ, அவ்வகை - அப்படியே, சங்கமந்தனினும்—, அன்பினைச் செய்யும் - அன்பு செய்வான், எ - று.

(வி - ரை.) செவ்விய குரு - கல்வி கேள்வி யறிவொழுக்கங்களிற் செவ்வையாகிய குரு ( ஸத்குரு ). குருவிடை சிவலிங்கத்திடை என்பவற் றீற்றில் எண்ணும்மைகள் தொக்கன. இனிய என்றது தொண்டு முதலியவற்றை. செய்துறும் என்பத னீற்றில் ஓகாரம் தொக்கது. (க)

அருணிலை நின்றுயி ரளிக்கு மீசனு
மொருவனே போகமும் வீடுமொன் றுறத்
தருவது செயக்குரு லிங்க சங்கம
வுருவுகொண் டுலகினி னுலவு மென்பவே.

(ப - ரை.) அருள் நிலை நின்று - அரு ணிலையில் நின்று, உயிர் - சீவர்களை, அளிக்கும் - காப்பாற்றுகிற, ஈசன் ஆம் ஒருவனே - ஈசுவரனாகிய வொருவனே, போகமும் வீடும் - போகத்தையும் மோக்ஷத்தையும், ஒன்றுற - பொருந்த, தருவதுசெய - கொடுக்கும் பொருட்டு, குரு லிங்க சங்கம உருவு கொண்டு—, உலகினில் உலவும்—, என்ப - என்று சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) காப்பாற்றற் குரியவன் அருட் பெருக்கினை யுடையனாயினன்றி அக் காப்புத் தொழில் முற்றுறா தென்பது தோன்ற 'அருணிலை நின்றுயிரளிக்கு மீசன்' என்றார். தருவதுசெய - ஒரு சொல். (உ)

சரத்தொடு திரமெனத் தரித்தி ரண்டுரு
வருட்சிவ னுலகினி லருள்செய் துற்றிடுந்
திரத்தினி லன்புசெய் செய்கை போலவே
சரத்தினு மன்புசெய் தன்மை வேண்டுமால்.

(ப - ரை.) அருள் சிவன் - அருளுருவாகிய சிவபெருமான், சரத்தொடு திரம் என - சரத்தோடு திரம் என்று சொல்லும்படி, இரண்டு உரு தரித்து - இரண்டு லிங்கரூபம் தரித்து, உலகினில்—, அருள் செய்து உற்றிடும் - பக்தருக்கு அருள் செய்துகொண்டிருப்பன், (ஆதலால்) திரத்தினில் - திரலிங்கத்தில், அன்பு செய் செய்கை போலவே—, சரத்திலும் - சரலிங்கத்திலும், அன்பு செய் தன்மை வேண்டும்—, எ - று.

(வி - ரை.) சரம் திரம் என்பன ஜங்கமலிங்கம் ஸ்தாவரலிங்கம் என்பவற்றைக் குறித்தன. (௩)

மண்ணொடு சிலையெழு வாய்கொண் டாற்றிய
வண்ணுரு விலிங்கமா மதனின் மேற்பட
நண்ணிய சங்கம நாம நண்ணுறு
மெண்ணுத லருஞ்சிவ யோகி யென்பவே.

(ப - ரை.) மண்ணொடு சிலை எழுவாய் கொண்டு - மண்ணொடு கல் முதலியவற்றைக் கொண்டு, ஆற்றிய - செய்யப்பட்டது, அண் உரு இலிங்கம் ஆம் - பொருந்திய உருவுடைய லிங்கமாகும், அதனின் மேற்பட நண்ணிய சங்கம நாமம் - அதற்கு மேலே பொருந்திய ஜங்கமலிங்கம் என்னும் பெயரை, எண்ணுதல் அரு - மதித்தற் கருமையாகிய, சிவயோகி—, நண்ணுறும் - அடைவான், என்ப - என்று சொல்லுவர் (பெரியோர்), எ-று.

.(வி - ரை.) ஆற்றியது என்பது ஈறு தொகுத்தலாய் ஆற்றிய என நின்றது. அண் உரு லிங்கம் - ஸ்தாவரலிங்கம். எண்ணுதலரு சிவயோகி - யாவராலும் பெருமை மதித்தற் கரிய சிவயோகி.

லிங்கத்திற்கு ஜங்கமமே முகமாகும். ஜங்கமத்தின் முகத்தினால் இந்தலிங்கத்திற்கு த்ருப்தியுண்டாகும்.

பின்னும், ஆதிமத்யாந்த ஶூந்யனும், நித்யனும், பரிபூர்ணனும், நிராமயனும், சகுண நிர்க்குணனும், ஹரிப்ரஹ்ம ருத்ராதி பூஜ்யனும், அணிமாத்யஷ்டசித்திகளும் மஹாபத்மாதி நவநிதிகளும் அஷ்டைஶ்வர்யங்களும் இவைகளின் ஸ்ருஷ்டிக்குக் காரணனும் ஆனவனே ஜங்கமன் எனப்படுவன்.

பின்னும், ஜங்கம என்பதில் "ஜம்" என்பதினால் ஸத்ரூபம், நாதரூபம், குருரூபம், அபேத்யம், ப்ரஹ்மா, ஈஶ்வரன், ருக் என்றும், "க" என்பதினால் சித்ரூபம், பிந்துரூபம், லிங்கரூபம், அகோசரம், விஷ்ணு, சதாசிவன், யஜுர் என்றும், "ம" என்பதினால் ஆநந்தரூபம், கலாரூபம், ஜங்கமரூபம், மகத்தரம், ருத்ரன், பரசிவன், ஸாமம் என்றும் பொருள் படும்.

சிவனே ஜங்கமாகாரத்தில் பஞ்ச முத்ராதி பூஷணங்களைத்தரித்து உதித்தவன் என்றும், இவ்வுலகத்திற்குக் கர்த்தா எனப்பட்டு ஜங்கமரூபத்தினால் ப்ரகாசிப்பன் என்றும் வீராகமத்தில் கூறப்பட்டுள்ளது.

ஜடை, கரஸ்தலலிங்கம், ஸ்ரீபஞ்சாக்ஷரீ மந்த்ரத்தை ஜபிக்கும் நா, பஸ்மாங்கித தேஹம், கண்டத்தில் ருத்ராக்ஷமாலிகை, சாந்திகலையுள்ள முகத்தில் கர்ணகுண்டலங்கள், ஆதிமத்யாந்த விரஹிதம், மஹாநந்தரூபம் ஆகிய இவற்றைத் தரித்துள்ளவனே அநாதி ஜங்கமன் என்று சொல்லப்படுவேன். (௪)

மந்திரங் கொண்டுற வந்தி ருந்திடு
மெந்தையிங் கசரமா மிலிங்க மேனியி
னிந்தையில் சங்கமந் தன்னி னீக்கற
நந்திநஞ் சங்கர னண்ணு மென்றுமே,

(ப-ரை.) எந்தை - எமது தந்தையாகிய சிவபிரான், இங்கு - இவ்வுலகத்தில், அசரம் ஆம் - அசரமாகிய, இலிங்க மேனியில் - லிங்கரூபத்தில், மந்திரம் கொண்டு - மந்திரத்தால், உற வந்து இருந்திடும் - பொருந்தி வந்திருப்பன், நிந்தை இல் - பழிப்பற்ற, சங்கமந் தன்னில் - ஜங்கம (லிங்க) த்தில், நீக்கற - ஒழியாமல், நந்தி நம் சங்கரன்—, என்றும்—, நண்ணும் - பொருந்துவன், எ-று.

(வி-ரை.) கொண்டு-மூன்றுவதன் சொல்லுருபு. நந்தி நம் சங்கரன்-மஹேஸ்வரன்.

ஒன்றொரு பொருள்சிவ யோகிக் கீந்திடிற்
பொன்றுத றவிர்பல னாகப் போந்துறு
மென்றறி ஞிவன்றனக் கெத்தி றத்தினு
நன்றுற வளிப்பதே நன்று நன்றரோ.

(ப-ரை.) ஒன்று ஒரு பொருள் - ஓரானொரு பொருளை, சிவயோகிக்கு ஈந்திடின்—, பொன்றுதல் தவிர் - அழிவில்லாத, பலன் ஆக போந்துறும் - பயனாக வந்து பலிக்கும், என்றறிஞர் - என்று அறிஞர் சொல்லுதலால், இவன் தனக்கு - இந்தச் சிவயோகிக்கு, எத்திறத்தினும் - எவ்வகையாலும், நன்று உற அளிப்பதே - நன்மை யுண்டாகக் கொடுப்பதே, நன்று நன்று—, எ-று.

(வி-ரை.) நன்று நன்று என்னு மடுக்கு மிகவும் நன்றென்னும் பொருட்டு. எவ்வகையாலும் என்றது பொன்முதலிய திரவிய ரூபமாயும், தண்டுல முதலிய சாமக்ரி ரூபமாயும் என்றபடி. (௬)

ஒப்பறு மொருசிவ யோகி பூசையா
லெப்பய னடைகுவ னியாவ னன்னது
தப்பறு பலனெனச் சகல நூலினு
மெய்ப்பொரு ளுணர்ந்தவர் விளம்பு வாரரோ.

(ப-ரை.) யாவன் - எவனொருவன், ஒப்பு அறும் - நிகரற்ற, ஒரு சிவயோகி பூசையால் - ஒரு சிவயோகியைப் பூஜித்தலால், எப்பயன் அடைகுவன் - எந்தப் பயனை யடைவானோ, அன்னது - அந்தப் பயனே, தப்பு அறு பலன் என - தவறாத பயனென்று, சகல நூலினும் மெய் பொருள் உணர்ந்தவர் - எல்லா நூல்களிலுமுள்ள உண்மைப் பொருளை யறிந்த அறிஞர், விளம்புவார் - சொல்லுவர், எ-று.

(வி-ரை.) தப்பு அறு - அக்ஷயமான. (௭)

உகந்துள பரசிவ யோகி வந்துறி
னிகழ்ந்தன னிருந்தவ னெய்துந் தீநெறி
புகழ்ந்தவன் றனைச்சிவன் போலவே யுனி
மகிழ்ந்துயர் பூசனை மதிஞர் செய்வரே.

(ப-ரை.) உகந்துள - மகிழ்ந்திருக்கிற, பர சிவ யோகி வந்து உறின்—, இகழ்ந்தனன் இருந்தவன் - (அவனை) அவமதித்து இருந்தவன், தீ நெறி எய்தும் - தீ நெறியை யடைவன், (ஆதலால்) அவன் தன்னை—, மதிஞர் - அறிவுடையோர், சிவன்போலவே உன்னி—, புகழ்ந்து—, மகிழ்ந்து—, உயர்-உயர்ந்த, பூசனை செய்வர்—, எ-று.

(வி-ரை.) தீநெறி - பிறவி நெறி (நரக ஹேதுவாகிய மார்க்கம்). மதிஞர் என்பதில் ஞகரம் பெயரிடை நிலை. உன்னி - பாவித்து. (௮)

திரிவிதசம்பத்தித்தலம் - முற்றும்.

உ

ஓம் கட்வாங்கினே நமஃ

## பன்னிரண்டாவது

## (கஉ.) சதுர்விதசாரத்தலம்.

—oo§oo—

[அதாவது:—குரு லிங்க ஜங்கம பூஜையுடன் அவர்களின் ப்ரஸாதங்களையும் ஸ்வீகரிக்கும் சிவபக்தனே சதுர்வித ஸாரமுள்ளவனென்று சொல்லப்படுவன் என்பது.]

கலிவிருத்தம்.

பத்தி கொண்டரன் பாதப் புனலெனச்
சத்தெ னுங்குரு சங்கம மெல்லடிக்
குய்த்த வொண்புன லுங்களித் துண்பரா
னித்த லுஞ்சிவ நேச மடைந்துளார்.

(ப - ரை.) நித்தலும் - நாள்தோறும், சிவநேசம் அடைந்துளார்—, பத்தி கொண்டு- பக்தியினால், அரன் பாதப் புனல் என - சிவபாத தீர்த்தம் போலவே, சத்து என்னும் - சத்தென்று சொல்லப்படுகிற, குரு சங்கமம் - குரு ஜங்கமங்களின், மெல் அடிக்கு உய்த்த- மிருதுவாகிய திருவடியின்மேல் சமர்ப்பித்த, ஒள் புனலும் - ஒட்பமாகிய தீர்த்தத்தையும், களித்து உண்பர் - மகிழ்ந்து உட்கொள்வர், எ - று.

(வி - ரை.) சிவநேச மடைந்துளார் - சிவபக்தர். குரு ஜங்கமங்களை வேறெடுத்தோதினமையான் அரன் பாதப் புனல் என்பதற்கு சிவலிங்கப் பெருமானது ஸ்ரீபாததீர்த்தமெனக்கோடலமையும். ஸ்ரீபாததீர்த்த ஸ்வீகாரத்தை, தீர்த்தபரிக்ரஹம் எனவுங்கூறுப. அங்கத்தில் குருபக்தி, மனதில் லிங்கபக்தி, அறிவில் ஜங்கமபக்தி, பரிணமத்தில் ப்ரஸாத பக்தி சம்பந்தமே சதுர்வித ஸாரமெனினுமாம்.

ப்ரஸாதம்:—தத்வ தீபிகையின் வாக்யத்தில் சிவப்ரஸாதமே முக்தி மூலமானது. சிவ லிங்கத்திற்கும் சிவனுக்கு ப்ராணஸ்வரூபமான ஜங்கமத்திற்கும் விவரிக்கு மிடத்தில் அந்த ஜங்கமத்தின் ப்ரஸாதமே போக்யமென்று சொல்லப்படும். சரலிங்க ப்ரஸாதமின்றி எவன் அந்நத்தை புஜிக்கிருனோ அவனுக்குக் கோடி ஜந்மங்களிலும் முக்தி யுண்டாகாது. ஆதலால், ஹஸ்தத்திலிருக்கும் லிங்கத்திற்கு ஜங்கம ப்ரஸாதத்தை யர்ப்பித்து ஸ்வீகரித்தல் ஶ்ரேஷ்டமெனப்படும். இந்தக் காரணத்தினு லன்றோ குரு லிங்க ஜங்கமம் என்று சொல்லப்படுவது. இவனுக்கு உலகில் சமானன் எவன். ஆதலால், லிங்கத்துடன் ஜங்கம ப்ரஸாதத்தையும் ஸ்வீகரித்தல் வேண்டும். லிங்கத்திற்கு ப்ராண ஸ்வரூபமான ஜங்கம ப்ரஸாதமானது அவ்யக்தமென்று சொல்லப்படும். லிங்க ப்ரஸாதமானது வ்யக்தமென்று சொல்லப்படும். இந்த லிங்க ஜங்கமத்தினுல் கொடுக்கப்பட்டதே அகண்டித தத் ப்ரஸாதமென் றறியப்படும். இந்தச் சராசர ப்ரஸாதமே ஸ்வீகரித்தற்கு யோக்யமானது. இந்த லிங்க ஜங்கம ப்ரஸாதத்தை எவன் ஸ்வீகரிப்பானோ அவனுல் ஜகத்து பாவநமாகும். சிவ நிர்மால்யத்தினுல் எல்லாருக்கும் நிர்மலமாகும். ஆதலால், மஸ்தகத்தில் நிர்மால்யத்தைத் தரித்தல் வேண்டும். பாதோதக ஜங்கம ப்ரஸாதத்தை ஸ்வீகரிப்பதாயின் ஸர்வ பாபங்களும் நாசமாகுமென்று வீராகமத்தில் மஹாதேவிக்குப் பரசிவன் உபதேசித்திருக்கின்றனர். இதன் விரிவை ஆகமாதிகளில் காணலாம்.

குருபாத தீர்த்தத்தைச் சிரத்தினில் தரிப்பதாயின் அநேக தீர்த்தங்களின் பலனைத் தருவதாகும். குருபாதோதகத் துளியின் ஆயிரத்திலொரு கூறுனது ஸப்த ஸாகரங்களிலிருக்கும் தீர்த்தங்களைத் தரித்துக்கொண்ட பலனைத் தருவதாகும். (க)

பொங்கு றும்புனி தத்திற் புனிதமாய்
மங்க லந்தனின் மங்கல மாகியே
சங்க ரன்றிருத் தாட்புனற் றாரண
மிங்க ளித்திடுஞ் சித்திகள் யாவுமே.

(ப-ரை.) சங்கரன் - சிவபெருமானது, திரு தாள் புனல் தாரணம் - ஸ்ரீபாததீர்த்த தாரணமானது, பொங்குறும் - விளங்குகிற, புனிதத்தில் புனிதம் ஆய்—, மங்கலந் தனில் மங்கலம் ஆகி—, இங்கு - இவ்வுலகத்தில், சித்திகள் யாவும் அளித்திடும் - எல்லாச் சித்திகளையும் கொடுக்கும், எ - று.

(வி - ரை.) திருத்தாட்புனற் றாரணம் - ஸ்ரீபாததீர்த்த பரிக்ரஹணம். புனிதத்திற் புனிதம் - மிக்க பரிசுத்தம். மங்கலந்தனில் மங்கலம் - மிக்க மங்கலம். (உ)

அத்த னந்தி யணிந்த மலரொடு
பத்தி ரங்க டலையிற் பரித்துள
சுத்த னிங்கோர் கணத்தினிற் றூங்குகை
மத்த வேழ மகம்பய னண்ணுவான்.

(ப - ரை.) அத்தன் நந்தி - அத்தனாகிய சிவபிரான், அணிந்த மலரொடு பத்திரங்கள் - தரித்த மலர்களோடு பத்திரங்களையும், தலையில் பரித்துள்ள - சிரசில் தரித்துள்ள, சுத்தன் - சுத்தனானவன், இங்கு - இவ்வுலகில், ஓர் கணத்தினில்—, தூங்கு - தொங்குகிற, கை - துதிக்கையினையுடைய, மத்தம் - மதித்த, வேழ மகம் - கஜமேத யாகத்தின், பயன் - பேற்றை, நண்ணுவான் - அடைவான், எ - று.

(வி - ரை.) மத்த வேழம் - மத யானை. மகம் - யாகம். பேறு - லாபம். மத்தவேழ மகம் என்றது மத யானையைக் கொன்று செய்யும் யாகம் என்றபடி. மேதம் - கொலை. தூங்கு கை மத்தவேழ மகம் என்பதைப் பௌண்டரீகயாகம் எனக் கூறுவர் வடநூலார்.

உருத்தி ரன்கொளு மோதநங் கொள்கமற்
றுருத்தி ரன்பெற் றுயிர்ப்ப துயிர்க்கவோ
ருருத்தி ரன்பரு கொண்புன லுண்கவென்
றுரைத்தி டுங்கொண் டுயர்சொற் சுருதியே.

(ப - ரை.) உருத்திரன் கொள்ளும் - உருத்திரன் அமுது செய்த, ஓதநம் - பிரசாதத்தை, கொள்க (என்று) - கொள்கவென்றும், உருத்திரன்—, பெற்று உயிர்ப்பது - எடுத்து முகர்வதை, உயிர்க்க (என்று) - முகர்கவென்றும், ஓர் உருத்திரன் - ஒப்பற்ற உருத்திரன், பருகு - பருகின, ஒள் புனல் - நன்னீரை, உண்க (என்று) - பருகுகவென்றும், சொல் கொண்டு உயர் சுருதி - சொற்களைக்கொண்டு உயர்ந்த வேதமானது, உரைத்திடும் - சொல்லாநிற்கும், எ - று.

(வி - ரை.) ஓதநம் - சோறு. உயிர்த்தல் - முகர்தல். பருகல் - குடித்தல். வேதம் சொல்லுருவா யிருத்தலால் அதனை சொற்கொண்டுயர் சுருதி என்றார். (ச)

நற்ப ழுங்கடி நாண்மலர் பத்திர
மெற்ப தம்புன லேமுதல் யாவையுந்
தற்பெ ருஞ்சிவ லிங்கந் தனக்கரோ
வர்ப்பி தஞ்செய்து கொள்ளுவ னன்பினேன்.

(ப - ரை.) அன்பினேன் - சிவபக்தனானவன், நல் பழம்—, கடி - வாசனையுள்ள, நாள் மலர் - புதிய மலர், பத்திரம்—, எல் - ஒளியையுடைய, பதம் புனல் - அர்க்கம் நீர்,

முதல் - முதலாகிய, யாவையும் - எல்லாவற்றையும், தன் - தன் (சரீரத்தில் தரிக்கப்பட்டுள்ள), பெரு - பெருமை பொருந்திய, சிவலிங்கம் தனக்கு—, அர்ப்பிதம் செய்து—, கொள்ளுவன் - (பின்பு தான்) நுகர்வன், எ - று.

(வி - ரை.) ஈண்டு, இச்செய்யுளைக் கவனிக்க:—

**பிரபுலிங்கலீலை.**

குடிப்பன விழுங்குவ கூறெ யிற்றினாற்
கடிப்பன நக்குவ வனைத்துங் கைம்மலர்
அடுத்துள சிவன்றனக் கர்ப்பித் துண்பவன்
விடுத்தவன் மேல்வரும் வினைகள் யாவுமே.

அர்ப்பிதம் செய்து - சமர்ப்பித்து. நுகர்வன் - புஜிப்பன். தற்பெருஞ் சிவலிங்கம் - இஷ்டலிங்கம். (ரு)

உலக னைத்தினு மோங்கொளி யாகியே
யிலகு மெய்ச்சிவ லிங்க விறைபெருந்
தலைமை பெற்றிட லாலவன் றுனுகர்
பலவு முற்றிடல் பத்தர்க் கியல்பரோ.

(ப - ரை.) உலகு அனைத்தினும்—, ஓங்கு - உயர்ந்த, ஒளி ஆகி இலகு - ஒளியாய் விளங்குகிற, மெய் - உடலில் தரித்த, சிவலிங்க இறை - சிவலிங்கப்பெருமான், பெரு - பெரிய, தலைமை பெற்றிடலால்—, அவன் நுகர் பலவும் - அவன் நுகர்ந்த பலவற்றையும், உற்றிடல் - நுகர்தல், பத்தர்க்கு இயல்பு—, எ - று.

(வி - ரை.) தலைமை-முதன்மை. நுகர்தல்-உண்டல். இயல்பு-இயற்கை (முறைமை.) மெய்ச்சிவலிங்கவிறை - இஷ்டலிங்கம். (சு)

தீத கற்றுஞ் சிவனிரு மாலிய
மேதி னிக்கண் விமலற் றரித்துளோ
ராத ரத்தி னடைகுவ தன்றிமற்
றேதி லர்க்கஃ தெய்த வொண்ணதரோ.

(ப - ரை.) தீது அகற்றும் - தீமையை யொழிக்கிற, சிவன் நிருமாலியம்—, மேதினி கண்—, விமலன் தரித்துளோர் - விமலனாகிய சிவலிங்கப்பெருமானைத் தரித்துள்ளவர்கள், ஆதரத்தின் - அன்பினால், அடைகுவதன்றி—, ஏதிலர்க்கு - அயலார்க்கு, அஃது - அது, எய்தவொண்ணது - அடையவொண்ணது, எ - று.

(வி - ரை.) மேதினி - உலகு. ஆதரம் - அன்பு. அது என்றது சிவநிருமாலியத்தை. சிவநிருமாலியம் பெறத்தக்கவர் வீரசைவரொருவரே என்று இதனால் கூறப்பட்டது. (எ)

அண்ண லீசனுக் கர்ப்பிதஞ் செய்துபின்
னுண்ணு மோதநத் தோரவி ழொன்றினுக்
கெண்ணு மாபரி யாக விரும்பய
னண்ணு வார்சிவ பத்தர் நயந்தரோ.

(ப-ரை.) சிவபத்தர்—, அண்ணல்-பெரியோனாகிய, ஈசனுக்கு அர்ப்பிதம்செய்து—, பின் - பிறகு, உண்ணும் - உண்கிற, ஓதநத்து - அன்னத்தில், ஓர் அவிழ் ஒன்றினுக்கு - ஒப்பற்ற வொரு பருக்கைக்கு, எண்ணும் - மதித்தற்குரிய, மா - பெரிய, பரியாகம் - அசுவமேதயாகத்தின், இரு பயன் - பெரும்பேற்றை, நயந்து நண்ணுவார் - விரும்பிப்பெறுவார், எ - று.

(வி - ரை.) பெரும்பேறு - பெரிய ஊதியம். நயத்தல் - விரும்புதல். (அ)

பரம னுண்டு பவித்திர மாயது
நிரும லம்பெற லானிரு மாலியம்
பெருமை தங்கு நிருமலன் பெற்றுணுங்
கருமை தங்கு கயவர்க் கடாதரோ.

(ப - ரை.) பரமன் உண்டு—, பவித்திரம் ஆயது - பரிசுத்தமானது, நிருமலம் பெறலால் - நிர்மலத்தை யடைதலால், நிருமாலியம்—, பெருமை தங்கும் நிருமலன்—, பெற்று உண்ணும்—, கருமை தங்கு - அஞ்ஞானந்தங்கிய, கயவர்க்கு - கீழ்மக்களுக்கு, அடாது - தகாது, எ - று.

(வி - ரை.) பரமன் - மேலானவன் (சிவபெருமான்). பெருமைதங்கும் நிருமலன் - சிவபக்தன். கருமை - ஆகுபெயர். (கூ)

சுத்த மாகுஞ் சுடர்சிவ னுண்ணுபு
வைத்த வானிரு மாலியங் கொண்டுறப்
பத்தி யோவிய பாவிக ளாமெனக்
கைத்து ளோரதி காரிக ளல்லரே.

(ப - ரை.) பத்தி ஓவிய - பக்திநீங்கிய, பாவிகள் ஆம் என - பாவிகளென்று, கைத்துள்ளோர் - (பெரியோர்களால்) கடியப்பட்டவர்கள், சுத்தம் ஆகும் - சுத்தமாகிய, சுடர் - ஒளியுருவாகிய, சிவன்—, உண்ணுபு வைத்த - நுகர்ந்து வைத்த, வால் - பரிசுத்தமாகிய, நிருமாலியம் கொண்டு உற - நிருமாலியங்கொண்டு நுகர்தற்கு, அதிகாரிகள் அல்லர்—, எ - று.

(வி - ரை.) ஓவுதல் - நீங்குதல். கைத்தல் - வெறுத்தல். உண்ணுபு என்பது செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். அதிகாரிகள் - உரியவர்கள். (க0)

அருளி லிங்கத் தரும்பிர சாதத்தால்
வருமி ரும்பலன் வண்குரு சங்கமந்
தருமி ரும்பிர சாதமுந் தந்திடு
மொருமை கொண்டுவந் துண்பவர்க் கென்றுமே.

(ப - ரை.) என்றும் - எப்பொழுதும், ஒருமை கொண்டு - மன வொருமைப்பாடு பெற்று, உவந்து உண்பவர்க்கு—, அருள் - அருளுருவாகிய, இலிங்கத்து - சிவலிங்கத்தின், அரு பிரசாதத்தால்—, இரு பலன் - பெரும்பயன், வரும் - உண்டாகும், (அதுபோலவே) வள் - வளமாகிய, குரு சங்கமம் - குரு ஜங்கமங்கள், தரும் - தருகிற, இரு - பெருமையுள்ள, பிரசாதமும்—, தந்திடும் - (பயனைக்) கொடுத்திடும், எ - று.

(வி - ரை.) உவந்து-விரும்பி. பிரசாதமும் என்றவும்மை இறந்தது தழீஇய வெச்சம்.

ஆத லானல் லருட்சிவ லிங்கமெய்
நாத னாகிய நற்குரு சங்கமங்
காத லாகிக் கசிந்து தொழுதவர்
சாத மாதர விற்றரித் துண்கவே.

(ப - ரை.) ஆதலால்—, நல் அருள் சிவலிங்கம்—, மெய் நாதனாகிய நல் குரு—, சங்கமம்—, (என்பவைகளில்) காதல் ஆகி—, கசிந்து - மனமுருகி, தொழுது—, அவர் சாதம் - அவரது பிரசாதத்தை, ஆதரவின் - அன்போடு, தரித்து உண்க - ஏற்றுண்ணக் கடவன், எ - று.

(வி - ரை.) நல் குரு - ஸதாசார்யன். காதல் - விருப்பம். தொழுது - பூஜித்து வணங்கி. தரித்தல் - கையாரவேற்றல். நல் அருட் சிவலிங்கம் என்றது இஷ்டலிங்கமாகிய மஹாதேவனை. ஜங்கமம் என்றது சிவயோகியை.

ஜங்கம லக்ஷணத்தைப்பற்றி திரிவித சம்பத்தித்தலத்திலும் பிரசாத சிறப்பைப்பற்றி இத்தலத்திலும் கூறப்பட்டுள்ளன. இக்கருத்து அடியில் வரும் செய்யுட்களாலும் விசதமாகும்:—

பிரபுலிங்கலீலை.

புலம்பி கைத்திருக் கின்றவப் போதினி
லிலிங்க முங்கர முந்திகழ் வெய்துற
நலங்கொ ளல்லம னண்ணின னண்ணலுங்
கலங்கி நின்றவக் காரிகை கண்டனள்.

குகையிதய மதன்கணம ரிறையீச னென்றுபொருள் குறித்துக் கொண்மோ
நிகழுனைய குகேசமொழி யுடையன்யான் றெனனவே நிமலன் கூற
வகமகிழ முகமலர்ந்து சித்தனறை குவனீயே யாகி லுன்றன் [றுன்.
முகையவிழ்மென் மலர்க்கரத்திற் சிவலிங்கங் கொண்டதென்கொன் மொழிதியென்

பிறந்தபயன் பெறவுலக ரெனைக்கண்டு கொண்டுமனம் பிறழ்த லின்றிச்
சிறந்தசிவ லிங்கமலர்க் கரங்கொண்டு பூசனையாஞ் செய்ய வேண்டி
நிறைந்தவென துருவாகு மிக்குறிகைக் கொண்டனன்யா னீங்கா தென்று
மறிந்துதெளி குதிமனமென் றருள்செய்தெங் குருதேவ னறைய லுற்றுன்.

பந்த மகன்ற சிவபத்தர் பாதம் விளக்கும் புனற்குழியில்
வந்து பிறந்து மூழ்கியதில் வைகும் புழுவின் பெரும்பேறு
முந்து கங்கை முதலவா முற்றும் படிந்து தீவினைகள்
சிந்து மந்த ணுளருமே சேரா ரென்று மறை சாற்றும்.

தாய்க்கு வழுவின் மகளிர்க்குத் தந்தை தனக்குப் பசுவிற்குச்
சேய்க்கு மறையோர் தமக்கிடர்செய் தீர்வில் கொடிய பாதகமும்
போக்கு மிமைப்பிற் கரணத்தைப் புனித மாக்கிச் சிவமாக
ஆக்கு மரன்றன் பிரசாத மாயி னதற்கு நிகருண்டோ. (கஉ)

சதுர்விதசாரத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் விஷ்ணுவல்லபாய நமः

பதின்மூன்றாவது

## (கங.) உபாதிதாநத்தலம்.

[ அதாவது - மேற்கூறிய நான்குவித ஸாரமுள்ளவனும், பலாபேக்ஷயினால் குரு லிங்க ஜங்கமங்களுக்குத் தானம் செய்பவனுமான சிவபக்தனே ஸோபாதிகதாநி என்று சொல்லப்படுவன் என்பது.]

தேசி கற்குஞ் சிவலிங்கத் திற்குமா
லாச கற்று மருட்சிவ யோகிக்கும்
பேச லுற்ற வவர்பிர சாதவூ
ணேச முற்றவர் நின்று கொடுக்கவே.

(ப - ரை.) தேசிகற்கும் - குருவுக்கும், சிவலிங்கத்திற்கும்—, மால் ஆசு அகற்றும் - மயக்கமாகிய குற்றத்தை யொழித்த, அருள் சிவயோகிக்கும்—, பேசலுற்ற அவர் - சொல்லப்பட்ட அவர்களுடைய, பிரசாத ஊண் - பிரசாதவுணவை, நேசம் உற்றவர் - அன்போடுண்கிற பக்திமான்கள், நின்று கொடுக்க - நின்று (அவர் வேண்டியவற்றைக்) கொடுக்கக் கடவர், எ-று.

(வி-ரை.) ஊண் முதனிலை திரிந்த தொழிலாகுபெயர். கொடுக்க என்பது தன்வினை பிறவினைகளுக்குப் பொதுவாய் நின்று, தான்கொடுக்க வேண்டுமென்றும் தன்னாலியலாவழி பிறரைக்கொண்டு கொடுப்பிக்கவேண்டு மென்றும் நியமித்தவாறு காண்க. சிவயோகிக்கும் ஜங்கமத்திற்கும் தன் சக்திக்கு இயன்றளவில் தாநம் செய்ய வேண்டும் என்பதாம். (௪)

தாந மூவகை தக்கசோ பாதிக
மேனை மாநிரு பாதி சகசமென்
றூன மாம்பல னுன்னி யளித்தலே
ஞான மேவிலர் நச்சுசோ பாதிகம்.

(ப - ரை.) தக்க - தகுதியாகிய, சோபாதிகம்—, ஏனை - மற்ற, மா - பெரிய, நிருபாதி - நிருபாதிகம், சகசம் - ஸஹஜம், என்று—, தாநம் மூவகை - தாநம் மூன்றுவகையாம், (அவற்றுள்) ஊனம் ஆம் - அழிவைப்பொருந்திய, பலன் உன்னி - பயனை நினைத்து, அளித்தலே - தருதலே, ஞானம் மேவிலர் - ஞானமில்லாதவர், நச்சு - விரும்புகிற, சோபாதிகம்—, எ- று.

(வி - ரை.) தாநம் மூவகைத்தென்பதும், அவற்றின்பெயர் சோபாதிகம் நிருபாதிகம் ஸஹஜம் என்பதும், அவற்றுள் முதற்கண்ணதாகிய சோபாதிகம் இத்தன்மைத் தென்பதும் இதனாற்கூறப்பட்டது. நிருபாதிகம் ஸஹஜம் என்பவற்றிலக்கணமேலே கூறுப. ஞானம் மேவிலர் என்றது மோக்ஷாபேக்ஷை யில்லாதவர் என்றபடி. (௫)

உபாதிதாநத்தலம் - முற்றும்.

௨

ஓம் பிபிவிஷ்டாய நமஃ

பதினைந்காவது

## (கரு) நிருபாதிகதாநத்தலம்.

—o—

[ அதாவது - தாநத்தைப்பெற்றுக் கொள்பவனுடைய சந்தோஷத்தின் பொருட்டுத் தாநம் செய்து, அவ்வித தாநத்தில் எவ்வித பலாபேக்ஷயு மில்லாமல் அது ஈச்வரார்ப்பணம் என்னும் புத்தியுள்ள சிவபக்தனே நிருபாதிகதாநி என்று சொல்லப்படுவன் என்பது.]

கலிவிருத்தம்.

விடுத்து நெஞ்சம் பலனை விழைதலை
யடுத்த வீசனுக் கர்ப்பித மென்றுனிக்
கொடுக்கு மந்தக் கொடையை யுரைப்பரிங்
கெடுத்து நன்னிரு பாதிக மென்னவே.

(ப - ரை.) பலனை விழைதலை - பயனை விரும்புதலை, நெஞ்சம் விடுத்து - மனம் விட்டு, அடுத்த ஈசனுக்கு அர்ப்பிதம் என்று—, உன்னி - நினைத்து, கொடுக்கும் - கொடுக்

', அந்தக் கொடையை—, நல் நிருபாதிகம் என்ன—, இங்கு - இவ்வுலகில், எடுத்து உரைப்பர் - சிறப்பித்துச் சொல்லுவர் (மேலோர்), எ - று.

(வி - ரை.) விழைதல் - விரும்புதல். அர்ப்பிதம்-சமர்ப்பணம். ஈசனுக்கு அர்ப்பிதம்-ஈஸ்வரார்ப்பணம். கொடை - ஈகை. அடுத்த ஈசன் என்றது இஷ்டலிங்கம் என்றபடி.

நிருபாதிகதாநத்தலம் - முற்றும்.

—

உ

ஓம் அம்பிகாநாதாய நமஃ

## பதினைந்தாவது

## (கரு.) சகசதாநத்தலம்.



[அதாவது - தாநம் பெற்றுக்கொள்ளத்தக்கவன் தாநம் செய்யத்தக்கவன் தாநம் செய்யும் பதார்த்தம் ஆகிய இவைகளெல்லாம் சிவஸ்வரூபமென்றும், தான் கொடுக்கத் தக்கவ னல்லவென்றும், குருவும் லிங்கமும் பூஜ்யமான ஜங்கமமும் தன் பதார்த்தத்தை ஸ்வீகரிக்கிறார்க ளென்றும் எண்ணி, அதனால் கர்த்ருத்வ புத்தி செய்யாது தாநம் செய்ப வனான சிவபக்தனே ஸஹஜதாநி என்று சொல்லப்படுவேன் என்பது.]

கலிவிருத்தம்.

இரத்தல் செய்பவ னீபவ னீத்துறு
மருத்த நின்றவ ருஞ்சிவ மென்றுதான்
கருத்த னென்னுங் கருத்தில னாகியே
தரித்தி டுஞ்செயற் றாநஞ் சகசமே.

(ப - ரை.) இரத்தல் செய்பவன் - யாசகம் செய்பவன், ஈபவன் - கொடுப்பவன், ஈத்துறும் - கொடுக்கப்படுகிற, அருத்தம் - பொருள் (ஆகிய எல்லாம்), நின்ற அரு சிவம் என்று - நிலைபெற்ற அரிய சிவமேயாமென்று (எண்ணி), தான் கருத்தன் என்னும் கருத்து இலன் ஆகி - தானே கர்த்தா என்னும் நினைவு இல்லாதவனாய், தரித்திடும் செயல் தாநம் - தரித்திடுகிற செய்கையையுடைய தாநம், சகசம் - ஸஹஜதாநமாம், எ-று.

(வி - ரை.) இரத்தல்செய்பவன் என்பது ஒரு சொல்லாய் இரப்பவன் என்னும் பொருள் பயந்து நின்றது. சிவம் - சிவசொரூபம். (க)

இறப்ப நன்கொடை யாவினு மேலதாய்ச்
சிறப்ப டைந்து செயுஞ்சக சக்கொடை
பிறப்பெ னுந்துர்ப் பிணிமருந் தாகிய
மறப்ப ருஞ்சிவ ஞானம் வழங்குமால்.

(ப - ரை.) இறப்ப - மிகுதியாக, நன்கொடை யாவினும் மேலதாய் - நற்கொடைக ளெல்லாவற்றினு மேலானதாகி, சிறப்பு அடைந்து—, செய்யும் சகசக்கொடை—, பிறப்பு என்னும் துர்ப்பிணி மருந்து ஆகிய—, மறப்பு அரு - மறத்தற் கரிய, சிவஞானம்வழங்கும்- சிவஞானத்தைக் கொடுக்கும், எ - று.

(வி - ரை.) நன்கொடை - குறிப்பறிந்தீதல். துர்ப்பிணி - கொடிய நோய். வழங்கல்- மிகுதியாய்க் கொடுத்தல். சகசக்கொடை சிவஞானத்தைக் கொடுக்கும் என்றியைத் துரைத்துக் கொள்க. (உ)

பத்த ரோடு பரமனுக் கீத்துறு
மெய்த்த தானஞ் சகசம் விமலனுக்
குய்த்த போதொன் றுதவுநற் பாத்திரத்
தத்த மாயிர மீயு மரும்பயன்.

(ப - ரை.) பத்தரோடு பரமனுக்கு ஈத்துறும் மெய்த்த தானம்—, சகசம் - ஸஹஜ தானமாம், விமலனுக்கு - சிவபிரானுக்கு, உய்த்த - சமர்ப்பித்த, போது ஒன்று - ஒரு புட்பமானது, நல் பாத்திரத்து - ஸத்பாத்திரத்தில், அத்தம் ஆயிரம் - ஆயிரம் பொன்னை, ஈயும்-கொடுப்பதனு லுண்டாகிற, அரு பயன் - அரிய பயனை, உதவும் - கொடுக்கும், எ-று.

(வி - ரை.) பத்தர் - சிவபக்தர். பரமன் - சிவபெருமான். ஈத்துறும் - கொடுக்கிற. மெய்த்த தானம் - உண்மையாகிய கொடை. (ங)

பாத்தி ரஞ்சிவ னுங்கன பாத்திரஞ்
சாத்தி ரந்தெரி தக்க குரவனு
மேத்தி யொன்றவர்க் கீயு மரும்பலன்
மூத்து நிற்கு முடிவில தாகியே.

(ப - ரை.) சிவனும்—, பாத்திரம் - (சற்) பாத்திரமாம், சாத்திரம் தெரி தக்க - சாத்திரம் தெரிந்த தகுதியாகிய, குரவனும் - ஆசாரியனும், கனபாத்திரம் - சற்பாத்திர மாம், (ஆதலால்) அவற்கு - அந்த குரவனுக்கு, ஒன்று - ஒருபொருளை, ஏத்தி - துதித்து, ஈயும் - கொடுத்தலா லுண்டாகிற, அரு பலன்—, முடிவு இல்லது ஆகி—, மூத்து நிற்கும்—, எ - று.

(வி - ரை.) மூத்து நிற்றல் - சிறந்து நிற்றல். (ச)

காணு றுஞ்சிவ னுகிக் கருநெறி
நாணு றுஞ்சிவ ஞான மருவியே
யேணு றுஞ்சிவ யோகிக் கிடும்பொருண்
மாணு றும்பர மார்த்த மெனப்படும்.

(ப-ரை.) காண் உறும் - காண்டற்குரிய, சிவன் ஆகி—, கருநெறி - பிறவிவழியானது, நாண் உறும் - நாணத்தகுந்த, சிவஞானம் மருவி - சிவஞானத்தையடைந்து, ஏண் உறும்-பெருமை பொருந்திய, சிவயோகிக்கு—, இடும் பொருள்—, மாண் உறும் - மாட்சிமை யடைந்த, பரமார்த்தம் எனப்படும்—, எ - று.

(வி - ரை.) சிவன் - சிவசொரூபன். நாணுறும் என்றது இங்கு அஞ்சுதற்குரிய என்னும் பொருள் பயந்து நின்றது. இடும் பொருள் - தரும் பொருள். பரமார்த்தம் - சிரேஷ்டமான பொருள். (ரு)

எக்கொ டைக்குமெ டுத்தசற் பாத்திர
மிக்க மெய்ச்சிவ யோகி மிகையென
வொக்க வொன்றிங் குரைப்பதி லேயிலை
பக்க நூல்கள் பலவினு மென்பவே.

(ப - ரை.) எ கொடைக்கும் எடுத்த சற்பாத்திரம்—, மிக்க மெய்-மிக்க வுண்மையை யுடைய, சிவயோகி—, மிகை ஒக்க என - உயர்வொப்பு என்று சொல்ல, ஒன்று இங்கு உரைப்பது இல்லை இல்லை—, பக்க நூல்கள் பலவினும்—, என்ப - என்று சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) சிவயோகிக்குக் கொடுக்குங்கொடையானது ஸத்பாத்ரத்திற் செய்த கொடையாகும் என்பதும், அதனிற்சிறந்த ஸத்பாத்ரம் இல்லை யென்பதும் இதன்கருத்து. பக்கம் பக்ஷம் என்னும் வடசொற்றிரிபு. (௬)

சாந்த மாய தனிச்சிவ யோகிகை
யேய்ந்த வோர்பிடி பிச்சை யிடும்பலன்
கூர்ந்த வோர்சத கோடி மகஞ்செயு
மாந்த ராலு மருவுத லன்றரோ.

(ப - ரை.) சாந்தம் ஆய தனி சிவயோகி கை-சாந்தத்தையுடைய ஒப்பற்ற சிவயோகியின் கையில், ஏய்ந்த - பொருந்திய, ஓர் பிடி பிச்சை இடும் பலன்—, கூர்ந்த - மிகுந்த, ஓர் - ஒப்பற்ற, சதகோடி மகம் செய்யும் - நூறுகோடி யாகங்களைச் செய்கிற, மாந்தராலும் - மக்களாலும், மருவுதல் அன்று - பொருந்தலாகாது, எ - று.

(வி - ரை.) சாந்தம் - சாந்தகுணம். கூர்ந்த கூர் என்னும் உரியடியாகப் பிறந்த இறந்தகாலப் பெயரெச்சம். மாந்தர் - நித்யபஹுவசநம். (எ)

திருத்தி யொண்சிவ யோகி பெறிற்சிவன்
றிருத்தி யெய்துவ னச்சிவ னெய்திய
திருத்தி கொண்டு செறியு முலகெலாந்
திருத்தி யெய்துஞ் சிவமய மாதலால்.

(ப - ரை.) ஒள் - ஒட்பத்தையுடைய, சிவயோகி திருத்தி பெறின்—, சிவன் திருத்தி எய்துவன்—, அ சிவன் எய்திய திருத்தி கொண்டு - அந்தச் சிவனடைந்த திருத்தியினால், செறியும் - நெருங்கின, உலகு எல்லாம் திருத்தி எய்தும்,—, (ஏனெனின் அவ்வுலகெல்லாம்) சிவமயம் ஆதலால்—, எ - று.

(வி - ரை.) ஈண்டு, இச்செய்யுளைக் கவனிக்க:—

பிரபுலிங்கலீலை.

உலகி லொருவன் சிவயோகி யுண்ட தம்ம சராசரமா
மலகி லுயிர்க ளெலா முண்ட தாகு மென்ன மறைகூறு
மிலகு முறையைக் காட்சியா னின்றிங் குணர வுணர்த்தினன்
கலக விணைக டீர்க்குமருட் கண்ணன் றிகழல் லமதேவன்.

சிவயோகி த்ருப்தியடைந்தால் சிவன் த்ருப்தி யடைவான், சிவன் த்ருப்தியடைந்தால் அவன் நிறைந்துள்ள எல்லாவுலகும் த்ருப்தியடையும் என்பது கருத்து. (அ)

ஆத லாற்சிவ யோகிக் கநுதிநங்
காத லாலெக் கருமத்தி னுனுமே
யோத நாதியி லொன்றுங் குறைவறத்
தீதி லாது திருத்திசெய் கிற்பரே.

(ப - ரை.) ஆதலால்—, சிவயோகிக்கு—, அநுதிநம்—, காதலால் - அன்போடு, எ கருமத்தினும்—, ஓதநம் ஆதியில் - அன்னமுதலியவற்றில், ஒன்றும் குறைவு அற - சிறிதும் குறைவில்லாமல், தீது இல்லாது - தீமையின்றி, திருத்தி செய்கிற்பர் - திருத்தி செய்வார் (பக்தர்), எ - று.

(வி - ரை.) அநுதிநம் - நாள்தோறும். ஓதநம் - சோறு. (௯)

தாவி லாதுயர் சச்சிதா நந்தமாய்
மேவு மீசனுக் காக விரும்பியே
யாவு நல்குவன் யாவ னவனையனே
யோவி லாத வொருபெருஞ் சங்கரன்.

(ப - ரை.) தாவிலாது - கெடுதலில்லாமல், உயர் - உயர்ந்த, சச்சிதாநந்தம் ஆய்—, மேவும் - பொருந்திய, ஈசனுக்காக விரும்பி—, யாவும் நல்குவன் - (உடல் பொருள் ஆவியாகிய) எல்லாப் பொருள்களையும் சமர்ப்பிப்பவன், யாவன் - எவனோ, அனையனே - அவனே, ஓவிலாத - நீங்காத, ஒரு - ஒப்பற்ற, பெரு சங்கரன் - பெரிய சங்கரனெனப் படுவோன். எ - று.

(வி - ரை.) சச்சிதாநந்தம் என்பது சத்து சித்து ஆநந்தம் எனப்பிரிக்கப்பட்டு, உண்மை அறிவு இன்பம் எனப்பொருள் தந்து நின்றது, இதனை அஸ்திபாதிப்ரியம் என்றுங் கூறுப வடநூலார். பெருஞ்சங்கரன் என்றது மாஹேசன் என்றபடி. (க0)

உரைத்த நன்னெறி யுற்றுயர் தாநியா
யருத்த மாமய னாதியர் வாழ்வினில்
விரத்த னாகும் விழுமிய பத்தனே
தரித்து நிற்குமா கேசத் தகைமையே.

(ப - ரை.) உரைத்த - சொல்லப்பட்ட, நல் நெறி உற்று - நல்வழியைப் பொருந்தி, உயர் - உயர்ந்த, தாநி ஆய் - (ஸஹஜ) தாநியாகி, அருத்தம் ஆம் - செல்வப் பெருக்குள்ள, அயன் ஆதியர் வாழ்வினில் - பிரமன் முதலியோரது செல்வத்தில், விரத்தன் ஆகும் - விரக்தனாகிய, விழுமிய பத்தனே - மேலானபக்தனே, மாகேசத்தகைமை - மாகேசன் என்னும் பெருமையை, தரித்து நிற்கும் - தரித்துநிற்பன், எ - று.

(வி - ரை.) தாநி - கொடையாளி. அயன் அஜன் என்னும் வடசொற்றிரிபு. விரக்தன் - வெறுப்புள்ளவன். (கக)

சகசதாநத்தலம் - முற்றும்.

---

இவ்விதமாய் எக்காரணத்தினால் பிண்டம், பிண்டஜ்ஞாநம், ஸம்ஸாரஹேயம், குருகாருண்யம், லிங்கதாரணம், விபூதி, ருத்ராக்ஷம், ஸ்ரீபஞ்சாக்ஷர ஜபம், பக்தி, உபயம், த்ரிவிதஸம்பத்தி, சதுர்விதஸாரம், உபாதி மாடம், நிருபாதிமாடம், ஸஹஜமாடம் என்னும் பதினைந்து ஸ்தலங்களுடனே கூடியிருத்தலாலும் சிவசக்தியினாலும் எவன் பக்தியுள்ளவனானானோ அக்காரணத்தினால் அவன் முதலாமவனான பக்தன் என்று அறியப்பட்டான்.

க - வது. பத்தத்தலம் முற்றிற்று.

---

உ

## உ - வது. மா கே ச த் த ல ம்.

---

[அதாவது-எக்காலத்தும் லிங்கநிஷ்டையினால் ஆஸ்திக்ய நித்யகர்ம ஸத்ய ஸதாசார தர்மஸௌசீல்யாதிகளை யடைந்து வீரசைவ வ்ரத ஸம்பந்நனாயிருத்தல் என்பது.]

(இ த னு ட் பி ரி வு.)

கலிவிருத்தம்.

சாற்றினை யுவந்துபத் தத்த லத்தினைப்
பாற்றிய வினைநெறிப் பத்த னிங்ஙனெவ்
வாற்றினி லடைவன்மா கேசத் தன்மையை
மாற்றிரி கணேசநீ வகுத்துக் கூறுவாய்.

(பு - ரை.) மால் திரி - மயக்கத்தைக்கெடுத்த, கணேச - கணநாதனே, உவந்து - மகிழ்ந்து, பத்தத்தலத்தினை சாற்றினை—, பாற்றிய வினை நெறி - ஓட்டிய வினைவழியை யுடைய, பத்தன்—, இம்மன் - இவ்வாறே, மாகேசத்தன்மையை—, எவ்வாற்றினில் - எவ் வழியாலே, அடைவன்—, நீ வகுத்து கூறுவாய் - நீ வகுத்துச் சொல்லக்கடவை, எ - று.

(வி - ரை.) சாற்றினை - சொல்லினை. பாற்றல் - ஓட்டல். வகுத்தல் - பாகுபாடு செய்தல். (க)

மாசறு சகசநற் றாநம் வல்லனாய்
வாசவ னாதியர் பதத்தின் மாற்றிய
நேசமோ டொருபெரு நேசத் துற்றவ
னீசனை யிணையின்மா கேசத் தன்மையான்.

(ப - ரை.) மாசு-அறு - குற்றமற்ற, நல் - நல்ல, சகசதாநம் வல்லன் ஆய் - ஸஹஜ தாநம் செய்ய வல்லவனாகி, வாசவன் ஆதியர் - இந்திரன் முதலியோரது, பதத்தில் - பதங் களில், மாற்றிய - விரக்தியடைந்த, நேசமோடு - ஆசையுடன், ஈசனை - சிவபிரானை, ஒரு - ஒப்பற்ற, பெருநேசத்து உற்றவன் - பேரன்போடு யடைந்தவன், இணை இல் - ஒப்பற்ற, மாகேசத் தன்மையான் - மாகேசத் தன்மையை யுடையவனாவன், எ - று.

(வி - ரை.) பதம் - பதவி. விரக்தி - நிராசை. ஸஹஜதாநத்தில் வல்லவனாய் சிவபக்தி யிற் சிறந்தவன் மாகேசனாவனென்பது கருத்து. ஒரு பெரு நேசத்து உற்றவன் என்றது சிவதற்பரனை; சிவநிஷ்டாபரனை எனினுமாம். மாயேசன், மாகேசன், மாஹேசன், மாயேஶ்வரன், மாகேஶ்வரன், மாஹேஶ்வரன் மாகேச்சுரன் இவைகள் ஒருபொருட் பன்மொழிகள். (உ)

முன்னர்நஞ் சங்கரன் மொழிந்த வாறிவண்
பன்னுவன் மகேசநற் றலத்தின் பான்மையுந்
தன்னிகர் மகேச்சுரன் றன்மை யங்கதன்
பின்னர்வந் திலிங்கநன் னிட்டை பெற்றிடும்.

(ப - ரை.) மகேச நல் தலத்தின் பான்மையும்—, முன்னர் - முன்னே, நம் சங்கரன் மொழிந்தவாறு—, இவண் பன்னுவன் - இவ்விடத்திற் சொல்லுவேன், தன் நிகர் - தன்னைத்தானே நிகர்த்த, மகேச்சுரன் தன்மை—, அங்கு அதன் பின்னர் வந்து—, நல் - நல்ல, இலிங்கநிட்டை—, பெற்றிடும் - வரும், எ - று.

(வி - ரை.) சங்கரன்-ஆன்மாக்களுக்கு ஹிதம்செய்வோன் (சிவபெருமான்). மகேச் சுரன் தன்மை - மாஹேஶ்வர ப்ரஶம்ஸாஸ்தலம். இலிங்க நிட்டை - லிங்கநிஷ்டா ஸ்தலம். (௩)

பூருவாச் சிரயமத் துவிதம் போந்துபி
னாருமா வாகந மட்ட மூர்த்திபின்
சாருமியாண் டினுநிலை தடுத்தல் பின்சிவம்
பாரமா வுலகொடு பத்த னாந்தலம்.

(ப - ரை.) பூருவ ஆச்சிரயம்—, அத்துவிதம்—, போந்து - வந்து, பின் - பிறகு, ஆரும் - பொருந்திய, ஆவாகநம்—, அட்டமூர்த்தி—, பின் சாரும் - பிறகு வரும், யாண்டினும் - எவ்விடத்தினும், நிலை—, தடுத்தல்—, பின் - பிறகு, சிவம் பாரமாம் உலகு ஒடு—, பத்தன் ஆம் தலம்—, எ - று.

(வி-ரை.) பூருவ ஆச்சிரயம் தடுத்தல் - பூருவாச்சிரய நிரஸநத்தலம், அத்து விதம் தடுத்தல் - அத்துவித நிரஸநத்தல, ம்ஆவாகநம் தடுத்தல் - ஆவாகந நிரஸநத்தலம்

அட்டமூர்த்திதடுத்தல் - அட்டமூர்த்தி நிரஸநத்தலம், யாண்டினும் நிலைதடுத்தல்-சர்வகத நிரஸநத்தலம், சிவம் பாரமாம் உலகு - சிவஜகன்மயத்தலம், சிவம் பாரமாம் பத்தன் ஆம் தலம் - பத்ததேஹிகதேவ (லிங்கத்) தலம். பூருவாச்சிரயம் - பண்டை நிலை. (ச)

இம்முறை * நவவித மெய்தி நின்றுள
மெய்ம்மலி மகேசநற் றலம்வி ளம்புதுஞ்
செம்மையோ டொருங்கிய சித்த னாகியே
யெம்முனி வரவிருந் தினிது கேட்கவே.

(ப - ரை.) இ முறை - இந்தக்கிரமமாக, நவ விதம் - ஒன்பது வகையாய், எய்தி நின்றுள - அடைந்திருக்கிற, மெய் மலி - உண்மை மிகுந்த, நல் - நல்ல, மகேசத்தலம் விளம்புதும்—, செம்மையோடு—, ஒருங்கிய - ஒருப்பட்ட, சித்தன் ஆகி - மனமுடைய வனாகி, எம் முனிவர - எமது முனிசிரேஷ்டனே, இனிது இருந்து கேட்க - இனிதாயிருந்து கேட்கக்கடவை, எ - று.

(வி - ரை.) விளம்புதும் - சொல்வோம். (ரு)

உ

ஓம் ஸ்ரீகண்டாய நமஃ

பதினொருவது

## (க.) மாகேச்சுரத்தலம்.

[அதாவது - ப்ரஹ்மாமுதலிய ஸமஸ்த பிராணிகளுக்கும் ஸ்வாமியான பரசிவன் ஒருவனே ஸர்வ ச்ரேஷ்டன் என்றறிந்தவனும், பரஸ்த்ரீஸங்கம் பரத்ரவ்யாபேக்ஷை அவித்தை முதலிய பஞ்சக்லேஸங்கள், அஹங்காரம் மாத்ஸர்யம் கோபம் ப்ராணஹிம்ஸை ஆகிய இவை முதலிய குணங்களில் வர்த்தியா திருப்பவனும், ஸஹஜதாநியானவனும், ப்ரஹ்மாதிகளின் பதங்களில் ஆஸக்தியில்லாதவனும், ப்ரஹ்மாதி பதங்களை த்ருணோ பாதியில் அறிபவனும், ஸ்ரீபரமேஸ்வரனிடத்தில் த்ருடமான பக்தியுள்ளவனும் ஆஸக்தனு மான சிவபக்தனே மாஹேஸ்வரன் என்று சொல்லப்படுவன் என்பது.]

கலிவிருத்தம்.

உலகினை யளித்தரு ளுருத்தி ரன்மிகு
முலகினை யுண்டிடு மொருவன் றன்னினுந்
தலைமைய னென்றெவன் றுணியுந் தன்மையா
னிலகுறு மனையன்மா கேச னென்பவே.

(ப - - ரை.) உலகினை - உலகத்தை, அளித்தருள் - காத்தருள்கின்ற, உருத்திரன்—, மிகும் - மேலான, உலகினை உண்டிடும் ஒருவன் தன்னினும்—, தலைமையன் என்று - தலைமையுடையவ னென்று, எவன் துணியும் தன்மையன்-எவன் நிச்சயிக்குந்தன்மையை யுடையனோ, இலகுறும் அனையன் - விளங்குகிற அவனே, மாகேசன் என்ப - மாகேச னென்று சொல்லுவர் (மேலோர்) எ - று.

---

* மற்றொருபிரிவு:—அதாவது மாகேசனெனவன் இஹலோகவீரன் பரலோகவீரன் லிங்க வீரன் என மூன்று வகைப்படுவன். இவர்களில், மத்யலோக கணங்கள் புகழும்படி ஷட்தர்ஸ நங்களின் நிரஸநம்செய்து தன்சமயத்திற்கு ப்ராணனை வ்ரயம் செய்பவனே இஹலோக வீரன் எனப்படுவன்; தேவலோக கணங்கள் புகழும்படி ஸர்வஸங்க பரித்யாகம்செய்து தர்மாதர்ம காமமோக்ஷங்களை விட்டிருப்பவனே பரலோகவீரன் எனப்படுவன்; அங்க லிங்க ஸங்கத்தினால் ஸர்வகரணங்களும் ஒன்று பட்டிருப்பவனே லிங்கவீரன் எனப்படுவன், மாஹேஸ்வரனை பிண்டப்ரஹ்மம் என வழங்குதலு முண்டு.

(வி - ரை.) உலகினை உண்டிடும் ஒருவன் என்றது திருமாலை. பிரமன் முதலியோர் மலமுடையவர்கள் என்பதும் மஹேஸ்வரன் மலமில்லாதவன் என்பதும் இச்செய்யுளால் பெறப்பட்டன. (க)

விமலனா கியநுதல் விழியி னோனொடு
சமவரா கியநிலைச் சதுமு கப்பெருங்
கமலனா தியர்தமை யொப்புக் காண்குறு
மமைவிலா னரியமா கேச னாகுவான்.

(ப - ரை.) விமலன் ஆகிய—, நுதல் விழியினோனொடு - நெற்றிக்கண்ணனோடு, சமவர் ஆகிய - சமானராகிய, நிலை - நிலையையுடைய, சதுமுகம் - நான்கு முகங்களையுடைய, பெரு - பெரிய, கமலன் ஆதியர்தமை - பிரமன் முதலானோரை, ஒப்பு காண்குறும் - ஒப்புச்சொல்லுதற்குரிய, அமைவு இல்லான் - அமைதியில்லாதவன், அரிய மாகேசன் ஆகுவான்—, எ - று.

(வி - ரை.) நெற்றிக்கண்ணன் - சிவபெருமான். கமலன் - தாமரைமலரை யிடமாகக்கொண்டிருப்பவன். மாகேசனுக்கு பிரமன் முதலானோர் ஒப்பாகார் என்பது கருத்து.

பங்கய னாதிய பசுக்கட் கென்றுமே
யிங்கிறை யாகிய வீசன் றன்னையே
துங்கனென் றுணர்தரு துணிவு பெற்றுளோன்
மங்கல நெறியுடை மகேச னாகுவான்.

(ப - ரை.) பங்கயன் ஆதிய - பிரமன் முதலிய, பசுக்கட்கு—, என்றும்—, இங்கு—, இறை ஆகிய ஈசன் தன்னையே—, துங்கன் என்று - உயர்ந்தோனென்று, உணர் தரு - அறிந்த, துணிவு பெற்றுளோன்—, மங்கலநெறி உடை—, மகேசன் ஆகுவான்—, எ-று.

(வி - ரை.) பங்கயன் - தாமரைமலரை யாசனமாகவுடையவன். பசுக்கள் - சீவர்கள். இறை - பண்பாகுபெயர், தலைமையையுடையவன் என்பது பொருள். ஈசன் - சிவபெருமான். பங்கயனாதிய பசுக்கள் என்றதனால் இவர்கள் அழியுந்தன்மை பெறப்பட்டது. (ங)

பெருமல முற்றிடு பிரம னாதியர்
தரும்வலி யிலர்தனி முத்தி நல்குவோ
னிருமல மகேசனே யென்னு நெஞ்சினேன்
மருவரு நிலையுடை மகேச னாகுவான்.

(ப - ரை.) பெரு மலம் உற்றிடு - பெரிய மல சம்பந்தத்தையுடைய, பிரமன் ஆதியர்—, தரும் வலி இலர் - கொடுக்கும் வலியிலராவர், தனி - ஒப்பற்ற, முத்தி நல்குவோன் - முத்தியைத்தருவோன், நிருமல மகேசனே—, என்னும் நெஞ்சினேன் - என்கிற கருத்துடையவன், மருவு அரு - பெறுதற்கரிய, நிலையுடை - நிலையையுடைய, மகேசன் ஆகுவான்—, எ - று.

(வி - ரை.) வலி - சக்தி. மகேசன் - சிவபெருமான். பெருமலம் உற்றிடு பிரமன் ஆதியர் என்றதனால் இவர்கள் மோகமுற்றவர்கள் என்பது பெறப்பட்டது. (ச)

மாலய னாதியர் மருவு வாழ்வெலாஞ்
சால வோர்து ரும்பெனத் தள்ளி யைம்புல
னாலுறு சுகங்களை மகேச னற்றியே
சீலமோ டவன்சிவா நந்தத் தெய்துவான்.

(ப - ரை.) மால் அயன் ஆதியர்—, மருவு வாழ்வு எல்லாம் - அடைந்திருக்கிறசெல்வமெல்லாம், சால - மிக, ஓர் துரும்பு என்ன தள்ளி—, ஐம்புலனால் உறு சுகங்களை—,

மகேசன்—, ஆற்றி - செய்து, சீலமோடு - நல் ஒழுக்கத்துடனே, அவன் சிவானந்தத்து எய்துவான்—, எ - று.

(வி - ரை.) வாழ்வு - செல்வம், இது கருவியாகுபெயர். சால சால் என்னும் உரியடியாகப்பிறந்த செயவென்வாய்பாட்டு நிகழ்கால வினையெச்சம். ஐம்புலன் - பஞ்ச விஷயங்கள், (ஶப்த ஸ்பர்ஶ ரூப ரஸ கந்தங்கள்.) இச்செய்யுட்களால், மாஹேஶ்வரனை வீரமாஹேஶ்வரன் எனப்பொருள்கொள்க. மரியும் வாழ்வு என்றும் பாடம், இதற்கு அழிகிற செல்வம் என்பது பொருள். (ரு)

பிறர்மனை பிறர்பொருள் பெறல வாச்சின
மறுபகை முதனவை யனைத்து நீக்கியே
பொறையொடு பரனது புகழ்வி ரும்பிநன்
னெறிதரு சிவாகம நேய முள்ளனாய்.

(ப - ரை.) பிறர்மனை—, பிறர் பொருள் பெறல்—, அவா—, சினம்—, அறுபகை—, முதல் - முதலாகிய, நவை அனைத்தும் - குற்றங்களெல்லாவற்றையும், நீக்கி—, பொறையொடு - பொறுமையுடன், பரனது புகழ் விரும்பி—, நல் நெறி தரு - நன்னெறியைக் காட்டுகிற, சிவாகமநேயம் உள்ளவனாய்—, எ - று.

(வி - ரை.) பிறர்மனை - பிறரது மனைவி. மனை - ஆகுபெயர். அவா - ஆசை. சினம் - கோபம். அறுபகை - அரி ஷட்வர்க்கம் (காமம், க்ரோதம், லோபம், மோஹம், மதம், மத்ஸரம்). பொறை - தொழிற்பெயர். சிவாகமநேயம் - சைவாகமங்களில் விருப்பு. இது முதல் மூன்றுசெய்யுட்கள் குளகம். (சா)

அரற்குயர் வளித்திடு மளவை கொண்டுதான்
பரற்கிதஞ் செய்துநம் பரம்பொ ருட்டவாய்த்
திரத்தொழில் புரிந்துமெய்ச் சிவநிந் தைக்கணே
மரித்திடு நிலையினும் வலிய னாகியே.

(ப - ரை.) அரற்கு - சிவபெருமானுக்கு, உயர்வு அளித்திடும் - உயர்வைச் சொல்லுகிற, அளவை கொண்டு - அளவையைக்கொண்டு, தான் பரற்கு இதம் செய்து—, நம் - நமது, பரன்பொருட்டு—, அவாய் - விரும்பி, திரத்தொழில் புரிந்து - உறுதியாகிய தொண்டுசெய்து, மெய் சிவ நிந்தை கண் - உண்மையாகிய சிவநிந்தை செய்யுமிடத்தில், மரித்திடும் நிலையினும் - இறக்குமளவும், வலியன் ஆகி - உறுதியுள்ளவனாகி, எ - று.

(வி - ரை.) அளவை - பிரமாணம், அது ப்ரத்யக்ஷப்ரமாண முதலாயெண்வகைப் பட்டிருக்கும், விரிவஞ்சி யீண்டு விடுத்தனம். இதம் - நன்மை. (எ)

நிந்தனை யுடையரை நீக்கி யோர்சிவ
வந்தனை யுடையரை மருவி யென்றுமே
புந்தியின் மகிழ்பெறீஇப் புனித னாயுறு
மைந்துடை யவனரு மகேச னாகுவான்.

(ப - ரை.) நிந்தனை உடையரை நீக்கி—, ஓர் - ஒப்பற்ற, சிவ வந்தனை உடையரை மருவி—, என்றும்—, புந்தியில் - மனத்தில், மகிழ்பெறீஇ - மகிழ்ச்சிபெற்று, புனிதனாய் உறும் - பரிசுத்தனாயிருக்கிற, மைந்து உடையவன் - வலியுடையவனே, அரு - அருமையாகிய, மகேசன் ஆகுவான்—, எ - று.

(வி - ரை.) நிந்தனை - நிந்தித்தல். வந்தனை - தோத்திரம். பெறீஇ - சொல்லிசை யளபெடை. அரு மகேசன் - வீரமாகேசன். (அ)

மாகேச்சுரத்தலம் - முற்றும்.

உ

ஓம் பக்தவத்ஸலாய நம:

## பதினேழாவது

## (உ.) இலிங்கநிட்டைத்தலம்.



[அதாவது - ஸர்வஸ்வமும் நாசமாயினும் சிரச்சேதமாய்க் கொண்டிருப்பினும் மற்ற வஸ்துக்களில் நிராபேக்ஷையுள்ளவனாய், நமஸ்காரம் தர்ஸநம் ஸ்பர்ஸநம் பூஜை முதலிய வைகளினால் நியமமாய், எக்காலத்தும் சிவலிங்க பூஜையாகிய மஹாவ்ரதத்தைக் கைவிடாத மாகேசனே பரம லிங்கநிஷ்டனென்று சொல்லப்படுவன் என்பது.]

கலிநிலைத்துறை.

ஆவி மாளினுஞ் சிவலிங்க நிட்டையை யடைந்தோ
னோவி லாநெறி நிற்கவொன் றுணர்தர வுணர்த்துந்
தாவி லாதவிச் சிவலிங்க நிட்டையந் தலந்தான்
றேவ தேவனைப் பொருளெனு மகேசனைச் செறியும்.

(ப - ரை.) ஆவி மாளினும் - உயிர்நீங்கினாலும், சிவலிங்க நிட்டையை அடைந்தோன்—, ஓவிலா நெறி நிற்க-நீங்கா நெறியில் நிற்கும்படி, ஒன்று உணர்தர உணர்த்தும்-ஒரு பொருளை யறிய அறிவிக்கும், தாவிலாத - கெடுதலில்லாத, இ - இந்த, அம் - அழகிய சிவலிங்கநிட்டை தலம்—, தேவதேவனை —, பொருள் என்னும் - பொருளென்கிற, மகேசனை—, செறியும் - பொருந்தும், எ - று.

(வி - ரை.) தேவ தேவன் - சிவபெருமான். (க)

பொருளெ லாஞ்சிதைந் துயர்தலை யற்றுவீழ் பொழுது
மருளு லாஞ்சிவ லிங்கபூ சனைவிட லாகா
தெருளி னாலரன் பூசனை செய்திடா துண்ணு
மருளி லான்கரத் துற்றிடு முத்திமா நிதியம்.

(ப - ரை.) தெருளினால் - தெளிவோடு, அரன்பூசனை செய்திடாது—, உண்ணும் - உண்ணுகிற, மருள் இல்லான் - மயக்கமில்லாதவனது, கரத்து - கையில், முத்தி மா நிதியம் - முத்தியாகிய பெருஞ்செல்வம், உற்றிடும் - பொருந்தும், (ஆதலால்) பொருள் எல்லாம்—, சிதைந்து - அழிந்து, உயர் - உயர்ந்த, தலை அற்று வீழ்பொழுதும்—, அருள் உலாம் - அருள் விளங்குகிற, சிவலிங்கபூசனை விடல் ஆகா—, எ - று.

(வி - ரை.) தெருள் - தெளிவு. அரன் - சிவபெருமான். கரம் - கை. சிதைதல் - அழிதல். பூசனை - பூசை. முத்தி மா நிதியம் - மோக்ஷலக்ஷ்மி. (உ)

சம்பு பூசனை யாகிய தக்கதோர் தரும
மிம்பர் வீடுற வளித்திடு மினையதை யன்றி
நம்பு மேனைய சிறுபய னல்குறு தருமங்
கும்ப மாமுனி செய்வதென் பெறுவது கொண்டு.

(ப - ரை.) கும்பமாமுனி - அகத்தியரே, சம்பு பூசனை ஆகிய—, தக்கதோர் தருமம் - தகுதியுடைய வொருதருமமானது, இம்பர் - இவ்வுலகில், வீடு உற அளித்திடும் - வீட்டையைக் கொடுக்கும், இனையதை அன்றி - இதையல்லாமல், நம்பும் - நம்புகிற, ஏனைய - மற்றைய, சிறுபயன் - சிறுபயனை, நல்குறு - கொடுக்கிற, தருமம் - தருமத்தை, செய்வதுகொண்டு - செய்வதனால், பெறுவது என் - பெறும் பயன் யாது, எ - று.

(வி - ரை.) குடத்திற் பிறந்தவராதலால் அகத்தியரைக் கும்பமாமுனி என்றார். சம்பு - சிவபெருமான். (க)

நியமங் கொண்டுபூ சனைசெயு நிமலலிங் கத்திற்
செயலி லன்புட னர்ப்பிதஞ் செய்தசே டத்தை
யயில்பு மெய்வளர்ப் பவனெவ னனையதன் மையனே
மயல கன்றுயர் தருதனி வீரமா மகேசன்.

(ப - ரை.) நியமம் கொண்டு பூசனை செய்யும் நிமல லிங்கத்தில்—, செயல் இல் அன்புடன் - நிஷ்காம்யமான அன்போடு, அர்ப்பிதம் செய்த சேடத்தை—, அயில்பு - உண்டு, மெய் வளர்ப்பவன் எவன்—, அனைய தன்மையனே—, மயல் அகன்று - மயக்க மொழிந்து, உயர்தரு - உயர்ந்த, தனி - ஒப்பற்ற, வீரமா மகேசன்—, எ - று.

(வி - ரை.) சேடம் - மிச்சில். நிஷ்காம்யம் - விருப்பமற்றது. அயில்பு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம், இதற்குப்பகுதி அயில். அயிலல் - உண்டல். மெய் - சரீரம். வீர மா மகேசன் - வீர மஹா மாஹேசன்.

விடுத்து மற்றுள பயனெலாம் விமலலிங் கத்தி
லடுத்த நெஞ்சமும் பரமலிங் கத்தரும் புகழே
யெடுத்த றைந்திடு வாயுமர்ச் சனைசெய வென்றும்
படைத்த கைகளு முடையனே யுருத்திரன் பகரின்.

(ப - ரை.) மற்றுள பயன் எல்லாம் விடுத்து —, விமல லிங்கத்தில் அடுத்த நெஞ்சமும்—, பரமலிங்கத்து அரு புகழே எடுத்து அறைந்திடும் வாயும்—, என்றும்—, அர்ச்சனை செய்யப்படைத்த கைகளும் உடையனே—, பகரின் - சொல்லுமிடத்தில், உருத்திரன் - உருத்திரனுவான், எ - று.

(வி - ரை.) விமலம் - நிர்மயம். பயன் - ஆகுபெயர். அறைதல் - சொல்லல். உடையனே யென்பத னீற்றேகாரம் தேற்றம். (உ)

பரம லிங்கநன் னிட்டையை யுளன்பரா நந்த
வொருபெ ருஞ்சிவ மதனையே யடைவனென் றுரைக்கு
மிருள றுங்கலை யாவுமற் றவன்றனக் கென்றுந்
திரமி ழந்துறு துறக்ககா ரணமெனுஞ் செயல்கள்.

(ப - ரை.) பரம லிங்க நல் நிட்டையை உளன்—, பராநந்தம்—, ஒரு பெரு சிவம தனையே அடைவனென்று—, இருள் அறும் கலையாவும் உரைக்கும் —, அவன்தனக்கு—, திரம் இழந்துறு - உறுதி கெட்டொழிகின்ற, துறக்கம் - சுவர்க்கத்துக்கு, காரணம் என்னும் செயல்கள்—, என் ஆம் - என்னபயனைத்தரும், எ - று.

(வி - ரை.) பராநந்தம் - மேலான இன்பம். கலையாவும் - நூல்களெல்லாம். அவன் தனக்கு என்பதில் தன் சாரியை. என் ஆம் என்ற வினு ஒன்றுமாகாதென்றலை யுணர்த் தற்கு வந்தது.

நீறு கண்டிகை புனைந்துநன னெறியிடை ...
தேறு மஞ்சிவ லிங்கமா நிட்டையிற் சிறந்த
பேற டைந்தவன் றன்னையப் பிரமனே முதலோர்
மாற ருந்துதி செய்துநின் றிறைஞ்சுவர் மன்னோ.

(ப-ரை.) நீறு கண்டிகை புனைந்து—, நல் நெறியிடை நின்று—, தேறும் - தெளிவாகிய, அம்-அழகுள்ள, மா - பெருமைபொருந்திய, சிவலிங்க நிட்டையில் சிறந்த—, பேற

அடைந்தவன் தன்னை—, அ - அந்த, பிரமன் முதலோர்—, மாறு அரு - இடையறாத, துதிசெய்து நின்று—, இறைஞ்சுவர் - வணங்குவர், எ - று.

(வி - ரை.) நீறு - விபூதி. கண்டிகை - கழுத்திலணியும் உருத்திராக்கமாலை. பேறு - பயன். அரு - இன்மைப்பொருட்டு. ஈண்டு, இச்செய்யுளைக் கவனிக்க:—

பிரபுலிங்கலீலை.

நெஞ்சஞ் சோகம் பாவனையி னிற்க நிறுத்தி விடயங்க
ளஞ்சுந் துறவாத் துறந்தசிவ யோகி யொருவ னடியிணையிற்
றுஞ்சுந் திருமான் முதலமர ருள்ள மவனைத் துதித்திறைஞ்சா
தெஞ்சுந் தவமா முனிவரிலை யெனநான் மறையு மியம்புமால். (எ)

இலிங்கநிட்டைத்தலம் - முற்றும்.

உ

ஓம் பவாய நம:

பதினெட்டாவது

(௯.) பூருவாச்சிரயநிரசநத்தலம்.

—oo❖oo—

[அதாவது - மேற்கூறிய க்ரமத்தில் லிங்கநிஷ்டையுள்ளவனும், கிடைக்கப்பெற்ற சிவாசாரத்தை யாஸ்ரயிப்பவனும், மாஹேஸ்வர சமயத்திற்கு விருத்தங்களானதும் தீக்ஷைக்கு முன்னர் நிகழ்ந்தவைகளும் ஜாதி குல சம்பந்தத்தால் வரும் தர்மங்களுமாகிய பூர்வாஸ்ரயங்களைக் கைவிட்டவனுமான வீரமாஹேஸ்வரனே பூர்வாஸ்ரய நிராஸகனென்று சொல்லப்படுவன் என்பது.]

கலிநிலைத்துறை.

கொண்டு றுஞ்சிவ லிங்கநன் னிட்டையைக் கொண்டு
விண்டு றும்பவ நெறியடை வீரமா மகேசன்
கண்ட ருஞ்சிவ நெறிவிலக் காயிவண் கலந்த
பண்டு றுங்கரு மங்களோ விடுத்திடப் படுமால்.

(ப - ரை.) கொண்டுறும் - கொண்டிருக்கிற, நல் - நல்ல, சிவலிங்கநிட்டையைக் கொண்டு—, பவம் - பிறவியானது, விண்டுறும் நெறி அடை - நீங்கும் வழியை யடைந்த, வீரமாமகேசன் (ஆல்)—, கண்தரும் - அறிவைத்தருகிற, சிவநெறி விலக்கு ஆய் இவண் கலந்த - சிவநெறிக்கு விலக்காக இவ்வுலகிற்பொருந்திய, பண்டு உறும் - பூர்வமடைந்திருந்த, கருமங்கள்—, விடுத்திடப்படும்—, எ - று.

(வி - ரை.) நிட்டையைக்கொண்டு - நிட்டையால். கண் - அறிவு. விலக்கு-நிஷேதம். கருமங்கள் - க்ரியைகள். (க)

சோதி லிங்கநன் னிட்டையின் விலக்கெனத் தோன்றுஞ்
சாதி தன்குல தருமங்க ளனைத்தையுந் தணந்த
நீதி யொன்றுள னாகிய நிலைபெறு மகேசன்
நீத டைந்துள தொல்லையாச் சிரயத்திற் றீர்ந்தோன்.

(ப - ரை.) சோதி - ஒளியுருவாகிய, நல் - நல்ல, லிங்கநிட்டையின் விலக்கு—, என்ன தோன்றும்—, சாதி தன் குல தருமங்கள் அனைத்தையும்—, தணந்த - நீங்கின, நீதி ஒன்று உளன் ஆகிய - ஒரு நீதியை யுடையவனாகிய, நிலைபெறும் மகேசன்—, தீது

அடைந்துள தொல்லை ஆச்சிரயத்தில் தீர்ந்தோன் - தீமையடைந்துள்ள பூர்வாசிரயத்தினின்றும் நீங்கினவனுவன், எ-று.

(வி - ரை.) குலதருமங்கள் - குலாசாரதருமங்கள். தணத்தல் - நீங்கல். பூர்வாச்சிரயம் - இன்னிலை.

பற்று றுஞ்சிவ தீக்கையிற் பவித்திரன் றனக்கு
முற்ற ருங்கரு மங்களி னென்பயன் மூடம்
பெற்று றும்பவப் பிணியின ரேயவை பெறுவா
ருற்றி டுஞ்சிவ தீக்கையி னேனவை யொழியும்.

(ப - ரை.) பற்று உறும் - பற்றறுதற்கேதுவாகிய, சிவதீக்கையின் - சிவதீக்ஷையால், பவித்திரன் தனக்கு - பவித்திரனுனவனுக்கு, முற்று அரு - செய்தற்கரிய, கருமங்களின் - கருமங்களால், பயன் என்—, மூடம் பெற்று - மூடத்தன்மையடைந்து, உறும் - (அதனுற்) பெற்ற, பவப்பிணியினரே - பவரோகத்தை யுடையவரே, அவை பெறுவார்—, உற்றிடும் - அடைந்த, சிவதீக்கையினேன்—, அவை ஒழியும் - அவற்றை நீங்குவான், எ - று.

(வி - ரை.) தீக்கையின் என்பதில் இன் என்பது ... பொருளில் வந்தது. (ரு)

மனிதர் சுத்தரு மசுத்தரு மெனவிரு வகையர்
புனிதர் மெய்ச்சிவ தீக்கையைப் பொருந்தின ரொழிந்தோ
ரினிதெ னுஞ்சிவ தீக்கையை யிலாதவ ரென்ப
வனிதை பங்குடை யமலனூற் பெருநெறி வல்லோர்.

(ப - ரை.) வனிதை பங்கு உடை - மங்கைபங்கையுடைய, அமலன் நூல் - சிவநூல்களாகிய, பெரு நெறி வல்லோர் - பெரு நெறியில் வல்லோர், மனிதர்—, சுத்தரும் அசுத்தரும் என இருவகையர்—, மெய்ச் சிவதீக்கையைப் பொருந்தினர் —, புனிதர் —, ஒழிந்தோர்—, இனிதுஎன்னும்-இனிதென்றுசொல்லப்படுகிற, சிவதீக்கையையிலாதவர்—, என்ப - என்று சொல்லுவர் (பெரியோர்), எ - று.

(வி-ரை.) வனிதை யென்றது உமாதேவியை. பங்கு - பாகம். அமலன் நூல் என்றது சிவாகமங்களை. அசுத்தர் - ப்ராக்ருதர். புனிதர் - சுத்தர் (அப்ராக்ருதர்). ஒழிந்தோர் - ஏனையோர் (ப்ராக்ருதர்).

வருண நன்னிலைத் தருமங்க ளிருவகைப் படுமொன்
றரன றைந்தது மற்றைய தயன்றைந் ததுவாம்
பரன றைந்தது பயிலுவர் சிவாச்சிர யத்தர்
பிரம னல்கிய தருமமே பிராகிரு தர்க்கு.

(ப - ரை.) வருணம் நல் நிலைத்தருமங்கள் இருவகைப்படும்—, ஒன்று அரன் அறைந்தது ஆம்—, மற்றையது அயன் அறைந்தது ஆம்—, பரன் அறைந்தது சிவாச்சிரயத்தர் பயிலுவர்—, பிராகிருதர்க்கு—, பிரமன் நல்கிய - பிரமன்சொன்ன, தருமமே - தருமமே (முக்கியமாம்), எ - று.

(வி - ரை.) வருணம் - குலம். நிலைத்தருமங்கள் - ஆச்சிரமதருமங்கள். அரன அறைந்தது - சிவபெருமான் சொன்னது. அயன் - பிரமன். பரன் - மேலானவன் (சிவபெருமான்). சிவாச்சிரயத்தர் - சிவபெருமானை வழிபடுபவர் (வீரசைவர்). (சு)

முந்தை யுற்றுள விந்தநத் துருவங்கண் மூண்ட
வெந்த ழற்கவர்ந் துண்ணுற விரவுறு வாறுபோ
னந்து றச்சிவ தீக்கையை நண்ணினோர் தமக்குட்
பந்த முற்றுள சாதிவேற் றுமையிலை பகரின்.

(ப - ரை.) முந்தை உற்றுள - முன்னே யடைந்திருந்த, இந்தநத்து உருவங்கள் - விறகின் உருவங்கள், மூண்ட வெம் தழல் கவர்ந்து உண்ணுற—, விரவு உறு ஆறு போல் - கலந்திராத தன்மைபோல, நந்து உற - பெருக்கமடைய, சிவதீக்கையை நண்ணினோர் தமக்கு—, உள்-மனத்தில், பந்தம் உற்றுள்ள சாதிவேற்றுமை பகரின் —, இல்லை—, எ-று.

(வி - ரை.) ஈண்டு, இச்செய்யுளைக் கவனிக்க :—

சிவஞானதீபம்.

இந்தனங்கள் பலபலபே ருடைய வாகு மெரிதழலி னிடையிடவே யெல்லாஞ் சேர
வெந்துவிற கினினுமை நாச மாகி வெண்ணீறென் றொருபெயராய் விளங்கு மாபோற்
பந்தமுறுங் குலாசார மயக்க மெல்லாம் பரமகுருத் திருநோக்கம் பரித்தவாறே
வெந்தழியு மொருபுழுவேட் டுவனு மாபோல் விமலனுரு வாயெவர்க்கு மேலா மன்றே.

இந்தனம்-விறகு. விரவல் - கலத்தல். நந்தல் - பெருகல். நண்ணினோர் - அடைந்தவர். பந்தம் - கட்டு. (௬)

பாச மற்றுயர் தீக்கையிற் சிறந்துள பத்த
ரீச னைப்பெறு பத்தர்பா லோரிடத் தெனினும்
பேசி லுற்றிடு சாதியுன் னுதன்மிகப் பிழையென்
றூச லொத்துழல் பிறப்பிறப் பகன்றவ ருரைப்பார்.

(ப - ரை.) பாசம் அற்று—, உயர் தீக்கையில் சிறந்துள்ள பத்தர்—, ஈசனைப் பெறு பத்தர் பால்—, ஓரிடத்து எனினும் பேசில்—, உற்றிடு - (அவர்) அடைந்திருக்கிற, சாதி உன்னுதல் - சாதியை யெண்ணுதல், மிக்க பிழை என்று—, ஊசல் ஒத்து உழல் - ஊசலை நிகர்த்துழலா நின்ற, பிறப்பு இறப்பு அகன்றவர்—, உரைப்பார்—, எ - று.

(வி - ரை.) பாசம் - கயிறு (பந்தம்). உன்னுதல்-நினைத்தல். பிறப்பிறப்பு அகன்றவர்-ஞானியர். உரைப்பார் - சொல்லுவர். ஈண்டு, இச்செய்யுளைக் கவனிக்க :—

பிரபுலிங்கலீலை.

சங்கமர் தனக்கொரு சாதி யுன்னினன்
அங்கையி னமர்தரு மரற்கு முன்னினன்
சங்கர னொடுசரந் தம்மில் வேறெனும்
அங்கவ னறிவரு மளற்ற ழுங்குவான். (௭)

பூருவாச்சிரயநிரசநத்தலம் - முற்றும்.

---

ஓம் ஶர்வாய நம:

## பத்தொன்பதாவது

## (௧௯) அத்துவிதநிரசனத்தலம்.

[அதாவது - லிங்கபூஜைக்கு விருத்தங்களான பூர்வாஶ்ரய தர்மங்களை எவ்வாறு விடவேண்டியதோ அவ்வாறே அத்வைத ஜ்ஞானமும் லிங்கபூஜைக்கு விருத்தமானதினால் அவ்வத்வைத ஜ்ஞானத்தைவிட்டு லிங்கமே பூஜ்யம் அங்கமே பூஜகம் என்னும் த்வைத பாவத்தையே அங்கீகரிக்கும் மாஹேஶ்வரனே அத்வைதநிராஸகனென்று சொல்லப்படுவன் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பூசனை செய்வோன் கொள்வோன் பேதமென் றுறலாற் போற்றும்
பூசனை யாதி கன்மம் பொன்றலா லிலிங்க நிட்டை
நாசம துறலா லெங்கும் பெறஞான மிலாமை தன்னு
லீசனை வந்திக் கின்றே னெங்குமத் துவிதஞ் செய்யான்.

(ப - ரை.) பூசனை செய்வோன் —, கொள்வோன் —, பேதம் என்று உறலால் - வேற்றுமை யென்று ஏற்படுதலும், போற்றும் - போற்றப்படுகிற, பூசனை ஆதி கன்மம் பொன்றலால் - பூசனை முதலிய கர்மங்கள் நசித்தலாலும், எங்கும் - எவ்விடத்தும், ஞானம் இல்லாமை பெற - ஞானமில்லாமையுண்டாகலும், இலிங்கநிட்டை —, நாசம் உறலால் - நாசமடைதலாலும், ஈசனை வந்திக்கின்றேன் —, எங்கும் அத்துவிதம் செய்யான் —, எ - று.

(வி - ரை.) பூசனை செய்வோன் - பக்தன். கொள்வோன் - ஏற்றுக்கொள்வோனாகிய சிவபெருமான். அத்துவிதம் செய்தல் - ஒன்றாகச்செய்தல். இலிங்கநிட்டை - லிங்கபூஜை. ஈசனை வந்திக்கின்றேன் - மாகேசன்.

இச்செய்யுளால், பூஜ்ய பூஜகர்களாகிய லிங்கஜீவர்களுக்குப் பேதத்தை விடுப்பதாயின் லிங்கபூஜைக்கு விரோதமாகின்றமையால் பூஜை நிகழாதென்பதும், ஜ்ஞானமில்லையாயின் எல்லாம் அத்வைதம் என்னும்விசாரணைக்கு நிலைமையில்லையென்பதும், (ஆதலால்) கர்மானுஷ்டானம் செய்யும் மாஹேஶ்வரன் சகலத்திற்கும் அத்வைதம் என்பதை மறுத்தவனுயிருத்தல் வேண்டு மென்பதும் பெறப்பட்டன.

ஈண்டு, முதலிரண்டு செய்யுட்களைப்பற்றி இவ்வாராய்ச்சி செய்யத்தக்கது. இந்நூலாரம்பத்திலும், இடையிலும், முடிவிலும் உள்ள பற்பல வாக்கியங்களால் சிவாத்வைதமானது நன்குவிளக்கப்படுகிறது. மேலும், கர்மமார்க்கம் சிவாகமங்களையும், ஞானமார்க்கம் உபநிஷத்துக்களையும் விசேஷமாய்த் தழுவியிருக்கின்றன. சிவனுடன் அத்வைதம் கொள்ளப்படும் ஞானமார்க்கம் பேதத்தைத் தழுவுதல் முரண் என்பது இந்நூலின் முதலில் பிம்பப்ரதிபிம்பாதி த்ருஷ்டாந்தங்களால் பெறப்பட்டிருக்கின்றது மன்றி இனிவரும் ஸ்தலங்களில் விரிவாய்க் காணலாம். மனம் முதலியவைகளால் செய்யப்படுவதாதலால் உபாஸனை யென்பது கர்மமார்க்கத்தில் அடங்கியதென்று சொல்லப்படும். இறைவன் பரன், யான் அவனாலே நன்மையைப் பெறவேண்டியவன் என்னும் எண்ணம் உடையவனே உபாஸகன் என்று சொல்லப்படுவேன். இங்ஙனமான உபாஸகத்வமானது உபாஸ்யனோடு தனக்குப் பேதம் கருதப்படுவதினாலே நிகழ்கின்றது. இவ்விதமான உபாஸனா மார்க்கத்திற்கும் ஞானமார்க்கத்திற்கும் முறையே பேதம் கொள்வதும் பேதம் விடுவதும் ஏதுவாகின்றமையானும், உபாஸனா மார்க்கத்திலிருந்து மனத்தூய்மை பெற்ற பின்னரே ஞானமார்க்கத்தில் செல்வதற்குத்தக்க பரிபாகம் ஏற்படுகின்றமையானும், இறைவனால்

உபாஸனா காண்டத்தில் பேதமும் ஞானகாண்டத்தில் அபேதமும் ஸ்வேதாஸ்வதர உபநிஷதாதி மஹாதந்த்ரங்களில் கூறப்பட்டுள்ளன. (க)

இறையவ னியக்குகின்றோ னியங்குறப் பட்டு நிற்போ
னறைதரு முயிரென்றெண்ணி யாயவிவ் வேறு பாடு
பெறுமுறை யதனா லந்தப் பிரேரகன் றனையர்ச் சித்த
னெறியொடு புரிக செய்யே னிகழ்த்துமத் துவிதந் தன்னை.

(ப - ரை.) இறையவன் - இறைவன், இயக்குகின்றோன் - அசைப்பிப்பவன், அறைதரும் உயிர் - சொல்லப்பட்ட சீவன், இயக்குறப்பட்டு நிற்போன் என்று—, எண்ணி - நினைத்து, ஆய - உண்டாகிய, இ வேறுபாடு பெறு முறையதனால்—, அந்த பிரேரகன் தன்னை—, அர்ச்சித்தல் - அர்ச்சனை செய்வதை, நெறியொடு புரிக - நெறியோடு செய்க, நிகழ்த்தும் - சொல்லப்படுகிற, அத்துவிதம் தன்னை செய்யேல் - அத்துவிதஞ் செய்யாதை, எ - று.

(வி - ரை.) இறைவன் - சங்கரன். இயக்குகின்றோன் - ஏவுவோன். இயக்குறப்பட்டு நிற்போன்-அசைப்பிக்கப்பட்டு நிற்பவன் (ஏவப்படுகின்றவன்). பிரேரகன்-தூண்டுவோன்.

பராபரன் பதியா மந்தப் பதிதொடர் பசுவா மான்மா
விராவிவர் தம்மி லென்றும் வேறுபா டிலரே யாயிற்
றராதல மதனி லீசத் தன்மையோ டடிமைத் தன்மை
வராவென வுரைப்பர் மிக்க மறைகளா கமங்கள் வல்லோர்.

(ப - ரை.) மிக்க - மேலான, மறைகள் ஆகமங்கள் வல்லோர்—, பராபரன் பதி ஆம்—, ஆன்மா—, அந்த பதி தொடர்-அந்தப் பதியைத் தொடர்ந்த, பசு ஆம்—, விராவு-கலந்த, இவர் தம்மில்—, என்றும் வேறுபாடு இலரேயாயின்—, தராதலமதனில் - பூலோகத்தில், ஈசத்தன்மையோடு அடிமைத்தன்மை—, வரா என உரைப்பர் - உளவாகா வென்று சொல்லுவர், எ - று.

(வி - ரை.) பதி - தலைவன். பசு - சீவன். (ங)

எம்முறை பராப ரன்றா னிலங்குறு போத கத்தான்
மெய்ம்மலி காட்சி யுற்று விளக்கமோ டெய்தி நிற்கு
மம்முறை பெறவ டைந்த வத்துவி தப்பேர் வாழ்க்கை
யிம்மையின் ஞான மில்லோர்க் கென்றுமின் றாகு மன்றே.

(ப - ரை.) எ முறை - எந்த முறையால், பராபரன்—, தான் இலங்குறு போதகத்தால் - தானேயாய் விளங்குகிற ஞானவுருவத்தோடு, மெய் மலி காட்சி உற்று - உண்மை மிகுந்த காட்சியை யடைந்து, விளக்கமோடு எய்தி நிற்கும் - ஒளியோடு பொருந்தி நிற்பனோ, அ முறை பெற அடைந்த—, அத்துவிதப் பேர் வாழ்க்கை—, இம்மையில்—, ஞானம் இல்லோர்க்கு—, என்றும் இன்று ஆகும் - என்றுமில்லையாகும், எ - று.

(வி - ரை.) காட்சி - தோற்றம். இம்மை - இப்பிறப்பு. பரதத்வமானது எப்போது ஞானத்தால் அபரோக்ஷமாகின்றதோ அப்போது அத்வைதப் பேறு நிகழும் என்பதும் ஞானமில்லாதவனுக்கு ஓரிடத்திலும் அது நிகழாது என்பதும் இச்செய்யுளால் பெறப்பட்டன. (ச)

கருமவே துவினைக் கொண்டு காண்குறும் வேறு பாடு
மருவுறு மதனா லென்றும் வளங்கெழு மருச்ச னாதி
புரிதரு நெறியி னின்றோன் பொருந்துநற் கரும மெல்லா
மொருவவந் தெய்து மத்து விதத்தினை யுற்றி டானால்.

(ப - ரை.) கருமம் - கருமமாகிய, ஏதுவினைக்கொண்டு—, காண்குறும் - காணப்படுகிற, வேறுபாடு மருவுறும்—, அதனால்—, என்றும்—, வளம் கெழும் - வளம்பொருந்திய, அருச்சநாதி புரிதரும் நெறியில் நின்றேன்—, பொருந்தும் நல் கருமம் எல்லாம்—, ஒருவநீங்க, வந்து எய்தும் - வந்தடைகின்ற, அத்துவிதத்தினை உற்றிடான் - அத்துவிதத்தைப் பொருந்தான், எ - று.

(வி - ரை.) ஏது - காரணம். வேறுபாடு - விவகாரம். எப்போதும் பேதத்தை யாஶ்ரயிக்கும் தன்மையால் பூஜை முதலிய விவகாரம் நிகழும் என்பதும், லிங்கபூஜையை முக்கியமாய்க் கொள்பவன் அத்வைதத்தில் விருப்புடையவன் ஆகக்கூடாது என்பதும் இச்செய்யுளால் பெறப்பட்டன. (ரு)

அத்துவிதநிரசநத்தலம் - முற்றும்.

உ

ஓம் த்ரிலோகேஶாய நம:

இருபதாவது

## (ரு.) ஆவாகநநிரசநத்தலம்.



[அதாவது - அத்வைத நிரஸநத்தைச் செய்தலும் லிங்கநிஷ்டையுள்ளவனால் லிங்கா ஹ்வாந ஸித்யர்த்தமாய் ஒரு மூர்த்தியைக் கல்பிக்கவேண்டியதாயின் அநித்யத்வப்ரஸங்கமுண்டாகும் காரணத்தினாலும், லிங்கத்தின் பரிபூர்ணதசையினாலும், சிவலிங்க பூஜார்த்தமாய் அத்வைத பாவத்தை விட்டு த்வைதபாவத்தை அங்கீகரிப்பவனும், சைவனைப்போலப் பூஜார்த்தமாய் ஸ்ரீ குருதத்தமான இஷ்டலிங்கத்தினிடத்தில் பூஜைக்கு அங்கமான ஆஹ்வாந நிரஸநம் செய்பவனுமாகிய மாஹேஶ்வரனே ஆஹ்வாந நிராஸகனென்று சொல்லப்படுவன் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அச்சிவ லிங்கம் வந்தித் தத்துவி தத்தை நீத்தோன்
மெய்ச்சிவ மயமாய் நின்று விளங்குதன் னிட்ட லிங்கத்
திச்சையி னரனை யாவா கநித்திட லியல்பன் றென்பர்
பொய்ச்செயல் கடந்து மிக்க புலக்குறும் பெறிந்த வீரர்.

(ப - ரை.) பொய் செயல் கடந்து—, மிக்க - மேலான, புலக்குறும்பு எறிந்த-ஐம்புலக் குறும்பரை யறுத்த, வீரர்—, அ சிவலிங்கம் வந்தித்து—,அத்துவிதத்தை நீத்தோன்-அத்துவிதத்தை விட்டவன், மெய் - உடம்பில், சிவமயமாய் நின்று—, விளங்கு - பிரகாசிக்கிற, தன் இட்டலிங்கத்து இச்சையின் - தன் இஷ்டலிங்கத்தின் விருப்பத்தால், அரனை ஆவாகநித்திடல் - சிவனை ஆவாகநஞ்செய்தல், இயல்பு அன்று என்பர்—, எ - று.

(வி - ரை.) ஆவாகநம் செய்தல் - அழைத்தல், (~~தாபித்தல் எனினுமாம்~~). (க)

சிற்கலை யொடுதி கழ்ந்த சிவலிங்கந் தீக்கை தன்னா
னற்குரு வளித்த வன்றே நண்ணுறு மமல னென்றும்
பொற்புறு முணர்வின் மாறுப் பொருந்துமா வாகநந் தான்
பிற்பெறு தினங்க டோறும் பேணுத லாலென் பேறே.

(ப - ரை.) சிற்கலையொடு திகழ்ந்த - ஞான கலையோடு விளங்குகிற, சிவலிங்கம்—, தீக்கை தன்னால்—, நல் குரு அளித்த அன்றே—, அமலன்—, என்றும் நண்ணுறும் - எப்பொழுதும் பொருந்துவன், பொற்பு உறும்-அழகுமிக்க, உணர்வின் மாறுய் - அறிவுக்கு

மாறுபட்டு, பொருந்தும் - பொருந்தின, ஆவாகநம் - ஆவாகநத்தை, பிற்பெறு தினங்கள் தோறும் பேணுதலால் - பிற்காலத்திலெல்லாம் போற்றுதலால், பேறு என் - பயன் யாது, எ - று.

(வி-ரை.) அளித்தல் - கொடுத்தல். அமலன் - மலரஹிதன்(சிவபிரான்). நண்ணுறும்- ஒருசொல். சிவலிங்கம் - ஸம்ஸ்காரம்பெற்ற லிங்கம். நண்ணுறுதல் - சந்நிதிகொண்டிருத்தல். உணர்வின் மாறாய் - ஞானவிரோதமாய். சிவபெருமான் அறிவுருவனாதலால் ஞான கலையென்றது சிவகலை என்றபடி. (உ)

என்றுநல் லிட்ட லிங்கத் திசைந்துநன் னிட்டை பெற்றோன்
றன்றனி யிலிங்கந் தன்னிற் சங்கரன் றன்னை வைத்துப்
பின்றனி விடுக்க லாகா துணிவிது பெருநூற் கென்று
தென்றமிழ் மலயத் துற்ற சிவமுனி யறிந்து கொள்ளே.

(ப - ரை.) என்றும் —, நல் இட்டலிங்கத்து இசைந்து —, நல் நிட்டைபெற்றோன் —, தன் தனி இலிங்கம் தன்னில் சங்கரன் தன்னை வைத்து —, பின்-பிறகு, தனி விடுக்கலாகா- தனியே விடலாகாது, பெருநூற்கு - பெரியநூல்களின், துணிவு இது என்று —, தென் தமிழ்மலயத்து உற்ற-தெற்கில் ஒப்பற்ற பொதிகையில் வாழ்கின்ற, சிவமுனி-அகத்தியனே, அறிந்துகொள் —, எ - று.

(வி - ரை.) விடுக்கலாகாது என்பது ஈறுதொகுத்தலாய் விடுக்கலாகா என நின்றது. துணிவு - நிச்சயம். சிவமுனி - அண்மைவிளி. சங்கரன்தன்னை வைத்துப் பின் தனி விடுக்கலாகா - தினந்தோறும் ஆவாஹநத்தையும் விஸர்க்கத்தையும் செய்யக்கூடாது. (௩)

ஆவாகநநிரசநத்தலம் - முற்றும்.

உ

ஓம் ஸ்ரீநீலகண்டாய நமঃ.

இருபத்தோன்றாவது

## (௨௧.) அட்டமூர்த்திநிரசநத்தலம்.

[அதாவது - லிங்கமானது பரிபூர்ணமான சிவனே என்னும் ஐஞானத்தை யாஸ்ரயித்து ஆவாஹநத்தை நிரஸநம் செய்ததுபோல, ப்ருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் சூரியன் சந்த்ரன் ஆத்மா ஆகிய இவைகள் பசுக்களாயிருக்கின்றன வென்றும், சிவத்தின் அவயவங்களென்றும், சிவத்தினிடத்தில் ஏகத்வத்தை யடைந்தவைகளல்ல வென்று மறிந்து, அவைகளின் பேதத்தையும் நிரஸநம் செய்த மாஹேஸ்வரனே அஷ்டமூர்த்திநிராஸகன் என்று சொல்லப்படுவென் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அத்தனோ டுயிர்க்கிங் கெவ்வா றயிக்கவத் துவித மாகா
தத்திற மிறைவ னுக்கு மம்புவி யாதி கட்கு
முய்த்துண ரட்ட மூர்த்தித் தன்மையவ் வொருவற் கென்றும்
வைத்தது மதிட்டா னத்தால் வயங்கொரு மையினு லன்றால்.

(ப - ரை.) அத்தனோடு உயிர்க்கு —, இங்கு எவ்வாறு அயிக்க அத்துவிதம் ஆகாதோ—, அத்திறம் - அவ்வாறே, இறைவனுக்கும் —, அம்புவி ஆதிகட்கும் —, உய்த்து உணர் - உய்த்துணர்தற்குரிய, அட்டமூர்த்தித்தன்மை —, அவ்வொருவற்கு —, என்றும் வைத்ததும் —, அதிட்டானத்தால் - அதிஷ்டானத்தால்தான், வயங்கு - விளங்குகிற, (வேறில்) ஒருமையினால் அன்று —, எ - று.

(வி - ரை.) அத்தன் - இறைவன். அம்புலி - உலகம். உய்த்துணர்தல் - ஊகித்தறிதல். ஒருமை - ஒற்றுமை. அதிஷ்டானம் - மேன்மை (ப்ரபாவம்). ஐக்யம் - ஒன்றின்தன்மை. (ஏகீபாவம்). (க)

காரிய ஞால மாதி கருத்தனெண் மகேச னுகுஞ்
சீரிய குலால னுகா செய்கட மதுபோ லீசன்
பாரிய வுலக மாகான் பராபர னன்மா வென்ப
ரேரிய நிலமுன் பாய வெண்வகை யுடம்பி னுக்கும். 138 · 2

(ப - ரை.) ஞாலம் ஆதி—, காரியம் ஆகும்—, ஒள் மகேசன்—, கருத்தன் ஆகும்—, சீரிய குலாலன் ஆகா—, செய் கடம் - செய்யப்பட்ட குடம், அதுபோல்—, ஈசன்—, பாரிய - பெரிய, உலகம் ஆகான்—, ஏரிய - அழகாகிய, நிலம் முன்பு ஆய - மண் முதலாகிய, எண் வகை உடம்பினுக்கும்—, பராபரன் - பராபரனே, ஆன்மா என்பர் (மேலோர்)—, எ - று.

(வி - ரை.) ஞாலம் ஆதி - பிரபஞ்ச முதலியவை. மேலோர் என்பது வருவித்துரைக் கப்பட்டது. குலாலனுகாது என்பது ஈறுதொகுத்தலாய் குலாலனுகா என நின்றது. எண்வகையுடம்பு - அட்டமூர்த்தி. பராபரன் - எல்லா தத்வங்களையும் ஆள்வோனுகிய ஈசன். (உ)

நிலமுத லாய வெல்லா மசேதந நின்ற வான்மா
மலமுறு மூட னுகு மாதலால் வயங்கு மீச
னலவகை யட்ட மூர்த்த மாகிய வுடம்பி னுக்கு
மிலகுறு மான்மா வாகு மீசற்கும் பேத முண்டோ.

(ப - ரை.) நிலம் முதலாய எல்லாம் அசேதநம்—, நின்ற ஆன்மா—, மலம் உறு மூடன் ஆகும்—, ஆதலால்—, வயங்கும் - விளங்குகிற, ஈசன்—, நல்ல வகை - நல்ல வகை யாகிய, அட்டமூர்த்தம் ஆகிய உடம்பினுக்கும்—, இலகுறும் - பிரகாசிக்கிற, ஆன்மா ஆகும் ஈசற்கும்—, பேதம் உண்டோ—, எ - று.

(வி - ரை.) அசேதநம் - அப்ராணி. மலம் - களங்கம். பேதம் - வேறுபாடு. சரீரமா யுள்ள ப்ருதிவி முதலியவைகளைக்காட்டிலும் பரமாத்மாவாகிய பரமேஸ்வரனுக்கு அபேத மும் பேதமும் இல்லை என்பதாம். (ங)

பார்புன லங்கி வங்கூழ் விசும்பொடு பரிதி திங்க
ளார்தரு மான்மா வென்னு மட்டமூர்த் தங்க டம்மிற்
சீர்கெழு பரமன் றன்னை வேறுறத் தெரிந்து காண்போ
னேர்தரு மட்ட மூர்த்தி நிராசக னுகு மன்றே.

(ப - ரை.) பார்—, புனல்—, அங்கி—, வங்கூழ்—, விசும்பொடு—, பரிதி—, திங்கள்—, ஆர்தரும் - பொருந்திய, ஆன்மா—, என்னும் அட்டமூர்த்தங்கள் தம்மில்—, சீர்கெழு - சிறப்புப் பொருந்திய, பரமன்—, வேறுற - வேறாக, தெரிந்து காண்போன்—, நேர்தரும் - நேர்ந்த, அட்டமூர்த்தி நிராசகன் ஆகும்—, எ - று.

(வி - ரை.) பார் - நிலம். புனல் - நீர். அங்கி - நெருப்பு. வங்கூழ் - காற்று. விசும்பு - ஆகாயம். பரிதி - சூரியன். திங்கள் - சந்திரன். பரமன் - மேலானவன் (மஹாதேவன்). நேர்தரும் என்பது ஒருசொல் (பகுதி நேர்தா). அங்கி அக்கியென்னும் வடசொற்றிரிபு. வேறுற - விலக்ஷணமாக. (ச)

அட்டமூர்த்திநிராசகத்தலம் - முற்றும்.

உ

ஓம் ஶிவாப்ரியாய நமஃ

## இருபத்திரண்டாவது

## (எ.) சர்வகதநிரசநத்தலம்.



[அதாவது - சிவன் ஸர்வகதனுயின் அஸ்ப்ருஶ்யனுவானுதலால் அந்த அஸ்ப்ருஶ்ய த்வத்தைப் பரிஹாரம் செய்வதினிமித்தம் அச்சிவத்தின் ஸர்வகதத்வத்தை லிங்கநிஷ்டையொன்றுனே நிரஸநம் செய்பவனும், பூஜாகாரியத்தினிமித்தம் சிவன் எந்தெந்தவிடத்திலுமிராமல் இஷ்டலிங்கத்தில் மாத்திரமே இருப்பன் என்னும் ஜ்ஞாநமுள்ளவனுமான மாஹேஶ்வரனே ஸர்வகதநிராஸகன் என்று சொல்லப்படுவன் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இருந்திடு மிறைவ னெங்கு மென்றிடி னிறைவற் கெங்கும்
வரந்தரு பூசை யாகுஞ் சிவலிங்க மாத்தி ரத்தி
லரந்தையி னிட்டை கூடா தாதலா லமல னெங்கும்
பரந்தவ னென்று கூறப் படானென வறிந்து கொள்ளே.

(ப - ரை.) இறைவன் எங்கும் இருந்திடும் என்றிடின்—, இறைவற்கு—, எங்கும்—, வரம் தரு பூசையாகும்—, சிவலிங்கம் மாத்திரத்தில்—, அரந்தை இல் - துன்பமில்லாத, நிட்டை கூடாது—, ஆதலால்—, அமலன்—, எங்கும் பரந்தவன் என்று - எவ்விடத்தும் வியாபித் திருப்பவனென்று, கூறப்படான்—, என அறிந்துகொள்—, எ - று.

(வி - ரை.) அமலன் - பரிசுத்தன் (சிவபிரான்). நிட்டை - பூஜை. (க)

நிறைந்தவ னெங்குமேனு நிமலன்ற னாத ரத்திற்
சிறந்துறு நிறைந்த வன்னி தன்மரஞ் செறித லேபோ
லறிந்திதை யமலன் றன்னை யனைத்தையும் விடுத்துத் தன்பா
லுறைந்திடு மிட்ட லிங்கத் துவந்தருச் சிக்க மாதோ.

(ப - ரை.) நிமலன்—, எங்கும் நிறைந்தவனேனும்—, நிறைந்த வன்னி - நிறைந்த நெருப்பானது, தன் மரம்செறிதலே போல-(விசேஷமாய்) வன்னிமரத்திலிருப்பதுபோல, தன் ஆதரத்தில் - தனது ஆதாரமாகிய (சிவலிங்கத்தில்), சிறந்துறும் - சிறந்து விளங்காநிற்பன், (ஆதலால்) இதை அறிந்து—, அனைத்தையும் விடுத்து—, அமலன்தன்னை—, தன்பால் உறைந்திடும் - தன்னிடத்து வாழ்கிற, இட்டலிங்கத்து—, உவந்து அருச்சிக்க - மகிழ்ந்து அர்ச்சிக்கக்கடவன், எ - று.

(வி - ரை.) நிமலன் - பரிசுத்தன் (சிவபெருமான்). வன்னி வஹ்நியென்னும் வடசொற்றிரிபு. சிறந்து - விசேஷமாய். (உ)

எங்கணு நிறைவோ னாக வியம்பினு மமலன் றன்னைத்
தங்குறு நூல்க ளெல்லாந் தனதுபற் றாகி நின்ற
மங்கல மாமி லிங்க மாதிய வடிவி லென்று
மங்கண னதிக மாக வமர்வன்பூ சனைப்பொ ருட்டு.

(ப - ரை.) அமலன் தன்னை—, எங்கணும் நிறைவோனாக—, தங்கு உறும் நூல்கள் எல்லாம் இயம்பினும்—, தனது பற்று ஆகி நின்ற—, மங்கலம் ஆம் - மங்களகரமாகிய, இலிங்கம் ஆதிய வடிவில்—, அங்கணன் - சிவபிரான், என்றும்—, பூசனைப்பொருட்டு—, அதிகமாக அமர்வன்—, எ - று,

(வி - ரை.) இயம்பல் - சொல்லல். பற்று - ஆதாரம் (ஆஶ்ரயம்). இலிங்கம் ஆதிய வடிவில் - சிவலிங்கமுதலிய உருவத்தில். பூசனை - பூஜை. (௩)

உருத்திர நினது மெய்யே துற்றநன் மங்க லத்தைப்
பரித்திடு மகோர மாகிப் பாவத்தி னகன்று நிற்கு
முரைத்ததி லுறைவோ னாகி யொளிர்வைநீ யென்று மிக்க
கருத்தொடு மறையா நிற்குங் கடிவருஞ் சுருதி யன்றே.

61 · 29.
140 · 2

(ப - ரை.) உருத்திர - உருத்திரனே, நினது மெய் ஏது - உனது யாதொரு லிங்க மூர்த்தியானது, உற்ற - பொருந்திய, நல் மங்கலத்தை-நல்ல மங்களகரத்தை, பரித்திடும் - தாங்குமோ, அகோரம் ஆகி - சாந்தமாகி, பாவத்தின் அகன்று நிற்கும்-பாவத்தினின்றும் நீங்கி நிற்குமோ, உரைத்த - சொல்லப்பட்ட, அதில் உறைவோன் ஆகி - அதில் வாசஞ் செய்பவனாகி, நீ ஒளிர்வையென்று-நீ விளங்குவை யென்று, மிக்க கருத்தொடும்-மேலான அபிப்பிராயத்தோடும், கடிவு அரும் - விலக்கவொண்ணாத, சுருதி - (உருத்திரோபநிடத) சுருதியானது, அறையாநிற்கும் - சொல்லாநிற்கும், எ - று. (௪)

ஆதலா லருச்ச னைக்க ணுயர்ந்தவ னனைத்தும் விட்டுக்
காதலாற் சிறந்து மூல காரணன் விளங்கா நின்ற
சோதியா மிட்ட லிங்கந் துணிவொடு பூசை செய்க
நீதியா மனைய னெங்கு நிறைதலை விலக்கி னானே.

(ப - ரை.) ஆதலால் அருச்சனைக் கண் உயர்ந்தவன்—, அனைத்தும் விட்டு—, காதலால் சிறந்து—, மூலகாரணன் விளங்காநின்ற—, சோதிஆம் இட்டலிங்கம்—, துணிவொடு பூசை செய்க—, நீதி ஆம் அனையன் - நீதி நெறியையுடைய அவன், எங்கும் நிறைதலை விலக்கினான் - எங்கும் வியாபித்திருத்தலை விலக்கினான், எ - று.

(வி - ரை.) காதல் - அன்பு. மூலகாரணன் - பரமசிவன். (௫)

சர்வகதநிரசநத்தலம் - முற்றும்.

உ

ஓம் உக்ராய நம:

## இருபத்துமூன்றாவது

## (அ.) சிவஜகந்மயத்தலம்.



[அதாவது - பின்னும், எவ்வாறாயினும் சிவன் ஸர்வகதனல்லாமல் ப்ராதேஶிகனானால் அவனுக்கு உத்கர்ஷம் எவ்வாறு நிகழும்? ஆதலால் அந்த லிங்க நிஷ்டையினால் மாஹேஶ்வரனுக்கு ப்ரயோஜனமில்லை யென்னும் ஆசங்கை நிகழுமாயின் கூறுகிறார். சிவன் பிரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக்கும் வல்லமையுள்ளவன், இவ்வாறாகிய ஓர் புத்தியினால் சிவோத்கர்ஷத்தி னிமித்தம் அங்கீகரிக்கப்பட் டிருப்பவனும், சிவன் எவ்விடத்து மிருத்தலை நிராகரிப்பினும் ப்ரமாண வல்லமையினால் அந்த ஸர்வகதம் எவ்வாறு அங்கீகரிக்கப்படுகிறதோ அவ்வாறே ப்ரமாண வல்லமையினால் ஸர்வவ்யாபகத்வத்தையும் அங்கீகரித்திருப்பவனுமான மாஹேஶ்வரனால் ஜகந்மயத்வத்தின் ஸித்திவிரும்பப்பட் டிருத்தல் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பூசனை நியமந் தன்னாற் பொருந்திலிங் கத்தின் கண்ணே
தேசுற விலங்கா நின்ற சிவன்றனை யருச்சிப் போனு
மீசனை யுலக மெல்லாம் வியாபக னென்னக் கொண்டு
பாசம தகல நின்று பாவிக்க வேண்டு மன்றே.

(ப - ரை.) பூசனை நியமம் தன்னால் - பூசனையாகிய நியமத்தினால், பொருந்து இலிங்கத்தின் கண்ணே - பொருந்திய இலிங்கத்தினிடத்தில், தேசு உற இலங்காநின்ற - ஒளி மிக விளங்குகிற, சிவன் தன்னை அர்ச்சிப்போனும்—, ஈசனை—, உலகமெல்லாம் வியாபகன்—, என்னக்கொண்டு—, பாசம் அகல நின்று—, பாவிக்கவேண்டும்—, எ - று.

(வி - ரை.) வியாபகன் - நிறைந்திருப்பவன். (௧)

மண்ணினிற் றோன்றுங் கும்ப மண்ணின்வே றாமோ வேலைக்
கண்ணினிற் றோன்று மொக்கு ணுரைதிரை கடலின் வேறோ
வெண்ணிடிற் பரனாற் றோன்று மிருஞ்சரா சரமே யாகப்
பண்ணுறுத் துலகமெல்லாம் பரனில்வே றாமோ வாகா. 135

(ப - ரை.) மண்ணினில் தோன்றும்-மண்ணினா லுண்டாகிற, கும்பம்-குடமானது, மண்ணின் - அந்த மண்ணினும், வேறு ஆமோ—, வேலைக்கண்ணினில் தோன்றும்-கடலிற் றோன்றுகிற, மொக்குள் - குமிழி, நுரை—, திரை—, கடலின் வேறோ—, எண்ணிடின்-யோசிக்குமிடத்தில், பரனால் தோன்றும்—, இரு சராசரமே ஆகப் பண்ணுறுத்த-பெரிய சராசர ரூபமாக இயற்றப்பட்டுள்ள, உலகம் எல்லாம்—, பரனில் வேறு ஆமோ—, ஆகா—, எ - று.

(வி - ரை.) வேலா என்னும் வடசொல்லினீற்றாகாரம் ஐகாரமாகி வேலை யென நின்றது. திரை - அலை. பண்ணுறுத்தல் - ஒரு - சொல் (பகுதி பண்ணுறு). (௨)

ஒண்டளிர் முதலா யுள்ள வுருவொடு மரநின் றாங்கு
மண்டல முதலா யுள்ள வடிவொடு பரம னிற்குங்
கண்டுறு மிழையி னாய காழக நூலா மாபோற்
பண்டுள வுலக மெல்லாம் பரன்மய மாகு மன்றே.

(ப - ரை.) ஒள் - ஒட்பமாகிய, தளிர் முதலாயுள்ள உருவொடு—, மரம் நின்றாங்கு-மரம் நின்றாற்போல, மண்டலமுதலாயுள்ள வடிவொடு—, பரமன் நிற்கும்—, கண்டுறும்-காணத்தக்க, இழையின் ஆய - இழையாலுண்டாகிய, காழகம் - ஆடையானது, நூல் ஆம் ஆறு போல் - நூலேயாவதுபோல, பண்டு உள்ள - பழமையாயுள்ள, உலகமெல்லாம்—, பரன் மயம் ஆகும்—, எ - று.

(வி - ரை.) மண்டலம் - உலகம். இழை - நூலிழை. பரன் மயம்-சிவமயம். ஆமாறு என்பது ஈறு தொகுத்தலாய் ஆமாவென நின்றது. (௩)

தன்னொரு சத்தி கொண்ட மலர்ச்சியாற் சகங்க ளாகி
மன்னுறு மிறைவி ரிந்து படங்குடி வடிவா மாபோ;
லிந்நிலை யதனா லெல்லா மிறைமயங் கயிற்றிற் றோன்றும்
பந்நகம் வேறி லாத பான்மைபோற் பரனி லொன்றும்.

(ப - ரை.) தன் - தனது, ஒரு - ஒப்பற்ற, சத்திகொண்ட மலர்ச்சியால்—, படம் குடி வடிவு ஆம் ஆறு போல் - ஆடையே வீட்டு வடிவாமாறுபோல, இறை - இறைவன், சகங்கள் ஆகி விரிந்து—, மன்னுறும் - நிலைபெறுவன், இந்நிலையதனால்—, எல்லாம்—, இறைமயம்—, கயிற்றில் தோன்றும் பந்நகம் வேறிலாத பான்மைபோல்—, பரனில் ஒன்றும் - பரமனிடத்தி லொடுங்கும், எ - று.

(வி - ரை.) பந்நகம் - காலினால் நடவாதது (பாம்பு). குடிவடிவு - கூடாரம். மலர்ச்சியால் - விரிவால். பரனில் ஒன்றும் - சிவாபின்னமாய் விளங்கும். (௪)

கயிற்றர விப்பி வெள்ளி குற்றியிற் கள்வன் மிக்க
வெயிற்படு கானற் றெண்ணீர் விண்ணிற்கந் தர்வ வூர்போற்
பயிர்ப்பறு நித்த சச்சி தாநந்த சிவத்தின் கண்ணே
செயப்படு பொருளாய்த் தோன்றுஞ் செப்பிய வுலக மன்றே.

(ப - ரை.) கயிற்று அரவு—, இப்பி வெள்ளி—, குற்றியில் கள்வன்—, மிக்க வெயில் படு - மிகுந்த வெயிலி லுண்டாகிற, கானல் தெள் நீர்—, விண்ணில் கந்தர்வவூர்—, போல் - (ஆகிய இவற்றைப்) போல, பயிர்ப்பு அறு - குற்றமற்ற, நித்த சச்சிதாநந்த சிவத்தின் கண்ணே—, செப்பிய உலகம் - சொல்லப்பட்ட வுலகமானது, செயப்படு பொருளாய்த் தோன்றும்—, எ - று.

(வி-ரை.) கயிற்றரவு - பழுதையிற்பாம்பு. இப்பி - முத்துச் சிப்பி (கிளிஞ்சில்). குற்றி - தறி (வெட்டுப்பட்ட கட்டை). கந்தர்வ ஊர் - கந்தர்வநகரம் (ஆகாயத்தில் இளஞ் சூரிய கிரணத்தினால் நீரில் தோன்றும் பல நிறங்கள்). இது, அடியில்வரும் ஆன்றோர் வாக்கி யங்களான் விசதம்.

கைவல்ய நவநீதம்.

கானனீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்வ நகர்க ளூர்
வானமை கயிற்றிற் பாம்பு மலடிசேய் முயலின் கோடு
பீனமாந் தறிபு மானிப்பி ரபஞ்ச மெல்லாம் பொய்யே
ஞானமெய் மகனே யுன்னை நம்மாணை மறந்தி டாதே.

ஞானவாசிட்டம்.

வெங்காதற் பெரும்பாம்பு நெளிபுற்றுங் குடும்பபரம் வெறும்பொய் யென்றே
இங்காசை யறநீக்கி யெல்லையிலாப் பிரமபதத் திருந்து வாழ்வாய்
சிங்கார கந்தர்வ நகரிருந்தென் சிதைவுற்றென் நீதோ நன்றோ
பங்கான மனைமக்கள் வாழ்ந்தாலென் கெட்டாலென் பாச மாயை. (ரு)

சிவஜகந்மயத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் கபாலிநே நமஃ

## இருபத்துநான்காவது

## (கூ.) பத்ததேசிகதேவத்தலம்.

[அதாவது - சிவனுக்கு ஜகந்மயத்வம் ஸித்தமாயினும் ஸூகரனை அந்தப் பரமேஸ் வரன் ஜகந்மயமா யிருப்பினும் சிவபக்தர்களின் ஹ்ருதய கமலத்தில் விஸேஷமாய் ப்ரகாசிக்கின்றனன் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சங்கர னுகு மீசன் சகமய மெனினு முள்ளப்
பங்கய மலரி லென்றும் பத்தர்பாற் சிறந்து தோன்றும்
பொங்குறு கயிலை பொன்னம் பொருப்பொடு மந்த ரத்து
மங்கது போல்வி சேடித் தமர்தரு மிறைவ னன்றே.

(ப - ரை.) சங்கரன் ஆகும் ஈசன்—, சகமயம் எனினும்—, பத்தர்பால் - பக்தர்க ளிடத்தில், உள்ளம் - அவர்கள் மனமாகிய, பங்கய மலரில் - தாமரை மலரில், என்றும் சிறந்து தோன்றும்—, பொங்குறு - விளங்குகின்ற, கயிலை—, பொன்னம் பொருப்பு ஒடு—, மந்தரத்தும்—, அங்கது போல் - அந்தப் பக்தருள்ளம் போல, விசேடித்து - அதிகமாய், இறைவன்—, அமர்தரும் - அமர்ந்திருப்பன், எ - று.

(வி - ரை.) சகமயம்-ப்ரபஞ்சரூபம். பொன்னம் பொருப்பு-பொன்மலை (மேருமலை). மந்தரம் - மந்தரகிரி. அமர்தரும் என்பதற்குப் பகுதி அமர்தா. (௧)

அலர்கதிர் நிறைந்து விம்பத் தளவுபட் டமர்தல் போல
வுலகுரு வாய்நி றைந்த வொருவனும் பத்தர் நெஞ்ச
மலர்மிசை யிலகு முன்றன் வடிவெனு மிலிங்க மீச
பலர்புகழ் பத்தர் தம்பாற் பதியுமென் றுரைக்கும் வேதம்.

(ப - ரை.) அலர் கதிர் - பரந்த கிரணங்களையுடைய சூரியன், நிறைந்து—, விம்பத் தளவுபட்டு அமர்தல்போல—, உலகு உரு ஆய் நிறைந்த ஒருவனும்—, பத்தர் நெஞ்ச மலர்மிசை—, இலகும் - விளங்குவான், ஈச—, உன் தன் வடிவு என்னும்—, இலிங்கம்—, பலர் புகழ்—, (உன்னை யண்டினவர்களாகிய) பத்தர்தம் பால்—, பதியும் என்று—, வேதம் உரைக்கும்—, எ - று.

(வி - ரை). விம்பம்-மண்டலம். பதிதல்-நிலைபெற்றிருத்தல். உலகுருவாய் நிறைந்த ஒருவன் என்றது சிவபெருமானை. ஈச - ஈசனே (ருத்ரனே), அண்மை விளி. லிங்கம்-லிங்கமூர்த்தி. (௨)

சுத்தர்க ளிடத்துந் தீர்ந்த துறவின ரிடத்து ஞானச்
சித்தர்க ளிடத்து மிக்க சிவவேடத் தவரி டத்து
முத்தம ரிடத்தும் பாச முதறுமா கேச ராகும்
பத்தர்க ளிடத்து மென்றும் பரசிவம் விளங்கு மன்றே.

(ப-ரை.) சுத்தர்கள் இடத்தும்—, தீர்ந்த துறவினர் இடத்தும்—, ஞானச் சித்தர்கள் இடத்தும்—, மிக்க சிவவேடத்தவர் இடத்தும்—, உத்தமர் இடத்தும்—, பாசம் உதறும்-பாசத்தை யுதறிவிட்ட, மாகேசர் ஆகும் பத்தர்கள் இடத்தும்—, என்றும்—, பரசிவம் விளங்கும்—, எ - று.

(வி - ரை.) தீர்ந்த-முற்றும் விட்டொழிந்த. துறவினர்-அகப்பற்று புறப்பற்றுக்களை முற்றும் விட்டொழித்தவர்கள், இவர்களை வடநூலார் ஸந்யாஸிகளென்பர், ஸம் முழுதும், ந்யாஸர் விட்டவர் என்பது பொருள். (௩)

இந்நிலை மகேச னென்போ னேதில ரிடத்திற் றீர்ந்த
தன்னக விழைவி னேனுய்த் தனுதிட்ட லிங்கந் தன்னின்
மன்னிய மனத்த னகிச் சகஞ்சிவ மயமாய்க் கண்டு
பின்னமி னிலையி னின்ற பெயர்ப்பிர சாதி யாவான்.

(ப - ரை.) இ நிலை - இந்த நிலையையுடைய, மகேசன் என்போன்—, ஏதிலரிடத்தில் தீர்ந்த - அயலாரிடத்தி னின்றும் ஒழிந்த, தன் அகம் - தன் மனத்தில், விழைவினேன் ஆய் - விருப்பமுள்ளவனுய், தனுது - தனது, இட்டலிங்கம் தன்னில்—, மன்னிய - நிலை பெற்ற, மனத்தன் ஆகி—, சகம் - ஜகத்தை, சிவமயமாய்க் கண்டு—, பின்னம் இல்-வேறுபாடில்லாத, நிலையில் நின்ற—, பெயர் - பெயரையுடைய, பிரசாதி ஆவான்—, எ-று.

(வி - ரை.) விழைவு - விருப்பம். சிவமயம் - சிவரூபம். ஏதிலர் - அந்ய தேவர். (௪)

பத்ததேகிகதேவத்தலம் - முற்றும்.

---

இவ்விதமாய் எக்காரணத்தினுல் லிங்கநிஷ்டை, பூர்வாஸ்ரயநிரஸநம், அத்வைத நிரஸநம், ஆஹ்வாநநிரஸநம், அஷ்டமூர்த்திநிரஸநம், ஸர்வகதநிரஸநம், சிவஜகன்மயத்வம் என்னும் ஏழுஸ்தலங்களுடனே கூடியிருத்தலால் எவன் வீரஸைவ வ்ரத ஸம்பந்ந னுனுனே அக்காரணத்தினுல் அவன் இரண்டாமவனுன மாஹேஸ்வரன் என்று அறியப்பட்டான்.

உ-வது. மாகேசத்தலம் முற்றிற்று.

## ௩-வது. பிரசாதித்தலம்.

[அதாவது - ஒவ்வொரு இந்த்ரிய த்வாரா அநுபவிக்கும் ஸௌக்யத்தை முதலில் லிங்கத்திற்கு ஸமர்ப்பணம் செய்து பின்னர் அதை ப்ரசாத புத்தியினால் மாஹேஸ்வரன் அநுபவித்தல் என்பது.]

### (இதனுட்பிரிவு)

கலிவிருத்தம்.

உரைத்தனை மகேசனல் லொழுக்க முற்றுநீ
கருத்துறு மிரேணுக கணேசப் பேரினோ
யருத்திகொண் மகேசனு மனைய னெங்ஙனம்
வரப்பிர சாதிதா னுகும் வண்ணமே.

(ப - ரை.) மகேசன் நல் ஒழுக்கம் முற்றும் நீ உரைத்தனை—, கருத்து உறும் - நற்கருத்தினையுடைய, இரேணுக கணேசப் பேரினோய்—, அருத்தி கொள் - அன்புகொண்ட, மகேசன் ஆம் அனையன் - மாகேசனுகிய அத்தன்மையன், வரப்பிரசாதி ஆகும் வண்ணம் - மேன்மையுள்ள பிரசாதி யாகும் விதம், எங்ஙனம் - எப்படி, எ - று.

(வி - ரை.) கருத்து ஈண்டைக் கேற்ப நற்கருத்து எனப்பட்டது. வரப்பிரசாதி - மேன்மையாகிய பிரசாதி. (௧)

தனக்குறு மிலிங்கநிட் டாதி சார்பினுல்
வினைப்பகை கடந்துள விறன்ம கேசனெண்
மனப்பிர சாதமே மருவு மாற்றினுற்
கனப்பிர சாதியா மென்பர் கற்றுளோர்.

(ப - ரை.) தனக்கு உறும் - தனக்கெனப் பொருந்திய, இலிங்க நிட்டாதி சார்பினுல் - லிங்க நிஷ்டை முதலிய சார்பினுல், வினைப்பகை கடந்துள்ள - வினைப்பகையை வென்றிருக்கிற, விறல் மகேசன் - வெற்றியுள்ள மாகேசன், ஒள் - அழகிய, மனப் பிரசாதமே மருவும் ஆற்றினுல் - மனத்தூய்மை யடைவதினுல், கனம் - மேன்மை பொருந்திய, பிரசாதி ஆம் என்பர்—, கற்றுளோர்—, எ - று.

(வி - ரை.) சார்பு - ஆஶ்ரயம். வினைப்பகை - வினையாகிய பகை. விறல் மகேசன் - வீரமாஹேஶ்வரன். கற்றுளோர் என்றது சைவாகமங்கள் கற்று வல்லோரை. (௨)

சாற்றுறு புகழ்ப்பிர சாதி யின்றல
வேற்றுமை * யேழ்வகைப் படும்வி ளம்புறிற்
றேற்றுறு மியற்பிர சாதித் தூய்த்தலம்
போற்றுற வாதியிற் பொருந்து மென்பவே.

* மற்றொருபிரிவு:—அதாவது அர்ப்பிதப்ரசாதி, அவதாநப்ரஸாதி, பரிணாமப்ரஸாதி என்று மூன்று வகைப்படுவன். சரீரஹஸ்தத்தினுல் ஸகல பதார்த்தங்களையும் இஷ்டலிங்கத்திற்குச் சமர்ப்பித்துக் கொள்பவனே அர்ப்பிதப்ரஸாதி. மனோஹஸ்தத்தினுல் பஞ்சேந்த்ரியங்களில் பஞ்சலிங்க ப்ரதிஷ்டை செய்து அவ்வவ்விடங்களில் வரும் சுகத்தைக் கொள்பவனே அவதாநப்ரஸாதி. அங்காஶ்ரயம் அறவே ஒழிந்து லிங்காஶ்ரயம் ஓங்கி வளர்ந்து பாவ ஹஸ்த பரிதனுனவனே பரிணாமப்ரஸாதி. ப்ரஸாதியைக் கலாப்ரஹ்மம் என வழங்குதலு முண்டு.

(ப - ரை.) சாற்றுறு - சொல்லப்பட்ட, புகழ் - புகழமைந்த, பிரசாதியின் தலம்-பிரசாதித் தலத்தினது, வேற்றுமை—, ஏழ் வகைப்படும்—, (அவற்றுள்) விளம்புறின்-சொல்லுமிடத்தில், தோற்றுறும் இயல் - காணப்படுகிற இலக்கணத்தையுடைய, பிரசாதி-பிரசாதியின், தூய்த்தலம் - பரிசுத்தமான தலம், போற்றுற-துதிக்க, ஆதியில் - முதலில், பொருந்தும்—, என்ப - என்று சொல்லுவர் (மேலோர்), எ - று.

(வி - ரை.) மேலோர் என்பது வருவித் துரைக்கப்பட்டது. (௩)

சற்குரு லிங்கசங் கமநற் பத்தர்பின்
சிற்பர சரணரொண் சேட மேயென
நிற்பவர் மான்மியம் யாம்நி கழ்த்துதும்
பொற்புறு முனிவர புகன்ற வாறரோ.

(ப - ரை.) பொற்பு உறும் - அழகமைந்த, முனிவர - முனிசிரேஷ்டனே, புகன்ற வாறு - (வேத முதலியவைகளிற்) சொல்லப்பட்டவாறே, சற்குரு—, லிங்கம் சங்கமம் நல்பத்தர்—, பின் சிற்பர சரணர்—, ஒள் சேடமே என நிற்பவர் மான்மியம்—, யாம் நிகழ்த்துதும் - யாம் சொல்லுவோம் (நீ கேட்பாயாக), எ - று.

(வி - ரை.) சற்குரு லிங்க சங்கம நற்பத்தர் பின் சிற்பர சரணரொண் சேடமே என நிற்பவர் மான்மியம் என்றதனால் குருமான்மியத்தலம், இலிங்கமான்மியத்தலம், சங்கமமான்மியத்தலம், பத்தமான்மியத்தலம், சரணமான்மியத் தலம், பிரசாதமான் மியத் தலம் என்பவை சொல்லப்பட்டன. (௪)

௨

ஓம் காமாரயே நமः

## இருபத்தைந்தாவது

## (க) பிரசாதித்தலம்.



[அதாவது - ஸ்ரீகுருமூர்த்தியின் தயையினாலும் லிங்கத்தின் தயையினாலும் நிஸ்ஸேஷமாய் ஜங்கமத்தின் தயையினாலும் கிடைக்கப்பெற்ற சித்த பரிபாக முள்ளவனும் சிவஜ்ஞாந ஸித்தியின் பொருட்டு லிங்கத்தினிடத்தில் இடப்பட்ட கரணமுள்ளவனும், லிங்கத்ரயத்தினிடத்தில் அர்ப்பிதமான பதார்த்தங்களை நுகர்பவனும், அந்த லிங்கார்ப்பித மல்லாதவைகளை விஸர்ஜிக்கிறவனுமான மாஹேஶ்வரனே ப்ரஸாதி என்று சொல்லப் படுவன் என்பது.]

கலிவிருத்தம்.

சிந்தனை நிருமலஞ் செறியு மக்குறி
சந்தத முயர்பிர சாத மென்பரால்
வந்துறு மதுசிவ லிங்க மாவுரு
வெந்தைத னருட்பிர சாதத் தெய்துமே.

(ப - ரை.) சிந்தனை - கருத்து, நிருமலம் செறியும் - நிர்மலமடைந்த, அ குறி - அந்த அடையாளமே, சந்ததம் - எப்பொழுதும், உயர் - உயர்ந்த, பிரசாதம் என்பர்—, வந்து உறும் அது-வந்து தோன்றுகின்ற அது, சிவலிங்கம் மா உரு-பெரிய சிவலிங்க ரூபமாகிய, எந்தை தன் - எமது தந்தையின், அருள் பிரசாதத்து - திருவருட் பிரசாதத்தினால், எய்தும் - கிடைக்கும், எ - று.

(வி - ரை.) எந்தை யென்றது சிவபெருமானை. (க)

நிருமலன் றனக்குற நிவேதி தஞ்செயு
மருநிரு மாலிய மரிய சைவர்தம்
பெருமன நிருமலம் பெறவ ளித்திடற்
கொருபெருங் காரண மென்ப ரோர்ந்துளார்.

(ப - ரை.) ஓர்ந்து உள்ளார் - ஆராய்ச்சியுள்ளவர், நிருமலன் தனக்கு - சிவபிரானுக்கு, உற நிவேதிதம் செய்யும்-மிகவும் நிவேதித்த, அரு - அரிய, நிருமாலியம்—, அரிய சைவர்—, தம்-தமது, பெருமனம் நிருமலம் பெற அளித்திடற்கு—, ஒரு பெரு காரணம் என்பர்—, எ - று.

(வி - ரை.) அரிய சைவர் என்றது வீரசைவரை. அளித்திடல் - அருள் செய்தல். ஓர்தல் - ஆராய்தல். சைவர் என்பர் என்றியையும். மனம் நிருமலம் பெறல் - மனம் தூய்தாதல். (உ)

போதகா ரணமெனும் புனித னற்பிர
சாதமா கியநிரு மாலி யந்தனைத்
தீதிலா மனப்பிர சாதத் திற்குணு
மீதுளா னற்பிர சாதி யென்பவே.

(ப - ரை.) போதகாரணம் என்னும் - ஞானத்துக்குக் காரண மென்று சொல்லப் படுகிற, புனிதன் நல் பிரசாதம் ஆகிய நிருமாலியம் தனை—, தீது இல்லா - குற்றமில்லாத, மனப் பிரசாதத்திற்கு உண்ணும் - மனத்தூய்மையின் பொருட் டுண்பதாகிய, ஈது உள்ளான் - இந்தச் செய்கையுள்ள மாஹேஶ்வரன், நல் பிரசாதி என்ப - நல்ல பிரசாதி யென்று சொல்லுவர் (பெரியோர்), எ - று.

(வி - ரை.) போதம் - ஞானம். புனிதன் என்றது - சிவபிரானை. நிர்மாலியந்தனை யென்பதில் தன் சாரியை. என்ப என்னும் பயனிலைக்கு எழுவாயாகிய பெரியோர் என்பது வருவிக்கப்பட்டது. (௩)

தத்துவ சுத்தியே யங்க சுத்திதா
னத்தனுண் டொழிபிர சாத மாயின
தொத்திட வரியதோ ருணர்விற் கேதுவாஞ்
சித்தநின் மலந்தனைச் செய்யு மென்பவே.

(ப - ரை.) அங்கசுத்தி தான்—, தத்துவ சுத்தியே-தத்துவ சுத்தியாகும், அத்தன்—, உண்டு ஒழி - அமுது செய்தொழிந்த, பிரசாதம் ஆயினது—, ஒத்திட அரியது-அடைதற் கரியதாகிய, ஓர் உணர்விற்கு - ஒப்பற்ற ஞானத்திற்கு, ஏது ஆம் - காரணமாகிய, சித்த நின்மலந் தன்னை - மனநிர்மலத்தை, செய்யும்-உண்டாக்கும், என்ப-என்று சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) அத்தன் - சிவபெருமான். அறிஞர் என்னும் எழுவாய் வருவித்து என்ப வென்பதை யதற்குப் பயனிலையா யமைக்கப்பட்டது. பிரசாதம் - சமர்ப்பிக்கப் பட்ட அந்நவகை. (௪)

தனக்கென வீட்டுபு தந்த யாவையு
நினைப்பரி தாகிய நிமலற் காக்கியே
மனப்பிர சாதமே மருவ வுண்கவென்
றனைத்தையு முணர்ந்தவ ரறைகு வாரரோ.

(ப - ரை.) தனக்கு என - தனக்கென்று, ஈட்டுபு தந்த - சம்பாதித்து வைத்த, யாவையும்—, நினைப்பு அரிதாகிய நிமலற்கு ஆக்கி—, மனப் பிரசாதமே மருவ உண்க என்று—, அனைத்தையும் உணர்ந்தவர்—, அறைகுவார்—, எ - று.

(வி - ரை.) ஈட்டுபு - செய்பு என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம், இது தந்த என்னும் வினைகொண்டு முடிந்தது. நிமலன் - சிவபிரான். அறைதல் - சொல்லல். மனப்பிரசாதம் - சித்த சுத்தி. (ரு)

பரனிரு மாலியம் பவம ருந்துநல்
குரவுட னிடரிடை யூறு கொல்வது
திரமுற வாயுளைச் செய்வ தின்பமே
தருவது முத்தியுந் தருவ தாகுமால்.

(ப - ரை.) பரன் நிருமாலியம்—, பவ மருந்து-பிறவிப்பிணிக்கு மருந்தாகும், நல்குரவுடன் - தரித்திரத்தோடு, இடர் - துன்பம், இடையூறு - காரியத்தடை, (இவற்றைக்) கொல்வது-அழிப்பதாகும், திரம் உற ஆயுளைச் செய்வது-ஆயுளை உறுதிப் படுத்துவதாகும், இன்பமே தருவது - இன்பத்தையே தருவதாகும், முத்தியும் தருவது ஆகும்—, எ-று.

(வி - ரை.) ஈண்டு, இச்செய்யுளைக் கவனிக்க:—

பிரபுலிங்கலீலை.

பசிக்கு மருந்து மாய்வீடு பயக்கும் வண்மை சேர்ந்துபவம்
ஒசிக்கு மரன்றன் பிரசாத வூதி யந்தா னுணர்ந்திங்கு
வசிக்குந் தகைமை சங்கரற்கே வருவ தன்றிப் பசிக்குணவு
புசிக்கு மனிதர் தமக்கென்றும் பொருந்தா தென்று னெம்பிரான்.

பரன் - சிவபிரான். பவம் - பிறவி, பாவம் எனினுமாம். நல்குரவு - தரித்திரம். பவ மருந்து - ஆத்யான்மிகம் ஆதிதைவிகம் ஆதிபௌதிகம் என்னும் முத்தாபங்களாகிய பெரும் பிணியை நீங்கச் செய்து சுகப்படுத்தும் ஔஷதம். (சு)

பத்திர மலரொடு பலாதி யாவையும்
வத்திர மைந்துடை வள்ளற் காக்கியே
துய்த்துறு நிலையினோர் தொன்மை பாதகக்
கொத்தினை யடியொடுங் கொல்வ ரென்பரே.

(ப-ரை.) பத்திரம் மலர் ஒடு பலம் ஆதி யாவையும் - பத்திரம் புட்பம் கனி முதலிய யாவையும், வத்திரம் ஐந்து உடை வள்ளற்கு - சிவபிரானுக்கு, ஆக்கி - சமர்ப்பித்து, துய்த்து உறும் நிலையினோர் - தாம் நுகர்தற் குரிய நிலையினை யுடையவர், தொன்மை-பழமையாகிய, பாதகக் கொத்தினை—, அடியொடும் கொல்வர்—, என்பர் - என்று சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) பலம் - கனி. வத்திரம் - முகம், இது வக்த்ரம் என்னும் வடசொற்றிரிபு. துய்த்தல்-உண்டல். பாதகக் கொத்து-பாவத்திரள். அறிஞர் என்பது வருவிக்கப்பட்டது. அடியொடும் கொல்லுதல் - வேரோடு களைதல். (எ)

சம்புவி னருட்பிர சாத மென்னவே
நம்புறு குருவொடு ஞான சங்கமர்
தம்பிர சாதமுந் தானு கர்ந்திடும்
வெம்புறு பவமெறி வீர சைவனே.

(ப-ரை.) வெம்பு உறும் - துன்பத்திற் கேதுவாகிய, பவம் எறி-பிறவியை யொழித்த, வீரசைவன்—, நம்பு உறு - நம்புதற் குரிய, குருவொடு ஞான சங்கமர் தம் பிரசாதமும்—, சம்புவின் அருள் பிரசாதம் என்னவே—, தான் நுகர்ந்திடும்—, எ - று.

(வி - ரை.) வீரசைவன் - லிங்கநிஷ்டன். ஞான சங்கமர் - ஞானத்தையுடைய ஜங்கமர். தம் - சாரியை. சம்பு - சிவபெருமான். என்னவே - போலவே. நுகர்ந்திடும் - உண்பான். (அ)

பிரசாதித்தலம் - முற்றும்.

---

உ

ஓம் அந்தகாஸுரஸூதநாய நம:

## இருபத்தாறுவது

## (உ.) குருமான்மியத்தலம்.

[அதாவது - ஸம்யக் ஜ்ஞாநமே ஸ்வரூபமாயுள்ளவனும், கபடத்தினால் மனித ரூபமுள்ளவனும், ஸாக்ஷாத் சிவரூபனாய் போகமோக்ஷாதி சகல ஸித்திகளைக் கொடுப்பவனுமான ஸ்ரீ ஸத்குருவினது பரிபூர்ணமான ரூபமே குருமான்மியம் என்பது.]

கலிவிருத்தம்.

சீரணி தருமெலாச் சித்தி கட்குமோர்
காரண வுயர்குரு வாகும் கண்ணுத
றாரணி தனிற்குரு வடிவஞ் சார்ந்தருட்
பேரணி கலமொடு பிறங்கு மென்பவே.

(ப - ரை.) சீர் அணி தரும் - சிறப்பாகிய அழகைப்பெற்ற, எல்லாச் சித்திகட்கும்—, ஓர் காரணம் - ஒப்பற்ற காரணமாகிய, உயர் குரு ஆகும் கண்ணுதல் - உயர்ந்த குருவாகிய சிவபெருமான், தாரணிதனில் - உலகத்தில், குருவடிவம் சார்ந்து—, அருள் - அருளாகிய, பேர் அணிகலம் ஒடு - பெரிய அணிகலத்துடன், பிறங்கும் - விளங்குவன், என்ப - என்று சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) கண்ணுதல் - நெற்றிக்கண்ணன் (சிவபெருமான்). அணிகலம்-ஆபரணம். பிறங்குதல் - விளங்குதல். அறிஞர் என்பது வருவித்து என்பவென்னும் பயனிலைக்கு எழுவாயாக்கப்பட்டது. (க)

நிட்கள வுணர்வுரு நித்த னாஞ்சிவன்
வட்கறு குருபர வடிவி னாலொரு
பெட்புறு சகளனாய்ப் பெரிது யிர்க்கெலாந்
தட்கரு மருள்செயச் சரிக்கு மென்பவே.

(ப - ரை.) நிட்களம் உணர்வு உரு - நிஷ்களமாகிய ஞானவடிவையுடைய, நித்தன் ஆம் சிவன்—, வட்கு அறு - கெடுதியற்ற, குருபர வடிவினால்—, ஒரு - ஒப்பற்ற, பெட்பு உறு - பெருமை யமைந்த, சகளன் ஆய்—, பெரிது - மிகவும், உயிர்க்கு எல்லாம்—, தட்கு அரும் - தடையில்லாத, அருள் செய—, சரிக்கும் - சஞ்சரிப்பான், என்ப - என்று சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) குருபரவடிவு - குருபரனுருவம் (அதாவது சகள நிஷ்கள வுருவம்). நிஷ்களரூபம் - அருவம். சகளன் - உருவமுடையவன். (உ)

பரசிவ னுயர்குரு பரம சற்குரு
வரமுறு பரசிவ னென்ன வைப்பரிவ்
விருவரும் வேறென வெண்ணு ரூன்பவம்
வெருவுற வருசிவ ஞானம் வேட்டுளோன்.

(ப - ரை.) பவம் வெருவு உற - பிறவியஞ்சும்படி, வரு - உண்டாகிற, சிவஞானம் வேட்டுளோன் - சிவஞானத்தை விரும்பினவன், பரசிவன்—, உயர்குரு என்ன—, பரம சற்குரு—, வரம் உறு-மேன்மை பொருந்திய, பரசிவன் என்ன—, (அறிஞர் தம்மனத்தில்) வைப்பர்—,(ஆதலால்) இவ்விருவரும் வேறு என—,எண்ணுறுன்-எண்ணமாட்டான்,எ-று.

(வி - ரை.) ஈண்டு, இச்செய்யுட்களைக் கவனிக்க:—

பிரபுலிங்கலீலை.

காந்தங் கண்ட விரும்புபோற் கண்ட பொழுதே யகிமிடன்ற
னேந்துஞ் செங்கைச் சிவலிங்க மெங்கள் பெருமான ங்கைமலர்
போந்தங் கிருந்த தஃதுபொழுதிற் புனிதன் சீவ கலேதானும்
சார்ந்தங் கிருந்த சிவலிங்கந் தன்னே டவன்பாற் சார்ந்ததால்.

ஐய நினையு நின்கரத்தி னடைந்த சிவலிங் கத்தினையும்
பொய்யில் குரவன் றனையுமொரு பொருளென்றறிந்தே னின்றென்று
செய்ய கமலத் திருவடியிற் சென்று தொழுதல் லமநாம
மெய்ய னெதிர்நின் றன்பினுல் விளம்பும் வனங்கா வலன்ன்றே.

பிறவியஞ்சப் பண்ணுவதாகிய சிவஞானத்தை யுடையவன் ஆசாரியரையும் சிவ பிரானையும் வேருக எண்ணமாட்டான் என்பதிவற்றுற் கூறப்பட்டது. (௩)

கரசர ணுதிகள் கடிக்குந் தன்மையா
னரரொடு குரவனை யொப்பு நாடுரு
ருரமுறு குரவனை யுவந்து போற்றியே
பரகதி வேண்டுநர் பணிதல் வேண்டுமே.

(ப - ரை.) உரம் உறு குரவனை - அறிவுள்ள குருவை, உவந்து போற்றி பரகதி வேண்டுநர்—,கரசரணுதிகள் கடிக்கும் தன்மையால்—, நரரொடு—, குரவனை—, ஒப்பு நாடுரூர் - உவமையாக எண்ணூர், பணிதல் வேண்டும் - (மற்றென்செய்வரெனின்) பணிதலே அவர்க்குத் தகுதியாவது, எ - று.

(வி - ரை.) உவந்து - விரும்பி. கரசரணுதிகள் - கைகால் முதலியவைகள். கடித்தல்-நிகர்த்தல், நரர்-மனிதர். பணிதல் என்பது ஏகாக்ரசித்தத்துடன் பூஜித்தல் எனினுமாம்.

நற்குரு பத்தியில் லார்க்கு நாடிறிற்
றற்சிவ பத்தியுஞ் சனித்தி டாதொரு
சிற்கன சிவனிடை செய்யும் பத்திபோற்
சற்குரு பத்தியுஞ் செய்யத் தக்கதால்.

(ப - ரை.) நல் குரு பத்தி இல்லார்க்கு—, நாடிறின் - ஆராயின், தன் சிவபத்தியும் சனித்திடாது - தனக்குரிய சிவநேசமும் உண்டாகாது, ஒரு - ஒப்பற்ற, சிற்கன சிவனிடை—, செய்யும் பத்திபோல்—, சற்குருபத்தியும்—, செய்யத்தக்கது—, எ - று.

(வி - ரை.) சிற்கனசிவன் - ஞானமாகிய பெருமையினையுடைய சிவபெருமான். இல்லார்க்கு சனித்திடாது என்றதனால் உள்ளவர்க்கு ஜனிக்கும் என்றதாயிற்று. (௫)

குருமான்மியத்தலம் - முற்றும்.

ஓம் ஶங்கராய நம:

# இருபத்தேழாவது

# (௩.) இலிங்கமான்மியத்தலம்.

[அதாவது - பரிபூர்ண ஜ்ஞாநமுள்ளவனுன ஸத்குருவினுல் குருமஹிமையையும், ஸ்வ ஸ்வரூப ஜ்ஞாநத்தையும் அறியும்படி போதிக்கப்பெற்ற சிஷனுல் ஜ்ஞாநஸ்வரூபமானதும் ஸர்வகாரணமானதும் ஸ்வயம் ப்ரகாஶமானதும் ஸர்வோத்க்ருஷ்டமானதுமே லிங்கமாம் என்று அறியப்பட்டது லிங்கமான்மியம் என்பது.]

கலிவிருத்தம்.

அருட்குரு மான்மிய வறிவின் மேன்மையான்
மருட்கழி பரசிவ லிங்க மான்மியம்
பொருட்பட வறிகுவன் புகழி லிங்கமே
தெருட்சக கார ணமென்னத் தேர்கவே.

(ப - ரை.) அருள் குரு மான்மியம் - அருட் குரு மான்மியத்தால் வந்த, அறிவின் மேன்மையான் - ஞானத்தின் மேன்மையை யுடையவன், மருள் கழி-மயக்கமொழிக்கின்ற, பரசிவலிங்க மான்மியம் - பரசிவலிங்க மான்மியத்தை, பொருள்பட - உண்மையாக, அறிகுவன்—, (ஆதலால்) புகழ் - புகழ்தற்குரிய, இலிங்கமே—, தெருள் - தெளிவை யுடைய, சக காரணம் என்ன - பிரபஞ்சகாரணமென்று, தேர்க - தெளிக, எ - று.

(வி - ரை.) மான்மியம் - மஹத்வம். (௧)

ஆதியாய்ச் சச்சிதா நந்த மாகிவான்
சோதியாய்த் தளையிலாச் சுத்த வாழ்வதாய்
வேதகா ரணமெனும் விமல லிங்கமோர்
நாதனுங் குருவலா னணுக லாகுமோ.

(ப - ரை.) ஆதியாய்—,சச்சிதாநந்தமாகி—, வான் - மேலான,சோதியாய்—, தளை இல்லா - பந்தமில்லாத, சுத்த வாழ்வதாய்—, வேத காரணம் என்னும் - வேதகாரண மென்று சொல்லப்படுகிற, விமல லிங்கம்—, ஓர் நாதன்ஆம் - ஒப்பற்ற நாதனுகிய, குரு அல்லால் - குருவையன்றி, நணுகல் ஆகுமோ - அடைதல் கூடுமோ, எ - று.

(வி - ரை.) வான்சோதி - பரஞ்சோதி. விமலம் - பரிசுத்தம். நாதன் - மஹா தேசிகன்.

சச்சிதாநந்தம் - இதில் ஸத் சித் ஆநந்தம் என மூன்று பதங்கள் அடங்கியிருக்கின் றன. ஸத் என்பது ஸத் என்ற வேதாந்த ஜ்ஞாநத்தினுல் காணக்கூடியதும், அஸத் என்று சொல்லக்கூடாததும், முக்காலத்திலும் பாதிக்கப்படாததும், முக்காலத்திலு முள்ளதும், யாதொன்றுளதோ அதுவும், ஒன்றே யிரண்டல்லாததும், ஸஜாதீய விஜாதீய பேதமில்லா ததும், ஸர்வ கல்பனைக்கும் அதிஷ்டாநமுமெனப் பொருள்படும். சித என்பது ஜ்ஞாந மெனப்பொருள்படும். அது ஸ்வயம் ப்ரகாசமே ஜ்ஞாநம், ஸகலத்தையும் ப்ரகாசிக்கச் செய்தலே ஜ்ஞாநம், ஆவரணமில்லாத சின்மாத்ரமே ஜ்ஞாநம், ஆத்யந்தமில்லாததும், விருத்தியின்மைக்கும் விருத்திக்கும் ஸாக்ஷியாகிய போதமே ஜ்ஞானம் எனப்பொருள் படும். ஆநந்தம் என்பது ஜலங்களுக்கு சமுத்திரம்போல ஸகல சேதநங்களுக்கு அதிஷ் டாநமாகிய நித்ய ஶுத்த அகண்டாத்வைதாநந்தைகரஸம் எனப் பொருள்படும். இனி அநந்தம் என்றும் சொல்வதுண்டு. இதனுல் உற்பத்திநாஶமில்லாததும், ஷட்பாவ விகாரமில்லாததும், சகல உபாதிகளுமற்றதும், கடாதிகளில் மண்போலும் குண்டலாதி

களில் ஸ்வர்ணம்போலும் படாதிகளில் நூல்போலும் அவ்யக்தம் முதலிய ஸ்ருஷ்டி ப்ரபஞ்சங்களில் வ்யாபித்துப் பூர்ணமாய் விநாசமுறாத சைதந்யம் எனப்பொருள்படும். இவ்விதமாய் ஆநந்தத்திற்கும் அநந்தத்திற்கும் பேதம் கூறுப வடநூலார். (உ)

வேதனு ரணருமவ் விசும்பிற் றோன்றிய
சோதியா மிலிங்கமுன் தொடர்ந்து காண்கில
ராதலா லியாவரே யறிவர் மாதுமை
பாதியா மிளிர்தரு பரம லிங்கமே.

(ப - ரை.) வேதன் நாரணரும் - பிரமவிஷ்ணுக்களும், அ விசும்பில் தோன்றிய - அந்த ஆகாயத்தில் தோன்றின, சோதி ஆம் இலிங்கம் - ஒளியுருவாகிய லிங்கத்தை, முன் - முற்காலத்தில், தொடர்ந்து காண்கிலர்-தொடர்ந்துகாணுமாற்றலிலராயினர், ஆதலால்—, மாது உமை பாதி ஆ - உமாதேவி பங்காக, மிளிர்தரு-விளங்குகிற, பரமலிங்கம்-மேலான லிங்கத்தை, யாவர் அறிவர் - யார் அறியவல்லவர், எ - று.

(வி - ரை.) அவ்விசும்பு என்றது ஒளியுருவாயத்தோன்றின ஆகாயத்தை. (ங)

பிறகட வுளர்நிக ராத பேருல
கிறைமைகொள் பவனெனு மியல்பை யென்றுமே
முறைதரு பரவசிவ லிங்க மூர்த்தியா
யுறைபர மன்றனக் கோதும் வேதமே.

(ப - ரை.) பிற கடவுளர் நிகராத - பிறதேவர் என்பவர் நிகர்க்காத, இயல்பை - தன்மையையும், பேருலகு-பெரியவுலகிற்கு, இறைமை கொள்பவன் - தலைமை பூண்பவன், என்னும் - என்கிற, இயல்பை - தன்மையையும், என்றும் - எக்காலத்தும், முறை தரு - முறையே தோன்றுகிற, பரசிவலிங்க மூர்த்தியாய்—, உறை - இருக்கிற, பரமன் தனக்கு—, வேதம் ஓதும் - வேதம் சொல்லும், எ - று.

(வி - ரை.) பரசிவலிங்க மூர்த்தியாகிய சிவபெருமானுக்கு வேறுதேவர்களோடு சமமாகாமையும் லோககாரணத்வமும் உண்டென்று வேதம் சொல்லாநிற்கும் என்பதிதன் கருத்து. (ச)

பெரிதுயர் தருபர சத்தி பீடிகை
தெரிதர வருபர சிவமி லிங்கமவ்
வரிதுணர் வுறுசிவ சத்தி யாகிய
வொருதனி யிலிங்கமே யுலகம் யாவுமே.

(ப - ரை.) பெரிது உயர் தரு - மிகவுமுயர்ந்த, பரசத்தி - பரசத்தியே, பீடிகை - பீடமாம், தெரி தர வரு - காணலாம்படி தோன்றுகிற, பரசிவம் - பரசிவமே, இலிங்கமாம்—, அ - அந்த, அரிது உணர்வுறு - உணர்தற்கரிய, சிவசத்தியாகிய—, ஒரு தனி இலிங்கமே—, உலகம் யாவும் - பிரபஞ்ச முழுதுமாயிருப்பது, எ - று.

(வி-ரை.) வருதல்-தோன்றுதல். பீடிகை பீடம் என்பன ஆசநம் என்னும் பொருள.

பற்பல மொழிகொடென் பயன்வல் பாசமோ
டுற்பவ மறுசிவ யோகி கண்மன
நிற்பதெவ் விடத்திலவ் விமல லிங்கமே
யற்புத முறுபரப் பிரம மாகுமால்.

(ப - ரை.) பற்பல மொழி கொடு - பலப்பல சொற்களால், என் பயன்—, வல் பாசமோடு—, உற்பவம் அறு - பிறவியற்ற, சிவயோகிகள் மனம்—, நிற்பது எவ்விடத்

தில்—, அ - அந்த, விமல லிங்கமே—, அற்புதம் உறு - ஆச்சரியகரமான, பரப்பிரமம் ஆகும்—, எ - று.

(வி - ரை.) கொடு மூன்றுவதன் சொல்லுருபு. (௬)

தாமரை மலர்மிசைத் தலைவ னாதியாங்
காமரு கடவுளர் சநக னாதியர்
மாமுனி வரர்சிவ லிங்கம் வந்தியாத்
தாமுறு நிலையினைத் தான டைந்தனர்.

(ப - ரை.) தாமரைமலர் மிசை - தாமரைமலர்மேல் (வீற்றிருக்கிற), தலைவன் ஆதியாம் - பிரமன் முதலாகிய, காமர் கடவுளர் - அழகிய தேவர்களும், சநகன் ஆதியர்-சநகன் முதலானவரும், மாமுனிவரர் - பெரிய முநிசிரேஷ்டரும், சிவலிங்கம் - சிவலிங்கத்தை, வந்தியா - வந்தித்தே, தாம் உறும் நிலையினை - தாம் அடைதற்குரிய நிலையை, அடைந்தனர்—, எ - று.

(வி - ரை.) காமர் -அழகு, இது உகரச்சாரியை யேற்றுகாமரு என்றாயிற்று. 'காமரு கழனிதோறுங் கடைசியர் குரவையீட்டம்' என்றார்பிறரும். வந்தியா செய்யாவென்னும் வாய்பாட் டிறந்தகாலவினையெச்சம். தாமுறுநிலை என்றது தத்தம் பதவிகளை. (௭)

## இலிங்கமான்மியத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் லலாடாக்ஷாய நமః

## இருபத்தேட்டாவது

## (௮.) சங்கமமான்மியத்தலம்.

[அதாவது—பயங்கரமான ஸம்ஸாரம் என்னும் இருளைப்போக்கி, காமக்ரோதாதிகளை ஜயித்து, மண் பொன் சத்ரு மித்ரு ஆகியவைகளைச் சமானமாய்க் கண்டு சகல சைதந்ய ஸ்வரூபமாயும் அத்யதிகமான சிவஜ்ஞாந யுக்தமாயு மிருப்பவனே ஜங்கமன் என்று கூறுவதே சங்கமமான்மியம் என்பது.]

கலிவிருத்தம்.

ஆரிய னருளினு லறிந்த டைந்துள
பேரிய லிலிங்கநற் பெருமை கொண்டுதான்
சீரிய வுலகெலாஞ் சிவமெ னத்தெரிந்
தோரியல் கொடுசரத் துயர்ச்சி கூறுவார்.

(ப - ரை.) ஆரியன் அருளினுல் - குருவருளால், அறிந்து அடைந்து உள்ள—, பேர் இயல் - பெருந்தன்மையையுடைய, இலிங்கம் - இலிங்கத்தின், நல் பெருமை கொண்டுதான் - சிறந்த பெருமையைக் கொண்டே, சீரிய - சிறந்த, உலகு எல்லாம்—, சிவம் எனத்தெரிந்தோர்—, இயல்கொடு - முறைமையால், சரத்து உயர்ச்சி - சங்கமத்தின் உயர்வை, கூறுவார்—, எ - று.

(வி - ரை.) ஆரியன் - சற்குரு. தான் என்பது ஈண்டுத் தேற்றேகாரப்பொருளில் வந்தது. சரம் - சஞ்சரிப்பது (ஜங்கமம்). (௧)

உலகுரு வாகிய வொருத னிச்சிவ
மிலகுறு தன்வடி வாக வென்றுமே
மலைவற வுணர்பவ னியாவன் மற்றவ
னலைவறு சங்கம மாகு மென்பவே.

(ப - ரை.) உலகு உரு ஆகிய—, ஒரு - ஒன்றாகிய, தனி - ஒப்பற்ற, சிவம் - சிவத்தையே, இலகுறு - விளங்குகிற, தன் வடிவாக—, என்றும்—, மலைவு அற - ஐயமற, உணர்பவன் யாவன்—, அவன்—, அலைவு அறு-சலநமற்ற, சங்கமம் ஆகும்-ஜங்கமமாவன், என்ப - என்றுசொல்லுவர் (மேலோர்), எ - று.

(வி - ரை.) ஈண்டு, இச்செய்யுளைக் கவனிக்க :—

பிரபுலிங்கலீலை.

தன்னைச் சிவமென் றறிந்தவனே யறிந்தான் றன்னை யுண்மையாத்
தன்னைச் சிவமென் றறியாதா னறியா னென்றுந் தன்னுண்மை
தன்னைச் சிவமென் றென்றறிவ னன்றே பாசந் தனைநீப்பன்
தன்னைச் சிவமென் றறியாதான் றனக்குப் பிறப்பே துணையாகும்.

உலகுரு - பிரபஞ்சரூபம். யாவன் - எவனோ. (உ)

சிவமய மெனச்சக மியாவுந் தேர்பவ
னெவனவன் மலவிரு ளிரிக்குஞ் சோதியா
யவிருணர் வுடையவ னெவன வன்றொட
ருவமையி லொருசிவ யோகி யென்பவே.

(ப - ரை.) சகம் யாவும் - உலகமுழுதும், சிவமயம் என—, தேர்பவன்-தெளிபவன், எவன் அவன் -எவனோ அவனும், மல இருள் இரிக்கும்-மலவிருட்டை யோட்டுகிற, சோதி யாய்—, அவிர் - பிரகாசிக்கிற, உணர்வுடையவன்—, எவன் அவன் - எவனோ அவனும், தொடர் உவமை இல் - பொருந்தும் உவமையில்லாத, ஒரு - ஒப்பற்ற, சிவயோகி - சிவ யோகிகளாவர், என்ப - என்று சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) சிவமயம் - சிவசொரூபம். இரித்தல் - துரத்தல். (ங)

முற்றுறு காமமுஞ் சினமு மோகமு
மற்றவ னுறவொடு பகையு மற்றவ
னுற்றிடு பசும்பொனோ டோடு மொன்றெனப்
பெற்றவ னுயர்சிவ யோகிப் பேரினோன்.

(ப - ரை.) முற்றுறு- நிறைந்த, காமமும்—, சினமும்—, மோகமும்—, அற்றவன்—, உறவொடுபகையும் அற்றவன்—, உற்றிடு - பொருந்திய, பசும்பொன்னோடு ஓடும் ஒன்று எனப் பெற்றவன்—, உயர் - உயர்ந்த, சிவயோகி பேரினோன் - சிவயோகி யென்னும் பெயரையுடையவனாவன், எ - று.

(வி - ரை.) சினம் - கோவம். (ச)

நீந்துறு மரியமெய்ஞ் ஞான மெய்ச்சிவ
சிந்தனை யுடையனுய்த் தீர்ந்த வெண்பவப்
பந்தனை யொருவிய பரம யோகியே
வந்துறு பரசிவ மயனெ னப்படும்.

(ப - ரை.) நந்துறும் - உயர்ந்த, அரிய—, மெய்ஞ்ஞானம் - உண்மைஞானமும், மெய் சிவசிந்தனை - உண்மையாகிய சிவத்தியானமும், உடையனுய்—, தீர்ந்த எண் பவம் -

அளவுகடந்த சங்கையையுடைய பிறவியாகிய, பந்தனை ஒருவிய - பந்தத்தை யொழித்த, பரமயோகியே—, வந்துறு - காணப்படுகிற, பரசிவமயன் எனப்படும் - மேலான சிவ மயனெனப்படுவேன், எ - று.

(வி - ரை.) நந்தல் - உயர்தல். (ரு)

ஓங்குறு புகழ்ச்சிவ யோகி தன்றுணைப்
பூங்கம லத்திரு வடியிற் பூந்துக
ளீங்கெவர் மனையிடை யிசைந்து வீழ்தரு
மாங்கது புண்ணியத் தலம தாகுமால்.

(ப - ரை.) ஓங்குறு - உயர்ந்த, புகழ் - புகழினையுடைய, சிவயோகி - சிவயோகியின்- துணை-இரண்டாகிய, பூ - பொலிவை யுடைய, கமலம்-தாமரைமலர்போன்ற, திருவடியில், திருவடியிலொட்டின, பூ துகள் - அழகியதூளி, ஈங்கு - இவ்வுலகில், எவர் மனையிடை - எவர்கள் வீட்டில், இசைந்து வீழ்தரும்-பொருந்திவிழுமோ, ஆங்கது - அந்தவீடே, புண்ணி யத்தலம் ஆகும்—, எ - று.

(வி - ரை.) ஓங்குறு ஒருசொல். ஆங்கது ஒருசொல், 'ஆங்கதுங்காட்டி டென்று வாங்கிடந்தான்' என்றார் மேலோரும். இதனீற்றில் தேற்றேகாரம் தொக்கது. (சு)

[1]சரு மளிதருஞ் சகல
பரிசன மழித்திடும் பாவ மியாவையும்
பரிசுறு மலிபுகழ்ப் பரம யோகியின்
கரிசறு பூசனை முத்தி காரணம்.

(ப - ரை.) பரிசு உறும் - நற்குணமமைந்த, மலி புகழ் - மிக்க புகழையுடைய, பரம யோகியின்—, தரிசநம் - தரிசநமானது, சகல சித்தியும் அளித்திடும்—, பரிசனம் - தீண்டுகை யானது, பாவம் யாவையும் அழித்திடும்—, கரிசு அறு - குற்றமற்ற, பூசனை - பூசையானது, முத்தி காரணம் - முத்திக்கேதுவாகும், எ - று.

(வி - ரை.) சித்தி - பலிதம். (எ)

மெய்ப்பர சிவனது மெய்ம்மை யுற்றுணர்ந்
தப்பர சிவசுகத் தழுந்து மேன்மையா
லொப்பறு மொருசிவ யோகி சங்கமிங்
கெப்பய னுதவிடா தியம்புங் காலையே.

(ப - ரை.) மெய் -உண்மையாகிய, பரசிவனது மெய்மை உற்றுணர்ந்து—, அ-அந்த, பரசிவ சுகத்து - பரசிவானந்தத்தில், அழுந்தும் - அழுந்துகிற, மேன்மையால்—, ஒப்பு அறும் ஒரு சிவயோகி சங்கம்—, இயம்புங்காலை -சொல்லுமிடத்து, எப்பயன் உதவிடாது- எந்தப் பயனைத் தராது, எ - று.

(வி - ரை.) மெய்மை - தாத்பர்யம். உற்றுணர்தல் - ஆராய்ந்தறிதல். சிவயோகி சங்கம் - சிவயோகியின் சேர்க்கை. எப்பயன் உதவிடாது என்ற வினா எல்லாப்பயன் களையும் உதவுமென்னும் பொருடந்து நின்றது. (அ)

சங்கமமான்மியத்தலம் - முற்றும்.

உ
ஓம் காலகாலாய நமஃ

## இருபத்தொன்பதாவது

## (ரு) பத்தமான்மியத்தலம்.

[அதாவது—ஹஸ்தங்களினால் சிவபூஜாரூபமான காயிக க்ரியையினாலும், சிவமூர்த்தி த்யானரூபமான மானஸிக க்ரியையினாலும், சிவஸ்தோத்ரரூபமான வாசிக க்ரியையினாலும், லிங்கரூபமான மஹாதேவனைப்பூஜித்து ஜநநமரணங்களைப் பக்தன் நாசஞ்செய்யத்தக்கதும், குரு லிங்க ஜங்கமர்களின் மாஹாத்ம்யங்களை யறிந்தவனென்று நிர்வசநம் செய்து கிடைக்கப்பெற்ற அதிசயமுள்ள சிவபக்தனது பேரன்புருவாயிருப்பதுமான மஹிமையே பத்தமான்மியம் என்பது.]

கலிவிருத்தம்.

குருவொடு மெய்ச்சிவ லிங்கங் கோதறு
சரமுறு புகழினைச் சாற்றுந் தன்மையாற்
பரவைசூ ழுலகினிற் பத்தன் றானுமவ்
வரமுறு துதியையவ் வாறு மன்னுமே.

(ப - ரை.) குருவொடு—, மெய்ச்சிவலிங்கம்—, கோது அறு - குற்றமற்ற சரம் - ஜங்கமம், (இவர்களுடைய) உறு புகழினை - மிக்கபுகழை, சாற்றும் தன்மையால் - சொல்லுந் தன்மையினால், பரவை சூழ் - கடல் சூழ்ந்த, உலகினில்—, பத்தன்தானும் - பக்தனானவனும், அ - அந்த, வரம் உறு துதியை-மேன்மையான துதியை, அவ்வாறு-அப்படியே, மன்னும் - அடைவன், எ - று.

(வி - ரை.) பரவை - ஆகுபெயர். (க)

சந்திர சேகரன் றன்னை நல்லர
விந்தமென் மனமொழி மெய்யி னாற்றினம்
வந்தனை புரிபவன் யாவன் மற்றவன்
பந்தம றுசிவ பத்த னாகுவான்.

(ப - ரை.) சந்திரசேகரன்தன்னை - சந்திரசேகரனை, நல் -அழகிய, அரவிந்தம் என்-தாமரைமலர் என்கிற, மனம் மொழி மெய்யினால் - மநோ வாக் காயங்களால், தினம் - நாள்தோறும், வந்தனை புரிபவன் யாவன்—, அவன் - அவனே, பந்தம் அறு - பந்தமற்ற, சிவபத்தன் ஆகுவான்—, எ - று.

(வி - ரை.) சந்திரசேகரன் - சந்திரகண்டத்தைச் சிரத்திலணிந்திருப்பவன் (சிவபெருமான்). யாவன் - எவனோ என்னும் பொருடந்தது. அவன் என்பதனீற்றில் தேற்றேகாரம் தொக்கது.

பாவமா யுறுசிவ பத்தி யென்பதி
யாவரா யினும்பெறற் கரிய திங்கது
மேவினா னியாவன்மற் றவன் விளம்புறிற்
றாவிலா துயர்சிவ பத்தன் றானரோ.

(ப - ரை.) பாவமாய் உறு - பாவனையாகப் பொருந்துகின்ற, சிவபத்தி என்பது—, யாவர் ஆயினும் பெறற்கரியது - எவராயினும் பெறுதற்கரியதாகும், இங்கு - இவ்வுலகில், அது மேவினான் யாவன் - அதைப்பெற்றவன் எவனோ, அவன் - அவனே—, விளம்புறின் - சொல்லுமிடத்தில், தாவிலாது - கெடாது, உயர் - உயர்ந்த, சிவபத்தன் - சிவபக்தனாவான், எ - று.

(வி - ரை.) யாவன் என்பதனீற்றில் வினு வோகாரம் தொக்கது. அவன் என்பத னீற்றில் தேற்றேகாரம் தொக்கது. (௩)

பவப்பிணி யுளர்க்கிறை பத்தி யின்றெனிற்
றவப்பல வேதமுஞ் சாத்திரங்களு
முவப்புறு விரதமு மொண்ம கங்களு
மவர்க்குத வுறுவவென் றறிந்தி லோமரோ.

(ப - ரை.) பவப்பிணி உளர்க்கு - பிறவிப்பிணி யுள்ளவர்க்கு, இறை பத்தி - சிவபக்தி, இன்று எனின் - இல்லையாயின், தவப்பல - மிகப்பலவாகிய, வேதமும்—, சாத்திரங்களும்—, உவப்பு உறு - மகிழ்ச்சியைத் தருகிற, விரதமும்—, ஒள் - அழகிய, மகங்களும் - யாகங் களும், அவர்க்கு—, உதவுறுவ என்று - உதவுமென்று, அறிந்திலோம்—, எ - று.

(வி-ரை.) இறை - ஆகுபெயர். தவ-மிக. பிறவிநோயால் வருந்துவோர்க்குச் சிவபக்தி யுண்டாயின் அந்நோயொழிவேயன்றி, மற்றெல்லாப் பயன்களுமுண்டா மென்பதிதன் கருத்து. (௪)

உறுதிகொள் பரசிவ பத்தி யுற்றிடார்க்
கறவினை யெனினுமே யவம தாகுமாற்
சிறுவிதி தனக்குமுன் செய்த வேள்விதான்
மறுதலை யுறுபயன் வழங்கிற் றென்பவே.

(ப - ரை.) உறுதி கொள் - உறுதியைக்கொண்ட, பரசிவபத்தி உற்றிடார்க்கு - பரசிவ பக்தியைப் பெறாதவர்க்கு, அறவினை எனினும் - தருமச்செய்கையும், அவம் ஆகும் - வீணா கும், சிறுவிதி தனக்கு - தக்கனுக்கு, முன் - முற்காலத்திற், செய்த வேள்விதான் - அவன் செய்த யாகமே, மறுதலை - மறுதலையாகிய பாவத்தின், உறு பயன் - மிக்கபயனை, வழங்கி ற்று - அவனுக்குக் கொடுத்தது, என்ப - என்றுசொல்லுவர் (பெரியோர்), எ - று.

(வி - ரை.) வேள்விதான் என்பதில் தான் தேற்றேகாரப்பொருடந்து நின்றது. நவப் பிரமர்களி லொருவனாதலால் தக்கனைச் சிறுவிதியென்றார். மறுதலை - விரோதம். (௫)

மிக்குறு பாவவல் வினைய னாயினும்
புக்கர பத்தியாற் புனித னாகுவான்
றக்கதன் றந்தையைக் கொன்ற தண்டிதான்
சிக்குறு பத்தியாற் சிவம தாயினன்.

(ப - ரை.) மிக்குறு - மிகுந்த, வல் - வலிய, பாவ வினையன் ஆயினும் - பாவத்தொழிலை யுடையவனே யாயினும், புக்க - தான்மேற்கொண்ட, அரபத்தியால் - சிவபக்தியால், புனி தன் ஆகுவான் - பரிசுத்தனாவான், தக்க - தகுதியாகிய, தன் தந்தையைக் கொன்ற—, தண்டி—, சிக்குறு - தான்பெற்றிருந்த, பத்தியால்—, சிவம் ஆயினன்—, எ - று.

(வி-ரை.) தண்டி - சண்டேசுரன். பாவவினை - பாவத்தையுண்டாக்குந்தீத்தொழில்.

அறமொடு பாவமு மமல பத்தியா
னிறைபவர் தமக்கிலை நித்த பத்திதா
னறுபவர் தமையடைந் தார்த்துக் கொண்டுபோய்ப்
பிறவியாங் கடலினுட் பெரித முத்துமால்.

(ப - ரை.) அமல பத்தியால் இறைபவர் தமக்கு—, அறமொடு பாவமும் இல்லை—, நித்தம் - சாசுவதமான, பத்தி அறுபவர்தமை - பக்தியில்லாதவரை, (அந்தப்பத்தியின்மை யானது) அடைந்து - சேர்ந்து, ஆர்த்துக் கொண்டுபோய் - ஆரவாரித்துக் கொண்டுபோய், பிறவியாம் கடலின் உள்-பிறவியாகிய கடலில், பெரிது அழுத்தும்-மிகவும் அழுத்திவிடும்.

(வி - ரை.) அமலபத்தி - மெய்ப் பத்தி. அமலம் - பரிசுத்தம். . (எ)

அரவணி கடவுளை யடைந்த பத்தர்கட்
கிருவினை செயுமிட ரில்லைப் பொங்கொலிப்
பரவையின் முகட்டெழும் பரிதி வானவன்
புரவிக டமையிருட் டுயர்பொருந்துமோ.

(ப - ரை.) அரவு அணி கடவுளை அடைந்த பத்தர்கட்கு—, இருவினை செய்யும் - இருவினை செய்கிற, இடர் இல்லை—, பொங்கு ஒலி - மிக்க ஓசையையுடைய, பரவையின் முகட்டு எழும் - கடலின் முகட்டில் உதிக்கிற, பரிதி வானவன்-சூரியதேவனுடைய, புரவிகள் தம்மை-குதிரைகளை, இருள் துயர் - இருட்டினாலுண்டாகுந் துன்பம், பொருந்துமோ-சேருமோ, எ - று.

(வி - ரை.) அரவணி கடவுள் - சிவபெருமான். இருவினைசெய்யும் இடர் - கர்ம சம்பந்தம். பொருந்துமோ என்னுமோகாரம் எதிர்மறை. (அ)

பந்தனை வினைசிவ பத்தர் தங்களை
வந்தணை வுறுகில மரைமுட் டாட்சிறு
தந்துவி னாகிய சங்கிலித் தொடர்
கந்தொடி மதமுமிழ் களிற்றைக் கட்டுமோ.

(ப - ரை.) பந்தனை வினை - பந்தப் படுத்துவதாகிய கர்மம், சிவபத்தர் தங்களை—, வந்து அணை வுறுகில - வந்துசேரா, மரை - தாமரையின், முள்தாள் - முள்ளந்தாளின், சிறு தந்துவின் ஆகிய - சிறு நூலாற் செய்யப்பட்ட, சங்கிலித் தொடர்—, கந்து ஒடி - கட்டுத்தறியை முறிக்கிற, மதம் உமிழ் - மதநீரை யுமிழ்கின்ற, களிற்றை - யானையை, கட்டுமோ—, எ - று.

(வி-ரை.) மரை - முதற்குறை. தந்து-நூல். கட்டுமோ என்னுமோகாரம் எதிர்மறை.

மறையவ னரசனல் வணிகன் சூத்திரன்
பிறனென விலைசிவ பத்தி பெற்றுளா
னிறையவ னெனவுல கெங்கும் வந்தனை
பெறுபவ னவனெனப் பேசும் வேதமே.

(ப - ரை.) சிவபத்தி பெற்றுளான்—, மறையவன்—, அரசன்—, நல் வணிகன்—, சூத்திரன்—, பிறன் - (இவர்க்கு) வேறுயுள்ளவன், என இல்லை - என்றில்லை, இறையவன் என - இறைவனேயாவனென்றும், உலகு - இவ்வுலகில், எங்கும்-எவ்விடத்தும், வந்தனை பெறுபவன் - பூஜ்யதையைப் பெறுவோன், அவன் என - அவனென்றும், வேதம் பேசும் - வேதம் சொல்லும், எ - று.

(வி - ரை.) வேதியன் முதலிய நான்கு வருணத்தானாயினும் இவற்றிற்கு வேறானவனாயினும் சிவபக்தியுடையவனானால், அவன் இவ்வுலகத்தார் எல்லாராலும் புகழப்படுவேன் என்பதிதன் கருத்து. மறையவன் - ப்ராஹ்மணன். அரசன் - க்ஷத்ரியன். வணிகன் - வைஸ்யன். சூத்திரன் - ஶூத்ரன். பிறன் - சண்டாளன். (கo)

இறைவனை யடைந்தவர்க் கில்லைச் சாதியின்
றிறமெரி தழலிடைச் சேரிற் பேதமெவ்
விறகுள வுயர்சிவ பூசை வேட்டுளோர்
கறைதவிர் நிலமிசைக் கணங்க ளல்லரோ.

(ப - ரை.) இறைவனை அடைந்தவர்க்கு—, சாதியின் திறம் - சாதி வேற்றுமை, இல்லை—, எரி தழலிடை சேரின்-எரிகின்ற நெருப்பிற் சேர்ந்தால், எவ்விறகு-எந்த விறகு, பேதம் உள - வேற்றுமையாயிருப்பன, உயர் சிவபூசை வேட்டுளோர் - உயர்ந்த சிவ பூசையை விரும்பி யிருப்பவர், கறைதவிர் நிலமிசை-குற்றமற்ற வுலகின்கண்ணுள்ள, (சிவ) கணங்கள் அல்லரோ—, எ - று.

(வி - ரை.) இறைவன் - சிவபெருமான். கயிலைச் சிவகணங்களின் வேறுபடுத்தற்கு நிலமிசைக் கணங்கள் என்றார். அல்லரோ வென்னும் ஓகாரம் உடன்பாட்டுப் பொருளது. கணங்கள் - கணிதிபர்கள். (கக)

பத்தமான்மியத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் க்ருபாநிதயே நம:

முப்பதாவது

## (௩௰.) சரணமான்மியத்தலம்.

[அதாவது - மாயா ஸம்பந்தமான வைபவத்தினால் கூடியிருக்கும் ப்ரஹ்மாதி தேவர்களை விட்டுப் பரசிவனை யாஶ்ரயித்து மோக்ஷத்துக்கு அவனே காரணன் என்று அறிந்தடைதலே சரணமான்மியம் என்பது.]

கலிவிருத்தம்.

அணங்கறு குருபர னாதி மான்மிய
மிணங்குற வுணர்த்துறு செயலெ லாங்கொடு
பணிந்திட வருசிவன் பதியெ னத்தெரிந்
துணர்ந்திடல் சரணநற் றலமென் றோதுவார்.

(ப - ரை.) அணங்கு அறு - துன்பமற்ற, குருபரன் ஆதி மான்மியம் - குருசிரேஷ்டன் முதலியோருடைய மான்மியத்தை, இணங்குற - இணக்கமாக, உணர்த்துறு செயல் எல்லாம் கொடு - அறிவிக்கிற செயல் முழுதுங்கொண்டு, பணிந்திட - வணங்க, வரு -வருகிற, சிவன்—, பதி என தெரிந்து - தலைவனென்று தேர்ந்து, உணர்ந்திடல் - அறிந்திடுதலை, நல் - நல்ல, சரணத்தலம் என்று ஓதுவார் (அறிஞர்)—,எ - று.

(வி - ரை.) செயல் - செய்கை. உணர்ந்திடல் என்பதில் இடு துணிவுப் பொருள் விகுதி. ஓதுவார் என்னும் பயனிலைக்கு அறிஞர் என்னுமெழுவாய் வருவிக்கப்பட்டது. (க)

மாயையால் வருமொரு வாழ்வு பெற்றுள
சேயநான் முகன்முதற் றெய்வம் விட்டொரு
தூயனா கியபர சிவனைத் துன்னுத
லாயினு கமமது சரண மாகுமால்.

(ப - ரை.) மாயையால் வரும்-மாயையாலுண்டாகிய, ஒரு வாழ்வு பெற்றுள்ள—, சேய - செவ்விய, நான்முகன் முதல் - பிரமன் முதலிய, தெய்வம் விட்டு - தெய்வங்களை விட்டு, ஒரு - ஒப்பற்ற, தூயனாகிய-பரிசுத்தனாகிய, பரசிவனை—, துன்னுதல் - அடைதலை, ஆகமம் ஆயின் - ஆகமம் ஆராயுமாயின், அது சரணம் ஆகும்—, எ - று.

(வி - ரை.) வாழ்வு - (சுவர்க்கலோகச்) செல்வம். (உ)

முக்கண னேயுயிர் முழுது மாள்பவ
னக்கட வுளையரு ளெனவ டைக்கலம்
புக்கவன் புகல்சர ணாக தப்பெயர்
தக்கவ னெனவுரை தருவர் மேலையோர்.

(ப - ரை.) முக்கணனே—, உயிர் முழுதும் ஆள்பவன்—, அக்கடவுளை—, அருள்என-அருள்செய்யக்கடவை யென்று, அடைக்கலம் புக்கவன்—, புகல் - சொல்லப்பட்ட, சரணாகதப் பெயர் தக்கவன் என - சரணாகத னென்னும் பெயருக்குத் தகுந்தவனென்று, மேலையோர் - மேலோர், உரைதருவர் - சொல்லுவர், எ - று.

(வி - ரை.) முக்கணன் மூன்றுகண்களையுடையவனாகிய சிவபெருமான். மேலையோர் முன்னோர் எனினுமாம். உரைதருவர் - ஒருசொல் (உரைதா பகுதி). (ங)

விடுத்துறு புலன்வழி விண்ணு ளோர்பதத்
தெடுத்துள வவாவகன் றிறையை முத்திவேட்
டடுத்தவ னேசர ணார்த்தி யென்பவன்
குடத்தினி லுதித்துயர் குவட்டி லுற்றுளோய்.

(ப - ரை.) குடத்தினில் உதித்து—, உயர் - உயர்ந்த, குவட்டில் - பொதியமலையில், உற்றுளோய் - வாழ்பவனே, உறு புலன் வழி - மிக்க புலன்வழியை, விடுத்து—, விண்ணுளோர் பதத்து - தேவர்களுடைய பதவியில், எடுத்துள அவா அகன்று - கொண்டிருக்கிற ஆசையை நீங்கி, முத்தி வேட்டு-முத்தியை விரும்பி, இறையை அடுத்தவனே—,சரணார்த்தி என்பவன் - சரணார்த்தி யென்று சொல்லப்படுபவன் ஆவன், எ - று.

(வி - ரை.) குடத்தினில் உதித்தலால் அகத்தியருக்குக் கும்பமுனி யென்னும் பெயர் வழங்கும். புலன்வழி -சப்தாதி விஷயமார்க்கம். இறை- ஆகுபெயர். அடுத்தவனே யென்பதில் ஏகாரம் தேற்றம். உறுபுலன்வழி விடுத்து - விஷயபோகத்தில் விருப்பமற்று.

மனமொழி மெய்வினை கொண்டு வாண்மதி
புனைமுடி யிறைவனைப் புகலென் றெய்தினோர்க்
கினைவுறு செயன்மலி யாக மாதியாம்
வினைகொடு பெறுபய னியாது வேண்டியே.

(ப-ரை.) மனம் மொழி மெய் வினை கொண்டு-மனோ வாக் காயங்களின் தொழிலைக் கொண்டு, வாள் மதி - ஒளியையுடைய சந்திரகண்டத்தை, புனை - தரித்த, முடி - திருமுடியையுடைய, இறைவனை - பரமசிவனை, புகல் என்று - அடைக்கல மென்று, எய்தினோர்க்கு - அடைந்தவருக்கு, இனைவு உறு - வருத்தமிகுந்த, செயல் மலி - தொழில் நிறைந்த, யாகம் ஆதி ஆம் - யாகமுதலாகிய, வினைகொடு - தொழில்களால், வேண்டி பெறு பயன் யாது—, எ - று.

(வி - ரை.) திரிகரணத்தானும் சிவபெருமானை வழிபடுவோர்க்கு, யாகாதி கர்மங்களைக்கொண்டு தேவர் முதலியவர்களைத் திருப்தி செய்வித்தலால் பயனொன்று மில்லை யென்பதிதன் கருத்து. (ரு)

பண்ணிய மகவினை பலவினாற் கெடும்
விண்ணுறு பதமலால் வேறுண் டாகுமோ
கண்ணுதல் சரண்புகுங் கருத்தின் மேன்மையோ
னண்ணுவ தழிவுறு ஞான வீடரோ.

(ப-ரை.) பண்ணிய - செய்த, மக வினை பலவினால் - பல யாகத் தொழில்களால், கெடும் - அழிகிற, விண் உறு பதம் அல்லால் - சுவர்க்க பதவியே யன்றி, வேறு உண்டாகுமோ—, கண்ணுதல் சரண் புகும் கருத்தின்-பரமசிவனது சரணத்தை யடையவேண்டுமென்னுங் கருத்தினையுடைய, மேன்மையோன் - மேலோன், நண்ணுவது - அடைவது, அழிவுறு - அழியாத, ஞான வீடு—, எ - று.

(வி-ரை.) மகம் - யாகம். உண்டாகுமோ வென்னுமோகாரம் எதிர்மறை. (௬)

தனையடை பவர்க்குத்தண் ணளிசெய் கற்பக
மெனுமர னிணையடி புகலென் றெய்துறி
னினைவரும் பாதக நீச ராயினும்
பினையவர் பெறுதபே றேது பேசினே.

(ப-ரை.) தன்னை அடைபவர்க்கு—, தண்ணளி செய் - கிருபை செய்கிற, கற்பகம் என்னும் - கற்பகமரமென்று சொல்லப்படுகிற, அரன் - பரமசிவனது, இணை அடி - இரண்டு சீர்பாதங்களை, புகல் என்று எய்துறின் - அடைக்கல மென்றடைந்தால், நினைவு அரு - நினைத்தற்கரிய, பாதகம் - பாபஞ் செய்கிற, நீசர் ஆயினும்—, பேசின் - சொல்லுமிடத்து, அவர் பெறுத பேறு - அவர் அடையாத பயன், பின்னை ஏது - வேறெது, எ-று.

(வி-ரை.) தண்ணளி - ஒருசொல். எய்துறின் என்பதற்குப் பகுதி எய்துறு, ஆதலால் இதுவுமொருசொல்லே. பின்னை யேது என்றவினா, வேறொன்றுமில்லை யெனப் பொருள் தருதலால் எதிர்மறைப் பொருளது. (௭)

பரமனை யடைதரும் பாச நெஞ்சினோன்
பெருமைகொள் பிறவியே பிறவி யன்னவன்
றிருமல ரடியிணை சேர்ந்தி டாதவர்
வருமவப் பிறப்பினைப் பிறப்பில் வைத்திடார்.

(ப-ரை.) பரமனை—, அடைதரும் - அடைதற்குரிய, பாசம் நெஞ்சினோன் - விருப்பமுள்ள மனத்தினையுடையவனது, பெருமைகொள் - பெருமையைக்கொண்ட, பிறவியே பிறவி - (மானிடப்) பிறப்பே பிறப்பாவது, அன்னவன் - அந்தப் பரமசிவனது, திரு - அழகிய, மலர்-தாமரைமலர் போன்ற, அடி இணை-திருவடியிணையை, சேர்ந்திடாதவர்—, வரும் - பிறக்கிற, அவப் பிறப்பினை - வீண் பிறப்பை, பிறப்பில் வைத்திடார் - பிறவியில் வைத்தெண்ணமாட்டார் (அறிஞர்), எ - று.

(வி-ரை.) பரமன் - சிவபெருமான். அவம் - வீண். சிவபெருமானை யடையவேண்டுமென்னும் விருப்பமுடையவனது பிறப்பே பிறப்பு, அல்லாதவனது பிறப்பு வீண் பிறப்பாகும் என்பதிதன் கருத்து. (௮)

பேறலரு மானிடப் பிறவி பெற்றுமோ
ரறிவுரு வாகிய வவிர்ச டைப்பிரான்
றிறமுணர் குறுநெறி சேர்ந்தி டாரெனின்
வறிதவ ருயிரொடு வாழு நாளரோ.

(ப-ரை.) பெறல் அரு - பெறுதற்கரிய, மானிடப் பிறவி பெற்றும்—, ஓர் - ஒப்பற்ற, அறிவுருவாகிய—, அவிர் சடை பிரான் திறம் - பரமசிவனது தன்மையை, உணர்குறும் நெறி - அறிதற்குரிய வழியை, சேர்ந்திடார் எனின்—, அவர் உயிரொடு வாழும் நாள்—, வறிது - வீணானது, எ - று.

(வி - ரை.) அவிர்தல் - பிரகாசித்தல். உணர்குறும் - ஒருசொல். பரமசிவனது மகிமையை யறியும் நெறி யறியாதவரது வாணாள் வீணாளாமென்ப திதன்கருத்து. மானிடப்பிறவி ஜ்ஞாநசாதநமாம் என்பது தோன்ற "பெறல் அரு மானிடப் பிறவி பெற்றும்" என்றார். (௬)

புறந்திரி யாதுளம் புராரி தன்கணே
செறிந்திடு மொருபெருஞ் சிறப்புப் பெற்றுளோன்
பிறந்திடு குலமதே பெருமை பெற்றிடு
முறைந்தவன் வாழுநாள் பயனொ டொன்றுமால்.

(ப-ரை.) உள்ளம் - மனமானது, புறம் திரியாது - வெளியே சஞ்சரிக்காமல், புராரி தன் கண்ணே - பரமசிவனிடத்திலேயே, செறிந்திடும் - பொருந்திய, ஒரு - ஒப்பற்ற, பெரு சிறப்பு பெற்றுளோன்—, பிறந்திடு குலமே பெருமை பெற்றிடும்—, அவன் உறைந்து வாழும் நாள்—, பயனொடு ஒன்றும்—, எ - று.

(வி - ரை.) புராரி - புரம் அரி (முப்புரத்தார்க்குப் பகைவன்), திரிபுர சங்காரஞ்செய்ததனால் இறைவற்கு இப்பெயருண்டாயிற்று. சிவபக்திசெய்வோன் பிறந்த குலமே சுத்த குலம், அவனது வாழ்நாளே ஸபல வாழ்நாளென்பதிதன் கருத்து. (௰)

சரணமான்மியத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் ஸ்ரீமாய நமஃ

முப்பத்தோன்றாவது

## (எ.) பிரசாதமான்மியத்தலம்.



[அதாவது - குரு லிங்கம் ஜங்கமன் சிவபக்தன் சரணன் இவர்களின் மஹிமாநுபவம் சிவப்ரஸாதத்தா லுண்டாதலாலும், முக்திக்குப் பக்தி மூலமாதல் போலப் பக்திக்கு ப்ரஸாதம் மூலமாதலாலும், ஸம்ஸார நிவாரணம் செய்தலாலும், பிரசாதமான்மியம் என்பது.]

கலிவிருத்தம்.

குருபரன் முதலியோர் பெருமை கூட்டுணத்
தருவது சிவப்பிர சாத மாதலா
லுரைசெயு மதனது பெருமை யோதுவ
ரிருவினை யெனும்பகை யெறிந்து ளோர்களே.

(ப-ரை.) குருபரன் முதலியோர் பெருமை-குருபரன் முதலியோரது பெருமையை, கூட்டுணத் தருவது - கொள்ளைகொண்டுண்ணத் தருவது, சிவப் பிரசாதம் ஆதலால்—, உரைசெயும் - சொல்லப்படுகிற, அதனது பெருமை ஓதுவர்—, (யாரெனின்) இருவினை என்னும் பகை - இருவினை யென்கிற பகைவரை, எறிந்துளோர்கள் - வென்றிருப்பவர்கள், எ - று.

(வி - ரை.) கூட்டுணல் - கொள்ளைகொண்டுண்ணல். எறிதல் - வெட்டுதல் (வெல்லுதல்). குருபரன் முதலியோர் என்றது குரு லிங்க ஜங்கம சிவபக்த சரணர்களை. (௧)

புகலெனச் சிவபிரான் றனைப்பொ ருந்தினோர்க்
கிகலறு சிவப்பிர சாத மெய்துறு
மிகுபவப் பகையென விளம்பு மன்னதிவ்
வகலிடத் தரிதரி தயல வர்க்கரோ.

(ப - ரை.) சிவபிரான் தன்னை—, புகல் என - அடைக்கலமென்று, பொருந்தினோர்க்கு - அடைந்தவர்க்கு, இகல் அறு - பகையற்ற, சிவப் பிரசாதம் எய்துறும்—, மிகு பவம் பகை என விளம்பும் - மிகுந்த பிறவிப் பகை யென்று சொல்லப்படுகிற, அன்னது - அது, இ - இந்த, அகல் இடத்து - அகன்றவுலகில், அயலவர்க்கு—, அரிது அரிது—, எ - று.

(வி-ரை.) இகல் - குற்றம் எனினுமாம். பவம் - பிறவி. அது என்றது சிவப்பிரசாதத்தை. அயலவர் என்றது சிவபிரானை அடைக்கலம் புகாதவரை. (ரு)

மந்திர மகந்தவந் தியாந மற்றுள
தந்திர மறிவிவை யாவுந் தண்கதிர்ச்
சந்திர முடிபிர சாத மெய்துற
வந்தன வெனவறி மனந்து ணிந்தரோ.

(ப - ரை.) மந்திரம்—, மகம்—, தவம்—, தியாநம்—, மற்றுள தந்திரம்—, அறிவு—, இவை யாவும்—, தண் - குளிர்ச்சியாகிய, கதிர் - கிரணத்தையுடைய, சந்திரமுடி - சந்திர சேகரனது, பிரசாதம் எய்துற - பிரசாதம் உண்டாதற்பொருட்டு, வந்தன என - உண்டாயின வென்று, மனம் துணிந்து அறி - மனம் நிச்சயித்து அறிவாயாக, எ - று.

(வி - ரை.) மகம்-யாகம். சந்திரமுடி யென்பது சந்திரமுடியை யுடையானை யுணர்த்தலால் அன்மொழித்தொகை, தாழ்குழல் என்பதுபோல. வடநூலாரும் பல்லவபாணி அளிகுலவேணி என வழங்குதல் காண்க. அறிவு-(பரசிவனை உத்க்ருஷ்டன் என)அறிதல்.

மொழிதரு சிவப்பிர சாத மூலத்த
தொழிவறும் பத்திதா னோதும் வேதிய
ரிழிவின ரெனவிலை யாரு முய்குவர்
விழிநுத லினன்பிர சாத மேவினே.

(ப - ரை.) விழி நுதலினன் - நெற்றிக் கண்ணனாகிய சிவபெருமானது, பிரசாதம் மேவின் - பிரசாதம் கிடைத்தால், மொழிதரு - சொல்லப்பட்ட, சிவப்பிரசாதமூலத்தது - சிவப்பிரசாதமாகிய காரணத்தையுடையது, ஒழிவு அறும் - நீக்கமற்ற, பத்தி—, ஓதும் வேதியர் - சொல்லப்பட்ட மறையோர், இழிவினர் - இழிசாதியார், என இல்லை—, யாரும் உய்குவர் - எல்லாரும் கடைத்தேறுவர், எ - று.

(வி - ரை.) சிவப்பிரசாதம் கிடைத்தால் சிவபக்தியுண்டாகும், அது வுண்டானால் உயர்குலத்தோர் இழிகுலத்தோர் என்னும் வேறுபாடில்லாமல் எல்லாரும் ஈடேறுவர் என்பதிதனாற் கூறப்பட்டது. "யாரும்" என்றதனால் கர்ப்பத்தில் வசிக்கின்றவனும், பிறந்துகொண்டிருக்கின்றவனும், பிறந்தவனும் எனப் பெறப்பட்டன. இழிவினர்- சண்டாளர்.

பங்கய மலரவ னாதிப் பண்ணவர்
சங்கர னருட்பிர சாதங் கொண்டுதம்
மங்கல பதங்களின் வாழ்வு மன்னியே
சிங்கலி னித்திய சித்த ராயினர்.

(ப - ரை.) பங்கயம் மலரவன் ஆதி - தாமரைமலரில் வீற்றிருக்கிற பிரமன் முதலிய, பண்ணவர் - தேவர்கள், சங்கரன் - சிவபிரானது, அருள் பிரசாதம் கொண்டு - அருட்

பிரசாதத்தால், தம்-தமது, மங்கல பதங்களின்-சுபகரமான பதவிகளின், வாழ்வு மன்னி - வாழ்வை யடைந்து, சிங்கல் இல் - கெடுதியில்லாத, நித்திய சித்தர் ஆயினர்—, எ - று.

(வி - ரை.) கொண்டு மூன்றாவதன் சொல்லுருபு. (௫)

தவநிகழ் சிவப்பிர சாத மெய்துறிற்
சிவமய மாகியே திகழும் யாவையும்
பவவலை யறவரு பான்மை யுண்டுகொ
லவமறு மரன்பிர சாத மன்றியே.

(ப-ரை.) தவ நிகழ்-மிகுதியாய் விளங்குகிற, சிவப்பிரசாதம்—, எய்துறின்-அடையப் பெற்றால், யாவையும்-எல்லா (ப்ரபஞ்ச)மும், சிவமயமாகியே திகழும்—, அவம்-துன்பம், அறும் - அறுதற்கேதுவாகிய, அரன் பிரசாதம் அன்றி —, பவ வலை - பிறவியாகிய வலை யானது, அற - அற்றொழிய, வரு - உண்டாகிற, பான்மை - வழி, உண்டு கொல் - உண்டாமோ, எ - று.

(வி - ரை.) சிவப்பிரசாதம் எய்துறின் என்றது அதனது அருமைதோன்றற்கென்க. சிவமயம் - சிவரூபம். உண்டுகொல் என்ற வினா உண்டாகாதென்பது பட நின்றது. (௬)

பலமொழி பகர்தலாற் பயனென் மூன்றெனு
முலகினு ளொத்தது முயர்வு கண்டது
மிலையிலை யிவ்வுரை யுண்மை யீர்ஞ்சடைத்
தலைவன தருட்பிர சாதத் திற்கரோ.

(ப - ரை.) பல மொழி - பலசொற்களை, பகர்தலால் - சொல்லுதலால், பயன் என்—, ஈர் சடை - குளிர்ந்த சடையினையுடைய, தலைவனது - சிவபெருமானது, அருட் பிரசாதத் திற்கு—, மூன்று என்னும் உலகினுள் - மூவுலகத்துள்ளும், ஒத்ததும் உயர்வு கண்ட தும்—, இல்லை இல்லை—, இவ்வுரை உண்மை - இந்தச் சொல் மெய்யாகும், எ - று.

(வி - ரை.) பயன் என் என்னும் வினா பயனொன்று மின்றென்பதை யுணர்த்திற்று.

யோகம்வேண் டுறும்பிர சாத முற்றிட
வேகமாஞ் சிவமய மாகு மியாவையு
மாகையாற் சிவமெனு மாவி யோனிவன்
பேர்கிலா நிலையுடைப் பிராண லிங்கியாம்.

(ப - ரை.) யோகம் வேண்டுறும் - சிவயோக விருப்பமாகிய, பிரசாதம் உற்றிட - சிவப்பிரசாதம் பெற்றதினால், யாவையும் - எல்லா (ப்ரபஞ்ச)மும், ஏகம் ஆம் - ஒன்றாகிய, சிவமயம் ஆகும்—, ஆகையால்—, சிவம் என்னும் ஆவியோன்-சிவமென்கிற பிராணத்தை யுடையவனாகிய, இவன் - இந்தப் பக்தன், பேர்கிலா நிலை உடை - அசையாத நிலையை யுடைய, பிராணலிங்கி ஆம்—, எ - று.

(வி - ரை.) ஆவி - உயிர் (பிராணம்). பிராணலிங்கி - ப்ராணலிங்கத்தையுடையவன். சிவம் என்னும் ஆவியோன் என்றது சிவனாகப் பாவிக்கப்பட்ட ஸ்வரூப முடையவனை. (அ)

பிரசாதமான்மியத்தலம் - முற்றும்.

இவ்விதமாய் எக்காரணத்தினால் குருமாஹாத்மியம், லிங்கமாஹாத்மியம், ஜங்கமமாஹாத்மியம், பக்தமாஹாத்மியம், சரணமாஹாத்மியம் என்னும் ஐந்து ஸ்தலங்களில் கூறிய தர்மங்களுடனே கூடியிருத்தலால் லிங்க ப்ரசாதத்தை நுகர்வதற் குரியவனானானே அக்காரணத்தினால் அவன் மூன்றாமவனான ப்ரஸாதி என்று அறியப்பட்டான்.

௩௬ - வ்து. பிரசாதித்தலம் முற்றிற்று.

(வி - ரை.) ஓர்தல் - ஆராய்தல். இலிங்கசத்தி - சிவலிங்கத்தினுடைய பீடரூபமாகிய சத்தி. இனையவாறு ஆம்-சின்மயமாகிய. பிராண உரு-ப்ராணவஸ்வரூபமாகிய ப்ராணரூபம்.

ஆசறு பிராண லிங்கித் தலமொரைந் * தாகு முன்னர்ப்
பேசுறு பிராண லிங்கித் தலமொடு பிராண லிங்க
பூசனை யதன்பின் மிக்க சிவயோக சமாதி பெற்று
நேசம துறுமி லிங்க நிசமங்க லிங்க மென்றே.

(ப - ரை.) முன்னர் - முன்னே, பேசுறு - சொல்லப்பட்ட, பிராணலிங்கித் தலமொடு—, பிராணலிங்கபூசனை—, அதன்பின்—, மிக்க - மேலான, சிவயோகசமாதி—, பெற்று - அடைந்து, நேசமது உறும் - அன்புமிகுந்த, இலிங்கநிசம்—, அங்கலிங்கம்—, என்று—, ஆசு அறு - குற்றமற்ற, பிராணலிங்கித்தலம்—, ஓர் ஐந்து ஆகும்—, எ - று.

(வி-ரை.) பிராணலிங்கத்தலமானது ஐவகையாயிருக்கும் என்பதும் பிராணலிங்கத் தலம், பிராணலிங்கார்ச்சநத்தலம், சிவயோகசமாதித்தலம், இலிங்கநிசத்தலம், அங்கலிங்கத்தலம் என்பன அவற்றின் பெயர்களென்பதும் இதனாற் கூறப்பட்டன. (௪)

உ

ஓம் பரமஹம்ஸாய நம:

முப்பத்திரண்டாவது

## (௧.) பிராணலிங்கித்தலம்.



[அதாவது - லிங்கமே மந்த்ரஸ்வரூபம், அந்த மந்த்ரத்திற்குப் போதிநியான ஶக்தியே ப்ராணரூபம், அந்த ரூபமான லிங்க ஜ்ஞாந முள்ளவனும், ஸ்ரீகுருபதேசாநுக்ரமமாய் ப்ராணவாயுவை அபாநவாயுவுடனே பரஸ்பரம் ஸங்கடநம் செய்து நாபிக் கிழங்கின் நடுவிலிருந்து வெளிப்படும் ஜ்யோதியே ப்ராணலிங்கமென்றறிந்து அதனது அநுசந்தாநத் திருப்பவனுமான ப்ரஸாதியே பிராணலிங்கி என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தயங்குறு பிராணு பாந சமநிலை பெறலான் மூலத்
துயர்ந்தெழு சோதி யாதவ் வொளிமிகு சோதி தானே
வயங்குறு பிராண லிங்க மென்னவே வகுக்கப் பட்ட
தியங்குறு பிராணு பாந நிரோதிக ளென்போர் தம்மால்.

(ப - ரை.) தயங்குறு - விளங்குகிற, பிராண அபாந - பிராணாபாநங்களின், சமநிலை பெறலால்—, மூலத்து - மூலாதாரத்தினின்றும், உயர்ந்து எழு சோதி யாதோ—, அ - அந்த, ஒளி மிகு சோதி தானே—, வயங்குறு - விளங்குகிற, பிராணலிங்கம் என்ன வகுக்கப்பட்டது—, (யாவராலெனின்) இயங்குறு - சஞ்சரிக்கிற, பிராணாபாந நிரோதிகள் என்போர் தம்மால்—, எ - று.

(வி - ரை.) தயங்கல் - விளங்கல். வயங்கல் - விளங்கல். இயங்கல் - சஞ்சரித்தல். பிராணாபாந நிரோதிகள் - பிராணாபாநங்களைத் தகைகின்றவர்கள் (யோகிகள்). மூலத்து - (நாபி) கந்தமத்தியிலிருந்து. (௧)

* மற்றொருபிரிவு:—அதாவது ஆசாரப்ராணி, லிங்கப்ராணி, ஜங்கமப்ராணி என்று மூன்று வகைப்படுவன். மநோ வாக் காயங்களில் ஆசாரத்தை க்ரஹிப்பவனே ஆசார ப்ராணி; பாஹ்யாசாரத்தை மறந்து லிங்கத்திற்கு ப்ராணனைப் பூஜிப்பவனே லிங்கப்ராணி; ஜங்கமத்திற்கு உடல் மனம் ப்ராணன்களை நிவேதநம் செய்பவனே ஜங்கமப்ராணி ப்ராணலிங்கியை ஆநந்தப்ரஹ்மம் எனவழங்குதலு முண்டு.

பரிதியு ளடங்கு மெய்கூர் பனியென யாதன் கண்ணே
திரிதரு பிராண னொன்றிச் செறிந்திடு மதுவே கூறி
னரிதெனும் பிராண லிங்க மென்பரங் கதுத ரித்தோ
னுரைதரு பிராண லிங்க வுரையுடை யோனு மன்றே.

(ப - ரை.) பரிதியுள் - சூரியனுக்குள்ளே, அடங்கும் - ஒடுங்குகிற, மெய் கூர் பனி என - உண்மையாகிய மிக்க பனியைப் போல, யாதன் கண்ணே - எதனிடத்தே, திரிதரு பிராணன் - சஞ்சரிக்கிற பிராணவாயு வானது, ஒன்றி - பொருந்தி, செறிந்திடும் - அடங்குமோ, அதுவே—, கூறின் - சொல்லுமிடத்தில், அரிது என்னும் பிராணலிங்கம் என்பர்—, அங்கு அது தரித்தோன்—, உரைதரு - சொல்லப்பட்ட, பிராணலிங்க வுரையுடையோன் ஆம் - பிராணலிங்க மென்னும் சொல்லை யுடையவனுவன், எ - று.

(வி-ரை.) அங்கது - ஒருசொல். உரை யென்றது ஈண்டுப் பெயர் என்னும் பொருளை யுணர்த்திற்று. பிராணலிங்கவுரையுடையோன் என்றது பிராணலிங்க ஸ்வரூபன் எனினுமாம். பிராணலிங்கம் என்றதனுல் இவ்வாராய்ச்சி செய்யத்தக்கது. ப்ராணன் அபானன் இவ்விரண்டும் அடக்கப்பட்டுச் சமநிலைப்பட்டால் மனமானது வ்யாபாரமில்லாததாகும். பரமாத்ம ஸ்வரூபமாகிய லிங்கமானது நித்யமாய் விளங்குகின்றதாயினும் நமது மனதினுல் மறைபட்டு அநுபவத்திற்கு வாராமலிருக்கிறது. இத்தகைய லிங்கமானது மனோ வ்யாபாரமில்லாத சமயத்தில் விவேகிகளுக்கு அநுபவமாகிறது. பரிதியுள் அடங்கும் மெய்கூர்பனி என்றதனுல் ப்ராணுபாநாதிகளைத் தடுத்து நிறுத்துவதால் மனமானது சங்கற்ப விகற்பவிஷயம் நீங்கி அந்தர்முகப்பட்ட சமயத்தில் சிந்மயமாகிய ப்ராணலிங்கம் அநுபவத்திற்கு வராநிற்கும் எனப்பெறப்பட்டது. (உ)

அறிவுருவாகி யெங்கு மமர்பரப் பிரம மாகுங்
குறியுய ரிலிங்க ஞான யோகுடைக் குணத்தா னெஞ்சி
லெறிசுட ராகி நின்றே யிலங்குறு மறிவி லாராற்
செறிவுறு பொருளன் றாகு மென்றுரை செய்வர் மேலோர்.

(ப - ரை.) அறிவுருஆகி—, எங்கும் அமர் - எவ்விடத்தும் அமர்ந்திருக்கிற, பரப்பிரமம் ஆகும் - பரப்பிரம மென்கிற, குறி-பெயரையுடைய, உயரிலிங்கம் - உயர்ந்தலிங்கமானது, ஞானயோகு உடை குணததான் - ஞானயோகத்தையுடைய குணத்தோனது, நெஞ்சில் - மனத்தில், எறி சுடர் ஆகி நின்றே இலங்குறும் - வீசுகிற தீபாகாரமாகி நின்றே விளங்கும், அறிவு இல்லாரால் - அறிவில்லாதவரால், செறிவுறு-அடையத்தக்க, பொருள் அன்று ஆகும் என்று—, உரை செய்வர்—, மேலோர்—, எ - று.

(வி - ரை.) அறிவுரு - ஞானவடிவு. யோகு - யோகம். தீபாகாரம் - விளக்குருவம். ஞானயோகுடை குணத்தான் - சிவயோகமுடையஞானி. (ங)

இலங்கொளி யாகி யென்று மிதயநன் மலரிற் றோன்றி
நலந்தரு பரமாநந்த ஞானலிங் கத்தை நீங்கிக்
கலந்துள புறத்தி லிங்கக் கருத்துள னாகி யுற்றோன்
மலங்குறு பரம மூட னென்னவே மதிக்கப் பட்டான்.

(ப-ரை.) இலங்கு ஒளி ஆகி—, என்றும்—, நல்-அழகிய, இதய மலரில் தோன்றி—, நலம் தரு - நன்மையைத் தருகிற, பரமாநந்த ஞானலிங்கத்தை நீங்கி—, கலந்துள - பொருந்தியிருக்கிற, புறத்திலிங்கக் கருத்து உளன் ஆகி உற்றோன்-புறத்திலிங்கத்தின்மேற் கருத்துண்டாயிருப்பவன், மலங்குறு - சித்தசலநமுள்ள, பரமமூடன் என்னவே - பரம மூடனென்றே, மதிக்கப்பட்டான் - (அறிஞரால்) எண்ணப்பட்டிருக்கிறான், எ - று.

(வி - ரை.) இதயம் ஹ்ருதயம் என்னும் வடசொற்றிரிபு. பரமாநந்தம் - மேலான இன்பம். மலங்கல்-சலித்தல். பரமமூடன் - முழுமூடன். சின்மயமான ப்ரஹ்மமாயுள்ள அந்தர் லிங்கத்தை உபாஸிக்காமல் பஹிர்லிங்கத்தை மாத்திரம் உபாஸிப்பவனே முழு மூடனாவன் என்பது கருத்து. ஈண்டு, இச்செய்யுளைக் கவனிக்க :—

பிரபுலிங்கலீலை.

மனமி லிங்க மருவிலை யேனுடை
றனிலி லிங்கந் தரித்து மிலையிலை
யெனவி யம்பு மிணையிலி யாகம
நினைவ ரன்கழ னிற்க நிறுத்தினாய்.

(ச)

புறப்பொரு ளிதன்கட் செல்லும் புத்திவிட் டகத்தி லென்றுஞ்
சிறப்புறு மொளியாய்த் தோன்றுஞ் சின்மய லிங்கந் தன்னைக்
குறித்துணர் கருத்தின் றிட்பங் கொண்டுற நின்று ளோனே
மறப்பறு பிராண லிங்கி யென்குவர் மதியின் மிக்கோர்.

(ப-ரை.) புறப்பொருள் இதன்கண் செல்லும் புத்திவிட்டு—, அகத்தில் - உள்ளிடத் தில், என்றும்—, சிறப்பு உறும் ஒளியாய் தோன்றும் சின்மயலிங்கம் தன்னை—, குறித்து உணர்-குறித்தறியத்தக்க, கருத்தின் திட்பம் கொண்டு - மனவுறுதிகொண்டு, உற நின்று ளோனே - பொருந்த நின்றிருப்பவனே (சிவயோகியே), மறப்பு அரு - மறதியில்லாத, பிராணலிங்கி என்குவர்—, (யாரெனின்) மதியின்மிக்கோர்—, எ - று.

(வி - ரை.) சின்மயம் - ஞானவுரு. குறித்தல் - இலக்குவைத்தல். திட்பம் - திண்மை. என்குவர் - என்பர்.

(ரு)

மாயையின் விகற்பந் தன்னால் வந்துள சகந்தோன் றாமற்
போயொழிந் திடுமா றென்றும் பொருந்துபு சிந்தை செய்து
பாயொளி யறிவாநந்த பராபர லிங்கந் தன்னிற்
றூயநெஞ் சடங்க வல்லோன் றுகளறு பிராண லிங்கி.

(ப - ரை.) மாயையின் விகற்பம் தன்னால் - மாயையின் வேறுபாட்டால், வந்துள - உண்டாயிருக்கிற, சகம் தோன்றாமல் போய்—, ஒழிந்திடும் ஆறு-ஒழியும்வழியை, என்றும் பொருந்துபு - என்றும் அடைந்து, சிந்தை செய்து—, பாய் ஒளி - பரந்த ஒளியை யுடைய, அறிவாநந்த பராபரலிங்கம் தன்னில்—, தூய - பரிசுத்தமான, நெஞ்சு அடங்க வல்லோன்—, துகள் அறு - குற்றமற்ற, பிராணலிங்கி - பிராணலிங்கியாவன், எ - று.

(வி - ரை.) பொருந்துபு - செய்பு என்னும் வாய்பாட் டிறந்தகால வினையெச்சம். அறிவாநந்தம் - ஞானாநந்தம்.

(சு)

சத்தையாஞ் சத்தி தானே தக்கதோர் பிராண னாகுஞ்
சத்ததாம் பிராண லிங்கந் தற்சம ரசஞா னத்தால்
வைத்ததாம் பிராண லிங்கி யெனும்பெய ரெனவ குப்பர்
தத்துவா தீத மாய தனிநிலை யுணர்ந்த நல்லோர்.

(ப - ரை.) தத்துவ அதீதம் ஆய - தத்துவங்களுக் கெட்டாத, தனி நிலை - ஒப்பற்ற நிலையை, உணர்ந்த—, நல்லோர்—, சத்தை ஆம் சத்திதானே—, தக்கது - தகுந்ததாகிய, ஓர் - ஒப்பற்ற, பிராணன் ஆகும் - பிராணமய சத்தியாகும், சத்தது பிராணலிங்கம்ஆம்—தன் சமரச ஞானத்தால்—, பிராணலிங்கி என்னும் பெயர்—, வைத்தது ஆம்—, என வகுப்பர் - என்று சொல்லுவர், எ - று.

(வி - ரை.) அதீதம் - கடந்தது (காணப்படாதது). தனிநிலை - முத்திநிலை. சமரச ஞானம் - நிர்விகற்பமான அறிவு. ஸத்தின் தன்மை அதாவது ஸத்வம் ப்ராணமய ஸக்தி யென்பதும், ஸத்ரூபம் ப்ராணலிங்கம் என்பதும், அவ்விரண்டின் ஸமரஸத்தன்மை யறிபவன் ப்ராணலிங்கி என்பதும் இதன் கருத்து. (எ)

பிராணலிங்கித்தலம் - முற்றும்.



உ

ஓம் ம்ருடபாணயே நம:

முப்பத்துமூன்றாவது

## (உ.) பிராணலிங்கார்ச்சநத்தலம்.

[அதாவது - சைதந்யாத்மகமானதும், ப்ராண வாயுவினால் வ்யாப்தமாய் ஸூக்ஷ்ம மான தஹராகாஸத்தில் ப்ரகாஸிப்பதுமான ப்ராணலிங்கத்தை க்ஷமாரூபாபிஷேக நித்யாநித்யவஸ்துவிவேகவஸ்த்ர ஸத்யரூபாபரண பாவநாபுஷ்பாதி ஜ்ஞாநஸ்வரூபமான மாநஸிக த்ரவ்யங்களினால் பூஜித்து ப்ராணலிங்க ஸம்பந்தியானதே பிராணலிங் கார்ச்சநம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நன்றுறு மிதயந் தன்னின் ஞானலிங் கத்தை யெய்தி
நின்றெழு மன்பி னாலே நினைவெனு மலர்கள் கொண்டு
புன்றொழி லிலாது செய்யும் பூசனை யதுவே கண்டா
யொன்றொரு பிராணலிங்க பூசையென் றுரைப்ப தன்றே.

(ப - ரை.) நன்று உறும் - நன்மை பொருந்திய, இதயம் தன்னில்—, ஞான லிங்கத்தை எய்தி நின்று - ஞானலிங்கத்தை தரித்து நின்று, எழும் - மிகாநின்ற, அன்பினாலே—, நினைவு என்னும் மலர்கள் கொண்டு—, புன் தொழில் இலாது - இழி தொழிலில்லாமல், செய்யும் பூசனை - செய்யும் பூசனையாகிய, அதுவே—, ஒன்றொரு - ஓரானொரு, பிராணலிங்க பூசை என்று—, உரைப்பது - சொல்லப்படுவது, எ - று.

(வி-ரை.) கொண்டு-மூன்றாவதன் சொல்லுருபு. நினைவு என்னும் மலர்-பாவநா புஷ்பம்.

அகத்துறு பவநந் தன்னை யடைத்துநுண் விசும்பு பூத்து
மிகத்தலை மதியு குப்ப வீழமு தினிற்கு ளிர்ந்து
தகைக்குமொன் பதுவா யுற்றுத் தனியறி வெனும்வி ளக்கிட்
டுகப்புறு மிதயத் தீசற் குஞற்றுக பாவ பூசை.

(ப-ரை.) அகத்து உறு - உள்ளேயிருக்கிற, பவநம் தன்னை-வாயுவை, அடைத்து - பந்தித்து, நுண் விசும்பு பூத்து-நுட்பமாகிய ஆகாயத்தில் தோன்றி, தலை மதி - சிரத்தி லுள்ள சந்திரன், மிக உகுப்ப -மிகுதியாகச் சிந்த, வீழ்-ஒழுகுகின்ற, அமுதினில்-அமிர்தத் தினால், குளிர்ந்து - குளிர்ச்சியடைந்து, தகைக்கும் - தடுக்கப்பட்ட, ஒன்பது வாய் உற்று- ஒன்பது வாயில்களையடைந்து, தனி - ஒப்பற்ற, அறிவு என்னும் விளக்கு இட்டு—, உகப்பு உறும் இதயத்து - சந்தோஷ சித்தத்தில், ஈசற்கு - சிவபிரானுக்கு, பாவ பூசை இயற்றுக—, எ - று.

(வி - ரை.) யோகிகள், சிரத்தில் சந்திரமண்டலம் சூரியமண்டலம் அக்நிமண்டலங்க ளுண்டென்றும், சந்திரமண்டலத்தினின்றுஞ் சிந்துகிற அமிர்தத்தைப் பருகுதலால் ஆயுள் வளருமென்றும் கூறுவர். இதன் விரிவெல்லாம் யோகநூல்களிற் காண்க.

'விண்ணிலவு மதியமுத மொழியாது பொழியவே வேண்டுவேன்,' 'மதிமண்டலத்திலே கனல் செல்ல வமுதுண்டு,' 'மதிக்குளே மதியை வைத்து நான் வாய்மடுத்தமிர்த வாரியைப்பருகி' என்றார் பெரியாரும். (உ)

ஆடறல் பொறைவி வேக மாடைபூண் வாய்மை மாலை
தாடரு துறவு கந்தஞ் சமாதியக் கதையாங் கார
வீடெழு தூபந் தூய்மை விளக்கறி வுலக மெல்லாம்
பீடுறு நிவேத நந்தம் பிராற்கொலி மணிநன் மோனம்.

(ப - ரை.) தம்பிராற்கு - தம்பிரானுக்கு, ஆடு அறல் - ஆடுகிற நீர், பொறை (ஆம்) - பொறுமை யாம், ஆடை—, விவேகம் (ஆம்)—, பூண் - ஆபரணம், வாய்மை (ஆம்) - உண்மையாம், மாலை—, தாள் தரு - முயற்சியோடு கூடிய, துறவு (ஆம்)—, கந்தம்—, சமாதி (ஆம்)—, அக்கதை - அக்ஷதை, ஆங்காரவீடு (ஆம்) - ஆங்கார விடுகையாம், எழு தூபம் - தோன்றுகிற தீபம், தூய்மை (ஆம்)—, விளக்கு—, அறிவு (ஆம்)—, உலக மெல்லாம்—, பீடுறு நிவேதநம் (ஆம்)—, ஒலி நல் மணி - ஒலிக்கிற நல்ல மணி, மோனம் (ஆம்) - மௌந நிலையாம், எ - று.

(வி - ரை.) தம்பிரான் - சிவபெருமான். பூண் - ஆகுபெயர். தாள் - முயற்சி (ஊக்கம்). வீடு - விடுதல், இது முதனிலை திரிந்த தொழிற்பெயர். பீடு - பெருமை. பொறுமை - அடக்கம். துறவு - வைராக்கியம். கந்தம் - சந்தநம். ஆங்காரவிடுகை - நிராங்காரம். தூய்மை - சிரத்தை. ஈண்டு, இச்செய்யுட்களைக் கவனிக்க:—

பிரபுலிங்கலீலை.

பொருவில்சற் பத்தியாந் தாரம் பூண்டொரு
வரவயி ராகமாம் வத்தி ரம்புனைந்
தொருவலி லுணர்வெனுஞ் செச்சை யொன்றுறப்
பரமனை யிருத்துவோன் பத்தனா குவான்.

அருளெனும் புனலினை யாட்டிச் சாந்தமாம்
வரைநறுஞ் சந்தொடு மருவ விந்திய
விரைமலர் புனைந்தறி வினைய ருத்துறிற்
பரமனை யவன்சிவ பத்த னாகுவான்.

ஒன்றினென் றுள்ளுற வுடம்பு மூன்றையு
மன்றநல் வத்திர மடிய தாக்கியே
என்றுமங் கமைவுற விட்டம் வைப்பனேல்
அன்றவன் சிவமய மாகு மென்பவே. (௩)

போறிவிட யார்ப்பி தந்தாம் பூலமவ் விடயத் தோய்த
லறுமது வலம திக்கிங் கதன்வடி வாகுஞ் சத்தி
பெறுமது வணக்க மாமிப் பெற்றியின் மனலிங் கத்தை
மறுவறு மனத்தர்ச் சிக்க வாலிய பொருள்கள் கொண்டே.

(ப - ரை.) தாம்பூலம்—, பொறிவிட யார்ப்பிதம் (ஆம்)—, வலம் - பிரதக்ஷிணம், அவ்விடயம் தோய்தல் அறுமது (ஆம்) - அந்த விடயப்பற்றறுதியாம், மதிக்கு - அறிவுக்கு, வணக்கம்—, இங்கு—, அதன் வடிவு ஆகும் சத்தி பெறுமது (ஆம்)—, இ பெற்றியின் - இத்தன்மையால், மனலிங்கத்தை—, வாலிய பொருள்கள் கொண்டு - பரிசுத்தமான பொருள்களால், மறு அறு - குற்றம் மற்ற, மனத்து அர்ச்சிக்க - மனத்தில் அர்ச்சிக்க, எ - று.

(வி - ரை.) பற்றறுதி - பற்றறுகை. வால் - வெண்மை, அது ஈண்டுத் தூய்மையைக் குறித்தது. அர்ச்சிக்க - அருச்சனை புரியக்கடவன். (௪)

பிராணலிங்கார்ச்சநத்தலம் - முற்றும்.

ஓம் ஜடாயுராய நமஃ

# முப்பத்துநான்காவது

## (க.) சிவயோகசமாதித்தலம்.

—∞—

[அதாவது - பூர்வோக்த ப்ராணலிங்கார்ச்சந க்ரமங்களினால் அந்தரங்க க்ரியாஸக்தனான ப்ராணலிங்கிக்கு ஶிவ ஜீவர்களின் ஸமாந ஸாமரஸ்யாநுஸந்தாந மென்னும் ஸம்பத்தே சிவயோகசமாதி என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

புகன்றுள பிராண லிங்க பூசனைத் தொழிலின் கண்ணே
யுகந்துள விவர்க்கு மிக்க வொருசிவ ரூப மாகத்
திகழ்ந்துள தியாநந் தன்னைச் செப்புறுஞ் சமாதி யென்ன
வகன்றரி பரந்த வொண்க ணரிவைபங் கினனூ லன்றே.

(ப - ரை.) அகன்று - விசாலித்து, அரி பரந்த - வரி படர்ந்த, ஒள் கண் - அழகிய கண்களையுடைய, அரிவை - உமாதேவியை, பங்கினன் - தன்னொரு பாகத்திலுடையவனாகிய சிவபெருமானது, நூல் - நூல்கள், புகன்றுள - சொல்லப்பட்டுள்ள, பிராணலிங்க பூசனைத் தொழிலின் கண்ணே—, உகந்துள இவர்க்கு - விருப்புற்றிருக்கிற இவர்களுக்கு, மிக்க - மேலான, ஒரு - ஒப்பற்ற, சிவரூபமாக—, திகழ்ந்துள - விளங்காநின்ற, தியாநம் தன்னை—, சமாதி என்ன - சமாதியென்று, செப்புறும் - சொல்லாநிற்கும், எ - று.

(வி - ரை.) பங்கினன் என மேலே வருதலால் அரிவை பெண் பொதுவாகாது உமாதேவியை யுணர்த்திற்று. அரிவைபங்கினனூல்கள் - சிவாகமங்கள். செப்புறும் - ஒரு சொல் (செப்புறு பகுதி). (க)

உரைமன மிறந்த சச்சி தாநந்த வொளியாய் மேலாய்ப்
பரவுதத் துவங்கட் கெல்லாம் பரமசிற் சத்தி தன்னா
லுரமுற வொளிரு மஞ்ச வுருவமாம் பரமான் மாவைத்
திரமொடு பாவ கஞ்செய் திகழ்சோக பாவங் கொண்டு.

(ப - ரை.) உரை - சொல்லும், மனம் - மனமும், இறந்த - கடந்த, சச்சிதாநந்த ஒளியாய்—, மேலாய்—, பரவு - பரவிய, தத்துவங்கட்கு எல்லாம்—, பரமம் - மேலாகிய, சிற்சத்தி தன்னால் - ஞான சத்தியால், உரம் உற - உறுதியாக, ஒளிரும் - பிரகாசிக்கிற, அஞ்ச உருவம் ஆம் - அன்ன வடிவாகிய, பரமான்மாவை—, திரமொடு - உறுதியாக, திகழ் - விளங்குகிற, சோகம் பாவம் கொண்டு—, பாவகம் செய் - பாவனை பண்ணு, எ - று.

(வி - ரை.) அஞ்சம் - ஹம்ஸம் என்னும் வடசொற்றிரிபு. சோகம் பாவம் ஸோஹம் பாவனை (அது நான் என்னும் எண்ணம்). ஈண்டு, இச்செய்யுளைக்கவனிக்க :—

பிரபுலிங்கலீலை.

என்றுதன தியலுணர்த்தி யுடம்புநா னென்றிருந்த வியல்பு போல
நின்றவெனை யுணர்ந்துநீ சோகம்பா வனைகொண்டு நிற்பை யாயிற்
பொன்றலுறு விடங்கலுழன் றன்னைநினைப் பப் போதல்போற் போம் விச்சை
நன்றறிதி யெனவறிவித் தனனெங்கோன் கோரக்க நாதன் றன்னை. (உ)

பிறங்கொளி மாலிங் கந்தான் பிரமமென் றுரைப்ப நிற்குஞ்
சிறந்துள பிராணன் றன்னைச் செப்புவர் சீவ னென்ன
வறைந்துள வவற்றி னேக பாவமா மனத்தி னனே
யுறுஞ்சிவ சமாதி யோக முற்றவ னென்பர் மேலோர்.

(ப - ரை.) பிறங்கு ஒளி - விளங்குகின்ற வொளியையுடைய, மாலிங்கம் - மஹாலிங்கமானது, பிரமம் என்று உரைப்ப - பிரமமென்று சொல்லும்படி, நிற்கும் என்றும் - நிற்குமென்றும், சிறந்துள பிராணன் தன்னை—, சீவன் என்ன - ஜீவன் என்றும், செப்புவர்—, அறைந்துள - சொல்லப்பட்டுள்ள, அவற்றின் - அவற்றினுடைய, ஏக பாவம் ஆம் - ஐக்ய பாவமாகிய, மனத்தினனே - மனத்தை யுடையவனே, உறும் - பொருந்திய, சிவ சமாதி யோகம் - சிவ சமாதியோகத்தை, உற்றவன் என்பர் - அடைந்தவனென்று சொல்லுவர், மேலோர்—, எ - று.

(வி - ரை.) பிறங்கல் - விளங்கல். ஐக்ய பாவம் - ஒன்றென்னுமெண்ணம். (௩)

அகமுறு சக்க ரங்க ளாறினு முற்ற கஞ்சஞ்
சகமருள் பிரம னாதி தானமென் றுன்னி யப்பால்
வகையிதழ் பத்து நூறு மருவுபங் கயம தன்கண்
மிகநிறை விமல விந்து விம்பமொன் றுளது மாதோ.

(ப - ரை.) அகம் உறு - (உடம்பின்) உள்ளே யிருக்கிற, சக்கரங்கள் ஆறினும் - ஆறு சக்கரங்களினும், உற்ற - பொருந்திய, கஞ்சம் - தாமரை மலர்கள், சகம் அருள் - பிரபஞ்சத்தைத் தோற்றுவிக்கிற, பிரமன் ஆதி - பிரமன் முதலியோரது, தானம் என்று - இடங்களென்று, உன்னி - நினைத்து, அப்பால்—, வகை - வகைப்பட்ட, இதழ் பத்துநூறு மருவு - ஆயிர மிதழ்களைப்பொருந்திய, பங்கயம் - தாமரை மலராகிய, அதன் கண் - அதனிடத்து, மிக நிறை - மிகவும் நிறைந்த, விமலம் - பரிசுத்தமாகிய, இந்து விம்பம்—, ஒன்று உளது—, எ - று.

(வி - ரை.) ஆறு சக்கரங்களாவன—மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம், மணிபூரகம், அநாஹதம், விஶுத்தி, ஆஜ்ஞேயம் என்பன. இதழ் பத்து நூறு மருவு பங்கயம் - ஆயிர மிதழ்களோடு கூடிய தாமரை மலர், இதனை ஸஹஸ்ராரகமலம் என்பர் வடநூலார். இது ஆயிரத்தெட்டிதழுள்ள தென்பர் ஒரு சாரார். இது முக்திகாந்தாவிலாஸம் முதலிய வடநூல்களில் விரிவாய்க் கூறப்பட்டுளது. இந்து விம்பம் - சந்த்ர பிம்பம். (௪)

அத்தட மதியி னுட்ப மாம்புழை யொன்று காண்க
வத்தொளை கயிலை யாக வறிந்தவண் வீற்றி ருந்த
சத்திய ஞான நந்த சங்கரன் றனைப்பா விக்க
வெய்த்தகா ரணங்கட் கெல்லாங் காரண னென்ன வன்றே.

(ப - ரை.) அ தடம் - அவ்விடத்திலுள்ள, மதியில் - சந்திர மண்டலத்தில், நுட்பம் ஆம் - நுட்பமாகிய, புழை ஒன்று காண்க - ஒரு துவாரத்தைக்காண்க, அ தொளை கயிலையாக அறிந்து—, அவண்-அவ்விடத்தில், வீற்றிருந்த—, சத்திய ஞானாநந்த சங்கரன் தன்னை—, எய்த்த-அறியப்பட்ட, காரணங்கட்கு எல்லாம் காரணன் என்ன—, பாவிக்க-பாவனைசெய்க, எ - று.

(வி - ரை.) சத்திய ஞானானந்தன் - மெய்ஞ்ஞான வின்பத்தை யுடையவன். காரணன் - முதல்வன். (௫)

புறந்திரி வதனாற் றோன்றும் புகல்சக விகற்ப முள்ளிற்
செறிந்திடு மனத்தி னோர்க்குத் திகழ்ந்திடு மான்மா நந்த
முறுங்கடை யுவகை தன்னா லுயிரெனு மரணி தன்னிற்
பிறந்துள ஞானத் தீயாற் பெரும்பவஞ் சுடுவ னன்றே.

(ப - ரை.) புறம் திரிவதனால் - (மனமானது) பாஹ்யஸஞ்சாரத்தால், புகல் - சொல்லப்பட்ட, சகவிகற்பம் - பிரபஞ்ச வேறுபாடு, தோன்றும்—, உள்ளில் செறிந்திடும் மனத்தினோர்க்கு - அகமுகப்பட்ட மனமுடையவர்க்கு, திகழ்ந்திடும் - விளங்குகிற, ஆன்மாநந்தம் உறும் - ஆன்ம வின்ப முண்டாகும், (அவன்) கடை உவகை தன்னால் - கடைகிற ஊக்கத்தால், உயிர் என்னும் - உயிரென்கிற, அரணி தன்னில் - கடைகோலில், பிறந்துள - உண்டாகிய, ஞானத்தீயால்—, பெரு பவம் - பெரிய பிறவிக்காட்டை, சுடுவன் - எரிப்பன், எ - று.

(வி - ரை.) ஸஞ்சாரம் - ஸஞ்சரித்தல். ஞானத்தீ - ஞானமாகிய நெருப்பு. சுடுவன் என்னும் பயனிலைக்கு எழுவாய் ஆன்மாநந்த முடையவன். கடையுவகை என்றது ஸ்வஸ்வருப விசாரமென்னும் கடைதலின் ஊக்கத்தை. ஆன்மாவை அரணியாகவும், ப்ரணவத்தை மேலரணியாகவும் கொண்டு ஜ்ஞாந மதநாப்யாஸத்தால் உண்டாகும் ஜ்ஞாநாக்நியால் பண்டிதன் பாஸத்தை தஹிக்கிறான் என்பதிதன் கருத்து. (சு)

கருமவேர் செறிந்து துன்பப் பாசிலை காட்டி நிற்கு
மொருபெரும் பவம ரத்திற் குற்றவெம் பரசு தானும்
பெருமல விருளி னுக்குப் பிறங்கொளி யிரவி யாகுந்
தெருமரு மனம டக்குஞ் சிவனுருத் தியாந மன்றே.

(ப - ரை.) தெருமரும் - சுழலாநின்ற, மனம் - மனத்தை, அடக்கும் - அடக்கிவிடுகின்ற, சிவன் உரு தியாநம் - சிவனுருவின் தியாநமானது, கரும வேர் செறிந்து - கருமமாகிய வேரூன்றி, துன்பம் - துன்பமாகிய, பாசு இலை காட்டி - பசுந்தழையைக் காட்டி, நிற்கும் - நிற்கிற, ஒரு - ஒப்பற்ற, பெரு - பெரிய, பவ மரத்திற்கு - பிறவியாகிய மரத்துக்கு, உற்ற - பொருந்திய, வெம் - கொடிய, பரசு ஆம் - கோடரியாகும், பெரு - பெரிய, மல இருளினுக்கு - மலமாகிய இருட்டுக்கு, பிறங்கு - விளங்குகிற, ஒளி - ஒளியையுடைய, இரவி ஆகும் - சூரியனாகும், எ - று.

(வி - ரை.) பசுமையிலை பாசிலை யென்றாயிற்று. ஒன்று பலவாகக் கிளைத்தலால், பிறவியை மரமாகக்கூறினர். இவ்வாறே, 'சங்கற்பநாசத்தா லெளிதாக மனநாசந்தானே யெய்தும், அங்குற்ற மனமிறக்கிற் சநந மரணங்களெனு மரமுமாயும்' என்றார் பிறரும். கோடு - மரக்கிளை யாதலால் அதை தறித்தற்குரிய கருவியாகிய கோடரி பரசு எனப்பட்டது. அரி - பகை. தெருமரும் என்பதற்குப் பகுதி தெருமா.

கருமவேர் - புண்ணிய பாப கர்மங்களென்னும் வேர். துன்பப் பாசு இலை - அவித்யா அஸ்மிதா ராகத்வேஷ அபிநிவேஸ துக்கங்களாகிய பசிய இலைகள். ஒரு பெரு பவமரம் - பிறவியென்னும் பெரிய விருக்ஷம். சிவபாவனை-கோடரி. பெரு மல இருள் - அஞ்ஞானமென்னும் இருளைச் சந்தோஷிக்கச்செய்வதும், ஆத்மாவை மறைத்துக்கொள்வதுமாகிய ஸம்ஸார விருள். இரவி-ஞானசூரியன். ஈண்டு, இச்செய்யுட்களைக் கவனிக்க:—

பிரபுலிங்கலீலை.

வாயு நிற்ப மனநின்று மனந்தா னிற்பப் பொறிநின்று
பாய பொறிக ணிற்பவிடர் படுபுன் புலன்க ணின்றனவா
லாய புலன்க ணின்றமையா லகிலந் தோன்றா துள்ளத்தே
தூய பரமா நந்தபரஞ் சோதி தோன்றக் கண்டிருந்தார்.

பொறியிற் புறத்து மனஞ்செல்லிற் புலனே தோன்றி யிடமகத்திற்
செறியக் கரணம் பராங்க சிவமே தோன்றுஞ் சிவந்தோன்ற
வறிவிற் பரந்த விடயமய மாகு முலகந் தோன்றுமற்
பிறவித் துயரக் கடல்கடந்து பேரின் பஞ்சார் குவரென்று.

மரிப்பொ டுதிப்பு மறிக்குது மென்று
கருத்தை வெளிக்கரு மத்தின் விடுத்து
விரிக்குத னெய்யை விடுத்தெரி கின்ற
நெருப்பை யவிப்ப நினைப்பதை யொக்கும்.

மட்டற வோடு மனத்தை நிறுத்திக்
கட்டுதல் வீடு விடுத்திடல் கட்டன்
றெட்டிய பண்பி னுரைத்தல மப்பேர்
சிட்டன வட்கருள் செய்தன னன்றே.

கருமமும் யோகந் தானுங் கரணத்தைப் புனித மாக்கிப்
பொருமிடர் வாயி றூறும் புக்குழல் கறங்கு போலத்
தெருமரா துண்ணி றுத்துந் தெளிந்தவக் கரணந் தன்னு
னிருமல னுகு மீச னித்தனென் றுணர்வு திக்கும்.

நித்திய னிமல னென்னு நினைவுறி னனித்த மாகிப்
பொய்த்தழி யுடம்பு டம்பைப் பொருந்திய பொருள் வெறுத்து
மெய்த்தருள் குரவன் றன்னை விரும்பினன் சென்று சார்ந்து
தத்துவ முதறி நின்ற தனியறி வினையே காணும்.

புலன்களை யொழித்த போதே பொறிகளும் பூத மைந்துங்
கலங்குறு கரண நான்குங் கலாதியுஞ் சுத்த மைந்தும்
விலங்குறு மடியில் வைத்த வெறுங்குடந் தன்னின் மேன்மேன்
மலங்குற வொருங்க டுக்கு மட்கலம் விழுத லேபோல்.

இந்திய மோரொன் றுய்விட் டிடின்மற்றை யொன்று சாரு
முந்திய மனம ழிப்ப முற்றும்போ மணிய பாம்பி
னைந்தலை களினு ளொன்றை யரிந்திடின் மற்றொன் றுலஞ்
சிந்திடு மிடற ரிந்தாற் றீர்ந்திடு மொருங்கு மாதோ.

ஆதலால் மன மடங்கி லங்கலிங் கங்க டம்முட்
பேதமோ வபேத மோவென் றழிவுறு பித்து நீங்குந்
தீதிலா யென்றி யம்பிச் சித்தரா மற்கு நாவா
லோதொணா வுணர்வி னுண்மை யுணர்த்தினன் குருகு கேசன்.

தாவி லாத மனமொடு சார்தரா
தோவு மாயி னுலகிற் புனலுமொண்
பூவு காடொறும் போக்குறு பூசனை
ஆவி போகிய வாக நிகர்க்குமால்.

புறம்பு காண்குவன் புல்லிய னீசனை
அறிந்த ஞானி யகமுறக் காண்பனுங்
எறும்பி காணுறி லின்கரும் பேகொளும்
செறிந்த வாடீல தின்பன வென்பனே.

கரங்க ளல்ல கருமஞ் செயாநிற்பத்
திரிந்து செல்லுஞ் செலாதவி டத்துநெஞ்
சொருங்கு றாத வொருமனந் தன்னினும்
பரந்த வல்லற் படுக்கும் பகையிலை.

துயிலை யின்பெனச் சொல்லுத லிந்தியத்
தியலு நெஞ்ச மிலாமையி னாலன்றோ
பயிலு நெஞ்சம் பரந்து திரிதருஞ்
செயலி லில்லைச் சிறிதுஞ் சுகமரோ.

மனமொ ருத்தன் வசப்படு மேலவன்
பினைவ ருத்தும் பிறப்பை யடைந்திடான்
மனமொ ருத்தன் வசப்படா தோடுமேல்
நனிபி றப்பிடை நாளுஞ் சுழலுமே.

அறவி னைக்கு மரும்பொரு ளின்பொடு
பெறுவ தற்கும் பெருங்கல்வி கற்றுயர்
விறலி னுக்குநல் வீரந் தனக்குமொண்
டுறவி னுக்குந் துணைமன மென்பவே.

நல்ல செய்து நரரை யுயர்த்தவும்
அல்ல செய்துங் களற்றிடை யாழ்ப்பவும்
வல்ல திந்த மனமல தையனே
இல்லை யென்ன வியம்பு மறையெலாம்.

நெஞ்ச மாதுமை நேசனை நண்ணுமேல்
விஞ்சு பாதகங் கோடி விளைப்பினும்
அஞ்சு றுனவ னவ்வினை யாவையும்
பஞ்சு தீயிடைப் பட்டென மாயுமே.

மக்கண் மானிட ரென்று மனத்தினான்
மிக்க மேன்மை விளங்கின ரில்லெனில்
பொக்க மேவும் பொறிகளோ ரைந்தினால்
ஒக்கு மாவினை யொத்துயர் வுற்றிடார்.

கெடுக்க வல்லதுங் கெட்டவர் தங்களை
எடுக்க வல்லது மிம்மன மென்றதை
அடக்க வல்லவ னைய பவக்கடல்
கடக்க வல்லவ னுவன் கடிதரோ.

ஆயின் மிக்கோ ரரிய செயலெலா
நேய மிக்க மனத்தை நிறுத்தல்காண்
வாயு நிற்க மனமு முடனிற்கும்
தோய நிற்குறி னிற்குந் துரும்புமே.

ஓடு மாவை நிறுத்துநு ளுள்ளுறக்
கோடும் வாய்க்க லினத்தினைக் கொள்ளுவார்
நீடு மாமன நிற்க நிறுத்துறில்
ஓடும் வாயுவை யுள்ளுற வீர்ப்பரால்.

அடுத்த நாடிக ளாங்கொரு மூன்றினும்
விடுத்தும் வாங்கியு மேவ நிறுத்தியும்
தடுத்தும் வாயுவைத் தன்வச மாக்கின்வாய்
மடுத்தி டாது மனமும் வசப்படும்.

ஓடும் பொன்னு முறவும் பகையுமோர்
கேடுஞ் செல்வமுங் கீர்த்தியு நிந்தையும்
வீடுங் கானமும் வேறற நோக்குதல்
கூடுந் தன்மை கொளுமன நன்மனம்.

மன்னு காம வெகுளி மயக்கமென்
றின்ன கூடி யெறிவளி முற்சுடர்
என்ன வாடு மியன்மனந் தீமனம்
தன்னை யாருந் தடுக்கத் தகாதரோ.

மறிந்தி டாது மனபவ நங்கடாம்
செறிந்த வாயிற் சிவமய மாகுமால்
அறிந்து வாயுவை யங்ஙன மெய்திஞேன்
இறந்தி டாத விலிங்கப் பிராணியாம்.

ஒடுக்குமனம் வீட்டுநெறிக் கொருதுணையா கும்புறத்து
நடக்குமன நிரயவழி நடப்பதற்குத் துணையாமென்
றிடக்கர்மன மடக்கும்வகை யெம்பிரா னியம்பியவா
றடக்கமன முறுநெறியி னருணந்தி தலைப்பட்டான்.

நில்லாது போமனத்தைக் கால்பிடித்து நிறுத்தியே
வில்லாரு மதியமுதம் விருந்திட்டு நட்புறீஇப்
பொல்லாத புலனுகரப் புறத்துநிலை தடுமாறிச்
செல்லாம லுடன்கொண்டு சித்திரமொத் திருந்தனனே

மனத்தை யடக்க மனந்துணை யாகும்
பினைத்துணை யின்றது பெற்றன னுயிற்
றனிச்சிவ மேயொரு தானென வாழ்வ
னினைத்து மறந்து நிலத்து மலானே.

வாரண மாகு மனத்தை யடக்கிற்
காரண மாயை களைந்தொழி யாத
பூரண மாகிய போத மடைந்திட்
டாரண மோது மரும்பொரு ளாவான்.

விரிந்த நெஞ்சங் கருவியாம் விடய முணர விரியாம
லொருங்கு நெஞ்சங் கருவியாந் தன்னை யுணர வொருங்காமல்
விரிந்த நெஞ்ச முடையவனை விடாது பிறவி யென்றுணர்க
வொருங்கு நெஞ்ச முடையானை யுறாது பிறப்பென் றுணர்கவே. (எ)

சிவயோகசமாதித்தலம் - முற்றும்.

உ

ஓம் கைலாஸவாஸிநே நமஃ

## முப்பத்தைந்தாவது

## (௬.) இலிங்கநிசத்தலம்.



[அதாவது - ஸமாதி யில்லாத மற்றக் காலத்திலும் பக்தர்களின் மேலதான வாத்ஸல்யத்தினால் சிவபிரான் அவர்களது தேஹங்களி லிருப்பானோ, பக்தர்களினால் தேஹமுள்ள லிங்கத்தின் எந்த பரோக்ஷமல்லாத அநுபவஜ்ஞானமுண்டோ, பூர்வோக்த ரீதியான ஶிவலிங்கஸமாதி வல்லமையினால் அச்சிவலிங்கமே தானாவதோ, அதே இலிங்க நிசம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொருந்துறு மிதய மென்னும் புனிதநன் முளரி சேர்ந்த
வருஞ்சிவ லிங்க மெய்ம்மை யநுபவ சித்தி தானே
பரஞ்சு ட ராமி லிங்க நிசமெனப் பகரா நிற்பர்
திருந்திய கலைகள் யாவுந் தெரிபெரும் புலவரன்றே.

(ப - ரை.) திருந்திய - திருத்தமாகிய, கலைகள் யாவும் - நூல்களெல்லாம், தெரி - தெரிந்துகொண்ட, பெரும்புலவர் - பேரறிவினர், பொருந்துறும் - பொருந்திய, இதயம் என்னும்-இதயமென்கிற, புனிதம் - பரிசுத்தமான, நல்-அழகிய, முளரி சேர்ந்த - தாமரை மலரைச் சேர்ந்த, அரு - அரிய, சிவலிங்கம் - சிவலிங்கத்தின், மெய்ம்மை - உண்மை, அநுபவ சித்தி தானே - அநுபவசித்தியே, பரஞ்சுடர் ஆம் - பரஞ்சோதியாகிய, இலிங்க நிசம் என - இலிங்கநிசத்தலமாமென்று, பகரா நிற்பர் - சொல்லா நிற்பர், எ - று.

(வி - ரை.) புலம் - அறிவாதலால் அதனை யுடையாரை புலவர் என்றார். புலவர் பகரா நிற்பர் என முடித்துக்கொள்க. (க)

வேதனா தியரா ந் தேவர் வேதமா தியவா நூல்க
ளியாதினி லடங்கித் தோற்ற மெய்துறு மவ்வி லிங்க
மோதரும் பிரம மேயா முலகுதிக் குறுமி லிங்கந்
தீதறு ஞான நந்த சிவமேமற் றொழிந்த வல்ல.

(ப - ரை.) வேதன் ஆதியர் ஆம் - பிரமன் முதலியோராகிய, தேவர்—, வேதம் ஆதிய ஆம் - வேத முதலியவாகிய, நூல்கள்—, யாதினில் - எதனிடத்தே, அடங்கி - ஒடுங்கி, தோற்றம் எய்துறும் - தோன்றுமோ, அவ்விலிங்கம்—, ஓது அரு - சொல்லு தற்கரிய, பிரமமேயாம்—, உலகு—, உதிக்குறும் - தோன்று மிடமாயிருக்கிற, இலிங்கம் - அந்தலிங்கம், தீது அறு - தீமையற்ற, ஞானநந்த சிவமே—, ஒழிந்த அல்ல - ஒழிந்தன வல்ல, எ - று.

(வி - ரை.) வேதாதிகாரி யாதலால், பிரமனை வேதன் என்றும், பிரமன் எல்லாத் தேவர்கட்கு முதல்வனாதலால் வேதனாதியராந்தேவர் என்றும், வேதம் எல்லா நூல்கட்கு முதனூலாதலால் வேதமாதியவா நூல்கள் என்றும் கூறலாயிற்று. சிவமே யென்னு மேகாரம் தேற்றம். (உ)

உரைப்பதென் பலமாற் றங்க ளுலகுதித் தொடுங்கும் வண்ணந்
தரித்திடு மிடம தாகுஞ் சச்சிதா நந்த மேனிப்
பரப்பிர மந்தா னேகாண் பரசிவ னுமங் கொண்டே
தெரிப்புறு மிலிங்க மென்று செப்புறப் பட்ட தன்றே.

(ப-ரை.) பல மாற்றங்கள் - சொற்கள் பலவற்றை, உரைப்பது என் - சொல்வதனுற் பயனென்னை, உலகு உதித்து ஒடுங்கும் வண்ணம்—, தரித்திடும் - தரிக்கின்ற, இடம் ஆகும்—, சச்சிதாநந்தமேனி - சச்சிதாநந்த ரூபத்தையுடைய, பரப்பிரமந்தானே—, பரசிவன் - பரசிவன் என்கிற, நாமம் கொண்டு—, தெரிப்பு அரும் - தெரிவித்தற்கரிய, இலிங்கம் என்று—, செப்புறப்பட்டது - சொல்லப்பட்டது, எ - று.

(வி-ரை.) உதித்தொடுங்கல் - தோன்றியடங்குதல். சச்சிதாநந்தம் - சத்து சித்து ஆநந்தம், இவற்றை முறையே உண்மை அறிவு இன்பம் என்பர் தமிழ்நூலார். மேனி - உரு. நாமம் - பெயர். தெரிப்பு - பிறவினை. ஈண்டு, இச்செய்யுளைக் கவனிக்க :—

பிரபுலிங்கலீலை.

பரசிவம் பிரம மென்னப் பட்டொரு திரிவு மின்றி
யுரைமன மிறந்து நின்ற வொருசிவ லிங்கந் தன்னின்
வருமுயர் சதாசி வன்றான் மற்றவன் றனைப்பொ ருந்து
மருமைகொண் ஞான சத்தி யவர்களாற் சிவனு திப்பன். (௩)

மாசறு நிகழ்வே தாந்த வாக்கியத் துதிக்கு ஞான
மாசறு மிலிங்க மென்ன வறைதரு கிற்பர் சில்லோர்
பேசுறு மதுதான் மிக்கப் பிரமமா மிலிங்கந் தன்னாற்
றேசுற வறிவ தாகுஞ் செய்கையாற் பிறிதொன் றாமல்.

(ப-ரை.) மாசு அறு - குற்றமற, நிகழ் - விளங்குகிற, வேதாந்த வாக்கியத்து உதிக்கும் ஞானம்—, ஆசு அறு - குற்றமற்ற, இலிங்கம் என்ன - இலிங்கமென்று, சில்லோர் - சிலர், அறைதருகிற்பர் - சொல்லுவர், பேசுறும் - சொல்லப்பட்ட, அது-ஞானம், மிக்க - மேலான, பிரமம் ஆம் இலிங்கம் தன்னால்—, தேசு உற-ஒளிபொருந்த, அறி(யப்படு)வது ஆகும் செய்கையால்—, பிறிது ஒன்று ஆம் - வேறொன்றாகும், எ - று.

(வி-ரை.) உதித்தல் - உண்டாதல். அறைதருகிற்பர் என்பதற்குப் பகுதி அறைதா. அறிவது ஆகும் செய்கை - ஞேயம். வேதாந்த வாக்கியத்து உதிக்கும் ஞானம் என்றது உபநிஷத்வாக்ய ஜந்யஜ்ஞாநம் எனினுமாம். (௪)

உலகெலாந் தருவ தற்கிங் கொருதனி மூல மாகி
யிலகுறு மவ்வி யத்த மிலிங்கமென் றிசைப்பர் மிக்க
தலைமைகொ ளிலிங்கி யீசன் றானென வகுத்துச் சொல்வர்
நிலவுமிம் மதம்பொ ருத்த மன்றென நிகழ்த்து நூலே.

(ப-ரை.) உலகு எல்லாம்—, தருவதற்கு - தோன்றுவித்தற்கு, இங்கு—, ஒரு தனி மூலம் ஆகி - ஒரு ஒப்பற்ற காரணமாகி, இலகுறும் - விளங்குகிற, அவ்வியத்தம் - அவ்யக்தமே, இலிங்கம் என்று இசைப்பர்—, மிக்க தலைமை கொள் - மேலான முதன்மையைக்கொண்ட, ஈசன் தான்—, இலிங்கி—, என வகுத்துச் சொல்வர்—, நிலவும் - விளங்குகிற, இம்மதம் - இந்தமதம், பொருத்தம் அன்று என—, நூல் நிகழ்த்தும் - நூல்கள் சொல்லும், எ - று.

(வி-ரை.) அவ்யக்தம் - ப்ரக்ருதி. ஈசன் - மஹேஶ்வரன். அவ்யக்தம் லிங்கம் என்பது ஏனையர் கொள்கையாம். எவ்வாறெனின்— சிலர் சிவமெனும் பொருளிலுள்ளதாகிய மாயையே சிவனது லிங்கமென்கின்றனர். சிலர் சித்தத்தைச் சிவமென்கின்றனர். சிலர் அஹங்காரத்தையும், சிலர் மனத்தையும், சிலர் புத்தியையும், சிலர் ப்ராணனையும், சிலர் தேஹத்தையும், சிலர் த்வக் முதலிய இந்த்ரியங்களையும், சிலர் இவைகளின்

அமூஹத்தையும் சிவலிங்கமென்கின்றனர். யாதொன்று யாதொன்று சிவனது லிங்கமென்று சொல்லப்பட்டதோ அது அது ஜடமேயாம்; உண்மையில் லிங்கமல்ல. ஜ்ஞாநமே லிங்கமாயுள்ளதென்று அறிகின்றனர். (ரு)

விரவுறு மாலிங் கந்தான் மிளிர்தலு மதியு மீனு
மிரவியு மழலு மின்னு மிலங்குறு விலங்கு சோதி
யுருவமா மவ்வி லிங்கத் தொளியினு லவைய னைத்துந்
திரிவற விலங்கு முண்மை செப்புமிம் மாற்ற மன்றே.

(ப - ரை.) விரவுறும் - பொருந்திய, மாலிங்கம்—, மிளிர்தலும் - விளங்குதலும், மதியும் - சந்திரனும், மீனும் - நக்ஷத்ரங்களும், இரவியும் - சூரியனும், அழலும் - நெருப்பும், மின்னும் - மின்னலும், இலங்குறு - பிரகாசிக்கமாட்டா, இலங்கு - விளங்குகிற, சோதி உருவம் ஆம் அவ்விலிங்கத்து ஒளியினுல்—, அவை அனைத்தும்—, திரிவு அற - மாறுபாடில்லாமல், இலங்கும் - விளங்கும், செப்பும் - சொல்லப்பட்ட, இ - இந்த, மாற்றம் - சொல்லானது, உண்மை - மெய்யாகும், எ - று.

(வி - ரை.) மாலிங்கம் - மஹாலிங்கம். மிளிர்தலும் என்றது பிரகாசித்த மாத்ரத்திஞலே என்றபடி. (சு)

உலகெலாந் தோன்றி நின்றங் கொடுங்குதற் கிடந்தா ளுகி
யிலகுமா லிங்கந் தன்னி னிலைபர மதனுன் ஞான
நிலையில்வாழ் பிரம மேயந் நிசலிங்க மென்று கொள்ளிற்
றெலைவிலா லிங்க வுண்மை தோன்றிடு மைய மின்றி.

(ப - ரை.) உலகு எல்லாம் தோன்றி நின்று அங்கு ஒடுங்குதற்கு—, தான் இடம் ஆகி—, இலகும் - பிரகாசிக்கிற, மாலிங்கந்தன்னின் - மஹாலிங்கத்திலும், பரம் இல்லை - மேலான தத்வமில்லை, அதனுல்—, ஞான நிலையில் வாழ் பிரமமே—, அ - அந்த, நிசலிங்கம் என்று கொள்ளின்—, தொலைவு இல்லா - அழிவில்லாத, இலிங்கவுண்மை—, ஐயம் இன்றி தோன்றிடும்—, எ - று.

(வி - ரை.) தோன்றல் - உதித்தல். நிற்றல் - நிலைபெறல். ஒடுங்கல் - அடங்கல். ஐயம் - சந்தேஹம். (எ)

இலிங்கநிசத்தலம் - முற்றும்.



௳

ஓம் கவசிநே நம:.

முப்பத்தாறுவது

## (ரு.) அங்கலிங்கத்தலம்.

[அதாவது - அங்கமென்னும் ஜ்ஞாநமும் அந்த ஜ்ஞாநத்தினலறியப்படும் லிங்கமும் ஆகிய இவ்விரண்டு முண்டானவனும், பீஜாங்குர நியாயப்படி அங்கமென்னும் ஜீவாத்மாவினிடத்தில் லிங்கமும் லிங்கத்தினிடத்தில் ஜீவாத்மாவும் ஸமரஸமாயிருக்கும் ஜ்ஞாநமுண்டானவனுமான ப்ராணலிங்கியே அங்கலிங்கி என்பது.]

ஞானநல் லங்க மென்பர் ஞாசமி லிலிங்க ஞேயந்
தானென வறைவ ரிங்ஙன் சாற்றிய விரண்டும் யாவன்
பானிகழ் வுறுமிங் கன்னேன் பகரங்க லிங்கி யென்று
நூனிலை யுணர்ந்த மேலோர் நுவன்றிடப் படுவ னன்றே.

(ப - ரை.) ஞானம் - ஞானமானது, நல் அங்கம் என்பர்—, ஞேயம்—, நாசம் இல் - அழிவில்லாத, இலிங்கம்—, என அறைவர்—, இங்ஙன் சாற்றிய இரண்டும்—, யாவன்பால் - எவனிடத்தில், நிகழ்வுறும் - விளங்குமோ, அன்னோன் - அவன், பகர் - சொல்லப்பட்ட, அங்கலிங்கியென்று—, நூல் நிலை உணர்ந்த மேலோர் - நூலினிலையை யறிந்த மேலோரால், நுவன்றிடப்படுவன் - சொல்லப்படுவன், எ - று.

(வி - ரை.) சாற்றல் - சொல்லல். யாவன்பால் என்பதில் பால் ஏழாவதனிடப் பொருளது. மேலோர் என்பதனீற்றில் மூன்றனுருபுதொக்கது. நுவலல் - சொல்லல். ஞானம் - சிவஞானமுள்ள ஜீவன். (௬)

அங்கத்தி லிலிங்க மொன்றி யவ்விலிங் கத்தி லங்கந்
தங்குற்று நிகழ்வோ னியாவன் றனவ னங்க லிங்கி
பொங்குற்ற மனத்தி லிங்க முணர்ந்துழிப் பூசை செய்யுந்
துங்கத்தன் யாவ னன்னோன் றுகளறு மங்க லிங்கி.

(ப - ரை.) அங்கத்தில் இலிங்கம் ஒன்றி—, அவ்விலிங்கத்தில்—, அங்கம் தங்குற்று - அங்கம் தங்கப்பெற்று, நிகழ்வோன் யாவன் - (சமரசத்தன்மைபெற்று) விளங்குவோன் எவனோ, அவன்—, அங்கலிங்கி—, பொங்குற்ற - விளங்காநின்ற, மனத்து இலிங்கம்—, உணர்ந்துழி - அறிந்தபோது, பூசை செய்யும்—, துங்கத்தன் யாவன் - பரிசுத்தன் எவனோ, அன்னோன் - அவனே, துகள் அறும் - குற்றமற்ற, அங்கலிங்கி - அங்கலிங்கி யாவன், எ - று.

(வி - ரை.) அங்கம் - ஜீவன். லிங்கம் - சிவலிங்கம். ஒன்றுதல் - பொருந்துதல். துங்கம் - பரிசுத்தம். உணர்ந்த உழி யெனற் பாலது உணர்ந்துழி யென நிலைமொழியீற்ற கரங் தொகுத்தல் பெற்றது. மனத்து இலிங்கம் - ஹ்ருதய கமலத்திலுள்ள ஜ்யோதி ஸ்வரூபமாகிய லிங்கம். பூசை செய்யும் - த்யானம் செய்கிற. (௭)

ஒருதனி யிலிங்கந் தானே யொளிர்தரும் பிரம மென்றும்
வருசக மூல மென்றும் வான்முத்தி வைப்ப தென்றுஞ்
சுருதிகண் முதலா யுள்ள தொல்லைய கலைக டம்மாற்
பெரிதுணர்ந் திடப்பட் டோங்கு மென்றறி பெருந்த வத்தோய்.

(ப - ரை.) பெருந்தவத்தோய் - பெரியதவத்தினையுடையவனே, ஒரு தனி இலிங்கம் தானே—, ஒளிர்தரு - பிரகாசிக்கிற, பிரமம் என்றும்—, வரு சக மூலம் என்றும் - தோன்றின ஜகத்துக்குக் காரணமென்றும், வான் - மேலான, முத்திவைப்பு என்றும் - முத்திப் பதமென்றும், சுருதிகள் முதலாயுள்ள—, தொல்லைய - பழமையாகிய, கலைகள் தம்மால்—, பெரிது - மிகுதியாக, உணர்த்திடப்பட்டு—, ஓங்கும் என்று - உயர்ந்து விளங்கு மென்று, அறி - அறிவாயாக. எ - று.

(வி - ரை.) வருதல் - தோன்றுதல். சுருதிகள் - வேதங்கள். கலைகள் - நூல்கள். சுருதிகள் முதலாயுள்ள தொல்லைய கலைகள்' என்றது வேதாதிக்யம் தோன்றற்கென்க.

பகர்ந்திடு மினைய லிங்கம் பரமுத்தி யுருவ மென்ன
வுகந்துள வுளத்தன் மெய்யோ டுறினுமே முத்த னவன்
சகந்தரு மூல மென்னச் சம்புவா மிலிங்கந் தன்னை
யகங்கொளு நிலையி லாதா னருங்கதி யிலாத மூடன்.

(ப - ரை.) பகர்ந்திடும் - சொல்லப்பட்ட, இனைய லிங்கம் - இத்தன்மையாகிய லிங்க மானது, பரமுத்தி உருவம் என்ன—, உகந்துள்ள - மகிழ்ந்திருக்கிற, உளத்தன்-மனத்தை யுடையவன், மெய்யோடு உறினும் - உடம்போடுகூடி யிருந்தாலும், முத்தன் ஆவன்—,

சம்பு ஆம் இலிங்கம் தன்னை—, சகம் தரும் மூலம் என்ன - ஜகத்தைத் தோன்றுவித்தற்குக் காரணமென்று, அகம் கொள்ளும் நிலையில்லாதான் - மனத்திற் கொள்ளும் நிலையில்லாதவன், அரு - அரிய, கதி இல்லாத மூடன்—, எ-று.

(வி - ரை.) பரமுத்தி உருவம் - மேலான மோக்ஷஸ்வரூபம். மெய்யென்றது மங்கல வழக்குப்பற்றி யென்க. கதி - மோக்ஷமார்க்கம். உடம்போடுகூடி உறினும் முத்தன் ஆவன் என்றதனால் முக்தன் ஆவதுமன்றி ஞானியாதலும் ஸத்குருவாதலும் என்பதும், ஜகம் தரும் மூலம் என்றதனால் லிங்கமானது ஆத்யந்தமில்லாதது என்பதும் பெறப்பட்டன.

யாவனற் பிராண லிங்க பூசனை யெழுவாய் மேவிப்
பாவுறு சிவமாய்த் தன்னைப் பாவிக்கு மறிஞ னன்னோன்
மேவுறு ஞான பாக விளைவினாற் சரண னாமந்
தாவறு முலக மெல்லாஞ் சாற்றிடப் படுவ னன்றே.

(ப - ரை.) நல் - நல்ல, பிராணலிங்கபூசனை எழுவாய் - பிராணலிங்கபூசை முதலானவற்றை, மேவி - உடையனாய், பாவுறு - (எங்கும்) வியாபித்த, சிவமாய்-சிவமாக, தன்னை பாவிக்கும் அறிஞன்—, யாவன் - எவனோ, அன்னோன் - அவன், மேவுறும் - பொருந்திய, ஞானபாக விளைவினால் - ஞானபரிபாக முண்டானமையால், சரணன் - சரணனென்கிற, நாமம் - பெயரால், தா அறும் - அழிவற்ற, உலகம் எல்லாம் - எல்லா வுலகத்தாராலும், சாற்றிடப்படுவன் - அழைக்கப்படுவன், எ - று.

(வி - ரை.) பாவித்தல் - பாவனைசெய்தல். அறிஞன் - அறிவுடையோன். பாகம் - பக்குவம். உலகம்-ஆகுபெயர். தன்னைப் பாவிக்கும் அறிஞன் - பாவிக்கப்பட்ட ஆன்மாவையுடைய அறிவுடையவன்.

அங்கலிங்கத்தலம் - முற்றும்.

---

இவ்விதமாய் எந்தக்காரணத்தினால் பிராணலிங்கார்ச்சநம், சிவயோகசமாதி, அங்கலிங்கம் என்னும் மூன்று ஸ்தலங்களில் கூறிய தர்மங்களுடனே கூடியிருத்தலால் எவன் சிவனிடத்தில் ப்ரீதியுள்ளவனானானோ அந்தக்காரணத்தினால் அவன் நான்காமவனான ப்ராணலிங்கி என்று அறியப்பட்டான்.

௪ - வது. பிராணலிங்கித்தலம் முற்றிற்று.

---

உ

## ரு - வது. சரணத்தலம்.

[அதாவது - அறிவினது வெளிச்சத்தினால் தேஹேந்த்ரியாதிகளெல்லாம் தன் ஸ்வரூபமென்றறிந்து சகல விஷயங்களிலும் அகப்பட்டிருப்பினும் சுத்தாத்மாவாயும் ஆநந்தரூபமாயுமிருத்தல் என்பது.]

(இதனுட்பிரிவு.)

கலிவிருத்தம்

பின்ன ரந்தப் பிராணலிங் கிப்பெயர்
மன்னி னோனெவ் வகைச்சர ணப்பெயர்
தன்னை யெய்துவன் சாற்றிது தன்னையு
மன்னை போலு மருட்கண நாதனே.

(ப - ரை.) அன்னைபோலும்- தாயையொத்த, அருள்-கிருபையுள்ள, கணநாதனே—, பின்னர் - பிறகு, அந்தப் பிராணலிங்கிப்பெயர் மன்னினோன்—, எவ்வகை - எவ்விதமாக, சரணப்பெயர் தன்னை எய்துவன்—, இது தன்னையும் சாற்று-இதனையும் சொல்வாயாக,

(வி-ரை.) அன்னைபோலுமருட்கணநாதனே யென்றது இரேணுகரை. மன்னினேன்-பொருந்தினவன். இது தன்னையும் என்பதில் தன் சாரியை. (க)

அங்க லிங்கி யரிய சதியெனத்
துங்க லிங்கம் பதியெனச் சொல்வரிச்
சங்க மெய்துந் தனிச்சுக மெய்தினோற்
கிங்கு வந்துறு மின்சர ணப்பெயர்.

(ப-ரை.) அங்கலிங்கி—, அரிய - அருமையாகிய, சதி என - மனைவி யென்றும், துங்க லிங்கம் - மேன்மையாகிய லிங்கம், பதி என சொல்லுவர் - புருஷனென்றும் சொல்லுவர், இ - இந்த, சங்கம் எய்தும் - சங்கத்தையடைகிற, தனி - ஒப்பற்ற, சுகம் எய்தினோற்கு - ஆநந்தத்தை யடைந்தவனுக்கு, இங்கு - இவ்வுலகில், இன் சரணப்பெயர் - இனிய சரணன் என்னும் பெயர், வந்து உறும் - வந்து பொருந்தும், எ - று.

(வி-ரை.) எய்தல் - அடைதல். சங்கம் - கூட்டுறவு. அங்கலிங்கி - சிவஞான வடிவனான அங்கலிங்கி. (உ)

இத்த லத்திற * மீரிரண் டாகுமுன்
வைத்தி டுஞ்சர ணத்தல மற்றுறுஞ்
சித்த தாமத நீக்கநிர்த் தேசமோ
டெய்த்த சீலசம் பாதந மென்னவே.

(ப-ரை.) முன் வைத்திடும் சரணத்தலம்—, மற்று உறும் - வேறாகப் பொருந்திய, சித்ததாமதம் நீக்கம்—, நிர்த்தேசமோடு—, எய்த்த - அறியப்பட்ட, சீலசம்பாதநம் என்ன - சீலசம்பாதநமென்று, இத்தலத்திறம்-இந்தத் தலத்தின்வகை, ஈரிரண்டு ஆகும் - நான்காகும், எ - று.

(வி-ரை.) திறம் - வகை. எய்த்தல் - அறிதல். இது "எய்யேமெனினுங் குடைந் தின்பத்தே னுண்டெழிறருமே" என்னும் பெரியோர்கூற்றானுமினிது விளங்கும். நீக்கம் - நிரஸநம். (ங)

இனைய நான்கு தலத்தினி லக்கணந்
தனையு மிங்கு முறைதரச் சாற்றுதும்
நினையு நெஞ்ச மொருக்கி நிலையொடு
சினம விழ்ந்த முனிவ செவிக்கொளே.

(ப-ரை.) சினம் அவிழ்ந்த முனிவ—, இனைய - இத்தன்மையவாகிய, நான்கு தலத்தின் இலக்கணம் தனையும்—, இங்கு—, முறைதர - முறையாக, சாற்றுதும் - சொல்வோம், நினையும் நெஞ்சம் ஒருக்கி - நினையுமனத்தை யொருவழிப் படுத்தி, நிலையொடு—, செவிக்கொள் - கேட்பாயாக, எ - று.

(வி-ரை.) ஒருக்கி - ஒருவழிப்படுத்தி. நிலை - அசையாமை. சினம் - கோவம். சினமவிழ்ந்த முனிவ என்றது அகத்தியரை. (ச)

* மற்றொருபிரிவு:—அதாவது இஷ்டலிங்கார்ச்சகன், ப்ராணலிங்கார்ச்சகன், த்ருப்தி லிங்கார்ச்சகன் என்று மூன்றுவகைப்படுவன். அநிஷ்டங்களை நஷ்டம் செய்பவனே இஷ்ட லிங்கார்ச்சகன்; ஸ்வயபரங்களை யறியாதிருப்பவனே ப்ராணலிங்கார்ச்சகன்; இஹபரங்களை யறியா திருப்பவனே த்ருப்திலிங்கார்ச்சகன். சரணனை விஞ்ஞாநப்ரஹ்மம் என வழங்கு தலு முண்டு.

ஓம் பரமேஶ்வராய நம:

# முப்பத்தேழாவது

## (க) சரணத்தலம்.

[அதாவது - பதிவ்ரதா ஸ்த்ரீயானவள் பரபுருஷரிடத்தில் விமுகையாய்ச் சகலக்ருத்யங்களிலும் தன் ப்ராணகாந்தனிடத்திலேயே அநுரக்தையாயிருப்பதுபோல, ஜ்ஞாநமேரூபமானவனும் அங்கலிங்கியுமான தானே ஸதி சிவலிங்கமே பதி என்று பாவித்து இதர தேவர்களிடம் விமுகனாயிருந்து, அந்த ஸதிபதியின் ஸம்யோகத்தினால் நிகழும் சுகமுடைய ப்ராணலிங்கியே சரணன் என்பது.]

கலிவிருத்தம்.

காந்த னைக்கொள் கனங்குழை போலவே
சாந்த மெய்ச்சிவ னுக்கொரு சத்தியா
யாந்த னைக்கொண் டயன்முக நோக்குறு
னேய்ந்த நற்சர ணத்தல மெய்தினேன்.

(வி - ரை.) ஏய்ந்த - பொருந்திய, நல் - நல்ல, சரணத்தலம் எய்தினேன் - சரணத்தலத்தையடைந்தவன், காந்தனை கொள் - புருஷனைப் போற்றிக்கொள்ளுகிற, கனங்குழை போலவே - பெண்போலவே, சாந்தம் - சாந்தத்தையுடைய, மெய்-உடம்பில் தரித்துள்ள, சிவனுக்கு - இஷ்டலிங்கத்திற்கு, ஒரு சத்தியாய்—, ஆம் தனைக் கொண்டு - ஆகுமளவு கொண்டு, அயல் முகம் நோக்குறான் - வேறு முகம் பார்க்க மாட்டான், எ - று.

(வி - ை.) காந்தன் - புருஷன் (கணவன்). கனங்குழை அன்மொழித்தொகைக் காரணப்பெயர். சாந்தம் - சாந்தகுணம். ஒருசத்தியாய் - தனதான்மாவை யொருசத்தியாய். அயல் முகம் நோக்குறான்-அந்யமாகிய ஏனையபொருள்களில் உதாசீனனாயிருப்பன்.

புரக்கு மீசன் புலப்படி னியாவர்தாம்
விருப்ப மெய்துவர் வேறுளர் தம்மிடை
வரப்பெ றிற்பெரு மாநிதி யாவர்போ
யிரப்பர் மண்ணை யிடுகெனத் தேடியே.

(ப - ரை.) புரக்கும் - ரக்ஷிக்கிற, ஈசன்—, புலப்படின்-அறியப்பட்டால், வேறுளர் தம்மிடை - வேறாயுள்ளவரிடத்தில், யாவர்தாம் விருப்பம் எய்துவர் - எவர்தாம் விருப்பமடைவார்கள், பெரு மா நிதி - பெரிய நிக்ஷேபம், வரப்பெறின் - வரப்பெற்றால், மண்ணை-வளையல் மண்ணை, இடுக எனத் தேடிப்போய்-தாவென்று தேடிப்போய், யாவர் இரப்பர்-எவர் யாசிப்பர், எ - று.

(வி - ரை.) புரத்தல் - காப்பாற்றல். புலப்படல் - காணப்படுதல் (ஸாக்ஷாத்காரமாதல்). இரத்தல் - யாசித்தல் (ஏற்றல்). யாவர்தாம் விருப்பமெய்துவர், யாவர்போயிரப்பர் என்ற வினாக்கள் முறையே ஒருவரும் விருப்பமெய்தார், ஒருவரும் போயிரவார் என்னும் பொருடந்து நின்றன. (உ)

பற்றெ னுஞ்சிவா நந்தம படைத்துளோன்
மற்றும் வேறு மனத்தின் விழையுமோ
பெற்ற வன்பெருங் கங்கைப் பெருக்கினை
யுற்றி டுங்கொல் வெங்கானலை யோடியே.

(ப-ரை.) பற்று என்னும் - பற்றென்று சொல்லப்படுகிற, சிவாநந்தம் படைத்துளோன் —, மற்றும் வேறு - மற்றும் வேறுபொருளை, மனத்தின் - மனத்தினுல், விழையுமோ - விரும்புவனே, பெரு கங்கைப் பெருக்கினை-பெரிய கங்காப்ரவாஹத்தை, பெற்றவன்—, வெம் கானலை - வெம்மையாகிய கானற்சலத்தை, ஓடி உற்றிடுங்கொல் - ஓடியடைவனே, எ - று.

(வி - ரை.) பற்று - களைகண் (ஆதரவு). விழைதல் - விரும்புதல். கங்கை - கங்காநதி. கானல்-பேய்த்தேர். 'பேய்த்தேர் முகக்குறும்பேதை குணமாகாமே' என்றும், 'அலகைத்தேரின்' என்றும், 'கரப்பவரையொத்தன பசாசரதமே' என்றும் மேலோருங்கூறுதல் காண்க. கானனீர் பேய்கட்கு வாஹநமாதலால் அதற்கு இப்பெயர் வழங்குவதாயிற்று. இது கோடைக்காலத்தில் பாலைநிலத்திற் காணப்படுவது. இப்பாலைநிலத்தை மருபூமி என்பர் வடநூலார். மருபூமி - நிர்ஜலப்ரதேசம். (ஙு)

துன்னும் வெம்பவ மாகிய தொல்லிரு
டன்னை வென்று துரந்திடிற் சங்கர
னென்னும் வெங்கதி ரன்றி யெழுந்தழி
மின்னெ னுஞ்சுரர் வென்றிட வல்லரோ.

(ப - ரை.) துன்னும் - நெருங்கிய, வெம் - கொடிய, பவம் ஆகிய - பிறவியாகிய, தொல் இருள் தன்னை - பழமையாகிய அந்தகாரத்தை, சங்கரன் என்னும்—, வெங்கதிர்-சூரியன், வென்று துரந்திடின் அன்றி - வென்று ஓட்டினுலன்றி, எழுந்து அழி - தோன்றியழிகின்ற, மின் என்னும் சுரர் - மின்மினியென்று சொல்லுதற்குரிய தேவர், வென்றிட வல்லரோ—, எ - று.

(வி - ரை.) துன்னல் - நெருங்கல். துரத்தல் - ஓட்டல். மின்மினி - ஓர்வகைப்பூச்சி, இதனை கத்யோதம் என்பர் வடநூலார். (சு)

பிறவி நோயினன் பிஞ்ஞகன் றன்னையே
யுறுவ தன்றி யுறுன்பிற தேவரை
நிறைவு றுஞ்சசி நிற்க வுடுவுறு
தறவ ருந்தவ வாவு சகோரமே.

(ப - ரை.) பிறவி நோயினன் - பிறவிப்பிணியை யுடையவன், பிஞ்ஞகன் தன்னையே உறுவது அன்றி - சிவபெருமானையே அடைவதன்றி, பிறதேவரை—, உறுன் - அடையமாட்டான், நிறைவுறும் - (கலைகள்) நிறைந்த, சசி நிற்க-சந்திரனிருக்க, அற - மிகுதியாக, அருந்த - உண்ண, அவாவு - விரும்புகிற, சகோரம்—, உடு உறுது - நக்ஷத்திரங்களையடையாது, எ - று.

(வி - ரை.) பிறவிநோய் - ஸம்ஸாரக்லேசம். பிஞ்ஞகம் - தலைக்கோலம், அதனையுடையவனுதலால் சிவபெருமானை பிஞ்ஞகன் என்றார். பிறதேவர் என்றது பிரமனுதியரை. சகோரம் - நிலாமுகிப்புள். (ரு)

பவமெ னுங்கடும் பாம்பினை மீட்பவ
னெவையு நன்குண ரீச னலாலிலை
சிவமு ணர்ந்துதெ ளிபெறும் யோகிதா
னவைத ரும்பிறி தொன்றினை நண்ணுறுன்.

(ப - ரை.) பவம் என்னும் - பிறவியென்கிற, கடும் பாம்பினை மீட்பவன்—, எவையும் - யாவையும், நன்கு உணர் - நன்றுயறிந்த, ஈசன் அல்லால் இல்லை—, (ஆதலால்) சிவம் உணர்ந்து—, தெளி - தெளிவை, பெறும் - பெற்ற, யோகி—, நவை தரும் - குற்றத்தையுண்டாக்குகிற, பிறிது ஒன்றினை - வேறொன்றை, நண்ணுறுன் - அடையமாட்டான், எ - று.

(வி - ரை.) பாம்பு என்றது பாம்பின் விடத்தை யாதலால் ஆகுபெயர். எவையும் நன்குணர் ஈசன் என்றதனால் சிவபெருமான் ஸர்வஜ்ஞன் என்றதாயிற்று. இவன் பாம்பின் விடத்தை மீட்பித்தலில் வல்லவன் என்றலே இவனது ஸர்ப்பாபரண தாரணமே நன்கு புலப்படுத்தும். பாம்பினை என்றது சர்ப்பத்தினின்றும் எனப் பொருள் கோடலு மமையும். (௬)

முற்று மேவெம் முயற்சியி னானுமிங்
குற்ற வன்சிவன் றன்னை யுவகையே
பெற்றி டும்பர மானந்தப் பேற்றினன்
மற்ற வும்பர்க ளான்மகிழ் வுற்றிடான்.

(ப - ரை.) முற்றும் - (சாதநங்கள்) முழுதும், மேவு - அமைந்த, எ முயற்சியினானும் - எந்த முயற்சியாலாயினும், சிவன் தன்னை—, இங்கு உற்றவன்—, உவகையே பெற்றிடும்-மகிழ்ச்சியையே யடைவான், (இவன்) பரமானந்தப் பேற்றினன்—, (ஆதலால்) மற்ற உம்பர்களால்—, மகிழ்வு உற்றிடான்—, எ - று.

(வி - ரை.) சாதநங்கள் - கருவிகள். பரமானந்தப் பேற்றினன் - பேரின்ப மாகிய ஊதியத்தை யடைந்தவன். (எ)

சரணத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் த்ரிபுராந்தகாய நமஃ

முப்பத்தேட்டாவது

## (உ.) தாமசநிரசநத்தலம்.

[அதாவது - ப்ரஹ்மாநந்த பரிபூர்ண குருவாகிய சரணனால் தமோகுண விகாரங்கள் அத்யந்தமாய்த் தள்ளப்பட்டும், சிவஜ்ஞாநத்திற்குப் பந்துக்களான ஶாந்தி பாஹ்யேந்த்ரியநிக்ரஹம் விவேகம் வைராக்யம் அகண்டத்யாநம் க்ஷமை பூததயை விஶ்வாஸம் ஶிவபக்தி ஶிவாசாரம் ஆகிய ஸத்வகுணங்கள் கொள்ளப்பட்டு மிருத்தலே தாமசநிரசநம் என்பது.]

கலிவிருத்தம்.

பராப ரற்பெற் றுவகை படைத்துளோன்
விராவு மத்தமோ பாவம் விடுத்தலாற்
றராத லத்திற் றனைநிகர் தாமத
நிராச கப்பெய ரோடு நிலாவுவான்.

(ப - ரை.) பராபரன் பெற்று - பராபரனை யடைந்து, உவகை படைத்துளோன்—, விராவும் - (தன்னைச்) சேர்ந்த, அ தமோபாவம் - அந்தத் தமோபாவனையை, விடுத்தலால்—, (இவன்) தராதலத்தில் - உலகத்தில், தன்னை நிகர் - தனக்குத்தானே சமானமான, தாமதநிராசகப் பெயரோடு - தாமசநிராசகன் என்னும் பெயரோடு, நிலாவுவான் - விளங்குவான், எ - று.

(வி - ரை.) பராபரன் - சிவபிரான். உவகை - மகிழ்ச்சி. தமோபாவம் - தாமஸ பாவனை. தரா - பூமி. தராதலம் - பூஸ்தலம். நிலாவுதல் - விளங்குதல். (க)

இருட ருந்தம மெய்து மறிவினோர்க்
கருட ருங்கதி யில்லை யறிவினுக்
கொருபெ ருந்தனிக் காரண மொண்கதி
தருமி ருங்குண சத்துவ மென்பவே.

(ப - ரை.) இருள் தரும்-அந்தகாரத்தைத் தருகிற, தமம் எய்தும் அறிவிஞேர்க்கு - தமோகுணத்தை யுடையவருக்கு, அருள் தரும் கதி இல்லை—, அறிவினுக்கு—, ஒரு பெரு தனி காரணம்—, (யாதெனின்) ஒள் கதி தரும் - ஒட்பமாகிய கதியைத் தருகிற, இரு குணம் - பெருங்குணமாகிய, சத்துவம் என்ப - சத்துவமென்று சொல்வார்கள் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) அந்தகாரம் - அஞ்ஞான விருள். கதி - முத்தி. சத்துவம் - ஸாத்விக குணம். (உ)

மெய்ம்மை சாந்தி தமைவி வேகம்பொறை
செம்மை நல்லொழுக் கஞ்சிவ பத்திதா
னம்ம பூரண பாவ மருடுற
விம்மை யுள்ளவன் சத்துவ மெய்தினேன்.

(ப - ரை.) மெய்ம்மை—, சாந்தி—, தமை—, விவேகம்—, பொறை—, செம்மை நல்லொழுக்கம்—, சிவபத்தி—, பூரண பாவம்—, அருள்—, துறவு—, (இவற்றை) இம்மை உள்ளவன் - இம்மையிலுள்ள மஹாயோகியே, சத்துவம் எய்தினேன் - சத்துவ குணத்தை யடைந்தவனுவன், எ - று.

(வி - ரை.) மெய்ம்மை - ஸத்ய புத்தி (குருசாஸ்திரங்களில் நம்பிக்கை). தமை-அகக் கரணதண்டம். பொறை - பொறுமை. பூர்ண பாவம் - பரிபூரண பாவனை. செம்மை நல்லொழுக்கம் - சிவாசாரம். தான், அம்ம - அசைகள். (ங)

வெய்ய காம வெகுளி மயக்கமா
மையு லாமத யானை வளர்ந்தெழு
செய்ய மாசிவ ஞான மடங்கல்முன்
னுய்யு மோநின் றொருகண மேனுமே.

(ப - ரை.) வெய்ய - கொடிய, காமம் வெகுளி மயக்கம் ஆம் - காம வெகுளி மயக் கங்களாகிய, மை உலாம் - கரு நிறத்தையுடைய, மதயானை—, வளர்ந்து எழு - மிகுதி யாய் வளர்கின்ற, செய்ய - செம்மையாகிய, மா - பெருமை பொருந்திய, சிவஞானம்- சிவஞானமாகிய, மடங்கல் முன் - சிங்கத்தினெதிரே, ஒரு கணம் ஏனும் - ஒரு க்ஷண கால மாயினும், நின்று உய்யுமோ - நின்று பிழைக்குமோ, எ - று.

(வி - ரை.) வெகுளி - கோபம். உய்யுமோ வென்னு மோகாரம் வினவோடெதிர் மறையுமாம். காமம் வெகுளி மயக்கம் என்பவற்றை முக்குற்றம் என வழங்குவர். (ச)

மாசி ராசத மன்னிய நெஞ்சினே
னீச னுரிடத் தெங்கும் வெறுப்பினேன்
பேசி லன்னவற் காணிற் பெரியவர்
கூசி நிற்பர் குலைகு லைந்துள்ளமே.

(ப - ரை.) மாசு - குற்ற முள்ள, இராசதம் மன்னிய நெஞ்சினேன் - ராஜஸ குணம் நிலைபெற்ற மனத்தினை யுடையவன், (பிரபஞ்ச ரூபமாகிய) ஈசனுர் இடத்து—, எங்கும் வெறுப்பினேன்—, பேசில் - சொல்லுமிடத்து, பெரியவர்—, அன்னவன் காணின் - அவனைக்கண்டால், உள்ளம் குலை குலைந்து கூசி நிற்பர்—, எ - று.

(வி - ரை.) ராஜஸ குணம் - பெருமித குணம் (டாம்பிக குணம்). ஈசனுர் - சிவபெரு மானுர். வெறுப்பினேன் - அன்பில்லாதவன். கூசுதல் - நாணுதல். மாசிராசத மன்னிய நெஞ்சினே னீசனுரிடத்தெங்கும் வெறுப்பினேன் என்றது சிவத்வேஷியை. (ரு)

யாவ ரோடு மிகல்புரி கிற்பவன்
பாவ மாகும் படிற்றுரை கூறுவோன்
காவி லாதவாங் கார மருவினோன்
யாவ னன்னவன் றாமசி யென்பவே.

(ப - ரை.) யாவரோடும்—, இகல் புரிகிற்பவன் - பகைசெய்து கொள்பவனும், பாவம் ஆகும் - பாவமாகிய, படிறு உரை கூறுவோன் - கபட வார்த்தை பேசுகிறவனும், கா இல்லாத - தனக்கு காவலாகாத, ஆங்காரம் மருவினோன் - அகங்கார மடைந்திருப்பவனும், யாவன் - எவனோ, அன்னவன் - அவன், தாமசி என்ப - தாமசியென்று சொல்லுவர் (பெரியோர்), எ - று.

(வி - ரை.) புரிதல் - செய்தல். கா - முதனிலைத்தொழிற் பெயர். தாமசி - தாமஸ குணமுடையவன். (சு)

மூல மாகத்த மோகுண முற்றிய
மேலு லாவும் விருப்பு வெறுப்பெனுங்
கோல மாமரங் கூர்சிவ ஞானமா
மேலு மாமழு வாலெறி யப்படும்

(ப - ரை.) மூலம் ஆக - காரணமாக, தமோகுணம் முற்றிய—, மேல் உலாவும் விருப்பு வெறுப்பு என்னும்—, கோலம் ஆம் - அழகாகிய, மரம் - மரங்கள், கூர் - கூர்மையாகிய, சிவஞானம் ஆம் - சிவஞானமாகிய, ஏலும் - ஏற்ற, மா மழுவால் - பெரிய மழுவினால், எறியப்படும் - வெட்டப்படும், எ - று.

(வி-ரை.) முற்றிய - முதிர்ந்த. மழு - கோடரி (பரசு). தகுதியாகிய கருவியினாலேயன்றி எடுத்த காரிய முற்றுப் பெறுமை தோன்ற, ஏலுமாமழு என்றார். (எ)

இரவி யாயிரம் போல விலங்குறும்
பொருவில் வான்சிவ ஞானம் பொருந்துறிற்
பரவு மொண்சிவ ஞான பதத்தர்முன்
மருவு மோதம மாகிய வல்லிருள்.

(ப - ரை.) ஆயிரம் இரவி போல—, இலங்குறும் - பிரகாசிக்கிற, பொருவு இல் - ஒப்பில்லாத, வான் - மேலான, சிவஞானம் பொருந்துறின்—, பரவும் - (எங்கும்) வியாபித்த, ஒள் சிவஞான பதத்தர் முன்—, தமம் ஆகிய வல் இருள் மருவுமோ—, எ - று.

(வி - ரை.) ஆயிரம் என்றது மிகப்பல என்னும் பொருளது. இரவி - சூரியன். பொருந்துறின் - உண்டானால். மருவுமோ வென்னுமோகாரம் எதிர்மறை, மருவாது என்பது பொருள். (அ)

தாமசநிரசநத்தலம் - முற்றும்.

---

உ
ஓம் வ்ருஷாங்காய நமஃ.
முப்பத்தோன்பதாவது
(ரு) நிர்த்தேசத்தலம்.

[அதாவது - ப்ராணிகளுக்கு முக்திஸாதநமாய் ஸம்ஸார ப்ரவிர்த்திக்கு மூலகாரணமான தமோகுணங்களைப் போக்கத்தக்க ஜ்ஞாநத்தை ஸ்ரீஸத்குருவினால் உபதேசிக்கப் பெறுவதே நிர்த்தேசம் என்பது.]

கலிவிருத்தம்.

பிறப்பு மூலப் பெருந்தம நீக்கியே
சிறப்ப ஞான நிர்த்தேசப் படினதை
யிறுப்பர் நின்றநிர்த் தேச மெனக்குறித்
தொறுப்பு றும்புலத் தொட்டறு நெஞ்சினோர்.

(ப - ரை.) ஒறுப்புறும் - தண்டிக்கப்பட்ட, புலத்து - புலன்களையுடைய, ஒட்டு அறும் நெஞ்சினோர் - பற்றற்ற மனத்தையுடையவர், பிறப்பு மூலம் - பிறவிக்குக்காரணமாகிய, பெரு - பெரிய, தமம் நீக்கி—, சிறப்ப - உயர்வாக, ஞானநிர்த்தேசப்படின்—, அதை - அந்த ஞான நிர்த்தேசத்தை, நின்ற - நிலைபெற்ற, நிர்த்தேசம் என - நிர்த்தேசமென்று, குறித்து இறுப்பர் - குறித்துச் சொல்லுவர், எ - று.

(வி - ரை.) ஒறுத்தல் - தண்டித்தல். இறுத்தல் - சொல்லுதல். (க)

குரவ னேபர தத்துவங் கூட்டுவோன்
பருவ மேவினர் பால்வந் திலகுற
விரவி நின்ற விருளை விளங்கிய
விரவி யன்றி யிரிப்பவ ரியாவரோ.

(ப - ரை.) பருவம் மேவினர் பால் வந்து - பக்குவ மடைந்தவரிடத்து வந்து, இலகுற - விளங்க, பரதத்துவம் கூட்டுவோன்—, குரவனே—, விரவிநின்ற - வியாபித்து நின்ற, இருளை—, விளங்கிய - விளங்காநின்ற, இரவி அன்றி - சூரியனல்லது, இரிப்பவர் - ஓட்டுவோர், யாவர் - எவர், எ - று.

(வி - ரை.) பக்குவம் - மலபரிபாகம், குரவன் - ஸதாசாரியன். பரதத்துவம் - மேலான மெய்ப்பொருள். (உ)

பிறவி நாமப் பெரும்பிணி நல்லறி
வறிவு றுங்குரு வன்றி யகலுமோ
மறையு ணர்ந்த மருத்துவ னன்றியே
செறிவு றும்பிணி யாது சிதைவதே.

(ப - ரை.) பிறவி நாமம் - பிறவியென்னும் பெயரையுடைய, பெரு பிணி - பெரிய நோயானது, நல் அறிவு அறிவுறும் - ஞானத்தையறிந்த, (சித்தராகிய) குரு அன்றி அகலுமோ—, மறை உணர்ந்த - (ஆயுர்) வேதத்தையறிந்த, மருத்துவன் அன்றியே—, செறிவுறும் - மிகுதியாகிய, யாது பிணி - எந்த நோய், சிதைவது - கெடுவது, எ - று.

(வி - ரை.) அகலுமோ வென்னு மோகாரம் எதிர்மறை, அகலாதென்பது பொருள், 'அறிவை யறிவது பொருளென வருளிய பெருமானே', 'இயலறிவதிசை யறிவதின மறிவதுளவால், அயலறிவதறிவதல வறிவறிவதறிவே', என்றற்றொடக்கத்தான்றோர் செய்யுட்களின் கருத்தை யடியொற்றி, 'அறிவறிவுறுங்குரு' என்றார். (ங)

மூட மாசின் முழுகு மனமெனு
மாடி தன்னை யறிவெனும் பூதியா
னீட நின்று நிகழ விளக்குவோன்
பீடு றுங்குரு வென்பர் பெருமையோர்.

(ப-ரை.) மூடம் - மூடத்தனமாகிய, மாசில் - அழுக்கில், முழுகும் - அழுந்துகிற, மனம் என்னும் - மனமென்கிற, ஆடிதன்னை - கண்ணாடியை, அறிவு என்னும் - ஞான மென்கிற, பூதியால் - விபூதியால், நீட நின்று நிகழ - நெடிது நின்று விளங்கும்படி, விளக்குவோன்—, பீடு உறும் - பெருமை யமைந்த, குரு என்பர் - ஆசிரியனென்று சொல்லுவர், பெருமையோர்—, எ - று.

(வி - ரை.) விளக்குவோன் - பிரகாசிக்கச் செய்பவன். பெருமையோர் - பெரியோர். குரு என்னும் பதத்தில் முதலெழுத்தாகிய குகாரத்திற்கு அந்தகாரமென்றும், இரண் டாமெழுத்தாகிய ருகாரத்திற்கு ஒழிப்பவனென்றும் பொருள்கூறுவர் வடநூலார்.

தாவி லாவப ரோட்சி தத்துவ
சீவன் முத்தத் தியல்புறு தேசிகன்
மேவு மின்ப விழிக்கடை நோக்குறி
னியாவை யெய்தற் கரியன வென்பவே.

(ப - ரை.) தாவு இல்லா - கெடுதலில்லாத, அபரோக்ஷித—, தத்துவ சீவன் முத்தத்து—, இயல்பு உறு தேசிகன்—, மேவும் இன்பம்-இன்பம் பொருந்திய, விழிக்கடை- கடைக்கண்ணின், நோக்கு உறின் - பார்வை பட்டால், எய்தற்கு அரியன - அடைதற் கரியன, யாவை என்ப - எவை யுள்ளனவென்று சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) விழிக்கடை - கடைவிழி யென்பதன் மரூஉ. எய்தல் - அடைதல். அபரோக்ஷித தத்துவ தேசிகன் - அபரோக்ஷமாயநுபவிக்கப்பட்ட தத்துவத்தையுடைய தேசிகன். சீவன் முத்தத்து இயல்பு உறு தேசிகன்-ஜீவந்முக்த தசையினிலக்கணமுடைய தேசிகன். தேசிகன் - ஆசாரியன். (௫)

நீங்க ருங்கரு ணைக்கு நிலையராய்த்
தீங்கி லாத சிவாத்து விதத்தரா
யோங்கு முத்தி யுதவுங் குரவர்தா
மீங்க டைந்திடற் கென்று மரியரே.

(ப - ரை.) நீங்கு அரு - நீங்குதற்கரிய, கருணைக்கு—, நிலையர் ஆய் - நிலையிடமான வராய், தீங்கு இல்லாத சிவாத்துவிதத்தர் ஆய்—, ஓங்கும் - உயர்வாகிய, முத்தி உதவும்- முத்தியைத் தருதற்குரிய, குரவர் - குருக்கள், ஈங்கு - இவ்வுலகில், அடைந்திடற்கு—, என்றும் அரியர்—, எ - று.

(வி - ரை.) உதவல் - தருதல். அரியர் - அருமையா யிருப்பவர். முத்தி - மோக்ஷம்.

பொருப்பின் மேரு புணரி யிற்பாற்கட
லருக்கன் கோளி லமரரிற் சங்கரன்
மரத்தி லார மெனப்புகழ் வாய்த்தவன்
குருக்க ளிற்சிவ நண்ணுங் குரவனே.

(ப - ரை.) பொருப்பில் - மலைகளில், மேரு என - மேருமலை போலவும், புணரியில் - கடல்களில், பாற்கடல் என - பாற்கடல் போலவும், கோளில் - கிரகங்களில், அருக்கன் என-சூரியன் போலவும், அமரரில்-தேவர்களில், சங்கரன் என-சிவபெருமான் போலவும்,

மரத்தில் - மரங்களில், ஆரம் என - சந்தனமரம் போலவும், குருக்களில்—, சிவம் நண்ணும் குரவன்-சிவத்தை யடைதற்குரிய தேசிகனானவன், புகழ் வாய்த்தவன்—, எ-று.

(வி-ரை.) புகழ்வாய்த்தலை மேருமலை முதலியவற்றோடும் சேர்த்துரைத்துக்கொள்க.

நிர்த்தேசத்தலம் - முற்றும்.

உ

ஓம் வ்ருஷபாரூடாய நம:

## நாற்பதாவது

## (ச.) சீலசம்பாதநத்தலம்.



[அதாவது - பூர்வோக்த நிர்த்தேஶ ஸம்பந்தத்தினால் பரதத்வத்தை யறியவேண்டுமென்று ஜநிக்கும் அபேக்ஷையும், அதனால் உண்டாகும் ப்ரத்யக்ஷாநுபவமும் ஆகிய இவையே சீலசம்பாதநம் என்பது.]

கலிவிருத்தம்.

குரவ னுற்றுநிர்த் தேசித்த கொள்கையா
லொருமை யிற்சிவ தத்துவ மோர்ந்திடு
மருவி ருப்பது சீல மஃதுளோன்
றிருமி குத்துயர் சீலி யெனப்படும்.

(ப-ரை.) குரவன் உற்று - குரு வந்து, நிர்த்தேசித்த கொள்கையால்—, ஒருமையில் - ஒருபிறப்பிற்றானே, சிவதத்துவம் ஓர்ந்திடும் - சிவதத்துவத்தை யாராயவேண்டுமென்கிற, அரு விருப்பது - அரிய விருப்பமானது, சீலம்-சீலமாம், அஃது உள்ளோன்—, திரு மிகுத்து உயர் - செல்வமிக்குயர்ந்த, சீலி எனப்படும் - சீலியெனப்படுவன், எ-று.

(வி-ரை.) சிவதத்துவம் - சிவத்தினுண்மை. விருப்பது என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி. சீலம் - ஒழுக்கம். (க)

சரண டைந்தவர் தங்களைக் காத்திடும்
பரனை நெஞ்சுறப் பாவிக்குந் தன்மையே
திரமு றும்பெருஞ் சீலமென் றோதுவா
ருரமு ணர்ந்த வுரனுடை யாளரே.

(ப-ரை.) சரண் அடைந்தவர் தங்களைக் காத்திடும் பரனை—, நெஞ்சு உற - மனத்திற்பதிய, பாவிக்கும் தன்மையே—, திரம் உறும் - உறுதியுள்ள, பெரு சீலம் என்று ஓதுவார்—, (யாரெனின்) உரம் உணர்ந்த - அறிவையறிந்த, உரன் உடையாளர் - அறிவுடையாளர், எ-று.

(வி-ரை.) சரணடைந்தவர் - அடைக்கலம் புக்கவர் (திருவடியை யாஶ்ரயித்தவர் எனினும் பொருந்தும்). பரன் - மேலானவன் (சிவபிரான்). பாவித்தல்-நினைத்தல். பெருஞ்சீலம் - நல்லொழுக்கம் (நற்குணம்). உரம் - உறுதிப்பொருள் எனினுமாம். உரன் உரம் என்பதன் போலி. (உ)

சிவனை யெய்தியோன் றூந்திறத் தோன்றனை
யவனை யன்பொ டறிந்தவ னைச்செறிந்
துவகை யொன்று முளத்தனைச் சீலவா
னிவனெ னுங்கலை யின்றிறம் யாவுமே.

(ப - ரை.) கலேயின் திறம் யாவும் - நூலின் வகை யாவும், சிவனே எய்தி - சிவனே யடைந்து, ஒன்று ஆம் - ஒன்று படுகிற, திறத்தோன் தன்னே - தன்மையுள்ளவனே, அவனே - அச்சிவனே, அன்பொடு அறிந்தவனே—, செறிந்து - அடுத்து, உவகை ஒன்றும் - மகிழ்கின்ற, உள்ளத்தனே - மனத்தையுடையவனே, இவன்—, சீலவான் என்னும் - சீலவானென்று சொல்லும், எ - று.

(வி - ரை.) இவன் என்பதைத் திறத்தோன்றனே, அறிந்தவனே, உள்ளத்தனே என்பவற்றோடு தனித்தனி இயைத்துரைத்துக் கொள்க. (௩)

பற்று றும்பதி ராகப் பயத்தினுற்
பொற்றி ருந்திழை சீலம் பொலிதல்போற்
பெற்று றுஞ்சிவ ராகப் பெருமையோ
டுற்ற வன்றிகழ் சீல முளானரோ.

(ப - ரை.) பற்றுறும் - (தான்) பற்றின, பதி - கணவனது, ராகப் பயத்தினுல் - விருப்பமாகிய பயனுல், பொன் திருந்து இழை - மனைவியானவள், சீலம் பொலிதல் போல் - சீலத்தாற் பிரகாசிப்பது போல, பெற்றுறும் - (தான்) பெற்றிருக்கிற, சிவ ராகப் பெருமையோடு - சிவாபேக்ஷையாகிய பெருமையுடன், உற்றவன் - பொருந்தியிருக்கும் பக்தன், சீலம் உள்ளான்—, எ - று.

(வி - ரை.) ராகம் - வடசொல். பொன் திருந்திழை - பொன்னினுற் றிருத்தமாகச் செய்யப்பட்ட ஆபரணத்தை யணிந்தவள் எனப் பொருள்படுதலால் அன்மொழித் தொகைக் காரணப்பெயர். சீலம் உள்ளான் - சீலவான். (௪)

மாதர் கட்கு மகிணன் பணியலு
தேத முற்றிடு மிங்கிது போலவே
சோதி மெய்ச்சிவ மன்றித் துளங்குறு
மேதி லர்க்குறு சேவை யிகழ்வுறும்.

(ப - ரை.) மாதர்கட்கு—, மகிணன் பணி அலது - கணவன் பணிவிடை யல்லாதது, ஏதம் உற்றிடும் - குற்றமாகும், இங்கு இது போலவே—, சோதி - ஒளிபொருந்திய, மெய் உடம்பில் தரித்துள்ள, சிவம் அன்றி - இஷ்டலிங்க மன்றி, துளங்குறும் - அழிகின்ற, ஏதிலர்க்கு உறு சேவை - அயலார்க்குச் செய்யும் சேவை, இகழ்வுறும் - பழிக்கப் படும், எ - று.

(வி-ரை.) மகிணன் - மகிழ்நன். பணிவிடை - தொண்டு. ஏதிலர் - அந்யதேவர். (௫)

நட்டு றுஞ்சிவ ஞானிக டம்மிடை
நிட்டை கொள்ளு நிலேயது சீலமவ்
வொட்டு றுந்தனிச் சீல முடையனே
சிட்ட ரெண்ணுநற் சீல முளானரோ.

(ப - ரை.) நட்டு உறும் சிவஞானிகள் - பக்திசெய்கிற சிவஞானிகள், தம்மிடை - தம்மிடத்தில், நிட்டைகொள்ளும் நிலேயது - நிட்டை கூடுகின்ற நிலேயுள்ளது, சீலம் - சீலமாகும், அ - அந்த, ஒட்டுறும் - பற்றுதற்குரிய, தனி சீலம் உடையனே—, சிட்டர் - பக்தர்கள், எண்ணும் - மதிக்கிற, நல் சீலம் உள்ளான்—, எ - று.

(வி - ரை.) தம்மிடை யென்பதில் இடை ஏழனுருபு. ஒட்டுறல் - பற்றுதல். எண்ணல் - மதித்தல். (௬)

அங்க லிங்க வறிஞரை வேட்டுளஞ்
சங்க ரன்றனைத் தான்சர ணென்றுபோ
யிங்க டைந்த விவனல் லயிக்கிய
மங்க லந்தரு நாம மருவுவான்.

(ப - ரை.) அங்கலிங்க அறிஞரை—, வேட்டு-விரும்பி, உள்ளம்-மனத்தில், சங்கரன் தன்னை—, தான் சரண் என்று போய்—, இங்கு அடைந்த இவன்—, நல் - நல்ல, அயிக்கியன் - ஐக்கியன் என்கிற, மங்கலம் தரும் - மங்களகரமான, நாமம் - பெயரை, மருவுவான் - பொருந்துவான், எ - று.

(வி - ரை.) அங்கம் - சீவன். அங்கலிங்க அறிஞர் - சிவனே ஆத்மா என்றறிந்த ஞானிகள். வேட்டல் - விரும்புதல். ஐக்யம் - ஏகீபாவம் (ஒன்றுந்தன்மை). (எ)

சீலசம்பாதநத்தலம் - முற்றும்.

இவ்விதமாய் எந்தக் காரணத்தினால் தாமஸ நிரஸநம் நிர்த்தேஸம் ஶீலஸம்பாதநம் என்னும் மூன்று ஸ்தலங்களில் கூறிய தர்மங்களுடனே கூடி யிருத்தலால் சுத்தாத்மாவும் ஆநந்தரூபியுமானானோ, அந்தக் காரணத்தினால் அவன் ஐந்தாமவனான சரணன் என்று அறியப்பட்டான்.

ரு - வது. சரணத்தலம் முற்றிற்று.

உ

## சா - வது. அயிக்கியத்தலம்.

[அதாவது - நான் நீ என்னும் வ்யவஹாரம் இரண்டிற்கும் விஷயமானவன் யானே ப்ராணதேஹேந்த்ரியாதி பேதங்களெல்லாம் ப்ராந்தி ஜந்யங்களே யன்றி என்னிடத் தில்லை என்னும் பாவத்தினால் ஸுகஸாமரஸ்ய ரூபமாயிருப்பதே அயிக்கியம் என்பது.]

(இதனுட்பிரிவு)

கலிவிருத்தம்.

தாமத நிரசந மாதி சார்வினா
லேமுறு சரணனா மிவன யிக்கிய
னாமமெவ் வகையினா னண்ணு மிங்கது
காமரு மிரேணுக கணேச கூறுவாய்.

(ப - ரை.) தாமதநிரசநம் ஆதி சார்வினால்—, ஏமுறு - மகிழ்ச்சியை யடைந்த, சரணன் ஆம் இவன்—, அயிக்கியன் - ஐக்யனென்கிற, நாமம்-பெயரை, எவ்வகையினால்—, நண்ணும்-அடைவான், இங்கு - இவ்விடத்தில், அது - அந்தச் செய்தியை, காமர் - அழகிய, இரேணுக கணேச—, கூறுவாய்—, எ - று.

(வி - ரை.) தாமதநிரசநம் ஆதி என்றது தாமதநிரசநம் நிர்த்தேசம் சீலசம்பாதநங்களை. சார்வினால் - ஆஶ்ரயத்தால். ஏமம் ஏமென ஈறு தொகுத்தலாயிற்று. (க)

மலிதரு சிவசுக வாரி மூழ்குபு
நலமுறு சிவமுட னயிக்க நாடுறு
நிலையுற வயிக்கனும் பிராண லிங்கமுன்
றலைமைகொ ளியல்பினாற் சரண னயினேன்.

(ப - ரை.) பிராணலிங்கம் முன் - பிராணலிங்க முதலிய, தலைமை கொள் இயலின் - முதன்மையைக் கொண்ட தன்மையினால், சரணன் ஆயினோன்—, மலிதரு - மிகுந்த, சிவ சுக வாரி - சிவானந்தக்கடலில், மூழ்குபு - முழுகி, நலம் உறு - நன்மை மிக்க, சிவமுடன்—, அயிக்கம் - ஐக்யத்தை, நாடுறும் நிலை உற - தேடுதற்குரிய நிலை பொருந்த, அயிக்கன் ஆம் - ஐக்யனுவான், எ - று.

(வி - ரை.) பிராணலிங்கம் - அந்தர்லிங்கபூஜை. வாரி - நீர்ப்பெருக்கத்தையுடைய தென்னும் பொருட்டுமோர் வடசொல். மூழ்குபு - செய்பு என்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம், இது நாடுறும் என்னும் வினைகொண்டு முடிந்தது. (உ)

மனுந்தல மிஃதுநால் * வகைய யிக்கமோ
டினங்கொ ளாசார சம்பத்தி யேகபா
சனஞ்சக போசனத் தலமெ னப்புலன்
முனிந்துள முனியிவை முறையிற் கூறுவாம்.

(ப - ரை.) புலன் முனிந்துள - புலன்களை வென்ற, முனி - முனியே, மன்னும் - நிலைபெற்ற, தலம் இஃது - இந்தத் தலமானது, நால் வகை - நால் வகைப்படும், அயிக்கத் தலம் ஓடு - ஐக்யத்தலத்தோடு, இனம் கொள் - கூட்டங்கொண்ட, ஆசாரசம்பத்தித் தலம்—, ஏகபாசநத்தலம்—, சகபோசநத்தலம்—, என இவை - எனப்படுமிவையாம், (இவற்றை) முறையின் கூறுவாம் - முறையே சொல்வோம், எ - று.

(வி - ரை.) புலன்கள் - சப்தாதி விடயங்கள் (ஸப்த ஸ்பர்ஸ ரூப ரஸ கந்தங்கள்).

உ

ஓம் பஸ்மோத்தூளித விக்ரஹாய நமः

## நாற்பத்தோன்றுவது

## (க.) அயிக்கியத்தலம்.

[அதாவது - ஸப்தாதி விஷயங்களினு லுண்டாகும் அற்பானந்தத்தில் ஆசையில்லாதவனும், ஸிவானந்தமென்னும் மஹாஸமுத்ரத்தில் ஸாமரஸ்யத்தினுல் ப்ரவேஸம் செய்தவனும், நிஷ்களங்க மநோவ்யாபாரத்தினுல் கூடி நானே சிவன் என்னும் விசாரத்தினுல் லிங்கத்தில் ஏகத்வம் அடைந்தவனுமான சரணனே அயிக்கியன் என்பது.]

க

அழிதரு நிலைவிட யாநந் தத்துளி
விழைதலை விடுத்துள விமல நெஞ்சினோ
னெழுதரு சிவாநந்த மென்னும் வேலையுண்
முழுகுத லயிக்கமென் றுரைப்பர் முன்னையோர்.

(ப - ரை.) அழிதரு நிலை - அழிகின்ற நிலையையுடைய, விடயாநந்தத்துளி - விஷயாநந்தத்துளியின், விழைதலை விடுத்து உள்ள - விருப்பத்தை விட்டிருக்கிற, விமல நெஞ்சினோன் - பரிசுத்தமான மனத்தையுடையவன், எழுதரு - ஓங்குகிற, சிவாநந்தம் என்னும் வேலையுள் - சிவாநந்தக்கடலில், முழுகுதல் - முழுகுவதை, அயிக்கம் என்று உரைப்பர்—, [முன்னை]யோர்—, எ - று.

* மற்றொரு பிரிவு:—அதாவது காயலிங்கைக்யன், ஜீவலிங்கைக்யன், ஜ்ஞாநலிங்கைக்யன் என்று மூன்றுவகைப்படுவேன். க்ரியாசாரத்தை மறந்திருப்பவனே காயலிங்கைக்யன்; அநுபவத்தை யறிந்திருப்பவனே ஜீவலிங்கைக்யன்; அறிவு வெளிப்பட்டிருப்பவனே ஜ்ஞாநலிங்கைக்யன். ஐக்யனே பரப்ரஹ்மம் என வழங்குதலு முண்டு.

(வி - ரை.) அழிதரு - ஒருசொல் (பகுதி அழிதா), இவ்வாறன்றி அழிவைத் தருகிற என்றுரைத்தலுமாம், இப்பொருட்கு அழி முதனிலைத் தொழிற்பெயரென்க. எழுதரு என்பதற்குப் பகுதி எழுதா. (க)

தளைந்துள தளைவலி தணந்து மாசறத்
தெளிந்துள நெஞ்சினுற் சிவோகம் பாவனை
யுளங்கொளு நிலையுடை யொருவ னேகலை
யளந்தறி முனிவர வயிக்கிய னுகுவான்.

(ப - ரை.) கலை - எல்லாக்கலைகளையும், அளந்து அறி - அளந்துணர்ந்த, முனிவர - முனிசிரேஷ்டனே, தளைந்து உள்ள - தளைக்கப்பட்டிருக்கிற, தளைவலி - தளையின் வலியை, தணந்து - நீக்கி, மாசு அற - குற்றமற, தெளிந்து உள்ள நெஞ்சினுல்—, சிவோகம் பாவனை உள்ளம் கொள்ளும்—, நிலை உடை ஒருவனே—, அயிக்கியன் ஆகுவான்—, எ-று.

(வி - ரை.) கலை என்றது வீட்டுநூல்களை. தளை - பாசத்தளை (தளை - பிணிப்பு). சிவோகம் பாவனை - சிவம் நானென்னும் எண்ணம். (உ)

செயலறு சிதாநந்த சிவமொ டொன்றிய
வியலுறு மயிக்கிய னென்னப் பட்டவன்
மயலுறு மாயையின் வயிறு தந்துள
துயருறு முலகத்தின் ருேற்றங் காணுருன்.

(ப - ரை.) செயல் அறு - தொழிலற்ற, சிதாநந்த சிவமொடு—, ஒன்றிய - பொருந்திய, இயல் உறும் - தன்மையை யுடையவனுகிய, அயிக்கியன் என்னப்பட்டவன்—, மயல் உறு - மயக்கமிருந்த, மாயையின் வயிறு தந்து உள்ள - மாயையின் வயிற்றிலுண்டாகிய, துயர் உறும் - துன்பமிருந்த, உலகத்தின் தோற்றம் - உலகின் தோற்றத்தை, காணுருன் - காணமாட்டான், எ - று.

(வி-ரை.) சிதாநந்தம் - ஜ்ஞாநாநந்தம். தோற்றம் - காட்சி. காணுருன் என்பதற்குப் பகுதி காணுறு. (ங)

தத்துவ மாந்திரை சார்ந்து பல்வகைப்
புத்தய னண்டமாம் புற்பு தஞ்செறி
மைத்தனி மாயையாம் வாரி வற்றுமான்
மெய்த்துள வயிக்கியமாம் வடவை மேவவே.

(ப - ரை.) மெய்த்துள - உண்மையாயுள்ள, அயிக்கியம் ஆம் - (சிவனேடு) ஐக்யமாகிய, வடவை - வடவைத்தீயானது, மேவவே - உண்டாதலும், தத்துவம் ஆம் திரை சார்ந்து—, பல் வகை - பல வகையாகிய, புது - புதிய, அயன் அண்டம் ஆம் - பிரமாண்டமாகிய, புற்புதம் செறி - நீர்க்குமிழிகள் நெருங்கிய, மை - கருமையாகிய, தனி - ஒப்பற்ற, மாயை ஆம் வாரி—, வற்றும் - வறண்டுபோம், எ - று.

(வி - ரை.) வடவைத்தீ - கடனீர் தன்னெல்லை கடவாமைப்பொருட்டுக் கடவுளால் படைப்புக்காலத்தே யமைக்கப்பட்டுளதாகிய நெருப்பு, இது பெண்குதிரை யுருவமாயிருப்பது, இதனை பாடபம் என்பர் வடநூலார். தத்துவமாம் திரை - முப்பத்தாறு தத்துவங்களாகிய அலைகள். அயன் அண்டமாம் புற்புதம் - பிரமாண்டங்களாகிய குமிழிகள். வற்றும் - லயமடையும் (ஒடுங்கும்). (ச)

மறைப்புறு மாயையின் வலியி னுலுயிர்க்
குறப்பெறு வேறுபா டுயர்சி வத்துட
னிறப்புறி னனையதிங் கேக மன்றியே
பெறப்படு குவதிலை பேத மென்பதே.

(ப - ரை.) மறைப்புறு - மறைக்கின்ற, மாயையின் வலியினல்—, உயிர்க்கு உறப்பெறு-உயிர்களுக்குண்டாகிற, வேறுபாடு—, உயர் - உயர்ந்த, சிவத்துடன்—, இறப்புறின்-ஒடுங்கினல், அனையது - அந்த மாயையானது, இங்கு ஏகம் அன்றியே—, பேதம் என்பது—, பெறப்படுகுவது இல்லை—, எ - று.

(வி - ரை). சிவனிடம் மாயாசக்தியின் ஆவரணத்தினல் ஆத்மாவுக்குப் பேதம் கல்பிக்கப்படுதலால், அந்த மாயாசக்தியின் ஆவரணம் நசித்தால் அத்வைதத்தைக் காட்டிலும் அந்யமானது சிறிதும் கொள்ளப்படுவது யாதுமில்லை என்பதிதன் கருத்து. ஏகம் - ஒன்று. பேதம் - வேற்றுமை. (ரு)

பசுத்துவ மொடுபதித் துவம்ப கர்ந்திடின்
முசிப்புறு மாயையா மோக கற்பித
நசித்திடி னதுபசு யார்சொ னன்றுற
விசைப்பறு நற்பதி யார்சொ லிங்கரோ.

(ப - ரை.) பசுத்துவமொடு பதித்துவம்—, பகர்ந்திடின் - சொல்லுமிடத்தில், முசிப்புறும் - மெலிந்த, மாயை ஆம் - மாயையாகிய, மோக கற்பிதம்—, அது—, நசித்திடின்—, பசு யார்—, சொல்—, நன்றுற இசைப்பு அறு - நன்ருய்ச் சொல்லுதற்கரிய, நல் பதி யார்—, சொல்—, இங்கு—, எ - று.

(வி - ரை.) பசுத்துவம் - ஜீவத்தன்மை. பதித்துவம் - சிவத்துவம். கற்பிதம் - கற்பிக்கப்பட்டது (பொய்யாயுண்டாக்கப்பட்டது). பசு - ஜீவன். பதி - சிவன். (சு)

சாருறு பேதவன் மீகந் தங்கிய
கோரசம் சாரமாங் கொடிய பாம்பினுக்
காருறு பரமவத் துவித பாவனை
நேருறு மருந்ததாய் நிற்கு மென்பவே.

(ப - ரை.) சாருறு - பொருந்திய, பேதம் - வேறுபாடென்கிற, வல்மீகம் - புற்றில், தங்கிய - உறங்கிய, கோர சம்சாரம் ஆம்—, கொடிய பாம்பினுக்கு—, ஆருறு - பொருந்திய, பரம அத்துவித பாவனை—, நேருறு - நேராகிய, மருந்து ஆய் நிற்கும்—, என்ப - என்று சொல்லுவர் (பெரியோர்), எ - று.

(வி - ரை.) வல்மீகம் - புற்று, இது வடசொல். சம்சாரம் - குடும்பம். (எ)

நந்துறு பேதபுத் தியினி னண்ணியே
வந்துறு பவக்கட றன்னை மன்னிய
சிந்தனை யறுசிவாத் துவித புத்தியாஞ்
சுந்தர வம்பியாற் கடக்குந் தோமிலான்.

(ப - ரை.) நந்துறு - வளர்கிற, பேத புத்தியினில் - பேத புத்தியால், நண்ணி வந்துறு - தோன்றி வந்துகொண்டேயிருக்கிற, பவக்கடல் தன்னை—, மன்னிய - நிலைபெற்ற, சிந்தனை அறு - நினைவற்ற, சிவாத்துவித புத்தி ஆம் - சிவாத்வைத ஞானமாகிய, சுந்தரம் - அழகாகிய, அம்பியால்—, தோம் இலான் - குற்ற மற்றவன், கடக்கும்-கடப்பான், எ - று.

(வி - ரை.) அம்பி - மரக்கலம். குற்றமற்றவன் என்றது சிவலிங்கைக்யனை. (அ)

மயங்குமஞ் ஞானவல் லிருளொ டொன்றியே
யயர்ந்துள காமமா மரக்கர் செய்கையின்
முயங்குறு பவமெனு மூடு கங்குலுன்
பயந்திரி தருநலத் துவித பானுவால்.

(ப - ரை.) மயங்கும் அஞ்ஞானம் வல் இருளோடு—, ஒன்றி - பொருந்தி, அயர்ந்து உள்ள - அயர்ந்திருக்கிற, காமம் ஆம் - காமமாகிய, அரக்கர் செய்கையில் - அரக்கருடைய தொழிலோடு, முயக்குறு - பொருந்திய, பவம் என்னும் - பிறவி யென்கிற, மூடு கங்குல் - காள ராத்ரியானது, நல் - நல்ல, அத்துவித பானுவால் - அத்துவிதமாகிய சூரியனால், பயந்து இரிதரும் - பயந்து ஓடும், எ - று.

(வி - ரை.) காளராத்ரி - பேரிருளையுடைய இரவு, ஸர்வ ஸம்ஹார காலத்திரவு எனினுமாம். (௯)

மிக்குறு பவத்துயர் விட்டு நீங்குறத்
தக்குறும் யோகிக டங்கட் கிவ்விடை
பக்கொழி வருசிவாத் துவித பாவனை
யொக்குறு முபாயமிங் கொன்று மில்லையே.

(ப - ரை.) தக்குறும் - தக்கவறிவுடையோராகிய, யோகிகள் தங்கட்கு—, மிக்குறு - மிகப்பொருந்திய, பவத்துயர் - பிறவித்துன்பத்தை, விட்டு நீங்குற - விட்டுநீங்கும் பொருட்டு, இவ்விடை - இவ்விடத்தில், பக்கு ஒழிவரு - வேறுபாடொழி தற்குரிய, சிவாத்துவித பாவனை—, ஒக்குறும் உபாயம் - தகுந்த உபாயமாகும், இங்கு - இவ்விடத்தில், ஒன்றும் இல்லை - வேறொன்றுமில்லை, எ - று.

(வி - ரை.) பக்கு - பிளவு, வேறுபாடு, பகுதி பகு. (௧0)

ஒருகண முயர்சிவாத் துவித பாவனை
தருசுக மியாதது தக்க போகமிங்
கரிதுறு பவர்களாற் கோடி யாண்டினும்
பருகுற வருமொரு பான்மைத் தன்றரோ.

(ப - ரை.) ஒரு கணம் - ஒருகணப்பொழுது, உயர் சிவாத்துவித பாவனை தரு சுகம் யாது—, அது - அதானது, தக்க போகம்—, இங்கு—, அரிது உறுபவர்களால் - அருமையாகத் துய்ப்பவர்களால், கோடி ஆண்டினும்—, பருகுற வரும் - அநுபவிக்கவருகிற, ஒரு பான்மைத்து அன்று - ஒரு தன்மைத்தன்று, எ - று.

(வி - ரை.) போகம் - சுகாநுபவம். தக்க போகம் அரிது உறுபவர்கள் - ராஜஸ போகிகள். (௧௧)

சென்றுறு சகமடங் கியநற் சித்தமோ
டொன்றிய பரசிவ யோகிக் கோய்வற
நின்றுயர் சிவாநந்த நிறைவ தேபர
மென்றுரை தருந்தனி முத்தி யென்பதே.

(ப - ரை.) சென்றுறு - செல்லாநின்ற, சகம் அடங்கிய—, நல் சித்தமோடு—, ஒன்றிய - பொருந்திய, பரசிவயோகிக்கு—, ஓய்வு அற - ஒழிவற, நின்று உயர் சிவாநந்தம் நிறைவே—, பரம் என்று உரைதரும் - மேலானதென்று சொல்லப்படுகிற, தனி முத்தி என்பது - ஒப்பற்ற முக்தி யென்று சொல்லப்படுவது, எ - று.

(வி - ரை.) சென்றுறு - ஒருசொல். முத்தி - மோக்ஷம். சித்தவிருத்தியில் ஒடுங்கிய ஜகமுடையவனான சிவயோகிக்கு சிவாநந்தவிளக்கமானது முக்தி என்று சொல்லப்படும் என்பதிதன் கருத்து. (௧௨)

அயிக்கியத்தலம் - முற்றும்.

---

ஓம் ஸாமப்ரியாய நம:

# நாற்பத்திரண்டாவது

## (௨.) ஆசாரசம்பத்தித்தலம்.



[அதாவது - ஶிவஸ்வரூபனான லிங்கைக்யன் தான் தேஹாபிமான முள்ளவனாகா திருப்பினும், ஜீவன்முக்தனா யிருப்பதினால் ஜங்கமத்துடனே ஏகத்வத்தை யடைந்து ஜாதி ஸூதகம் வர்ணம் முதலிய ஸ்வேச்சாசாரங்களினால் ஸம்பந்தியாதிருத்தலே ஆசார சம்பத்தி என்பது.]

கலிவிருத்தம்.

உடம்பொடு மருவினு மொருமைப் பாறுளை
தொடங்குறு மவர்க்கிலைச் சூதக காதியத்
திடம்பெறு மொரு சிவாத் துவித தேசிகற்
கடைந்துள விருவினைப் பயனு மாகுரு.

(ப - ரை.) உடம்பொடு மருவினும் - உடம்போடு கூடியிருந்தாலும், ஒருமைப்பால் துளை தொடங்குறும் அவர்க்கு - ஒருபிறப்பிற்றானே ஊழ்வலியைக் கெடுக்கத் தொடங்கு வார்க்கு, சூதகாதி - சூதகமுதலியவை, இல்லை—, அ - அந்த, திடம் பெறும் - உறுதி பெற்ற, ஒரு - ஒப்பற்ற, சிவாத்துவித தேசிகற்கு—, அடைந்துள்ள—, இருவினைப் பயனும்—, ஆகுரு - அணுகமாட்டா, எ - று.

(வி - ரை.) துளை - தொளைத்தல் (கெடுத்தல்). சூதகம் - தீட்டு. இருவினைப்பயன் - புண்ய பாப பலன்களாகிய சுகதுக்கங்கள். (க)

சமதரி சநனெனுந் தகுதி பெற்றுளோ
னமைவுறு சிவனுட னயிக்க பாவமோ
டிமைபெற மாவினை யியற்று மாயினுஞ்
சமையுமவ் வினைப்பய னவனைச் சார்ந்திடா.

(ப - ரை.) சமதரிசநன் என்னும் தகுதி பெற்றுளோன்—, அமைவுறு சிவனுடன் - பொருந்திய சிவனோடு, அயிக்க பாவமோடு - ஐக்யபாவத்துடன், இமை பெற - வெளிப் பட, மா வினை - பெரிய காரியங்களை, இயற்றும் ஆயினும்—, சமையும் - செய்யப்பட்ட, அவ்வினைப்பயன்—, அவனைச் சார்ந்திடா—, எ - று.

(வி - ரை.) சமதரிசநன் - இருவினையொப்பு வந்தவன் (ஶிவாத்வைத ஜ்ஞாநி). மா - பெருமை, அது இங்குப் பெருங்காரியங்களைக் குறித்தது. சிவனுடன் அயிக்கிய பாவம் - லிங்கைக்யம். (௨)

அந்தண னாயினும் புலைய னாயினும்
பந்தனை வினையுடைப் பாவி யாயினு
முந்துறு புண்ணிய னெனினு மொக்குமா
னந்துறு மயிக்கிய நண்ணி னற்கரோ.

(ப - ரை.) நந்துறும் - வளராநின்ற, அயிக்கியம் நண்ணினற்கு - ஐக்ய பாவத்தை யடைந்தவனுக்கு, அந்தணன் ஆயினும்—, புலையன் ஆயினும்—, பந்தனை வினையுடைப் பாவி ஆயினும்—, முந்துறு புண்ணியன் எனினும்—, ஒக்கும் - சமமாகும், எ - று.

(வி-ரை.) நந்துறும்-ஒருசொல். ஒக்கும் என்றது ஏற்றத்தாழ்வுகள் இல்லாதிருத்தலை,

வன்னமோ டுறுநிலை வழியொ ழுக்கினு
லென்னுறு பயன்சிவ ஞான மெய்தினோற்
கன்னிய வுலகவா சார மென்பது
தன்னிக ரவற்கிலை யென்று சாற்றுவார்.

(ப - ரை.) சிவஞானம் எய்தினோற்கு—, வன்னமோடு உறு நிலை வழி ஒழுக்கினுல்-வர்ணுசிரம தர்ம மார்க்கத்தில் ஒழுகுவதனுல், உறு பயன் என் - அடையும் பயன் யாது, தன் நிகர் - தன்னைத்தானே நிகர்த்த, அவற்கு - அவனுக்கு, அன்னியம் - வேருகிய, உலக ஆசாரம் என்பது—, இல்லை என்று சாற்றுவார் (மேலோர்)—, எ - று.

(வி - ரை.) சாற்றுவார் என்பதற்கு எழுவாயாகிய மேலோர் என்பது வருவிக்கப் பட்டது. ஆசாரம் - ஒழுக்கம். (ச)

இலகுறு ஞானவங் கியினி லிட்டயல்
விலகற வறுத்துள வினைவித் தோடுதா
னிலைவுறு தேகிபோ லமர்ந்த ஞானிமெய்
யுலகின ருடலினை யொத்தி யங்குமால்.

(ப - ரை.) இலகுறும் - (நிர்மலம்) விளங்குகிற, ஞான அங்கியில் இட்டு - ஞானுக்கினியிலிட்டு, அயல் விலகு அற - அன்னியமாய் விலகிப் போகாமல், வறுத்துள்ள—, வினைவித்தோடு—, தான்—, நிலைவுறு தேகி போல் - நிலைபெற்ற வுடம்போடு கூடியிருப்பவன் போல, அமர்ந்த—, ஞானிமெய் - ஞானியினுடம்பானது, உலகினர் உடலினை ஒத்து இயங்கும் - உலகத்தாரது உடலை யொத்து விளங்கும், எ - று.

(வி - ரை.) அக்கி யென்னும் வடசொல் அங்கி யெனத்திரிந்து வந்தது. வினைவித்து-கர்மவிதை. ஞானி - லிங்கைக்யன். இன் - சாரியை. (ரு)

புனலுறு மரையிலை போல ஞானி தான்
வினையொடு புணர்கிலன் வேறி லாவவன்
கனவிலு நனவிலுங் கதியி ருப்பினுந்
தனைநிகர் சங்கரன் பூசை சார்ந்துளான்.

(ப - ரை.) ஞானிதான் - சிவஞானத்தால் திடவைராக்ய மேற்பட்ட ஐக்யன், புனல் உறு - நீரிலுள்ள, மரையிலை போல - தாமரையிலை போல, வினையொடு புணர்கிலன் - வினையோடு சேரான், வேறு இல்லா அவன் - வேறுபடாத அவன், கனவிலும்—, நனவிலும்—, கதி இருப்பினும்—, தன்னை நிகர்-தன்னைத்தானே நிகர்த்த, சங்கரன்பூசை சார்ந்துளான்—, எ - று.

(வி - ரை.) மரை தாமரை யென்பதன் விகாரம், இது முதற்குறை யெனப்படும். நனவு - ஜாக்ராவஸ்த்தை. கதி இருப்பினும் என்றது நடப்பினும் நிற்பினும் என்றபடி. (சு)

காண்பன பரசிவ காட்சி யுன்னுவ
மாண்படு தியாநம்வாய் வார்த்தை நற்றுதி
யேண்படு தொழில்சிவ பூசை யேவினை
நாண்பரி யயிக்கிய ஞானி கட்கரோ.

(ப - ரை.) நாண்பரி - நாணத்தைத் தாங்கிய, அயிக்கிய ஞானிகட்கு—, காண்பன - காண்பன யாவும், பரசிவ காட்சி - பரசிவதரிசநமேயாகும், உன்னுவ - நினைப்பன யாவும், மாண் படு - பெருமை பொருந்திய, தியாநம் - சிவத்தியாநமேயாகும், வாய் வார்த்தை -

வாயில் வருஞ் சொற்கள் யாவும், நல் - நல்ல, துதி - சிவத்தோத்திரமேயாகும், வினை - செய்வன யாவும், ஏண் படு - பெருமை பொருந்திய, தொழில் - தொழிலாகிய, சிவபூசை மஹேசபூசையேயாகும், எ - று.

(வி-ரை.) பரித்தல்-தாங்குதல். நாண் என்பது செய்யத் தகாதவற்றிற்கு அஞ்சுதல். செய்யத்தகாதன - தீச்செயல்கள். (எ)

ஆசாரசம்பத்தித்தலம் - முற்றும்.

உ

ஓம் ஸ்வரமயாய நம:

நாற்பத்துமூன்றாவது

## (௩.) ஏ க பா ச ந த் த ல ம்.



[அதாவது - இந்த ஜகத்து ஶிவமயமானதென்று அறிந்திருக்கும் ஶிவயோகிக்கு ஶிவன் ஒருவனே ஆஶ்ரயனாயிருப்பதனால் தனது ஜ்ஞாநத்தில் தனக்கும் ஶிவனுக்கும் ஜகத்துக்கும் பேதமில்லை, ஶிவன் ஸர்வகதனான காரணத்தினால் எல்லாம் ஶிவமயமாகியே காண்பது என்னும் புத்தியுடன் கூடியிருத்தலே ஏகபாசநம் என்பது.]

கலிவிருத்தம்.

அகிலமுஞ் சிவமென வறிந்த பாவனை
நிகழ்வுறு நிலையினோற் கென்று நீள்சிவ
மகிழொரு பாசந வடிவ மாதலா
லிகலற வியம்புவ ரேக பாசநம்.

(ப - ரை.) அகிலமும் - எல்லாப் பொருள்களும், சிவம் என அறிந்த பாவனை—, நிகழ்வுறும் - விளங்குகிற, நிலையினோற்கு - நிலையை யுடையவனுக்கு, என்றும்—, நீள்-பெரிய, சிவம்—, மகிழ்-மகிழ்தற்குரிய, ஒரு பாசநம் வடிவம் ஆதலால்—, இகல் அற-விரோதமில்லாமல், ஏகபாசநம் - ஏகபாசநமென்று, இயம்புவர் - சொல்லுவர் (அறிஞர்).

(வி - ரை.) நீள்சிவம் என்பது எல்லாம் சிவமயம் என்னும் பாவனை. பாசநம் - கலம், பாத்ரம், (ஆஶ்ரயம்.) ஏகபாசநம் என்றது சிவனோடைக்யம் ஏற்படுகின்றமையால் சிவன் ஒருவனே யாஶ்ரயமென்றபடி. (க)

சகந்தனக் கொருதனக் குயர்ப ரற்கிவண்
மிகுந்திடு மத்து விதநற் காட்சியா
னிகழ்ந்திடு மேக பாசந நிலைத்தலாற்
புகும்பிர சாதத்து மேக புத்தியே.

(ப - ரை.) சகம் தனக்கு - ஜகத்துக்கும், ஒரு தனக்கு - ஒப்பற்ற தனக்கும், உயர் - உயர்ந்த, பரற்கு - பரனுக்கும், இவண் - இவ்வுலகில், மிகுந்திடும் - மிகுந்த, அத்துவிதம் - அத்துவிதமாகிய, நல் - நல்ல, காட்சியால் - காட்சியுடைமையாலும், (அதனால்) நிகழ்ந்திடும் - விளங்குகிற, ஏகபாசநம் - ஏகபாசநநிலை, நிலைத்தலால் - நிலைபெறுதலாலும், பிரசாதத்தும் - பிரசாதத்திலும், ஏக புத்தியே புகும் - ஒரே புத்தி யுண்டாகும், எ - று.

(வி - ரை.) பரன் - சிவபெருமான். அத்துவிதம் - இரண்டன்மை. பிரசாதத்தும் ஏகபுத்தியேபுகும் - ப்ரஸாதைக்ய ஜ்ஞாநமுண்டாகும் எனினுமாம். (உ)

இச்சகஞ் சிவத்திடை யெய்தி நின்றிடு
மச்சிவஞ் சகத்திடை யமர்ந்தி லங்குறு
முச்செய லாலிவை யொன்றிற் கொன்றுதான்
வைச்சவா தாரவா தேய மன்னுமால்.

(ப-ரை.) இ - இந்த, சகம் - ஜகமானது, சிவத்து இடை - சிவத்தில், எய்தி நின்றிடும் - பொருந்தி நிற்கும், அ - அந்த, சிவம் - சிவமானது, சகத்து இடை - ஜகத்தில், அமர்ந்து இலங்குறும் - அமர்ந்து விளங்காநிற்கும், உ செயலால் - உந்தச்செய்கையால், இவை ஒன்றிற்கு ஒன்று—, வைச்ச-நியமித்து வைக்கப்பட்ட, ஆதார ஆதேயம் - ஆதார ஆதேயத்தன்மையை, மன்னும் - பொருந்தும், எ - று.

(வி-ரை.) உச்செயல் என்பதில் உகரம் பொதுமைச்சுட்டு. ஆதாரம் - இடம். ஆதேயம் - இடத்து நிகழ் பொருள். ஒன்றிற்கு ஒன்று - சிவ ஜகங்கள். (௩)

அறிவொரு சிவமய மாகும் பாசந
மறியுல கெலாமுமா மறிவை யன்றியே
யறிவுறு பொருளிலை யாத லான்மிகு
மறிவினை யுடையவர்க் ககில மில்லையே.

(ப-ரை.) அறிவு - அறிவானது, ஒரு - ஒப்பற்ற, சிவமயம் ஆகும்—, பாசநம் - பாசநமானது, அறி உலகு எல்லாமும் ஆம் - அறியப்பட்ட உலகு என்கிற எல்லாப் பொருள்களுமாகும், அறிவை அன்றி—, அறிவுறு பொருள் இல்லை - அறியத்தக்க பொருளில்லை, ஆதலால்—, மிகும் - மிகுந்த, அறிவினை உடையவர்க்கு—, அகிலம் இல்லை—, எ - று.

(வி-ரை.) அறிவு - சித்தவிருத்தி. சிவமயம் - சிவஸ்வரூபமாகிய சைதந்யம். பாசநம் - ஆஶ்ரயம். அகிலம் - உலகு (மாயாகாரியமாகிய ப்ரபஞ்சம்).

எவனுடைய சித்தவ்ருத்திக்கு ஶிவஸ்வரூபமாகிய சைதந்யம் ஒன்றே யாஶ்ரயமாயுள்ளதோ அவனுக்கு மாயாகாரியமாகிய இந்த ப்ரபஞ்சப்பொருளால் பயன் ஒன்றுமில்லையென்பதும், எல்லாவற்றையும் சைதந்யமே விளங்கச்செய்கின்றது அஃதின்றிப் பொருள் யாதுமில்லை சின்மாத்திரத்தில் நிலைபெற்ற சித்தமுடையோர்களுக்கு மாயாகற்பிதங்களாகிய பொருள்களால் பயன் இல்லையென்பதும் இதன் கருத்து. (௪)

தன்னுள விருத்திபோய்த் தனிச்சி வத்தினுண்
மன்னுற வாகுல மழிந்து பெற்றுள
செந்நெறி யோகியே சீவன் முத்தனென்
றுன்னரு மறிவுடை யுலக மோதுமே.

(ப-ரை.) தன் - தனது, உள்ள விருத்தி போய் - மநோவிருத்தி கெட்டு, தனி - ஒப்பற்ற, சிவத்தினுள்—, மன்னுற - நிலை பெறுதலால், ஆகுலம் அழிந்து - துன்பமொழிந்து, பெற்றுள்ள - அடைந்துள்ள, செம் நெறி யோகியே-செவ்வையாகிய நெறியையுடைய யோகியே, சீவன் முத்தன் என்று—, உன் அரும் - நினைத்தற்கரிய, அறிவு உடை உலகம் ஓதும் - அறிவையுடைய உலகம் சொல்லும், எ - று.

(வி-ரை.) மநோவிருத்தி - மநோவ்யாபாரம். சீவன் முத்தன் - ஜீவதசையிலேயே பாச நீக்க முடையவன். உலகம் என்றது உயர்ந்தோரை, "உலக மென்பதுயர்ந்தோர் மாட்டே" என்பதோத்தாகலின். உலகம் என்பது சொல்லானஃறிணையாதலான் அதற்கேற்பச் சொல்லும் என்றஃறிணை வினையானே முடித்தார். உள்ள விருத்தி போய்ச் சிவத்தினுள் மன்னுறல் - சித்தமானது தொழிலற்றதும், கலக்கமற்றதும், சிவனிடம் லயித்ததுமாயிருத்தல். (௫)

ஏகபாசநத்தலம் - முற்றும்.

உ

ஓம் த்ரயீமூர்த்தயே நம:

# நாற்பத்துநான்காவது

## (சஅ) சகபோசநத்தலம்.



[அதாவது - தான் வ்யாபகனான காரணத்தினால் ஸாக்ஷாத் சிதாகாரமான தன்னிடத்தில் சிவத்தையும் குருவையும் ப்ரபஞ்சத்தையும் ஏகரூபத்துடன் எப்போதும் ஸம்யோகம் செய்து ப்ரபஞ்சத்தின் பின்ந பாவத்தைக் கெடுத்திருத்தலே சகபோசநம் என்பது.]

கலிவிருத்தம்.

மன்னிய சிவன்றனைக் குருவை மைந்தனைத்
தன்னொரு வடிவென வுணருந் தன்மைதா
னுன்னரு முலகெலா முண்ட லாதலாற்
பன்னுற வருசக போச நத்தலம்.

(ப - ரை.) மன்னிய - நிலைபெற்ற, சிவன் தன்னை—, குருவை—, மைந்தனை—, தன் - தனது, ஒரு வடிவு என-ஒரே உருவென்று, உணரும் தன்மை தான் - அறியுந்தன்மையே, உன் அரும் - நினைத்தற்கரிய, உலகு எல்லாம்—, உண்டல் ஆதலால்—, பன் உற வரு- சொல்லத் தகுந்ததா யுண்டாகிய, (இது) சகபோசநத்தலம் (ஆகும்)—, எ - று.

(வி - ரை.) சிவன் தன்னை யென்பதில் தன் சாரியை. தான் தேற்றேகாரப்பொருளில் வந்தது. மைந்தன் - மாணாக்கன். ஒரு வடிவு - ஆத்மஸ்வரூபம். (க)

அறிவுரு வாந்தனி லகிலந் தன்னையுஞ்
செறிவுறு குருவையுஞ் சிவபி ரானையும்
பிறிவற வேகமாய்க் காணும் பெற்றியே
குறிசக போசந மென்னக் கூறுவார்.

(ப - ரை.) அறிவு உரு ஆம் - அறிவுருவாகிய, தன்னில் - தன்னிடத்தே, அகிலம் தன்னையும் - உலகையும், செறிவுறு - பொருந்திய, குருவையும்—, சிவபிரானையும்—, பிறிவு அற—, ஏகமாய் காணும் பெற்றியே—, குறி - குறிக்கப்பட்ட, சகபோசநம்—, என்ன கூறுவார்—, எ - று.

(வி - ரை.) பிறிவு - பிரிவு. பெற்றி - தன்மை. கேவல சைதந்யமாகிய ஆத்மாவினிடம் ஸகல குருவையும் சிவபிரானையும் ஐக்யப்படுத்தல் வேண்டும் என்பதிதன் கருத்து. (உ)

குருவிவன் சிவனிவன் கூறப் பட்டிடுஞ்
சரமுட னசரமாஞ் சகம திங்கிது
திரமுறு மினையனு னென்னுஞ் சிந்தனை
யொரு வினேன் யாரவ னுலக முண்பவன்.

(ப - ரை. குரு இவன்—, சிவன் இவன்—, கூறப்பட்டிடும் - சொல்லப்படுகிற, சரமுடன் அசரம் ஆம்—, சகம் இங்கு இது—, திரம் உறும் - உறுதி பெற்ற, இனையன்- இத்தன்மையன், (இவன்) நான்—, என்னும் சிந்தனை - என்கிற நினைவை, ஒருவினேன்- நீங்கினவன், யார் - யாரோ, அவன் - அவனே, உலகம் உண்பவன்—, எ - று.

(வி - ரை.) சரம் - இயங்கியற்பொருள். அசரம் - நிலையியற்பொருள். ஒருவல்- நீங்கல். உலகம் உண்பவன் - விச்வபோஜகன். (ங)

இறைசிவ னடிமைநா னிவன ருட்குரு
வுறுமக னெனு முளமி லாதவன்
மறுவறு மொருசிவாத் துவித வான்பதம்
பெறுதவ னெனமறை பெரிதி யம்புமே.

(ப - ரை.) சிவன் இறை - சிவபிரான் இறைவன், நான் அடிமை—, இவன் அருட் குரு—, உறும் மகன் நான் - பொருந்திய மைந்தன் நான், என்னும் உள்ளம் இல்லாதவன்- என்கிற நினைவில்லாதவன், மறு அறும் - களங்கமற்ற, ஒரு - ஒப்பற்ற, சிவாத்துவிதம்- சிவாத்துவிதமென்கிற, வான் பதம் - மேலான பதத்தை, பெறு - பெறுதற்குரிய, தவன் என - தவத்தோனென்று, மறை - வேதங்கள், பெரிது இயம்பும் - மிகுதியாய்ச் சொல்லா நின்றன, எ - று.

(வி - ரை.) இறை - ஆகுபெயர், அடிமையும் அது. தவன் - தவத்தையுடையோன், " தவரடிபுனைந்த தலைமையோனே ", "பெருந்தவனின்னணம் பெட்பக்கூறலும்" என்றற் றொடக்கத்தான்றோர் செய்யுட்களின்கண் கவனித்தற்குரியன. மைந்தன் - மாணாக்கன். இறைவன் - எஜமான். அடிமை - வேலைக்காரன். (ச)

குருவுநா னுலகுநான் கூறு தற்கரும்
பரமுநா னெனவொரு பரி சறிந்திட
லிருளறு பூரண வகந்தை யென்னவே
திரிவறு மறிவினோர் தெரிந்து கூறுவார்.

(ப - ரை.) குருவும் நான்—, உலகும் நான்—, கூறுதற்கு அரு - சொல்லுதற்கரிய, பரமும் நான்—, என - என்று, ஒரு பரிசு அறிந்திடல் - ஒரு தன்மையாயறிந்திடலே, இருள் அறு - அந்தகாரமற்ற, பூரண அகந்தை—, என்ன-என்று, திரிவு அறும் - மாறுபாடற்ற, அறிவினோர்—, தெரிந்து கூறுவார்—, எ - று.

(வி - ரை.) பூரண அகந்தை - பூர்ணாஹங்காரம், அதாவது ஸத்வகுணத்தினால் நிகழ்வதும், அகண்ட பரிபூர்ண சிவமே யான் எனத் தோன்றுவதுமாகிய சித்தவிருத்தி. பூர்ண அஹங்காரத்தையே பரமாஹங்காரம் எனச் சொல்வதுமுண்டு. அஹங்காரமானது பரமாஹங்கார மென்றும், ஸ்வபாஹங்காரமென்றும், துச்சாஹங்காரமென்றும் மூன்று வகைப்படும். ஈதெல்லாமாயுள்ள பரமாத்மா யான் மற்றேதுமில்லை யென்றுதிக்கும் அஹங்காரமே பரமாஹங்காரம். ஈதெல்லாவற்றுளும் அறியப்படுவதாகிய அங்ஙனே யான் என வரும் அஹங்காரமே ஸ்வபாஹங்காரம். கை கால் முதலிய தேஹமே யான் என வாதிக்கும் அஹங்காரமே துச்சாஹங்காரம். பரமாஹங்காரத்தைப் பற்றி இனி வரும் இலிங்கஸ்தலத்தின் பாண்டஸ்தலத்திலும் சொல்லப்பட்டுள்ளது. ஈண்டு, இச்செய்யுளைக் கவனிக்க:—

திருநாவுக்கரசுஸ்வாமிகள்

திரு அங்கமாலை.

இறுமாந்திருப்பன் கொலோ - வீசன் - பல் கணத்தெண்ணப்பட்டுச்
சிறுமானேந்தி தன் சேவடிக்கீழ்ச் சென்றங் - கிறுமாந்திருப்பன் கொலோ. (ரு)

அனைத்தினு மிலங்குபூ ரணவ கந்தையாய்
மனிப்பொலி தருபர மான வங்கியிற்
றனித்திடு துவிதநற் சமிதை வேள்வியா
னினைப்பறு மகிலவோ மத்த னென்பவே.

(ப - ரை.) அனைத்தினும் - எல்லாவற்றினும், இலங்கு - விளங்குகிற, பூரண அகர்தையாய்—, மன்னி பொலிதரு - நிலைபெற்று, விளங்குகிற, பரம் ஆன அங்கியில்- பரமாகிய அக்கினியில், தனித்திடு - ஒப்பற்ற, துவிதம் - துவிதமாகிய, நல் சமிதை வேள்வியான்—, இனைப்பு அறும் - துன்பமற்ற, அகில ஓமத்தன் என்ப - அகிலவோமத் தனென்று சொல்லுவர் (பெரியோர்), எ - று.

(வி - ரை.) துவிதம் - இருமை. வேள்வியான் - யாகஞ்செய்பவன். இனைதல்- வருந்துதல். என்ப என்னும் வினைக்கு வினைமுதலாகிய பெரியோர் என்பது வருவித்து ரைக்கப்பட்டது. பரம் ஆன - நிர்மயமாகிய அதிஷ்டானமான. (௬)

போதமென் றிடுமொரா தாரப் பூந்தழற்
பேதமொன் றுலகவி பெய்து வேட்பவ
ளேதுறு சகவவி யுண்டு நின்றிடு
மேதமொன் றுருதுயர் ஞான யோகியே.

(ப - ரை.) போதம் என்றிடும் - ஞானமென்கிற, ஒரு—, ஆதாரம் - ஆதாரமாகிய, பூ - அழகிய, தழல்-நெருப்பில், பேதம் ஒன்று-பேதம் பொருந்திய, உலகு - உலகமாகிய, அவி பெய்து - அவி சொரிந்து, வேட்பவன் - (ஞான) யாகஞ் செய்பவன், ஓதுறு- சொல்லப்பட்ட, சக அவி உண்டு - உலகமாகிய அவியை யுண்டு, நின்றிடும் - நிலை பெற்றிருப்பன், (அவன்யாரெனின்) ஏதம் ஒன்று உருது - குற்றம் சிறிது மில்லாமல், உயர் - உயர்ந்த, ஞானயோகியே—, எ - று.

(வி - ரை.) அவி - யாகாக்கினியிற் பெய்யுந் தேவருணவு. (எ)

அறிவுரு வாம்பரா காசத் தாசற
நிறைதரு பராநந்த மென்ன நின்றுள
செறிகதி ரிடைவிரி சித்த மொன்றினோர்க்
குறுசக நிலைமைகண் ணுறுவ தின்றரோ.

(ப - ரை.) அறிவு உரு ஆம் - அறிவுருவாகிய, பராகாசத்து - பரமாகாசத்தில், ஆசு அற - குற்றமற, நிறை தரு - நிறைந்த, பராநந்தம் என்ன - பராநந்தமென்று சொல்லும்படி, நின்றுள்ள - நிலைபெற்றிருக்கிற, செறி கதிரிடை - நெருங்கிய கிரணங்களி னிடையே, விரி - விரிந்த, சித்தம் - மனம், ஒன்றினோர்க்கு - பொருந்தினவர்க்கு, உறு - மிகுந்த, சகநிலைமை—, கண்ணுறுவது இன்று - காணப்படுதலில்லை, எ - று.

(வி-ரை.) பரமாகாசம் - சிதாகாயம் (பரமாநந்தஜ்யோதி). பராநந்தம் - பேரின்பம். சகநிலைமை - ப்ரபஞ்சஸ்த்திதி (லோகவ்யாபாரம்). அறிவுரு - சித்ரூபம். (அ)

ஆசறு சிதம்பர மதனிற் றன்னையே
பாசமில் சமரச பாவத் தொன்றிய
தேசுள னாகவே சிந்தை செய்திடின்
மாசறு வித்தையென் றுரைப்பர் மாதவர்.

(ப - ரை.) ஆசு அறு - குற்றமற்ற, சிதம்பரமதனில் - (ப்ரபஞ்சக்கூட்டமற்ற) சிதாகாயத்தில், தன்னையே—, பாசம் இல் - பாசமில்லாத, சமரசபாவத்து - சமரச பாவனையில், ஒன்றிய - பொருந்திய, தேசு உளன் ஆகவே - ஒளியுள்ளவனாகவே, சிந்தை செய்திடின் - சிந்தித்தால், மாசு அறு - குற்றமற்ற, வித்தை என்று—, மாதவர் உரைப்பர்—, எ - று.

(வி - ரை.) சிதம்பரம் - (சித்+அம்பரம்) ஞானாகாயம். சமரச பாவனை - ஏகீபாவம். சிந்தைசெய்தல்- ஒரு சொல். மா தவர் - பெருந் தவத்தினர். தன்னையே - ஆத்மாவையே. ஒன்றிய - லயித்த. மாசறு வித்தை - பரவித்தை (சச்சிதாநந்த போதகமாயுள்ள வித்தை).

சிதம்பர வொளிநிகழ் சிவனொ டொன்றுற
விதந்தரு மயிக்கிய பாவத்தை யெய்தினோன்
மதஞ்செய் பத்தாதி நன்மார்க்க நண்ணலாற்
பதந்தனி முத்தியே யாகப் பற்றுவான்.

(ப - ரை.) சிதம்பர ஒளி நிகழ் - சிதாகாயத்தில் ஒளியோடு விளங்குகிற, சிவனொடு ஒன்றுற - சிவனோடொன்றும்படி, இதம் தரும்-நன்மையைத் தருகிற, அயிக்கியபாவத்தை எய்தினோன - ஐக்யபாவனையை யடைந்தவன், மதம் செய் - இறுமாப்பை யுண்டாக்குகிற, பத்தாதி - பக்தாதியாகிய, நல் மார்க்கம் நண்ணலால்—, தனி முத்தியே—, பதம் ஆக பற்றுவான் - (தன்) பதவியாகப் பெறுவான், எ - று.

(வி - ரை.) நண்ணல் - பொருந்தல். சச்சிதாநந்தத்தை விளங்கச்செய்வதும் ப்ரபஞ்ச மோஹத்தை நீங்கச் செய்வதுமாதலால் முத்தியை 'தனி முத்தி' என்றார். மார்க்கம் என்பது ஈண்டு ஸ்தலம் எனப் பொருள்படும். பதம் ஆகப் பற்றுவான்-மோக்ஷலக்ஷ்மிக்குப் பாத்ரமாகும் தன்மையை யடைவான். (க௦)

சகபோசநத்தலம் - முற்றும்.

இவ்விதமாய் எந்தக் காரணத்தினால் ஸர்வாசாரஸம்பத்தி, ஏகபாஜநம், ஸஹபோஜநம் என்னும் மூன்று ஸ்தலங்களில் கூறிய தர்மங்களுடனே கூடியிருத்தலால் எவன் சிவனிடம் ஏகீபாவமடைந்தவனானானோ, அந்தக் காரணத்தினால் அவன் ஆறாமவனான ஐக்யன் என்று அறியப்பட்டான்.

சு - வது. அயிக்கியத்தலம் முற்றிற்று.

---

ஆக - காப்பு பாயிரம் உள்பட செய்யுள் - ௫௬௦.

ப்ரதமபரிச்சேதமாகிய

அங்கஸ்தலம் ஸம்பூர்ணம்.

---

# த்விதியபரிச்சேதம்.

# இலிங்கஸ்தலம்.

## க - வது. ஆசாரலிங்கத்தலம்.

[அதாவது - நிவ்ருதிகலா ஸமேதமாய் க்ரியாஶக்தியுடன் கூடி கர்மஸாதாக்யத்தைப் பொருந்தி சித்தகம்யமாயிருத்தல் என்பது.]

(பக்தஸ்தலத்தைச் சேர்ந்த உட்பிரிவுகள்.)

*கலிநிலைத்துறை.*

ஆறெ னுந்தலங் களின்முறை யறிந்தவா சாரப்
பேற டைந்தவன் றனக்கிலிங் கத்தலம் பிறங்கக்
கூறி டுஞ்சிவ பிரா னரு ளாகமங் குறித்து
மாறொ ழிந்திடு சீவன்முத் தியில்வழங் குவவாய்.

(ப - ரை.) ஆறு என்னும் தலங்களின் முறை அறிந்த—, ஆசாரம் - (நல்) ஒழுக்கத்தின், பேறு - பயனை, அடைந்தவன் தனக்கு—, இலிங்கத்தலம்—, பிறங்க - விளங்க, சிவபிரான்—, அருள் - அருளிச்செய்த, ஆகமம்—, மாறு ஒழிந்திடு - ஒப்பு ஒழிந்த, சீவன் முத்தியில் - சீவன் முத்தி தசையில், வழங்குவ ஆய் - வழங்குவனவாகி, குறித்துக் கூறிடும் - குறித்துச் சொல்லும், எ - று.

(வி - ரை.) முறை - கிடக்கை முறை. சிவபிரானருளாகமம் - சிவாகமம். ஆகமம் கூறிடும் எனவியையும்.

**அங்கஸ்தலமானது பக்தஸ்தலம், மாஹேஶ்வரஸ்தலம், ப்ரஸாதிஸ்தலம், ப்ராண லிங்கிஸ்தலம், சரணஸ்தலம், ஐக்யஸ்தலம் என ஆறு பகுப்புக்களையுடையதுபோல, இலிங்கஸ்தலமும் ஆசாரலிங்கம், குருலிங்கம், சிவலிங்கம், ஜங்கமலிங்கம், பிரசாத லிங்கம், மஹாலிங்கம் என ஆறு பகுப்புக்களையுடையதாகும்.**

ஷட்விதலிங்கம் பஹுவித பாவனை:— ப்ருதிவி ஸம்பந்தமானதே ஆசாரலிங்கம், ஜல ஸம்பந்தமானதே குருலிங்கம், அக்நி ஸம்பந்தமானதே ஶிவலிங்கம், வாயு ஸம்பந்தமானதே ஜங்கமலிங்கம், ஆகாஶ ஸம்பந்தமானதே ப்ரஸாதலிங்கம், ஆத்ம ஸம்பந்தமானதே மஹாலிங்கம் || தேஹத்தின் குதஸ்தாநத்திலிருக்கும் ஆதாரசக்ரத்தில் ஆசாரலிங்கம், குஹ்யஸ்தாநத்திலிருக்கும் ஸ்வாதிஷ்டாநசக்ரத்தில் குருலிங்கம், நாபீஸ்தாநத்திலிருக்கும் மணிபூரகசக்ரத்தில் ஶிவலிங்கம், ஹ்ருதயஸ்தாநத்திலிருக்கும் அநாஹதசக்ரத்தில் ஜங்கமலிங்கம், கண்டஸ்தாநத்திலிருக்கும் விஶுத்திசக்ரத்தில் ப்ரஸாதலிங்கம், ப்ருமத்யஸ்தாநத்திலிருக்கும் ஆஜ்ஞேயசக்ரத்தில் மஹாலிங்கம் || க்ராணனில் ஆசாரலிங்கம், ஜிஹ்வாவில் குருலிங்கம், சக்ஷுவில் ஶிவலிங்கம், த்வக்கில் ஜங்கமலிங்கம், ஶ்ரோத்ரத்தில் ப்ரஸாதலிங்கம், ஹ்ருதயத்தில் மஹாலிங்கம் || ரக்தத்தில் ஆசாரலிங்கம், மாம்ஸத்தில் குருலிங்கம், மேதையில் ஶிவலிங்கம், அஸ்தியில் ஜங்கமலிங்கம், மஜ்ஜையில் ப்ரஸாதலிங்கம், சர்மத்தில் மஹாலிங்கம் || சித்தத்தில் ஆசாரலிங்கம், புத்தியில் குருலிங்கம், அஹங்காரத்தில் ஶிவலிங்கம், மனதில் ஜங்கமலிங்கம், ஜ்ஞாநத்தில் ப்ரஸாதலிங்கம், பாவத்தில் மஹாலிங்கம் || இவ்விதமாய் ப்ருதிவி அப்பு தேயு வாயு ஆகாஶம் ஆத்மா என்னும் ஷட்பூத ஸம்பந்த க்ரமத்தைப் பிடித்து, ஸர்வாவயவம் லிங்கமயமாயிருக்கிறது.

இங்கு அறியத்தக்க விசேஷம் யாதெனின் :— பிண்டாண்டம் என்று சொல்லப்பட்ட தேஹம் ஷட்ஸ்தல ஸம்பந்தத்தினால் லிங்கமயமா யிருப்பதுபோல ப்ரஹ்மாண்டம் என்று சொல்லப்பட்ட ப்ரபஞ்சமும் தத்ஸம்பந்தத்தினால் லிங்கமயமாயிருக்கிறது. எவ்வாறெனின் :— ப்ருதிவி ஸம்பந்தமான பூமி, பர்வதம், கல், மண் முதலியவைகளில் ஆசாரலிங்கம் ; ஜல ஸம்பந்தமான ஸமுத்ரம், நதி, தடாகம், மேகம் முதலியவைகளில் குருலிங்கம் ; அக்நி ஸம்பந்தமான ஜ்வாலாமுகி, காட்டுத்தீ, படபாக்நி, மின்னல் முதலியவைகளில் ஶிவலிங்கம் ; வாயு ஸம்பந்தமான வெறுங்காற்று, மந்தமாருதம் முதலியவைகளில் ஜங்கமலிங்கம் ; ஆகாஶ ஸம்பந்தமான பள்ளத்தாக்கு, குகை முதலியவைகளின் வெளிப்ரதேஶத்தில் ப்ரஸாதலிங்கம் ; ஸர்வாதார பூதமான ப்ரஹ்மத்தில் மஹாலிங்கம். இவ்விதமாய்த் தேஹமெல்லாம் லிங்கமயமாயிருப்பதுபோல ப்ரபஞ்சமெல்லாம் லிங்கமயமாயிருக்கிறது. தேஹமயமான லிங்கத்திற்கும் ப்ரபஞ்சமயமான லிங்கத்திற்கும் பேதமில்லை. தேஹத்திலும் ப்ரபஞ்சத்திலும் ஒரு ஶிவசைதந்யமே வெவ்வேறு பதார்த்தங்களின் மூலமாய், வெவ்வேறாய் வர்த்திப்பதின் தன்மையினால் வெவ்வேறு பெயருள்ளதா யிருக்கிறது. எவ்விடத்திலும் லிங்கமே வர்த்திப்பதனால் லிங்கத்தை விட்டு வேறே யாதொரு பதார்த்தமுமில்லை. ஆதலால், "ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்மா" என்று ஶ்ருதி கோஷிக்கிறது. பின்னும், க்ராணம் ஜிஹ்வா சக்ஷு த்வக்கு ஶ்ரோத்ரம் ஹ்ருதயம் என்னும் ஷடிந்த்ரியங்களின் மூலமாய், லிங்கம் முறையே ஆசாரலிங்கம் குருலிங்கம் ஶிவலிங்கம் ஜங்கமலிங்கம் ப்ரஸாதலிங்கம் மஹாலிங்கம் என்னும் பெயர்களினால், கந்தம் ரஸம் ரூபம் ஸ்பர்ஶம் ஶப்தம் த்ருப்தி ஆகிய இவைகளை அறிகிறது என்னும் விஷயத்தில், ஜீவியே அவைகளை அறிகிறவனாய் அந்த லிங்கம் இந்த ஜீவியே யாயிருப்பன். ஆதலால், "அஹம் ப்ரஹ்மாஸ்மி", "தத்வமஸி", "அயமாத்மா ப்ரஹ்மா", "ப்ரஜ்ஞானம் ப்ரஹ்மா" என்று வேதாந்த மஹாவாக்யங்கள் முறையிடுகின்றன. முன்னரே, அங்கமே ஜீவாத்மா, லிங்கமே பரமாத்மா என்று கூறப்பட்டதன்றோ. மேற் காட்டியபடி ஜீவனே லிங்கமானதனால் ஜீவாத்ம பரமாத்மைக்யம் சொல்லப்பட்டதாயிற்று. இதே அங்கலிங்க ஸங்கம் ; இதே ஶிவஜீவைக்யம் ; இதே ஶிவாத்வைத ஜ்ஞானஸாரம்.

பின்னும், ஸத்ஸ்வரூபமே ஆசாரலிங்கம், சித்ஸ்வரூபமே குருலிங்கம், ஆநந்தஸ்வரூபமே ஶிவலிங்கம், நித்யஸ்வரூபமே ஜங்கமலிங்கம், பரிபூர்ண ஸ்வரூபமே ப்ரஸாதலிங்கம், அகண்ட ஸ்வரூபமே மஹாலிங்கம் ‖ அறிவேன் அறிந்தேன் அறியேன் என்பதிலும், காமாதி வ்ருத்திகள் தோன்றுவதிலும் தோன்றா திருப்பதிலும், இதம் என்பதற்கு தான் ஆஶ்ரயமாய்த் தனக்கு ஒரு வாதை யில்லாது தானுண்டென்பது ஸத்தாகவும், அப்படிப்பட்ட ஸத்தே ஆசாரலிங்கம் ; ஜாக்ரம் ஸ்வப்நம் ஸுஷுப்தி என்னும் மூன்றவஸ்தைகளிலும் தோன்றத்தக்க ஸமஸ்த விஷயங்களை வெவ்வேறாயறிவதே சித்தாகவும், அப்படிப்பட்ட சித்தே குருலிங்கம் ; தேடிப் பார்க்கவும் எவ்விடத்திலு மில்லாத நேயம் தன்னில் நிலைத்திருக்க அத்யந்த ப்ரீதிக்கு விஷயமாயிருப்பதே ஆநந்தமாகவும், அப்படிப்பட்ட ஆநந்தமே ஶிவலிங்கம் ; ப்ராகபாவம் ப்ரத்வம்ஸாபாவம் அத்யந்தாபாவம் அந்யோந்யாபாவம் ஆகிய இவைகள் கடாதி ஜட பதார்த்தங்களுக்குண்டா யிருப்பதே யன்றி தனக்கில்லாதிருப்பதே நித்யமாகவும், அப்படிப்பட்ட நித்யமே ஜங்கமலிங்கம் ; தேஶபரிச்சேதம் காலபரிச்சேதம் வஸ்துபரிச்சேதம் ஆகிய இவைகளில்லாமல் ககநாதி ப்ரபஞ்சமெல்லாமும் தன்னிலிருப்பதென்பதே பரிபூர்ணமாகவும், அப்படிப்பட்ட பரிபூர்ணமே ப்ரஸாதலிங்கம் ; பரிமாணத்தை யறியவொண்ணாதிருப்பதே அகண்டமாகவும், அப்படிப்பட்ட அகண்டமே மஹாலிங்கம் ‖ ஷடக்ஷர மந்த்ரத்தில் நகாரமே ஆசாரலிங்கம், மகாரமே குருலிங்கம், ஶிகாரமே ஶிவலிங்கம், வகாரமே ஜங்கமலிங்கம், யகாரமே ப்ரஸாதலிங்கம், ஓங்காரமே மஹாலிங்கம் ‖ கைத்தலத்தில் பூஜையைக்கொள்ளும் இஷ்டலிங்கத்தில் வ்ருத்தமே ஆசாரலிங்கம், மத்யஸ்தானமே குருலிங்கம், கோமுகமே ஶிவலிங்கம்,

வர்த்துளமே ஜங்கமலிங்கம், நாளமே ப்ரஸாதலிங்கம், பீடமே மஹாலிங்கம் || தாரணை பேதத்தினால் லிங்கம் கைத்தலத்தில் தரிக்கப்பட்டபோது ஆசாரலிங்கம், கக்ஷஸ்தலத்தில் தரிக்கப்பட்ட போது குருலிங்கம், வக்ஷஸ்தலத்தில் தரிக்கப்பட்டபோது ஶிவலிங்கம் மஸ்தகஸ்தலத்தில் தரிக்கப்பட்ட போது ஜங்கமலிங்கம், ஶிரஸ்தலத்தில் தரிக்கப் பட்ட போது ப்ரஸாதலிங்கம், அமள ஐக்யமாய் தரிக்கப்பட்டபோது மஹாலிங்கம் || பக்தனுக்கு ஆசாரம் முக்யமானதனால் ஆசாரமே ஆசாரலிங்கம், மாஹேஶ்வரனுக்கு குரு முக்யமானதனால் குருவே குருலிங்கம், ப்ரஸாதிக்கு ஶிவன் முக்யமானதனால் ஶிவனே ஶிவலிங்கம், ப்ராணலிங்கிக்கு ஜங்கமம் முக்யமானதனால் ஜங்கமமே ஜங்கமலிங்கம், சரணனுக்கு ப்ரஸாதம் முக்யமானதினால் ப்ரஸாதமே ப்ரஸாதலிங்கம், ஐக்யனுக்கு மஹம் முக்யமானதினால் மஹமே மஹாலிங்கம் || பின்னும், ஶரணஶவன் ஆசாரத்தில் ஶ்ரத்தா பக்தியுள்ளவனா யிருக்கையில் பக்தனா யிருப்பன் ; அப்படிப்பட்ட ஆசாரத்தைப் போதித்த குருவினிடத்தில் நிஷ்டா பக்தியுள்ளவனா யிருக்கையில் மாஹேஶ்வரனா யிருப்பன்; அப்படிப்பட்ட குரு கொடுத்த லிங்கத்தில் அவதான பக்தியுள்ளவனா யிருக்கையில் ப்ரஸாதியா யிருப்பன் ; அப்படிப்பட்ட லிங்கத்திற்கு முகமாயிருக்கும் ஜங்கமத்தில் அநுபவ பக்தியுள்ளவனா யிருக்கையில் ப்ராணலிங்கியா யிருப்பன் ; முன்னர்க் கூறிய குரு லிங்க ஜங்கமங்களின் ப்ரஸாதத்தில் ஆநந்தபக்தியுள்ளவனா யிருக்கையில் சரணனா யிருப்பன் ; அப்படிப்பட்ட ப்ரஸாதத்தினால் ப்ரகாஶமாகும் மஹாலிங்கத்தில் ஸமரஸ பக்தியுள்ளவனா யிருக்கையில் ஐக்யனா யிருப்பன் || இவ்வாறு ஷட்ஸ்தலங்கள் ஒன்றுக் கொன்று ஸம்பந்தித்துக் கொண்டிருக்கின்றன.

## நவலிங்கலக்ஷணம்.

சரீரத்தின் குதஸ்தானத்தில் பீதவர்ணத்தின் நான்கிதழின் (వ - శ - ష - స) நகார பீஜத்தின ப்ருதிவி அங்கத்தின ஆதாரமண்டபத்தில் க்ரியாஶக்தி யுக்தமான ஆசாரலிங்கம் க்ராணமுகத்தினால் கந்தத்தை க்ரஹிக்கும்.

சரீரத்தின் குஹ்யஸ்தானத்தில் ஶ்வேதவர்ணத்தின் ஆறிதழின் (బ - భ - మ - య - ర - ల) மகாரபீஜத்தின் அப்பு அங்கத்தின் ஸ்வாதிஷ்டானமண்டபத்தில் ஜ்ஞானஶக்தி யுக்தமான குருலிங்கம் ஜிஹ்வாமுகத்தினால் ரஸத்தை க்ரஹிக்கும்.

சரீரத்தின் நாபிஸ்தானத்தில் ரக்தவர்ணத்தின பத்திதழின் (డ - ఢ - ణ - త - థ - ద - ధ - న - ప - ఫ) ஶிகாரபீஜத்தின அக்நி அங்கத்தின மணிபூரகமண்டபத்தில் இச்சாஶக்தி யுக்தமான ஶிவலிங்கம் சக்ஷுமுகத்தினால் ரூபத்தை க்ரஹிக்கும்.

சரீரத்தின் ஹ்ருதயஸ்தானத்தில் நீலவர்ணத்தின் பன்னிரண்டிதழின் (క - ఖ - గ - ఘ - ఙ - చ - ఛ - జ - ఝ - ఞ - ట - ఠ) வகாரபீஜத்தின் வாயு அங்கத்தின் அநாஹத மண்டபத்தில் ஆதிஶக்தி யுக்தமான ஜங்கமலிங்கம் த்வங்முகத்தினால் ஸ்பர்ஶத்தை க்ரஹிக்கும்.

சரீரத்தின் கண்டஸ்தானத்தில் ஸ்படிகவர்ணத்தின் பதினாறிதழின் (అ - ఆ - ఇ - ఈ - ఉ - ఊ - ఋ - ౠ - ఎ - ఏ - ఐ - ఒ - ఓ - ఔ - అం - అః) யகார பீஜத்தின் ஆகாஶ அங்கத்தின் விஶுத்தியண்டபத்தில் பராஶக்தி யுக்தமான ப்ரஸாதலிங்கம் ஶ்ரோத்ரமுகத்தினால் ஶப்தத்தை க்ரஹிக்கும்.

சரீரத்தின் ப்ருமத்யஸ்தானத்தில் மாணிக்கவர்ணத்தின் இரண்டிதழின் (హం - క్షం) ஓங்காரபீஜத்தின் ஆத்ம அங்கத்தின் ஆஜ்ஞேயமண்டபத்தில் சித்ஶக்தி யுக்தமான மஹா லிங்கம் ஹ்ருதயமுகத்தினால் த்ருப்தியை க்ரஹிக்கும்.

சரீரத்தின் மஸ்தகஸ்தானத்தில் ப்ரபாஜ்யோதிர்வர்ணத்தின் ஆயிரவிதழின் அகார பீஜத்தின் த்யாகாங்கத்தின் ப்ரஹ்மமண்டபத்தில் நிஷ்களலிங்கம் ஆநந்தமயமாயிருக்கும்.

சரீரத்தின் பிகாஸ்தாநத்தில் மஹாஜ்யோதிர்வர்ணத்தின் மூன்றிதழின் உகார பீஜத்தின் போகாங்கத்தின் பிகாமண்டபத்தில் ஶூந்யலிங்கம் விப்ராந்தி மயமாயிருக்கும்.

சரீரத்தின் பிகாந்தஸ்தாநத்தில் அகணித ஜ்யோதிர்வர்ணத்தின் ஓரிதழின் மகார பீஜத்தின் யோகாங்கத்தின் பஶ்சிமமண்டபத்தில் நிரஞ்ஜநலிங்கம் நிரந்த நிராமய மாயிருக்கும். என்று, இச்செயுட்களைக் கவனிக்க :—

## பிரபுலிங்கலீலை.

அங்க லிங்க மயிக்க மிதுவென
மங்க லந்தரு மாமறை யின்முடித்
தங்கு றுந்தத் துவமசி தன்பொருள்
பங்க மின்றிப் பகர்பவ ரோர்சிலர்.

பாசமேது பசு வெனப் பட்டதே
தீசன் யார்பதி யெவ்வகை யாருயிர்க்
காசுதீர வருளு மருளுடைத்
தேசிகா வெனத் தேர்பவ ரோர்சிலர்.

புறந்தி னஞ்செயும் பூசையி னன்றெனச்
சிறந்த கஞ்செய் தியான மருவிமெய்
மறந்தி ருந்த மனஞ்சிவ லிங்கமுற்
றிறந்தி டுந்திற மெய்தின ரோர்சிலர்.

முதனிலை முதலா மூவிரு நிலையின் மூலமா முதலவா தார
விதழவிழ் கமலப் பொகுட்டினு ணின்ற விலிங்கமோ ராறென நின்று
நுதன்மிசை யிலகு நிட்களம் போல நுவன்ற வேழாநிலை யாகு
மதன்மிசை யமல னல்லம தேவ னமர்ந்தன னமரரும் வியப்ப.

உடம்பொடு பொறிநாற் கரணமற் றுயிரென் றுரைத்திடப் படுமு பாதிகளைக்
கடந்துள நிலையிற் சோதியா யிலங்கக் கண்டிடு துரியனைப் போல
நெடுந்தவி சமைய வமைத்த செம்மணிப்பொன் னிலைகளோ ரேழையுங் கடவா
விடந்தனி விசும்பென் றல்லம னிருப்ப விருந்தவர் யாவருங் கண்டார்.

இந்தியம் விடயங் கரணமெய் யென்னு மியாவையுங் காண்கில னெங்கு
மந்தர வணைமே லிவர்ந்திருந் தருளு மன்னனைக் கண்டவப் பொழுதே
முந்திய பரமா நந்தவா ரிதியுண் மூழ்கின னழுந்தின னம்மா
தந்திர மெவற்றுஞ் சிறந்தது சைவ தந்திர மெனு மருணந்தி.

மண்டல மவத்தை குணமபி மான மலமிவை யனைத்தையுங் கடந்துட்
கண்டிடும் வண்ணம் புறத்துநீ யெம்மைக் காணிய வஙமத்தவிச் செய்கை
வெண்டிரை சுருட்டுங் கருங்கட லுலகில் வேறுளர் செய்வதன் றென்று
தொண்டர்க டுதிக்கும் வசவனைத் துதித்தான் சுரரெலாந் துதிக்குமெம் பெருமான்.

உன்னரு ளுளதேற் கமலன் மாறெழிலு மொருசிறு துரும்புசெய் திற்கு
மென்னநல் வசவன் புகன்றுகை கூப்பி யிணைவிழி புனலுக வுருகித்
தன்னுணர் விலனாய் வசமற நிற்பத் தண்கதிர்ச் செம்மணி குயின்ற
பொன்னரி யணைமேல் விசும்புற விருந்தான் புல்லரு மல்லம தேவன்,

## நிரஞ்சநமாலை.

இல்லாள் புதல்வ ரனைதந்தை பொன்மண் ணிடைவிழைவு
செல்லா மருளு மயறீர்ந்து நின்கழல் சேர்ந்துனக்கே
யெல்லா முதவுநற் சித்தத் துறைகுவை யென்கையுள்ளாய்
நல்லார் புகழ்தரு மாசார லிங்கமென் ணுமமுற்றே.

பழியாம் பிறர்தம் பொருண்மனை வேட்கை பரதெய்வமோ
டொழியா வருடரு மட்டாவரண முவந்து கொண்டே
யழியா துயருநற் புத்தியெனுங்கை யமர்வை கண்டாய்
மொழியா வருங்குரு லிங்கமென் றேயென் கைமுன்னவனே.

விடயங் களினன்ணி யானென தென்னு மிகையொருவி
யடையும் புலனினக் காக்குந் தவிரகங் காரப்பெய
ருடையங் கரமிசை நற்சிவ லிங்கமென் றுற்றனைகாண்
புடையம் பிகையொ டமர்வாயெ னங்கைப் புராந்தகனே.

நில்லா தியங்கும் வளியொடு கூடி நிலையழிந்தே
புல்லா விடயத் தலமர னீங்குபு பொய்யினெறி
செல்லா தொளிர்நன் மனத்தே யிருத்தியென் செங்கையுள்ளாய்
கல்லா ரறிவருஞ் சங்கம நாமங் கடைப்பிடித்தே.

உடம்பு சதிபதி தானய் விடயங்க ளுண்டுழலா
தடங்கு சதியொரு தானுகி நீபதி யாகவுனைத்
தொடர்ந்து நுகருநன் ஞானுக் கரத்திடைத் தோன்றுவைமால்
கடந்து வரு பிரசாதமென் றேயென்கைக் கண்ணுதலே.

யானு ரடிமை சிவனே யிறையென் றிருப்பதுபோய்
நீநா னெனப்படும் பேத மிலாமை நெறியுதவு
மானு துயர்ந்தசற் பாவத்து மாலிங்க மாகிநின்றாய்
வானு டரியவ னேகர பீடத்து மாணிக்கமே.

## சகசநிட்டை.

சமரசம் பதிந்தகாலைத் தலமயிக் கியத்தடைந்திங்
கமரங்க மானவர்ன்மா வந்தச்சிற் சத்தியாகி
விமலமா லிங்கந்தன்னை விளங்குநெஞ்சினிற் றரித்து
நிமலமாம் பரமாநந்த நிஜதிருத் தியிற்களிக்கும்.

ஆனந்தம் பதிந்தகாலை யச்சர ணத்தடைந்து
வானந்தத் தங்கமாகு மகபரா சத்தியாகித்
தானந்தப் பிரசாதத்தைத் தரித்துச்சோத் திரத்திலென்றும்
ஊனந்த மில்லாவின்ப வோசையிற் களிக்குமென்றும்.

அனுபவம் பதிந்தகாலை யடைந்துநற் பிராணலிங்கத்
தெனுமங்க வாயுநின்றங் கெழிலாதி சத்தியாகி
உனுஞ்சர லிங்கந்தன்னை யொன்றுந்தொக் கினிற்றரித்துப்
பனுமந்தப் பரமாநந்த பரிசத்திற் களிக்குமென்றும்.

அவதானம் பதிந்தகாலே யடைந்தர்தப் பிரசாதத்தை
இவனுன தேயுவங்க மிச்சைநற் சத்தியாகி
நவமான சிவலிங்கத்தை நயனமற்றதிற் றரித்திங்
குவமான மில்லாவின்ப வுருவினிற் களிக்குமென்றும்.

நயிட்டியம் பதிந்த காலேநன்மயே சுரத்தடைந்து
சயித்தியசலமா மங்கந்தகு ஞான சத்தியாகி
வியப்புறும் குருலிங்கத்தை மேவுநா வினிற்றரித்திங்
குயப்பெறு பரமாநந்த வுருசியிற் களிக்குமென்றும்.

சற்பத்தி பதிந்தகாலேத் தரும்பத்தத் தலமடைந்து
முற்பகர் தரையாமங்க மொய்யதாங் கிரியையாகித்
தற்பராசார லிங்கந்தரித்து நாசியினி லந்தச்
சிற்பராநந்த கந்தந் தேர்ந்ததிற களிக்குமென்றும்.

ஒருபத்தி தானே யாறுமொரு தலந்தானேயாறுய்
ஒருவங்கந் தானேயாறு யொருசத்தி தானேயாறுய்
ஒருலிங்கந் தானேயாறு யொருமுகந் தானேயாறுய்
ஒருவின்பந் தானேயாறு யொன்றதாய்க் களிக்குமென்றும்.

அநாதியிற் சிவமேலிங்க மபினேயே யங்கமாகும்
அநாதியிவ் வபினேயே யிவ்வங்கம தாயிற்றென்றல்
அநாதியச் சிவமேயந்த வங்கத்திற் புறம்புந்தோன்றும்
அநாதியக் குருவத்தீக்கைக் கருத்தமு மிவையேயாகும். (க)

பத்த னேமுத லயிக்கனீ ருகவே பகர்ந்த
வத்த லங்களின் றிறமுரைத் தருளினை யைய
சத்த தென்றுரை செயுமிலிங் கத்தலந் தானியா
தெத்தி றங்களி னுரைத்திடப் படுமஃ தியம்பாய்.

(ப - ரை.) பத்தன் முதல் அயிக்கன் ஈறு ஆக பகர்ந்த—, அ தலங்களின் திறம்—, உரைத்து அருளினை—, ஐய - ஐயனே, சத்து என்று உரை செய்யும்—, இலிங்கத்தலம் யாது—, அஃது எ திறங்களின் உரைத்திடப்படும்—, இயம்பாய்—, எ - று.

(வி - ரை.) பகர்ந்த-சொன்ன. திறம் - இலக்கணம். திறங்களின் - இலக்கணங்களால். இயம்பல் - சொல்லல். (உ)

தொலேந்த பந்தபத் தாதியா மறுதலந் தொடர்ந்த
விலங்கு மொண்குரு முதன்ஞான சூனிய மீறுய்ப்
பலந்த ருந்தல மேழ்தலே யிட்டவைம் பதுவு
நலந்த ரும்பொறை முனியினி நவின்றிடப் படுமால்.

(ப - ரை.) தொலேந்த பந்தம் - தொலேந்த பந்தத்தையுடைய, பத்தாதி ஆம் - பத்தன் முதலாகிய, அறுதலம் தொடர்ந்த—, இலங்கும் - விளங்குகிற, ஒள் - ஒள்ளிய, குரு முதல் ஞானசூனியம் ஈறு ஆய் - குரு முதல் ஞானசூனியம் இறுதியாக, பலம் தரும் - பயனைத்தருகிற, தலம் - தலங்கள், ஏழ் தலேயிட்ட ஐம்பதுவும் - ஐம்பத்தேழும், இனி நவின்றிடப்படும்-இனிச் சொல்லப்படும், நலம் தரும்-நன்மையைத் தருகிற, பொறை-(பொதிய) மலேயில் வாழ்கின்ற, முனி - அகத்திய முனிவனே, எ - று.

(வி - ரை.) தொலைந்த பந்தம் என்றது பந்தந்தொலைந்த என்றபடி. தொடர்ந்த-தழுவிய. நவிலல்-சொல்லல். பொறை-மலை (அது இங்கு அகத்தியர் வாழ்கின்ற பொதிய மலையை யுணர்த்திற்று). (௩)

முன்ன ரொன்பதிங் குளபத்தத் தலந்தொடர் முறையா
லன்ன முன்றிகழ் திட்சைபின் சிட்சைஞா னத்தாற்
பன்னு றுங்குரு கிரியையொண் பாவஞா னத்தான்
மன்னி லிங்கநற் றலஞ்சுய சரபரம் * வகுப்பாம்.

(ப - ரை.) முன்னர் - முன்னே, பத்தத்தலம் தொடர் முறையால்—, இங்கு ஒன்பது உள—, அன்ன - அவை, முன் - முன்னே, திகழ் - விளங்குகிற, தீக்ஷை—, பின்-பின்னே, சிக்ஷை—, ஞானத்தால்—, பன் உறும்-சொல்லப்பட்ட, குரு—, கிரியை—, ஒள்-ஒள்ளிய, பாவம்—, ஞானத்தால்—, மன்-நிலைத்த, நல இலிங்கத்தலம்—, சுய சர பரம் (என்பவற்றை)—, வகுப்பாம் - சொல்லுவோம், எ - று.

(வி - ரை.) தீக்ஷை குருத்தலம் - தீக்ஷாகுருஸ்தலம், சிக்ஷை குருத்தலம் - சிக்ஷாகுருஸ்தலம், ஞானத்தால் பன்னுறும் குருத்தலம் - (ப்ரஜ்) ஞானகுருத்தலம், கிரியை இலிங்கத்தலம்-கிரியாலிங்கத்தலம், ஒள்பாவலிங்கத்தலம்-பாவலிங்கத்தலம், ஞானத்தால் மன்னிலிங்கத்தலம் - ஞானலிங்கத்தலம், சுயம் - சுயத்தலம், சரம் - சரத்தலம், பரம்-பரத்தலம். (௪)

---

உ

ஓம் அநீஸ்வராய நம:

## நாற்பத்தைந்தாவது

## (க) தீக்ஷாகுருஸ்தலம்.



[அதாவது - எதனால் உத்க்ருஷ்டமான ஜ்ஞாநம் கொடுக்கப்படுகிறதோ, மலத்ரயாதி பாசங்கள் க்ஷயமடையப்படுகிறதோ, அதே தீக்ஷை எனப்படும்; இவ்விதமான தீக்ஷையைச் செய்பவனே தீக்ஷாகுரு என்பது.]

கலிநிலைத்துறை.

யாதி னாற்பர ஞானமீந் திடப்படு மிங்ஙன
மேது பாசபந் தநங்கெடுத் திடப்படு மதுதான்
றீதில் திட்சையென் றுரைத்திடப் படுமிது செய்யு
நீதி யொன்குரு மிக்கதிட் சாகுரு நிகழ்த்தின்.

---

* ஆசாரலிங்க ஷட் பக்தர்கள்:—ஆசாரலிங்கமோஹி, ஆசாரலிங்கபக்தன், ஆசாரலிங்கபூஜகன், ஆசாரலிங்கவீரன், ஆசாரலிங்கப்ரஸாதி, ஆசாரலிங்கப்ராணி என அறுவகைப்படுவார்கள். இவர்களில், ஆசாரஹீனரான ஸ்த்ரீ புத்ரர்களை விட்டு நிர்மோஹியாயிருப்பவனே ஆசாரலிங்கமோஹி, சிவாசாரத்திற்கு விருத்தமான பூர்வீகர்களின் நடத்தைகளை விட்டிருப்பவனே ஆசாரலிங்கபக்தன், அந்யதேவதாபஜனையை யொழித்து லிங்கார்ச்சநாதத்பரனே ஆசாரலிங்கபூஜகன், கைப்பற்றிய ஆசாரத்தை ப்ராணத்யாகம் வரினும் விடாதவனே ஆசாரலிங்கவீரன், பாசபாசயாதி ஸங்கல்ப ரஹிதனே ஆசாரலிங்கப்ரஸாதி, சிவமாஹேஸ்வர நிந்தைகளைச் சொல்லாமல் போற்றினவனே ஆசாரலிங்கப்ராணி.

த்ரிவிதாசாரலிங்கம்:— ஸதாசாரம் நியதாசாரம் கணாசாரம் என மூவகைப்படும். இவைகளில், யாதாமொரு தன் ஸன்மார்க்கத்தினால் ஸகல சரணர்களுக்குச் சந்தோஷத்தை யுண்டாக்கச் செய்தலே ஸதாசாரமாம், பக்தியினால் தான் கைப்பற்றிய வ்ரதத்தை ப்ராணாந்தம் வரையிலும் நடத்துதலே நியதாசாரமாம், சிவமாஹேஸ்வரர்களை நிந்திப்பவர்களை சிக்ஷித்தலே கணாசாரமாம்.

(ப - ரை.) யாதினால்-எதனால், பரஞானம் ஈந்திடப்படும்—, இங்ஙன்-இவ்விடத்தில், ஓது - சொல்லப்பட்ட, பாசபந்தம் கெடுத்திடப்படும்—, அது தான் - அதுவே, தீது இல் - குற்றமற்ற, தீக்ஷை என்று உரைத்திடப்படும்—, இது செய்யும் நீதி - இதனைச் செய்யும் நீதியையுடைய, ஒள் குரு - சற்குரு, நிகழ்த்தின் - சொல்லுமிடத்தில், மிக்க - மேலான, தீக்ஷாகுரு - தீக்ஷாகுருவாவன், எ - று.

(வி - ரை.) பரஞானம் - பரம (உத்தமமான) ஞானம். தீக்ஷாகுரு - தீக்ஷைசெய்யுங் குரு. சற்குரு - ஸதாசாரியன். (க)

கூற ருங்குண தீதமே குகாரமாம் ருகாரம்
வேறி லங்குரு பாதீத மென்குவர் மேலோர்
தேறி டுங்குண தீதமா மருவருள் செய்யு
மாற டைந்தவ னியாரவன் குருவென மதிப்பாய்.

(ப - ரை.) கூறு அரு - சொல்லுதற்கரிய, குகாரம்—, குணதீதமே ஆம்—, வேறு இலங்கு - அதனில் வேறாகி விளங்குகிற, ருகாரம்—, ரூபாதீதம் ஆம்—, என்குவர் மேலோர் - என்று சொல்லுவர் மேலோர், தேறிடும் - தெளிவாகிய, குணதீதம்—, அரு - ரூபாதீதம், ஆம் - உண்டாகிய, அருள் செய்யுமாறு அடைந்தவன் யார் - கிருபை செய்தற்பொருட்டு வந்தவன் யாரோ, அவன் - அவனே, குரு என மதிப்பாய்—, எ - று.

(வி - ரை.) குணதீதம் - குணம் கடந்தது. ரூபாதீதம் - ரூபம் கடந்தது. (உ)

சாத்தி ரப்பொருள் விளங்குற விரித்திடுந் தகையால்
வாய்த்த மிக்கவா சாரத்தின் வழிநிறுத் துதலாற்
சேர்த்த வச்செய றானுமா சரித்திடுஞ் செயலா
லேத்து றப்படு மென்றுமா சாரிய னென்றே.

(ப - ரை.) சாத்திரப் பொருள் விளங்குற—, விரித்திடும் தகையால் - (சம்பாதித்து) பரவச்செய்யும் பெருமையாலும், வாய்த்த - பொருந்திய, மிக்க ஆசாரத்தின் வழி நிறுத்துதலால் - மேலான வொழுக்க நெறியில் நிறுத்துதலாலும், சேர்த்த - சிறந்த, அ செயல் தானும் ஆசரித்தலால் - அந்தச் செயலைத் தானும் ஆசரித்தலாலும், என்றும்—, ஆசாரியன் என்று ஏத்துறப்படும் - ஆசாரியனென்று துதிக்கப்படுவன், எ - று.

(வி - ரை.) சாத்திரப்பொருள் - ஶாஸ்த்ரார்த்தம் (வீரசைவாகமப்பொருள்). சேர்த்த-பெயரடியாகப் பிறந்த பெயரெச்சம், சேர்த்த செயல் எனவியையும். ஆசரித்தல்-அனுஷ்டித்தல். விரித்திடும் தகையால் - விரித்துச் சொல்லும் பெருமையால் எனினுமாம். (ங)

அத்து வாமுடி யோகமுற் றருஞ்சிவ மாகு
மெய்த்த தேசிக னேபவக் கடற்கரை விடுவோ
னெய்த்தி டாவறி வாயுல கிலங்குறு மெவனா
லத்த யாகுரு வுலகெலாம் விளக்குறு பவனாம்.

(ப - ரை.) அத்துவா முடி - (ஆறு) அத்துவாவின் முடியாகிய, யோகம் உற்று - யோகத்தையடைந்து, அரும் சிவமாகும்—, மெய்த்த - உண்மையாகிய, தேசிகனே—, பவக்கடல் கரை - பிறவிக்கடற்கரையில், விடுவோன்—, எய்த்திடா - இளைக்காத, அறிவு ஆய்—, எவனால் உலகு இலங்குறும் - எவனால் உலகம் விளங்குமோ, அ - அந்த, தயாகுரு—, உலகு எல்லாம் விளக்குறுபவன் ஆம் - உலகம் யாவையும் விளங்கச் செய்பவனாவான், எ - று.

(வி-ரை.) அத்துவா-மார்க்கம். முடி-அதீதம். தேசிகன்-ஆசாரியன். பவக்கடல்-மாயாசமுத்திரம். பிறவிக்கடற்கரை - முக்தி. பிறவிக்கடற்கரையில் விடுவோன் - விஶ்வகுரு.

தீட்சாகுருஸ்தலம்-முற்றும்.

ஓம் ஸர்வஜ்ஞாய நமஃ.

## நாற்பத்தாறுவது

## (உ.) சிக்ஷாகுருஸ்தலம்.

[அதாவது - மேற்கூறிய தீக்ஷாகுருவே, தான் போதகனாகவும் சிஷனைப் போத்ய னாகவும் அறிந்து சிஷனுக்கு ப்ரஸ்நோத்தர மூலமாய் உபதேசம் செய்கையில் ஜ்ஞாந முகத்துடன் ஸதாசாரங்களை விதிப்பதனால் சிக்ஷாகுரு என்பது.]

கலிநிலைத்துறை.

போத கத்தின னாகியே தனையடை புதல்வர்க்
கேத மற்றிடு கடாவினுக் கெதிர்விடை யிசைப்பாற்
றீத கற்றுசிட் சாகுருப் பெயரினைச் செறியு
மோத லுற்றதீட் சாகுரு வேயென வுணர்வாய்.

(ப - ரை.) ஓதல் உற்ற - சொல்லப்பட்ட, தீக்ஷாகுருவே—, போதகத்தினன் ஆகி - போதிப்பவனாகி, தன்னை அடை - தன்னையடுத்த, புதல்வர்க்கு-சீடருக்கு, ஏதம் அற்றிடு - குற்றமற்ற, கடாவினுக்கு - வினாவுக்கு, எதிர்விடை—, இசைப்பால் - சொல்லுதலால், தீது அகற்று - தீமையை யொழிக்கிற, சிக்ஷாகுருப் பெயரினைச் செறியும் - சிக்ஷாகுரு வென்கிற பெயரைப் பொருந்துவன், என - என்று, உணர்வாய் - அறிவாயாக, எ - று.

(வி - ரை.) இசைப்பு - இசைத்தல் (சொல்லல்). (க)

போத கஞ்சிவ தந்திரம் போதகப் படுத
லோத ருஞ்சிவ ஞானமென் றுணர்வுற வுரைப்போன்
றீத கன்றசிட் சாகுருப் பவவிருள் சிதைக்கு
மேது விந்துவாம் வாசக னாரிய னென்பான்.

(ப - ரை.) போதகம் சிவதந்திரம் என்று—, போதகப்படுதல் ஓது அரு சிவ ஞானம் என்று—, உணர்வுற உரைப்போன் - அறிவுதிக்கும்படி சொல்வோன்—, தீது அகன்ற சிக்ஷாகுரு—, பவம் இருள் சிதைக்கும் - பிறவி யிருட்டைக் கெடுக்கிற, ஏது - காரணமாகிய, இந்து ஆம் வாசகன் - சந்திர கிரணம் போலுஞ் சொல்லையுடையவன், ஆரியன் என்பான் - ஆரியனென்று சொல்லப்படுவான், எ - று.

(வி - ரை.) போதகம் - அறிவைத்தருவது. போதகப்படுதல் - போதிக்கப்படுதல் (அறியவேண்டிய தத்துவம்.) உணர்வுற உரைப்போன் - போதகன். பிறவியிருட்டு - பிறவியாகிய அந்தகாரம் என விரியும். சிவதந்திரம் - சைவாகமம். இதனால் சிக்ஷாகுரு வினிலக்கணமும் ஆரியனிலக்கணமும் கூறப்பட்டன ; அதாவது எவரால் சிஷன் இதே யறியவேண்டிய தத்துவம் என்று நன்கு உபதேசிக்கப்பெறுகின்றானோ அவர் போதகர் என்றும் சிக்ஷாகுருவென்றும், எவருடைய மொழிகள் ஸம்ஸார இருளுக்கு ஶரத்கால சந்த்ர கிரணங்களாய் ப்ரவர்த்திக்கின்றனவோ அவர் ஆரியர் என்றும் சொல்லப்படுவர்.

உலகமுற்றிடு மாயையை யொழித்திட வற்றா
யிலகு மத்துவி தத்தினுக் கேதுவா யிருந்த
தலைமை யிற்பதி ஞானநல் குறுமவன் றானே
புலமை பெற்றுள வாரிய னென்பவன் புவியில்.

(ப - ரை.) உலகம் உற்றிடும் மாயையை—, ஒழித்திடவற்றாய் - ஒழிக்கவல்லதாய், இலகும்-விளங்குகிற, அத்துவிதத்தினுக்கு,—ஏது ஆய் இருந்த—, தலைமையின்-முதன்மையுள்ள, பதிஞானம் - சிவஞானத்தை, நல்குறும் - கிருபைசெய்கிற, அவன் தானே—, புவியில்—, புலமை பெற்று உள்ள ஆரியன் என்பவன் - புலமையுள்ள ஆரியனென்று சொல்லப்படுவோன், எ - று.

(வி - ரை.) புலமை - ஞானம். தானே யென்பதில் ஏகாரம் தேற்றம் (பிரிநிலையுமாம்.) (௩)

பேத மாகிய சகவிகற் பத்தொடு பிறங்கு
மாதி பூருவ பக்கமாக் கொண்டுமுற் றறிவாற்
றீதி லாதவோ ரத்துவி தஞ்செய்சித் தாந்த
மேதை யோடுள விக்குரு பரன்குண மிகுத்தோன்.

(ப - ரை.) பேதம் ஆகிய சகவிகற்பத்தொடு—, பிறங்கும் - விளங்குகின்ற, ஆதி - மூலமாகிய மாயையை, பூருவபக்கமாக்கொண்டு—, முற்றறிவால் - பூர்ண ஞானத்தால், தீது இல்லாத—, ஓர் - ஒப்பற்ற, அத்துவிதம் செய் - அத்துவிதஞ் செய்கிற, சித்தாந்த மேதையோடு - சித்தாந்த ஞானத்தோடு, உள்ள - இருக்கிற, இ - இந்த, குருபரன்-குருபரனே, குணமிகுத்தோன் - குணத்தில் மிக்கவன், எ - று.

(வி - ரை.) விகற்பம் - வேறுபாடு (பேதகற்பனை). பூருவபக்கம் - முற்பக்கம். (௪)

யாவன் வாய்மொழி யையமென் வனத்தினை யெறிய
வாவு மொண்பர சாமவன் குருசிகா மணியா
மேவு தன்மொழி யாடியில் விம்பமாய் விளங்கு
மேவின் முத்தியந் திருவுளன் பவக்கட லெடுப்பான்.

(ப - ரை.) யாவன் வாய்மொழி - எவனுடைய வாய்ச் சொல்லானது, ஐயம் என் - சந்தேகமென்கிற, வனத்தினை எறிய - காட்டை வெட்டுதற்கு, வாவும் - தாவுகிற, ஒள் - கூர்மையாகிய, பரசு ஆம் - கோடரியாகுமோ, அவன்—, குருசிகாமணி ஆம் - தேசிக சூடாமணியாவன், மேவும் - பொருந்திய, தன் மொழி - தன் வார்த்தையாகிய, ஆடியில் - (உபதேசக்) கண்ணாடியில் (தோன்றுகிற), விம்பமாய்-பிரதிவிம்பமாய், விளங்கும்—, ஏவு இல்-துன்பமில்லாத, முத்தி அம் திரு உளன்-அழகிய முத்திச் செல்வத்தை யுடையவன், பவக்கடல் - பிறவிக்கடலினின்றும், எடுப்பான்—, எ - று.

(வி - ரை.) சிகா, சூடா என்பன முடியென்னும் பொருள. களங்கமற்றதாகிய எவருடைய உபதேசமொழியாகிய கண்ணாடியில் மோக்ஷலக்ஷ்மி பிம்ப உருவமாய்க் காணப்படுகின்றதோ அந்தக் குரு பவதாரணம் செய்விக்கின்றவர் என்பதிதன் கருத்து. பவதாரணம் - ஸம்ஸாரார்ணவத்தைத் தாண்டச் செய்தல். (௫)

பரிந்து சீடர்த மகத்தினை ஞானதீ பத்தாற்
றிருந்த விங்கில குறுபவற் கொப்பிலை செப்பிற்
பொருந்து றும்பவப் பிணியினுக் கேகமாம் போத
மருந்து தந்தருள் குருபரன் வாய்க்குமோ மண்ணில்.

(ப - ரை.) பரிந்து - இரங்கி, சீடர்தம் - சீடருடைய, அகத்தினை-மனத்தினை, ஞானதீபத்தால்—, திருந்த - திருந்தும்படி, இங்கு - இவ்வுலகில், இலகுறுபவற்கு - விளக்குவோனுக்கு, செப்பின் - சொல்லுமிடத்தில், ஒப்பு இல்லை—, பொருந்துறும் - வருகிற, பவப்பிணியினுக்கு - பிறவி நோய்க்கு, ஏகம் ஆம் போதம் மருந்து - பரமாத்வைத ஞான

மாகிய (உத்தமமான) ஔஷதத்தை, தந்தருள்-தந்தருளுகிற, குருபரன்—, மண்ணில்—, வாய்க்குமோ - கிடைப்பனோ, எ - று.

(வி - ரை.) அகத்தினை-ஹ்ருதயகமலத்திலிருக்கும் சித்திரத்தை. அகம் - ஆகுபெயர். விளக்குவோன் - குரு. குருபரன் - குருஶ்ரேஷ்டன் (தேசிகன்). வாய்க்குமோ வென்னு மோகாரம் வினாவோ டெதிர்மறையுமாம். (௬)

சிக்ஷாகுருஸ்தலம் - முற்றும்.

---

உ

ஓம் பரமாத்மநே நம:

நாற்பத்தேழாவது

(௩.) ஞானகுருத்தலம்.



[அதாவது - ரஹஸ்யார்த்தங்களின் போதத்தைச் செய்து சிஷனது ஸந்தேஹத் தைப் போக்கும் இந்தச் சிக்ஷாகுருவே, ப்ரத்யக்ஷமானதும் ஜீவன்முக்தி தாயகமானது மான ஶிவஜ்ஞாநத்தை யுண்டுபண்ணுவதனால் ஞானகுரு என்பது.]

கலிநிலைத்துறை.

ஐய நீக்குப தேசஞ்செய் திவன்றிக ழறிவைச்
செய்யு முண்மையாற் பெயர்ஞான குருவெனச் செறியு
மைய லின்றியே வளரொளி மலிசிதம் பரத்தை
யுய்ய நல்குவோன் ஞானதே சிகனென வுரைப்பார்.

(ப - ரை.) ஐயம் - சந்தேகத்தை, நீக்கு - நீக்குகிற, உபதேசம் செய்து—, இவன். இந்தச் சீடனது, திகழ் - விளங்குகிற, அறிவை—, செய்யும் - உண்டாக்குகிற, உண்மை யால்—, ஞானகுரு என பெயர் செறியும் - ஞானாசாரிய னென்று பெயருண்டாகும், மையல் இன்றி - மயக்க மில்லாமல், வளர் ஒளி மலி - வளராநின்ற வொளி மிகுந்த, சிதம்பரத்தை—, உய்ய - உய்யும்படி, நல்குவோன் - கொடுப்பவன், ஞானதேசிகன் என உரைப்பார்—, எ - று.

(வி - ரை.) சிதம்பரம் - ஞானாகாயம் (அபரோக்ஷ ஸாக்ஷாத்கார ஜ்ஞாநம்). ஞான தேசிகன் - ஞானாசாரியன்.

"ப்ரபஞ்ச வேற்றுமை யில்லாததும், விகாரமில்லாததுமாகிய சிதாகாஶத்தை எவர் சித்த வ்ருத்திகளுக்கு முன்னரும், உதித்துள்ளபோதும், லயிக்கும்போதும், லயித்த பின்னரும், இவைகளைப் பார்த்துக்கொண்டு ஸாக்ஷிமாத்ர ரூபமாய் ஓர் போதமிருக்கின் றமையாலன்றோ வ்ருத்தி யுதித்ததும் ஒடுங்கியதும் அறியப்படுகின்றது. ஆதலால், ஸகல வ்ருத்திகளுக்கும் ஸாக்ஷியாய் ஓர் போதம் உளது, அதனையே ஆத்மாவென்றறி" என்ற யுக்திவாக்ய உபதேசங்களால் எவர் ஸாக்ஷாத்கரிக்கச் செய்கின்றாரோ, அவர் ஞானகுரு என்ப திதன் கருத்து. இதுகாறும் தீக்ஷாகுரு சிக்ஷாகுரு என இரண்டு விதமாய்க் குருவைக் கூறி, இங்கு ஞானகுரு என்று மூன்றாவது கூறியதனால் மூவகையாகிய குருபேதம் கூறப்பட்ட தென்றறிக. இம்மூவகைக் குருபேதம் உபநிஷத்துக்களில் ஶோதககுரு, போதககுரு, மோக்ஷகுரு என்று வேறு பெயரால் வழங்கப்பட்டுள்ளது; இவை முறையே மார்க்கம் காட்டுவோர், ஶாஸ்த்ரோபதேஶம் செய்வோர், பரதத்வோபதேஶம் செய் வோர் எனப்பொருள்படும். இதன் விரிவை ப்ரஹ்மவித்யோபநிஷத் முதலியவைகளில் காணலாம். இது பற்றியன்றோ பிரபுலிங்கலீலையிலும் "போதககுரு நம்முருட் புகக் கொடி கட்டனன்று" எனப் போதககுருவைக் குறிப்பித்துள்ளது. (௧)

தேய்ந்து தானலை மருமதி மறுவொடு செறியும்
வாய்ந்த ஞானமா மதிமறு வற்றது மருங்கிற்
சேர்ந்த வல்லிரு ளகற்றுவ தொளிமணித் தீப
மேய்ந்த ஞானநல் விளக்கிரு ளிரிப்பதெவ் விடத்தும்.

(ப - ரை.) அலமரும் - சுழலாநின்ற, மதி - சந்திரன், தேய்ந்து - கலை குறைந்து, மறுவொடு செறியும் - களங்கத்தோடிருக்கும், வாய்ந்த - கிடைத்த, ஞானம் ஆம் மதி - ஞானமாகிய பூர்ண சந்திரன், மறு அற்றது - களங்க மற்றது, ஒளி மணி தீபம் - ஒளியை யுடைய ரத்ந தீபம், மருங்கில் சேர்ந்த வல் இருள் அகற்றுவது—, ஏய்ந்த - பொருந்திய, ஞான நல் விளக்கு—, எவ்விடத்தும்—, இருள் இரிப்பது - (அஞ்ஞான) இருளை யோட்டுவது, எ-று.

(வி - ரை.) சேர்ந்த வல்லிருள் - நெருங்கின வலிய இருள். எவ்விடத்தும் - சமீபம் தூரம் என்றில்லாமல் எங்கும் வியாபகமாகிய. இரித்தல் - ஓட்டல். தேய்ந்து என்றதனால் கலை குறைந்தது மல்லாமல் வளர்தலும் பெறப்பட்டது. அலமரல்-விகாரமுறல். களங்கம் என்பதனால் விகாரமுடைமையையும் குறிப்பித்தது. மருங்கு - பக்கம். (உ)

அனைத்தி னுக்குமோர் காரண மாகிய வறிவை
நுனித்து ரைத்தருள் குரவனே சிவனரு ணோக்காம்
பனிக்க திர்க்குஞா னக்கடல் பொங்குறப் பவமாந்
தனித்தி ருட்டற வருகுரு ஞானபா ரகனால்.

(ப - ரை.) அனைத்தினுக்கும் - எல்லாவற்றுக்கும், ஓர் - ஒப்பற்ற, காரணமாகிய அறிவை—, நுனித்து உரைத்தருள் - நுட்பமா யாராய்ந் துரைத்தருள்கிற, குரவனே சிவன்—, அருள் நோக்கு ஆம் - (அவனது) கிருபா நோக்கமாகிய, பனிக்கதிர்க்கு - சந்திரனுக்கு, ஞானக்கடல் பொங்குற—, பவம் ஆம் - பிறவியாகிய, தனித்த - ஒப்பற்ற, இருட்டு அற - இருளறும்படி, வரு - வந்த, குரு - தேசிகன், ஞானபாரகன் - ஞானக்கரை யடைந்தவன், எ - று.

(வி - ரை.) பனிக்கதிர் - குளிர்ச்சியாகிய கிரணங்களையுடையவன் (சந்திரன்). நோக்கம் - பார்வை. அனைத்தினுக்கும் - சகல புருஷார்த்தங்களுக்கும். (ங)

பொங்கு செங்கதிர்ப் புறத்துநின் றிணைவிழி புதைக்குங்
கங்குல் வல்லிரு ளொன்றையே போக்குறுங் கருதி
னிங்கு நல்லருண் ஞானதே சிகனெனு மிரவி
தங்கு முள்ளொடு புறத்துறு மிருளெலாந் தள்ளும்.

(ப - ரை.) பொங்கு - விளங்குகிற, செங்கதிர் - சூரியன், புறத்து நின்று—, இணை விழி புதைக்கும் - இரு கண்களையும் மறைக்கிற, கங்குல் - இராக்காலத்து, வல் இருள் ஒன்றையே போக்குறும்—, கருதின் - யோசிக்கு மிடத்தில், இங்கு - இவ்வுலகில், நல் அருள் ஞானதேசிகன் என்னும் இரவி—, தங்கும் - தங்கிய, உள்ளொடு - உள்ளிருளோடு, புறத்து உறும் இருள் எல்லாம்—, தள்ளும் - ஒழிக்கும், எ - று.

(வி - ரை.) செங்கதிர் - செம்மையாகிய கிரணங்களை யுடையவன் (சூரியன்). ஒன்றையே யென்னுமேகாரம் தேற்றம். இரவி-சூரியன். சூரியன் புறவிருளொன்றனையே யொழிப்பான், ஞானாசாரியனாகிய சூரியன் உட்புற விருளையொருங்கே ஒழிப்பானென் பதினால் கூறப்பட்டது. (ச)

கடைக்க ணோக்கினுற் றியானாதி கற்பனை யின்றி
யடுக்கு மோர்சிவ வேதக மாக்குறு மறிவை
விடுக்கு மாலுடை யுயர்சிவன் முத்தனாய் மேவக்
கொடுக்கு மாரியன் ஞானசா கரனெனக் குறிப்பாய்.

(ப - ரை.) ஆரியன் - ஆசாரியன், கடைக்கண் நோக்கினால் - கடாக்ஷத்தினாலேயே, தியானாதி கற்பனை இன்றி—, அறிவை—, அடுக்கும் - அடுத்த, ஓர் - ஒப்பற்ற, சிவ வேதகம் ஆக்குறும்—, விடுக்கும்-விட்ட, மால் உடை - ஆசையையுடைய, உயர் - உயர்ந்த, சிவன் முத்தனாய் மேவக் கொடுக்கும்—, (ஆதலால்) ஞான சாகரன் என - ஞானக் கடலாவனென்று, குறிப்பாய் - நினைவாயாக, எ - று.

(வி-ரை.) வேதகம் - வேதிக்கப்பட்டது (பொன்). ஈண்டு, இச்செய்யுளைக் கவனிக்க:—

பிரபுலிங்கலீலை.

*இவ்வா றருளாற் றனையுணர்த்தி யிருந்த ஞான வியல்வீர*
*சைவா சிரிய னல்லமணித் தரையிற் பருவந் தலைசிறப்ப*
*வுய்வா னினைந்து தனைநோக்கி யுற்ற வடியார்க் குபதேசஞ்*
*செய்வா னியன்ற வடிவொடுசென் றருள்செய் செயல்செய் துலாவினான்.* (௫)

ஞானகுருத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் ஸோமஸூர்யாக்நிலோசநாய நம:

நாற்பத்தேட்டாவது

(௪.) கிரியாலிங்கத்தலம்.

[அதாவது - ஜ்ஞாநகுருவினா லுண்டான ஜ்ஞாநத்தினால் ஆஸக்தனாய்ச் செய்யும் எல்லா ஸத்க்ரியைகளும் எந்த வஸ்துவினிடத்தில் லயமடைகிறதோ, அந்த வஸ்துவாகிய இஷ்டலிங்கமே கிரியாலிங்கம் என்பது.]

கலிநிலைத்துறை.

ஞான தேசிகன் ஞானயோ கங்கொடு நண்ணி
மான மேவிய கிரியையெவ் விடத்தினின் மாயு
மான விங்கது தான்கிரி யாலிங்க மாமென்
றூன மின்றிய நூன்முறை யுணர்ந்தவ ருரைப்பார்.

(ப - ரை.) ஞானதேசிகன்—, ஞானயோகம் கொடு நண்ணி—, மானம் மேவிய - பெருமை பொருந்திய, கிரியை—, எவ்விடத்தினில் மாயும் - எவ்விடத்திற் கெடுமோ, ஆன - ஆகிய, இங்கு அது தான் - இவ்விடத்து அதுவே, கிரியாலிங்கம் ஆம் என்று—, ஊனம் இன்றிய - குற்ற மில்லாத, நூல் முறை உணர்ந்தவர் உரைப்பார்—, எ - று.

(வி - ரை.) கிரியை - தொழில். ஊனமின்றிய நூல் என்றது சிவாகமங்களை. நூல் - ஆகுபெயர். ஞானயோகம் - விஜ்ஞாந ஸம்பந்தம். (௧)

அறிவு மேனியா யுண்மையா யானந்த வடிவாய்ப்
பொறியு றுவொரு பிரமமே கிரியையின் பொருட்டுக்
குறியு ருவரு மிலிங்கமென் றுதலாற் கொண்ட
மறிவி லாவிலிங் கார்ச்சனை பலமெலாம் வழங்கும்.

(ப - ரை.) அறிவு மேனியாய் - அறிவுருவாகி, உண்மையாய்—, ஆநந்த வடிவாய்—, பொறி உறு - பொறிகளணுகாத, ஒரு - ஒப்பற்ற, பிரமமே—, கிரியையின் பொருட்டு—, இலிங்கம் என்று—, குறி உறு வரும் - குறியடைந்துவரும்—, ஆதலால்—, கொண்ட—, மறிவு இலா - தடையில்லாத, இலிங்க அர்ச்சனை —, பலம் எல்லாம் வழங்கும் - எல்லாப் பயன்களையும் தரும், எ. - று.

(வி - ரை.) அறிவு - சித்து. உண்மை - சத்து. ஆநந்தம் - இன்பம். பொறி - ஐம் பொறிகள் (அவை மெய் வாய் கண் மூக்கு செவி யென்பன.) (உ)

யாக மாதிய கிரியைகள் யாவையும் விடுத்து
யோக மாதவர் சித்தர்கள் யாவரு முவந்தே
யேக மாகிய விலிங்கபூ சனையையே யிசைவ
ராகை யாலிலிங் கஞ்சிறந் தொப்பிலா தாகும்.

(ப - ரை.) யாகம் ஆதிய கிரியைகள் யாவையும் விடுத்து—, யோகமாதவர் சித்தர் கள் யாவரும்—, உவந்து-விரும்பி, ஏகம் ஆகிய - அத்விதீயமாகிய, இலிங்கபூசனையையே இசைவர்—, ஆகையால்—, இலிங்கம் சிறந்து ஒப்பு இல்லாததாகும்—, எ - று.

(வி - ரை.) யோகமாதவர் - யோகிகள். (௩)

அரிய மாதவ மியாகங்க ளாற்பய னென்கொல்
பெருகு மாதர விலிங்கபூ சனையினிற் பெற்றான்
கிரியை யாவையுந் தரும்பல மவனரோ கிடைத்தான்
றெரியி லோவவற் கரிதென வில்லையோர் சிறிதும்.

(ப - ரை.) அரிய மாதவம் யாகங்களால்—, பயன் என் கொல் - பயன் யாதோ, இலிங்க பூசனையினில்—, பெருகும் ஆதரவு பெற்றான் - மிக்க அன்பு பூண்டவன், கிரியை யாவையும் தரும் பலம் அவன் கிடைத்தான்-எல்லாக் கிரியைகளும் தருகிற பயனை அவன் அடைந்தான், தெரியிலோ - கருதுமிடத்திலோ, அவற்கு-அவனுக்கு, ஓர் சிறிதும்—, அரிது எனல் இல்லை—, எ - று.

(வி - ரை.) கொல் - ஐயத்தோடெதிர்மறை. யாகம் - அக்நிஹோத்ர முதலிய வேள்விகள். (௪)

வேதன் மான்முத லாகிய விண்ணவர் குழாமுந்
தீதி லாதுயர் சித்தர்தங் கணங்களுஞ் சிறந்த
போத மாகிய விலிங்கபூ சனையினைப் புரிந்து
பேத மாயதம் பதமொடு தந்தொழில் பெற்றார்.

(ப - ரை.) வேதன்—, மால்—, முதலாகிய—, விண்ணவர் குழாமும் - தேவர் கூட்டமும், தீது இல்லாது உயர்-தீங்கில்லாமலுயர்ந்த, சித்தர் கணங்களும்—, சிறந்த—, போதம் ஆகிய இலிங்க பூசனையினைப் புரிந்து—, பேதம் ஆய - வெவ்வேறாகிய, தம் பத மொடு - தம் பதவிகளுடன், தம் தொழில் பெற்றார்—, எ - று.

(வி - ரை.) கணங்கள் - கூட்டங்கள். போதம் - ஞானம். தம் தொழில் - லோக வ்யாபாரங்களுக்கு அதிகாரத்தொழில்.

கிரியாலிங்கத்தலம் - முற்றும்.

---

௨

ஓம் ஶ்ரீவிஷே நம:

நாற்பத்தோன்பதாவது

## (ரு) பாவலிங்கத்தலம். பாவம் = நினைவு

[அதாவது - க்ரியாலிங்கம் க்ரியைகளுக்கு எவ்வாறு லயஸ்தானமோ, அவ்வாறு ப்ராணலிங்கம் மநோலயத்திற்கு ஸ்தாநமாயுள்ளதே பாவலிங்கம் என்பது.]

கலிநிலைத்துறை.

கிரியை யெவ்வண மிலயமுற் றிட்டது கிளத்தி
னரிய பாவமு மவ்வகை யவ்விடத் தடங்கு
முரிய தாமது வேபாவ லிங்கமென் றுரைப்பர்
தெரிய நூல்பல கற்றுணர் வுடையதே சிகரே.

(ப - ரை.) கிளத்தின் - சொல்லுமிடத்தில், கிரியை - கிரியையானது, எ வண்ணம் இலயம் உற்றிட்டது - எவ்வாறு லயமடைந்ததோ, அரிய பாவமும் அ வகை அவ் விடத்து அடங்கும்—, உரியது ஆம் அதுவே பாவலிங்கம் என்று உரைப்பர்—, (யாரெனின்) பலநூல் தெரியக் கற்று உணர்வு உடைய தேசிகர்—, எ - று.

(வி - ரை.) கிளத்தல் - சொல்லல். லயம் - ஒடுக்கம். பாவம் - பாவனை. தேசிகர் - ஆசார்யர். (க)

பகவ னாகிய பரசிவன் பாவமுற் றிடுவன்
திகழ்ப ராபரற் கனையதாற் செய்திடுஞ் செயலெ
னிகரி லாதவவ் விறையவ னித்தபூ ரணனாந்
தகையு ளானென வுள்கவென் றருமறை சாற்றும்.

(ப - ரை.) திகழ் - விளங்குகிற, பராபரற்கு - பராபரனுக்கு, அனையதால் - அத் தன்மையால், செய்திடும் செயல் என் - செய்கிற செயலால் பயன் யாது, பகவனாகிய பரசிவன்—, பாவம் உற்றிடுவன்—, நிகர் இல்லாத அ இறையவன்—, நித்த பூரணன் ஆம் தகை உள்ளான் என—, உள்க என்று—, அரு மறை சாற்றும்—, எ-று.

(வி - ரை.) அனையது - க்ரியாபூஜை. நித்தம் - ஶாஸ்வதம். பூரணன் - நிறைந்திருப் பவன். தகை - பெருமை. உள்கல் - நினைத்தல். சாற்றல்-சொல்லல். பாவம் உற்றிடுவன்- பாவநா ஸ்வரூபனா யிருப்பன் (நிர்மலமாகிய அந்தக்கரண விர்த்தியால் அறியப்படுவன் எனினுமாம்). (உ)

கண்டி தப்படா வறிவுரு வாகிய கடவுள்
கொண்டு பத்தர்செய் துறுமுப சாரமே கொள்வான்
விண்ட வத்துயர்ப் பாவத்தின் விளங்குறு மென்று
பண்டு கற்றறி நல்லிசைப் புலவர்தாம் பகர்வார்.

(ப - ரை.) கண்டிதப்படா அறிவுருவாகிய கடவுள்—, கொண்டு பத்தர் செய்து உறும் உபசாரமே கொள்வான்—, விண் தவத்து-மேலான தவத்தினால், உயர் பாவத்தின்- உயர்ந்த பாவத்தில், விளங்குறும் என்று—, பண்டு - பழமையாக, கற்று அறி - கற்ற றிந்த, நல் இசை - நல்ல புகழையுடைய, புலவர் பகர்வார்—, எ - று.

(வி - ரை.) கண்டிதம் - வரையறை. கொள்வான் என்பதில் வான் எதிர்கால வினையெச்ச விகுதி (கொள்ளும்பொருட்டு). பாவம் - பாவனை. புலவர் - அறிவுடையோர். பகர்தல் - சொல்லுதல். அகண்ட பரமாநந்த ஜ்ஞாந வடிவமாகிய பரசிவமானது, பக்தர் களுக்குச்செய்யும் உபசாரத்தால் சுத்தமாகிய சித்த விர்த்தியால் ப்ரஸந்நமாகின்றது என்பதிதன் கருத்து. (௩)

மண்ணி லஞ்சிலை முதலிய கொண்டுதோம் வருத்துப்
பண்ணு றுஞ்செய் லிங்கமெங் கதினிகழ் பாவ
நண்ணி லிங்கமே சிறந்தது ஞானகா ரணமா
யெண்ணு றுங்குறை யின்றியே யமைவுறு மியல்பால்.

(ப - ரை.) மண்ணில் - மண்ணுலகில், அம் - அழகிய, சிலை முதலிய கொண்டு வருத்து—, பண்ணுறும் செயல் இலிங்கம்—, எங்கு - எங்குளதோ, அதின் - அதனினும், நிகழ் பாவம்நண் இலிங்கமே சிறந்தது—, ஞானகாரணம் ஆய் - ஞானகரணமாகி, எண்ணுறும் - எண்ணப்படுகிற, குறைவு இன்றியே அமைவு உறும் இயல்பால்—, எ-று.

(வி - ரை.) சிலை-கல். அதின் என்பதில் இன் என்னும் ஐந்தாவது உறழ் பொருளில் வந்தது. இயல்பு - இயற்கை. நிகழ் பாவம் நண்ணி லிங்கம் - சிவஸ்வரூபமான லிங்கம். மண் கல் இவைகளாலாகிய லிங்கத்தைக்காட்டிலும் சிவலிங்கமானது எந்தக் குற்றமிராத தாலும் ஜ்ஞாநமார்க்கத்தில் ப்ரவேஶிக்கச் செய்கின்றமையாலும் ஶ்ரேஷ்டமாயுள்ளது என்பதிதன் கருத்து. (௪)

புறத்தி லிங்கம்விட் டுளத்தினிற் போதலிங் கத்தை
மறப்ப றும்படி வைத்துளிப் பாவமென் மலராற்
சிறப்பு றுஞ்சிவ பூசனை யன்பொடு செய்யு
மறப்பெ ருந்தகை தனைப்பாவ லிங்கியென் றறிவாய்.

(ப - ரை.) புறத்து இலிங்கம் விட்டு—, உள்ளத்தினில்—, போதலிங்கத்தை—, மறப்பு அறும்படி வைத்து உள்ளி—, பாவம் என் மலரால்—, சிறப்புறும் சிவபூசனை—, அன்பொடு செய்யும்—, அறப்பெருந்தகைதனை—, பாவலிங்கி என்று அறிவாய்—, எ-று.

(வி - ரை.) புறத்து இலிங்கம் - வெளி லிங்கங்கள். போதலிங்கம் - ஜ்ஞாநலிங்கம். உள்ளல் - நினைத்தல். பாவம் என் மலர் - பாவநாபுஷ்பம்; பாவம் மென் மலர் எனப் பிரித்து பாவனையாகிய மெல்லிய மலர் என்றுரைப்பினு மமையும். அற - மிகுதியாக. பெருந்தகை - பெருங்குணமுடையோன். (௫)

மருவு மாதியா தாரநன் மனமலர் வரிவிற்
புருவ நாப்பணென் றுரைத்திடப் பொருந்திவற் றொன்றிற்
றிரிவி னல்விளக் குருவமாஞ் சிவன்றனைப் பாவ
வுருவ நற்பொருள் கொண்டருச் சிப்பவன் யோகி.

(ப - ரை.) மருவும் - பொருந்திய, ஆதி ஆதாரம்—, நல் மன மலர்—, வரி வில் புருவ நாப்பண் என்று—, உரைத்திடப் பொருந்து - சொல்லப் பெற்ற, இவற்று ஒன்றில் - இவைகளுள் ஒன்றில், திரிவு இல் - மாறுபடுதலில்லாத, நல் விளக்கு உருவம் ஆம் சிவன் தன்னை—, பாவ உருவம் நல் பொருள் கொண்டு அருச்சிப்பவன்—, யோகி—, எ - று.

(வி - ரை.) ஆதியாதாரம் - மூலாதாரம், மனமலர் - இதயகமலம். வரிவில் - நீண்ட வில் (வரி - கட்டமைந்த எனினுமாம்). புருவ நாப்பண் - ப்ருமத்யை, சிவன் - சிவ லிங்கம். கொண்டு-மூன்றுருவதன் சொல்லுருபு. விளக்கு உருவம்-தீபம் போன்ற வுருவம். பாவ உருவம் நல் பொருள் - பாவநா த்ரவ்யம். அருச்சனை - பூஜித்து வழிபடுதல். (௬)

மரக்கல் மண்ணினுல் வகுத்தன லிலிங்கவந் தனையைப்
புரிந்தி டாளது பூதியாற் பரஞ்சுடர்ப் புணர்வோன்
விரிந்தி டுங்கிரி யாபூசை புல்லறி வினர்க்கத்
தரங்க பூசனை யுரித்து மெய்ஞ் ஞானிக டமக்கே.

(ப - ரை.) மரம் கல் மண்ணினால் வகுத்து உள்ள—, இலிங்க வந்தனையை—, அநுபூதியால் பரஞ்சுடர்ப் புணர்வோன்—, புரிந்திடான்—, புல் அறிவினர்க்கு—, விரிந்திடும் கிரியாபூசை (உரித்து)—, மெய் ஞானிகள் தமக்கு அந்தரங்க பூசனை உரித்து—, எ - று.

(வி - ரை.) வகுத்தல் - செய்தல். அநுபூதி - அநுபவம். புணர்தல் - அடைதல். புல்லறிவு - அற்பவறிவு. புரிதல் - செய்தல். அந்தரங்கபூசனை - பாவநாபூஜை. அநுபூதியால் பரஞ்சுடரைப் புணர்வோன் - தனது அநுபவமே ப்ரமாணமாய்க் கொள்ளப்பட்ட ஜ்யோதிர்லிங்கத்தை யநுஸந்தாநம் செய்கிறவன். ஏ - அசை. (எ)

பாவலிங்கத்தலம் - முற்றும்.

உ

ஓம் யஜ்ஞமயாய நமஃ

ஐம்பதாவது

## (ஈ.) ஞானலிங்கத்தலம்.

[அதாவது - மேற்கூறிய ப்ராணலிங்கத்தை ப்ரகாஶப்படுத்தும் ஜ்ஞாநம் லயமாயுள்ளதும், ஜ்ஞாநத்திற்கு ஆஶ்ரயபூதமாயுள்ளதும், ஶாஸ்த்ரவிசாரம் குருவசநம் ஸ்வாநுபவங்களினால் ப்ரஹ்ம விஷ்ணு ருத்ரர்கள் என்னும் மூர்த்திகளைக்கடந்ததும், ஸாத்விகம் ராஜஸம் தாமஸம் ஆகிய முக்குணங்களைக் கடந்ததுமாக அறியப்பட்டுள்ள வஸ்துவே ஞானலிங்கம் என்பது.]

கலிநிலைத்துறை.

அன்ன பாவஞா பகஞான மெவ்விடத் தடங்கி
மன்னி நின்றிடு மதுஞான லிங்கமா மதிக்கி
னென்ன விங்குரை யாடுவர் நன்றுற விலங்க
வுன்ன ருஞ்சிவ தத்துவ முணர்ந்திடு முரவோர்.

(ப - ரை.) நன்று உற இலங்க - நன்றாக விளங்கும்படி, உன் அரு - நினைத்தற்கரிய, சிவதத்துவம் உணர்ந்திடும் உரவோர்—, அன்ன - அத்தன்மைத்தாகிய, பாவ ஞாபக ஞானம் எவ்விடத்து அடங்கி மன்னி நின்றிடும்,—அது—, மதிக்கின்—, ஞானலிங்கம் ஆம் என்ன—, இங்கு உரையாடுவர்—, எ - று.

(வி - ரை.) உன்னல் - நினைத்தல். உரவோர் - அறிவுடையோர். மன்னல் - நிலைபெறல். மதித்தல் - ஆலோசித்தல். உரையாடுதல் - சொல்லுதல். பாவ ஞாபக ஞானம் - ஶிவதத்வப்ரகாஶ ஜ்ஞாநம். ஶிவதத்வப்ரகாஶமானது எதனிடம் ஒடுங்குகின்றதோ அது ஜ்ஞாநலிங்கமென்று ஶிவதத்வார்த்தம் உணர்ந்தவர்களால் கூறப்படும் என்பதுதன்கருத்து.

இதனால் இதனையறிக. ஓர் வஸ்துவை யறியவேண்டின் சித்தம் அதனிடம் செல்லவேண்டும்; அதாவது, அதன் ஆகாரம் ஆகவேண்டும். இருளில் உள்ள ஓர்பொருளை யறிய வேண்டுமாயின் அவ்விருளை விலக்குவதற்கு ஓர் ப்ரகாஶமும், அந்தப் பொருளை விளக்கிக் காட்டுவதற்குக் கண் என்னும் ஓர் இந்த்ரியமும் எவ்வாறு அவஶ்யம் வேண்டப்படுகின்றதோ, அவ்வாறே யாதேனும் ஓர் பொருளை யறிவதற்கு அதனை மறைத்துக் கிடக்கும் ஆவரணத்தை நீக்க சித்த வ்ருத்தியும் அதனை விளக்கிக் காட்டுவதற்கு அந்த

சித்த வ்ருத்தியிலுள்ள ப்ரதிபிம்பமாகிய சைதந்யமும் வேண்டப்படுகின்றன. எவ்வாறெனின்:— புத்தியும் அதிலுள்ள சிதாபாஸனும் ஆகிய இரண்டும் கடத்தை வ்யாபிக்கின்றன. அங்குள்ள ஆவரணம் புத்தி வ்ருத்தியால் தொலைகின்றது. சிதாபாஸனால் கடம் விளங்குகின்றது. இனி, ஸாக்ஷிபூதனாகிய பரமாத்ம ஶிவத்தை யறியவேண்டுமாயின் முற்கூறியபடி அங்குள்ள ஆவரணத்தை நீக்க சித்த வ்ருத்தி வேண்டும். அத்தகைய சித்த வ்ருத்தியே அகண்டாகார வ்ருத்தி எனப்படும். பரமாத்மா ஒன்றிற்கும் விஷயமாகாவிடினும் அகண்டாகார வ்ருத்திக்கு மாத்திரம் விஷயமாகும். இந்த அகண்டாகார வ்ருத்தியே ப்ரஹ்ம ஜ்ஞானமென்று சொல்லப்படும். இந்த ஜ்ஞானத்தினால் பரமாத்மாவினிடத்துள்ள ஆவர்ணம் நீங்கும். இனி, கடம் முதலியவைகளை யறிவதற்கு வ்ருத்தியும் ப்ரதிபிம்பமும் வேண்டப்படுவது போலப் பரமாத்மாவை யறிவதற்கு ப்ரதிபிம்பமும் வேண்டாவோவெனின், வேண்டியதில்லை யென்க. கடாதிகள் ஜடப் பொருள்களாதலால் அவைகளை விளக்கிக்காட்ட ப்ரதிபிம்பம் வேண்டப்படுகின்றது. பரமாத்மா ஸ்வயம் ப்ரகாஶனாதலாலும், தானே போதப்ரகாஶவடிவனா யிருப்பதினாலும் அவனை வேறொன்று விளக்கவேண்டியதில்லை. இருளிலுள்ள கடம் முதலிய பொருள்களை யறிவதற்கு விளக்கும் கண்ணுமாகிய இரண்டு பொருள்கள் வேண்டப்படினும், விளக்கைப் பார்ப்பதற்குக் கண் மாத்திரம் வேண்டியதே யன்றி மற்றோர் தீபம் வேண்டப்படுவதில்லை. இந்த அகண்டாகார வ்ருத்தியினால் பரமாத்ம சைதந்யத்தை மறைத்துள்ள அஜ்ஞானமென்னும் ஆவரணம் நீங்கி, பரமாத்ம ஸாக்ஷாத்காரம் ஏற்பட்டு, அந்த வ்ருத்தியும் லயித்துப்போதலும், அது லயித்த இடமாய் எஞ்சி நிற்பதே நித்ய முக்த ஶுத்த போத ஸதாநந்த அகண்ட பரிபூர்ண பரஶிவப் பொருளாம். (க)

முக்கு ணங்கண் மும்மூர்த்திகள் கடந்துணர் முதன்மை
தக்கு றும்பரப் பிரமமே ஞானலிங் கந்தான்
பக்க தூலசூக் குமங்களிற் கிரியைநற் பாவம்
புக்கு றும்பராற் பரத்தினின் ஞானமே பொருந்தும்.

(ப - ரை.) முக்குணங்கள்—, மும்மூர்த்திகள்—, கடந்து உணர்—, முதன்மை தக்குறும் பரப்பிரமமே ஞானலிங்கம்—, பக்க - வேறுபட்ட, தூல சூக்குமங்களில்—, கிரியை நல் பாவம் புக்குறும் பராற்பரத்தினில்—, ஞானமே பொருந்தும்—, எ - று.

(வி - ரை.) முக்குணங்கள் - ரஜஸ்ஸத்வதமோ குணங்கள். மும்மூர்த்திகள் - ப்ரஹ்ம விஷ்ணுருத்ரர்கள். பக்க என்பதற்குப் பகுதி பகு. தூல சூக்குமங்களில் கிரியை நல் பாவம் புக்குறும் பராற்பரத்தினில் ஞானமே பொருந்தும் - ஸ்தூல லிங்கத்தில் கிரியையாகிய பூஜை ஸம்பவிக்கும், ஸூக்ஷ்ம லிங்கத்தில் பாவனை நிகழும், ஸ்தூல ஸூக்ஷ்ம நிலைமைகளைக் கடந்ததாகிய பரமாத்மாவில் ஜ்ஞானமொன்றே நிகழும். (உ)

தூல சூக்கும வுருவங்கள் கற்பனை சொல்லின்
மேல தாம்பரஞ் சுடர்க்கவற் றால்வினை பயனென்
மாலி லாதுயர் ஞானலிங் கத்தையே மதிக்க
நூலெல் லாமொரு வந்தமிங் குரைத்திடு நுனித்து.

(ப - ரை.) மேலது ஆம் பரம் சுடர்க்கு—, தூல சூக்கும வுருவங்கள் சொல்லின் கற்பனை—, அவற்றால் வினை பயன் என்—, மால் இல்லாது உயர் ஞானலிங்கத்தையே மதிக்க—, நூல் எல்லாம் நுனித்து இங்கு ஒருவந்தம் உரைத்திடும்—, எ - று.

(வி - ரை.) கற்பனை - பொய். மால் - மயக்கம். ஒருவந்தம் - நிச்சயம். நுனித்து - நுட்பமாயாராய்ந்து. மதிக்க - மதிப்பாயாக (அநுஸந்தானம் செய்வாயாக).

சிறந்த சச்சிதா நந்தமெய்ச் சோதியாஞ் சிவனை
யறிந்து ளானெவ னவன்ஞா னலிங்கியென் றறிவாய்
புறந்த ருஞ்செயற் கிரியையும் பாவமும் போக்கி
நிறைந்தி டுஞ்சிவ மடைப வனேமுத்த னிசழ்த்தின்.

(ப - ரை.) சிறந்த சச்சிதாநந்த மெய் சோதி ஆம் சிவனை—, அறிந்துளான் எவன்—, அவன் ஞானலிங்கி என்று அறிவாய்—, புறம் தரும் செயல் கிரியையும் பாவமும் போக்கி—, நிறைந்திடும் சிவம் அடைபவனே—, நிகழ்த்தின் - சொல்லுமிடத்து, முத்தன்- முக்தனாவன், எ - று.

(வி - ரை.) புறம் - வெளி. கிரியை - செயல் (கர்மம்). பாவம் - பாவனை. நிகழ்த்தல்- சொல்லல். நிறைந்திடும் - பரிபூர்ண சைதந்ய வடிவமாகிய. அடைபவன் - அநுஸந்தானம் செய்பவன். (ச)

ஞானலிங்கத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் ஸோமாய நம:

ஐம்பத்தோன்றாவது

## (எ) சுயத்தலம்.

[அதாவது-ஜ்ஞாநலிங்கமுள்ளவனே ஸ்வயஸ்தலத்தையடையப் பெற்றவனும், ப்ராண லிங்கத்தை ப்ரகாஶப்படுத்தும் ஜ்ஞாநத்திற்கு லயஸ்தாநமாகி அந்த ஜ்ஞாநலிங்கத்தை யடைந்தவனும், ஸ்வேச்சாசார ஸந்துஷ்டி விஷயாதி மமகார ராஹித்ய முதலிய குணங் களோடு கூடினவனும், ஸ்வயலிங்க மென்னுமபிதாந முள்ளவனும், ப்ரபஞ்சக் கூட்டுறவி னின்றும் விடப்பட்டவனுமாயினும் க்ரியையுள்ளவனாய்க் காணப்படுபவனாதலால் சுயன் என்பது.]

கலிநிலைத்துறை.

பாவ ஞாபக ஞானமெய்ஞ் ஞானத்தின் பாற்போய்
மேவி யேயொடுங் குறுமந்த ஞானவான் விளம்பிற்
பூவின் மேவுறுஞ் சுயனும மென்னவே புகல்வர்
காவி வாணெடுங் கண்ணுமை பங்கனூல் கற்றோர்.

(ப - ரை.) காவி - கருங் குவளைமலர் போன்ற, வாள்-ஒளி பொருந்திய, நெடுங்கண்- நீண்ட கண்களையுடைய, உமை பங்கன் - உமாதேவிக்குப் பாகனாகிய சிவபெருமானது, நூல் - நூல்களை, கற்றோர்—, பாவ ஞாபக ஞானம் - ஶிவதத்வப்ரகாஶ ஜ்ஞாநமானது, மெய் ஞானத்தின் பால் போய் மேவி ஒடுங்குறும் - (எந்த) மெய்ஞானத்தின் பகுதியிற் சென்று பொருந்தி யொடுங்குமோ, அந்த ஞானவான் - அந்த ஞானமுடையவன், விளம்பின்—, பூவில் - இவ்வுலகத்தில், சுயன் நாமம் மேவுறும் என்ன - சுயன் என்னும் பெயரைப் பொருந்துவனென்று, புகல்வர்—, எ - று.

(வி - ரை.) கருங்குவளை - நிலோத்பலமலர். காவி - ஆகுபெயர். பங்கன் - பாகத்தை யுடையவன். விளம்பல் - சொல்லல். புகலல் - சொல்லல். (க)

சோதி லிங்கதற் பரனுமாய்த் தோன்றுறு முலக
மியாது மோர்சிவ மயமெனக் கண்டுதன் னிச்சை
நீதி செய்துறு மொருமுனி புங்கவ னிகழ்த்தி
னாதி யாயுயர் சுயனும முடையவ னாகும்.

(ப - ரை.) சோதிலிங்க தற்பரனுமாய்—, தோன்றும் - காணப்படுகிற, உலகம் யாதும் - உலகமெல்லாம், ஓர் - ஒப்பற்ற, சிவமயமெனக்கண்டு—, தன் இச்சை - தன் அவாவை, நீதி செய்துறு - நியதி செய்து கொண்டிருக்கிற, ஒரு முனி புங்கவன்—, நிகழ்த்தின் - சொல்லுமிடத்தில், ஆதியாய் உயர் சுயன் நாமம் உடையவன் ஆகும்—, எ - று.

(வி - ரை.) சிவமயம் - சிவரூபம். முனிபுங்கவன் - முநிஶ்ரேஷ்டன். நிகழ்த்தல் - சொல்லல். சோதிலிங்க தற்பரனுமாய் - ஜோதிலிங்கத்திலேயே மனம் செல்லுகின்றவனுமாய். தன் இச்சை நீதி செய்துறும் - தனது இச்சையின்படி சென்று மகிழ்வோனும். (௨)

பிச்சை யூணடைந் தொழிந்தவாங் காரமும் பெற்று
நிச்ச மிந்திய மவித்துறு கிலேசங்க ணீக்கி
நச்சு பூதிய னாகியே நடுநிலை நண்ணி
யிச்சை யோடுவர்ப் பிலான்பர முத்தனென் றிசைப்பர்.

(ப - ரை.) பிச்சை ஊண் அடைந்து—, ஒழிந்த ஆங்காரமும் பெற்று—, நிச்சம் - நித்தலும், இந்தியம் அவித்து—, உறு கிலேசங்கள் நீக்கி—, நச்சு பூதியன் ஆகி—, நடுநிலை நண்ணி—, இச்சையோடு உவர்ப்பு இல்லான்—, பரமுத்தன் என்று இசைப்பர்—, எ - று.

(வி-ரை.) ஊண் - உணவு. ஒழிந்த ஆங்காரம்-அஹங்கார நீக்கம். இந்தியம் அவித்தல் - இந்த்ரியங்களை யடக்குதல். உறு கிலேசங்கள் - மிகுந்த (ஐந்து) வ்யஸநங்கள். நச்சுதல் - விரும்புதல். பூதியன் - விபூதியையுடையவன். இச்சை - விருப்பு. உவர்ப்பு - வெறுப்பு. இசைத்தல் - சொல்லல். நடுநிலை - (பிச்சைக்காரனிடமும் அரசனிடமும்) சமபுத்தி. (௩)

துன்ப வெம்பவ நேமியிற் சுழன்றிடு பவரைத்
தன்பெ ருங்கணிற் கண்டிறும் பூதொடு சார்வுற்
றின்ப வெள்ளத்தின் மூழ்கினோ னாகியே யிருப்பன்
முன்ப கர்ந்துள நிலையிடை நின்றிடு முனிவன்.

(ப-ரை.) முன் பகர்ந்து உள்ள-முன்னே சொல்லப்பட்டுள்ள, நிலையிடை நின்றிடும்—, முனிவன்—, வெம் - வெப்பமாகிய, துன்பம் - துக்கரூபமாகிய, பவ நேமியில் சுழன்றிடு பவரை—, தன் பெருங் கண்ணிற்கண்டு—, இறும்பூதொடு-(புன்னகைகொண்டு) அதிசயத்தோடு, சார்வுற்று—, இன்ப வெள்ளத்தில் மூழ்கினோன் ஆகியே இருப்பன்—, எ - று.

(வி - ரை.) பகர்தல் - சொல்லல். நிலையிடை - நிலையில். பவநேமி - பிறவிக்கடல். இறும்பூது - அதிசயம். சார்வுறல் - அடைதல். இன்ப வெள்ளத்தில் மூழ்கினோன் - பேரானந்த ஸ்வரூபமாகிய ஆத்மாவிடம் லயித்த சித்த முடையவன். (௪)

நண்ணு றுஞ்சிவத் தியாநநற் சைவஞா னந்தா
னுண்ணு றுஞ்செயற் பிச்சையே காந்தசீ லத்தோ
டெண்ணு மிங்கிவை நான்கையு மன்றிமே லெண்ணப்
பண்ணு றுஞ்செய லொன்றிலை பரமயோ கிக்கே.

(ப - ரை.) பரம யோகிக்கு—, நண்ணுறும்-பொருந்திய, சிவத்தியாநம்—, நல் சைவ ஞானம்—, உண் உறும் செயல் பிச்சை—, ஏகாந்த சீலத்தோடு—, எண்ணும் - எண்ணப்படுகிற, இங்கிவை நான்கையும் அன்றி—, மேல் எண்ண - மேலே யெண்ணவும், பண்ணுறுஞ்செயல் - பண்ணவு முரிய தொழில்கள், ஒன்று இல்லை - ஒன்றுமில்லை, எ - று.

(வி - ரை.) பரமயோகி - ஸ்வயலிங்கயோகி. சைவஞானம் - சிவஞானம். ஏகாந்த சீலம் - தனியே வசித்தல். சீலம் - ஒழுக்கம். உண்ணுறும் செயல் பிச்சை - பிக்ஷையெடுத்தல் (பிக்ஷையுணவு எனினுமாம்). இங்கிவை - ஒருசொல். (௫)

சுயத்தலம் - முற்றும்.

உ

ஓம் பஞ்சவக்த்ராய நமஃ.

# ஐம்பத்திரண்டாவது

## (அ·) சரத்தலம்.



[அதாவது—மேற்கூறிய ஸ்வயலிங்கஸம்பந்நனவனே அஹங்கார மமகாரங்கள் ஶூந்யமானதனால் தன் ஜ்ஞாநரூபமொன்றையே தரித்தவனாகவும், ஸாக்ஷாத் ஶிவஸ்வரூபனாகவும் சரிக்கின்றனாதலால் சரன் என்பது.]

கலிநிலைத்துறை.

ஒழிந்து போகுமாங் காரமு மமதையு முளனாய்
மொழிந்தி டாததன் சொரூபஞா னத்தினின் முதிர்ந்தோன்
றழங்கு வேலைசூ ழுலகினிற் றானேதா னாகி
வழங்க வேசரித் திடுதலாற் சரப்பெயர் மருவும்.

(ப-ரை) ஒழிந்து போகும்-ஒழிந்து போகின்ற, ஆங்காரமும் மமதையும் உளனாய்—, மொழிந்திடாத - சொல்லப்படாத, தன் சொரூப ஞானத்தில் முதிர்ந்தோன்—, தழங்கு - சத்திக்கிற, வேலை சூழ் - கடல் சூழ்ந்த, உலகினில்—, தானே தானாகி—, வழங்கவே சரித்திடுதலால்—, சரப்பெயர் மருவும்-சரன் என்னும் நாமத்தைப் பொருந்துவன், எ-று.

(வி-ரை.) ஒழிந்துபோகும் ஆங்காரமும் மமதையும் உளன் என்றது அஹங்கார மமகாரங்களை யொழித்தவன் என்றபடி. சொரூபஞானம் - ஸ்வயஞானம். முதிர்ந்தோன் - மிக்கவன். தழங்கல் - சத்தித்தல். வேலை - வேலா என்னும் வடசொற்றிரிபு. சரித்திடல் - சஞ்சரித்தல். (க)

தீர்ந்த காமமே முதலன செறிந்துயர் சாந்தி
தாந்தி யோடெலாஞ் சிவமய மாகவே சார்ந்து
போந்து வீதுயர் வீதிழி வென்பது போக்கிச்
சார்ந்தி டுஞ்சம புத்தியாற் சரித்திடும் யோகி.

(ப-ரை.) யோகி - (சரலிங்க) யோகியானவன், தீர்ந்த காமமே முதலன செறிந்து—, உயர்-உயர்ந்த, சாந்தி தாந்தியோடு—, எல்லாம் சிவமயமாகவே சார்ந்து—, போந்து—, ஈது உயர்வு—, ஈது இழிவு—, என்பது போக்கி—, சார்ந்திடும் சமபுத்தியால்—, சரித்திடும் - சஞ்சரிப்பன், எ-று.

(வி-ரை.) தீர்ந்த காமமே முதலன செறிந்து - காம முதலியவற்றை யொழித்தலை யுடையனாய். சாந்தி - தனது லக்ஷ்யத்தில் மனதைச் செலுத்துதல். தாந்தி - இந்த்ரிய நிக்ரஹாதிகளாலுண்டாகும் ப்ரயாஸத்தை ஸஹித்தல் (வெளி யிந்த்ரியங்களை தத்தம் விஷயத்திற் செல்லாமல் அந்தந்த கோளகங்களிலேயே நிறுத்திவைத்தல்). சமபுத்தியால் - சமபுத்தியோடு. (உ)

அரிய கூடத்த னாயதன் னிலையினை யடைந்த
துரிய யோகிதான் றனைத்தொழு வாரிடைத் தோன்றும்
பரிவு றானிகழ்ந் தவரிடை வெறுத்துளம் பகைக்குந்
திரிவி லாதொரு பரிசினாற் சரித்திடல் செய்யும்.

(ப-ரை.) அரிய கூடத்தன் ஆய தன் நிலையினை அடைந்த துரிய யோகி—, தன்னை தொழுவாரிடை தோன்றும் - தன்னை (பூஜித்து) வணங்குவோரிடத் துண்டாகிற, பரிவு

உறுன் - (பிரீதி) இரக்கமடையான், இகழ்ந்தவரிடை வெறுத்து உள்ளம் பகைக்கும் திரிவு இல்லான்—, ஒரு பரிசினுல்-ஒரு தன்மையாகவே, சரித்திடல் செய்யும்-சஞ்சரிப்பன், எ-று.

(வி - ரை.) கூடத்தன் - கூடஸ்த்தன் (ஏகரூபமாய் காலத்ரய வ்யாபகாத்மா). கூடஸ்தம் - கூடம் என்பது கொல்லனது பட்டடைக்கல், அதுபோல அதிஷ்டானமாயிருந்துகொண்டு விகாரப்படாம லிருக்கின்றமையால் கூடஸ்தம் என்பதாம். தூரிய யோகி - ப்ரஹ்ம மயமாகிய சரலிங்க யோகி. திரிவு-திரிபு (வெறுப்பு). சரித்திடல் செய்தல் - ஒரு சொல். (௩)

மாயை பெற்றிடாக் குணமொடு மருவியே யென்று
மாய வத்துவி தாநந்தப் பெருங்களிப் படைந்த
தூய மெய்ச்சிவ யோகிதான் றொல்சக நகைத்துச்
சாயு மற்றுள வுடம்பிபோற் சரித்திடு மன்றே.

(ப - ரை.) மாயை பெற்றிடா குணமொடு மருவி—, என்றும்—, ஆய—, அத்துவிதாநந்தப் பெருங்களிப்பு அடைந்த—, தூய மெய் சிவயோகி—, தொல் சகம் நகைத்து—, சாயும்—, மற்று உள்ள உடம்பி போல்—, சரித்திடும்—, எ - று.

(வி - ரை.) மாயை பெற்றிடா குணம் - மாயா நிரஸந குணம் (அலௌகிகங்களாகிய குணங்கள்). மருவல் - பொருந்தல். சாய்தல் - நசித்தல். உடம்பி - தேஹி (தேஹாபிமானமுள்ளவன). சரித்திடல் - சஞ்சரித்தல். சகம் - ஜகத்தை. (௪)

விதிவி லக்கினிற் பட்டிடா வொருஞான வீரன்
கதிய டுத்திடு புண்ணிய பாவமுங் கருதான்
மதிம யக்குறு மாயைவாழ் வினையுள மதியா
னதிக வத்துவி தாநந்த முற்றக மகிழ்வான்.

(ப - ரை.) விதி விலக்கினில் பட்டிடா—, ஒரு ஞான வீரன்—, கதி அடுத்திடு புண்ணிய பாவமும் கருதான்—, மதி மயக்கு உறும் மாய வாழ்வினை உள்ளம் மதியான்—, அதிகம் - மேன்மையாகிய, அத்துவித ஆநந்தம் உற்று அகம் மகிழ்வான், எ - று.

(வி - ரை.) விதிவிலக்கு - விதி நிஷேதங்கள். கருதல் - நினைத்தல். அகமகிழ்தல் - மனங்களித்தல். வீரன் - சரலிங்கயோகியாகிய யதி. (௫)

சரத்தலம் - முற்றும்.

உ

ஓம் ஸதாஶிவாய நம:

## ஐம்பத்து மூன்றுவது

## (௬.) பரத்தலம்.



[அதாவது - சரலிங்கயோகியே தானே தானென பாவத்தையடைந்து சஞ்சரிப்பதனுலும், தன்னைவிட வேறொரு பதார்த்தமில்லை யென்பதனுலும், கடந்த வர்ணாஶ்ரமமுள்ளவனு யிருப்பதனுலும் பரன் என்பது.]

வேண்டு மாறுதான் சரித்திடும் விமலநல் யோகி
யீண்டு தன்சொரூ பந்தனிற் பரமிலை யென்னு
மாண்ட ஞானத்தி னுக்குயர் பரமரூ மெனவே
நீண்ட நூற்பொரு ளுணர்ந்துளோர் நிகழ்த்துவ ரன்றே.

(ப - ரை.) வேண்டுமாறு தான் சரித்திடும் விமல நல் (சிவ) யோகி—, ஈண்டு தன் சொரூபம் தன்னின்—, பரம் இல்லை என்னும்—, மாண்ட ஞானத்தினுக்கு—, உயர் பரம் மருவும் என்று—, நீண்ட நூற்பொருள் உணர்ந்துளோர்—, நிகழ்த்துவர், எ - று.

(வி - ரை.) மாண்ட - மாட்சிமைப்பட்ட (மேன்மை யடைந்த). நிகழ்த்தல்-சொல்லல். தான் தானாகவேயிருந்து சஞ்சரிக்கின்றவனாகிய சிவயோகியினுடைய தன் ஸ்வரூபத்தைக்காட்டிலும் வேறுபொருளில்லை யென்னும் ஜ்ஞானமே பரம் என்று சொல்லப் படும் என்பதிதன் கருத்து. (க)

தன்னை யேபரத் துவத்தினாற் பாவிக்குந் தகையா
னென்ன வாயின தொழில்களுஞ் சுதந்தரத் தியற்றி
யின்ன லாமுல கினையொரு பொருளென வெண்ணான்
வன்ன மாச்சிர மங்களா சாரங்கள் மதியான்.

(ப - ரை.) தன்னையே பரத்துவத்தினால் பாவிக்கும் தகையான்—, என்ன ஆயின தொழில்களும்—, சுதந்தரத்து இயற்றி—, இன்னல் ஆம் உலகினை—, ஒரு பொருள் என எண்ணான்—, வன்னம் ஆச்சிரமங்கள் ஆசாரங்கள்—, மதியான்—, எ - று.

(வி - ரை.) பரத்துவம் - பரமாத்மா. தகையான்-பெருமையுடையவன் (சிவயோகி) என்ன ஆயின தொழில்களும் - எவ்வகைத்தொழில்களும். இன்னல் - துன்பம். ஒரு பொருளென எண்ணான் - உதாசீனம் செய்வான். (உ)

உருவ ஞானமா யுலகிறந் தொருசிவ மென்னப்
பரவு றும்பரப் பிரமமே நானெனப் பார்க்கு
முரவ னேயுயர்ந் தோனுல குறுமய லொழித்துக்
கரவி லாததன் சொரூபமே காண்பவன் முத்தன்.

(ப - ரை.) உருவம் ஞானமாய்—, உலகு இறந்து—, ஒரு சிவம் என்ன—, பரவும் பரப்பிரமமே நான் எனப் பார்க்கும் உரவனே உயர்ந்தோன்—, உலகு உறும் மயல் ஒழித்து—, கரவு இல்லாத—, தன் சொருபமே காண்பவன் முத்தன்—, எ-று.

(வி - ரை.) உருவம் ஞானம் ஆய் என்றது ஞானவுருவாகி (சித்ரூபம்) என்றபடி. இறந்து - கடந்து. உரவன் - அறிவுடையோன். மயல் - மயக்கம். கரவு - மறைப்பு. (௩)

பன்ன ருங்கரு மங்கடந் துளவொரு பதத்திற்
றன்னை யொண்சிவ மாகக்கண் டிருப்பவன் றனக்கு
முன்னு றுங்கரு மத்துறு பதத்தயன் முதலோ
ரென்ன செய்கில ரேவலென் றிசைப்பதற் கிசைந்து.

(ப - ரை.) பன் அரும் - சொல்லுதற்கரிய, கருமம் கடந்துள்ள—, ஒருபதத்தில்—, தன்னை ஒள் சிவம் ஆக கண்டிருப்பவன் தனக்கு—, முன்னுறும் கருமத்து உறு பதத்து—, அயன் முதலோர்—, என்ன ஏவல் செய்கிலர் என்று—, இசைப்பதற்கு இசைந்து—, எ - று.

(வி - ரை.) பன்னல் - சொல்லல். கருமம் - செயல். பதம் - பதவி. முன்னுறல் - நினைத்தல் (முந்துதல் எனினுமாம்). அயன் முதலோர் - பிரமன் விஷ்ணு முதலிய தேவர்கள். முன்னுறும் கருமத்து உறு பதத்து - கர்மமார்க்கத்தி லுள்ளவர்களாகிய. இசைப்பதற்கு - யாவரும் சொல்லுவதற்கு. இசைந்து - (தான்) தகுதியுடையனாகி, ஆகி என்னும் வினையெச்சம் மேல் வரும் செய்யுளில் விட்ட என்பதனைக்கொண்டு முடிதலால் இது குளகமெனப்படும். (ச)

விட்ட தேகமா னத்தினை யுடையவன் வேண்டு
மிட்ட மாகிய நெறியினிற் சரித்திரு வினையுட்
பட்டு ளோர்க்குறு தரிசக பரிசனங் களினுற்
கட்டு மாய்வுறச் செய்வனென் றியம்புவர் கற்றோர்.

(ப - ரை.) விட்ட தேக மானத்தினை யுடையவன்—, வேண்டும் இட்டமாகிய நெறியினில் சரித்து—, இருவினையுள் பட்டுளோர்க்கு—, உறு தரிசக பரிசகங்களினுல்—, கட்டு மாய்வுற செய்வன் என்று—, கற்றோர் இயம்புவர்—, எ - று.

(வி - ரை.) விட்டதேக மானத்தினை யுடையவன் - தேஹாபிமாநத்தை விட்டவன். சரித்து - சஞ்சரித்து. பரிசகம் - ஸ்பர்ஸநம் என்னும் வடசொற்றிரிபு (தீண்டல் என்பது பொருள்). கட்டு-ஜந்மபந்தம். வேண்டும் இட்டமாகிய நெறியினிற் சரித்தல் - யதேச்ச்சா விஹாரம். இருவினையுட் பட்டுளோர் - சகலமூடர்கள். (௫)

மயலிலா தசச் சிதாநந்த வடிவமாஞ் சிவத்தி
லயலி லாதவோர் சமாநதை யடைந்துள யோகி
செயலெ லாந்தன திச்சையாச் செய்துதே சிகன்போற்
சயமு றுவுயிர் முத்தனுய் வியப்பொடு சரிக்கும்.

(ப - ரை.) மயல் இல்லாத—, சச்சிதாநந்தவடிவம் ஆம் சிவத்தில்—, அயல் இல்லாத ஓர்சமாநதை அடைந்து உள்ள யோகி—, செயல் எல்லாம் தனது இச்சையாச் செய்து—, தேசிகன் போல் சயம் உறு—, உயிர்முத்தனுய்—, வியப்பொடு சரிக்கும்—, எ - று.

(வி - ரை.) மயல் - மயக்கம். சமாநதை - ஒப்பு. சயம் உறு - ஜயமடைந்து. உறு - செய்யாவென்னும்வாய்பாட் டிறந்தகாலவினையெச்சம். உயிர் முத்தன்-ஜீவன்முக்தன். (௬)

பரத்தலம் - முற்றும்.

இவ்விதமாய் க்ரியாலிங்கம், பாவலிங்கம், ஜ்ஞாநலிங்கம், ஸ்வயன், சரன், பரன் என்னும் ஆறு ஸ்தலங்களில் கூறிய தர்மங்களுடனே கூடி யிருத்தலால், சிதாநந்த வடிவமாகிய பரஶிவத்தில் ஸமத்வம் எய்தித் தனது இச்சையின்படி சஞ்சரிக்கும் ஜீவன் முக்தனும், அங்கஸ்தலத்து முதலாமவனு மான பக்தனே ஆசாரலிங்க பக்தன் என்று அறியப்பட்டான்.

க - வது. ஆசாரலிங்கத்தலம் - முற்றிற்று.

---

## ௨-வது குருலிங்கத்தலம்.

[அதாவது - ப்ரதிஷ்டாகலா ஸமேதமாய் ஜ்ஞாநஸக்தியோடுகூடிக் கர்த்ருஸாதாக்யத்தைப் பொருந்திப் புத்திகம்யமாயிருத்தல் என்பது.]

### (மாஹேஸ்வர ஸ்தலத்தைச் சேர்ந்த உட்பிரிவுகள்.)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முன்புற மொழிந்து நின்ற முறைபத் தத்தலந் தொடர்ந்த
வொன்பது தலமு மைய வுரைத்தனெ தமிய னேனுக்
கின்புற வினிமா கேசத் தலத்தினை யெய்தி நிற்குந்
துன்பறு தலபே தங்க டம்மையுந் தோன்றச் சொல்வாய்.

(ப - ரை.) முன்புற மொழிந்து நின்ற முறை—, பத்தத்தலம் தொடர்ந்த ஒன்பது தலமும்—, ஐய—, உரைத்தனை—, தமியனேனுக்கு—, இனி—, இன்புற—, மாகேசத்தலத்தினை எய்தி நிற்கும்—, துன்பு அறு தலபேதங்கள் தம்மையும்—, தோன்ற சொல்வாய்—, எ - று.

(வி-ரை.) மொழிந்து நின்ற முறை - சொல்லி நின்ற க்ரமம். எய்திநிற்கும் - அடைந்துநிற்கிற. தலபேதங்கள் - தலவேறுபாடுகள். (க)

கிரியைநற் பாவ ஞானங் கிடைக்குமா கமஞ்ச காயம்
பரிவறு மகாயம் பின்னர்ப் பரகாயந் தருமம் பாவ
மருவறு மாசா ரத்தான் மகேசநற் றலமொன் பானு
முறைசெயு * மவற்றி னுண்மை யுரைக்குது முனிவ கேண்மோ.

(ப - ரை.) முனிவ - முனிவனே, கிரியை கிடைக்கும் ஆகமம் - கிரியாகமத்தலம், நல் பாவம் கிடைக்கும் ஆகமம் - பாவாகமத்தலம், ஞானம் கிடைக்கும் ஆகமம் - ஞானகமத்தலம், சகாயம் - சகாயத்தலம், பரிவு அறும் - இரக்கமற்ற, அகாயம் - அகாயத்தலம், பின்னர்—, பரகாயம் - பரகாயத்தலம், ஆசாரத்தால் மருவும் தருமம்-தருமாசாரத்தலம், ஆசாரத்தால் மருவும் பாவம் - பாவாசாரத்தலம், ஆசாரத்தால் மருவும் அறிவு - ஞானசாரத்தலம், (என) மகேச நல் தலம் ஒன்பான் ஆம்-நல்ல மாகேசுரத்தலம் ஒன்பது வகையாம், உரை செயும் - சொல்லப்பட்ட, அவற்றின் உண்மை உரைக்குதும்—, கேள் - கேட்கக்கடவை, எ - று.

(வி - ரை.) உரைக்குதும் - சொல்லுவோம். (௨)

---

* குருலிங்க ஷட்பக்தர்கள்:—குருலிங்கமோஹி, குருலிங்கபக்தன், குருலிங்கபூஜகன், குருலிங்கவீரன், குருலிங்கப்ரஸாதி, குருலிங்கப்ராணி என அறுவகைப்படுவோர்கள். இவர்களில், மாதாபிதாக்களின் மோஹங்களை விட்டுக் குருவினிடத்தில் ப்ரீதியுள்ளவனே குருலிங்கமோஹி, பந்துக்களின் உபசாரமற்றுக் குருவினிடத்தில் ப்ரீதியுள்ளவனே குருலிங்கபக்தன், வேறொரு பூஜையைச் செய்யாது குருபூஜனை செய்பவனே குருலிங்கபூஜகன், அந்ய மார்க்கத்தைவிட்டுக் குருவின் யுக்திமார்க்கத்தில் வர்த்திப்பவனே குருலிங்கவீரன்,குருவின் ஆஜ்ஞை வசத்தவனே குருலிங்கப்ரஸாதி, குருநிந்தையைக் கேட்காதவனே குருலிங்கப்ராணி.

த்ரிவித குருலிங்கம்:—க்ரியாதீக்ஷை, மந்த்ரதீக்ஷை, ஸ்வாநுபவம் என மூவகைப்படும். இவைகளில், ஆகமோக்த விதாநத்தினாலும் குண்ட மண்டலாதிகளினாலும் ஷட்வித பூஜை முதலியவைகளைச் செய்தலே க்ரியாதீக்ஷை, ஜங்கமமே லிங்கமென்பது முதலான ஸம்யுக்ஜ்ஞாநம் ஸத்புருஷர்களாலாவதே மந்த்ரதீக்ஷை, பூர்வஜந்ம ஸம்ஸ்கார வல்லமையினால் பக்தி ஜ்ஞாநாதிகங்கள் தாமே தலைகாண்பித்தலே ஸ்வாநுபவம்.

உ
ஓம் விஶ்வேஶ்வராய நமஃ
# ஐம்பத்துநான்காவது
## (க) கிரியாகமத்தலம்.

[அதாவது - பரனே ப்ரத்யக்ஷனான ஶிவன் என்று சொல்லப்படுகிற மேற்கூறிய பரஸ்தல ஸம்பந்நனான ஶிவயோகியின், நியமம் லோபமாகாமையாலும், அவனுக்கு ஶிவன் ப்ரஸந்ந மாதலாலும், அவன் விதிப்படி செய்யும் லிங்கபூஜைக்குரிய க்ரியா ஸமூஹமே உலகத்தாருக்கு ஶாஸ்த்ரமா யிருத்தலால் கிரியாகமம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அப்பர யோகி தானே யருஞ்சிவ மவன்றன் பூசை
யொப்புறு கிரியை யாகு முரைத்தவக் கிரியை தன்னை
மெய்ப்புறு முதன்மை யாக மேவுமா கமந்த னக்குச்
செப்புறு பெயர்யா தென்னிற் செழுங்கிரி யாக மந்தான்.

(ப - ரை.) அ - அந்த, பரயோகிதானே—, அருஞ்சிவம்—, அவன்றன் பூசை—, ஒப்பு உறு கிரியையாகும்—, உரைத்த அ கிரியை தன்னை—, மெய்ப்பு உறு முதன்மை யாக மேவும் ஆகமம் தனக்கு—, செப்புறு பெயர் யாது என்னின்—, செழும் கிரியாகமம் தான்—, எ - று.

(வி - ரை.) அப் பரயோகி - பரஸ்தல ஸம்பந்நனான ஶிவயோகி. (க)

ஒள்ளழ லரணி தன்னிற் கடைதலை யொழிந்துண் டாகா
துள்ளுறுஞ் சிவனுஞ் செய்யுங் கிரியையை யொழிந்து தோன்றான்
றெள்ளுறு நியம நாசஞ் சேர்ந்திடா தாக மத்திற்
கொள்ளுறு முறைவ ழாமற் குறித்துநற் கிரியை செய்க.

(ப - ரை.) அரணி தன்னின் - அரணியால், கடைதலை ஒழிந்து - கடைதலைத் தவிர்ந்து, ஒள் அழல் - நல்ல நெருப்பானது, உண்டாகாது—, செய்யும் கிரியையை ஒழிந்து - செய்கிற கிரியையைத் தவிர்ந்து, உள்ளுறும் - உள்ளேயிருக்கிற, சிவனும் தோன்றான்—, தெள்ளுறும் - தெளிவாகிய, நியம நாசம் சேர்ந்திடாது—, ஆகமத்தில் கொள்ளுறும் முறை வழாமல் குறித்து—, நல் கிரியை செய்க—, எ - று.

(வி - ரை.) அரணி - தீக்கடைகோல். நியம நாசம் சேர்ந்திடாது - செய்யவேண்டிய விதி பிறழாமல். (உ)

விதித்திடு கருமந் தன்னுள் விசேடமாஞ் சிவன தேவன்
மதித்தது தனையே செய்க மாசிலா சானைக் கொண்டு
பொதுத்தவிர் பூசை செய்க புராரியைப் பரமன் றன்னைத்
துதிப்பொடு பூசை செய்வோன் சுரரெலாம் பூசை செய்வோன்.

(ப - ரை.) விதித்திடு கருமம் தன்னுள் சிவனது ஏவல் விசேடம் ஆம்—, (ஆதலால்) மதித்து அது தனையே செய்க—, மாசு இல் ஆசானைக் கொண்டு புராரியை பொதுத்தவிர் பூசை செய்க—, பரமன்தன்னை துதிப்பொடு பூசை செய்வோன்—, சுரர் எல்லாம் பூசை செய்வோன்—, எ - று.

(வி - ரை.) மாசு-குற்றம். புராரி-முப்புரப்பகைவன் (சிவபிரான்). துதிப்பு-துதித்தல். சுரர் - தேவர். ஏவல் - ஆணை. பூசை செய்வோன் - பூசை செய்யப்படுவோன். போதுத் தவிர் - சிறப்பாகிய. (௩)

கருதுறு சிவபூ சைக்கட் கருவிக ளான வற்றி
லொருதனி மனம்வைத் தென்று முயர்சிவ யோக வேட்கை
புரிதரு மமல யோகி பொருந்திய மலங்க ளெல்லா
மிரிதர வகற்ற வல்ல னிதிலிலை யைய மன்றே.

(ப - ரை.) கருதுறு சிவபூசைக்கண்—, கருவிகளான வற்றில்—, ஒரு தனி மனம் வைத்து—, என்றும்—, உயர் சிவயோக வேட்கை புரிதரும்—, அமல யோகி—, பொருந்திய மலங்கள் எல்லாம்—, இரிதர அகற்ற வல்லன்—, இதில் ஐயம் இல்லை—, எ - று.

(வி - ரை.) கருவிகள் - ஸாதநங்களாகிய ஸாமக்ரி. வேட்கை - விருப்பம். புரிதரல்- செய்தல். இரிதர - ஓட. மனம் வைத்து - சம்பாதிப்பதில் தீவிரதர மனமுடையவனாய். அன்று ஏ - அசைகள். (௪)

கண்ணிலன் முடவன்போலக் கருதரு ஞான கன்ம
மெண்ணுறு மிரண்டு மொன்றை யொன்றவா யிருத்த லாலே
நண்ணுறு பலன்வி ருப்பி னன்றுறத் துறந்தா னேனும்
பண்ணுக வவையிரண்டு மெனமறை பகரு மன்றே.

(ப-ரை.) கண்ணிலன் முடவன் போல—, கருது அரு-நினைத்தற்கரிய, ஞானகன்மம்- ஞானகர்மங்களாக, எண்ணுறும்-எண்ணப்பட்ட, இரண்டும் ஒன்றையொன்று அவாயிருத் தலாலே—, நன்றுறத் துறந்தான் ஏனும்—, நண் உறு - அடைதற்குரிய, பலன் விருப் பின்—, அவை இரண்டும் பண்ணுக என—, மறை பகரும்—, எ - று.

(வி - ரை.) துறத்தல் - விடல். ஏனும் எனினும் என்பதன் மரூஉ. நன்றுறத்துறந் தோன் - வைராக்யமுள்ள சிவயோகி. பலன் விருப்பு - புருஷார்த்தம் பெற விருப்பம். பண்ணல் - அநுஷ்டித்தல். குருடனும் முடவனும் ஒருவனை யொருவன் பற்றி வழி நடப்பது போல என்று இதனை "அந்தபங்கு" நியாயம் என்பர். (௫)

அறிவினர் தமக்கு ஞான மடைந்ததிங் கெனினு மென்று
நெறிதரு கருமங் கூடி நின்றிடு மதனு லம்ம
செறிதரு பலனிற் றீர்ந்து செய்கரு மங்க ளேனும்
வறிதென விடலென் றோது மதிமுடி வள்ள னூலே.

(ப - ரை.) அறிவினர் தமக்கு—, இங்கு—, ஞானம் அடைந்தது எனினும்—, என்றும்—, நெறிதரு கருமம் கூடி நின்றிடும்—, அதனுல்—, செறிதரு - பொருந்திய, பலனில் தீர்ந்து செய் கருமங்களேனும்—, வறிது என விடல் என்று - வீணென்று விடற்கவென்று, மதிமுடி வள்ளல் நூல் ஓதும் - சிவாகமங்கள் சொல்லும், எ - று.

(வி - ரை.) அறிவினர் - வித்வான்கள். பலனில் தீர்தல் - பயன்றருதலொழிதல். வறிது-வீண். விடற்க - விடாதை. மதி முடி-சந்த்ரகண்டத்தை யணிந்த சடையையுடைய. வள்ளல் - சிவபிரான். மதிமுடி வள்ளல் நூல் என்றது சிவாகமங்களை. வித்வான்களுக்கு ஜ்ஞாநம் ஸித்தித்திருப்பினும் பயனை விரும்பாது கர்மமும் செய்யவேண்டியதாய் விதிக் கப்பட்டுளதாதலின் கர்மத்தை விடக்கூடாது என்பதிதன் கருத்து. (௬)

யாவர்க்கு மாசா ரந்தா னெழிலணி யாகி நிற்கு
மோவுற்றோ னதனை நிந்தை யுறுகுவ னுசா ரத்தை
மேவுற்ற ஞானந் தன்னல் விளங்குறு மீச னென்றூற்
சாவுற்று மெய்வீழ் காறுஞ் சார்வதா சார மன்றே.

(ப - ரை.) யாவர்க்கும் ஆசாரம் எழில் அணியாகி நிற்கும்—, அதனை ஓவுற்றோன்-அதை விட்டவன், நிந்தை உறுகுவன்—, ஆசாரத்தை மேவுற்ற ஞானம்தன்னால்—, ஈசன் விளங்குறும் என்றால்—, சாவுற்று மெய் வீழ்காறும்—, சார்வது - தொடர்ந்திருப்பது, ஆசாரம்—, எ - று.

(வி - ரை.) ஆசாரம் - ஒழுக்கம். எழில் - அழகு. அணி - ஆபரணம். ஓதல் - விடுதல். சாவுற்று - இறந்து. மெய் - சரீரம். வீழ்காறும் - விழுகிறவரைக்கும். (எ)

கிரியாகமத்தலம் - முற்றும்.

உ

ஓம் வீரபத்ராய நம.

ஐம்பத்தைந்தாவது

(உ.) பாவாகமத்தலம்.

[அதாவது - விஷயபோகங்களை நிஷ்காமமாகத் துய்க்கும் சிவயோகி அகத்தும் புறத்தும் சிவத்தை நோக்கும் லக்ஷணமே பாவாகமம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வீவுறு மவாவி னோடு விளங்கறி வுடைமை யோன்றன்
பாவசின் னங்க டாமே பகர்பாவா கமம தென்ன
யாவரு மறிய நிற்கு மென்றுளந் துணிந்து கோடி
பூவல யங்க ளேத்தப் பொதியமா மலையி லுற்றாய்.

(ப - ரை.) பூவலயங்கள் - பூமண்டலங்கள், ஏத்த - துதிக்க, பொதியமாமலையில்—, உற்றாய் - வசிப்பவனே, வீவுறும் அவாவினோடு - நிராசையோடு, விளங்கு - பிரகாசிக்கிற, அறிவுடைமையோன் தன் - அறிவுடையவனது, பாவ சின்னங்கள் தாமே—, (ஏனையவர்களுக்கு) பகர் - சொல்லப்பட்ட, பாவாகமம் என்ன—, யாவரும் அறிய நிற்கும் என்று—, உள்ளம் துணிந்து கோடி - மனந்துணிந்து கொள்வாயாக, எ - று.

(வி - ரை.) வீவுறல் - நசித்தல். சின்னங்கள் - அடையாளங்கள். கொள்+தி என்பன கோடியென்றாயின. வீவுறும் அவா - நசித்த அவா (நிராசை). (க)

சீரணி சிவோக மென்னும் பாவனை சிவம தற்குக்
காரணம் வேறு ஞான கருமங்கா ரணமே யாகா
பூரண வத்து வாகும் பொலிதரு ஞான மத்தின்
காரணந் தியான மந்தத் தியானமே கருத்திற் கொள்க.

(ப - ரை.) சீர் அணி - சிறப்புப் பொருந்திய, சிவோகம் என்னும் பாவனை (யானது)—, சிவமதற்குக் காரணம்—, வேறு ஞானம் கருமம் காரணமே ஆகா—, பூரண வத்துவாகும்,— பொலிதரு ஞானம்—, அதின் காரணம் தியானம்—; (ஆதலால்) அந்தத் தியானமே கருத்தில் கொள்க—, எ - று.

(வி - ரை.) சிவமதற்குக் காரணம்-சிவத்தைப் பெறுதற்குக் காரணமாகும். கருமம்-ஆசாரம். அதின் காரணம் என்பது அத்தின் காரணம் என ஒற்றிரட்டித்து வந்தது. "இத்தை மெய்யெனக்கருதி நின்றிடர்க்கடற் சுழித்தலைப்படுவேனை" என்றார் மேலோரும். பூரண வத்துவாகும் பொலிதரு ஞானம் - ஞானமானது அறியப்படும் பொருளை யளாவியது (வஸ்து தந்த்ரமாம்). அதின் காரணம் தியானம் - தியானமானது ஞானத்தினால் அறியப்பட்ட பொருளின் தன்மையைப் பெறுதற்குக் காரணமாம். பொருளின்

தன்மையைப் பெறுதலாவது அப்பொருளாகத் தானுதலாம். அந்தத் தியாகமே கருத்தில் கொள்க - பிசிவஸாக்ஷாத்காரம் உண்டாயினும் பிசிவத்தை த்யாகிக்கவேண்டும். (உ)

நிரந்தர முட்பு றம்பு நிறைந்துள் மகேசன் றன்னைப்
பரந்தரு பரமா நந்தப் பயன்பெறும் பொருட்டு மேவி
விரிந்துள கலைக ளெல்லாம் விளங்கிய வறிவி னாலே
தெரிந்துள் புலவ ரென்றுந் தியாகமே செய்க மாதோ.

(ப - ரை.) நிரந்தரம் - சதாகாலம், உள் புறம்பு நிறைந்துள்ள மகேசன்தன்னை—, பரம்தரு - மேன்மைபொருந்திய, பரமாநந்தப்பயன் பெறும் பொருட்டு—, மேவி விரிந்துள்ள கலைகளெல்லாம்—, விளங்கிய அறிவினாலே தெரிந்துள்ள புலவர்—, என்றும் தியாகமே செய்க—, எ - று.

(வி - ரை.) புறம்பு - வெளி. பரமாநந்தம் - பேரின்பம். கலைகள் - நூல்கள். புலவர்-அறிஞர் (வித்வான்கள்.) (௩)

பொருளறு மொழியு நூலிற் புக்குறு மதியுந் தன்பா
லருளுறு கொழுநற் றீர்ந்த வரிமதர் மழைக்கட் செவ்வாய்ச்
சுருளுறு மலர்மென் கூந்தற் றுடியிடை மாதும் போலுந்
தெருளுறு பாவ மோடு சேர்ந்திடாக் கிரியை யன்றே.

(ப - ரை.) தெருள் உறு பாவமோடு சேர்ந்திடாக் கிரியை—, பொருள் அறு மொழியும்—, நூலில் புக்குறு மதியும்—, தன்பால் - தன்னிடத்தில், அருள் உறு - அன்பு மிக்க, கொழுநன் தீர்ந்த - கணவனை விட்டுப்பிரிந்த, அரி மதர் மழைக் கண்—, செவ்வாய்—, சுருள் உறு மலர் மென் கூந்தல்—, துடியிடை—, மாதும்—, போலும் - ஒக்கும், எ-று.

(வி - ரை.) தெருள் - தெளிவு. பாவம் - பாவனை. கிரியை - கர்மம். பொருள் - அர்த்தம். மதி - அறிவு. அரி - செவ்வரி. மதர்த்தல் - களித்தல். மழை - குளிர்ச்சி. துடி - உடுக்கை. இடை - மருங்குல். பாவமோடு சேர்ந்திடா - பாவனையில்லாத. பொருள் அறு மொழி - பொருளில்லாதசொல். நூலில் புக்குறு மதி - வேத சம்மத மில்லாத ஜ்ஞாநம்.

கண்ணிலான் வடிவ மொன்றுங் காண்கிலா வாறு போல
வெண்ணுபா வனையி லாதா னிறைவனைக் காணுன் முக்கட்
பண்ணவன் றனையர்ச் சிக்கப் பாவனை மனத்தி னோடு
நண்ணுறுன் சிவனை யந்தப் பாவனை நழுவி னோனே.

(ப - ரை.) கண் இல்லான்—, வடிவம் ஒன்றும் காண்கிலா ஆறு போல—, எண்ணு பாவனை இலாதான் —, இறைவனை காணுன் —, பாவனை மனத்திஞேடு —, முக்கண் பண்ணவன் தன்னை அர்ச்சிக்க—, அந்த பாவனை நழுவினோன்—, சிவனை நண்ணுறுன்—, எ - று.

(வி - ரை.) கண் இல்லான் - குருடன். இறைவன் - சிவபிரான். முக்கண் பண்ணவன் - மூன்று கண்களையுடைய தேவன். அர்ச்சிக்க - வியங்கோள். நண்ணுறல் - அடைதல். நழுவினோன் - நழுவின பிசிவயோகி. (௫)

கீடசிந் தனையி னாலே கிருமியுங் கீட மாகும் *
பீடுறுஞ் சிவனை யென்றும் பிரிவறத் தியாகஞ் செய்வோ
னீடுறு சிவமே யாவ னிட்கள் சிவத்தி யாகங்
கூடருந் தகைய தேனுங் குறிக்கொணீ யவன்றன் வாழ்வே.

---

* புழுவானது குளவியை த்யாநித்தலால் எவ்வாறு குளவியின்தன்மை புழுவுக்கு ஏற்படுகின்றதோ; அவ்வாறே யோகியின் பாவனையானது பிசிவனைக்குறித்து இடைவிடாது த்யாநிக்க நன்கு வாய்த்தால் யோகிக்கு பிசிவத்வம் நிகழ்வது என்று கூறுப வடநூலார்.

(ப - ரை.) கீட சிந்தனையினாலே—, கிருமியும் கீடம் ஆகும்—, பீடு உறும் - பெருமை பொருந்திய, சிவனை—, என்றும் பிரிவு அற தியானம் செய்வோன்—, நீடுறு சிவமே ஆவன்—, கிட்டஅள சிவத்தியானம்—, கூடு அரு தகையது எனும் - கிடைத்தற்கரிய தன்மைத்தாயினும், அவன் தன் வாழ்வே நீ குறிக்கொள்—, எ - று.

(வி - ரை.) கீடம் - கோற்புழு (குளவி). கிருமி - பச்சைப்புழு (கீரைப்புழுவுமாம்). கூடு - கூடுதல். வாழ்வு - ஸர்வஜ்ஞத்வம் முதலிய செல்வம். குறிக்கொளல் - கடைப்பிடித்தல் (சிந்தித்தல்). (௬)

பாவாகமத்தலம் - முற்றும்.

உ

ஓம் கணநாதாய நம:

ஐம்பத்தாறுவது

(௩.) ஞானாகமத்தலம்.

[ அதாவது - ஜகத்தெல்லாம் ஶிவாத்மகமானது, ஶிவத்தைவிட வேறு பதார்த்தமில்லை, நானே ஶிவனாயிருக்கிறேன் என்னும் அந்தப் பாவாகம ஸம்பந்நனான ஶிவயோகியின் ஜ்ஞாந சிந்நங்கள் எத்தனையுண்டோ, அத்தனையும் தேஹிகளுக்கு மோக்ஷ ஹேதுக்களாதலால் ஞானாகமம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நவின்றிடும் பரம யோகி ஞானசின் னங்க டாமே
பவந்தொடர் மனிதர்க் கெல்லாம் பவமற வின்ப வீடிங்
குவந்தருள் செய்யு ஞானா கமமென வுரைப்பர் மேலோர்
தவந்தனி யுருவு கொண்ட தனையசந் தநவெற் புள்ளோய்.

(ப - ரை.) தவம் தனி உருவு கொண்டது அனைய - தவமே ஒப்பற்ற உருக்கொண்டாற்போன்ற, சந்தந வெற்பு உள்ளோய்—, நவின்றிடும் - சொல்லப்பட்ட, பரமயோகி (யின்)—, ஞான சின்னங்கள் தாமே—, பவம் தொடர் மனிதர்க்கெல்லாம்—, பவம் அற—, இங்கு இன்ப வீடு—, உவந்து அருள் செய்யும்—, ஞானாகமம் என மேலோர் உரைப்பர்—, எ - று.

(வி - ரை.) சந்தநவெற்பு - சந்தந மரங்களடர்ந்தமலை (பொதியமலை). சந்தந வெற்பு உள்ளோய் என்றது அகத்தியமுனிவரை. சின்னங்கள் - குறிகள். பவம் - பிறவி (பாவமுமாம்). வீடு - முக்தி. (க)

கிரியைபா வங்க டம்மாற் கிடைத்திடும் பயனொன் றில்லை
கிரியைபா வங்கண் மேவு ஞானத்தாற் கிடைக்கு முத்தி
பிரிவிலா நூறு கோடி பிறப்பினி லெனினுங் கன்ம
முரியவீ டுதவா தும்ம வுதவுவ துயர்ஞா னங்காண்.

(ப - ரை.) கிரியை பாவங்கள் தம்மால்,—, கிடைத்திடும் பயன் ஒன்று இல்லை—, கிரியை பாவங்கள் மேவும் ஞானத்தால் முத்தி கிடைக்கும்—, கன்மம் - ( கேவலம் ) கன்மமானது, பிரிவிலா நூறு கோடி பிறப்பினில் எனினும்—, உரிய வீடு உதவாது—, (ஆதலால்) உயர் ஞானம் உதவுவது—, எ - று.

(வி - ரை.) பாவங்கள் - பாவனைகள். கிரியை பாவங்கள் தம்மால் - கர்மத்தினலா வது அல்லது பாவனையாலாவது. நூறுகோடி - எண்ணிறந்த எனினுமாம். வீடு உத வாது - முத்தியைக் கொடுக்காது. (உ)

ஞானமற் றொழிந்த கன்ம நவைதரு பிறப்பிற் கேது
வானவக் கருமந் தானே யறிவொடு கூடு மாயி
னீனவப் பிறவி மாற்று மீவது கருமம் பொன்றும்
வானிலைப் பதமே ஞானம் வழங்குவ தழியா வீடு.

(ப - ரை.) ஞானம் அற்று ஒழிந்த கன்மம்—, நவை தரு பிறப்பிற்கு ஏது—, ஆன அ கருமந்தானே அறிவொடு கூடுமாயின் —, ஈனம் அ பிறவி மாற்றும்—, கருமம் ஈவது—, பொன்றும் - அழிகின்ற, வான் நிலைப்பதமே—, ஞானம் வழங்குவது—, அழியா வீடு—, எ - று.

(வி - ரை.) நவை - குற்றம். கருமம் - கிரியை. மாற்றல் - ஒழித்தல். பொன்றல் - அழிதல். வான்நிலைப்பதம் - ஸ்வர்க்கம் முதலிய பதவி. பிறவி - ஸம்ஸாரம். (௩)

முன்னுறு நூல்க ளாதி முயற்சியாற் குரவன் சொல்லாற்
பன்னரு ஞான மொன்றே பயிலுக வொழிந்த வற்று
லென்னுறு பலன்ஞா னந்தா னியல்சிவாத் துவித நல்கித்
துன்னுறு பவங்க ளெல்லாந் தொலைத்திடு நல்லோர்க் கன்றே.

(ப-ரை.) முன் உறும் - முன்னமே யுண்டாயிருக்கிற, நூல்கள் ஆதி முயற்சியால்—, குரவன் சொல்லால்—, பன் அரு ஞானம் ஒன்றே பயிலுக—, ஒழிந்தவற்றால்—, உறு பலன் என்—, ஞானந்தான் - ஞானமே, இயல் சிவாத்துவிதம் நல்கி—, நல்லோர்க்கு—, துன்னுறு பவங்களெல்லாம், தொலைத்திடும்—, எ - று.

(வி-ரை.) குரவன்சொல் - குருமொழி. பயிலல் - பழகுதல். சிவாத்துவிதம்-ஶிவைக் யம். நூல்கள் ஆதி முயற்சியால் - ஶாஸ்த்ராப்யாஸமுதலிய ப்ரயத்நத்தால். குரவன் சொல்லால் - நல்ல ஆசிரியரது உபதேசத்தால். பவம் - ஸம்ஸாரபந்தம். (௪)

தெரிந்திடு முலக மெல்லாஞ் சிவமயஞ் சிவனில் வேறா
யிருந்துள பொருளொன் றில்லை யாதலாற் சிவனு னென்றே
யுரந்தரு முணர்வு தானே யுத்தம ஞான மென்ப
ரருந்தவ முனிவ ரேறே யாகம நெறியு ணர்ந்தோர்.

(ப - ரை.) அருந்தவம் முனிவர் ஏறே—, ஆகமநெறி உணர்ந்தோர்—, தெரிந்திடும் உலகம் எல்லாம்—, சிவமயம்—, சிவனில் வேறாய் இருந்து உள்ள பொருள் ஒன்றில்லை—, ஆதலால்—, சிவன் நான் என்றே—, உரம் தரும் உணர்வுதானே—, உத்தம ஞானம என்பர்—, எ - று.

(வி - ரை.) அருந்தவ முனிவர் ஏறு என்றது அகத்தியமுனிவரை. ஏறு - சிறந்தவன் என்னும் பொருளில் வந்தது. உரம் - உறுதி. சிவமயம் - ஶிவஸ்வரூபம். (௫)

கண்ணிலா னெதிர்ந்த தொன்றைக் காண்கிலா னதுபோ னீங்கா
துண்ணிலா மிறையை ஞான மொழிந்தவன் காணு னொன்று
நண்ணுறு தொழிக்கும் பாச நற்சிவ காட்சி ஞானக்
கண்ணுளார் தங்கட் கந்தக் காட்சிதா னெளிது மாதோ.

(ப - ரை.) கண் இல்லான்—, எதிர்ந்தது ஒன்றைக் காண்கிலான்—, அதுபோல்—, ஞானம் ஒழிந்தவன்—, நீங்காது—, உள் நிலாம் - உள்ளே விளங்கிக் கொண்டிருக்கிற,

இறையைக் காணான்—, நல் சிவகாட்சி—, என்றும் பாசம் கண்ணுறாது ஒழிக்கும்—, ஞானக்கண்ணுளார் தங்கட்கு—, அந்தக் காட்சி—, எளிது—, எ - று.

(வி - ரை.) நிலவல் - விளங்கல். இறை - சிவபிரான். சிவகாட்சி - சிவதரிசநம். (சிவஸாக்ஷாத்காரம்). ஞானக்கண்ணுளார் - ஞானியர். பாசம் கண்ணுறாது ஒழிக்கும் - பிறவிப்பிணியை நீக்கும். (சு)

எறிசுட ரன்றி யில்லி லிருளறா ததுவே போல
வறிவினை யொழிய நீங்கா தகத்துறு மோகந் தானு
மறிவறு ஞான மாகும் வலிகெழு கதவங் கொண்டு
பொறிவழி யடைத்து மிக்க பொதியில்வீற் றிருக்க வல்லோய்.

(ப - ரை.) மறிவு அறு ஞானமாகும் - தடையற்ற ஞானமாகிய, வலிகெழு கதவம் கொண்டு - வன்மை மிகுந்த கதவினால், பொறிவழி அடைத்து—, மிக்க—, பொதியில் வீற்றிருக்கவல்லோய்—, எறிசுடர் அன்றி—, இல்லில் இருள் அறாது—, அதுவேபோல—, அறிவினை யொழிய—, அகத்துறும் மோகம்தானும் நீங்காது—, எ - று.

(வி - ரை.) கதவம்-கதவு. பொறிவழி-இந்த்ரிய த்வாரங்கள். பொதியில்-பொதியமலை, பொதியமலையில் எனினுமாம். சுடர் - ஆகுபெயர். எறிசுடர் - தீபம். இல் - வீடு. அகம்-மனம். புறவிருள் தீயில்லாது நீங்காதது போல அகவிருள் ஞானமில்லாது நீங்காதென்பதாம். அகத்துறும் - சித்தத்திலுள்ள. (எ)

ஞானகமத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் ப்ரஜாபதயே நம:

## ஐம்பத்தேழாவது

## (சு.) சகாயத்தலம்.

---

[அதாவது - ஜ்ஞாநாகமஸ்தல ஸம்பந்நனை பிவயோகி க்ரியா த்யாந பூஜைகளுக்குச் சரீரம் வேண்டியதா யிருக்க, அப்படிப்பட்ட சரீரத்தை வைராக்யாதிகளினால் கெடா திருக்கச் செய்தலால் சகாயன் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

கிரியைநற் பாவ ஞானங் கிடைத்திடா காய மின்றேல்
விரிதரு முலகில் யார்க்கும் விளம்புறி னதனால் யோகி
தரையுறு சகாய னாகச் சரிப்பனென் றெடுத்து ரைப்ப
ரரிமதர் மழைக்கண் மங்கை பாகனா கமங்கள் வல்லோர்.

(ப - ரை.) விரிதரும் உலகில்—, யார்க்கும்—, காயம் இன்றேல் - சரீரமில்லையானால், கிரியை நல் பாவம் ஞானம் கிடைத்திடா—, விளம்புறின் - சொல்லுமிடத்தில்—, அதனால் (சிவ) யோகி—, தரை - உலகத்தில், உறு - பொருந்திய, சகாயனாக சரிப்பன் என்று எடுத்துரைப்பர்—, (அவர்யாரெனின்) அரி - செவ்வரி பரந்த, மதர்-மதர்த்த, மழைக்கண்-குளிர்ச்சியாகிய கண்களையுடைய, மங்கை-உமாதேவியை, பாகன்-பாகத்திலுடையவனாகிய சிவபெருமானால் சொல்லப்பட்ட, ஆகமங்கள் வல்லோர்—, எ - று.

(வி-ரை.) விரிதரல்-விரிதல், பகுதி விரிதா. விளம்புறல்-சொல்லல், பகுதி விளம்புறு. அரி மதர் மழைக்கண் மங்கை பாகன் ஆகமங்கள் - சிவாகமங்கள். சகாயனாக சரிப்பன்-தேகமுடையவனாகச் சஞ்சரிப்பன். (க)

ஏகமா ஞான யோகி யென்னினு முடம்பி னனே
போகமா முத்தி யாதி பொருந்துவன் விறகை யின்றி
யாகுரு தொளிரு மங்கி யதுவென வாக்கை யின்றி
யோகிதா னான்ம ஞான முடையவ னாகா னன்றே.

(ப - ரை.) ஏகம் ஆம் ஞானயோகி என்னினும்—, உடம்பினனே - உடம்பைக் கொண்டே, போகம் ஆம் முத்தி ஆதி பொருந்துவன்—, விறகை இன்றி ஒளிரும் அங்கி ஆகுறாது —, அது என - அதுபோல, யோகி —, ஆக்கை இன்றி —, ஆன்ம ஞானம் உடையவன் ஆகான்—, எ - று.

(வி - ரை.) ஏகமாம் ஞானம் - ஶிவைக்ய ஜ்ஞாநம். உடம்பினனே யென்னுமேகாரம் தேற்றம், இது இன்றியமையாமைப்பொருட்டு. அங்கி அக்நி என்னும் வடசொற்றிரிபு. ஆக்கை - ஆகுபெயர். விறகின்றி நெருப்புண்டாதலில்லை அதுபோல உடம்பின்றி ஆன்ம ஞான முண்டாதலில்லை யென்பதாம். ஆன்மஞானம்-ஆத்மதத்வப்ரகாஶம் எனினுமாம். (உ)

ஒப்பறு பரமன் றானு முருவொடு பூசை கொள்வ
னப்பரி சுடம்பின் மேவி யருச்சனை கொள்வன் யோகி
செப்புமைந் தொழிற்கு மாகச் சிந்மய னுகு மீசன்
மெய்ப்புறு மூர்த்தி மானய் விளங்குவ னென்பர் மேலோர்.

(ப - ரை.) ஒப்பு அறு - ஒப்பற்ற, பரமன்தானும்-சிவபெருமானும், உருவொடு பூசை கொள்வன்—, அ பரிசு - அத்தன்மையாகவே, யோகி - சிவயோகியானவன், உடம்பில் மேவி அருச்சனை கொள்வன்—, செப்பும் - சொல்லப்படுகிற, ஐந்தொழிற்குமாக - பஞ்ச கிருத்தியத்தின் பொருட்டு, சிந்மயன் ஆகும் ஈசன்—, மெய்ப்பு உறும் - உண்மையாகிய, மூர்த்திமானய் விளங்குவன்—, என்பர் மேலோர்—, எ - று.

(வி - ரை.) உரு - மூர்த்தி (தேஹம்). பஞ்ச கிருத்தியம் - உத்பத்தி, ஸ்த்திதி, லயம், திரோபவம், அநுக்ரஹம் என்பன. மூர்த்திமான் - உருவமுடையவன். சிந்மயன் ஆகும் - நிஷ்களனுகிய. எங்கும் நிறைந்திருக்கும் ஈசன் - மஹாதேவன். (௩)

அயன்முத லாகி நின்ற வமரரு முத்தி வேட்ட
மயன்முனி முனிவர் தாமு மியாவையும் வழங்க வல்ல
செயன்மிகு தவமு டம்பாற் செய்தன ரத்த வத்திற்
கியன்முத லாய வாக்கை யினைவிட லாகா தன்றே.

(ப - ரை.) அயன் முதலாகி நின்ற அமரரும்—, முத்தி வேட்ட—, மயல் முனி - மயக்கத்தை வெறுத்த, முனிவர்தாமும்—, யாவையும் வழங்க வல்ல செயல் மிகு தவம்—, உடம்பால் செய்தனர்—, அ தவத்திற்கு —, இயல் - பொருத்தமாகிய, முதல் ஆய - மூலமாயுள்ள, ஆக்கையினை விடலாகாது—, எ - று.

(வி - ரை.) அயன் அஜன் என்னும் வடசொற்றிரிபு, பிறவாதவன் என்பது பொருள், இது மங்கல வழக்கு. அமரர்-இறவாதவர், இதுவும் அது. வழங்கல்-தருதல். மூவுலகிலும் ஸகல ஸித்திகளுக்கும் தவமே ஸாதநமாயிருத்தலால் 'செயல் மிகு தவம்' என்றார். பிரமன் முதலானோரும் உடம்பைக்கொண்டே தவஞ்செய்து முக்தியடையவேண்டு மென்பதாம்.

சகாயத்தலம் - முற்றும்.

உ

ஓம் ஹிரண்யரேதஸே நம:

# ஐம்பத்தெட்டாவது.

# (ரு) அகாயத்தலம்.



[அதாவது - ஶிவனுக்கு தேஹ ஸம்பந்தமிருப்பினும் காமாதி விகாரங்கள் எவ்வாறில்லையோ அவ்வாறே ஸகாயஸ்தல ஸம்பந்நனை ஶிவயோகி, தேஹ ஸஹிதனாயிருப்பினும் நான் மனிதனல்லன் தேவனல்லன் ராக்ஷஸனல்லன் ஶிவனாயிருக்கிறேன் என்னும் உணர்ச்சியினாலும் தேஹ விகாரங்க ளில்லாதிருப்பதினாலும் அகாயன் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

சாற்றிய பரம யோகி சகஞ்சிவ மயம தாகத்
தோற்றுறு நிலையி னற்பொய் மாயையின் றொடக்கி லாத
வாற்றலா லுதவி யாகு மாக்கைய னாத லாலே
போற்றுறு மகாய னென்றே புகன்றிடப் படுவ னன்றே.

(ப-ரை.) சாற்றிய - சொல்லப்பட்ட, பரம யோகி—, சகம் சிவமயமதாக—, தோற்றுறும் நிலையினால்—, பொய் மாயையின் தொடக்கு இல்லாத ஆற்றலால்—, உதவியாகும் ஆக்கையன்—, ஆதலாலே—, (அவன்) போற்றுறும் - (யாவரும்) வணங்குதற்குரிய, அகாயன் என்றே புகன்றிடப்படுவன்—, எ - று.

(வி - ரை.) பரமம் - மேன்மை. தொடக்கு - சம்பந்தம். ஆற்றல்-ஶக்தி. போற்றுறும் என்பதற்குப் பகுதி போற்றுறு. உதவியாகும் ஆக்கையன் - ஔபசாரிகதேஹி. (க)

சங்கர னெனமெய் யோடு சாரினும் பரம யோகிக்
கிங்குறு முடல்வி கார மிலாமையா லகாய னாகும்
பொங்கொளி யம்பரத்திற் புக்குறு மியோகிக் காக
மெங்குள துடம்பி போல விருப்பது பிராந்தி யன்றே.

(ப - ரை.) சங்கரன் என - சங்கரன்போல, மெய்யோடு சாரினும் - உடம்போடு கூடியிருப்பினும், பரமயோகிக்கு—, இங்கு உறும் உடல் விகாரம் இல்லாமையால்—, அகாயன் ஆகும்—, பொங்கு ஒளி அம்பரத்தில் புக்குறும் யோகிக்கு—, ஆகம் எங்கு உளது—, உடம்பி போல இருப்பது பிராந்தி அன்று—, எ - று.

(வி - ரை.) சங்கரன் - உயிர்களுக்கு இதஞ்செய்பவன் என்னும் பொருடருவதோர் வடசொல் (சிவன்). மெய்-மங்கல வழக்கு. சார்தல் - கூடுதல். பொங்கொளி யம்பரத்தில் புக்குறும் யோகி-பேரானந்த சின்மயமாகிய லிங்கத்தில் லயித்த சித்தமுடையவன். பொங்கொளி அம்பரம் - சிதாகாஶம் எனினுமாம். ஆகம் - சரீரம். உடம்பி - உடம்புடையவன். பிராந்தி - ப்ரமை. (உ)

ஆக்கையின் மான மில்லா தருஞ்சிவ யாகி நிற்கு
நோக்குறு மியோகிக் காக்கை நுவன்றிடு முலக மென்றாற்
போக்கறு முடல மொன்றாற் பொருந்துறும் வாதை யாதோ
வீர்க்குமிந் தியவாங் கார விடரவற் கில்லை யன்றே.

(ப-ரை.) ஆக்கையின் மானம் இல்லாது—, அரும் சிவம் ஆகி நிற்கும்—, நோக்குறும் யோகிக்கு—, நுவன்றிடும் - சொல்லப்படுகிற, உலகம் - உலகமே, ஆக்கை என்றால்—,

போக்கு அறும் - போக்கப்படாத, உடலம் ஒன்றால் பொருந்துறும் வாதை யாதோ—, ஈர்க்கும் - (விடயங்களில்) இழுத்துச் செல்லுகிற, இந்திய ஆங்கார இடர்—, அவற்கு இல்லை—, எ - று.

(வி - ரை.) மானம் - பற்று (அபிமானம்) நுவலல் - சொல்லல். வாதை - துக்கம். ஈர்த்தல் - இழுத்தல். இந்திய இடர் - இந்த்ரியங்களால் உண்டாகும் துக்கம். ஆங்கார இடர் - அஹங்காரத்தால் உண்டாகும் மயக்கம். (௩)

மயக்குறு மனித னல்லேன் வானவன் றானு மல்லே
னியக்கனு மல்லேன் மிக்க விராக்கத னல்லே னென்று
முயர்த்துறு சிவமே நானென் றுணர்ந்தவன் றனக்கு வந்து
பயக்குறு முடம்பு செய்யுங் கருமமென் பயனைச் செய்யும்.

(ப - ரை.) மயக்குறு மனிதன் அல்லேன்—, வானவன் தானும் அல்லேன்—, இயக்கனும் அல்லேன்—, மிக்க இராக்கதன் அல்லேன்—, என்றும்—, உயர்த்துறு சிவமே நான் என்று—, உணர்ந்தவன் தனக்கு—, வந்து பயக்குறும்—, உடம்பு செய்யும் கருமம்—, என் பயனைச் செய்யும்—, எ - று.

(வி - ரை.) பயக்குறும் - பயன்படுகிற. வானவன் - தேவன். இயக்கன் - யக்ஷன். இராக்கதன் - ராக்ஷஸன். கர்மம் - வ்யாபாரம். ஈண்டு, இச்செய்யுளைக் கவனிக்க :—

பிரபுலிங்கலீலை.

*வான மல்லேன் வளியல்லே னழனீ ரல்லேன் மண்ணல்லேன்*
*ஞான மல்லேன் வினையல்லே ஞனே சிவமென் றெண்ணினே*
*னூனை யல்லா வொரு சிவமே யாவனிவ் வாறுன்னுதா*
*னீன மெல்லா முடையவுடம் பெடுத்துச் சுழனு மெஞ்ஞான்றும்.* (௪)

அகாயத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் துர்த்தர்ஷாய நம:

ஐம்பத்தோன்பதாவது

## (௬௯.) பரகாயத்தலம்.

[அதாவது - அகாயனான பிரவயோகி, தேசிகனாகவும் மாயாதீதனாகவும் ஜ்ஞாநாநந்தனாகவுமிருப்பினும் ஶரீரியாயிருப்பதனாலும் ஸாக்ஷாத் பரப்ரஹ்மமே தான் என்று அறிந்திருப்பதனாலும் பரகாயன் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பகுதியை வசிக ரிக்கும் பான்மையான் மாயா மார்க்கத்
தொகுதியை நீங்கி நிற்குந் தூய்மையா லறிவா நந்தத்
தகுதிகொள் பிரமந் தானுத் தகும்பர காய னுவன்
மிகுதிகொ டவத்தர் கோவே விளம்புறு மகாய னென்றே.

(ப - ரை.) மிகுதி கொள் - மேன்மையைக்கொண்ட, தவத்தர் கோவே—, பகுதியை வசிகரிக்கும் பான்மையால்—, மாயாமார்க்கத் தொகுதியை நீங்கி நிற்கும் தூய்மையால்—,

அறிவாநந்தத் தகுதி கொள் பிரமம் தான் ஆய்—, தகும் பரகாயன் ஆவன்—, (அவன்) அகாயன் என்று விளம்புறும் - அகாயனென்று சொல்லப்படுவன், எ - று.

(வி-ரை.) தவத்தர் கோ - தவஞ்செய்வோர்க்கரசன் (அகத்தியர்). கோ வென்பது னகரச்சாரியை பெற்று கோன் எனவும் வழங்கும். பகுதி - ப்ரக்ருதி. வசிகரிக்கும் - வசப்படுத்தும். தொகுதி - கூட்டம். தூய்மை - பரிஶுத்தம். தகுதி - பெருமை. (௬)

பேரறி வுருவாய் நின்ற பிரமமே வடிவ மானோற்
கேரறு மாயை யாக்கை யாற்பய மென்னே ஞான
வாரழ லாற்பி றப்பிற் காதியா முடலஞ் சுட்டு
நேரறு சிவம டைந்தோ னிகழ்பர காய னென்பான்.

(ப - ரை.) பேர் அறிவு உரு ஆய் நின்ற பிரமமே வடிவம் ஆனோற்கு—, ஏர் அறு - அழகற்ற, மாயை யாக்கையால்—, பயம் என்னே—, ஞானம் - (திடமான அபரோக்ஷ) ஞானமாகிய, ஆர் அழலால்—, பிறப்பிற்கு ஆதி ஆம் உடலம் சுட்டு—, நேர் அறு - நிகரற்ற, சிவம் அடைந்தோன்—, நிகழ் பரகாயன் என்பான் - விளங்குகிற பரகாயனென்று சொல்லப்படுவான், எ - று.

(வி - ரை.) பேரறிவுருவாய் நின்ற - ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமாய் விளங்குகின்ற. வடிவம் - சரீரம். ஆனோற்கு - ஞானிக்கு. மாயை யாக்கை - மாயாசரீரம் (ப்ரக்ருதி ஸம்பந்தமான சரீரம்). ஆர் அழல் - பெரு நெருப்பு. ஆதி - விதை. சிவம் அடைந்தோன் - ஶிவதத்வத்தைப் பற்றினவன். (௭)

வினைதரு மனோவி ருத்தி விடயவிந் தியங்க ளெல்லா
மெனையதி லடங்கு மந்த விருஞ்சிவ மேயி வற்குத்
தனியுரு வாகு நானே சிவமெனச் சகங்க ளெல்லா
நனியறி வாகிக் கண்டோற் குடல்சொல னன்மா லாகும்.

(ப - ரை.) வினைதரும் - வினையினால் தரப்பட்ட, மனோவிருத்தி விடய இந்தியங்கள் எல்லாம்—, எனையதில் அடங்கும் - எதனிடத்தடங்குமோ, அந்த இரும் சிவமே—, இவற்கு தனி உரு ஆகும்—, நானே சிவம் என—, சகங்கள் எல்லாம் நனி அறிவாகி கண்டோற்கு—, உடல் சொல்லல் - உடம்பிருப்பதாகச் சொல்லுதல், நல் மால் ஆகும் - மிக்க மயக்கமாகும், எ - று.

(வி-ரை.) மனோவிருத்தி - மனோவ்யாபாரம். விடயம் - ஶப்தாதிகள். இந்தியங்கள் - ஶ்ரோத்ராதிகள். நனி - மிகுதி. மயக்கம் - விபரீதஞானம் எனினுமாம். விடயம் - வாஸனைகள் எனினுமாம். கர்மத்தால் வினையும் வாஸனை என்றதனால் கர்மம் அநுபவிக்கப்பட்டுப்போயினும் வாஸனுமாத்ரமாய்ச் சிலகாலம் இருக்கும் என்பதைக் குறித்தது. வாஸனையானது ஶுபம் அஶுபம் என இருவகைப்படும். ஶுபவாஸனை புண்ய கார்யங்களைச்செய்ய விருப்பத்தை யுண்டாக்கும். அஶுபவாஸனை பாபகார்யங்களைச் செய்ய விருப்பத்தையுண்டாக்கும். புண்யபாபகார்ய ஸம்பந்தமான எண்ணமானது மனோவ்ருத்தி என்பதாம். இந்த மனோவ்ருத்தியால் இந்த்ரிய வ்யாபாரம் நிகழ்வதாம். ஆதலால், இந்த்ரியங்களை யடக்க மனோவ்ருத்தி யடங்கும், மனோவ்ருத்தி யடங்க வாஸனை நஶிக்கும், வாஸனை நஶிக்க முக்தி கிடைக்கும். (௮)

சோதியாம் பிரம மேதன் சொரூபமாய்ச் சிந்தை செய்வோன்
மேதையா முடம்போ டுற்று மெய்யிலி சீவன் முத்தன்
போதமா மியோகி யாக்கை யிருப்பினும் போகி னுந்தான்
நீதிலா முத்தி யாகு மென்பர்நூ றிருந்தக் கற்றோர்.

(ப-ரை.) நூல் - நூல்களை, திருந்தக் கற்றோர்—, சோதி ஆம் பிரமமே தன் சொரூபமாய்ச் சிந்தை செய்வோன்—, மேதை ஆம் உடம்போடு உற்றும்—, மெய்யிலி - உடம்பில்லாதவனாகிய—, சீவன் முத்தன்—, போதம் ஆம் - அறிவுருவாகிய, யோகி (யின்) யாக்கை—, இருப்பினும் போகினும்—, (அவனுக்கு) தீது இல்லா முத்தி ஆகும் என்பர்—, எ - று.

(வி - ரை.) மேதை - தோல், நரம்பு முதலியவை. முத்தி ஆகும் - ஜீவன் முக்தி உடனே கிடைக்கும். (௪)

பெரும்பவ நோய்வ ருத்தல் பிறங்குதன் சொரூப ஞானம்
பொருந்துறு மளவே யன்றோ பொங்கொளி யிரவி தோன்றப்
பரந்திடு மிருளு முண்டோ பகர்ந்திடிற் காலா தீத
வரும்பத மடைந்து ளோனுக் காக்கையுட் படுத லின்றே.

(ப - ரை.) பெரும் பவநோய் வருத்தல்—, பிறங்கு - விளங்குகிற, தன் சொரூப ஞானம் பொருந்துறும் அளவே அன்றோ—, பொங்கு ஒளி இரவி தோன்ற—, பரந்திடும் - பரவிய, இருளும் உண்டோ—, பகர்ந்திடின் - சொல்லுமிடத்தில், காலாதீதம்—, அரும் பதம் அடைந்துளோனுக்கு—, ஆக்கையுள் படுதல் இன்று—, எ - று.

(வி - ரை.) பவநோய் - பிறவிப்பிணி (ஸம்ஸாரதுக்கம்). இரவி - சூரியன். தோன்றல் - உதித்தல். அதீதம் - கடத்தல் (எட்டப்படாமை). பகர்தல் - சொல்லுதல். கலா என்பது காலா என நீண்டது. கலாதீதம் - கலைகள் கடந்தது. அரும்பதம் அடைந்துளோன் - அரிய பதத்தில் நிலைபெற்றவனாகிய மஹா ஜ்ஞாநி. (௫)

பரகாயத்தலம் - முற்றும்.

உ

ஓம் ஸ்ரீஶாய நமஃ

அறுபதாவது

௬௰ (௬.) தருமாசாரத்தலம்.

—ooo—

[அதாவது - அஹிம்ஸா, ஸத்யம், ப்ரஹ்மசர்யம், ஆஸ்தேயம், தயை, க்ஷமை, ஸஹஜ தாநம், லிங்கபூஜை, பஞ்சாக்ஷரீ ஜபத்யாநம், ஸத்குரு ஸேவை, சரணர் ஸங்கம், மநோ நிக்ரஹம், ஶிவஸித்தாந்த விஶ்வாஸம், வைராக்யம், விவேகம், வித்யை, இந்த்ரிய நிக்ரஹம், பக்தி, நீதி, நிகமாகமங்களில் நம்பிக்கை ஆகிய ஆசாரங்கள், அந்தப் பரப்ரஹ்ம ஸ்வரூபனும் பரகாயனுமான ஶிவயோகிக்கு ஸ்வபாவமா யுண்டாயிருப்பன. அதனால் அவ்வாசாரமே எல்லாருக்கும் அநுஸரணீயமான தர்மமாயிருப்பதால் தருமாசாரம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அப்பர காயன் செய்வ தியாதொரா சார மம்ம
செப்புறு மதுதான் யார்க்குஞ் செய்திடுந் தரும மாகி
யொப்பறு முதவி யாமென் றுரைப்பர்க ளுணர்வின் மிக்கோர்
துப்புறழ் சடிலக் கற்றைச் சுடர்முடி முனிவர் வேந்தே.

(ப - ரை.) துப்பு உறழ் - பவளம் போன்ற, சடிலக் கற்றை - சடைக்கற்றையாகிய, சுடர்முடி - சுடர்முடியையுடைய, முனிவர் வேந்தே—, அ - அந்த, பரகாயன் செய்வது யாதொரு ஆசாரமோ—, செப்புறும் - சொல்லப்பட்ட, அது தான் - அதுவே, யார்க்கும்

செய்திடும் தருமம் ஆகி—, ஒப்பு அறம் உதவியாம் என்று—, உணர்வின் மிக்கோர்—, உரைப்பர்கள்—, எ - று.

(வி-ரை.) சடிலம் - சடை. கற்றை - திரட்சி. உதவி-உபகாரம். உணர்வின் மிக்கோர்- பேரறிவினர். பரகாயன் - பரப்ரஹ்ம தேஹியாகிய ஜ்ஞாநி. (௧)

கூறருந் தருமா சாரங் கொல்லாமை வாய்மை யோடு
வேறுறுங் களவி லாமை வெகுளாமை பிரம சரியம்
பேறெனுந் தயையே தாநம் பிறங்குறு செபந்தி யாந
மாறரும் பூசை யென்று வகுத்துரை செய்வர் மேலோர்.

(ப - ரை.) கூறு அரும் - சொல்லுதற்கரிய, தருமாசாரம்—, (எவையெனின்) கொல்லாமை—, வாய்மையோடு—, வேறுறும் களவு இல்லாமை—, வெகுளாமை—, பிரமசரியம்—, பேறு என்னும் தயை—, தாநம்—, பிறங்குறு - விளங்குகிற, செபம்—, தியாநம்—, மாறு அரும் பூசை என்று—, மேலோர் வகுத்து உரைசெய்வர்—, எ - று.

(வி - ரை.) தரும ஆசாரம் - அறவொழுக்கம். கொல்லாமை - கொலைசெய்யாமை. வாய்மை - ஸத்யம். களவு இல்லாமை - திருடாமை. தயை-கருணை. தாநம்-ஸஹஜதாநம். வெகுளாமை - கோவியாமை. பிரமசரியம் - விதிக்கப்பட்ட காலத்தில் தன்மனைவியோடு கூடுதல். செபம்-பஞ்சாக்ஷரீஜபம். தியாநம் - ஶிவத்யாநம். பூசை-இஷ்டலிங்கபூஜை. (உ)

வினையிலி யாக மத்தின் விதித்தவித் தருமா சாரம்
புனையிழை யாகக் கொள்வோன் புராரிதன் னருளுக் கேற்றோ
னினைவற வறம லாமை நியமஞ்செய் தருமந் தன்னை
நனிவரு காம மின்றி நவிற்றுதல் ஞான வேது.

(ப-ரை.) வினையிலி ஆகமத்தின் விதித்த—, இ தருமாசாரம்—, புனை-அலங்கரிக்கப் பட்ட, இழையாக் கொள்வோன் - ஆபரணமாகக் கொள்வோன்—, புராரிதன் அருளுக்கு ஏற்றோன்—, அறம் அல்லாமை நினைவு அற—, நியமஞ்செய்-நியமித்த, தருமந்தன்னை—, நனி வரு - மிகுதியாயுண்டாகிய, காமம் இன்றி—, நவிற்றுதல் - செய்தல், ஞான ஏது - ஞானத்துக்குக் காரணமாகும், எ - று.

(வி-ரை.) வினையிலி ஆகமம்-சிவாகமம். இயல்பாகவே வினைநீக்கமுடையவனுதலால் சிவபிரானை வினையிலி என்றார். புராரி - திரிபுரவாசிகளுக்குப் பகைவன் (சிவபிரான்). காமம் இன்றி - பயனை விரும்பாது. நினைவற - நினையாமல் (மறந்து). அறமலாமை - அதர்மம். (௩)

உலகெலா மொருதா னாக வுன்னலால் வடிவ மாதி
விலகலா லுயிர்க ளெல்லாம் வேறறத் தானாய்க் காண்பா
னுலகெலாஞ் சிவமொன் றாக வுணர்ந்தவற் கெனதென் றென்ன
விலகுமோர் பொருளு முண்டோ வில்லையென விளம்பு நூலே.

(ப-ரை.) உலகு எல்லாம் ஒரு தான் ஆக உன்னலால்—, வடிவம் ஆதி விலகலால்—, உயிர்கள் எல்லாம்—, வேறு அறத் தானாய் காண்பான்—, உலகு எல்லாம் சிவம் ஒன்றாக உணர்ந்தவற்கு—, எனது என்று என்ன—, இலகும் ஓர் பொருளும் உண்டோ—, இல்லை என நூல் விளம்பும்—, எ - று.

(வி - ரை.) உன்னல் - நினைத்தல். விலகல் - ஒழிதல். உயிர்கள் எல்லாம் வேறறத் தானாய்க்காண்பான்-எல்லா பிராணிகளையும் தன்னைப்போலப் பார்ப்பான். எனது என்றது மமகாரத்தையும், பொருள் என்றது மயக்கத்தையும் குறித்தது. இலகும் - விளங்குகிற.

அறநெறி முத்தியேது வாதலா லவ்வ றத்தைத்
துறவின னெனினுஞ் செய்க தொல்லறி வமுதந் தன்னா
னிறையினு மறத்தை நீங்கா னின்றதன் னொழுக்க நோக்கிப்
பிறரிது நெறியென் றெய்தப் பெறுதலாற் பரம யோகி.

(ப - ரை.) பரமயோகி—, அறநெறி—, முத்தி ஏது ஆதலால்—, அ அறத்தை—, துறவினன் எனினும் செய்க—, தொல் அறிவு அமுதம் தன்னால் நிறையினும்—, நின்ற தன் ஒழுக்கம் நோக்கி—, பிறர்—, இது நெறி என்று எய்தப் பெறுதலால்—, அறத்தை நீங்கான்—, எ - று.

(வி - ரை.) துறவினன் - ஶிவயோகியாகிய ஜ்ஞாநி, அதிவர்ணாஶ்ரமி (இருவகைப் பற்றினையும் விட்டவன்). அறிவு அமுதம் - ஜ்ஞாநாமிர்தம். (ரு)

விமலனுஞ் சதாசா ரத்தில் விருப்புள னாகி யென்று
மமலுறு மாசா ரத்தா லருச்சிக்கப் படுவன் கண்டாய்
நிமலமா மாசா ரத்தை யன்றியே நெற்றி நாட்டத்
துமையொரு பாகன் செய்யு மோங்கரு ளுண்டா காதால்.

(ப - ரை.) விமலனும்—, சதாசாரத்தில் விருப்பு உள்ளன் ஆகி—, என்றும்—, அமலம் உறும் ஆசாரத்தால்—, அருச்சிக்கப்படுவேன்—, நிமலம் ஆம் ஆசாரத்தை அன்றியே—, நெற்றிநாட்டத்து—, உமையொருபாகன் செய்யும் ஓங்கு அருள் உண்டாகாது—, எ - று.

(வி - ரை.) விமலன் - மலரஹிதன் (சிவபிரான்). சதாசாரம் - நல்லொழுக்கம். அமலம் - மல ராஹித்யம் (இது ஈறு தொகுத்தலாய் அமல் என நின்றது), நிமலம் என்றதும் அது. நெற்றிநாட்டம் - நெற்றிக்கண். (சு)

தருமாசாரத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் கிரிஶாய நமஃ.

அறுபத்தோன்றாவது

## (அ·) பாவாசாரத்தலம்.

[அதாவது - தர்மாசார ஸம்பந்நனான ஶிவயோகியின் ஸத்பாவமே அனைவருக்கும் அநுஸரணீய மாதலால் பாவாசாரம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அறமுறு மிவன்றன் பாவ மனைவர்க்கும் பாவா சாரந்
திறமுறு பாவந் தன்னைச் செப்புறின் மனவ ழுக்காய்
நிறைதரு சிவனைப் பற்றி நிற்பதென் றறிந்து கொண்ணீ
மறிதிரை சுருட்டு மாழி வாய்மடுத் துண்ண வல்லோய்.

(ப - ரை.) மறிதிரை சுருட்டும் - மறித்து வீழ்கின்ற அலைகளைச் சுருட்டுகிற, ஆழி - கடலை, வாய் மடுத்து உண்ண வல்லோய்—, அறம் உறும் இவன் தன் பாவம்—, அனைவர்க்கும்—, பாவாசாரம்—, திறம் உறு பாவம் தன்னை செப்புறின்—, மனவழுக்காய்—, நிறைதரு சிவனைப்பற்றி நிற்பது என்று—, நீ அறிந்து கொள்—, எ - று.

(வி - ரை.) மறிதல் - மடங்குதல். ஆழி - ஆழமுடையது. மடுத்தல்-வைத்தல். மறிதிரை சுருட்டு மாழி வாய் மடுத்துண்ண வல்லோய் என்றது அகத்தியமுனிவரை. அறம் உறும் இவன்தன் பாவமே - தர்மாசாரமுடையவனுகிய ஜ்ஞாநியின் பாவனையே. செப்புறின் - சொல்லின் (பகுதி செப்புறு). மனவழக்கு - மநோவ்யாபாரம். நிறைதரு - பரிபூர்ணமாகிய. சிவனைப்பற்றி நிற்பது - ஶிவனை விஷயமாய்க்கொண்டது. (க)

பாவனை யாற்செய் கன்மம் பாவநங் களினுண் மேலாம்
பாவனை யால றத்தைப் புண்ணுக வதனு லென்றும்
பாவனை யாற்செய் கன்மம் பலித்திடு மனமுந் தூய்தாம்
பாவனை யாலென் றெண்ணிப் பாவனை விடாமற் செய்க.

(ப-ரை.) பாவனையால் செய் கன்மம்—, பாவநங்களினுள் மேல் ஆம்—, அதனுல்—, என்றும் பாவனையால் அறத்தைப் பண்ணுக—, பாவனையால் செய் கன்மம் பலித்திடும்—, பாவனையால் மனமும் தூய்து ஆம்—, என்று எண்ணி—, பாவனை விடாமல் செய்க—, எ - று.

(வி-ரை.) கன்மம் - தொழில். பாவநம்-ஶுத்தம். பலித்திடும் - ஸித்திக்கும். தூய்து- பரிசுத்த முடையது. பாவனையோடு விதிக்கப்பட்ட கர்மத்தைச் செய்வதே பாவநத்தி லும் பாவநமாம், ஆதலால் பாவனையோடு கூடியதாகிய பரதர்மத்தைச் செய்ய வேண்டும், பாவனையாலேயே மனம் பரிஶுத்தமடைவதாம், பாவநாஶுத்தியும் கர்மத் தாலேயாம், என்றாகித்துத் தெளிந்த யோகி பாவனையை விடாது செய்யவேண்டும் என்பதிதன் கருத்து. (உ)

நித்திய கரும மாதி நிகழ்சிவ பாவந் தன்னுற்
சுத்தநல் யோகி செய்து துரிசினிற் சட்டு முனுற்
சித்தெனு மிரவி தன்னைச் சிந்தையிற் பாவித் தெய்த
லுத்தம மாய சந்தி வந்தனை யுணர்ந்து கொள்ளே.

(ப - ரை.) சுத்த நல் யோகி—, நித்திய கருமம் ஆதி—, நிகழ் சிவபாவம் தன்னுல் செய்து—, துரிசினில் கட்டுமுன்—, ஆல் - ஆதலால், சித்து என்னும் இரவிதன்னை—, சிந்தையில் பாவித்து எய்தல்—, உத்தமம் ஆய சந்திவந்தனை—, உணர்ந்துகொள்—, எ - று.

(வி - ரை.) துரிசு - தோஷகுணம். சித்தென்னும் இரவி - (உள்ளத்தில் எப்போதும் ப்ரகாஶிப்பவனுகிய) ஞானசூரியன். எய்தல் - அடைதல். சந்திவந்தனை - ஸந்த்யாவந்தநம். நித்தியகருமம் ஆதி - நித்யநைமித்திகாதி கர்மங்கள். (௩)

பரசிவ வங்கி தன்னிற் படர்புல னிந்த நத்தைத்
துரிசறு பாவத் தாலே சுடுதலே யாக மாகும்
பரிசுறு கரும மெல்லாம் பரமனுக் காவ வாகக்
கரிசுறு பவந்தொ லைப்பான் கருத்தினிற் கொள்க மாதோ.

(ப - ரை.) பரம் - மேலான, சிவ அங்கி தன்னில் - சிவாக்கினியில், படர்-பரவுகிற, புலன் இந்தநத்தை - புலன்களாகிய விறகை, துரிசு அறு - குற்றமற்ற, பாவத்தாலே சுடு தலே யாகம் ஆகும்—, பரிசு உறு - தன்மை வாய்ந்த, கருமம் எல்லாம்—, பரமனுக்கு ஆவ ஆக - பரமனுக்காவனவாக, கரிசு உறு - குற்றமிகுந்த, பவம் தொலைப்பான் - பிறவியை யொழிப்பவன், கருத்தினில் கொள்க—, எ - று.

(வி - ரை.) பரசிவ வங்கி - ஆத்மஸ்வரூபாக்நி எனினுமாம். இந்தநம் - விறகு என்னும் பொருடருவதோர் வடசொல். புலன் - ஶப்தாதி விஷயங்கள், தொலைப்பான் -

வினையாலணையும் பெயர். பாவத்தாலே - அகமுகப்படுத்திய பாவனையால். சுடுதல் - ஸமர்ப்பணம் செய்தல். கருமம் எல்லாம் - நித்யநைமித்திகங்களாகிய ஸகலகர்மங்கள். பிறவியை யொழிக்கவேண்டுவோன் எல்லாக்கருமங்களையும் ஶிவார்ப்பண மாகவே (ஶிவப்ரீதிக்கு ஹேதுவாக) சிந்திக்கவேண்டு மென்பதாம். (௪)

செயத்தகு செயல்செய் யாத செயலெல்லாஞ் சிவன்பால் வைத்த
மயக்கமி லறிவன் றீமை மருவுறு னென்பர் தன்னை
வியக்குறு முலகை ஞான விமலனை வேறி லாம
லயிர்ப்பற வொன்றாய்க் கண்டோன் கண்டவ னாகு மன்றே.

(ப - ரை.) செயத்தகு செயல்—, செய்யாத செயல்—, எல்லாம்—, சிவன்பால் வைத்த—, மயக்கம் இல் அறிவன்—, தீமை மருவுறான் என்பர்—, (அவன்) தன்னை—, வியக்குறும் உலகை—, ஞானவிமலனை—, வேறு இல்லாமல்—, அயிர்ப்பு அற ஒன்றாய்க் கண்டோன்—, கண்டவன் ஆகும்—, எ - று.

(வி - ரை.) செயத்தகு செயல் - ஸத்கர்மம். செய்யாத செயல் - துஷ்கர்மம். சிவன்பால் - சிவனிடத்தில். பால் - ஏழனுருபு. சிவன்பால் வைத்த - ஶிவார்ப்பணம் செய்த. அறிவன் - ஞானி. மருவுறான் - அடையான் (மருவுறு - பகுதி). வியக்குறும் - அதிசயிக்கத் தக்க. ஞானவிமலன் - சிவன். அயிர்ப்பு - ஸந்தேஹம். கண்டவன் - ஶிவனை அபரோக்ஷமாய்க் கண்டவன். (௫)

பாவாசாரத்தலம் - முற்றும்.

உ

ஓம் அநகாய நம:.

## அறுபத்திரண்டாவது

## (௯.) ஞானசாரத்தலம்.



[அதாவது - பாவாசார ஸம்பந்நனான ஶிவயோகியின் ஶிவைக்யத்தினால் கூடிய ஜ்ஞாநாசாரமே அனைவருக்கும் அநுஸரணீயமாதலால் ஞானசாரம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இந்நிலை யோகி தன்பா லிலங்குறு ஞான சார
மன்னிய வுலகில் யார்க்கு மருவிய ஞான சார
மென்னநன் குரைப்பர் கற்றோ ரிரைந்திழி யருவிக் குன்றந்
தன்னைவென் றிணையெ றிந்த தவத்தினி லுயர்ந்த மேலோய்.

(ப - ரை.) இரைந்து இழி அருவி குன்றம்தன்னை வென்று—, இணை எறிந்த—, தவத்தினில் உயர்ந்த மேலோய்—, இ நிலை யோகி தன்பால்—, இலங்குறும் ஞான சாரம்—, மன்னிய உலகில் யார்க்கும் மருவிய ஞானசாரம்—, என்ன - என்று, கற்றோர் நன்கு உரைப்பர்—, எ - று.

(வி - ரை.) இரைந்து இழி அருவிக் குன்றம் தன்னை வென்று என்றது ஆரவாரித்திறங்குகிற அருவியாறுகளையுடைய விந்தமலையை யடக்கின வரலாற்றை யுணர்த்திற்று. தன் - சாரியை. இணை எறிந்த - ஒப்பற்ற. தவத்தினிலுயர்ந்தமேலோய் என்றது அகத்திய முனிவரை. யோகிதன்பால் என்பதில் தன் சாரியை. இலங்குறும் - விளங்குகிற. (௧)

ஞானமா வதுசி வாத்து விதஞான மென்பர் நல்லோ
ரேனைய ஞான மெய்திற் றென்னினு மெய்தா தேனுந்
தானதா லாவ தென்கொல் சாற்றுமப் பரஞா னத்தா
லூனமாம் பிறவி நீங்கு மொழிந்ததா லொழிந்தி டாதால்.

(ப - ரை.) நல்லோர் —, ஞானமாவது சிவாத்துவித ஞானம் —, ஏனைய ஞானம் எய்திற்று என்னினும் எய்தாது ஏனும் —, அதால் ஆவது என் கொல் —, சாற்றும் - சொல்லப்பட்ட, அ - அந்த, பரஞானத்தால் —, ஊனம் ஆம் பிறவி நீங்கும் —, ஒழிந்ததால் - மற்றையதனுல், ஒழிந்திடாது —, என்பர் —, எ - று.

(வி - ரை.) எய்தல் - அடைதல். ஏனும் எனினும் என்பதன் மரூஉ. அதால் என்பது அது என்னும் சுட்டுப்பெயரோடு அன் சாரியை பெறாது மூன்றனுருபாகிய ஆல் புணர்ந்ததோர்சொல், இச்சுட்டுப்பெயர் இடையொற்று மிக்கு அத்தால் அத்தை என வுருபேற்று வருதலு முண்டு. என் கொல் என்பதில் கொல் அசை. என் என்ற வினு-யாது மின்றென்பது பட நின்றது. ஊனம் - இழிவு. எய்திற்றென்னினும் எய்தாதேனும் - ஶாஸ்த்ரஸித்தமாயினும் அல்லது ஶாஸ்த்ரஸித்தமா யில்லாததாயினும். பரஞானம் - நிர்மல மாகிய ஶிவஜ்ஞாநம். ஏனைய ஜ்ஞாநம் ராகத்வேஷாதிகளால் கலக்கமுற்றிருக்கின்றமை யால் மீண்டும் ஸம்ஸாரத்திற்கே காரணம் என்பது தோன்ற 'ஒழிந்ததால் ஒழிந்திடாது' என்றார். (உ)

பூரண ஞானம் பற்றிப் புரிவதே ததுதான் மிக்க
வேரணி ஞாஞ சார மென்பர்நற் சிவமி தென்னும்
பேரணி பரத்தி லெல்லாம் பேரறி வாலொ டுக்குஞ்
சீரணி பவனே யாகுந் திகழ்தரு ஞாஞ சாரி.

(ப - ரை.) பூரண ஞானம் பற்றி புரிவது —, ஏது-எதுவோ, அதுதான் —, மிக்க ஏர் அணி ஞாஞசாரம் என்பர் —, நல் சிவம் இது என்னும் பேர் அணி பரத்தில் —, எல்லாம் பேரறிவால் ஒடுக்கும் சீர் அணிபவனே —, திகழ் தரும் ஞாஞசாரி ஆகும் —, எ - று.

(வி - ரை.) புரிவது - செய்வது. ஏர்அணி - அழகுபொருந்திய. பேரணி - பேரழகு. சீர் அணிபவனே - சிறப்பினையுடையவனே. திகழ்தரு - விளங்குகிற (திகழ்தா பகுதி). பூரணஞானம் - எங்கும் நிறைந்ததும் பரதத்வத்தை ப்ரகாஶிக்கச் செய்கின்றதுமாகிய ஶிவாத்வைத ஜ்ஞாநம். நல் சிவம் இது என்னும் பேர் அணி பரத்தில் எல்லாம் பேரறி வால் ஒடுக்கல் - பேதமிராததும் நிரவயவமுமாகிய ஶிவம் என்னும் பரம்பொருளினி டம் ஸகலப்ரபஞ்சத்தையும் ஜ்ஞாநத்தினுல் ஐக்யப்படுத்திக் கொள்ளுதல். (ங)

முத்தியை யுதவு ஞானங் குருவருண் முறையிற் பெற்றோ
னெய்த்திடும் பவம்பெ ருக்குங் கருமத்தி லிச்சை செய்யான்
றத்தலை யொழுகு நீர்போற் சார்ந்துள கரும பந்தஞ்
சுத்தமெய்ஞ் ஞானத் தீயாற் சுடுதலான் மறித்துந் தோன்றா.

(ப - ரை.) முத்தியை உதவும் ஞானம் —, குரு அருள் முறையின் பெற்றோன் —, எய்த்திடும் - இளைத்தற்குரிய, பவம் பெருக்கும் கருமத்தில் இச்சை செய்யான் —, தத்து - தாவுகிற, அலை ஒழுகும் நீர் போல் சார்ந்துள்ள கருமபந்தம் —, சுத்த மெய்ஞ்ஞானத்தீ யால் சுடுதலால் —, மறித்தும் - மீட்டும், தோன்றா —, எ - று.

(வி - ரை.) பவம் பெருக்கல் - பிறவிகளை மிகச்செய்தல். கருமபந்தம் - வினைக்கட்டு. ஞானகுருவருள் - ஞாஞசாரியனது அருள். முறையின் பெற்றோன் - பெறவேண்டிய க்ரமத்தோடு பெற்றவன். (ச)

ஞானமி லாதான் கன்ம நாணினுற் கட்டுப் பட்டான்
ஞானமு ளானக் கன்ம பந்தனை நழுவி னேனும்
ஞானவா சார நண்ணிப் பரசிவ நாட்டம் பெற்ற
ஞானிதான் சீவன் முத்த னாகியே நடிக்கு மன்றே.

(ப - ரை.) ஞானம் இல்லாதான்—, கன்ம நாணினால் கட்டுப்பட்டான்—, ஞானம் உள்ளான்—, அ - அந்த, கன்மபந்தனை நழுவினேன் ஆம்—, ஞானவாசாரம் நண்ணி—, பரசிவ நாட்டம் பெற்ற ஞானி—, சீவன்முத்தனாகி நடிக்கும்—, எ - று.

(வி - ரை.) கன்மநாண் - வினைக்கயிறு. பந்தனை - கட்டு. நண்ணி - பொருந்தி. பரசிவநாட்டம் - சிவ ஜ்யோதி ஒன்றிலேயே நோக்கம். நடிக்கும் - லௌகிகர்களைப்போல சேஷ்டிப்பான் (விவகாரம்செய்து கொண்டிருப்பான்.) (ரு)

ஞானாசாரத்தலம் - முற்றும்.

---

இவ்விதமாய் க்ரியாகமம், பாவாகமம், ஜ்ஞாநாகமம், ஸகாயன், அகாயன், பரகாயன், தர்மாசாரம், பாவாசாரம், ஜ்ஞாநாசாரம் என்னும் ஒன்பது ஸ்தலங்களில் கூறிய தர்மங்களுடனே கூடியிருத்தலால் ஶிவஜ்யோதி ஒன்றிலேயே நோக்கம் வைத்து லௌகிகர்களைப்போல வ்யவஹாரம் செய்துகொண்டிருக்கும் ஜீவன்முக்தனும், அங்கஸ்தலத்து இரண்டாமவனுமான மாஹேஶ்வரனே குருலிங்கஜங்கமன் என்று அறியப்பட்டான்.

உ - வது. குருலிங்கத்தலம் - முற்றிற்று.

உ

## ௩ - வது. சிவலிங்கத்தலம்.

---

[அதாவது - வித்யாகலா ஸமேதமாய் இச்சாஶக்தியுடன்கூடி மூர்த்திஸாதாக்யத்தைப்பொருந்தி அஹங்காரகம்யமாயிருத்தல் என்பது.]

(ப்ரஸாதிக்குச் சேர்ந்த உட்பிரிவுகள்.)

கலி

தாவி லாதமா கேசநற் றலத்தவாந் தலங்கள்
யாவு மோதினை யினிப்பிர சாதியத் தலத்தை
மேவு றுந்தல பேதமும் விளங்குற வெனக்கு
நாவலோர் புகழ் தருகண நாயக நவில்வாய்.

(ப-ரை.) நாவலோர் - நாவலர், புகழ்தரு - புகழ்கின்ற, கணநாயக - கணநாதனே, தாவு இல்லாத - கெடுதலில்லாத, நல் மாகேசத்தலத்த ஆம் - நல்ல மாகேசத்தலத்தினவாகிய, தலங்கள் யாவும் ஓதினை—, இனி—, அ பிரசாதித்தலத்தை மேவுறும் தலபேதமும் விளங்குற—, எனக்கு நவில்வாய்—, எ - று.

(வி-ரை.) நாவலோர் புகழ்தரு கணநாயக என்றது இரேணுகரை. பேதம் - விவரம், வேறுபாடு எனினுமாம். நவிலல் - சொல்லல். (க)

காய மிந்தியம் பிராணநல் லநுக்கிர கந்தாங்
காய மோடுறு கரணபா வார்ப்பிதங் கருதி
னேய சீடனற் சிசுருடை சேவியத் தலமென் *
றாய வத்தல மொன்பதா மவற்றையு மறைவாம்.

(ப - ரை.) காயம் இந்தியம் பிராணம் நல் அநுக்கிரகம் தாம்—, காயமோடு உறு கரண பாவார்ப்பிதம், கருதின்—, ஏய - பொருந்திய, சீடன் நல் சிசுருடை சேவியத் தலம் என்று—, ஆய - உண்டாகிய, அ தலம் ஒன்பது ஆம்—, அவற்றையும் அறைவாம்—, எ - று.

(வி - ரை.) கருதின் - நினைக்குமிடத்து. சிசுருடை - தொண்டு (ஶுஶ்ரூஷையென்னும் வடசொற்றிரிபு). அறைவாம் - சொல்லுவோம். காயம் அநுக்கிரகம் தலம் - காயாநுக்கிரகத்தலம். இந்தியம் அநுக்கிரகம் தலம் - இந்திரியாநுக்கிரகத்தலம். பிராணம் அநுக்கிரகம் தலம் - பிராணாநுக்கிரகத்தலம். காயம் ஓடு உறு அர்ப்பிதம் தலம் - காயார்ப்பிதத் தலம். கரணம் ஓடு உறு அர்ப்பிதம் தலம் - கரணார்ப்பிதத்தலம். பாவம் ஓடு உறு அர்ப்பிதம் தலம் - பாவார்ப்பிதத்தலம். சீடன் தலம் - சீடத்தலம். சிசுருடை தலம் - சிசுருடைத் தலம். சேவியன் தலம் - சேவியத்தலம். (உ)

௬.

ஓம் புஜங்கபூஷணாய நம:

அறுபத்துமூன்றாவது

## (க.) காயாநுக்கிரகத்தலம்.

[அதாவது - ஜ்ஞாநாசார ஸம்பந்நனான ஶிவயோகி, லோகாநுக்ரஹத்தி னிமித்தம் தேஹதாரணம் செய்துகொண்டிருப்பதனால் காயாநுக்கிரகன் என்பது.]

கலிநிலைத்துறை.

இந்த யோகிதன் மெய்யினை யிலங்குறக் காட்டி
வந்தி யாரையு முலகினி லளித்திடு மாற்றா
லுந்து பேரெழி லுடலநுக் கிரகனென் றுரைக்கு
முந்து நாமமுற் றிடுமென வறைகுவர் முன்னோர்.

(ப - ரை.) இந்த யோகி—, தன் மெய்யினை - தன்னுடம்பை, இலங்குறக் காட்டி வந்து—, உலகினில் யாரையும்—, அளித்திடும் ஆற்றால் - அநுக்கிரகித்தலால், உந்து பேர் எழில் - பேரழகைக்கொண்ட, உடல் அநுக்கிரகன் என்று உரைக்கும் - காயாநுக்

---

* ஶிவலிங்க ஷட்பக்தர்கள்:—ஶிவலிங்கமோஹி, ஶிவலிங்கபக்தன், ஶிவலிங்கபூஜகன், ஶிவலிங்கவீரன், ஶிவலிங்கப்ரஸாதி, ஶிவலிங்கப்ராணி என அறுவகைப்படுவார்கள். இவர்களில், அந்யமோஹமில்லாதவனே ஶிவலிங்கமோஹி, அந்ய தைவநிராஸகனே ஶிவலிங்க பக்தன், அந்ய தைவபஜனையில்லாதவனே ஶிவலிங்கபூஜகன், அந்ய புண்ய க்ஷேத்ர யாத்ராதிகளை த்யாகஞ்செய்தவனே ஶிவலிங்கவீரன், ஸுகதுக்காதிகளை ஸஹிப்பவனே ஶிவலிங்கப்ரஸாதி, ஸ்த்ரீஸம்போக மில்லாதவனே ஶிவலிங்கப்ராணி.

த்ரிவித ஶிவலிங்கம்: — இஷ்டலிங்கம், ப்ராணலிங்கம், த்ருப்திலிங்கம் என மூவகைப்படும். ஸ்ரீஸத்குருவானவர் தீக்ஷையினால கொடுத்ததே இஷ்டலிங்கம், தேஹ குண வ்யாப்தியைவிட்டு ஶிவலிங்க ஸ்வரூபத்தில மனம் லயித்திருப்பதே ப்ராணலிங்கம், ஸகலாவஸ்தைகளிலும் ஶிவலிங்கத்துடன் அநந்யபாவமாயிருப்பதே த்ருப்திலிங்கம்.

கிரகனென்று சொல்லப்படுகிற, முந்தும் - முதன்மையாகிய, நாமம் உற்றிடும் என - பெயர் பெறுவானென்று, முன்னோர் அறைகுவர்—, எ - று.

(வி-ரை.) உடம்பை மெய்யென்றது மங்கலவழக்கு. அளித்திடுமாற்றால்-காப்பாற்றுந் தன்மையால் எனினுமாம். அறைகுவர் - சொல்லுவர். இந்தயோகி - ஞானசாரயோகி. (க)

அண்ண லாகிய பரசிவன் வடிவுகொண் டடுத்திங்
கெண்ணி லாவுயி ரியாவையு மளித்திடு மியல்போன்
மண்ணில் யோகியும் வடிவொடு மருவியா வரையு
நண்ணி யேயளித் திடுபவ னுமென நவில்வார்.

(ப - ரை.) அண்ணல் ஆகிய பரசிவன்—, வடிவு கொண்டு அடுத்து—, இங்கு எண் இல்லா உயிர் யாவையும் அளித்திடும் இயல் போல்—, மண்ணில்—, யோகியும் வடிவொடு மருவி—, யாவரையும் நண்ணி—, அளித்திடுபவன் ஆம் என நவில்வார் (பெரியோர்)—, எ - று.

(வி - ரை.) அண்ணல் - பெருமையிற் சிறந்தோன். சிவபெருமானினும் பெருமையிற் சிறந்தோனொருவனில்லை யாதலான் அப்பெருமானை அண்ணலாகிய சிவனென்றதமையாது பரசிவன் என்றுங்கூறினர். வடிவுகொண்டு - மாநுடச்சட்டைசாத்தி. இயல் - இயற்கை. நவில்வார் - சொல்வார். அளித்தல் - காத்தருளல். (உ)

ஈசன் மேனியோ டொன்றினும் பற்றில னென்ப
மாசில் யோகியு முடம்பின னெனினுமவ் வாறும்
பாச மாய்வுறு மருஞ்சிவ பாவனை யதனாற்
றேசு லாவுறு பரசிவ னுமவன் றிண்ணம்.

(ப - ரை.) ஈசன் - சிவபிரான், மேனியோடு ஒன்றினும் பற்று இலன் என்ப—, மாசு இல் யோகியும் உடம்பினன் எனினும் அவ்வாறு ஆம்—, பாசம் மாய்வுறும் அரும் சிவ பாவனையதனால்—, அவன் - அந்த யோகியானவன், தேசு உலாவுறும் - ஒளி பொருந்திய, பரசிவன் ஆம்—, திண்ணம்—, எ - று.

(வி - ரை.) ஈசன் - பரமைஸ்வர்ய முடையவன். என்ப - என்று சொல்லுவர் (பெரியோர்). மாசு - குற்றம். மாய்வுறும் - கெடுதற்கேதுவாகிய. திண்ணம் - நிஸ்சயம். ஒன்றினும் - பொருந்தியிருப்பினும் (யாதொன்றினும் எனினுமாம்). பற்று - ஸங்கம். சிவ பாவனையானது பேதமற்றதும் உறுதியாயுமுள்ளதாதலால் 'அரும் சிவ பாவனை' எனக் கூறினர். (ங)

இன்ப வெள்ளமாஞ் சிவத்தினின் மனவழுக் கிறந்த
துன்பில் யோகிமா யைப்பொரு டோன்றுறக் காணுன்
முன்பு வெள்ளியன் றிதுவென விப்பிகாண் முறைபோற்
பின்பி லங்குறு மிதுசக மன்றெனப் பிரமம்.

(ப - ரை.) இன்ப வெள்ளம் ஆம் சிவத்தினில்—, மன அழுக்கு இறந்த—, துன்பு இல் யோகி—, மாயைப் பொருள் தோன்றுறக் காணுன்—, முன்பு—, இது வெள்ளி அன்று என இப்பி காண் முறைபோல்—, பின்பு—, இது சகம் அன்று என—, பிரமம் இலங்குறும்—, எ - று.

(வி - ரை.) இன்பவெள்ளம் - ஆநந்தக்கடல். 'ஆனந்தமாக் கடலாடு சிற்றம்பலம்' என்றார் மணிவாசகரும். மனவழுக்கு - மநோமாலிந்யம். இப்பி - முத்துச்சிப்பி.

சிதாநந்த ஸமுத்ரமாகிய சிவனிடம் சித்தவ்ருத்திகள் லயமடைந்தனவாயின் யோகி அவித்தையால் கற்பிக்கப்பட்டதாகிய பொருளைக்காண்கிறதில்லை, இது வெள்ளியல்ல வென்று சொல்லப்படின் எப்படி இப்பி ப்ரகாசிக்கின்றதோ, அப்படி இது ப்ரபஞ்சமல்ல வென் றறியப்படின் சிவதத்வமானது விளங்குகின்றது என்பதிதன் கருத்து. (௪)

சொற்ப னப்பொருள் விழித்திடத் தோன்றிடா மாயா
கற்ப னைப்பொருண் ஞானம்வந் துற்றிடிற் காணு
முற்பெ றச்சக மயக்கினுக் கவித்தையே முதன்மை
நிற்ப தற்றிடி னதுபினை யுலகெதிர் நில்லா.

(ப - ரை.) சொற்பனப் பொருள்—, விழித்திடத் தோன்றிடா—, மாயா கற்பனைப் பொருள்—, ஞானம் வந்து உற்றிடின் காணு—, முற்பெறச் சகமயக்கினுக்கு—, அவித்தையே முதன்மை நிற்பது—, அது அற்றிடின்—, பின்னை உலகு எதிர்நில்லா—, எ - று.

(வி - ரை.) சொற்பனப்பொருள் - கனவிற்கண்ட பொருள் (பொய்ப்பொருள்). அவித்தை அவித்யா என்னும் வடசொற்றிரிபு (இதன்பொருள் அஜ்ஞாநம் என்பது). மாயாகற்பனைப்பொருள் - ஸம்ஸாரம். (௫)

விண்ட மூலவாங் காரனும் விளிந்திடு முபாதி
கொண்டு தான்விளை யாடலான் மெய்யொடு கூடிக்
கண்ட யோகிமெய் யாளர்போ னடித்திடுங் கண்டாய்
மண்டு வெண்டிரைக் கருங்கடன் மடுத்தவாய் மலரோய்.

(ப - ரை.) மண்டு வெள் திரை கரும் கடல் மடுத்த வாய் மலரோய்—, விண்ட மூல ஆங்காரனும்—, விளிந்திடும் உபாதி கொண்டு தான் விளையாடலால்—, மெய்யொடு கூடிக் கண்ட யோகி—, மெய்யாளர்போல் நடித்திடும்—, எ - று.

(வி - ரை.) மண்டு - நெருங்கிய. வெள் திரை - வெண்மையாகிய அலை. மடுத்தல் - பருகுதல். வாய்மலரோய் - வாயாகிய தாமரைமலரையுடையவனே. வெண்டிரை கருங் கடல் என்றது முரண்டொடை. மண்டு வெண்டிரைக் கருங்கடல் மடுத்தவாய்மலரோய் என்றது அகத்தியமுனிவரை. விண்ட மூலவாங்காரன் - மூலாஹங்காரத்தை விட்ட வன். விளிதல் - இறத்தல். உபாதி - அவஸ்த்தை. யோகி - சிவயோகி. மெய்யிரண்ட னுள் முன்னையது மெய்ப்பொருள் என்றும், பின்னையது உடம்பென்றும் பொருள்ப டும். மெய்யாளர்போல் நடித்திடும் - ஜீவன்முக்தனும் தேஹியைப்போல் சஞ்சரிப்பன்.

காயாநுக்கிரகத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் பர்க்காய நமஃ

அறுபத்துநான்காவது

# (உ.) இந்திரியாநுக்கிரகத்தலம்.

—∞⋅❦⋅∞—

[ அதாவது: — விவேகஶ்ரேஷ்டனும் காயாநுக்ரஹ ஸம்பந்நனுமான ஶிவயோகி, தன் தேஹத்தை லோகாநுக்ரஹத்தி னிமித்தம் விநியோகித்திருக்குமாறு தன் இந்த்ரிய வ்யாபாரங்களை ஏனையோர்களால் அநுஸரணீயமாகுமாறுக்கி லோகோத்தாரணஞ் செய்தலால் இந்திரியாநுக்கிரகன் என்பது.]

கலிநிலைத்துறை.

வடிவு கொண்டருள் பவனது காட்சியான் மருவு
மொடிவி லிந்திய விவேகமே யுலகுளார் யார்க்கும்
படிவி லிந்தியா நுக்கிர கம்மெனப் பகர்வர்
முடிவ றுஞ்சிவ தத்துவ முணர்பெரு முனிவர்.

(ப - ரை.) முடிவு அறும் சிவதத்துவம் உணர் பெரு முனிவர்—, வடிவு கொண்டு அருள்பவனது காட்சியால்—, மருவும் - பொருந்திய, ஒடிவு இல் - அழியாத, இந்திய விவேகமே—, உலகு உள்ளார் யார்க்கும்—, படிவு இல் - படியாத, இந்தியாநுக்கிரகம் எனப் பகர்வர்.—, எ - று.

(வி - ரை.) சிவதத்துவம் - சிவத்தினதுண்மை. காட்சி - தர்ஶநம். (க)

இந்தி யங்கடத் தம்புல னிதமொடு வெறுப்பாய்
வந்து றும்படி யடைந்திடு மிவனவை மருவா
னிந்தி யங்கடாம் புறந்திரிந் திடுதலே பந்த
மிந்தி யங்கணின் றகத்தடங் கிடுதலே முத்தி.

(ப - ரை.) இந்தியங்கள் தத்தம் புலன் இதமொடு வெறுப்பாய் வந்துறும்படி அடைந்திடும்—, இவன் அவை மருவான்—, இந்தியங்கள் புறம் திரிந்திடுதலே பந்தம்—, இந்தியங்கள் நின்று அகத்து அடங்கிடுதலே முத்தி—, எ - று.

(வி - ரை.) இதம் - விருப்பு. இந்தியங்கள் தத்தம் புலன் இதமொடு வெறுப்பாய் வந்துறும்படி யடைந்திடும் - எல்லாருக்கும் இந்த்ரியங்களுக்குத் தமது விஷயங்களில் ஸம்பந்தமிருத்தலால் ராகத்வேஷங்களுண்டாகின்றன. புறம் திரிந்திடுதல் - வெளிமுகம் செல்லல். பந்தம் - ப்ரபஞ்சவிளக்கம். அகத்தடங்கிடுதல்-உள்ளத்தில் ஶிவனிடம் லயித்தல்.

உள்ளு றுஞ்சிவத் தொடுங்கிய மனமுடை யோகி
கொள்ளு மிந்திய மியாவையுங் கூடினுங் கூடான்
றெள்ளு றும்பர சிவத்தையே காண்குவன் சிறிதும்
விள்ளு றும்பிற பொருளினைக் கண்டிடான் விழித்து.

(ப - ரை.) உள் உறும் சிவத்து ஒடுங்கிய மனம் உடை யோகி —, கொள்ளும் இந்தியம் யாவையும் கூடினும் கூடான்—, தெள்ளுறும் பரசிவத்தையே காண்குவன்—, சிறிதும் விழித்து—, விள்ளுறும் - வேறுபட்ட, பிறபொருளினைக் கண்டிடான்—, எ - று.

(வி - ரை.) தெள்ளுறும் - சிவாகமங்களால் தெளியப்பட்ட. விள்ளல்-வேறுதல். (ங)

மான மின்றியே சிவத்தினில் வைத்தவிந் தியத்தோ
னூன மொன்றிய மூப்பொடு முயிர்விடு மரணந்
தானு ணும்பசி தாகமென் றிவற்றினைச் சாரான்
வான மொன்றொடும் பற்றிலா வாறென மன்னே.

(ப - ரை.) வானம் - ஆகாயமானது, ஒன்றொடும் பற்றிலா ஆறு என - ஒரு பொருளோடுங் கலவாதவாறு போல, மானம் இன்றியே சிவத்தினில் வைத்த இந்தியத்தோன்—, ஊனம் ஒன்றிய மூப்பொடும் உயிர்விடு மரணம்—, தான் உண்ணும் பசி தாகம் என்ற இவற்றினைச் சாரான்—, எ - று.

(வி - ரை.) மானம் - பெருமை (அபிமானம், அதன்மேல் நிகழும் அஹங்காரம் எனினுமாம்). சிவத்தினில் வைத்த இந்தியத்தோன்-இந்த்ரியங்களைச் சிவத்தின்கண்ணே செலுத்தினவன். ஊனம் - குறை. என்ற இவற்றினை யென்பது என்றிவற்றினை யென நிலைமொழி யீறு தொகுத்தலாயிற்று, "புகழ்புரிந்தில்லிலோர்க்கில்லை" என்றாற்போல. (ச)

எங்க ணெய்துறு மனமவ ணெய்துமிந் தியமுஞ்
சங்க ரன்றனை யுறின்மனஞ் சரிக்குமோ புலன்க
ளிங்க ருஞ்சிவ யோகிதான் மனத்திடை யெண்ணிப்
பங்க மின்றியே பார்த்திடும் பொருளெலாம் பரமாம்.

(ப - ரை.) எங்கண் மனம் எய்துறும்—, அவண் - அவ்விடத்தில், இந்தியமும் எய்தும்—, சங்கரன்தனை மனம் உறின்—, புலன்கள் சரிக்குமோ—, இங்கு அருஞ் சிவயோகி—, மனத்திடை எண்ணி—, பங்கம் இன்றியே பார்த்திடும் பொருள் எல்லாம் பரம் ஆம்—, எ - று.

(வி - ரை.) எங்கண் - எவ்விடத்து. சரித்தல் - சஞ்சரித்தல். பரம் ஆம் - பரம்பொருளேயாகும். மனம் எவ்விடத்தில் செல்கின்றதோ அவ்விடத்தில் ஸகல இந்த்ரியங்களும் நிற்கின்றன, மனம் ஶிவனிடம் லயித்தால் இந்த்ரிய சஞ்சாரம் எங்ஙன் நிகழும்? ஶிவயோகி எந்தெந்தப்பொருளை மனத்தால் சிந்தித்து கண்ணினால் பார்க்கிறானோ அந்தந்தப் பொருளெல்லாம் சித்ரூபமான ஶிவஸ்வரூபமாகவே விளங்கும் என்பதிதன் கருத்து. (ரு)

கரண மோடுறு பிராணனா மனத்தொடு கலந்தோன்
புரண மாஞ்சிவ மாகுவன் சகமயல் பொன்றி
முரணு றும்புலன் யாவினு முயன்றுமுட் புறமோ
ரரண வஞ்சிவ மடைந்தவ னெங்குமின் படைவான்.

(ப - ரை.) கரணமோடு உறு பிராணன் ஆம் மனத்தொடு கலந்தோன்—, சகமயல் பொன்றி—, புரணம் ஆம் சிவம் ஆகுவன்—, முரண் உறும் புலன் யாவினும் முயன்றும்—, உள் புறம்—, ஓர் அரணம் அம் சிவம் அடைந்தவன்—, எங்கும் இன்பு அடைவான்—, எ - று.

(வி - ரை.) கரணம் - அந்தக்கரணங்கள். புரணம் - பூர்ணம். புரணம் அம் சிவம் - ஸாக்ஷாத் ஶிவன். சகமயல் - ப்ரபஞ்ச மயக்கம். பொன்றி - நசித்து. முரண் - வலி. அரணம் - காவல். கரணமோடு உறு பிராணன் ஆம் மனத்தொடு கலந்தோன் - இந்த்ரியங்களோடுகூட ப்ராணனை மனதில் அடக்கி அந்த மனத்தை ஶிவனோடு சேர்க்கும் ஶிவயோகி. ஓர் அரணம் அம் சிவம் அடைந்தவன் - ஶிவனையே அநுஸந்தாநம் செய்பவன். எங்கும் இன்பு அடைவான் - எவ்விடத்திலும் தன்னிச்சையாய்ச் சஞ்சரித்துக்கொண்டு ஸுகியாகின்றான். (சா)

இந்திரியாநுக்கிரகத்தலம் - முற்றும்.

உ

ஓம் ஸ்ரீதர்விநே நம:

## அறுபத்தைந்தாவது

## (௬௫) பிராணானுக்கிரகத்தலம்.

[அதாவது - இந்த்ரியானுக்ரஹ ஸம்பந்நனானவனும் பரப்ரஹ்மமே தேஹமாயுள்ளவனுமான ஶிவயோகி, தான் ப்ராணவாயுவைத் தடுத்தலால் ஶிவலிங்க தர்ஶநமாகும், தத்க்ரமத்தை ஜகத்தெல்லாம் அநுஸரிக்கும்படிச் செய்வதனால் பிராணானுக்கிரகன் என்பது.]

சிவமெ னும்பர வடிவமாய்த் திகழ்ந்திடு மிவன்ற
னுவகை யந்தரி சனமிகு முலகனைத் தினுக்கும்
பவம றும்படி யுயிரநுக் கிரகமாப் பகர்வர்
தவம டைந்துயர் தத்துவ முணர்ந்துள தலைவர்.

(ப - ரை.) சிவம் என்னும் பரவடிவமாய் திகழ்ந்திடும் இவன்தன்—, உவகை - மகிழ்வைத்தருகிற, அம் - அழகிய, தரிசனம்—, மிகும் உலகு அனைத்தினுக்கும்—, பவம் அறும்படி—, உயிர் அநுக்கிரகமா பகர்வர்—, (யாரெனின்) தவம் அடைந்து உயர் தத்துவம் உணர்ந்து உள்ள தலைவர்—, எ - று.

(வி - ரை.) திகழ்ந்திடல் - விளங்கல். பவம் - பிறவி (பாவமுமாம்). உயிரநுக்கிரகம் - பிராணானுக்கிரகம். (க)

யோகி னாற்சிவத் தொடுங்கிய வுயிருள னெனினு
மாக மேவுறுந் தன்சத்தி வாசனை யதனா
லேக மாஞ்சிவத் தடங்கிய பிராணனோ டிருப்போன்
போக மார்புல னொடுமன மெங்ஙனம் பொருந்தும்.

(ப - ரை.) யோகினால் - யோகத்தால், சிவத்து ஒடுங்கிய உயிர் உளன் எனினும்—, தன் சத்தி வாசனையதனால்—, ஆகம் மேவுறும்—, ஏகம் ஆம் சிவத்து அடங்கிய பிராணனோடு இருப்போன்—, போகம் ஆர் புலனொடு மனம் எங்ஙனம் பொருந்தும்—, எ - று.

(வி - ரை.) ஒடுங்கிய உயிருளன் - உயிரொடுங்கப் பெற்றவன். ஆகம் - சரீரம். போகம் - அநுபவம். தன் சத்தி வாசனையதனால் ஆகம் மேவுறும் - தன் ஶக்தி வாஸநா பலத்தினாலேயே தேஹதாரண முள்ளவனாவான். (உ)

தத்தம் வெவ்விட யங்களைச் சார்வுற மீள
வுய்த்தி டுங்கர ணங்களோ டுள்ளடங் குயிரான்
மெய்த்த சாந்திய னாகியே விளங்குவ னென்று
முத்த னாகம முழுதையு முணர்ந்தவர் மொழிவார்.

(ப - ரை.) தத்தம் வெவ் விடயங்களைச் சார்வுற மீள—, உய்த்திடும் கரணங்களோடு உள் அடங்கு உயிரான்—, மெய்த்த சாந்தியன் ஆகியே விளங்குவன் என்று—, முத்தன் ஆகமம் முழுதையும் உணர்ந்தவர் மொழிவார்—, எ - று.

(வி - ரை.) வெவ்விடயங்கள் - கொடிய விஷயங்கள், இவை பந்தத்திற்கேதுவாதலால் இங்ஙனமிழித்துரைக்கப்பட்டன. உய்த்திடல் - செலுத்தல். முத்தன் ஆகமம் - சிவாகமம். இந்த்ரியங்கள் தத்தம் விஷயப்பற்றினின்றும் ப்ரயத்நத்தால் திருப்பப்பட்ட பின்னர்

அவ்விந்த்ரியங்களோடு கூட ப்ராணனையும் மனதில் சேர்த்துத் தான் ஶாந்தமாகிய சித்த முள்ளவனாகின்றான் என்பதிதன் கருத்து. (௩)

சாந்தி யாமெனி னிங்குயிர் விருத்திதான் றழைந்து
போந்த வன்மன விருத்தியோ டமைந்திடும் புகலி
னேய்ந்த வம்மனச் சாந்தியா லிலங்குறும் யோகி
யார்ந்தி டுஞ்சிவ மன்றிவே றொருபொரு ளறியான்.

(ப - ரை.) சாந்தி ஆம் எனின்—, இங்கு உயிர் விருத்தி தான் தழைந்து போந்தவன் மனம் விருத்தியோடு அமைந்திடும்—, புகலின் - சொல்லுமிடத்தில், ஏய்ந்த - பொருந்திய, அ - அந்த, மனச் சாந்தியால் இலங்குறும் யோகி—, ஆர்ந்திடும் சிவம் அன்றி வேறொரு பொருள் அறியான்—, எ - று.

(வி - ரை.) உயிர் விருத்தி - ப்ராணவ்ருத்தி. அமைந்திடும் - நிஶ்சலமாயிருக்கும். இலங்குறும் - விளங்குகிற. ஆர்தல் - எங்கும் வ்யாபித்திருத்தல். தழைந்து - செழித்து. உயிர் விருத்திதான் தழைந்து போந்தவன் - ப்ராண வ்ருத்திகளாகிய ரேசக பூரக வ்யாபாரங்கள் கேவலம் கும்பகத்தால் ஶாந்தமாய்ப் போனவனுடைய. மன விருத்தியொடு அமைந்திடும் - மனமானது ஸங்கல்ப விகல்பாதி வ்ருத்திகளோடு கூட ஶாந்தமாகும். (௪)

உடம்பி னுக்குயி ருயிரினுக் கிறைவனு தார
மடைந்த காரண னாகிய சிவனிரா தாரன்
தொடர்ந்து மாபர னாலுயி ருயிரினாற் றோன்றி
மடங்கு காயநின் றியங்குறு மெனமதி மதித்தே.

(ப - ரை.) உடம்பினுக்கு உயிர் உயிரினுக்கு இறைவன் ஆதாரம்—, அடைந்த காரணன் ஆகிய சிவன் நிராதாரன்—, மா பரனால்—, உயிர்—, தொடர்ந்து—, உயிரினால் தோன்றி—, மடங்கு காயம்—, நின்று இயங்குறும் என—, மதித்து மதி - ஊகித்து மதிப்பாயாக, எ - று.

(வி - ரை.) ஆதாரம் - இடம். நிராதாரன் - இடமில்லாதவன், ஆதாரமற்றவன் (ஆதேயன்). மடங்கல் - அழிதல். இயங்குறல் - சஞ்சரித்தல். இறைவன் - எல்லாக்காரணங்களுக்கும் காரணனான ஶிவன். ப்ராணனே மனிதர்களுக்குச் சரீரத்தைத் தரித்துக் கொண்டிருப்பதற்குக் காரணம், ப்ராணாதாரம் எல்லாக் காரணங்களுக்கும் காரணமான ஶிவன் எனப்படும், ஶிவனொருவனே ஆதாரமற்றவன், ப்ராணன் ஶிவனால் அதிஷ்டிக்கப் பட்டது, யாதொரு ப்ராணனாலேயே ஜீவன் சேஷ்டிக்கின்றானோ அந்த ப்ராணனையே ஆதாரமாய்க் கொண்டது தேஹம் என்பதிதன் கருத்து. (௫)

இந்த வாயுநற் பயிற்சியா லின்பபூ ரணமா
யந்த மாதியி லாததா யறிவுரு வாகிப்
பந்த மாகிய தத்துவங் கடந்துயர் பரத்தில்
வந்து மாய்தலில் யோகிதான் சலித்திடான் மன்னோ.

(ப - ரை) வந்து மாய்தல் இல் யோகி - பிறந்திறத்த லில்லாத யோகியானவன்—, இந்த நல் வாயு பயிற்சியால்—, இன்ப பூரணமாய்—, அந்தம் ஆதி இல்லாததாய்—, அறிவுருவாகி—, பந்தமாகிய தத்துவம் கடந்து உயர் பரத்தில்—, சலித்திடான்—, எ-று.

(வி - ரை.) வாயு பயிற்சி - வாயுநிரோதநாப்யாஸம். சலித்திடான் - சலியாதிருப்பான் (அசைவற்றிருப்பான்). இவ்வாறு ஶக்தி ஸம்ஸ்காரபலத்தால் தேஹதாரணம் செய்துகொண்டு இருக்கும் ஶிவயோகியானவன் தனது வாயு நிரோதநபயிற்சியைக்

கொண்டு, ஜ்ஞாநோல்லாஸ விளக்கத்துடன் எங்கும் நிறைந்துள்ளதும், ஆத்யந்த மில்லாததும், ஆநந்தாத்விதமானதும், ஸகலதத்வங்களையும் கடந்துள்ளதுமான பரஶிவத்தில் ஒடுங்கியவனைக்கொண்டு அசைவற்றிருப்பான் என்பதிதன் கருத்து. (சு)

நீங்கு வாசனை யுடையனாய் நிகழுயிர் விருத்தி
யீங்கு மாறுபு சிவத்தினி லேகமா யிருப்போ
னோங்கு தாணுவொத் தசைந்திடா னென்றுமென் றுணர்க
வாங்கு வார்திரைக் கடல்குடித் துயர்ந்திட வல்லோய்.

(ப - ரை.) வாங்கு - வளைந்த, வார் திரை - நெடிய அலைகளையுடைய, கடல் - கடல் நீரை, குடித்து உயர்ந்திட வல்லோய்—, நீங்கு வாசனையுடையனாய்—, நிகழ் உயிர் விருத்தி ஈங்கு மாறுபு—, சிவத்தினில் ஏகமாய் இருப்போன்—, ஓங்கு தாணு ஒத்து—, என்றும் அசைந்திடான் என்று உணர்க—, எ - று.

(வி - ரை.) வாங்குவார் திரைக்கடல் குடித்துயர்ந்திட வல்லோய் என்றது அகத்தியமுனிவரை. நீங்குவாசனையுடையன் - வாசனையொழியப் பெற்றவன். நிகழ்தல் - நடத்தல். மாறுபு - செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம் (மாறி யென்பதுபொருள்). உயிர் விருத்தி - ப்ராணவ்யாபாரம். தாணு - கட்டை. சிவத்தினில் ஏகமாயிருப்போன் - ஶிவனோடைக்யமானவனும், ஸகல தேஹ வ்யாபாரங்களை யுடையவனுமான ஶிவயோகி. (எ)

பிராணுநுக்கிரகத்தலம் - முற்றும்.

உ

ஓம் கிரிப்ரியாய நம:

## அறுபத்தாறுவது

## (சு.) காயார்ப்பிதத்தலம்.

[அதாவது - பரப்ரஹ்ம காயனாகியும் ப்ராணாநுக்ரஹ ஸம்பந்நனாகியு மிருக்கும் ஶிவயோகி, தன் லிங்கபூஜா விஷயத்தில் தேஹாபிமாநத்தை த்யாகம் செய்வதே காயார்ப்பிதம் என்பது.]

கலிநிலைத்துறை.

அருள்செ யப்பர யோகிதா னருச்சனைப் பொருட்டு
மருள்செய் யிவ்வுடன் மானமற் றிடுவதே மதிப்பிற்
றெருள்செய் கின்றகா யார்ப்பித மென்றுரை செய்வ
ரிருள்செய் வெம்பவ மகன்றுநல் லறிவறிந் திருப்போர்.

(ப - ரை.) இருள் செய் வெம் பவம் அகன்று—, நல் அறிவு அறிந்திருப்போர்—, அருள் செய் அ பரயோகிதான் அருச்சனைப் பொருட்டு—, மருள் செய் இ உடல் மானம் அற்றிடுவதே—, மதிப்பின்—, தெருள் செய்கின்ற—, காயார்ப்பிதம் என்று உரைசெய்வர்—, எ - று.

(வி - ரை.) வெம்பவம் - கொடிய பிறவி. அறிவு - ஞானம். அறிந்திருப்போர் உரை செய்வர் எனவியையும். (க)

என்று தன்னுடம் பீசனுக் கர்ப்பிதஞ் செய்வ
னன்று தன்வடி வொருசிவ வடிவமே யாகு
மொன்று மிந்திய விடயவின் பங்களை யோகி
நின்ற சின்மய சிவத்தினுக் காக்குவ னேர்ந்து.

(ப-ரை.) யோகி - யோகியானவன், என்று தன் உடம்பு ஈசனுக்கு அர்ப்பிதம் செய்வன்—, அன்று தன் வடிவு ஒரு சிவ வடிவமேயாகும்—, ஒன்றும் - பொருந்திய, இந்திய விடய இன்பங்களை—, நேர்ந்து - சம்மதித்து, நின்ற சின்மய சிவத்தினுக்கு ஆக்குவன் - நிலைபெற்ற ஞானவுருவமாகிய சிவத்திற்கே யர்ப்பிதஞ் செய்வன்—, எ-று.

(வி-ரை.) இந்திய விடய வின்பங்கள் - இந்த்ரிய விஷயாநந்தங்கள். அர்ப்பிதஞ் செய்தல் - ஸமர்ப்பணம் (நிவேதநம்) செய்தல். (௨)

கண்டு கேட்டுமற் றுண்டுயிர்த் துற்றிடு காலைக்
கொண்ட வின்பங்கள் யாவையுஞ் சிவத்தினிற் கொடுத்து
மண்டி யிவ்வுடல் வழிவரு மற்றுள சுகமும்
விண்ட வெந்தளைப் பரமனுக் காக்குவோன் விமலன்.

(ப-ரை.) கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்றிடு காலை—, கொண்ட இன்பங்கள் யாவையும் சிவத்தினில் கொடுத்து—, மண்டி - மிகுதியாகி, இ உடல் வழி - இவ்வுடம்பு காரணமாக—, வரும்-உண்டாகிற, மற்று உள்ள சுகமும்—, விண்ட வெம் தளைப் பரமனுக்கு ஆக்குவோன்—, விமலன் - பரிசுத்தன், எ-று.

(வி-ரை.) விண்டவெந்தளைப்பரமன் - கொடிய பாச நீக்கத்தையுடைய சிவபெருமான். சிவத்தினில் - உருபுமயக்கம். உயிர்த்து - முகர்ந்து. (௩)

காயார்ப்பிதத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் க்ருத்திவாஸஸே நம:

அறுபத்தேழாவது

## (௫.) கரணார்ப்பிதத்தலம்.

[அதாவது - காயார்ப்பணம் செய்த ஶிவயோகி ஸகலேந்த்ரியங்களையும் லிங்கத்தில் ஸம்யோகம் செய்வதே கரணார்ப்பிதம் என்பது.]

*கலிநிலைத்துறை.*

ஆதி யாகிய சிவத்தினிற் கரணங்க ளனைத்தும்
வேதி யாவத னிடைப்புணர்த் திடுதலே விளங்கத்
தீதி னூல்கர ணார்ப்பித மென்னவே தெரிக்கும்
பூத நாயக னருள்கொடு பொதியிலிற் புகுந்தோய்.

(ப-ரை.) பூத நாயகன் அருள்கொடு—, பொதியிலில் புகுந்தோய்—, ஆதியாகிய சிவத்தினில்—, கரணங்கள் அனைத்தும்—, வேதியா - வேதித்து, அதனிடை புணர்த்திடுதலே—, விளங்க—, கரணார்ப்பிதம் என்ன—, தீது இல் நூல் தெரிக்கும் - தீமையற்ற சிவாகமநூல்கள் சொல்லாநிற்கும், எ-று.

(வி-ரை.) பரத்திற்கும் பரமான ஶிவன் ஆதலால் ஆதியாகிய சிவன் என்றார். பூதநாயகன் - பூதகணங்களுக்குத் தலைவன் (சிவபிரான்). பூதநாயக னருள்கொடு பொதியிலிற்புகுந்தோய் என்றது அகத்தியமுனிவரை. வேதியா செய்யா வென்னும் வாய்பாட்டிறந்தகால வினையெச்சம். புணர்த்திடுதல் - சேர்த்தல். (க)

யாது தாளொரு கரணங்கொண் டுறுபுல னிடத்திற்
போது மோர்சுகஞ் சிவத்தினிற் சமர்ப்பணை புரியு
நீதி யான்கர ணார்ப்பித னென்னவே நிகழ்த்து
மாது பாதிய னருளிய வாகமம் வகுத்து.

(ப-ரை.) யாது ஒரு கரணம் கொண்டு—, உறு புலனிடத்தில்—, போதும் - உண்டாகிற, ஓர்—, சுகம் - சுகத்தை, சிவத்தினில் - சிவத்துக்கு, சமர்ப்பணை புரியும் நீதியான்—, கரணார்ப்பிதன் என்ன—, வகுத்து—, நிகழ்த்தும் - சொல்லும், (எதுவெனின்) மாது பாதியன் அருளிய ஆகமம்—, எ - று.

(வி - ரை.) தான் - அசை. கொண்டு - மூன்றுவதன் சொல்லுருபு. புலன் - விஷயம். மாதுபாதியனருளிய வாகமம் - சிவாகமம். வகுத்தல் - விவரித்தல். யாதொரு யாதொரு கரணத்தைப் பற்றிக்கொண்டு விஷயத்தாலுண்டாகும் ஸுகத்தை புஜிக்கின்றானோ அந்தந்தக் கரணத்தை பரிவனிடம் ஸமர்ப்பித்திருக்கின்றவனே கரணார்ப்பிதன் என்பது இதன் கருத்து. (உ)

அகந்தை யாமதம் பொழிதரு கரணவா ரணத்தை
மிகுந்த மாசிவ மெனுந்தறி பிணிப்பவன் வீரன்
பகுந்த விந்தியத் ததிபதி யாமனம் பரத்திற்
புகுந்து ளான்றனக் கதுதொடர் பொறிகொடென் பொருந்தும்.

(ப - ரை.) அகந்தை ஆம் மதம் பொழிதரு - அகந்தையாகிய மதத்தைப்பொழிகிற, கரணம் - கரணமாகிய, வாரணத்தை - யானையை, மிகுந்த —, மா - பெருமையுள்ள, சிவம் என்னும் தறி பிணிப்பவன்—, வீரன்—, பகுந்த - பகிர்ந்த, இந்தியத்து அதிபதி ஆம் மனம் பரத்தில் புகுந்துளான் தனக்கு—, அது தொடர் பொறி கொடு என் பொருந்தும்—, எ - று.

(வி - ரை.) தறி - கட்டுத்தறி (கம்பம்). பிணித்தல் - கட்டுதல். வீரன் - ஸகல ஸித்திகளு முடையவனாகிய தீரன். எல்லா இந்த்ரியங்களுக்கும் மனம் முதலாவது என்று சொல்லப்படும், அந்த மனம் பரிவனிடம் இருக்கும்படி ஸ்வாதீனப்படுத்தினால் அதை யநுஸரிக்கும் இந்த்ரியங்களால் என்ன பயன் என்பதிதன் கருத்து. (௩)

இந்தி யங்களை மறித்தருஞ் சிவத்தினி லிசைத்தோற்
கந்த வெம்பவ முழுகுத லியாண்டுள தறையி
னிந்தி யங்கடன் வழிபடுத் திடல்பவ மென்னும்
பந்த வல்வன மெறிந்திடற் கொருபெரும் பரசாம்.

(ப - ரை.) இந்தியங்களை மறித்து—, அருஞ் சிவத்தினில் இசைத்தோற்கு—, அந்த வெம் பவம் முழுகுதல் யாண்டுள்ளது—, அறையின் - சொல்லுமிடத்தில், இந்தியங்கள் - இந்திரியங்களை, தன் வழி படுத்திடல்—, பவம் என்னும் - பிறவியென்கிற, பந்தம் - கட்டாகிய, வல் வனம் - பெருங்காட்டினை, எறிந்திடற்கு - வெட்டுதற்கு, ஒரு பெரும் பரசு ஆம் - ஒப்பற்ற பெரிய கோடரியாகும்—, எ - று.

(வி - ரை.) இந்தியங்களை மறித்தல் - இந்த்ரியங்களை வசமாக்கிக்கொள்ளுதல். மறித்தல் - தடுத்தல். இசைத்தோன் - பொருத்தினவன் (லக்ஷ்யமாக்கிக் கொள்பவன்). யாண்டுள்ளது என்றது இல்லையென்றபடி. முழுகுதல் என மேல் வருதலால் பவம் என்பதற்கு பிறவி (ஸம்ஸாரம்) ஆகிய கடலென்றுரைத்துக் கொள்க. வல்வன மெறிதற் கேற்ற கருவி யின்றியமையாமை தோன்ற 'ஒரு பெரும் பரசு' என்றார். (௪)

இந்தி யங்களாற் பாவபுண் ணியங்கள்வந் தெய்து
மிந்தி யஞ்சிவத் தாக்கினற் கிருவினை யில்லை
யந்த வெம்பவ முறுன்மனத் தாஞ்சக வவியை
முந்து ஞானவா ரழலிடை யிட்டிடு முறைபோல்.

(ப - ரை.) இந்தியங்களால்—, பாவ புண்ணியங்கள் வந்து எய்தும்—, இந்தியம் சிவத்து ஆக்கினற்கு—, இருவினை இல்லை—, அந்த வெம் பவம் உறுன்—, மனத்து ஆம் சக அவியை—, முந்து - முந்தின, ஆர் - நிறைந்த, ஞான அழலிடை இட்டிடும் முறை போல்—, எ - று.

(வி - ரை.) ஆக்கினன் - லயிக்கச்செய்தவன். மனத்து ஆம் சக அவியை - சித்த த்ரவ்யத்தையுடைய ஜகங்களாகிய தேவருணவை. ஞான அழல் - ஞானமாகிய நெருப்பு. ஆர் அழல் இடுதல் - ஹோமம் செய்தல். இடை - ஏழனுருபு. (௫)

அகம்பு றங்களு நிறைந்துள ஞானவங் கியினின்
மிகும்பு லன்களெ னவியிடை யிட்டுவேட் கின்றோ
னுகந்தி டும்பர முத்தனெத் தொருசிவ மாமென்
றிகம்ப ரங்களு முணர்ந்தவ ரியம்புவ ரன்றே.

(ப - ரை.) அகம் புறங்களும் நிறைந்துள்ள ஞான அங்கியினில்—, மிகும் புலன்கள் என் - மிகுதியாகிய புலன்களென்கிற, அவியிடை இட்டு வேட்கின்றோன்—, உகந்திடும் பரமுத்தன் ஒத்து—, ஒரு சிவம் ஆம் என்று—, இகம் பரங்களும் உணர்ந்தவர் இயம்புவர்—, எ - று.

(வி - ரை.) வேட்கின்றோன் - யாகஞ்செய்பவன். உகத்தல் - களித்தல். இகம்பரம் என்றது இம்மை மறுமைகளின் வகையினை யாதலால் ஆகுபெயர். "இருமை வகை தெரிந்தீண்டறம் பூண்டார், பெருமை பிறங்கிற்றுலகு" என்றார் பெருநாவலரும். (௬)

பொறிகள் யாவையும் போகசா தநமெனும் புரமு
நெறிகொ ளீசன தருச்சனை யங்கமா நினைந்தோன்
குறிகொ ளங்கமி லொருபர முத்தியே குறுகும்
வெறிகொள் வண்டின மிசைமுரல் சந்தந வெற்போய்.

(ப - ரை.) வெறி கொள் - மணம் பொருந்திய, வண்டு இனம் - வண்டினங்கள், இசை முரல் - இசைபாடுகிற, சந்தந வெற்போய் - பொதியமலையை யுடையவனே, பொறிகள் யாவையும்—, போகசாதநம் என்னும் புரமும்—, நெறி கொள் ஈசனது அருச்சனை அங்கமா நினைந்தோன்—, குறி கொள் அங்கம் இல் ஒரு பரமுத்தியே குறுகும்—, எ - று.

(வி - ரை.) வண்டினம் - வண்டின்கூட்டம். இசை - இராகம். வண்டினம் இடைய றாது மலர்களிற் சஞ்சரித்தலால் 'வெறிகொள் வண்டினம்' என்றார். வெறிகொள்வண்டினம் இசை முரல் சந்தநவெற்போய் என்றது அகத்தியமுனிவரை. பொறிகள் - இந்த்ரியங்கள். போகசாதநம் - போகாநுபவத்திற்குக் கருவி. புரம் - சரீரம். குறுகும் - அடைவான். நெறி கொள் ஈசனதருச்சனை - சிவபூஜைக்கு. நினைந்தோன் - பாவனைசெய்தோன். (௭)

## காரணர்ப்பிதத்தலம் - முற்றும்.

உ

ஓம் புராராதகே நமஃ

# அறுபத்தேட்டாவது

# (சூ.) பாவார்ப்பிதத்தலம்.

[அதாவது - கரணார்ப்பணஞ் செய்த சிவயோகி ஸ்த்திரமான பாவத்தினால் லிங்கத்திற்கு மனோவிகாரங்களான பாவங்களை ஸமர்ப்பணம் செய்வதே பாவார்ப்பிதம் என்பது.]

கலிநிலைத்துறை.

சலந மின்றிய பாவனை கொண்டுசற் பாவ
நலமு றுஞ்சிவ னிடத்தினி லர்ப்பித நவிற்று
நிலையி லங்குபா வார்ப்பித மென்னவே நிறுப்பர்
புலமை கொண்டுயர் சிவநிலை யுணர்ந்திடும் புலவர்.

(ப - ரை.) சலநம் இன்றிய பாவனைகொண்டு—, சற்பாவம் நலம் உறும் சிவனிடத்தினில் அர்ப்பிதம் நவிற்றும் நிலை (யாதோ)—, (அது) இலங்கு - விளங்குகிற, பாவார்ப்பிதம் என்ன-பாவார்ப்பிதமென்று, புலமை கொண்டு உயர் சிவநிலை உணர்ந்திடும் புலவர்—, நிறுப்பர் - சொல்லுவர், எ - று.

(வி - ரை.) சலநம் - சஞ்சலம். பாவனைகொண்டு - பாவனையினால். நவிற்றல் - செய்தல். புலமை - அறிவுடைமை. புலவர் - ஞானியர். நிறுத்தல் - சொல்லல். சிவநிலை - சிவ தத்வம். (க)

மான சந்தனைப் பாவமென் றறைகுவர் மனத்தி
லான வப்பொரு ணினைவொரு சிவத்தி லர்ப்பிதமா
மீன வெம்பவ மடைகிலன் பாவசுத் தியினேன்
றூன திங்கிலன் பவத்தினிற் சுழலுவன் றளர்ந்தே.

(ப - ரை.) மானசந்தனை பாவமென்று அறைகுவர்—, மனத்தில் ஆன அ பொருள் நினைவு—, ஒரு சிவத்தில் அர்ப்பிதம் ஆம்—, (ஆதலால்) பாவ சுத்தியினேன்—, ஈனம் வெம் பவம் அடைகிலன்—, இங்கு—, அது இலன் - அந்த பாவசுத்தி யில்லாதவன், தளர்ந்து—, பவத்தினில் சுழலுவன்—, எ - று.

(வி - ரை.) பாவசுத்தியினேன் - சித்தசுத்திபுடையவன். ஈனம் - இழிவு. மானசந்தனைப் பாவமென்றறைகுவர் மனத்திலான வப்பொருணினை வொருசிவத்திலர்ப்பிதம் என்றது சித்தத்திலுள்ள ஸகல பொருள்களையும் மனதில் சிந்தித்தல் என்பது யாதொன்றுளதோ, அதை ஸாக்ஷாத் சிவனுக்கு ஸமர்ப்பணம் செய்வதே மானஸ பாவம் என்றபடி.

பாவ சுத்திதான் சிவோகமென் யோகமாய்ப் பகர்வர்
பாவ மற்றது தீர்ந்துளன் பவத்தினிற் படுவான்
மேவி யுண்பவ னுணும்பொரு ளூட்டுவோன் விளம்பின்
யாவு மோர்சிவ மயமென வெண்ணுவோன் சிவனும்.

(ப - ரை.) பாவ சுத்திதான் சிவோகம் என் யோகமாய்ப் பகர்வர்—, அது பாவம் அற்று தீர்ந்துளன் பவத்தினில் படுவான்—, மேவி உண்பவன்—, உண்ணும் பொருள்—, ஊட்டுவோன்—, விளம்பின்—, யாவும் ஓர் சிவமயம் என எண்ணுவோன் சிவன் ஆம்—, எ - று.

(வி - ரை.) பாவம் அற்று என்றது பாவசுத்தியற்று, அதாவது நான் ஶிவன் அல்லன் என்றபடி. உண்பவன் - போக்தா. உண்ணும்பொருள் - போக்யம். ஊட்டுவோன் - போஜயிதா (புஜிக்கச்செய்வோன்). (௩)

மித்தை யென்றுல கனைத்தையும் விடுத்தறி வின்பச்
சத்தெ னுஞ்சிவந் தன்னையே நினைந்துறுந் தகையோ
னெத்தி றங்களி னாயினு மலத்துட னிசையான்
முத்த னென்றவன் றனைமொழி குறுவர்மூ தறிஞர்.

(ப - ரை.) உலகு அனைத்தையும் மித்தை என்று விடுத்து—, அறிவு இன்பம் சத்து என்னும் சிவம் தன்னையே நினைந்துறும் தகையோன்—, எத்திறங்களின் ஆயினும் மலத்துடன் இசையான்—, அவன் தன்னை—, மூது அறிஞர்—, முத்தன் என்று மொழி குறுவர்—, எ - று.

(வி - ரை.) மித்தை மித்யா என்னும் வடசொற்றிரிபு (பொய் யென்பது பொருள்). அறிவு இன்பம் சத்து - ஸச்சிதாநந்தம். தகையோன் - பெருங்குண முடையோன். திறங்கள் - வகைகள். (௪)

கருமம் யாவுமோர் பரசிவ பூசனை கழறு
முரைகள் யாவுமொண் டுதியென வுன்னுவோற் கில்லை
கரும பந்தனை யின்பதுன் பங்களைக் கருதா
தொருப ரன்றனக் காக்குவோ னுயர்சீவன் முத்தன்.

(ப - ரை.) கருமம் யாவும்—, ஓர் பரசிவ பூசனை—, கழறும் - பேசுகிற, உரைகள் யாவும் - சொற்களெல்லாம், ஒள் துதி - நல்லதோத்திரங்கள், என - என்று, உன்னுவோற்கு - நினைப்பவனுக்கு, கரும பந்தனை இல்லை—, இன்ப துன்பங்களைக் கருதாது—, ஒரு பரன் தனக்கு ஆக்குவோன்—, உயர் சீவன் முத்தன்—, எ - று.

(வி - ரை.) கருமபந்தனை - வினைக்கட்டு. உன்னல் - நினைத்தல். சிவ பூசனை - ஶிவார்ச்சனை. ஒள் துதி - ஶிவநாம ஸங்கீர்த்தனம். இன்பதுன்பங்கள் என்றது ஶ்ரோத்ரம் முதலிய ஸகலேந்த்ரியங்களைப் பற்றி நிகழும் ஸுகத்தையும், கர்மத்தினால் நிகழும் துக்கத்தையும். (௫)

பாவார்ப்பிதத்தலம் - முற்றும்.

உ

ஓம் பகவதே நமஃ

## அறுபத்தோன்பதாவது

## (௭.) சீ ட த் த ல ம்.

[அதாவது - பரகாயனாகவும் பாவார்ப்பித ஸம்பந்நனாகவு மிருக்கும் ஶிவயோகி யினால் சிக்ஷிக்கப்படுவதற்கு யோக்யனானவனே சீடன் என்பது.]

கலிநிலைத்துறை.

பிரம மேவடி வாகுமப் பெரியவன் றன்னா
லருள்பு ரிந்தளிக் கப்படு வோனவ னருளாற்
பரம வின்பவீ டவாவுளோ னெவனவ்வின் பகரி
னிருமை தங்கிய சீடனென் றுயர்ந்தவ ரிசைப்பார்.

(ப-ரை.) பிரமமே வடிவு ஆகும் அ பெரியவன் தன்னால்—, அருள் புரிந்து அளிக்கப்படுவோன்—, அவன் அருளால்—, பரம இன்ப வீடு அவாவுளோன் எவன்—, அவன் பகரின்—, இருமை தங்கிய—, சீடன் என்று—, உயர்ந்தவர் இசைப்பார்—, எ-று.

(வி-ரை.) அப்பெரியவன் - பரகாயனாகிய ஶிவயோகி. அளிக்கப்படுவோன் - அருள் செய்யப்படுவோன். அருள் புரிந்து அளிக்கப்படுவோன் - சிக்ஷை செய்விக்கப் படுவோன். பரம இன்பம் - பேரின்பம். அருள் - ப்ரஸாதம். பரம இன்ப வீடு - மோக்ஷம். அவாவுளோன் - ஆசையுள்ளவன். இருமை - பெருமை. இசைத்தல் - சொல்லுதல். (௧)

பாவ நற்குணங் கட்கிட மாகியே பரமாய்
மேவு சற்குரு பரனிடை மனமொழி மெய்யால்
யாவு முற்றவன் றன்னையே சீடனென் றிசைக்கும்
காவி யொத்தகண் மலைமகள் பாகனா கமங்கள்.

(ப-ரை.) பாவ நற்குணங்கட்கு இடம் ஆகியே—, பரம் ஆய் மேவு சற்குரு பரனிடை—, மனம் மொழி மெய்யால் யாவும் உற்றவன் தன்னையே—, சீடன் என்று—, காவி ஒத்த கண் மலைமகள் பாகன் ஆகமங்கள்—, இசைக்கும்- சொல்லாநின்றன—, எ-று.

(வி-ரை.) பரனிடை யென்பதில் இடை யேழனுருபு. மனம் மொழி மெய் - மநோ வாக்காயங்கள். காவி - நீலோத்பலம் (இது ஆகுபெயராய் அதன் மலரை யுணர்த்திற்று, கட்குவமையாகப் புணர்க்கப்பட்டமையான்). மலைமகள் - பார்வதி. காவியொத்த கண் மலைமகள் பங்கனாகமங்கள் - சிவாகமங்கள். உற்றவன் - எப்போதும் உறுதியாயுள்ளவன்.

சாந்தி தாந்திநற் றவஞ்சம தரிசனம் வாய்மை
வாய்ந்து மாண்குரு சிவனிடை யொத்தநன் மனத்தா
லேய்ந்து ளான்றனைச் சீடசூ டாமணி யென்பர்
தீர்ந்த மாலுடை யொருபர சிவமுணர் திறத்தோர்.

(ப-ரை.) தீர்ந்த மால் உடை - மயக்கந் தீர்ந்த, ஒரு - ஒப்பற்ற, பரசிவம் உணர் திறத்தோர்—, சாந்தி தாந்தி நல் தவம் சமதரிசனம் வாய்மை வாய்ந்து—, மாண் - பெருமையுள்ள, குரு சிவனிடை—, ஒத்த நல் மனத்தால் ஏய்ந்துளான் தன்னை—, சீட சூடா மணி என்பர்—, எ-று.

(வி-ரை.) பரசிவம் - பரசிவத்தை. உணர்திறத்தோர் - அறியுமாற்றலுடையோர். சமதரிசனம் - ஸமத்ருஷ்டி. வாய்மை - ஸத்யம். வாய்ந்து - பொருந்தி. குரு சிவனிடை - குருவினிடத்தும் சிவனிடத்தும் (சமானமாய்). சூடாமணி - சிகாமணி. சீட சூடாமணி யென்றது சீடருட் சிறந்தவன் என்றவாறு. (௩)

குருவை மெய்ச்சிவ மாகவச் சிவன்றனைக் குருவா
யொருமை பெற்றிடக் காண்கவக் குருபர னுரைத்த
திரிவ றச்சிவ நெறிசிவத் தியாநமெய்ஞ் ஞான
மருவ லுற்றவை நிட்டையி னோங்குக மாதோ.

(ப-ரை.) குருவை மெய் சிவமாக—, அ சிவன்தன்னை குருவாய்—, ஒருமை பெற்றிடக் காண்க—, அ - அந்த, குருபரன் உரைத்த—, திரிவு அற அ சிவநெறி—, சிவத்தியாநம் மெய்ஞ்ஞானம் மருவலுற்று—, அவை நிட்டையின் ஓங்குக—, எ-று.

(வி-ரை.) ஒருமை பெற்றிடக் காண்க என்றது ஒரு தன்மையாய்க் காணக் கடவன் என்றபடி. உரைத்த - உபதேசித்த. திரிவு அற - மாறுபாடற்ற. மருவலுற்று -

பொருந்தி. நிட்டையின் - நிஷ்டைபோல. நிட்டை - நிலைமை எனினுமாம். ஓங்குக விருத்தியடையக் கடவன். சிவநெறி - ஶிவாசாரம். மெய்ஞ்ஞானம் - ஶிவஜ்ஞாநம். (௪)

அண்ட மொக்குள்சேர் மாயையங் கடலுய ராசான்
கண்ட நல்லருள் கடைக்கணுல் வற்றுறுங் கலப்பப்
பண்டி ரும்பிர தத்திறுற் பசும்பொனு மாபோன்
மண்ட லந்தனின் மனிதருஞ் சிவமய மாவர்.

(ப - ரை.) அண்டம் மொக்குள் சேர் மாயை அம் கடல்—, உயர் ஆசான் கண்ட நல் அருள் கடைக்கண்ணுல் வற்றுறும்—, கலப்ப - கலக்க, பண்டு இரும்பு இரதத்தினுல் பசும் பொன் ஆமாறு போல்—, மண்டலம் தன்னில் மனிதரும்—, சிவமயம் ஆவர்—, எ - று.

(வி - ரை.) அண்டமொக்குள்-உலகங்களாகிய (ப்ரஹ்மாண்டங்களாகிய) குமிழிகள். வற்றுறும் - வற்றிப்போம். இரதம் - ஸ்பர்ஶவேதி. அருள் கடைக்கண்ணுல் வற்றுறும் - க்ருபா கடாக்ஷமாகிய படபாமுகாக்நியால் வறண்டுபோம். (௫)

தேசி கன்றன தாணையைக் கடந்திடல் செய்யா
ஞச கன்றுள ஞானமுற் றடைகுவ னவனுற்
பேசு றுஞ்சக மித்தைபே ரறிவது பிரம
மேச லின்றது நீயென விசைந்தவன் முத்தன்.

(ப - ரை.) தேசிகன்தனது ஆணையைக் கடந்திடல் செய்யான்—, ஆசு அகன்று உள்ள ஞானம் உற்று அடைகுவன்—, அவனுல—, பேசுறும்—, சகம் மித்தை—, பேரறிவது பிரமம்—, ஏசல் இன்று—, அது நீ என இசைந்தவன் முத்தன்—, எ - று.

(வி - ரை.) கடந்திடல் செய்யான் - கடக்க மாட்டான். ஆசு - குற்றம் (அஜ்ஞாநம்). அகன்றுள - ஒழிந்த. சகம் மித்தை - உலகம் பொய். ஏசல் - பழிப்பு. இன்று - இன்றி. இசைந்தவன் - இணங்கினவன். முத்தன் - பாசநீக்க முள்ளவன். (௬)

பிறவி நன்மருந் தாகிய பிரம ஞானத்தை
யறவ னென்றுயர் குரவனு லடைந்துவந் தமர்வோ
னுறவு வெம்பகை யிலாவுயிர் முத்தனென் றுரைப்பர்
மறுவ கன்றுள கலைமுழு துணர்ந்துறு மதிஞர்.

(ப - ரை.) மறு அகன்று உள்ள கலை முழுது உணர்ந்துறும் மதிஞர்—, பிறவி நல் மருந்து ஆகிய பிரம ஞானத்தை—, அறவன் என்று உயர் குரவனுல் அடைந்து வந்து அமர்வோன்—, உறவு வெம் பகை இல்லா—, உயிர் முத்தன் என்று உரைப்பர்—, எ - று.

(வி - ரை.) மறு அகன்றுள - குற்றமற்ற (நிர்த்தோஷமான). மதிஞர் - அறிஞர், இதில் ஞகரம் பெயரிடைநிலை. அறவன் - தர்மஜ்ஞன் (அறநெறியிலொழுகுவோன்). உயிர் முத்தன் - ஜீவன் முக்தன். (எ)

சீடத்தலம் - முற்றும்.

———

ஓம் விஶ்வேஶ்வராய நமஃ

# எழுபதாவது

## (அ) சிசுருடைத்தலம்.

[அதாவது - பரப்ரஹ்மாகாரனான ஸ்ரீ ஸத்குருவினால் ஸதா போதிக்கப்படும் அந்த் ஶிஷ்யன் குருவைக்குறித்து நித்யம் யாது? அநித்யம் யாது? ஜீவன் யார்? ஶிவன் யார்? என்று வினவுவதே சிசுருடை என்பது.]

கலிநிலைத்துறை.

பீடு றுங்குரு வாலருள் செய்திடப் பெற்ற
சீட ஞெண்குரு சிசுருடை விருப்பினைச் செயலா
னாடு றுஞ்சிசு ருடைப்பெயர் நண்ணுவ னென்னப்
பாடு றும்புகழ் மாதவ வாகமம் பகரும்.

(ப - ரை.) பாடு உறும் புகழ் மாதவ - பெருமை பொருந்திய புகழினை யுடைய பெரிய தவத்தோனே, பீடு உறும் - பெருமை பெற்ற, குருவால் அருள் செய்திடப் பெற்ற சீடன்—, ஒள் குரு சிசுருடை விருப்பினைச் செயலால்—, நாடுறும் சிசுருடைப் பெயர் நண்ணுவன் என்ன—, ஆகமம் பகரும்—, எ - று.

(வி - ரை.) பாடுறும் புகழ் மாதவ என்றது அகத்திய முனிவரை, இத்தொடருக்கு அறிஞர் தெரிந்து பாடுதற்குரிய புகழினையுடைய பெருந்தவத்தோனே யென்றுரைப்பினு மமையும். சிசுருடை - தொண்டு. நண்ணுவன் - பெறுவன். பரப்ரஹ்ம தேஹமுள்ள குருவானதனால் 'பீடுறுங்குரு' என்றார். அருள் செய்தல் - போதித்தல். சிசுருடை விருப்பினைச் செயல் என்றது பணிவிடையில் விருப்புற்றவனா யிருத்தல் என்றபடி. (க)

மெய்ம்மை யாதுபொய் யாதுயிர் யாதுதான் விளங்குஞ்
செம்மை யார்சிவம் யாதென வினவுவோன் சீட
னிம்மை யேசிவ மருள்குரு வின்மொழி கேட்டுப்
பொய்ம்மை போயக மமைபவன் வீட்டினைப் பொருந்தும்.

(ப - ரை.) மெய்ம்மை யாது—, பொய் யாது—, உயிர் யாது—, தான் விளங்கும் செம்மை ஆர்—, சிவம் யாது—, என வினவுவோன் சீடன்—, இம்மையே சிவம் அருள் குருவின் மொழி கேட்டு—, பொய்ம்மை போய்—, அகம் அமைபவன்—, வீட்டினைப் பொருந்தும்—, எ - று.

(வி - ரை.) மெய்ம்மை - உண்மை. வினவுவோன் - கேட்பவன். அமைபவன் - அமைந்திருப்பவன். வீட்டினை - முத்தியை. சிவம் அருள் - ஶிவனை ஸாக்ஷாத்கரிக்கச் செய்யும். மொழி - வாக்யம். அகம் அமைபவன் - சித்த ஶாந்தியுடையவன். (உ)

ஆரி யன்றன துரையிலா தலர்வுறா திதயஞ்
சூரி யன்றனை யலான்மரை யலர்வுறா சொல்லி
னாரி யன்றிகழ் வால்விளங் குவனருஞ் சீடன்
சூரி யன்றிகழ் வாற்கதிர்க் காந்தமுஞ் சுடரும்.

(ப-ரை.) ஆரியன்தனது உரை இல்லாது இதயம் அலர்வுறாது—, சூரியன்தனை யல்லால் மரை அலர்வுறா—, சொல்லின்—, ஆரியன் திகழ்வால் அருஞ் சீடன் விளங்குவன்—, சூரியன் திகழ்வால் கதிர்க்காந்தமும் சுடரும்—, எ - று.

(வி - ரை.) ஆரியன் - தேஶிகன். உரை - சொல் (உபதேஶமொழி). அலர்வுறாது - மலராது (விகஸியாது). மரை - தாமரை, இது முதற்குறை. திகழ்தல் - விளங்கல், திகழ்

வால் - (முன்னையது) விளக்கத்தால் (பார்வை மாத்திரத்தால்), (பின்னையது) தோற்ற மாத்திரத்தால். கதிர்க்காந்தம் - சூரியகாந்தம். சுடரும் - பிரகாசிக்கும். (ங)

சீட னக்குரு பரனெதி ரஞ்சலி செய்து
கேடி லத்துவி தாநந்த மொன்றையே கேட்க
நாடு தத்துவம் யாதுல கெதன்கணே நண்ணும்
வீட டுத்துறல் யாதினல் விளம்புக வென்பான்.

**(ப - ரை.)** சீடன்—, அ - அந்த, குருபரன் எதிர் அஞ்சலி செய்து—, கேடு இல் அத்துவிதாநந்தம் ஒன்றையே கேட்க—, நாடு தத்துவம் யாது—, உலகு எதன் கண்ணே நண்ணும்—, வீடு அடுத்துறல் யாதினல்—, விளம்புக என்பான்—, எ - று.

**(வி - ரை.)** அஞ்சலி செய்தல் - கும்பிடல். தத்துவம் - மெய்ப்பொருள். நண்ணல் - பொருந்தல். வீடு அடுத்துறல் - வீடுபெறல். கேட்க - கேட்கக்கடவன். (ச)

இன்ன வாறருஞ் சீடனேர் வினவுற விறைவ
னின்ன லம்பவ மொழிகுவான் றத்துவ மிசைப்ப
னுன்ன ருஞ்சிவ னேபர முண்மையு மவனே
யன்னி யங்களா மிச்சக மநித்தமென் றறிவாய்.

**(ப-ரை.)** இன்னவாறு—, அருஞ் சீடன்—, நேர் வினவுற—, இறைவன்—, இன்னல் பவம் ஒழிகுவான்—, தத்துவம் இசைப்பன்—, உன் அரும் சிவனே பரம்—, உண்மையும் அவனே—, (அவனினும்) அன்னியங்கள் ஆம் இ சகம் அநித்தம் என்று அறிவாய்—, எ-று.

**(வி - ரை.)** நேர் வினவுற - நேரே கேட்க. இறைவன் - ஆரியன். இன்னல் பவம் - துன்பப் பிறவி, (அம் சாரியை). பவம் அம் என வைத்து பவக்கடல் என்றுரைத்தலுமாம். ஒழிகுவான் - ஒழிய. தத்துவம் - உண்மை. இசைத்தல் - சொல்லுதல். உன்னல் - நினைத்தல். அநித்தம் - அநித்யம் (பொய்). (ரு)

மித்தை யாஞ்சகஞ் சிவனிடை மேவுறும் வெள்ளி
சுத்தி மேவல்போற் சிவோகமென் பாவனை தோன்றி
னத்த னாகிய சிவநிலை யுண்மையை யடைய
முத்த னாகுவன் பவநெறி மூலமா மோகம்.

**(ப - ரை.)** வெள்ளி சுத்தி மேவல் போல் - வெள்ளி சுத்தியில் தோன்றுதல் போல, மித்தை ஆம் சகம் சிவனிடை மேவுறும்—, சிவோகம் என் பாவனை தோன்றின்—, அத்தன் ஆகிய சிவநிலை உண்மையை அடைய—, பவ நெறி மூலமாம் மோகம் முத்தன் ஆகுவன்—, எ - று.

**(வி - ரை.)** சுத்தி - ஶுக்தி என்னும் வடசொற்றிரிபு, முத்துச்சிப்பி யென்பது பொருள், இதனை இப்பியெனவும் இளிஞ்சில் எனவும் கூறுப. பவநெறி - பிறவிநெறி, மூலம்-காரணம். முத்தன்-விடுபட்டவன். மோகம் - மோஹமாகிய ஸம்ஸாரத்தினின்றும்.

மைந்த நீயுனைச் சிவமய மென்னவே மதித்திங்
கிந்த வேறெனு முலகினை யெண்ணலை யிங்ஙன்
வந்து றுஞ்சிவாத் துவிதவின் பத்தினன் மருவிப்
பந்த மின்றிய வுயிர்முத்த னயினை பகரின்.

**(ப - ரை.)** மைந்த—, நீ—, உன்னை சிவமயம் என்ன மதித்து—, இங்கு—, இந்த வேறு என்னும் உலகினை எண்ணலை—, இங்ஙன் வந்துறும் - இவ்வாறு வந்த, சிவாத்துவித இன்பத்தினல்—, மருவி—, பகரின்—, பந்தம் இன்றிய உயிர் முத்தன் ஆயினை—, எ-று.

(வி - ரை.) மைந்த - சீடனே. சிவமயம் - சிவரூபம். மதித்து - எண்ணி (பாவித்து). எண்ணலை - மதியாதிருக்கக்கடவை. (எ)

மேவு நற்குணக் குன்றமாங் குரவனால் விளங்கப்
பாவ மற்றுயர் போதனை யருள்செயப் பட்டோ
னியாவு மிச்சகஞ் சிவமய மேயெனக் கண்டு
சீவன் முத்தனா குவனென வாகமந் தெருட்டும்.

(ப - ரை.) மேவும் நல் குணம் குன்றம் ஆம் குரவனால்—, விளங்க—, பாவம் அற்று உயர் போதனை அருள் செய்யப்பட்டோன்—, இ சகம் யாவும் சிவமயமே என கண்டு—, சீவன் முத்தன் ஆகுவன் என—, ஆகமம் தெருட்டும்—, எ - று.

(வி - ரை.) நற்குணம் - ஜ்ஞாநவைராக்யகுணம். குன்றம் - மலை. போதனை - அறிவு (ஞானம்). தெருட்டல் - தெளிவித்தல். (அ)

சிசுருடைத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் ம்ருத்யுஞ்ஜயாய நம:

எழுபத்தோன்றாவது

(கூ) சேவியத்தலம்.

[அதாவது - ஸம்ஸ்ருஷ்டீ இவ்வாறு ஸ்ரீ ஸத்குருபதேசமு முகத்தினால் சிவாத்வைத ஜ்ஞாநத்தை ஸம்பாதித்துக்கொண்ட பின்னர் சேவியன் என்பது.]

கலிநிலைத்துறை.

போத மாபலன் குருமொழி யமுதினாற் பொருந்து
மேதை யாமிவ னேயுல கடங்கவும் விரும்பித்
தீதி லாதுசே வித்திடப் படுவனாற் றெரியி
னுத லாலிவன் சேவிய னெனும்பெய ரடைவான்.

(ப - ரை.) போதம் மா பலன் - ஞானமாகிய பெருமை பொருந்திய பயனைத் தருவதாகிய, குருமொழி அமுதினால் பொருந்தும் மேதையாம் இவனே—, உலகு அடங்கவும் விரும்பி தீது இல்லாது சேவித்திடப்படுவன்—, ஆதலால்—, தெரியின்—, இவன் சேவியன் என்னும் பெயர் அடைவான்—, எ - று.

(வி-ரை.) மேதை - மேதாவி (ஞானி). அடங்கவும்-முழுதும். தெரியின் - ஆராயின்.

குரவ னல்குமெய்ஞ் ஞானநெஞ் சகத்தினிற் கூடி
விரவு றுஞ்சிவ வடிவமாஞ் சீடனும் விளம்பிற்
பரவு றுங்குரு பரனெனப் பூசிக்கப் படுவன்
வரமு றுஞ்சிவ ஞானவாழ் வினனென மதித்து.

(ப - ரை.) குரவன் - தேசிகன், நல்கும் - அருளின, மெய் ஞானம் - உண்மை ஞானமானது, நெஞ்சகத்தினில் கூடி - மனத்தினுட் பொருந்தி, விரவுறும் - கலந்த, சிவ வடிவம் ஆம் சீடனும்—, விளம்பின் - சொல்லுமிடத்தில், பரவுறும் - யாவரும் வழிபடுதற்குரிய, குருபரன் என - குருபரன் போலவே, வரம் உறும் - மேன்மை பொருந்திய, சிவஞான வாழ்வினன் என மதித்து—, பூசிக்கப்படுவன்—, எ - று.

(வி - ரை.) விரவுறல் - கலத்தல் (அபரோக்ஷ மாயறிதல்). பரவுறல் - வழிபடல் சிவஞான வாழ்வினன் - சிவஞானமாகிய செல்வத்தை யுடையவன். (உ)

என்று மெய்ச்சிவ நானெனும் பாவனை யெய்தி
நின்ற வற்கிடை யீடிலா திறைநிலைத் திடலா
னன்று றச்சிவன் போலவே யிங்கவ னாளுங்
குன்ற லற்றுயர் பூசனை கொள்வனென் றறிவாய்.

(ப - ரை.) என்றும்—, மெய்ச்சிவம் நான் என்னும் பாவனை எய்தி நின்றவற்கு—, இடையீடு இல்லாது—, இறை-சிவத்துவம், நிலைத்திடலால்—, நன்றுற - நன்றாக, சிவன் போலவே—, இங்கு அவன் நாளும்—, குன்றல் அற்று உயர் பூசனை கொள்வன் என்று அறிவாய்—, எ - று.

(வி - ரை.) இடையீடு - தடை. குன்றல் - குறைதல். மெய்ச்சிவம் நான் என்னும் பாவனை - சிவோகம் பாவனை, மெய்ச்சிவம் என்றது உடம்பில் தரித்திருக்கும் இஷ்டலிங்கம் எனினுமாம். (௩)

ஒழிவ றுஞ்சிவ பாவனை யுடையநல் யோகி
யிழிவு றுஞ்செயல் விடயநெஞ் சுடையவ னெனினு
மொழியு மவ்விட யங்களின் முத்தனாய் மருவும்
வழிப டுஞ்செயல் பரவுமா சிவனென மன்னோ.

(ப - ரை.) ஒழிவு அறும் சிவ பாவனையுடைய நல் யோகி—, இழிவுறும் செயல் விடய நெஞ்சு உடையவன் எனினும்—, வழிபடும் செயல் பரவும் மா சிவன் என—, மொழியும் - சொல்லப்பட்ட, அ விடயங்களின் - அந்த விடயங்களினின்றும், முத்தனாய் மருவும் - விடுபட்டவனாயிருப்பன், எ - று.

(வி - ரை.) ஒழிவு அறும் - நீங்காத. நெஞ்சு - மனம். பரவும் - வ்யாபித்தற்குரிய. மா சிவன் என - பெருமை பொருந்திய சிவன் போல. விடயங்களின் - விஷயங்களினின்றும், இன் ஐந்தாவதனீக்கப் பொருளது. (௪)

பந்த நாசநஞ் செயுஞ்சிவ ஞானமே பற்றுஞ்
சிந்தை யாலுல கோர்பவந் தொலைத்திடல் செயுமா
நந்த ஞானமெய்ச் சிவபத மடைந்தநல் யோகி
யிந்த மாநிலத் தனைவரும் போற்றிட விருப்பன்.

(ப - ரை.) பந்த நாசநம் செய்யும்—, சிவஞானமே பற்றும்—, சிந்தையால் உலகோர் பவம் தொலைத்திடல் செய்யும்—, மெய் ஞானம் ஆநந்தம் - சச்சிதாநந்த வடிவாகிய, சிவபதம் அடைந்த நல் யோகி—, இந்த மா நிலத்து அனைவரும் போற்றிட இருப்பன்—, எ - று.

(வி-ரை.) பந்த நாசநம்-பிறவிப்பிணிப்பைச் சேதித்தல். சிந்தையான் - மனமுடையவன். தொலைத்திடல் - ஒழித்தல். சிவபதம் - ஶிவஸாயுஜ்யம் (சிவபாதம் எனினுமாம்).

சேவியத்தலம் - முற்றும்.

---

இவ்விதமாய் காயாநுக்ரஹம், இந்த்ரியாநுக்ரஹம், ப்ராணாநுக்ரஹம், காயார்ப்பிதம், கரணார்ப்பிதம், பாவார்ப்பிதம், ஶிஷ்யன், ஶுச்ருஷை, ஸேவ்யன் என்னும் ஒன்பது ஸ்த்தலங்களில் கூறிய தர்மங்களுடனே கூடியிருத்தலால் எல்லாராலும் இவ்வுலகில் போற்றப்பட்டவனும், ஶிவஸாயுஜ்ய பதமடைந்த யோகியும், அங்கஸ்த்தலத்து மூன்றாமவனுமான ப்ரஸாதியே ஶிவலிங்கப்ரஸாதி என்று அறியப்பட்டான்.

௩ - வது. சிவலிங்கத்தலம் - முற்றிற்று.

## ச - வது. ஐங்கமலிங்கத்தலம்.

[அதாவது - ஶாந்திகலா ஸமேதமாய் ஆதிஶக்தியுடன் கூடி அமூர்த்தி ஸாதாக்யத்தைப் பொருந்தி மநோகம்யமாயிருத்தல் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நற்பிர சாதி யெய்துந் தலத்திற நயந்து ரைத்தாய்
பிற்பெறு பிராண லிங்கி தலத்தினிற் பேதந் தானுஞ்
சொற்பொருள் விளங்கு மாறு சொல்லுக வடிய னேற்குப்
பொற்புறு கயிலை காக்கும் புகழ்மலி கணங்கள் வேந்தே.

(ப - ரை.) பொற்பு உறு - அழகு மிகுந்த, கயிலை காக்கும்—, புகழ் மலி கணங்கள் வேந்தே—, நல் பிரசாதி எய்தும் தலத்திறம் நயந்து உரைத்தாய்—, பின் பெறு பிராண லிங்கி தலத்தினில் பேதம் தானும்—, சொற்பொருள் விளங்குமாறு—, அடியனேற்கு சொல்லுக—, எ - று.

(வி - ரை.) மலிதல் - மிகுதல். கணங்கள்வேந்து - கணநாதன். பொற்புறு கயிலை காக்கும் புகழ் மலி கணங்கள் வேந்தே யென்ற விளி இரேணுகரைக் குறித்தது. திறம் - வகை. நயந்து உரைத்தாய் - அன்போடு சொல்லினை. (க)

பொற்புறு மான்மா மூன்றும் புகழுமா கமங்கண் மூன்றுந்
தற்பிர சாத மூன்று மாகவே தலங்க ளொன்பான் *
சொற்பெறு பிராண லிங்கி தொடர்ந்துள தலமி வற்றை
வெற்பமர் முனிவர் வேந்தே விளம்புது முறையிற் கேண்மோ.

(ப - ரை.) வெற்பு அமர் முனிவர் வேந்தே—, பொற்பு உறும் ஆன்மா மூன்றும்—, புகழும் ஆகமங்கள் மூன்றும்—, தற்பிரசாதம் மூன்றும்—, ஆக தலங்கள் ஒன்பான்—, சொற்பெறு பிராணலிங்கி தொடர்ந்து உள்ள தலம்—, இவற்றை முறையின் விளம்புதும்—, கேண்மோ—, எ - று.

(வி - ரை.) வெற்பு - பொதியமலை. வெற்பமர் முனிவர் வேந்தே யென்றது அகத்திய முனிவரை. ஒன்பான் - ஒன்பது. கேண்மோ - கேட்பாயாக, மோ - முன்னிலையசையிடைச்சொல். தொடர்ந்து - தழுவி. ஆன்மா மூன்று - ஜீவான்மத்தலம், அந்தரான்மத்தலம், பரமான்மத்தலம். ஆகமங்கள் மூன்று - நிர்த்தேகாகமத்தலம், நிர்ப்பாவாகமத்தலம், நட்டாகமத்தலம். பிரசாதம் மூன்று - ஆதிப்பிரசாதித்தலம், அந்தியப்பிரசாதித்தலம், சேவியப்பிரசாதித்தலம். (உ)

---

* ஜங்கமலிங்க ஷட்பக்தர்கள்:—ஜங்கமலிங்கமோஹி, ஜங்கமலிங்கபக்தன், ஜங்கமலிங்கபூஜகன், ஜங்கமலிங்கவீரன், ஜங்கமலிங்கப்ரஸாதி, ஜங்கமலிங்கப்ராணி என அறுவகைப்படுவோர்கள் இவர்களில், பூர்வாசாரங்களை நிஷேதித்தவனே ஜங்கமலிங்கமோஹி, ஜாதிகுலாபிமாநங்களை விட்டவனே ஜங்கமலிங்கபக்தன், அந்யார்ச்சனைகளை விட்டவனே ஜங்கமலிங்கபூஜகன், அர்த்தப்ராணாதிகளை ஜங்கமத்திற்குக்கொடுத்து மீளவும் மோஹிக்காதவனே ஜங்கமலிங்கவீரன், ஜங்கமத்திற்கு ஸகலத்ரவ்யங்களைக் கொடுப்பதன்றிக்கொள்ளாமலிருப்பவனே ஜங்கமலிங்கப்ரஸாதி, ஜங்கமமே ஸாக்ஷாத் ஶிவமென்னும் விஶ்வாஸியே ஜங்கமலிங்கப்ராணி.

த்ரிவித ஜங்கம லிங்கம்:—ஸ்வயலிங்கம், சரலிங்கம், பரலிங்கம் என மூவகைப்படும். இவைகளில், ஶிவலாஞ்சநம் தரித்தவனே லிங்கமென்றறிந்து பாஹ்யகர்மபரித்யாகத்தினால் ஸதாநந்தி யாயிருப்பதே ஸ்வயலிங்கம், ஶிவலிங்கத்துடன் ஸர்வேந்த்ரியங்கள் கூடிக்கொண்டு பேதப்ராந்திமீளவும் உண்டாகாமல் நிஜாநந்தத்தினால் ஸ்வேச்சையாய் விஹரிப்பதே சரலிங்கம், ஸ்தாவர ஜங்கமாதி ஸகலத்திலும் தான் என்பதே பரலிங்கம்.

உ
ஓம் ஸத்குருசரணேப்யோ நம:

## எழுபத்திரண்டாவது

## (க) சிவான்மத்தலம்.



[அதாவது - பூர்வோக்தனை ஸேவ்யஸ்த்தலத்தை யடைந்த ப்ரஸாதியே ஸ்ரீஸத் குருவினாலுண்டான ப்ரஞ்ஞானத்தினால் ஜீவபாவனையை விட்டு எப்போது பரதத்வத்தைப் பாவிக்கின்றானோ அப்போது சிவான்மா என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆரிய னருளு ஞான போதனை யடைந்த விந்தச்
சீரியன் சீவ பாவந் தீர்ந்துநற் றத்து வத்தை
யோரியல் பொடுபா விக்குங் காலையி லுணர்ந்து ளோர்நற்
பேரிய லான்மா வென்னப் பெற்றிடு முலகி லன்றே

(ப - ரை.) ஆரியன் அருளும் ஞான போதனை அடைந்த இந்தச் சீரியன்—, சீவ பாவம் தீர்ந்து—, நல் தத்துவத்தை—, ஓர் இயல்பொடு பாவிக்கும் காலையில்—, உணர்ந்துளோர் - அறிஞரால், உலகில்—, இயல் ஆன்மா என்ன நல் பேர் பெற்றிடும்—, எ-று.

(வி - ரை.) ஆரியன் அருளும் - குருபதேசித்த. சீரியன் - சிறந்தவன் (ஸேவ்யனாகிய சிஷ்யன்). சீவபாவம் - ஜீவபாவனை. தீர்ந்து - நீங்கி. காலையில்-காலத்தில். சீரியன் பெற்றிடும் எனவினையைத் துரைத்துக்கொள்க. நல் தத்துவத்தை ஓர் இயல்பொடு பாவிக்கும் காலையில் - பரதத்வத்தை யநுஸந்தாநம் செய்யும் காலத்தில். (க)

பகர்ந்திடி னுண்மை வாலாக் கிரசத பாக மொத்து
நுகர்ந்துறு வினையின் பேறு நுண்ணிய னாகு மான்மா
வகந்தனி லிருளி ரிக்கு மருஞ்சுடர் போலிருந்து
திகழ்ந்திடு மென்று சொல்வர் சிவாகம நெறியு ணர்ந்தோர்.

(ப - ரை.) சிவாகமம் நெறி உணர்ந்தோர் —, பகர்ந்திடின் - சொல்லுமிடத்தில், நுண்மை - நுட்பமாகிய, வாலாக்கிரம் - ஒரு மயிர் நுனியின், சத பாகம் - நூறு பங்கில் ஒரு பங்கினை, ஒத்து - நிகர்த்து, நுகர்ந்துறு வினையின் பேறு நுண்ணியன் ஆகும் ஆன்மா—, அகம் தன்னில் இருள் இரிக்கும் அருஞ் சுடர் போல் இருந்து திகழ்ந்திடும் என்று சொல்வர்—, எ - று.

(வி - ரை.) சிவாகமநெறி யுணர்ந்தோர் சொல்வர் எனவியையும். நுகர்தல்-அநுபவித்தல். வினையின் பேறு - வினைப்பயன். இரித்தல் - ஓட்டுதல். சுடர் - ஒளி (தீபம்). உரோம நுனியின் நூறில் ஓர் பங்குக்கு நிகரானவனாகவும், ஸகல கர்மங்களின் பயனை புஜிக்கின்றவனாகவும் ஹ்ருதய கமலத்தில் இருந்துகொண்டு ஆன்மா தீபம்போல் விளங்குகிறான் என்பதிதன் கருத்து. (உ)

ஆணவத் தடையி னாலோ ரணுவென வாதி கன்ம
நாணுற வசைக்கப் பட்டு நவிலினுண் ணியனா மான்மா
வேணுறுங் கரணந் தன்னை யிசைந்துளா னென்றி சைப்பர்
தாணுவி னமல நூலாற் றமையுணர்ந் தமைந்த மேலோர்.

(ப - ரை.) தாணுவின் அமல நூலால்—, தம்மை உணர்ந்து அமைந்த மேலோர்—, ஆணவம் தடையினால்—, ஓர் அணு என—, ஆதிகன்மம்—, நாண்—, உற அசைக்கப்

பட்டு—, நவிலின் - சொல்லுமிடத்து, நுண்ணியன் ஆம் ஆன்மா—, ஏண் உறும் கரணம் தன்னை இசைந்துளான் என்று இசைப்பர்—, எ - று.

(வி - ரை.) தாணு - சிவபெருமான். தாணுவினமல நூல் என்றது சிவாகமங்களை. ஆணவம் - ஆணவமலம். ஆதிகன்மம் - பழவினை. நாண் - கயிறு. அசைக்கப்பட்டு - கட்டப்பட்டு. நவிலல் - சொல்லல். ஏண் - பெருமை. ஸகல ப்ராணிகளுக்கும் ஆத்மாவாகி வ்யாபகனுயிருப்பினும் ஆணவம் முதலிய மல ஸம்பந்தத்தால் அணுவானவனுய்ப் பூர்வ கன்மங்களால் கட்டப்பட்டவனுய் அந்தக்கரணத்தைப் பற்றிக்கொண் டிருக்கிறுன் என்பதிதன் கருத்து. (௩)

தெள்ளுறு பளிங்கு தானோர் சேயொளி யரத்தச் சார்வாற்
கொள்ளுறு மிலங்கு செம்மை குறித்திடி னவ்வா றேபோல்
விள்ளரு மாங்கா ரத்தின் சார்வினுல் விளங்கு மான்மாத்
தள்ளரு முடலின் மானந் தரிக்குமென் றறிந்து கொள்ளே.

(ப - ரை.) தெள்ளுறு பளிங்கு—, ஓர் சேயொளி அரத்தச் சார்வால்—, இலங்கு செம்மை கொள்ளுறும்—, குறித்திடின்—, அவ்வாறேபோல்—, விள் அரும் ஆங்காரத்தின் சார்வினுல்—, விளங்கும் ஆன்மா—, தள்ளரும் உடலின் மானம் தரிக்கும் என்று அறிந்துகொள்—, எ - று.

(வி - ரை.) தெள்ளுறு பளிங்கு - தெளிவாகிய படிகக்கல். சேயொளி - செந்நிறம். தள்ளரும் - ஒழித்தற்கரிய. மானம் - அபிமானம் (பற்று). அரத்தம் - அரத்தமலர். ஸ்படிகக்கல்லுக்குச் செவ்வரத்தை மலரின் ஸம்பந்தத்தால் எவ்வாறு செந்நிறம் ஏற்படுகின்றதோ, அவ்வாறு ஆத்மாவுக்கு அஹங்கார ஸம்பந்தத்தால் தேஹாபிமானம் ஏற்படுகின்றது என்பதிதன் கருத்து. (௪)

நிரஞ்சன மாய வான்மா நிறைந்தவ னெங்கு மேனும்
வருஞ்செய லுடலி லாதா னுயினு மாயை தந்த
புரஞ்செறி பவனுய் நின்று புகலரும் பவங்க டோறுந்
திரிந்திடு மென்று கூறுஞ் சிவனரு ளாக மங்கள்.

(ப - ரை.) நிரஞ்சனம் ஆய ஆன்மா—, எங்கும் நிறைந்தவன் ஏனும்—, வரும் செயல் உடல் இல்லாதான் ஆயினும்—, மாயை தந்த புரம் செறிபவனுய் நின்று—, புகல் அரும் - சொல்லுதற்கரிய, பவங்கள் தோறும்—, திரிந்திடும் என்று—, சிவன் அருள் ஆகமங்கள் கூறும்—, எ - று.

(வி - ரை.) ஏனும் - எனினும். புரம் - உடம்பு. பவங்கள் தோறும் - பிறவிகடோறும். சிவனருளாகமங்கள் - சிவாகமங்கள். ஆத்மா சரீரமில்லாதவனுயினும், எங்கும் வ்யாபகனுயினும், நிர்மலனுயினும், மாயாமயமாகிய சரீரத்தைப் பற்றினவனுய் ஸம்ஸாரத்தில் சுற்றி உழல்கின்றுன் என்பதிதன் கருத்து. (௫)

மெய்யுட னிந்தி யங்கள் வேறுசெய் வழியி னுலே
பொய்யறு மகண்டா நந்த பூரண பிரம ரூபா
லையம தறவே யான்ம சொரூபநன் கறிதல் செய்யச்
செய்யுமெந் நாளந் நாளான் மாவினைச் சேர்த லென்பார்.

(ப - ரை.) மெய்யுடன் இந்தியங்கள்—, வேறு செய் வழியினுலே—, பொய் அறும் அகண்டாநந்த பூரண பிரம ரூபால்—, ஐயம் அற—, ஆன்ம சொரூபம்—, நன்கு அறிதல் செய்யச் செய்யும் எந்நாள்—, அந்நாள்—, ஆன்மாவினைச் சேர்தல் என்பார்—, எ - று.

(வி - ரை.) மெய் - உடல். ரூபால்-உருவத்தால். எந்நாள் - எந்த நாளோ. சேர்தல் - சேர்வது. தேஹேந்த்ரியங்களாகிய பஞ்சகோசங்களை விட்டு, எப்போது அகண்டாகார ப்ரஹ்ம ஸ்வரூபமான ஆத்ம ஜ்ஞாநம் உதிக்கின்றதோ, அப்போது ஆத்ம ப்ராப்தி என்று சொல்லப்படும் என்பதிதன் கருத்து. (சு)

உடம்பறு மான்மா விற்கோ ருடலிலை யியல்பா லேனு
மடந்தரு மவித்தை கன்ம மருவலா லவன்றா னிங்குத்
தொடர்ந்துள நுகர்விற் காகத் தோன்றுவன் றேகி யாயென்
றொடுங்கிய புலவ ழக்க முடையவ ருரைப்ப ரன்றே.

(ப-ரை.) உடம்பு அறும் ஆன்மாவிற்கு—, இயல்பால்—, ஓர் உடல் இல்லை ஏனும்—, மடம் தரும் அவித்தை கன்மம் மருவலால்—, அவன்தான் இங்கு தொடர்ந்து உள்ள நுகர்விற்காக—, தேகியாய் தோன்றுவன் என்று—, ஒடுங்கிய புல வழக்கம் உடையவர் உரைப்பர்—, எ - று.

(வி - ரை.) உடம்பு அறும் - அஶரீரியாகிய. அவித்தை - அஜ்ஞாநம். கன்மம் - கர்மம். நுகர்விற்காக - நுகர்ச்சியின் (போகத்தின்) பொருட்டு. தேகி - உடம்பினன். ஒடுங்கிய புல வழக்கம் உடையவர் - ஶப்தாதி விஷய ஸஞ்சாரம் ஒடுங்கப் பெற்றவர் (ஞானியர்). மடம் தரும் அவித்தை கன்மம் மருவலால் - அஜ்ஞாந கர்மங்களின் ஸம்பந்தத்தால். (எ)

தேவல னியக்கர் நற்கந் திருவரோ டரக்கர் மக்கண்
மாவல னிற்ப வற்றின் வடிவலன் வயங்கு மான்மா
யாவன்மற் றென்னி னவ்வவ் வுடம்புறு மிசைவி னாலே
மேவுவ னவற்றா னாம மென்றறி விளக்க மிக்கோய்.

(ப - ரை.) விளக்கம் மிக்கோய் - ஒளி மிகுந்தவனே, வயங்கும் ஆன்மா—, தேவு அலன்—, இயக்கர் நல் கந்திருவரோடு அரக்கர் மக்கள் மா அலன்—, நிற்பவற்றின் வடிவு அலன்—, மற்று யாவன் என்னின்—, அவ்வவ்வுடம்புறும் இசைவினாலே—, அவற்றால் நாமம் மேவுவன் என்று அறி—, எ - று.

(வி - ரை.) தேவு - தெய்வம். மா - விலங்கு (விலங்கு என்றதனால் பக்ஷியையும் குறித்தது). நிற்பவற்றின் வடிவு - அசரரூபம் (மரம் செடி கொடி முதலியன). இசைவு - இணக்கம். (அ)

பற்பல கருமந் தன்னாற் பற்பல யோனி யெய்திப்
பற்பல மதிபொ ருந்திப் பற்பல நெறியி னெய்தி
யற்பமென் றறிவு டன்சிற் றிறைமையு மடைந்த சீவன்
சிற்பர னாட லுக்கோ ரிடமெனச் செறியு மன்றே.

(ப - ரை.) பற்பல கருமம் தன்னால்—, பற்பல யோனி எய்தி—, பற்பல மதி பொருந்தி—, பற்பல நெறியின் எய்தி—, அற்பம் என்ற அறிவுடன்—, சிறு இறைமையும் அடைந்த சீவன்—, சிற்பரன் ஆடலுக்கு—, ஓர் இடம் என செறியும்—, எ - று.

(வி - ரை.) யோனி - பிறப்பிடம். மதி - அறிவு. நெறி - வழி. சிறு இறைமை - அல்பாதிகாரம். ஆடல் - திருவிளையாட்டு (லீலை). (கூ)

தன்னுறு வினையி னாலச் சம்புவா லியக்கப் பட்டு
வெங்கர கொடுது றக்க மேவிய கரும சேட
மன்னுற வன்வ யிற்றில் வந்துதித் திறந்து தோன்றி
பின்னண முழலுஞ் சீவ னிரும்பவத் தமைதி யின்றி.

(ப - ரை.) சீவன்—, தன் உறு வினையினால்—, அ - அந்த, சம்புவால் இயக்கப் பட்டு—, வெம் நரகொடு துறக்கம் மேவிய கரும சேடம் மன்னுற—, அன்னை வயிற்றில்—, வந்து உதித்து இறந்து தோன்றி—, இரும் பவத்து—, அமைதியின்றி—, இன்னணம் உழலும்—, எ - று.

(வி - ரை.) சம்பு - சிவபிரான். இயக்கப்பட்டு - அசைப்பிக்கப்பட்டு. துறக்கம் - ஸ்வர்க்கம். சேடம் - எச்சம் (மிச்சம்). உதித்து - பிறந்து. இன்னணம் - இவ்வாறு. உழலும் - திரியாநிற்கும். வந்து உதித்து இறந்து தோன்றி என்றது கருப்பப் பையிலிருந்து வந்து பிறந்து மரித்து, மீண்டும் பழையபடி வந்து பிறந்து மரித்து என்றபடி. அமைதி - ஓய்வு. இரும்பவம் - கோரமாகிய ஸம்ஸாரம். உழலுதல் - சுற்றல். (௧0)

அருந்துயர்க் கிடம தாயஞ் ஞானகற் பிதமே யாகிப்
பொருந்திநின் றுள்ள சீவத் துவமுடன் போகு மாசான்
றிருந்தருண் மொழியான் ஞான சத்தியுந் திகழு மென்பர்
பரந்துள கலைகண் முற்றும் பழுதறக் கற்ற மேலோர்.

(ப - ரை.) பரந்து உள்ள கலைகள் முற்றும் பழுது அற கற்ற மேலோர்—, அருந் துயர்க்கு இடமாய்—, அஞ்ஞான கற்பிதமேயாகி—, பொருந்தி நின்று உள்ள சீவத்துவம்—, ஆசான் திருந்து அருள் மொழியால்—, உடன் போகும்—, ஞானசத்தியும் திகழும்—, என்பர்—, எ - று.

(வி - ரை.) துயர் - ஸம்ஸாரதுக்கம். கற்பிதம் - கல்பிக்கப்பட்டது. அஞ்ஞானம் - ஆணவாதி மலம். சீவத்துவம் - ஜீவபாவம் (ஜீவதத்துவமானது). ஞானசத்தி - ஜ்ஞாந ஸாமர்த்தியம். உடன் போகும் - உடனே தொலைந்துபோம். (௧௧)

சீவான்மத்தலம் - முற்றும்.

உ

ஓம் ஜகத்வ்யாபிநே நம:

எழுபத்துமூன்றாவது

## (உ.) அந்தரான்மத்தலம்.

[அதாவது - ஜீவாத்மா தேஹத்திலிருப்பினும் தேஹாபிமாந மில்லாமல் ஸ்ரீஸத்குருபதேசத்தின் ஸ்வஸ்வரூப ஜ்ஞாநத்தினால் ஜீவபாவத்தைப் போக்கிக்கொண்ட ஆத்மாவே அந்தரான்மா என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தேசிக னருளி னாலே சீவபா வந்தா னென்று
நாசம தடையு மன்று நசித்திடப் பட்ட வற்குப்
பாசமி லந்த ரான்ம பாவம்வந் துறுமென் றோர்வாய்
மாசறு தவத்தின் மிக்க மலயவெற் பமர்ந்த மேலோய்.

(ப - ரை.) மாசு அறு தவத்தின் மிக்க மலய வெற்பு அமர்ந்த மேலோய்—, தேசிகன் அருளினாலே—, சீவபாவம்தான்—, என்று நாசம் அடையும்—, அன்று நசித்திடப் பட்டவற்கு—, பாசம் இல் அந்தரான்ம பாவம் வந்துறும் என்று—, ஓர்வாய் - அறியக் கடவை,— எ - று.

(வி - ரை.) மாசறு தவத்தின் மிக்க மலய வெற்பமர்ந்த மேலோய் என்றது அகத்தியமுனிவரை. (௧)

அறைந்தவச் சிவன் மெய்யோ டடுக்கினு முடல பந்தந்
துறந்தொரு பரமான் மாவை யுள்கலாற் றுளங்கு சிவ
னிறைந்துள பரம ஞப்ப ணிற்றலா லுபயத் தன்மை
பெறுந்திற மதனு லெய்தும் பிறங்குமந் தரான்ம நாமம்.

(ப - ரை.) அறைந்த - சொல்லப்பட்ட, அ - அந்த, சிவன்—, மெய்யோடு அடுக்கினும்—, உடல பந்தம் துறந்து—, ஒரு பரமான்மாவை உள்கலால்—, துளங்கு சிவன் நிறைந்து உள்ள பரமன் நாப்பண் நிற்றலால்—, உபயத்தன்மை பெறும் திறமதனுல்—, பிறங்கும் - விளங்குகிற, அந்தரான்ம நாமம் எய்தும்—, எ - று.

(வி - ரை.) அந்தச் சிவன் - ஜீவத்வம் நீங்கினவனுகிய ஸேவ்யன். மெய்யோடு - சரீரத்தோடு. உடல பந்தம் - சரீரபந்தம். உள்கல் - நினைத்தல். துளங்கல் - சலித்தல். எய்தல் - அடைதல். அடுக்கினும் - சேர்ந்துள்ளதாயினும். துளங்கு சிவன் நிறைந்துள பரமன் நாப்பண் நிற்றலால் உபயத்தன்மை பெறும்திறமதனுல் என்றதனுல் ஜீவாத்மா பரமாத்மாக்களின் இடையிலுள்ள தன்மையால் ஜீவபரமாத்மாக்களின் தர்மங்களாகிய ஆஹார வ்யவஹார ஆநந்தாநுபவம் முதலிய இருவித தர்மங்களின் ஸம்பந்தத்தால் என்பது பெறப்பட்டது. (௨)

முற்றுறு மனிதத் தன்மை முதலவாங் காரச் சார்வான்
மற்றவை யியல்பன் றென்று மதிப்பவ னந்த ரான்மாச்
சொற்றிடு மவன்பு னற்கட் டோன்றுபா சிலையுந் துன்னத்
தெற்றுறு குடம்பைப் புள்ளும் போலவே மெய்யிற் றீர்ந்தான்.

(ப - ரை.) முற்றுறும் மனிதத்தன்மை முதல ஆங்காரச்சார்வால்—, அவை இயல்பு அன்று என்று மதிப்பவன் அந்தரான்மா—, சொற்றிடும் - சொல்லப்பட்ட, அவன்—, புனல்கண் தோன்று - நீரிலுண்டாகிய, பாசிலையும்—, துன்ன - நெருங்க, தெற்றுறு - பின்னப்பட்ட, குடம்பைப்புள்ளும் போலவே—, மெய்யின் தீர்ந்தான் - உடம்பினின்று நீங்கினவனுவன், எ - று.

(வி - ரை.) சார்பு-ஆதரவு. கண் - ஏழனுருபு. பாசிலை - பச்சிலை அதாவது தாமரை யிலை. தெற்றல் - பின்னல். குடம்பைப்புள் - கூண்டிலுள்ள பறவை. (௩)

மதிதனை யடையா மேக மறைத்திடப் படல்போ லான்மாப்
பொதியுட லகல நின்று புணர்த்திடப் படுவன் மெய்யா
மிதனிடை யுறினு மாழ்கி யானென தென்ப திலலோன்
பதியெனுஞ் சிவனை யோகப் பயிற்சியாற் காண்ப னென்றும்.

(ப - ரை.) மதிதனை அடையா மேகம் மறைத்திடப்படல் போல்—, ஆன்மா—, பொதி உடல் அகல நின்று புணர்த்திடப்படுவன—, மெய் ஆம் - உடம்பாகிய, இதனிடை உறினும்—, மாழ்கி - மயங்கி, யான் எனது என்பது இல்லோன்—, பதி என்னும் சிவனை—, யோகப்பயிற்சியால்—, என்றும் காண்பன்—, எ - று.

(வி-ரை.) மதி தனை அடையா மேகம் மறைத்திடப்படல் போல் - சந்திரன் ஸம்பந்தமில்லாதனவாகிய மேகங்களால் மறைக்கப்படுதல்போல். இதனிடை யென்பதில் இடை ஏழனுருபு. மாழ்கல் - மயங்கல். யான் எனது - அஹங்கார மமகாரங்கள். பதி - இறைவன். யோகப்பயிற்சி - யோகாப்யாஸம். பொதி உடல் அகலநின்று புணர்த்திடப்படுவன் - ஆத்மா ஸ்த்ரீலர்திதேஹ ஸமூஹங்களால் ஸம்பந்திக்கப்படாமலிருக்கும்படி மறைக்கப் படுகிறுன். யான் எனது என்பது அஹங்கார மமகாரங்கள். (௪)

போத்துரு வாம வற்கும் போக்கிய மாம வற்றைப்
பேர்த்திடு தலினுன் மிக்க பிரேரக னருளி னுலே
போத்துருப் பாவ நீங்கிப் பொலிகுவ னெங்கு நின்று
காத்தருள் பரமற் கண்டு களிக்குவ னந்த ரான்மா.

(ப - ரை.) அந்தரான்மா—, போத்துரு ஆம் அவற்கும்—, போக்கியம் ஆம் அவற்றை பேர்த்திடுதலினுல்—, மிக்க பிரேரகன் அருளினுலே—, போத்துரு பாவம் நீங்கி—,பொலிகுவன்—,எங்கும் நின்று—,காத்தருள் பரமன் கண்டு களிக்குவன்—,எ-று.

(வி - ரை.) பொலிதல - பிரகாசித்தல். போத்துரு - போக்தா (புஜிப்பவன்). போக்கியம் - போஜ்யம் (புஜிக்கப்படும் பொருள்). பிரேரகன் - ஈஸ்வரன். புஜிப்பவனையும் புஜிக்கப்படும் பொருளையும் விடுவதனுல் ஈஸ்வர ப்ரஸாதத்தால் புஜிப்பவன்றன்மை தொலையப்பெற்றவனுகிய ஆத்மா இயல்பாகவே விளங்குகிறுன், ஸிவன் எல்லாருடைய உள்ளத்தில் எப்போதும் ப்ரேரகனு யிருக்கிறுன், ஸிவஜ்ஞாந யோகத்தால் யோகியானவன் முக்தன்போல மகிழ்கிறுன் என்பதிதன் கருத்து. (ரு)

அந்தரான்மத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் ஜகத்குரவே நமஃ

எழுபத்துநான்காவது

## (௩.) பரமான்மத்தலம்.

—oo❦oo—

[அதாவது - அந்தராத்மா, தான் ஸிவாத்வைத ஜ்ஞாநஸக்தியினுல் ஸம்ஸாரமூலமான அஜ்ஞாநத்தைப் போக்கிக்கொள்ளவும் பரமான்மாவினிடமுள்ள ஸாமரஸ்யம் ப்ராப்தமாதலால் பரமான்மா என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பரமமெய்ஞ் ஞானந் தன்னுற் பவநெறிக் கேது வாகு
மிருண்மல மகலு மாற்றுற் பரமனே டிருக்கும் பற்று
லுரமுறு பரமான் மாவென் றுரைத்திடப் படுவ னன்னேன்
றிரைமலி கடல்கு டித்துத் தேக்கெறி முனிவ ரேறே.

(ப - ரை.) திரை மலி கடல் குடித்து தேக்கெறி முனிவர் ஏறே—, பரமம் மெய் ஞானம்தன்னுல்—, பவநெறிக்கு ஏது ஆகும் இருள் மலம் அகலும் ஆற்றுல்—, பரமனேடு இருக்கும் பற்றுல்—, அன்னேன்—, உரம் உறு பரமான்மா என்று—, உரைத்திடப்படுவன்—, எ - று.

(வி - ரை.) மலிதல் - மிகுதல். கடல் - கடல்நீர். தேக்கெறிதல் - ஏப்பமிடல். திரை மலி கடல் குடித்துத் தேக்கெறி முனிவரேறே என்ற விளி அகத்தியமுனிவரைக் குறித்தது. முனிவரேறு-ஒருசொல். ஆற்றுல் - காரணத்தால். பற்றுல் - ஸம்பந்தத்தால். ஆறு பற்று என்பவற்றிற்றில் எண்ணும்மைகள் விரிக்க. பரமனேடிருக்கும் பற்றுல் - பரமாத்மாவினிடமுள்ள ஸமரஸத்தன்மையால். (க)

தன்னெளி யானிறைந்து தான்மிளிர் சிவனே யிங்ங
னுன்னுமான் மாக்கட் கெல்லா முயர்தலாற் பரமான் மாவா
மன்னுமா மாயை யென்னும் வாரியு ளண்ட மொக்குள்
சின்னமா யெழுந்த டங்கச் செய்பவன் பரமான் மாவாம்.

(ப-ரை.) தான் தன் ஒளியால் நிறைந்து—, மிளிர் சிவனே—, இங்ஙன்—, உன்னும் ஆன்மாக்கட்கு எல்லாம் உயர்தலால்—, பரமான்மா ஆம்—, மன்னும் - நிலைபெற்ற, மா மாயை என்னும் வாரியுள்—, அண்டம் மொக்குள்—, சின்னமாய் எழுந்து அடங்கச்செய்பவன் (எவனோ)—, (அவன்) பரமான்மா ஆம்—, எ-று.

(வி-ரை.) மிளிர்தல் - விளங்குதல். வாரி - கடல். அண்டம் - உலகங்கள் (ப்ரஹ்மாண்டங்கள்). மொக்குள் - குமிழிகள். சின்னம் - அடையாளம். உயர்தலால் - தனது காந்தியால் சிரேஷ்டனாயிருக்கிறபடியால். எழுந்து அடங்கல்-தோன்றியொடுங்குதல். (உ)

யாதினி லொளிக ளெல்லா மெரியினிற் பொறிபோற் றோன்றி
மாய்தரும் பரம னுக்கவ் வடிவமாந் தத்து வங்கள்
யாதினிற் கடற்ற ரங்க மென்னவந் தெழுந்தொ டுங்கு
மோதுமவ் வடிவ மாகு மொருபர மான்மா விற்கே.

(ப-ரை.) யாதினில் ஒளிகள் எல்லாம் எரியினில் பொறி போல் தோன்றி மாய் தரும்—, பரமனுக்கு அ வடிவம் ஆம்—, யாதினில்—, தத்துவங்கள்—, கடல் தரங்கம் என்ன வந்து எழுந்து ஒடுங்கும்—, ஒரு பரமான்மாவிற்கு—, ஓதும் அ வடிவம் ஆகும்—, எ-று.

(வி-ரை.) எரி - நெருப்பு. மாய்தரல் - அழிதல். தரங்கம் - அலை. மாய்தரும் ஒடுங்கும் என்பவற்றீற்றில் ஓகார வினாக்கள் விரிக்க. தத்துவங்கள் என்றது சகல பொருள்கள் எனினுமாம். (௩)

உலகினுக் குயிரு மாகி யொழிந்திடு மலத்த னாகி
யிலகுமப் பரமன் றன்னை யிசைப்பர்தத் துவத்தின் மேலா
யலரிதன் கதிரா லெங்கு மவிர்தல்போற் பரமன் றானும்
விலகிலச் சத்தி தன்னால் வியாபித்து விளங்கு மன்றே.

(ப-ரை.) உலகினுக்கு உயிருமாகி—, ஒழிந்திடு மலத்தன் ஆகி—, இலகும் அ பரமன்தன்னை—, தத்துவத்தின் மேலாய் இசைப்பர்—, அலரி - சூரியன், தன் கதிரால் எங்கும் அவிர்தல் போல்—, பரமன்தானும்—, விலகு இல் அ சத்தி தன்னால்—, வியாபித்து விளங்கும்—, எ-று.

(வி-ரை.) ஒழிந்திடு மலத்தன் - மலரஹிதன். தத்துவம் - மெய்ப்பொருள். தத்துவத்தின் மேலாய் - சகல தத்துவங்களுக்கும் மேலுள்ளதாய். இசைத்தல் - சொல்லல். அவிர்தல் - பிரகாசித்தல். விலகு - முதனிலைத்தொழிற்பெயர். (௪)

எங்கணு மொளிர்வோ னேனு மகிலமு மிறந்து நின்ற
பொங்கறி வுருவ மாகப் புகன்றிடு பரமன் சீவர்
தங்களுக் கொருதன் சோதி வடிவமாய்ச் சாரு மென்பர்
மங்கலப் பொருனை யீன்ற மலயவெற் பமர்ந்த மேலோய்.

(ப-ரை.) மங்கலம் பொருனை ஈன்ற மலய வெற்பு அமர்ந்த மேலோய்—, எங்கணும் ஒளிர்வோனேனும் அகிலமும் இறந்து நின்ற—, பொங்கு அறிவுருவமாக புகன்றிடு பரமன்—, சீவர்தங்களுக்கு—, ஒரு தன்சோதி வடிவமாய்ச்சாரும் என்பர்—, எ-று.

(வி-ரை.) இறந்து நிற்றல் - கடந்து நிற்றல். பொங்குதல் - விளங்குதல். மங்கலம் - மங்கலகரமாகிய. பொருனை - தாம்ரபர்ணிநதி. மலயவெற்பு - பொதியமலை. மங்கலப் பொருனையீன்ற மலயவெற்பமர்ந்த மேலோய் என்றது அகத்தியமுனிவரை. (௫)

பரமான்மத்தலம் - முற்றும்.

---

ஓம் வ்யோமகேசாயநமஃ.

# எழுபத்தைந்தாவது

## (சு.) நிர்த்தேகாகமத்தலம்.

[அதாவது - சிவயோகி பரமாத்ம பாவனையைச்செய்து, அஹங்கார மமகாரங்களைத் துறந்து, ஸ்தூலாதி சரீரதர்மங்களை த்யாகம் செய்திருப்பதே நிர்த்தேகாகமம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஓவுறு மகந்தை யோனு யுயர்தரு பரமான் மாவைப்
பாவனை புரிவோ னாகிப் பழுதுடற் றரும நீங்கி
மேவுறு தேகிக் கிங்கு விளம்புவ ரறிவ றிந்த
நாவலர் விளங்கு நிர்த்தே காகம நயந்து மாதோ.

(ப - ரை.) ஓவுறும் அகந்தையோனாய்—, உயர்தரு பரமான்மாவை பாவனை புரிவோன் ஆகி—, பழுது உடல் தருமம் நீங்கி—, மேவுறு தேகிக்கு—, இங்கு-இவ்வுலகில், அறிவறிந்த நாவலர்—, விளங்கும் - பிரகாசிக்கிற, நிர்த்தேகாகமம் —, நயந்து விளம்புவர்—, எ - று.

(வி - ரை.) ஓவுறும் அகந்தையோன் - அகந்தை நீங்கினவன். பழுது - அழிவு. உடல் தருமம் - சரீரதர்மம். நயந்து - விரும்பி. அஹங்காரமற்றவனும், பரமாத்மத்தன்மை பெற்றவனும், தேஹதர்மம் நீங்கினவனுமாகிய யோகி தேஹத்தோடுகூடி யிருப்பினும் நிர்த்தேகாகமன் என்னும் பெயர் உள்ளவனே என்பதிதன் கருத்து. (க)

இரும்பவ மூல மாகு மியானென தென்ப தின்றி
யரும்பர நானென் றன்மை யடைந்தவற் குடல முண்டோ
வருஞ்சகங் கடந்து ஞான வாரிதி தன்னின் மூழ்கு
முரம்பெறு யோகி யெவ்வா றுடம்பினைச் சிந்தை செய்வான்.

(ப - ரை.) இரும் பவம் மூலம் ஆகும் - பெரிய பிறவிக்குக் காரணமாகிய, யான் எனது என்பது இன்றி—, அரும் பரம் நான்—, என் - என்கிற, தன்மை - தன்மையை, அடைந்தவற்கு—, உடலம் உண்டோ—, வரும் - தோன்றுகிற, சகம் கடந்து—, ஞான வாரிதிதன்னில் மூழ்கும்—, உரம்பெறு யோகி—, எவ்வாறு உடம்பினை சிந்தை செய்வான்—, எ - று.

(வி - ரை.) உண்டோ வென்னுமோகார வினா எதிர்மறைப் பொருளது. வாரிதி - கடல். உரம் - அறிவு (ஞானம்). அரும் பரம் - பரமாத்மா. (உ)

தன்னையோ ரெல்லை யில்லாத் தனிச்சிதம் பரமாய்க் கொள்வோன்
மன்னுமா யினுமு டம்பில் வடிவுறு விகார மொன்றான்
றன்னைவே றிலாமற் சச்சிதா நந்த பரமா காச
மென்னவே யுணர்ந்த யோகி யாண்டுமோ கத்திற் சேர்வான்.

(ப - ரை.) தன்னை ஓர் எல்லை இல்லா—, தனி சிதம்பரமாய்க் கொள்வோன்—, உடம்பில் மன்னும் ஆயினும்—, வடிவுறு விகாரம் ஒன்றான்—, தன்னை வேறு இல்லா

மல்—, சச்சிதாநந்த பரமாகாசம் என்னவே உணர்ந்த யோகி—, யாண்டு மோகத்தில் சேர்வான்—, எ - று.

(வி - ரை.) சிதம்பரம் - சிதாகாஸம். ஒன்றான் - பொருந்தமாட்டான். யாண்டு மோகத்திற் சேர்வான் என்ற வினு எதிர்மறையாய்ச் சேரான் எனப் பொருள்பட்டு நின்றது. வேறில்லாமல் - இரண்டாவதில்லாமல். பரமாகாசம் - பரமாகாஸமாகிய ப்ரஹ்மம். (ங)

ஒருபொரு ளிடத்திற் பேத முபாதியாற் றோன்று மென்னத்
தெருளுற வுணர்வோற் குண்டோ தேகத்தி னளவா யுற்றல்
விரிவுறு பேத புத்தி வினைப்பரிச் சேத வேது
வரிதெனு மபேத புத்தி யதுதனக் கேது வாமோ.

(ப - ரை.) ஒரு பொருளிடத்தில்—, உபாதியால் பேதம் தோன்றும் என்ன—, தெருள் உற உணர்வோற்கு—, தேகத்தின் அளவாயுற்றல் உண்டோ—, விரிவுறு பேத புத்தி—, வினைப் பரிச்சேத ஏது—, அரிது என்னும் அபேத புத்தி அது தனக்கு ஏது ஆமோ—, எ - று.

(வி - ரை.) தெருள் - தெளிவு. உண்டோ வென்னு மோகாரம் எதிர்மறையா யில்லை யெனப் பொருள்பட்டு நின்றது. பரிச்சேதம் - துண்டித்தல். ஆமோ வென்னு மோகாரம் ஆகாதெனப் பொருள்படலால் எதிர்மறை. அது தனக்கு - பரிச்சேதத்திற்கு. ஒரே வஸ்துவில் உபாதியால் ஏற்பட்ட பேதங்கள் காணப்படுகின்றன என்னும் புத்தி எவனுக்கு உளதோ, அவன் தேஹத்தை எப்படி யடைந்தவனுவன், எல்லாவற்றின் பரிச்சேதத்திற்குப் பேதபுத்தி காரணமாகிறது, அபேத புத்தி ஏற்படின் பரிச்சேதத்திற்குக் காரணமேது என்பதிதன் கருத்து. (ச)

நிரம்பிய சிவோக மென்னு நினைவுவந் தியார்க ணுண்டாம்
வரம்பெறு மவனுக் கெங்கு மருவுறா துடல பந்த
மிருங்கடன் முகட்டெ ழுந்த வமுதினு மினிமை பெற்ற
வருந்தமிழ் பயந்த செவ்வா யகத்தியப் பெயரி னுனே.

(ப - ரை.) இரு - பெரிய, கடல் முகட்டு எழுந்த அமுதினும் இனிமை பெற்ற—, அருந் தமிழ் பயந்த செவ்வாய்—, அகத்தியப் பெயரினுனே—, நிரம்பிய சிவோகம் என்னும் நினைவு வந்து யார்கண் உண்டாம்—, வரம் பெறும் அவனுக்கு—, எங்கும் உடல பந்தம் மருவுறாது—, எ - று.

(வி - ரை.) பயந்த - தந்த. உண்டாம் - உண்டாமோ. உடல பந்தம் - சரீர பந்தம்.

நிர்த்தேகாகமத்தலம் - முற்றும்.

ஓம் மஹாஸேநஜநகாய நமஃ

# எழுபத்தாறுவது

# (ரு.) நிர்ப்பாவாகமத்தலம்.

[அதாவது - நிர்த்தேகாகம ஸம்பந்நனான ஶிவயோகிக்கு இந்த்ரிய விகாரமில்லாத மநோவ்யாபாரம் ஸித்திப்பதே நிர்ப்பாவாகமம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அப்பெருஞ் சொரூப முள்ள வவற்குமா றாகு மென்னச்
செப்புறு பாவ பேதஞ் சிதைந்திட விகார நீங்கு
மெய்ப்புறு பாவ நிர்ப்பா வாகம மெனவி ளம்பும்
கைப்பொலி மழுவொன் றுள்ள கடவுளா கமங்க ளன்றே.

(ப - ரை.) கை - கையில், பொலி - விளங்குகிற, மழு ஒன்று உள்ள கடவுள் - ஒரு மழுவேந்திய கடவுளாற் சொல்லப்பட்ட, ஆகமங்கள்—, அ பெருஞ்சொரூபம் உள்ள அவற்கு—, மாறு ஆகும் என்ன செப்புறு பாவ பேதம் சிதைந்திட—, விகாரம் நீங்கும் மெய்ப்புறு பாவம்—, நிர்ப்பாவாகமம் என விளம்பும்—, எ - று.

(வி-ரை.) கைப் பொலி மழுவொன்றுள்ள கடவுளாகமங்கள் - சிவாகமங்கள். பாவ பேதம் - பாவவேற்றுமை. சிதைதல் - அழிதல். மாறு ஆகும் என்னச் செப்புறு பாவ பேதம் சிதைந்திட - ஏனைய தன்மைகளை விடுத்தமையால் தனித்திருத்தல்பற்றி. விகாரம் நீங்கும் மெய்ப்புறு பாவம் - ஸ்வரூபத்திற்கு விகாரம் நீங்கிய தன்மையானது. (௧)

பிரமநா னெனுமி ரண்டு பெரும்பொருள் பாவத் தெய்தும்
பரமதி லொன்று தற்கப் பாவமின் றென்ப துண்மை
புரையறு சிதம்ப ரத்தி லேகமாய்ப் பொருந்தி னேற்கு
வரையறு சாதி மேனி யலமரன் மருவு றுவால்.

(ப - ரை.) பிரமம் நான் என்னும் இரண்டு பெரும் பொருள்—, பாவத்து எய்தும்—, பரமதில் ஒன்று ஆதற்கு—, அ - அந்த, பாவம் இன்று என்பது உண்மை—, புரை அறு - குற்றமற்ற, சிதம்பரத்தில்—, ஏகம் ஆய் பொருந்தினேற்கு—, வரை அறு - எல்லையற்ற, சாதி—, மேனி அலமரல்—, மருவுறு - பொருந்தா, எ - று.

(வி - ரை.) ஏகம் - தனிமை (ஏகத்வம்). மேனியலமரல் - உடம்போடு கூடியுழலல். பிரமம் நான் என்னும் இரண்டு பெரும் பொருள் பாவத்து எய்தும் - நான் ப்ரஹ்மம் என்ற பாவனைக்கு இரண்டு பொருளின் பற்றுள்ளது. பரமதில் - சிதாகாஶத்தில். சாதி - வர்ணாஶ்ரம வாஸநா ஸம்பந்தம். (௨)

உரைமன மிறந்து நின்ற வொருபெருஞ் சிதாகா சத்தி
லிருமையின் றிலயித் தொன்று னேதினு லெதைப்பா விப்பன்
றிரையறு ஞான வாரி சேர்ந்தடங் கினற்குச் சிந்தை
மருவுறு பாவஞ் சங்கற் பனையிவை மருவு மோதான்.

(ப - ரை.) உரை மனம் - வாக்கு மனங்களை, இறந்து நின்ற - கடந்து நின்ற, ஒரு பெருஞ் சிதாகாசத்தில்—, இருமை இன்று - இரண்டற, இலயித்தோன் தான் - லயப்பட்டவன், ஏதினால் - எதைக்கொண்டு, எதை பாவிப்பன் - எதனை சிந்தனை செய்வன்,

திரை அறு - அலை யில்லாத, ஞானவாரி சேர்ந்து அடங்கினற்கு—, சிந்தை மருவுறு பாவம்—, சங்கற்பனை—, இவை மருவுமோ—, எ - று.

(வி - ரை.) இலயித்தல்-அடங்கல். மருவுமோ வென்னு மோகாரம் எதிர்மறை. (ங)

நல்லிட மல்லி டங்க ளென்றுசெஞ் ஞாயிற் றின்பே
ரெல்லொளி விழல்போல் யோகி யெங்ஙனு மொப்பக் காண்பன்
சொல்லரு மறிவா நந்த சுகிபசி தாகத் தின்கட்
செல்லுதல் செய்யான் மூப்பு மரணத்திற் சிறிது மஞ்சான்.

(ப - ரை.) நல் இடம் அல் இடங்கள் என்றது—, செஞ்ஞாயிற்றின் பேர் எல் ஒளி விழல் போல்—, யோகி—, எங்ஙனும் ஒப்பக் காண்பன்—, சொல் அரும் - சொல்லுதற்கரிய, அறிவாநந்த சுகி—, பசிதாகத்தின்கண் செல்லுதல் செய்யான்—, மூப்பு மரணத்தில்—, சிறிதும் அஞ்சான்—, எ - று.

(வி - ரை.) நல் இடம் - தக்கவிடம் (ஸூத்த ப்ரதேஸம்). அல் இடம் - தகாதவிடம் (அஸூத்த ப்ரதேஸம்). செஞ்ஞாயிறு - சூரியன். விழல் - வ்யாபித்தல். யோகி - அத்வைதியானவன். அறிவாநந்த சுகி - ஜ்ஞாநாநந்த சுகத்தையுடையவன். செல்லுதல்செய்யான்-ஒருசொல், செல்லான் என்பது பொருள். (ச)

நிர்ப்பாவாகமத்தலம்-முற்றும்.

ஓம் சாருவிக்ரமாய நமஃ.

## எழுபத்தேழாவது

## (சூ.) நட்டாகமத்தலம்.



[அதாவது - த்வைத ஸூந்யமான மஹா ஸிவஜ்ஞாநத்தில் ஜ்ஞாத்ரு ஜ்ஞாந ஜ்ஞேயங்களென்னும் த்ரிபுடிமயமான த்வைத ப்ரபஞ்சம் ஸூந்யமாகவும், நிர்ப்பாவாகம ஸம்பந்நனை ஸிவயோகிக்கு பேதஜ்ஞாநம் நஷ்டமாவதே நட்டாகமம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பேதமி லாத மாபோ தத்தினிற் பிரிந்து நின்ற
ஞாதுரு வாதி யிங்கு நண்ணலான் ஞானத் தின்கட்
போதுறு நட்ட பாவம் புகல்வர்நட் டாக மந்தான்
றீதறு கலைகண் முற்றுந் திருந்துறக் கற்ற மேலோர்.

(ப - ரை.) தீது அறு - குற்றமற்ற, கலைகள் முற்றும்—, திருந்துறக் கற்ற மேலோர்—, பேதம் இல்லாத—, மா போதத்தினில்—, பிரிந்து நின்ற ஞாதுரு ஆதி இங்கு நண்ணலால்—, ஞானத்தின்கண்—, போதுறு நட்டபாவம்—, நட்டாகமம் புகல்வர்—, எ - று.

(வி - ரை.) பேதம் - வேற்றுமை. போதம் - ஜ்ஞாநம். ஞாதுரு - அறிவோன். ஞானம் - அறிவு. மேலோர் புகல்வர் எனவியையும். ஞாதுருவாதி - ஜ்ஞாத்ரு, ஜ்ஞாநம், ஜ்ஞேயம். பேதமில்லாததாகிய மஹாஜ்ஞாநத்தில் ஜ்ஞாதரு ஜ்ஞாந ஜ்ஞேயங்களாகிய த்ரிபுடியின்மையால் ஜ்ஞாநம் நஸிக்கின்றமையால் நஷ்டாகமம் என்று சொல்லப்படும் என்பதிதன் கருத்து. (க)

ஏகமா நினைவு தோன்று மிதயத்திற் றனைக்கண் டோன்வே
றுகுஞா துருத்து வத்தை யடைவதெவ் வாறு சொல்லா
யோகையார் கருத்தா வல்லே னுணர்பவ னல்லே னல்லேன்
றேகநா னிமல னென்னுஞ் சிந்தையாற் கொளிரு ஞானம்.

(ப - ரை.) ஏகம் ஆம் - ஒன்றாகிய, நினைவு தோன்றும் - நினைவுண்டாகின்ற, இதயத்தில் தன்னை கண்டோன் —, வேறு ஆகும் ஞாதுருத்துவத்தை அடைவது எவ்வாறு —, சொல்லாய் —, ஓகை ஆர் - சந்தோஷத்தையுடைய, கருத்தா அல்லேன் —, உணர்பவன் அல்லேன் —, தேகம் அல்லேன் —, நான் நிமலன் என்னும் சிந்தையாற்கு —, ஞானம் ஒளிரும் —, எ - று.

(வி - ரை.) ஞாதுருத்துவம் - அறிவோனுந்தன்மை. சிந்தையாற்கு - மனமுடையவனுக்கு. ஏகமாம் - அத்வைத வாஸனையோடு கூடிய. நினைவு - சித்தம். இதயத்தில் தன்னைக் கண்டோன் - அந்தராத்மாவைப் பார்ப்பவனாகிய யோகி. கருத்தா அல்லேன் - அகர்த்தா. உணர்பவன் அல்லேன் - ஜ்ஞாதாவல்லேன். நிமலன் - நிர்மலன். ஞானம் - ப்ரஹ்ம ஸ்வரூபமாகிய அபரோக்ஷ ஜ்ஞானம். (௨)

தணந்திடும் பேத முள்ள சாந்தனுய்த் தன்னிற் றானே
யணைந்தடங் குறுநல் யோகிக் கயலொரு ஞேய முண்டோ
விணங்கிடிற் றன்சொ ரூப ஞானத்தி லேக மாக
வுணர்ந்திடு பொருள்சி றந்த வுணர்வுணர் பவனெவ் வாறும்.

(ப - ரை.) தணந்திடும் பேதம் உள்ள - வேறுபாடு நீங்கியிருக்கிற, சாந்தன் ஆய் —, தன்னில் தானே —, அணைந்து அடங்குறும் நல் யோகிக்கு —, அயல் ஒரு ஞேயம் உண்டோ —, தன் சொரூபஞானத்தில் இணங்கிடின் —, ஏகமாக உணர்ந்திடு பொருள் —, சிறந்த உணர்வு —, உணர்பவன் —, எவ்வாறு ஆம் —, எ - று.

(வி - ரை.) தணந்திடல் - நீங்குதல் (நிராகரிக்கப்படுதல்). சாந்தன் - சாந்த குணமுள்ளவன் (ராகத்வேஷாதிகள் நீங்கினவன் எனினுமாம்). அயல் - அந்யம். ஞேயம் - அறியப்படு பொருள். (௩)

உண்டெனு மொருமா சித்தே யுலகமாய் விளங்கி நிற்குங்
கண்டிடு மறிவை யன்றிக் காண்பொருள் வேறொன் றில்லை
விண்டுறு பேத புத்தி மேவினோற் கென்று கூறும்
பண்டரு மறைக ளெல்லாம் பராரைவெற் பமர்ந்த மேலோய்.

(ப - ரை.) பராரை வெற்பு அமர்ந்த மேலோய் - அகத்திய முனிவனே, விண்டுறு பேத புத்தி மேவினோற்கு - பேதபுத்தி யொழிந்தவனுக்கு, உண்டு என்னும் ஒரு மா சித்தே உலகமாய் விளங்கி நிற்கும் —, கண்டிடும் அறிவை அன்றி —, காண் பொருள் வேறொன்று இல்லை என்று —, பண்டு அருமறைகளெல்லாம் கூறும் —, எ - று.

(வி - ரை.) பராரைவெற்பு - பருத்த அடிவாரத்தையுடைய மலை (பொதியமலை). காண்பொருள் - காணப்படுபொருள் (ஞேயம்). உண்டு என்னும் ஒரு மா சித்து - மஹா ஸத்தை (பேருண்மை) யாகிய பேரறிவு. (௪)

நட்டாகமத்தலம் - முற்றும்.

உ
ஓம் ருத்ராய நம:

## எழுபத்தெட்டாவது.

## (௭.) ஆதிப்பிரசாதித்தலம்.



[அதாவது - பூர்வோக்த நஷ்டாகம ஸம்பந்நனுன ஶிவயோகி, ஶிவன் தனது ப்ரபஞ்சத்திற்கு ஆதாரபூதனுகவும், அதற்கு நியாமகனுகவும், ஸ்ருஷ்ட்யாதி பஞ்சக்ருத்யங்களுக்கு மூலகாரணனுகவும், அனைத்திற்கும் ஆதிபுருஷனுகவு மிருப்பனென்றறிந்து அவனுடைய அநுக்ரஹத்தை யடைவதால் ஆதிப்பிரசாதி என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அனைத்தினு மதிட்டித் துள்ள சம்புவே யாதி யாமத்
தனிப்பரன் பிரசா தத்தால் விகாரமில் பதத்தைச் சார்வுற்
றினைப்பறு மவனை யாதிப் பிரசாதி யென்று கூறும்
பனிக்கதிர் தவழும் வேணிப் பராபர னருளு நூலே.

(ப - ரை.) அனைத்தினும் - எல்லாவற்றுள்ளும், அதிட்டித்துள்ள சம்புவே—, ஆதி ஆம்—, அ - அந்த, தனி - ஒப்பற்ற, பரன் - சிவபெருமானது, பிரசாதத்தால்—, விகாரம் இல் பதததை சார்வுற்று—, இனைப்பு அறும் - துன்பமற்ற, அவனை—, பனிக்கதிர் - சந்திரகண்டம், தவழும் - தவழ்கின்ற, வேணி - ஜடாபாரத்தையுடைய, பராபரன் அருளும் நூல்—, ஆதிப்பிரசாதி என்று கூறும்—, எ - று.

(வி - ரை.) அதிட்டித்தல் - நிலைபெற்றிருத்தல் (நியாமகம்). ஆதி ஆம் - ஆதிபுருஷனும். பிரசாதத்தால் - அருளினுல். விகாரம் இல் பதம் - முத்திப்பதம். பனிக்கதிர் தவழும் வேணிப் பராபரனருளுநூல் என்றது சிவாகமங்களை. (௧)

புனிதனுய்ப் பலபி றப்பிற் பொருசக வகந்தை யுள்ளோற்
கினிதுறு மாதி தேவ னிரும்பிர சாத மென்ப
வனைசிவப் பிரசா தத்தான் மலிசிவ மாயி னேற்குக்
கனைசகங் காண்ப தாயுங் காணுறப் படாது கண்டாய்.

(ப - ரை.) பல பிறப்பில்—, புனிதன் ஆய்—, பொரு - போராடுகிற, சக அகந்தை உள்ளோற்கு—, (மோக்ஷத்தின்பொருட்டு) ஆதிதேவன் இரும் பிரசாதம் இனிது உறும் என்ப—, வனை - அலங்கரிக்கப்பட்ட, சிவப்பிரசாதத்தால்—, மலி - மிக்க, சிவம் ஆயினேற்கு—, கனை - நெருங்கின, சகம்—, காண்பதாயும் - (அந்நியமாய்க்) காணப்படுவதாயிருந்தும், காணுறப்படாது - (எங்கும்) காணப்படாது, எ - று.

(வி - ரை.) கண்டாய் - முன்னிலையசை யிடைச்சொல். பொரு சக அகந்தை யுள்ளோன் - ப்ரபஞ்சத்தையும் அஹங்காரத்தையும் பகைத்தவன், (அதாவது ப்ரபஞ்சத்தில் செல்லாதவனும், அஹங்காரமற்றவனும் என்றபடி). ஆதிதேவன் - சிவபிரான். சிவரூபமானவனுக்கு உலகம் த்ருஶ்யாத்ருஶ்யமாயிருக்கும் என்பதிதன் கருத்து. (௨)

பிறப்பெறி மூல மாகும் பிரான்பிர சாதந் தன்னு
லறப்பெறு மோக முத்தி யடைகுவன் பிறவி வெந்நோய்
சிறப்பரன் பிரசா தத்தா லன்றியே தீர்ந்தி டாதால்
வெறுப்பிரு ளிரவி யன்றி வீயுமோ வுலகந் தன்னில்.

(ப - ரை.) பிறப்பு எறி - பிறவிக்காட்டை வெட்டுதற்கு, மூலம் ஆகும் - காரணமாகிய, பிரான் பிரசாதம் தன்னால்—, மோகம் அறப்பெறும்—, முத்தி அடைகுவன் (விவேகமுள்ளவன்)—, சிறப்பு அரன் பிரசாதத்தால் அன்றி—, பிறவி வெம் நோய் தீர்ந்திடாது—, உலகம் தன்னில்—, வெறுப்பு இருள் - யாவரும் வெறுத்தற்குரிய இருளானது, இரவி அன்றி - சூரியனல்லாமல், வீயுமோ - நசிக்குமோ, எ - று.

(வி - ரை.) எறி என மேல் வருதலால் பிறப்பினைக் காடெனலாயிற்று. மூலம் என்றது கருவியை (பெருங்கோடரி). பிரான் பிரசாதம் - சிவப்பிரசாதம். வீயுமோ என்றவோகாரம் வீயாதென்பது பட நிற்றலால் எதிர்மறை. முத்தியடைகுவன் என்னும் பயனிலைக்கு விவேகமுள்ளவன் என்னும் எழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. விவேகம் என்றது நித்யாநித்யவஸ்து விவேகத்தை. அறப்பெறு மோகன் என நிறுத்தி மோகமற்றவன் எனினுமாம். (௩)

அகிலமு மளிக்கு மீச னருளினு லுயிர்கட் கெல்லாம்
புகலுறு பாச நீக்கம் புரிவனிப் புரித லின்கண்
முகிழிள மதிய ணிந்த முதல்வனுக் கேது வின்று
லிகலுறு புலன டங்க ஞானவா ளெடுத்த மேலோய்.

(ப - ரை.) இகல் உறு - வலிமிகுந்த, புலன் அடங்க - புலன்கள் பணியும்படி, ஞான வாள் - ஜ்ஞாந கட்கத்தை, எடுத்த - ஏந்திய, மேலோய் - மேலோனே, அகிலமும் - (ஸ்வதந்த்ரமாய்) எல்லாப்பொருள்களையும், அளிக்கும் - காப்பாற்றுகிற, ஈசன்—, அருளினால் - (தனது) பெருங்கருணையினாலேயே, உயிர்கட்கு எல்லாம்—, புகலுறு - சொல்லப்பட்ட, பாசநீக்கம் புரிவன—, இ - இந்த, புரிதலின்கண்—, முகிழ் இள மதி - அரும்புகிற பால சந்த்ரனை, அணிந்த—, முதல்வனுக்கு—, ஏது இன்று—, எ - று.

(வி - ரை.) ஆல் - அசை. இகலுறு புலனடங்க ஞானவாள் எடுத்த மேலோய் என்றது அகத்திய முனிவரை. ஞானவாளினானே யன்றி வேறு வாளான வேறலாகாதென்பது தோன்ற 'இகலுறு புலனடங்க ஞானவாளெடுத்த மேலோய்' என்றார். இகல் - பகைவர் எனினுமாம். பாசநீக்கம் - முக்தி. புரிதல் - அடையச்செய்தல். ஏது இன்று - காரணம் வேறியாது மில்லை. (௪)

ஆதிப்பிரசாதித்தலம் - முற்றும்.

உ

ஓம் பூதபதயே நமஃ.

## எழுபத்தோன்பதாவது

## (அ) அந்தியப்பிரசாதித்தலம்.



[அதாவது - ஸகல பதார்த்தங்களுக்கும் லயஸ்த்தாநனான பரசிவனே அனைத்திற்கும் அந்த்யனாயிருப்பன் என்றறிந்து, அந்த ஸர்வாந்த்யனான சிவனுடைய அநுக்ரஹத்தை யடைபவனே அந்தியப்பிரசாதி என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆகிய பதார்த்த மெல்லா மடங்குறு மிடமாய் நிற்கு
மேகனந் தியனு மென்ப ரிவனது பவமே யிங்குச்
சேர்கெழு பிரசா தப்பேர் சேர்ந்திடு மிதனைப் பெற்ற
யோகியென் பவன் றனேயந் தியப்பிர சாதி யோர்வாய்.

(ப - ரை.) ஆதிய - உண்டாயிருக்கிற, பதார்த்தம் எல்லாம்—, அடங்குறும்-ஒடுங்குதற்குரிய, இடமாய் நிற்கும் ஏகன்—, அந்தியன் ஆம் என்பர்—, இவன் அநுபவமே—, இங்கு - இவ்வுலகில், சீர் கெழு-சிறப்புள்ள, பிரசாதப்பேர் சேர்ந்திடும் - ப்ரஸாதமென்னும் பெயரைப்பொருந்தும், இதனைப் பெற்ற யோகி என்பவனே —, அந்தியப்பிரசாதி—, ஓர்வாய் - அறிவாயாக, எ - று.

(வி - ரை.) ஏகன் - சிவபெருமான். ஆதிய பதார்த்தம் - பூமி முதல் ஜீவன் வரையிலுள்ள ஸகல பதார்த்தங்கள். (க)

சுரர்நரர் மிருக மாதி தோற்றுறு மாயை மாயிற்
பரனிடை யதுப யந்த பதார்த்தமு மாயு மென்ப
ருரமுறு சத்தாநந்த வொருபொரு ளுண்மை பெற்று
னிரைதரு பதார்த்த ஞானம் யாதுயர் ஞேயம் யாதோ.

(ப - ரை.) சுரர் - தேவர், நரர் - மனிதர், மிருகம் ஆதி - மிருகமாதிகள், (இவை யாவும்) தோற்றுறும் - தோன்றுதற்கிடமாகிய, மாயை மாயின் - மாயை நசித்தால், பரனிடை - பரனிடத்தில், அது பயந்த - அதுகொடுத்த, பதார்த்தமும் மாயும் என்பர்—, உரம் உறு - உறுதியாகிய, சத்தாநந்த வொரு பொருள் உண்மை பெற்றால்—, நிரைதரு - ஒழுங்கான, பதார்த்த ஞானம் யாது—, உயர் ஞேயம் யாது—, எ - று.

(வி - ரை.) ஒருபொருள் - பரதத்வம். பதார்த்தஞானம் - பதார்த்தவுணர்ச்சி. ஞேயம் - அறியப்படுபொருள். உரம் உறு சத்தாநந்த - ஸச்சிதாநந்த. உண்மைபெற்றால் - அபரோக்ஷமா யநுபவிக்கப்பெற்றால். ஞான ஞேயங்களைப்பற்றி யுரைத்தலான் ஜ்ஞாத்ருத்வமும் அவ்வாறேயாம். (உ)

கனவிடைக் கண்ட தெல்லாங் கழிந்திடும் விழிப்ப மாயை
தனில்வரு வனமெய்ஞ் ஞானஞ் சார்ந்திட மாய்ந்து போகு
முனலருஞ் சுழுத்தி யோனுக் கொன்றுமங் கெதிரா வாபோ
லினலறு சீவன் முத்தற் கெதிர்ந்திடா தொன்று மன்றே.

(ப - ரை.) கனவிடை கண்டது எல்லாம்—, விழிப்ப - விழித்தலும், கழிந்திடும் - மறைந்துபோம், மாயைதன்னில் வருவன—, மெய்ஞ்ஞானம் சார்ந்திட—, மாய்ந்து போகும்—, உன்னல் அரும் - நினைவற்ற, சுழுத்தியோனுக்கு—, அங்கு - அந்த அவஸ்தையில், ஒன்றும் - ஒரு பொருளும், எதிராவா போல் - தோன்றாதவாறுபோல, இன்னல் அறு - துன்பமற்ற, சீவன் முத்தற்கு—, ஒன்றும் எதிர்ந்திடாது-ஒன்றுந்தோன்றாது, எ-று.

(வி-ரை.) கனவிடை என்பதில் இடை ஏழனுருபு. சுழுத்தியோன் - சுழுத்தி யவஸ்தையிலுள்ளவன். ஆகாவாறு என்பது ஆகாவா என ஈறுதொகுத்தலாயிற்று. அன்று ஏ - அசைகள். (ங)

அந்தரம் விகார மின்றி யகண்டித மாகு மாபோ
லுந்துறு சீவன் முத்த னுருவமும் விளங்கு மென்பர்
சிந்தனை செய்து காண்கை செய்கையம் முத்தற் கில்லை
நிந்தையில் சுகநி றைந்து நிச்சல னாகி மேவும்.

(ப - ரை.) அந்தரம் - ஆகாயமானது, விகாரம் இன்றி—, அகண்டிதம் ஆகுமாறு போல்—, உந்துறு - சஞ்சரிக்கிற, சீவன் முத்தன் உருவமும் விளங்கும் என்பர்—, சிந்தனை செய்து காண்கை செய்கை - சிந்தித்து காண்டல் செய்தல் என்பவை, அ - அந்த, முத்தற்கு இல்லை—, நிந்தையில் சுகம் நிறைந்து—, நிச்சலன் ஆகி மேவும்—, எ - று.

(வி - ரை.) அகண்டிதம் - கண்டிக்கப்படாமை. ஆகுமாறு என்பது ஆகுமா என ஈறு தொகுத்தலாயிற்று. சிவன் முத்தன் உருவம் - முக்தனுகிய ஜீவனுடைய ஸ்வரூபம். நிச்சலன் - அசைவற்றவன். மேவும் - (ஸ்த்திதியைப்) பொருந்துவான். (ச)

பரசிவாத் துவித ஞான பலத்தினு னழுவப் பட்ட
விரிதரு பொருளு ளானய் மெய்யுணர் வினேயே காண்போற்
கொருவனு லாவ தாக வுறுபொரு ளில்லை யென்ப
ரரவுலாம் வேணி முக்க ணமலனு கமங்கள் வல்லோர்.

(ப - ரை.) அர உலாம் - பாம்பு சஞ்சரிக்கிற, வேணி - ஜடாபாரத்தையும், முக்கண் - மூன்று கண்களையுமுடைய, அமலன் ஆகமங்கள் - சிவாகமங்களில், வல்லோர் - வல்லவர்கள், பரம்-மேலான, சிவாத்துவித ஞான பலத்தினுல் நழுவப்பட்ட—, விரிதரு பொருள் உள்ளானய்—, மெய்யுணர்வினேயே காண்போற்கு - (கேவலம்) மெய்ஞ்ஞானத்தையே அநுபவிப்பவனுன ஶிவயோகிக்கு, ஒருவனுல் ஆவதாக உறு பொருள் இல்லை—, என்பர் - என்று சொல்லுவர், எ - று.

(வி - ரை.) அரா என்பது அர எனக் குறுகிற்று, இது அரவு என உகர மேற்றும் வரும். அமலன் - சிவன். நழுவப்பட்டபொருள் உள்ளான் - பொருள்கள்யாவும் நழுவப் (நசிக்கப்) பெற்றவன். வல்லோர் என்பர் எனவியையும். (ரு)

அந்தியப்பிரசாதித்தலம் - முற்றும்.

உ

ஓம் ஸத்தாணவே நமஃ

## எண்பதாவது

## (கூ.) சேவியப்பிரசாதித்தலம்.



[அதாவது - அனைத்திற்கும் ஶிவனே ஸேவ்யன் (குரவன்) என்றறிந்து அவனுடைய அநுக்ரஹத்தை யடைபவனே சேவியப்பிரசாதி என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தேசிகன் சிவனே யந்தத் தேசிகன் சேவி யன்ரு
ஞசிலிங் கவன்ற ஞேோ ரநுபவ மெவற்று மேலாய்ப்
பேசுறும் பிரசா தப்பேர் பெற்றுள ததனைப் பெற்றேன்
வீசுறும் பவமு றுஞ்சே வியப்பிர சாதி யாகும்.

(ப - ரை.) சிவனே தேசிகன்—, அந்த தேசிகன்—, சேவியன் தான்—, ஆசு இல் - குற்றமில்லாத, இங்கு - இவ்விடத்தில், அவன்தனுது - அவனது, ஓர் - ஒப்பற்ற, அநுபவம்—, எவற்றும் - எவற்றினும், மேலாய் பேசுறும் - மேலாகச் சொல்லப்பட்ட, பிரசாதப்பேர் பெற்றுளது—, அதனைப் பெற்றேன்—, வீசுறும் பவம் உறும் - பிறவியை வென்ற, சேவியப்பிரசாதி ஆகும்—, எ - று.

(வி - ரை.) தான் தேற்றேகாரப்பொருளில் வந்தது. தனுது என்பதில் ஆது ஆருமையுருபு. சேவியன் - சேவிக்கவேண்டியவன். (க)

குரவனே பரம னந்தப் பரமனே குரவ னென்ப
விரவுமிவ் வேகமாகு மநுபவ மெய்ம்மை யென்று
முரைமன மிறந்த தன்பே ருருவவின் பங்கண் டுற்றோன்
மருவுறு மயலொன் றின்கண் மனம்விழைந் திடுமோ சொல்வாய்.

(வி - ரை.) குரவனே பரமன் அந்த பரமனே குரவன்—, என்ப - என்று சொல்லுவர், விரவும் - பொருந்திய, இ - இந்த, ஏகம் ஆகும் அநுபவம்—, என்றும் மெய்ம்மை (ஆம்)—, உரை மனம் இறந்த—, தன் - தனது, பேருருவ இன்பம் கண்டுற்றோன் - அபரிச்சேதத்தின் இன்பத்தைக் கண்டிருப்பவன், மருவுறும் - பொருந்திய, அயல் ஒன்றின்கண் - அந்நியமாகிய வொரு பொருளினிடத்து, மனம் விழைந்திடுமோ - மனதால் விரும்புவனோ, சொல்வாய்—, எ - று.

(வி - ரை.) குரவனே பரமன் - குருவாகிய சிவன் பரத்துவமுள்ளவன். ஏகமாகு மநுபவம் - ஐக்யாநுபவம். உரை மனம் இறந்த - வாக்குமனங்களைக் கடந்த. விழைந் திடுமோ வென்னு மோகாரம் எதிர்மறை. (உ)

ஞானவா ரமுதந் தன்னா னன்றுற நிரம்பி னோனுக்
கேனையூண் பொருளா லென்கொ லெய்துதல் சத்தா மீசன்
ஞானமே கொண்டு பேரா நந்தநின் றிலக்கு மென்னும்
பானல்வா ளரிநெ டுங்கட் பாவைபங் குடையோ னூலே.

(ப - ரை.) ஞானம் - ஞானமாகிய, ஆர் அமுதம் தன்னால்—, நன்றுற நிரம்பினோனுக்கு - நன்றாய் நிறையப் பெற்றவனுக்கு, ஏனை - அயலாகிய, ஊண் பொருளால் எய்துதல் என்கொல்—, சத்து ஆம் ஈசன்—, ஞானமே கொண்டு நின்று—, பேராநந்தம் இலக்கும் என்னும் - பேரின்பத்தை விளக்குவன் என்று சொல்லாநிற்கும், (எவை யெனின்) பானல் - கருங்குவளைமலர் போன்ற, வாள் - ஒளியையும், அரி - இரேகைகளோடுகூடிய, நெடுங்கண் - நெடுங்கண்களையு முடைய, பாவை பங்கு உடையோன் - உமாதேவியைப் பாகத்திலுடைய சிவபெருமானது, நூல் - நூல்கள், எ - று.

(வி - ரை.) கொல் - அசை. சத்து - உண்மை. இலக்கும் - இலங்குவிக்கும். பானல் வாளரி நெடுங்கட் பாவை பங்குடை யோனூல் என்றது சிவாகமங்களை. ஊண்பொருள் - போஜ்யம். சத்து ஆம் ஈசன் - ஸத்ருபனாகிய சிவன். ஞானமே கொண்டு நின்று - ஜ்ஞானத்தாலேயே. (௩)

சத்துட னறிவா நந்தந் தகுமிலக் கணத்த தாகு
முத்தியே யுயர்தி ருத்தி யென்குவர் முதனூல் கண்டோர்
நித்திய நிரம்பல் பெற்ற நிகரிலம் முத்த னுக்குத்
துய்த்திடு பொருள்க டம்மாற் றோன்றுறு பயனென் சொல்வாய்.

(ப - ரை.) சத்துடன் அறிவு ஆநந்தம்—, தகும் - தகுந்த, இலக்கணத்தது ஆகும் - இலக்கணத்தை யுடையதாகிய, முத்தியே—, உயர்திருத்தி என்குவர்—, முதனூல் கண்டோர்—, நித்தியம் நிரம்பல் பெற்ற—, நிகர் இல் - ஒப்பில்லாத, அ - அந்த, முத்தனுக்கு—, துய்த்திடு பொருள்களால்—, தோன்றுறு பயன் என் - உண்டாகிற பயன் யாது, சொல்வாய்—, எ - று.

(வி - ரை.) சத்து அறிவு ஆநந்தம் - ஸச்சிதாநந்தம். முதனூல் - வேதம் (சிவாகமம் எனினுமமையும்). நித்தியம் - சாஸ்வதம். துய்த்தல் - நுகர்தல். என் என்னும் வினா எதிர்மறைப் பொருளது. நித்திய நிரம்பல் - நித்ய த்ருப்தி. துய்த்திடும் பொருள்களால் - போக ஸாதநங்களால். (௪)

சிவம்பெறு மேக ஞானஞ் சேர்ந்துடன் மயக்கி லாற்குப்
பவம்பெறு கரும மில்லைப் பகர்தரிற் புறவ கத்துந்
தவஞ்செபந் தியானம் யோகஞ் சார்ந்திடா வவற்றின் மேலா
யுவந்துள ஞானந் தன்னி லுற்றிடு மவனுக் குள்ளம்.

(ப - ரை.) சிவம் பெறும் ஏக ஞானம் சேர்ந்து—, உடல் மயக்கு இல்லாற்கு—, பகர்தரின் - சொல்லுமிடத்து, புற அகத்தும் - வெளியிலும் உள்ளிலும், பவம் பெறு - பிறவியைப் பெறவேண்டிய, கருமம் இல்லை - காரியமில்லை, அவனுக்கு உள்ளம் - அவனது மனமானது, தவம் செபம் தியானம் யோகம் சார்ந்திடா—, அவற்றின் மேலாய்—, உவந்துள்ள - மகிழ்தற் கேதுவாயுள்ள, ஞானம் தன்னில் உற்றிடும்—, எ - று.

(வி - ரை.) சிவம் பெறும் ஏகஞானம் - ஶிவைக்ய ஜ்ஞாநம். உடல் மயக்கு - தேஹ ப்ரமை. உற்றிடும் - பொருந்தும். இல்லாற்கு - ஸேவ்யப்ரஸாதிக்கு. உள்ளம் - சித்த வ்ருத்தி. ஞானம் - ஆத்ம தத்வமாகிய போதம். (௫)

சேவியப்பிரசாதித்தலம் - முற்றும்.

---

இவ்விதமாய் நிர்த்தேஹாகமம், நிர்ப்பாவாகமம், நஷ்டாகமம், ஆதிப்ரஸாதி, அந்த்யப்ரஸாதி, ஸேவ்யப்ரஸாதி என்னும் ஆறு ஸ்த்தலங்களில் கூறிய தர்மங்களுடனே கூடியிருத்தலால் ஶிவைக்யஜ்ஞாந மடைந்து சித்தவ்ருத்தியின்றி ஜ்ஞாநியானவனும் அங்கஸ்த்தலத்து நான்காமவனுமான ப்ராண லிங்கியே ஜங்கமலிங்கப்ராணி என்று அறியப்பட்டான்.

௪ - வது. ஜங்கமலிங்கத்தலம் - முற்றிற்று.

---

உ

## ௫ - வது - பிரசாதலிங்கத்தலம்.

[அதாவது - ஶாந்த்யாதீதகலா ஸமேதமாய்ப் பராஶக்தியுடன்கூடி ஶிவஸாதாக்யத் தைப்பொருந்தி ஜ்ஞாநைக்ய கம்யமாயிருத்தல் என்பது.]

(சரணனுக்குச்சேர்ந்த உட்பிரிவுகள்.)

கலிவிருத்தம்.

உரைத்தனை விளங்குற வுயிரி லிங்கித
னிரைத்தல மனைத்தையு நீயெ னக்கினி
யருட்சர ணத்தல மடைந்த வற்றையுங்
கருத்துற வருளுதி கணங்கள் வேந்தனே.

(ப - ரை.) கணங்கள் வேந்தனே - கணநாதனே, உயிர் இலிங்கிதன் - ப்ராணலிங்கியின், நிரைத்தலம் அனைத்தையும் - வரிசையாகிய தலங்களெல்லாவற்றையும், விளங்குற - விளங்க, உரைத்தனை—, நீ—, எனக்கு—, இனி—, அருள் சரணத்தலம் அடைந்தவற்றையும்—, கருத்து உற - என் மனத்திற் பதியும்படி, அருளுதி - அருள் செய்வாயாக, எ - று.

(வி - ரை.) கணங்கள் வேந்தனே யென்றது இரேணுகனை. (௧)

அத்தல மடைவுற வடிப்பு னற்பினிட்
பத்திவிண் ணொளியின்மும் மூன்று பாலவாய்
வைத்துள பன்னிரு தலமு மாசற *
மெய்த்தவ வறைகுதும் விழைந்து னக்கரோ.

(ப - ரை.) மெய்த்தவ - மெய்த்தவத்தை யுடைய அகத்தியனே, அ தலம் அடைவுற - அந்தச் சரணத்தலத்தின் முறை பொருந்த, அடிப்புனல் - பாதோதகம், பின் - அதன் பின்னே, நிட்பத்தி—, விண் - ஆகாசம், ஒளியின்-பிரகாசத்தோடு, மும்மூன்று பாலவாய் - மும்மூன்று பகுப்பினவாய், வைத்துள்ள - அமைக்கப்பட்டுள்ள, பன்னிருதலமும்—, மாசு அற - குற்றமற, உனக்கு—, விழைந்து அறைகுதும் - அன்போடு சொல்லுவோம், எ - று.

(வி - ரை.) பாதோதகம் - தீக்ஷாபாதோதகம், சிக்ஷாபாதோதகம், ஞானபாதோதகம் என மூன்று வகைப்படும். நிட்பத்தி - கிரியாநிட்பத்தி, பாவநிட்பத்தி, ஞானநிட்பத்தி என மூன்று வகைப்படும். ஆகாசம் - பிண்டாகாசம், விந்தாகாசம், மகதாகாசம் என மூன்றுவகைப்படும். பிரகாசம் - கிரியாப்பிரகாசம், பாவப்பிரகாசம், ஞானப்பிரகாசம் என மூன்று வகைப்படும். இந்தப் பன்னிரண்டு தலங்களி னிலக்கண முதலியவை மேலே விவரிக்கப்படும். (௨)

---

௧

ஓம் அஹிர்புத்ந்யாய நமஃ

## எண்பத்தோன்றாவது

## (௧.) தீக்ஷாபாதோதகஸ்த்தலம்.

[அதாவது - ஶிவதீக்ஷையினால் த்வைத ஜ்ஞாநம் நஷ்டமாகி, குருஶிஷ்யர்களுக்கு அபேத ஜ்ஞாநம் பிறந்து, அதனுடன் ஶாஸ்வதமான ஆநந்தரஸம் ஐக்யமாவதே தீக்ஷா பாதோதகம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆரிய னொடு சீட னாநந்தத் தயிக்க மாகச்
சீரிய திட்சை யாலே தீர்ந்துள பேத முள்ள
பேரியன் ஞானந் தன்னாற் பெருங்கலை யுணர்ந்த மேலோ
ரேரியன் முனிவ திட்சா பதோதக மியம்பு வாரால்.

---

* ப்ரஸாதலிங்க ஷட்பக்தர்கள்:—ப்ரஸாதலிங்கமோஹி, ப்ரஸாதலிங்கபக்தன், ப்ரஸாதலிங்கபூஜகன், ப்ரஸாதலிங்கவீரன், ப்ரஸாதலிங்கப்ரஸாதி, ப்ரஸாதலிங்கப்ராணி என அறு வகைப்படுவோர்கள். இவர்களில், அந்யருசியை யறியாதவனே ப்ரஸாதலிங்கமோஹி, பூர்வாஹாரங்களை விட்டவனே ப்ரஸாதலிங்கபக்தன், அந்யருடன் ஸ்நேஹம் ஸம்பாஷணை தாநம் ப்ரதிக்ரஹாதிகளில்லாதவனே ப்ரஸாதலிங்கபூஜகன், அந்ய த்ரவ்யங்களைக் கையாற்றொடாதவனே ப்ரஸாதலிங்கவீரன், ஜீவஹிம்ஸைகள் எவ்விடத்திலும் செய்யாமலும் செய்விக்காமலு மிருப்பவனே ப்ரஸாதலிங்கப்ரஸாதி, ஆத்மநிக்ரஹம் செய்தவனே ப்ரஸாதலிங்கப்ராணி.

த்ரிவித ப்ரஸாதலிங்கம்:—ஶாந்தம் ஸித்தம் ப்ரஸித்தம் என மூவகைப்படும். இவைகளில், குரு புஜித்த ஶேஷமே ஶாந்தமாம், லிங்கம் புஜித்த ஶேஷமே ஸித்தமாம், ஜங்கமம் புஜித்த ஶேஷமே ப்ரஸித்தமாம். இதுவன்றி, மற்றொருவிதமாய்ப் பொருள் கூறுதலுமுண்டு - அதாவது - பூர்வத்திலிருந்த ஸகலகுணங்களையும் த்யாகம்செய்து காமாதிகளைவிட்டு லிங்கத்தில் பற்றுறுவதே ஶாந்தமாம், ஶிவஜ்ஞாநோதயமாவதே ஸித்தமாம், ஸோஹம் பாவனையில் நிலைத்திருப்பதே ப்ரஸித்தமாம்.

(ப - ரை.) ஆரியனோடு—, சீடன்—, ஆநந்தத்து - ஆநந்தத்தில், அயிக்கம் ஆக—, சீரிய தீட்சையாலே—, தீர்ந்துள பேதமுள்ள - பேதம் தீர்ந்துள்ள, பேர் இயல் ஞானம் தன்னால்—, பெருங்கலை யுணர்ந்த மேலோர்—, தீட்சாபதோதகம் இயம்புவார்—, எ-று.

(வி - ரை.) சீரிய - சிறந்த. பேரியல் - பெருந்தன்மை. ஞானந்தன்னால் என்பதில் தன் சாரியை. ஏரியல் முனிவ என்றது அகத்தியமுனிவரை. ஏர் இயல் - நல்லியற்கை. குரு ஶிஷ்யர்களுடைய தீக்ஷையால் த்வைதம் நீங்கியதாகிய யாதொரு ஜ்ஞாநமுளதோ, அந்த ஜ்ஞாநத்தோடு ஆநந்தத்தின் ஐக்யமானது தீக்ஷாபாதோதகம் என்பதிதன் கருத்து.

பாதமென் கிளவி யாலே பகர்தரப் படுவ னாசான்
மேதைகொ ளுதகச் சொல்லால் விளம்புறப் படுவன் சீடன்
றீதறு தீட்சை தன்னாற் செப்புறு மிவர யிக்க
மேதமி லுலகிற் றீட்சா பதோதக மென்ன நிற்கும்.

(ப - ரை.) பாதம் என் கிளவியாலே - பாதமென்னுஞ் சொல்லால், ஆசான்—, பகர்தரப்படுவன் - சொல்லப்படுவன், மேதைகொள் - அறிவையுடைய, உதகச் சொல்லால்—, சீடன்—, விளம்புறப்படுவன் - சொல்லப்படுவன், தீது அறு - குற்றமற்ற, தீட்சைதன்னால்—, செப்புறும் - சொல்லப்படுகிற, இவர் அயிக்கம்—, ஏதம் இல் - குற்றமில்லாத, தீட்சாபதோதகம் என்ன - தீக்ஷாபாதோதகமென்று சொல்லும்படி, உலகில்—, நிற்கும் - நிலைபெற்றிருக்கும், எ - று.

(வி - ரை.) கிளவி - சொல். (உ)

பரித்திடும் பரமா நந்தம் பாதமென் கிளவி ஞான
முரைத்திடு முதகந் தீட்சை யுரைத்திடு மிவற்ற யிக்கந்
தெரித்தவிஞ் ஞானா நந்தஞ் சேர்ந்துதான் பேத மின்றி
வரைத்தொரு பொருளுங் கண்ணாற் காண்குறான் மான யோகி.

(ப - ரை.) பாதம் என் கிளவி—, பரமாநந்தம் பரித்திடும்—, உதகம் (என் கிளவி)—, ஞானம் உரைத்திடும்—, தீட்சை—, இவற்று அயிக்கம் உரைத்திடும்—, தெரித்த - தெரிவிக்கப்பட்ட, இ - இந்த, ஞானாநந்தம் சேர்ந்து—, பேதம் இன்றி—, வரைத்த - (கால தேச வர்த்தமானங்களால்) வரையறுக்கப்பட்டுள்ள, ஒரு பொருளும் - ஒருபொருளையும், மான யோகி-பெருமையுள்ள யோகியானவன், கண்ணால்—, காண்குறான்-காணமாட்டான், எ-று.

(வி - ரை.) பரித்தல் - தாங்குதல். யோகியானவன் பரஜ்ஞாந ப்ரகாஶ ஸ்வரூபனாதலால் 'மானயோகி' என்றார். (௩)

ஆரிய னருளி னாலே ஞானவா ரமுத முண்டு
சீரிய பரம யோகி தீர்ந்துவெம் பிறவி நோய்தா
னோரிய லாடல் செய்தே யொழுகுமென் றறிந்து கொண்ணீ
கூரிய விலைவேற் செங்கைக் குமரனாற் றருமங் கண்டோய்.

(ப - ரை.) கூரிய - கூர்மையாகிய, இலை - அச்ச வடிவினையுடைய, வேல் - வேற்படையை யேந்திய, செங்கை-செவந்த திருக்கையினையுடைய, குமரனால்-குமாரக்கடவுளால், தருமம் கண்டோய் - தர்மத்தை யறிந்த அகத்தியனே, ஆரியன் அருளினாலே—, ஞானம்-ஞானமாகிய, ஆர் அமுதம் உண்டு-அரிய அமிர்தத்தைப் பருகி, சீரிய-சிறப்படைந்திருக்கிற, பரமயோகி—, வெம் பிறவி நோய் தீர்ந்து—, ஓர் இயல் - ஒரேயியற்கையாய், ஆடல் செய்தே - திருவிளையாடல் செய்துகொண்டே, ஒழுகும் என்று - நடப்பானென்று, நீ அறிந்துகொள்—, எ - று.

(வி - ரை.) இலை - தகட்டுவடி வெனினுமாம். (௪)

தீக்ஷாபாதோதகஸ்த்தலம் - முற்றும்.

உ
ஓம் நிகம்பராய நமஃ.

## எண்பத்திரண்டாவது

## (௨.) சிக்ஷாபாதோதகஸ்த்தலம்.

—ooXoo—

[அதாவது - தீக்ஷாபாதோதக ஸம்பந்நனை ஶிவயோகி ஶிக்ஷாபாதோதகத்தை யடையவேண்டும், அதனால் பாதோதக ஸம்பந்நரான குருஶிஷ்யர்களின் அபேத ஜ்ஞாநம் தீக்ஷாபாதோதக ஸம்பந்நனை ஶிவயோகியை ப்ரேரேபிக்கும், அதனால் அந்த ஶிக்ஷா ஜ்ஞாநங்களின் ஸாமரஸ்யமுண்டாம், அதனுலாகிய ஸுகாநுபவத்தைச் செய்வதே சிக்ஷாபாதோதகம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

யாதொரு சிட்சை யிங்குக் குருசீட மயமா ஞானந்
தீதறு மியோகிக் காகச் செய்திடு மவையி ரண்டும்
பேதம தறக்க லந்த பெருமையை யுரைப்பர் நல்லோர்
மாதவ முனிவ சிட்சா பதோதக மென்ன மாதோ.

(ப - ரை) மாதவ முனிவ - பெருந்தவத்தினையுடைய அகத்திய முனிவனே, இங்கு - இவ்வுலகில், குரு சீட மயம் ஆம் - குருஶிஷ்யரூபமாகிய, ஞானம் - ஞானத்தை, தீது அறும் - குற்றமற்ற, யோகிக்காக-யோகியின் பொருட்டு, யாதொரு சிட்சைசெய்திடும்—, அவை இரண்டும்—, பேதம் அற கலந்த பெருமையை—, சிட்சா பதோதகம் என்ன—, நல்லோர் உரைப்பர்—, எ - று.

(வி - ரை.) மாது ஓ - அசைகள். பேதமதற என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. (௧)

மதியெனு மந்த ரத்தால் வாய்த்தநூற் கடலை யாசான்
விதிமுறை கடையத் தோன்றும் விளங்கறி வமுத முண்ப
னெதிரறு மியோகி முத்தி யிரவினிற் பரமா காசத்
துதிதரு ஞானத் திங்க ளின்பநல் லொளியே காண்பன்.

(ப - ரை.) மதி என்னும் மந்தரத்தால் - அறிவென்கிற மந்தரபர்வதத்தால், வாய்த்த நூல் கடலை - பொருந்திய நூல்களாகிய சமுத்திரத்தை, ஆசான் விதிமுறை கடைய—, தோன்றும் - உண்டாகிற, விளங்கு - பிரகாசிக்கிற, அறிவு அமுதம் - ஞானமிர்தத்தை, எதிர் அறும் யோகி—, உண்பன்—, முத்தி இரவினில் - முக்தியாகிய இரவில், பர மாகாசத்து —, உதிதரும் - உதிக்கின்ற, ஞானத்திங்கள் - ஞானமாகிய சந்திரனது, இன்பம் - பரமாநந்தமாகிய, நல் ஒளியே - சிறந்த நிலாவையே, காண்பன் - காண்பான், எ - று.

(வி - ரை.) மதி - யுக்தி. ஆசான் - ஶிக்ஷாசார்யன். கடைய - காரணப்பொருட்டா கிய செயவெனெச்சம், இது தோன்றும் என்னும் வினைகொண்டது. எதிர் - நிகர். (௨)

வரைந்துள தேச கால மருவறும் பரமா நந்தம்
பொருந்தினேன் காண்ப் கேட்ப வறிவவாம் பொருளிங் கில்லை
யொருங்கிய பரமா நந்த யோகிபால் விடய வேட்கை
வருங்கொலொண் கங்கை பெற்றேன் மதிப்பனே கூவ நீரை.

(ப - ரை.) வரைந்துள்ள - வரையறை செய்யப்பட்டுள்ள, தேச காலம் - தேச காலங்களை, மருவு அறும் - பொருந்தாத, பரமானந்தம் பொருந்தினேன்—, காண்ப கேட்ப அறிவ ஆம் - காண்பனவும் கேட்பனவும் அறிவனவுமாகிய, பொருள்-பொருள் கள், இங்கு இல்லை—, ஒருங்கிய - மனமொருங்கிய, பரமானந்த யோகிபால்—, விடய வேட்கை வருங்கொல் - விஷயாபேக்ஷை யுண்டாமோ, ஒள் - அழகிய, கங்கை பெற் றேன்—, கூவநீரை மதிப்பனோ—, எ - று.

(வி - ரை.) பால் - ஏழனுருபு. கங்கை - கங்காஜலம். கூவநீர் - கூபஜலம் (கூபம் - கிணறு). (௯)

அலையில்பே ரின்ப வாரி யமிழ்ந்துவன் பரம யோகி
யெலையிலவ் வாரி திக்கோ ரெல்லையு முண்டோ சொல்வாய்
கலைமலி குரவன் மிக்க கருணைவா னிலவு திப்ப
மலர்தரு நெஞ்ச நீல மருவினேன் மயங்கு றுனல்.

(ப - ரை.) அலை இல் - அலையில்லாத, பேரின்ப வாரி - பேரானந்தக் கடலில், பரம யோகி—, அமிழ்ந்துவன்—, எல்லை இல் - வரம்பில்லாத, அ - அந்த, வாரிதிக்கு—, ஓர் எல்லையும் உண்டோ—, சொல்வாய்—, கலை - நூற்பொருள், மலி - நிறையப் பெற்ற, குரவன் - ஆசானது, மிக்க கருணை - மிகுந்த அருளாகிய, வால் நில உதிப்ப - வெண்மையாகிய சந்திரன் தோன்றுதலால், மலர்தரு - மலர்கின்ற, நெஞ்சம் - மன மாகிய, நீலம் மருவினேன் - நீலமலரையுடையவன், மயங்குறுன்—, எ - று.

(வி - ரை.) அமிழ்ந்தல் - அழுந்தல் (மூழ்கலுமாம்). வாரிதி - கடல். நீலம் - ஆகு பெயர் (நீலம் - கருங்குவளை). குரவன் கருணை - குருப்ரஸாதம். கலை மலி - ஷோடஶ கலைகளும் நிறையப்பெற்ற எனப்பொருள்படுத்தி நிலவைச் சிறப்பித் துரைக்கினுமமையும்.

சிக்ஷாபாதோதகஸ்த்தலம் - முற்றும்.

உ

ஓம் அஷ்டமூர்த்தயே நமஃ

எண்பத்துமூன்றாவது

## (௩.) ஞானபாதோதகத்தலம்.

[அதாவது - ஶிக்ஷாபாதோதக ஸம்பந்நனை ஶிவயோகி குருபதிஷ்ட ஜ்ஞாநத்தினால் ஜ்ஞாநாநந்தத்தை யடைவதே ஞானபாதோதகம் என்பது.]

கலிவிருத்தம்.

நாடுமா நந்த ஞானங்க ளேயிவண்
டேடரு ஞானதே சிகன்மற் றன்னவை
கூடிய சமரசங் குலவு பாதநீர்
சீடனென் றுரைத்திடச் சிறந்து ளோர்க்கரோ.

(ப - ரை.) நாடும் - நாடுதற்குரிய, ஆநந்த ஞானங்களே—, இவண் - இவ்வுலகில், தேடு அரும் ஞான தேசிகன் (ஆம்)—, அன்னவை - அவை, கூடிய - சேர்ந்த, சமரசம் குலவு - சமரச பாவனை விளங்குகிற, பாதநீர் - பாதோதகமே (ஆம்), சீடன் என்று உரைத்திடச் சிறந்துளோர்க்கு—, எ - று.

(வி - ரை.) ஆநந்த ஞானங்களே - இன்பமும் அறிவுமே (சிதாநந்தங்களே). ஞான தேசிகன் - ஜ்ஞாநாசார்யன். ஆநந்தமாகிய ஜ்ஞாநமானது ஜ்ஞாநகுரு வெனப்படும், அதன் ஐக்யப்பேற்றால் ஶிஷ்யனுக்கு அந்த ஜ்ஞாநகுருவோடு ஸமரஸத்தன்மையானது ஜ்ஞாநப்ரபோதகம் என்பதிதன் கருத்து. (க)

நிறைவொடு நிமலமாய் நின்ற வித்தையா
மறையர வொடுபுயன் மாறி யின்பமா
மறைகடல் பொலியவா நந்தச் சோதியாற்
கறையறு ஞானவெண் கதிரி லங்குமால்.

(ப - ரை.) நிறைவொடு நிமலமாய் நின்று—, அவித்தை ஆம்—, மறை அரவொடு புயல் மாறி—, இன்பம் ஆம்—, அறை கடல் பொலிய—, ஆநந்தச் சோதியால்—, கறை அறு - குற்றமற்ற, ஞான வெண்கதிர் - ஞானமாகிய சந்திரன், இலங்கும் - விளங்கும், எ - று.

(வி - ரை.) நிமலம் - நிர்மலம். அரவு - இராகு. அறைகடல் - ஒலிக்கின்ற கடல். மறையரவொடு புயல் மாறி என்றது மறைக்கின்ற இராகுவினின்று விடுபட்டும், மேகத்தினின்று விடுபட்டும் என்றபடி. அவித்தையாம் அரவு, அவித்தையாம் புயல், என இயைத்துரைத்துப் பொருள் கொள்க. (உ)

அறிவெனு மதிவர வவித்தை யாகிய
செறியிரு ளொழிதரச் சிதாநந் தங்களே
குறியெனு மொருபெருங் கோலந் தோன்றுமா
லுறவொடு பகைதவிர் யோகி கட்கரோ.

(ப - ரை.) உறவொடு பகை தவிர் யோகிகட்கு—, அறிவு என்னும் மதி வர - ஞானமாகிய சந்திரன் தோன்ற, அவித்தை ஆகிய—, செறி இருள் - மிக்க இருள், ஒழிதர - ஒழிய, சிதாநந்தங்களே - அறிவும் இன்பமுமே (ஜ்ஞாநாநந்தங்களே), குறி என்னும் - அடையாள மென்கிற, ஒரு பெருங் கோலம் தோன்றும்—, எ - று.

(வி - ரை.) தவிர்தல் - ஒழிதல். பெருங்கோலம் - பேரழகுள்ள உருவம் (அதாவது ஸ்வஸ்வரூபமாகிய ஸ்வரூபலிங்கம்). (ங)

மாயைவல் லிரவற வந்து ஞானமாஞ்
சேயொளி யிரவிதான் றிகழுங் காலையிற்
போயுற வுலகியல் வழக்கம் போற்றுறான்
றூயநல் யோகிதான் றுயிலு மென்பவே.

(ப - ரை.) மாயை - மாயையாகிய, வல் - வலிய, இரவு அற - இரவொழிய, ஞானம் ஆம் - ஞானமாகிய, சேயொளி இரவி வந்து—, திகழும் காலையில்—, தூய நல் யோகி—, உலகியல் வழக்கம்—, போய் உற போற்றுறான்—, துயிலும் - நித்திரை செய்வன், என்ப - என்று சொல்லுவர் (மேலோர்), எ - று.

(வி - ரை.) சேயொளி - செவ்வொளி. திகழும் காலை - விளங்கும் காலத்தில். போற்றுறான் - மதியான். உலகியல் வழக்கம் - லோக வ்யாபாரம். (ச)

அகன்றிட வநாதியா மவித்தை நித்திய
சுகந்திகழ் பரமமாஞ் சூரி யன்றனிற்
புகுந்துற மனமுடைப் புனித யோகிதான்
சகந்தரு கற்பனை தன்னிற் றேய்வுறான்.

(ப - ரை.) அநாதி ஆம் அவித்தை அகன்றிட —, நித்திய - சாசுவதமாகிய, சுகம் திகழ் - இன்பம் விளங்குகிற, பரமம் ஆம் சூரியனில்—, புகுந்துறும் - ப்ரவேசித்துள்ள, மனம் உடை - மனத்தையுடைய, புனித யோகி—, சுகம் தரு கற்பனைதன்னில் தோய்வுறுன்—, எ - று.

(வி - ரை.) அவித்தை - அஞ்ஞானம். தோய்வுறல் - படிதல். கற்பனை - விகற்பம். பரமம் ஆம் சூரியனில் - பரஞ்சோதியில். (௫)

மெய்ப்பர சுகமொடு விளங்கு சோதியர்க்
கொப்பல ரயனரி யுருத்தி ரன்கதி
ரப்படி தமையுணர்ந் தவர்க்கத் தேவர்தாந்
துய்ப்புறு சுகஞ்சிறு துளியொன் ருகுமால்.

(ப - ரை.) மெய் பர சுகமொடு விளங்கு சொதியர்க்கு—, அயன் அரி உருத்திரன் கதிர் ஒப்பு அலர்—, அப்படி தம்மை உணர்ந்தவர்க்கு—, அ - அந்த, தேவர்—, துய்ப்பு உறு சுகம் - நுகரும் இன்பமானது, சிறு துளி ஒன்று ஆகும்—, எ - று.

(வி - ரை.) சோதியர் - ஒளியுருவாயிருப்பவர். கதிர் - சூரியன். அத்தேவர் என்றது அயன் முதலியோரை. ப்ரஹ்மா விஷ்ணு ருத்ரன் ஸூர்யன் ஏது, பராநந்தஜோதியின் ஸாக்ஷாத்காரம்பெற்ற யோகிக்கு ஸமத்வ கற்பனை ஏது, ப்ரஹ்ம விஷ்ண்வாதி தேவ விசேஷங்கள் அபரோக்ஷமா யநுபவிக்கப்பட்ட பரமாநந்த விலாஸமுடையவனுகிய மஹாத்மாவினது ஸுகத்தின் லேசங்களேயாம் என்பதிதன் கருத்து. (௬)

மானுடர் சிறுசுக மருவு மிந்திய
ஞானம தடைகுவர் நச்சி யிந்திய
மானம தறுபரா நந்த வாழ்வினைத்
தானெவர் விரும்புவார் சார்தற் கெண்ணியே.

(ப - ரை.) மானுடர் - மனிதர், நச்சி - விரும்பி, சிறு சுகம் மருவும் - சிற்றின்பத்தோடுகூடிய, இந்திய ஞானம் அடைகுவர்—, இந்திய மானம் அறு - இந்த்ரியாபிமானமற்ற, பராநந்தவாழ்வினை - பேரின்ப வாழ்வை, சார்தற்கு எண்ணி - அடையக்கருதி, எவர் விரும்புவார்—, எ - று.

(வி - ரை.) நச்சல் - விரும்பல். இந்தியஞானம் - இந்த்ரிய வுணர்ச்சி. வாழ்வு - செல்வம். எவர் விரும்புவார் என்றது ஒருவரும் விரும்புகின்றிலர் என்றபடி. (௭)

ஞானபாதோதகத்தலம் - முற்றும்.

உ

ஓம் அநேகாத்மநே நம:

## எண்பத்துநான்காவது

## (அ.) கிரியாநிட்பத்தித்தலம்.



[அதாவது - ஜ்ஞாநபாதோதக ஸம்பந்நனை சிவயோகி கிரியையை யாசரிப்பதாயினும் ரஜ்ஜுவினிடத்தில் ஸர்ப்ப ப்ராந்தி யுண்டாவது போல க்ரியா ஜந்யமான பலன் அவனைப்பற்ருதிருப்பதால் கிரியாநிட்பத்திமான் என்பது.]

கலிவிருத்தம்.

உன்னரும் பரமநல் யோகி தன்கணே
மன்னுறுங் கிரியையோர் வன்க யிற்றினிற்
பன்னகம் போன்றுகற் பிக்கப் பட்டதா
லன்னவன் ருன்கிரி யாநிட் பத்திமான்.

(ப - ரை.) ஓர் வன் கயிற்றினில் பன்னகம் போன்று - ஒரு வலிய கயிற்றிற் பாம்பு போன்று, உன் அரும் - நினைத்தற்கரிய, நல் - நல்ல, பரம யோகிதன்கண்ணே - மேலான யோகியினிடத்தே, மன்னுறும் - நிலைபெற்ற, கிரியை கற்பிக்கப்பட்டதால் - கிரியையானது கற்பிக்கப்பட்டதனுல், அன்னவன்தான் - அந்தப் பரமயோகியே, கிரியா திட்பத்திமான்—, எ - று.

(வி - ரை.) கயிற்றினில் பன்னகம் - பழுதையிற்பாம்பு. பந்நகம் - காலால் நடவாதது, எனவே மார்பினுல் நகர்வது என்றதாயிற்று ; இது பற்றியே இதற்கு உரகம் என்னும் பெயர் வழங்குவர் வடநூலார். பரமயோகி - ப்ரஹ்மஸ்வரூபனுகிய ஜ்ஞாந பாதோதகன் எனினுமாம். (க)

சிறப்புறு ஞானிசெய் செயல்கள் யாவுமிப்
பிறப்புறு காரண மல்ல பேரழல்
வறுப்புறு விதையினை மண்ணி னொண்முளைக்
குறப்பெறு மேதுவென் றுரைக்க லாகுமோ.

(ப - ரை.) பேரழல் - பெரு நெருப்பினுல், வறுப்பு உறு - வறுக்கப்பெற்ற, விதையினை - வித்தினை, மண்ணில்—, ஒள் முளைக்கு—, உறப்பெறும் - பொருந்தப் பெற்ற, ஏதுவென்று உரைக்கலாகுமோ—, (ஆகாது, அதுபோலவே) சிறப்பு உறு ஞானி—, செய் செயல்கள் யாவும்—, இ - இந்த, பிறப்பு - பிறவிக்கு, உறு காரணம் அல்ல—, எ - று.

(வி - ரை.) முளைக்கு - முளையுண்டாதற்கு. ஏது - காரணம். ஆகுமோ வென்னு மோகாரம் எதிர்மறை. (உ)

தீதறு ஞானிதன் செயல்க ளாலவற்
கேதுள தெய்துவ திருள்வி ழுங்குறு
சோதிகொண் மதிக்கெதிர் தோன்றும் விம்பமார்
வாதைய துளதுகொன் மதித்து நாடினே.

(ப - ரை.) இருள் விழுங்குறு - இருட்டை விழுங்குகிற, சோதிகொள் மதிக்கு - ஒளியையுடைய சந்திரனுக்கு, எதிர் தோன்றும் - அதற்கெதிரே தோன்றுகிற, விம்பம் - பிரதி பிம்பத்தில், ஆர் - உண்டாகிற, வாதை - சலநமானது, மதித்து நாடின் - ஆலோசித்து நோக்கினுல், உளதுகொல் - உளதோ (இல்லை, அதுபோல), தீது அறு - குற்றமற்ற, ஞானிதன் செயல்களால்—, அவற்கு—, எய்துவது - வந்து அடைவது, ஏது உளது - யாதுளது (ஒன்று மில்லை), எ - று.

(வி - ரை.) பிரதி பிம்பம் - எதிருரு. வாதை - விகாரம் எனினுமாம். எய்துவது என்றது பிறவித்துன்பம். உளதுகொல் என்பதில் கொல் எதிர்மறைப் பொருடந்து நின்றது, ஏதுளது என்னும் வினவும் அது. தீது அறு - அஹங்காரமற்ற எனினுமாம். ஈற்றேகாரம் அசை. (ங)

திங்களுக் கிரிதருஞ் செயல்வி சும்பினு
லிங்குரைத் திடுதல்போ லிசைந்த வாக்கையான்
மங்கலத் தொளிகொளான் மாவி னுக்குமா
றங்குமச் செயுந்தொழில் சாற்றப் பட்டிடும்.

(ப - ரை.) திங்களுக்கு - சந்திரனுக்கு, விசும்பினுல்—, இரிதரும் செயல் - ஓடுந் தொழில், இங்கு உரைத்திடுதல் போல்—, இசைந்த ஆக்கையால்—, மங்கலத்து ஒளிகொள் - மங்களகரமான வொளியைக்கொண்ட, ஆன்மாவினுக்கு - ஆத்மாவுக்கு, மால்

தங்கும் - மயக்கந்தங்கிய, அ - அந்த, செய்யும் தொழில்—, சாற்றப்பட்டிடும் - சொல்லப்படும், எ - று.

(வி-ரை.) விசும்பு - ஆகாயம், ஈண்டு இடவாகு பெயராய் மேகத்தை புணர்த்திற்று. இரிதரல் - ஓடுதல். இங்கு - இவ்வுலகில், சந்திரனுக்கு மேக ஸம்பந்தத்தால் எவ்வாறு சலநம் ஆரோபிக்கப் படுகின்றதோ, அவ்வாறு ஆத்மாவுக்கு தேஹ ஸம்பந்தத்தால் க்ரியை கற்பிக்கப் படுகின்றது என்பதிதன் கருத்து. (௪)

வினைபல விரவினும் விமல ஞானிதா
னனையவை தருபய னவண டைந்திடா
னினியன பலபொரு ளிசைந்த ருந்தினு
நனியுணு நாவவை நண்ணு மோசொலாய்.

(ப - ரை.) இனியன பல பொருள் - இனியவாகிய பல பதார்த்தங்களை, இசைந்து அருந்தினும்—, நனி உண்ணும் - மிகுதியாயுண்ணுகிற, நா - நாவானது, அவை நண்ணுமோ - அவற்றின் பயனை யடையுமோ (அடையாது, அதுபோல), வினை பல விரவினும் - பல செயல்கள் செய்யினும், விமல ஞானி—, அனையவை தரு பலன் அவண் அடைந்திடான்—, எ - று.

(வி - ரை.) இனியன - முற்றெச்சம். அவை - ஆகுபெயர். நாவானது புஜிக்கின்றதாயினும் எவ்வாறு நெய் முதலியவற்றால் ஸம்பந்திக்கப் பெறுகின்றதில்லையோ, அவ்வாறு ஜ்ஞாநியானவன் கர்மங்களைச் செய்கின்றவனுயினும் க்ரியைகளின் பயனோடு ஸம்பந்திக்கப் பெறுகின்றதில்லை என்பதிதன் கருத்து. (௫)

விடுத்துள வுபாதியான் வினைகள் யாவுமிங்
கடுத்துள வளவதா யவன்கண் மாயுமா
னடப்பினு மிருப்பினு நனியு றங்கினுந்
தொடக்குறு முயிர்வினை ஞானி தோய்ந்திடான்.

(ப - ரை.) விடுத்துள்ள உபாதியான் - உபாதியை விட்டிருப்பவன், வினைகள் யாவும்—, இங்கு—, அடுத்துள்ள அளவதாய்—, அவன்கண் மாயும் - அவனிடத்தே யொடுங்கும், ஆல் - ஆதலால், நடப்பினும் இருப்பினும் நனி உறங்கினும்—, ஞானி - ஞானியானவன், தொடக்குறும்-சம்பந்தித்த, உயிர்வினை தோய்ந்திடான் - சீவச்செயலின் பயனை யடையமாட்டான், எ - று.

(வி - ரை.) நனி - மிகுதி. வினை - ஆகுபெயர். அடுத்துள்ள அளவதாய் - தோற்றமாத்திரமாய். நடக்கிறவனுயினும், இருக்கிறவனுயினும், தூங்குகிறவனுயினும் ஒருவனும் கர்மமில்லாதவனுயில்லை, தேஹிகளுக்கு கர்மமானது இயல்பாயுள்ளது, அந்த கர்மமானது ஜ்ஞாநிகளுக்கோ வெனின் பயனற்றதென்பதிதன் கருத்து. (௬)

நிறையுறு பராநந்த சுத்த நெஞ்சனு
மறிவுடை யவன்றனை யணங்கு வல்வினைச்
செறிதொடர் பந்தனை செயாதென் றோர்கநீ
குறுமுனி யென்றுயர் குணப்பொற் குன்றனாய்.

(ப - ரை.) குறுமுனி என்று - குறுமுனியென்று சொல்லப்பட்டு, உயர் - உயர்ந்த, குணம் பொற் குன்று அன்னாய் - குணமாகிய பொன்மலையை நிகர்த்தவனே, நிறை உறு - நிறைந்த (பரிபூர்ணமாகிய), பராநந்த சுத்த நெஞ்சன் ஆம் அறிவுடையவன் தன்னை—, அணங்கு - (யாவரையும்) வருத்துகிற, வல் வினை - வலிய வினையாகிய, செறி தொடர் -

இன்மையால் - ஆவன வொன்றுமில்லை யாதலால், அவை விடேல் - அவற்றை விடாதே, எ - று.

(வி - ரை.) பாவம் - பாவனை. ஏகமாய் - ஒன்றாகி. மேவிடின் - பொருந்தினால். அவை யென்றது அந்த பாவ ஞானங்களை. பாவனையானது வ்ருத்திஜ்ஞானத்தோடுகூட ஶிவத்தினிடம் ஒன்றாய் லயித்துப்போக, ஶிவஜ்ஞானியானவன் ஆஶ்சர்யகரமாகிய ஸ்வரூபாவேஶமுடையவனாய் ஶிவதத்வத்தில் விளங்குகிறான், பாவனையின்றி ஜ்ஞானமில்லை ஜ்ஞானமின்றிப் பாவனையில்லை, ஆதலால் மோக்ஷகாரணமாய்க் கூறப்பட்ட இரண்டையும் கைப்பற்ற வேண்டும் என்பதிதன் கருத்து. (௯)

பாவநிட்பத்தித்தலம் - முற்றும்.

உ

ஓம் ஶாந்தவிக்ரஹாய நம:

எண்பத்தாறுவது

(௯) ஞானநிட்பத்தித்தலம்.

—∞◇∞—

[அதாவது—விஶ்வ வ்யவஹார ஜ்ஞானம் ஸ்வபாவமாயும் ஸ்த்திரமாயு மிருப்பினும் பாவநிஷ்பத்திமானான ஜ்ஞாநி, ஶிவனல்லாது ஜ்ஞேயாந்தரம் அதாவது நான் அறியத் தக்கவன் இது அறியத்தக்கது என்னும் வ்யவஹாரங்கள் இல்லாதிருப்பதனாலும், ஸ்வப்ந ஸத்ருஶமான ஜ்ஞாந வ்ருத்தியுள்ளவனா யிருப்பதனாலும் ஞானநிட்பத்திமான் என்பது.]

கலிவிருத்தம்.

உலகினி லுணர்பொரு ளுணர்விற் கின்மையா
லிலகுறு மிவன்கன வென்ன ஞாலமேற்
பலர்புகழ் ஞானநிட் பத்தி மேவலா
னலமலி ஞானநிட் பன்ன னென்பரால்.

(ப - ரை.) உலகினில் - உலகத்தில், உணர் பொருள் - உணர்தற்குரிய பொருள், உணர்விற்கு இன்மையால்—, இலகுறும் - விளங்குகிற, இவன்—, கனவு என்ன - கனாப்போல, ஞாலமேல் - உலகமீது, பலர் புகழ் - பலராலும் புகழப்படுகிற, ஞானநிட்பத்தி மேவலால்—, நலம் மலி - நன்மை மிகுந்த, ஞானநிட்பன்னன் என்பர்—, எ-று.

(வி-ரை.) மேவலால் - அடைந்திருத்தலால். மலிதல் - மிகுதல். ஆல் - அசை. லோக வ்யவஹாரத்திலுள்ள ஜ்ஞானத்திற்கு உண்மையாகிய ஜ்ஞேயமான விஷயம் இல்லாமையாலும், கனாப்போல ஜ்ஞானமேற்படு கின்றமையாலும் இந்த ஜ்ஞாநி ஜ்ஞாநநிஷ்பத்திமான் என்பதிதன் கருத்து. (க)

சொற்பனந் தனில்வரு முணர்வு தோன்றுமப்
பற்பல பொருளொடு போகும் பான்மைபோற்
றற்பர மிலகுறத் தன்னு ணர்ச்சியான்
முற்பெறு ஞேயமு முடிந்து போகுமால்.

(ப - ரை.) சொற்பனந்தன்னில் வரும் உணர்வு—, தோன்றும் - (அங்கே) காணப்படுகிற, அ - அந்த, பற்பல பொருளொடு போகும் பான்மை போல்—, தற்பரம் - இலகுற—, தன் உணர்ச்சியால்—, முன் பெறும் - முன்னே தோன்றின, ஞேயமும்—, முடிந்துபோகும்—, எ - று.

நிரம்பிய சிதாநந்த நித்தன் றன்கணே
விரும்பிய பாவனே விடேல வன்றனிற்
பரம்பெறு பாவனே பரவு வெம்பவக்
கருங்கடல் கடந்திடக் கடத்து மென்பவே.

(ப - ரை.) நிரம்பிய - நிறைந்த, சிதாநந்த —, நித்தன்தன்கண்ணே —, விரும்பிய பாவனே விடேல் - விரும்பப்பட்ட பாவனையை விடாதை, அவன் தன்னில் - அவனிடத்தே செய்கிற, பரம் பெறு பாவனே - மேலான பாவனையாகிய மரக்கலமானது, பரவு - விரிந்த, வெம் பவம் - கொடிய பிறவியாகிய, கருங்கடல் கடந்திட—, கடத்தும் - தாண்டுவிக்கும், என்ப - என்று சொல்லுவர் (பெரியோர்), எ - று.

(வி - ரை.) சிதாநந்த - அகண்ட பரிபூர்ண ஜ்ஞாநம் அடையப்பெற்றவனே. நித்தன் - பரமசிவன். விடேல் - முன்னிலை யொருமை யெதிர்மறை வினைமுற்று. (௩)

இங்குறு பவவிடா யாவு நீக்கியே
சங்கர பாவனே தானு நீங்குமாற்
பொங்கழல் விறகினேப் பொடித்து நின்றுதா
னங்கவி யாமலே யடுக்கு மோசொலாய்.

(ப - ரை.) இங்கு உறு - இவ்வுலகிற் பொருந்துகிற, பவ விடாய்—, யாவும் - முழுதும், நீக்கியே - ஒழித்தே, சங்கர பாவனே தானும் நீங்கும்—, பொங்கு அழல் - எரிகிற நெருப்பானது, விறகினே பொடித்து நின்று - விறகை நீறு செய்து நின்று, தான் அங்கு அவியாமலே அடுக்குமோ—, சொலாய் - சொல்வாயாக, எ - று.

(வி - ரை.) பவவிடாய் - பிறவிச்சோர்வு. அடுக்குமோ வென்னு மோகாரம் எதிர்மறை. அக்கியானது எவ்வாறு விறகு முதலியவற்றை தஹித்துவிட்டுத் தானும் நசித்துப் போகின்றதோ, அவ்வாறு பிறவியாலுண்டாகும் துக்கத்தை நீக்கிவிட்டு சிவபாவனே தானும் நீங்கும் என்பதிதன் கருத்து. (௪)

ஏத்துறு சிவாநந்த மெய்தி னென்செயும்
வாய்த்தபா வனேயினி மனத்தி னெண்பொருள்
சாத்திய மாயுறிற் சாத நங்களாற்
பேர்த்தொரு பயனிலே பேசுங் காலேயே.

(ப - ரை.) ஏத்துறு - புகழ்பெற்ற, சிவாநந்தம் எய்தின் - சிவாநந்த மெய்தப்பெற்றால், வாய்த்த - பொருந்திய, பாவனே—, இனி என் செய்யும்—, மனத்தின் - மனத்தினால், எண் பொருள் - (வெகு காலமாய்ப்) பாவிக்கும் பொருள், சாத்தியமாய் உறின் - சித்திக்கப்பெற்றால், பேசுங்காலே - சொல்லு மிடத்து, சாதநங்களால் - பிற கருவிகளால், பேர்த்து ஒரு பயன் இல்லே - வேறொரு பயனுமில்லே, எ - று.

(வி-ரை.) ஏத்தல் - புகழ்தல். சாத்தியமாதல்-சித்தித்தல். எண்-சாதிக்கப்படுவதாகிய. இனி-இப்போது, இதனே 'இனியநீர்தேன்' என்புழிக்காண்க. (திருக்குறள், ௧0௬ அதி. ௩.)

பாவமு ஞானமும் பரனி லேகமாய்
மேவிடி னெருசிவ மாய்வி ளங்குவான்
பாவமு ஞானமும் வேறு பட்டுநின்
றுவன வின்மையா லவைவி டேலரோ.

(ப - ரை.) பாவமும் ஞானமும்—, பரனில் - பரனிடத்து, ஏகமாய் மேவிடின்—, ஒரு சிவமாய் விளங்குவான்—, பாவமும் ஞானமும் வேறுபட்டு நின்று—, அவன

இன்மையால் - ஆவன வொன்றுமில்லை யாதலால், அவை விடேல் - அவற்றை விடாதே, எ - று.

(வி - ரை.) பாவம் - பாவனை. ஏகமாய் - ஒன்றாகி. மேவிடின் - பொருந்தினால். அவை யென்றது அந்த பாவ ஞானங்களை. பாவனையானது வ்ருத்திஜ்ஞானத்தோடுகூட ஶிவத்தினிடம் ஒன்றாய் லயித்துப்போக, ஶிவஜ்ஞானியானவன் ஆஶ்சர்யகரமாகிய ஸ்வரூபாவேஶ முடையவனாய் ஶிவதத்வத்தில் விளங்குகிறான், பாவனையின்றி ஜ்ஞானமில்லை ஜ்ஞானமின்றிப் பாவனையில்லை, ஆதலால் மோக்ஷகாரணமாய்க் கூறப்பட்ட இரண்டையும் கைப்பற்ற வேண்டும் என்பதிதன் கருத்து. (௬)

பாவநிட்பத்தித்தலம் - முற்றும்.

---

உ

ஓம் ஶுத்தவிக்ரஹாய நம:

## எண்பத்தாறுவது

## (௬) ஞானநிட்பத்தித்தலம்.

[அதாவது—விஶ்வ வ்யவஹார ஜ்ஞானம் ஸ்வபாவமாயும் ஸ்த்திரமாயு மிருப்பினும் பாவநிஷ்பத்திமானான ஜ்ஞானி, ஶிவனல்லாது ஜ்ஞேயாந்தரம் அதாவது நான் அறியத் தக்கவன் இது அறியத்தக்கது என்னும் வ்யவஹாரங்கள் இல்லாதிருப்பதனாலும், ஸ்வப்ந ஸத்ருஶமான ஜ்ஞான வ்ருத்தியுள்ளவனா யிருப்பதனாலும் ஞானநிட்பத்திமான் என்பது.]

கலிவிருத்தம்.

உலகினி லுணர்பொரு ளுணர்விற் கின்மையா
லிலகுறு மிவன்கன வென்ன ஞாலமேற்
பலர்புகழ் ஞானநிட் பத்தி மேவலா
னலமலி ஞானநிட் பன்ன னென்பரால்.

(ப - ரை.) உலகினில் - உலகத்தில், உணர் பொருள் - உணர்தற்குரிய பொருள், உணர்விற்கு இன்மையால்—, இலகுறும் - விளங்குகிற, இவன்—, கனவு என்ன - கனாப்போல, ஞாலமேல் - உலகமீது, பலர் புகழ் - பலராலும் புகழப்படுகிற, ஞானநிட்பத்தி மேவலால்—, நலம் மலி - நன்மை மிகுந்த, ஞானநிட்பன்னன் என்பர்—, எ-று.

(வி-ரை.) மேவலால் - அடைந்திருத்தலால். மலிதல் - மிகுதல். ஆல் - அசை. லோக வ்யவஹாரத்திலுள்ள ஜ்ஞானத்திற்கு உண்மையாகிய ஜ்ஞேயமான விஷயம் இல்லாமையாலும், கனாப்போல ஜ்ஞானமேற்படு கின்றமையாலும் இந்த ஜ்ஞானி ஜ்ஞானநிஷ்பத்திமான் என்பதிதன் கருத்து. (க)

சொற்பனந் தனில்வரு முணர்வு தோன்றுமப்
பற்பல பொருளொடு போகும் பான்மைபோற்
றற்பர மிலகுறத் தன்னு ணர்ச்சியான்
முற்பெறு ஞேயமு முடிந்து போகுமால்.

(ப - ரை.) சொற்பனந்தன்னில் வரும் உணர்வு—, தோன்றும் - (அங்கே) காணப்படுகிற, அ - அந்த, பற்பல பொருளொடு போகும் பான்மை போல்—, தற்பரம் - இலகுற—, தன் உணர்ச்சியால்—, முன் பெறும் - முன்னே தோன்றின, ஞேயமும்—, முடிந்துபோகும்—, எ - று.

(வி - ரை.) சொற்பனம் - ஸ்வப்நம் என்னும் வடசொற்றிரிபு. பான்மை - தன்மை. இலகுற - விளங்க. உணர்ச்சியால் - உணர்ச்சியோடு. ஞேயம் - காட்சிப்பொருள். ஆல்- அசை. கனவிலுண்டாகிய ஜ்ஞாநமானது எவ்வாறு ஜ்ஞேயங்களாகிய தன் விஷயங்களோடுகூட நீங்குகின்றதோ, அவ்வாறு ஆத்ம ஸ்வரூப ப்ரகாஸத்தில் ஜ்ஞாநமும் ஜ்ஞேயமும் நீங்குகின்றன என்பதிதன் கருத்து. (உ)

நிறைந்திடு பராநந்த நிமலன் றன்னிடை
யிறந்துள மனமுடை யிவற்கு ஞேயமா
யறிந்திடு பொருள்சிவ மன்றி யில்லையென்
றுறுந்தவ முனிவர வுலக மோதுமால்.

(ப - ரை.) உறும் தவம் - மிக்க தவத்தினையுடைய, முனிவர - முநிஸ்ரேஷ்டனே, நிறைந்திடு - நிறைவாகிய, பராநந்த நிமலன் தன்னிடை - சிவபிரானிடத்தே, இறந்துள்ள மனம் உடை - ஒடுங்கின மனத்தினையுடைய, இவற்கு - இந்த ஞானநிட்டனுக்கு, சிவம் அன்றி - சிவமேயல்லாமல், ஞேயமாய் அறிந்திடு பொருள் இல்லை என்று—, உலகம் ஓதும் - உலகம் சொல்லும், எ - று.

(வி-ரை.) ஆல் - அசை. உலகம் ஓதும் என்றது உயர்ந்தோர் சொல்லுவர் என்றபடி, "உலகமென்ப துயர்ந்தோர் மாட்டே" என்பதோத்தாகலின். (௩)

சச்சிதா நந்தமாந் தன்மை யோன்சிவ
னிச்சக மியாவுமோ மித்தை யென்பதிங்
கச்சுறு ஞானமென் றறிவி லக்கணம்
வச்சநூ லுணர்பவர் வகுத்துக் கூறுவார்.

(ப - ரை.) சச்சிதாநந்தம் ஆம் தன்மையோன் சிவன்—, இ - இந்த, சகம் யாவையும் மித்தை என்பது—, இங்கு—, அச்சுறு - அஞ்சாத, ஞானம் என்று—, அறிவு இலக்கணம் வைச்ச - அறிவினது இலக்கணம் அமைத்துச் சொல்லப்பட்டிருக்கிற, நூல்- நூற்பொருளை, உணர்பவர்—, வகுத்துக்கூறுவார்—, எ - று.

(வி-ரை.) மித்தை - பொய். அஞ்சுறு என்பது எதுகை யின்பநோக்கி அச்சுறு என வலித்தல் பெற்றது. நூல் - ஆகுபெயர். (௪)

உற்றிடு பரனில்வே றுங்க டாதியிற்
பற்றிநின் றிடுவன பார்த்து மித்தையென்
றற்றிட விடுதலை யறிவென் றோதுவார்
தெற்றென வறிவறி திறத்தின் மேலையோர்.

(ப - ரை.) தெற்றென - தெளிவாக, அறிவு அறிதிறத்தின் - அறிவை யறியுந்திறத்தினையுடைய, மேலையோர்—, உற்றிடு - பொருந்திய, பரனில் வேறு ஆம் - பரனினின்றும் வேறாகிய, கடாதியில் - குடமுதலியவற்றில், பற்றிநின்றிடுவன பார்த்து—, மித்தை என்று—, அற்றிட - அற, விடுதலை - விடுவதனை, அறிவு என்று ஓதுவார்—, எ - று.

(வி - ரை.) திறம் - உபாயம். மேலையோர் - மேலோர். கடம் - குடம். ஓதல் - சொல்லல். கடம் முதலியவைகளில் யாதொன்று உளது உளது என்று ஸத்தை ஸ்வரூபமாய் உடனிகழ்ந்துளதோ அதே ப்ரஹ்மம், உடனிகழாததாகிய கடம் முதலியது பொய் யென்னும் நிலைமையே இங்கு ஜ்ஞாநம் என்று சொல்லப்படும் என்பதிதன் கருத்து.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

காரண காரி யங்கள் கடந்துபா திகளனைத்து
மாரண மடைய நின்ற வத்துவே பிரம மந்த
வேரணி பிரம நானென் றிருந்திடு நிட்டை தானே
சீரணி ஞான மென்பர் செழுமறை கற்று ணர்ந்தோர்.

(ப - ரை.) செழுமறை கற்றுணர்ந்தோர்—, காரணகாரியங்கள் கடந்து—, உபாதிகள் அனைத்தும் —, மாரணம் அடைய—, நின்ற - எஞ்சிநின்ற, வத்துவே பிரமம்—, அந்த ஏர் அணி பிரமம் நானென்று இருந்திடும் நிட்டைதானே—, சீர் அணி ஞானம் என்பர்—, எ - று.

(வி - ரை.) மறைகளுக்குச் செழுமையாவது சதுர்வித புருஷார்த்தங்களாகிய தர்மார்த்த காமமோக்ஷங்களைத் தம்மிடத்தே கொண்டிருந்து, அவற்றுள் வேண்டுவோர் வேண்டு மவற்றைத்தந்து நிற்றல். மாரணம் - நசித்தல். சீரணி ஞானம் - சிறந்த ஞானம். யாதொன்று காரணகார்யமில்லாததும் எவ்வித உபாதியு மில்லாததுமாயுள்ளதோ அதே ப்ரஹ்மம், அதே நான் என்ற நிஷ்ட்டையே ஜ்ஞாநம் எனப்படும் என்பதிதன் கருத்து. (சு

விரிந்துள பொருளனைத்தும் விடுத்தொரு முதலாய் நின்ற
பரந்தனி லபேத மெய்தப் படுமெனி னறிகு வேனுன்
றெரிந்தறி ஞேய மீதென் றுணர்தருந் திறத்து ஞானம்
பொருந்துவ தெவ்வி டத்து மிலையெனப் புகல்வர் கற்றோர்.

(ப - ரை.) விரிந்துள பொருள் அனைத்தும் விடுத்து—, ஒரு முதலாய் நின்ற—, பரம் தன்னில் - பரம் பொருளில், அபேதம் எய்தப்படும் எனின்—, நான் அறிகுவேன்—, தெரிந்து அறி ஞேயம்—, ஈது என்று உணர்தரும் திறத்து ஞானம்—, பொருந்துவது எவ்விடத்தும்—, இல்லை என—, கற்றோர் - (அறிவுநூல்களைக்) கற்றோர், புகல்வர் - சொல்லுவர், எ - று.

(வி - ரை.) விடுத்து - விட்டு. ஒரு முதல் - ஒப்பற்ற முதற்பொருள். முதல் - ஆகுபெயர், பரமும் அது. திறம் - வகை. ஈண்டைக்கேற்ப அறிவுநூல்க ளென்பது வருவிக்கப்பட்டது. ஸகல ப்ரபஞ்சப்பொருள்களும் நீங்கிய அபிந்நமாகிய ப்ரஹ்ம ஸமரஸத் தன்மையில் நான் அறிபவன், இது அறியப்படுவது என்னும் வ்யவஹாரங்கள் எதனால் நிகழும்? இல்லை என்பதிதன் கருத்து. (எ)

ஞானநிட்டைத்தலம் - முற்றும்.



உ
ஓம் ஶாஶ்வதாய நமஃ

# எண்பத்தேழாவது

# (எ) பிண்டாகாசத்தலம்.

[அதாவது—"ஏக ஏவ ருத்ரோ நத்விதீயாய தஸ்தே" என்னும் ஶ்ருதிப்ரமாணத்தினால் அத்வைத லக்ஷணயுக்தனானவனும், "ஶிவ யேகோத்யேயஃ" என்னும் அதர்வஶிகா ப்ரமாணத்தினால் ப்ரஸித்தனானவனுமான பரஶிவத்தை மற்றொரு அவலம்பநமில்லாத மனத்தினால் ஆத்மா தேஹோபாதி யுள்ளவனா யிருப்பினும் பரிபூர்ணன் என்றறிந்து த்யாநஞ் செய்கின்றவனே பிண்டாகாசன் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நெடியவான் பிண்டத் துற்று நிறைவெனப் படுதல் போலப்
படியறு மான்மா வுந்தா னிறைவெனப் படுமென் றோர்வாய்
விடலரு மிவன திந்தப் பொருடெரி விவேக மேதான்
றடையறு பிண்டா காசத் தலமென வறைவர் மேலோர்.

(ப - ரை.) நெடிய வான் - நெடிதாகிய ஆகாசமானது, பிண்டத்து உற்று—, நிறைவு எனப்படுதல் போல—, படி அறும் - ஒப்பற்ற, ஆன்மாவும்—, நிறைவு எனப்படும் என்று—, ஓர்வாய் - அறியக்கடவை, விடல் அரும் - நீங்குதற்கரிய, இவனது - இவனுடைய, இந்தப் பொருள் தெரி விவேகமே—, தடை அறு பிண்டாகாசத்தலம் என—, மேலோர் அறைவர்—, எ - று.

(வி - ரை.) பிண்டம் - (பிண்டமாகிய) தேஹம். ஓர்தல் - அறிதல். தெரிதல் - அறிதல். விவேகம் - அறிவு (ஞானம்). அறைவர் - சொல்லுவர். எவ்வாறு தேஹத்திலுள்ளதாயினும் ஆகாஶம் பரிபூர்ணமோ, அவ்வாறு தேஹத்திலுள்ளதாயினும் ஆத்மா பரிபூர்ணனும் என்பதிதன் கருத்து. (க)

குடத்தினி லுறுவி சும்பு குறிக்கிற்பூ ரணமா மாபோ
லடுத்துறு பிண்டத் தான்மா வதனது சொரூபத் தானே
தடுப்பரு நிறைவ தாகித் தயங்குமென் றறைவர் மேலோர்
கடத்தினி லுதித்து மிக்க கடல்குடித் துயர்ந்த மேலோய்.

(ப - ரை.) கடத்தினில் உதித்து—, மிக்க - மேலான, கடல் குடித்து உயர்ந்த—, மேலோய்—, குடத்தினில் - கடத்தில், உறு - தோன்றுகிற, விசும்பு - ஆகாசமானது, குறிக்கின் - நினைக்குமிடத்து, (சொரூபத்தால்) பூரணம் ஆமாறு போல்—, அடுத்துறு பிண்டத்து—, ஆன்மா அதனது சொரூபத்தானே—, தடுப்பு அரு - தடுத்தற்கரிய, நிறைவு ஆகி—, தயங்கும் என்று - விளங்குமென்று, மேலோர் அறைவர்—, எ - று.

(வி - ரை.) ஆமாறு என்பது ஆமா என ஈறுதொகுத்தலாயிற்று. தடுப்பு - தடுத்தல். நிறை - பூர்ணம். தயங்கல் - விளங்கல். கடத்தினிலுதித்து மிக்க கடல் குடித்துயர்ந்த மேலோய் என்றது அகத்திய முனிவரை. (உ)

அகத்தினிற் பரவி சும்பா யத்துவி தத்த தாகி
மிகுத்துறு சிவத்தை யென்றும் விமலமா மனத்திற் பாவ
மிகப்பற வியற்று வோனே யியம்பிற்பிண் டாகா சத்தன்
றகக்கலை முழுது மோர்ந்து தயங்கிய முனிவ ரேறே.

(ப-ரை.) கலை முழுதும்—, தக - தகுதியாக, ஓர்ந்து - ஆராய்ந்து, தயங்கிய - விளங்கிய, முனிவர் ஏறே - முனிஶ்ரேஷ்டனே, அகத்தினில் - மனத்தில், பர விசும்பு ஆய் - பராகாசமாகி, அத்துவிதத்தது ஆகி—, திருத்துறு சிவத்தை—, என்றும்—, விமலம் ஆம் மனத்தில்—, இகப்பு அற பாவம் இயற்றுவோனே - நீக்கமறப் பாவனை செய்பவனே, இயம்பின் - சொல்லுமிடத்தில், பிண்டாகாசத்தன் - பிண்டாகாசனென்று சொல்லப்படுவான், எ - று.

(வி-ரை.) கலை - நூல்கள். தக - கசடற. ஓர்தல் - ஆராய்தல். தயங்கல் - விளங்கல். இகப்பு - நீங்கல். விமலம் ஆம் மனத்தில் - ஶுத்த சித்தத்தில். பாவம் இயற்றுதல் - த்யாநம் செய்தல். (௩)

தத்துவ முப்பத் தாறாற் சமைத்திடப் பட்டு மாசில்
சுத்தநன் மனமாம் பீடந் துளக்கற வமைத்து ஞானப்
புத்தொளி மணிவி ளக்குப் பொருந்துறு மிந்த யாக்கை
யத்தனஞ் சிவனி ருக்கு மாலய மென்பர் மேலோர்.

(ப-ரை.) தத்துவம் முப்பத்தாறால் - முப்பத்தாறு தத்துவங்களால், சமைத்திடப்பட்டு - செய்யப்பட்டு, மாசு இல் - குற்றமில்லாத, சுத்த நல் மனம் ஆம் - பரிசுத்தமாகிய நல்ல மனமென்கிற, பீடம் - (தாமரை மலராகிய) ஆசநத்தை, துளக்கு அற அமைத்து - ஸ்திரமா யேற்படுத்தி, ஞானம் - ஞானமாகிய, புத்தொளி - புதியவொளியினையுடைய, மணி விளக்கு - ரத்நதீபமானது, பொருந்துறும் - பொருந்தியிருக்கிற, இந்த யாக்கை - இந்தச் சரீரத்தை, அத்தன் - இறைவனாகிய, நம் சிவன் - நம் சிவபெருமான், இருக்கும் - வசிக்கிற, ஆலயம் என்பர் - கோயிலென்று சொல்லுவர், மேலோர்—, எ - று.

(வி-ரை.) புது ஒளி புத்தொளி யென்றாயிற்று. மேலோர் சொல்லுவர் என முடித்துக்கொள்க. (௪)

மிக்குறு பரமா காச மேனியாய் விளங்கு மீசன்
மெய்க்கணி னவரு ளத்தின் மேவுவோ னாகக் காண்க
விக்குறி யுடல மாகுஞ் சிவபுரத் திதயக் கோயில்
புக்குறு மமல நீரிற் பொருந்திய விசும்பு போல.

(ப-ரை.) மிக்குறு - மேலான, பரம ஆகாசம் - பரமாகாயத்தை, மேனியாய் - திருமேனியாகக்கொண்டு, விளங்கும் ஈசன்—, மெய்க்கண்ணின் - உண்மையாகிய கண்ணினையுடைய, அவர் உள்ளத்தில் - அவரதுமனத்தில், மேவுவோனாக காண்க—, இக்குறி - இந்தக் குறியினையுடைய, உடலம் ஆகும் - உடம்பாகிய, சிவபுரத்து - சிவ நகரத்து, இதயக் கோயில் - ஹ்ருதயமாகிய கோயிலில், புக்குறும் - ப்ரவேசிப்பன், (எதுபோலவெனின்) அமலம் - பரிசுத்தமாகிய, நீரில் - நீரின்கண், பொருந்திய—, விசும்பு போல—, எ - று.

(வி-ரை.) மெய்க்கண்ணினவர் - ஞானக்கண்ணையுடைய அறிஞர். குறி - அடையாளம். பொருந்திய - ப்ரதிபிம்பித்த. (௫)

அந்தரா காச விம்பத் தடுத்துபா திகளனைத்தும்
வந்துறு தொழிந்து நிற்கு மணிக்குட வானம் போல
முந்தையோர் சின்ன மாகி மூதறி வுருவாய் நின்ற
வெந்தையாஞ் சிவத்தை யென்று மியல்பிற்பா விக்க மாதோ.

(ப - ரை.) அந்தரம் ஆகாசவிம்பத்து அடுத்து—, உபாதிகள் அனைத்தும்—, வந்து உறுது ஒழிந்து—, நிற்கும் - நிற்கிற, மணிக்குடம் வானம் போல—, முந்தை - முதலில், ஓர் சின்னம் ஆகி - ஓர் கண்டப் பொருளாகி, (பிறகு) மூது அறிவுருவாய் நின்ற - பழமையாகிய சிற்பமாய் நின்ற, எந்தை ஆம் சிவந்தை—, என்றும்—, இயல்பின் - க்ரமமாக, பாவிக்க - பாவனைசெய்க, எ - று.

(வி-ரை.) அந்தரம் - ஹ்ருதயம். மணிக்குடம் - ரத்நகடம் (மணி என்பதற்கு அழகிய என்று பொருள்கொள்ளினுமமையும்). குடம் வானம் - கடாகாஶம். கடாகாஶம்போல ஹ்ருதயாகாஶமண்டலத்திலுள்ளவனும், எவ்வுபாதியுமில்லாதவனும், தோற்றமாத்திரமேயன்றி உண்மையாயிருந்த உருவமாவனும், ஜ்ஞாநவடிவனுமாகிய ஶிவனைப் பாவிக்கவேண்டுமென்பதிதன் கருத்து. (சு)

பிண்டாகாசத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் கண்டபரஶிவே நம:

## எண்பத்தெட்டாவது

## (அ.) விந்தாகாசத்தலம்.

[அதாவது - ஸகல ப்ராணிகளின் மேற்பாகத்திலும் ஆகாஶம் வ்யாபித்துக்கொண்டிருப்பதுபோல, ஆத்மா ஸகலப்ராணிகளின் புறத்திலும் வ்யாபகனாயிருக்கிறானென்று ஶிவயோகி யறியவேண்டுமென்று முணர்த்துமிடம் விந்தாகாசம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உலகினி லெவர்க்கு மேலா யுயர்தரு மகல்வி சும்பை
யிலகுற விபுவென் றோரு மியல்பென மேலா மான்மா
வலகற விபுவென் றோர்க வாயவிவ் வுவமை கொண்டு
விலகறு பொருளே யேதான் விந்துவின் டலம தென்பர்.

(ப - ரை.) உலகினில் எவர்க்கும் மேலாய் உயர்தரும்—, அகல் விசும்பை - அகன்ற ஆகாசத்தை, இலகுற - விளங்க, விபு என்று ஓரும் இயல்பு என - விபுவென்றறிகிற இயற்கைபோல, மேல் ஆம் ஆன்மா—, அலகு அற - எல்லையற்ற, விபு என்று—, ஓர்க - அறியக்கடவாய், ஆய இ உவமைகொண்டு - உண்டாகிய இந்த வுபமானத்தினால், விலகு அறு - நீக்கமற்ற, பொருளே—, விந்து விண் தலம் என்பர் - விந்தாகாசத்தலமென்று சொல்லுவர் (அறிஞர்)—, எ - று.

(வி - ரை.) விபு - வ்யாபகம். உயர்தரும் - உயர்ந்த. அகல் விசும்பு - வினைத்தொகைநிலைத்தொடர். கொண்டு - மூன்றுருபதன் சொல்லுருபு. விண் - ஆகாஶம். (க)

யாவர்த மிடத்து மோர்காற் றிருப்பினு நிறைவா மாபோல்
யாவர்த மிடத்துந் தானே யிருப்பினும் விபுவா மான்மா
மேவுறு வன்னி யொன்றே யெங்கணும் விளங்கல் போலத்
தேவர்க டேவன் றானுங் கண்டிதந் தீர்ந்தோ னாவான்.

(ப - ரை.) யாவர்தம் இடத்தும்—, ஓர் காற்று இருப்பினும்—, நிறைவு ஆமாறு போல்—, யாவர்தம் இடத்தும் தானே இருப்பினும்—, ஆன்மா விபு ஆம்—, மேவுறு வன்னி யொன்றே - பொருந்திய நெருப்பொன்றே, எங்கணும் விளங்கல் போல—, தேவர்கள் தேவன்றானும்—, கண்டிதம் தீர்ந்தோன் ஆவான்—, எ - று.

(வி - ரை.) தேவர்கடேவன் - சிவபெருமான். கண்டிதம் தீர்ந்தோன் - அகண்ட பரிபூர்ணன். ஸகல ப்ராணிகளுக்கும் ப்ராணனுயிருக்கும் தன்மையை யடைந்த வாயு எவ்வாறு வ்யாபகனென்றும் ஏகனென்றும் சொல்லப்பட்டுளதோ, அவ்வாறு ஸகல ப்ராணிகளுள்ளும் அடைந்திருக்கிறவனுகிய நான் நான் என்று ப்ரத்யக்ஷமா யநுப விக்கும் ஆத்மாவும் வ்யாபகனுயிருக்கிறன்; பரிமிதம் செய்யக்கூடாத ஸ்வரூபமுள்ள அக்நியானது எவ்வாறு ஸூர்யன் மின்னல் படபாமுகம் காலாக்நி முதலிய ஸகல பொருள்களிலும் ஒன்ருய் விளங்குகின்றதோ, அவ்வாறு எல்லாவற்றுக்கும் ஆத்மா வாகிய ஶிவனும் பரிச்சேத மில்லாதவனு யிருக்கிறன் என்பதிதன் கருத்து. (உ)

தேகிக ளனைவ ருள்ளுஞ் சித்தமா கியகண் ணடி
சேகற விளங்கு மென்றும் விபுவெனுஞ் சிவன்ற ஞன்மா
வாயுட லதில்விம் பித்திட் டமர்குவன் மேலின் மேலா
மேகனிவ் வனைவர் கண்ணு மிருப்பினும் விபுவா மென்பர்.

(ப - ரை.) தேகிகள் அனைவர் உள்ளும்—, சித்தம் ஆகிய கண்ணடி—, சேகு அற விளங்கும்—, என்றும்—, விபு என்னும் சிவன்தான்—, ஆன்மாவாய் உடலில்—, விம்பித்திட்டு அமர்குவன்—, மேலின் மேல் ஆம் - மேலானபொருள்களில் மேலான பொருளாகிய, ஏகன் - அத்விதீயனுகிய சிவபெருமான், இவ்வனைவர் கண்ணும் இருப்பி னும்—, விபு ஆம் என்பர்—, எ - று.

(வி - ரை.) தேகிகள் - உடம்புடையோர்கள். சித்தம்-மனம். சேகு அற - எளிதாக. உடலதின் என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. அமர்குவன் - பொருந்துவன். எல்லா ப்ராணிகளி னுள்ளத்தில் சித்தமாகிய கண்ணடி விளங்குகிறது, வ்யாபகனுன ஶிவன் அந்த உடலின்கண் சித்தத்தில் ஆன்மாவாய்ப் பிரதி பிம்பிக்கின்றன், ஏகனுகவும் ஸ்வதந்த்ரனுகவும் பராத்பரனுகவுமிருக்கிற ஜ்ஞாநப்ரகாஶ ஸ்வரூபனுன ஶிவன் ஸகல ப்ராணிக ளிடத்திலு முள்ளவனுக விளங்குகிறவனு யிருப்பினும், வ்யாபகன் என்று வேதாந்தங்கள் கூறுகின்றன என்பதிதன் கருத்து. (ங)

செங்கதி ரொன்று தானே தேசுறு கிரணந் தன்ன
லெங்கணு நிறைதலுற்றே யிலங்குறு மதனைப்போல
மங்கல வடிவா மான்மா மல்குதன் சத்தி தன்ன
லெங்கணு மிடைந்தோ னுகி யிலங்குவ னென்பர் மேலோர்.

(ப - ரை.) செங்கதிர் ஒன்றுதானே—, தேசு உறு - ஒளிபொருந்திய, கிரணம் தன்னல்—, எங்கணும் நிறைதலுற்று—, இலங்குறும் - விளங்கும், அதனைப்போல—, மங்கல வடிவு ஆம் ஆன்மா—, மல்கு - நிறைந்த, தன் சத்திதன்னல்—, எங்கணும் - எவ்விடத்தும், மிடைந்தோன் ஆகி - வியாபித்தவனுகி, இலங்குவன் என்பர்—, மேலோர்—, எ - று.

(வி - ரை.) செங்கதிர் - சூரியன். மிடைதல் - நெருங்குதலுமாம். சத்தி - இச்சா க்ரியாஜ்ஞாநங்களாகிய ஶக்திபேதம். கிரணம் - காந்தி எனினுமாம். மங்கல வடிவு ஆம் - ஶிவஸ்வரூபனுகிய. (ச)

லிங்தாகாசத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் அஜாய நமஃ

# எண்பத்தோன்பதாவது

# (௯.) மகதாகாசத்தலம்.

[அதாவது - ப்ரஹ்மாண்ட பிண்டாண்டங்களை யடைந்திருக்கும் ஆகாஸம் எவ்வாறு பிந்நமாக வில்லையோ, அவ்வாறு ஆத்மாவைப் பார்க்கிலும் பரமாத்மா பிந்நமாயில்லை என்னும் ஜ்ஞாநமே மகதாகாசம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அண்டபிண் டத்தி லுற்ற வம்பரம் வேறா காமைக்
கண்டன மதனைப் போலக் கருதரு மிவனான் மாவி
லுண்டெனும் பரமான் மாவே றுறுவதின் றிதையு ணர்ந்து
கொண்டிடன் மகதா காசத் தலமெனக் குறிப்ப ரன்றே.

(ப - ரை.) அண்ட பிண்டத்தில் உற்ற - அண்டபிண்டங்களிற் பொருந்திய, அம்பரம் - ஆகாசம், வேறு ஆகாமை - வேறுபடாமையை, கண்டனம் - பார்த்தோம், அதனைப்போல—, கருது அரும் - நினைத்தற்கரிய, இவன்—, ஆன்மாவில் உண்டு என்னும் பரமான்மா—, வேறு உறுவது இன்று - வேறாகவுண்டாதலில்லை, இதை உணர்ந்துகொண்டிடல்—, மகதாகாசத்தலம் என-மஹாகாஸஸ்த்தலம் என்று, குறிப்பர்(மேலோர்)—, எ-று.

(வி - ரை.) உணர்ந்து கொண்டிடல் - ஒருசொல்லாய் அறிதல் எனப்பொருள் பட்டு நின்றது. அன்று ஏ - அசைகள். அண்டபிண்டம் - ப்ரஹ்மாண்ட பிண்டாண்டங்கள். வேறு ஆகாமை - பிந்நமின்றி ஏகமாயிருத்தல். வேறுறுவது இன்று - அபிந்நம். (க)

கடத்தினு மடத்தின் கண்ணுங் கலந்தவா காசம் வேறா
யடுத்திட லிலாதவாபோ லண்டபிண் டத்தின் கண்ணே
யெடுத்துரை செயுமான் மாவும் பின்னமன் றினைய மாற்றந்
தடுத்திட லரிய வேதந் தலையினுற் சுமக்கு மன்றே.

(ப - ரை.) கடத்தினும் - குடத்தின்கண்ணும், மடத்தின் கண்ணும்—, கலந்த - பொருந்திய, ஆகாசம்—, வேறு ஆய் அடுத்திடல் - பின்னமாய்ப் பொருந்துதல், இல்லாத ஆறு போல் - இல்லாத தன்மை போல, அண்ட பிண்டத்தின்கண்ணே—, எடுத்து உரைசெய்யும் ஆன்மாவும்—, பின்னம் அன்று—, இனைய மாற்றம் - இந்தச்சொல்லை, தடுத்திடல் அரிய வேதம்—, தலையினால் சுமக்கும்—, எ - று.

(வி - ரை.) கடத்தின்கண் கலந்த வாகாசம் - கடாகாசம். மடத்தின்கண் கலந்த வாகாசம் - மடாகாசம். பின்னம் - வேறு. வேதப்ரமாணத்தை யெல்லாரும் தடையின்றி யேற்றுக் கோடற் சிறப்புத் தோன்ற 'தடுத்திடலரிய வேதம்' என்றார். வேதம் தலையினாற் சுமக்கும் என்றது வேதாந்தத்தாற் (உபநிஷத்துக்களாற்) சுமக்கும் என்றபடி. (உ)

ஓங்கொளி யாகிக் கால மொப்புரை மனங்க டந்து
தீங்கறு சுவாநு பூதிப் பிரமாணஞ் செறிவுற் றியாவுந்
தாங்குறு நிலைமை சச்சி தாநந்தம் பரமா காச
மாங்கது சிவமி லிங்கம் பிரமமென் றறையா நிற்கும்.

(ப - ரை.) ஓங்கு ஒளி ஆகி - மிக்க வொளியாகி, காலம் ஒப்பு உரை மனம் கடந்து—, தீங்கு அறு சுவாநுபூதிப் பிரமாணம் செறிவுற்று—, யாவும் - எல்லாவற்றையும், தாங்

குறும் நிலைமை - தாங்குகின்ற நிலைமையே, சச்சிதாநந்தம்—, பரமாகாசம்—, ஆங்கது - அது, சிவம் இலிங்கம் பிரமம் என்றறையா நிற்கும்—, எ - று.

(வி - ரை.) ஒப்பு - உவமை. உரை - சொல். சுவாநுபூதி - ஸ்வாநுபவம். அறையா நிற்கும் - சொல்லப்பட்டு நிற்கும். ஸூர்யன் முதலிய ஜ்யோதிஸ்ஸுக்கு உதிக்குமிடமாயுள்ளதும், காலவரையறையைக் கடந்ததும், முப்பத்தாறு தத்துவங்களைக் கடந்ததும், உவமையில்லாததும், மனத்திற்கு விஷயமாகாததும், உருபகதிபாதிக்ரம ஸம்பந்தமிராததும், ஸ்வாநுபவமே ப்ரமாணமாய்க் கொண்டதும், எங்குமுள்ளதும், ஸச்சிதாநந்த ஸ்வரூபமாயுள்ளதும், பரமாகாஸ வடிவமாயுள்ளதுமான சிவம் என்னும் பெயரையுடைய பரப்ரஹ்மமானது லிங்கம் என்று சொல்லப்படும் என்பதிதன் கருத்து. (௩)

யோகிகண் மனம டங்கு மொருபரஞ் சோதி யாய்மால்
போகிய வறிவா நந்த பூரண வுண்மை யாகி
மோகமின் முனிவர் கூறு முதன்மையாம் பரமா காச
மாகன லிங்க மென்று வகுத்துரை செய்வர் மேலோர்.

(ப - ரை.) யோகிகள் - யோகிகளுடைய, மனம் அடங்கும் - மனம் லயித்தற்குரிய, ஒரு பரஞ்சோதியாய்—, மால் போகிய - மயக்கமொழிந்த, அறிவாநந்த பூரணவுண்மை யாகி—, மோகம் இல் - மோகமில்லாத, முனிவர் கூறும் - முனிவர் புகழ்ந்துரைக்கத் தக்க, முதன்மை ஆம் - தலைமைபெற்ற, பரமாகாசம்—, மா கனலிங்கம் என்று வகுத்து உரைசெய்வர் மேலோர்—, எ - று.

(வி-ரை.) பரஞ்சோதி - பேரொளி. அறிவாநந்த பூரணவுண்மை - ஸச்சிதாநந்தம். மா கனலிங்கம் - ஜ்யோதிர்மயமாகிய லிங்கம். (௪)

திரைநுரை கடல்வே றாகாச் செழுமல ரிலைகா யெல்லா
மரனில்வே றாகா வாபோல் வகுக்குமிவ் வுலகந் தானும்
பரனிலவே றவ தின்று பற்பல வுடுக்கள் வானில்
விரவல்போற் பரமா காச மேவியில் வுலகி லங்கும்.

(ப - ரை.) திரை - அலை, நுரை—, கடல் - கடலினின்றும், வேறு ஆகாவாறு போல்—, செழு மலர் இலை காய் எல்லாம்—, மரனில் - மரத்தினின்றும், வேறு ஆகாவாறு போல்—, வகுக்கும் - வகுக்கப்பட்ட, இ உலகந்தானும்—, பரனில் - (சிதாகாஸமாகிய) சிவத்தினின்றும், வேறுவது இன்று—, பற்பல உடுக்கள் வானில் விரவல் போல்—, இ உலகு—, பரமாகாசம் மேவி இலங்கும்—, எ - று.

(வி - ரை.) ஆறு ஆ எனத்தொகுத்தல் பெற்றது. மரன் - போலி. தான் - அசை. உலகம் - ப்ரபஞ்சமெல்லாம். வேறுவது - பின்னமாதல். உடுக்கள் - நக்ஷத்ரங்கள். வானில் - பூதாகாஸத்தில். விரவல் - பொருந்தல். மேவி - அடைந்து. உலகு - ப்ரஹ்மாண்டங்கள். இலங்கும் - விளங்கும். (௫)

நீங்கிய வுபாதி கொண்டு நிமலமாம் பரமா காச
மோங்குறு முலக மென்னு மோவியம் பலவுந் தோன்றத்
தாங்குறு பித்தி யாகித் தயங்குமென் றறிஞர் சொல்வர்
தீங்குறு புலக்கு றும்பு செற்றுயர் முனிவர் வேந்தே.

(ப - ரை.) தீங்கு உறு - தீமையைச்செய்கிற, புலக்குறும்பு செற்று - புலன்களாகிய குறும்பரை வென்று, உயர் - உயர்ந்த, முனிவர் வேந்தே—, நீங்கிய உபாதிகொண்டு உபாதி நீக்கத்தால், நிமலம் ஆம் - நிர்மலமாகிய, பரமாகாசம்—, ஓங்குறும் - மிக்கு

விளங்குகிற, உலகம் என்னும் - உலகமென்கிற, ஓவியம் பலவும் தோன்ற—, தாங்குறு - தாங்குகிற, பித்தி ஆகி - சுவராகி, தயங்கும் என்று - விளங்குமென்று, அறிஞர் சொல்வர்—, எ - று.

(வி - ரை.) ஓவியம் - சித்திரப்பாவை. குறும்பு - குறும்பர் (குறுநில மன்னர்), துர்ஜநர் எனினுமாம். (௬)

மகதாகாசத்தலம் - முற்றும்.

உ

ஓம் பாஶவிமோசகாய நமஃ

தொண்ணூறாவது

## (௯௦.) கிரியாப்பிரகாசத்தலம்.



[அதாவது - மஹாகாஶ ஸ்வரூபனான ஶிவயோகியே ஶாஸ்த்ரோக்தமாய் ஶிவ ஸ்வரூபத்தை யநுஸந்தாநம் செய்வதனால் கிரியாப்பிரகாசன் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

நிறைவுறு மதுவாய் ஞான காசமாய் நிகழ்சி வத்தி
னறைவுறு சொருபந் தன்னோ டநுசந்தா நத்தி னாலே
யுறுவினை யறுமி வன்றான் கிரியைமா வொளிய னென்ன
மறுவறு கலையு ணர்ந்தோர் வகுத்துரை செய்வ ரன்றே.

(ப - ரை.) நிறைவுறுமது ஆய் - நிறைந்ததாகி, ஞானகாசமாய்—, நிகழ் - விளங்குகிற, சிவத்தின் - சிவத்தினது, அறைவுறு - சொல்லப்பட்ட, சொருபந்தன்னோடு - ஸ்வரூபத்துடன், அநுசந்தாநத்தினாலே—, உறு - மிகுந்த, வினை அறும் - வினையொழிதற் குரிய, இவன் தான் - இவனே, மா - பெருமை பொருந்திய, கிரியை ஒளியன் என்ன - கிரியாப்பிரகாசனென்று, மறு அறு - குற்றமற்ற, கலை உணர்ந்தோர் - நூற்பொருளறிந்தவர், வகுத்து—, உரைசெய்வர் - சொல்லுவர், எ - று.

(வி - ரை.) நிறைவுறுமது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. மறுவறு கலை யென்றது சிவாகமங்களை. பரிபூர்ணனும் சிதாகாஶனுமாகிய ஶிவனை நான் என்று தானாக சிந்திக்கிறதனால் ஶிவயோகியை க்ரியாப்ரகாஶன் என்பதிதன் கருத்து. (௧)

மாசறு ஞான காய மயமதாய் நிறைவ தாகு
மீசன துருவி றந்த வொளியினின் மனம டங்குந்
தேசுடை யவன்ற னது திறல்வலிக் கிரியை யந்தப்
பாசமி லொளியே யாகப் பகர்ந்திடப் பட்டு நிற்கும்.

(ப - ரை.) மாசு அறும் - குற்றமற்ற, ஞானகாய மயமதாய் நிறைவது ஆகும் ஈசனதுரு—, (ஆகிய) இறந்த ஒளியினில் - பேரொளியில், மனம் அடங்கும் - மனமொடுங்குதற்குரிய, தேசு உடையவன் தனது - ஒளியுடைய யோகியினது, திறல் வலி - மிக்க வலியையுடைய, கிரியை - கிரியையானது, பாசம் இல் - பாசமற்ற, அந்த ஒளியே ஆக - சிவப்பிரகாசமாகவே, பகர்ந்திடப்பட்டு நிற்கும் - சொல்லப்பட்டு நிற்கும், எ - று.

(வி - ரை.) மாசு - ப்ரபஞ்சமாலிந்யம். மயம்-வடிவம். தனது என்பதில் அது ஆற னுருமையுருபு. (௨)

முழுமையு முணர்ந்தோ னாகி முழுவிறை யாகி யெங்கு
மொழிவற நிறைந்தோ னுவ னொருசிவ னவன்பாற் சென்றுற்
றழிதரு சிந்தை யானே யவன்றனி வடிவ மாகப்
பழுதற வொளிர்வ னென்று பகர்ந்தன ரறிஞ ரெல்லாம்.

(ப - ரை.) ஒரு சிவன் - ஒப்பற்ற சிவபிரான், முழுமையும் உணர்ந்தோனாகி—, முழு இறை ஆகி—, எங்கும் ஒழிவு அற நிறைந்தோன் ஆவன்—, அவன்பால் சென்று உற்று—, அழிதரு சிந்தையானே—, அவன் - அவனது, தனி வடிவம் ஆக—, பழுது அற - குற்றமற, ஒளிர்வன் என்று—, அறிஞர் எல்லாம் பகர்ந்தனர்—, எ - று.

(வி - ரை.) முழுமையு முணர்ந்தோன் - ஸர்வஜ்ஞன் (எல்லாமறிபவன்). முழு இறை - பெருந்தலைமை (எல்லாம் செய்பவன்). எங்கும் ஒழிவு அற நிறைந்தோன் - பரிபூர்ணன் (எங்குமுள்ளவன்). ஒழிவு அற - நீக்கமற. அழிதரு சிந்தையான் - லயித்த மனமுடையவன். ஒளிர்வன் - பிரகாசிப்பன். அவன் பால் சென்றுற்று அழிதரு சிந்தையான் - ஶிவை க்யாநுஸந்தாநஞ் செய்பவன். தனிவடிவம் - ஆற்றல் போன்ற ஆற்றலுடைமை. (௩)

இந்திய வழக்க மெல்லா மெய்தியு மேனோக் குற்ற
சிந்தையா லசல மாகுஞ் சிவத்தினைக் கண்டு வப்ப
னுந்துறு மறிஞ னுயர்ந்தகூ டத்தன் றன்னைப்
பந்தமில சிவமாய்க் கண்ட படிவத்தா லுவப்பன் யோகி.

(ப - ரை.) யோகி - யோகியானவன், இந்திய வழக்கம் எல்லாம் எய்தியும்—, மேல் நோக்கு உற்ற சிந்தையால் - ஊர்த்த்வத்ருஷ்டியால் (ஆத்மாகாரமாகிய மனத்தினால்), அசலம் ஆகும் - சலனமற்ற, சிவத்தினைக்கண்டு உவப்பன்—, உந்துறும் அறிஞனை உயர்ந்த கூடத்தன் தன்னை—, பந்தம் இல் சிவமாய்க்கண்ட படிவத்தால் உவப்பன்—,

(வி - ரை.) உந்துறும் அறிஞன் - மேலான அறிவினையுடையவன். இந்திய வழக்கம் - இந்த்ரிய வ்யாபாரம். எய்தல் - அடைதல். உவத்தல் - மகிழ்தல். பந்தம் - கட்டு. படிவம் - உருவம். நிர்விகாரனும், நிஷ்க்ரியனும், பேரறிவனும், குணம் கடந்தவனும், குணங்களுக்குப் பிந்தினவனுமாயிருத்தலே கூடஸ்த்த (ஶிவதத்வ) லக்ஷணம். (௪)

கிரியைக ளனைத்தும் வானிற் கிளர்ந்தகந் திருவ வூர்போற்
பரவடி வாயி னோன்பாற் பரந்துநின் றிலங்க லாலே
யுரவிய வறிஞ ரெல்லாங் கிரியைமா வொளிய தென்பர்
பொருவறு புகழ்ம லிந்த பொதியில்வீற் றிருக்கு மேலோய்.

(ப - ரை.) பொருவு அறு - ஒப்பற்ற, புகழ் மலிந்த - கீர்த்தி மிகுந்த, பொதியில் - பொதிய மலையில், வீற்றிருக்கும் மேலோய்—, கிரியைகள் அனைத்தும்—, வானில் - ஆகாயத்தில், கிளர்ந்த - விளங்குகிற, கந்தர்வவூர்போல் - கந்தர்வநகரம் போல, பரவடிவு ஆயினோன் பால் - பரஸ்வரூபமானவனிடத்தில், பரந்து நின்று இலங்கலாலே—, உரவிய - ஞானத்தையுடைய, அறிஞர் எல்லாம்—, மா - பெருமைபொருந்திய, கிரியைஒளியது - கிரியாப்பிரகாசம், என்பர்—, எ - று.

(வி - ரை.) பரந்து நிற்றல் - வ்யாபித்து நிற்றல். உரம் - ஞானம். பொருவறு புகழ் மலிந்த பொதியில் வீற்றிருக்கு மேலோய் என்ற விளி அகத்திய முனிவரைக் குறித்தது. (௫)

கிரியாப்பிரகாசத்தலம் - முற்றும்.

உ

ஓம் ம்ருடாய நம:

# தொண்ணூற்றொன்றாவது

## (கக.) பாவப்பிரகாசத்தலம்.



[அதாவது - ஸமுத்ரத்தில் பிறந்த அலை நுரை முதலியவைகளுக்கும் ஸமுத்ரத்திற்கும் பேதமில்லாதிருப்பது போலப் புத்தி முதலிய ஸமஸ்த பாவங்களுக்கும் அந்த சிவயோகியின் சைதந்யத்திற்கும் பேதமில்லை யாதலால் இது பாவப்பிரகாசம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தரங்கமா திகடாம் வேலை தன்னில்வே றுகா வாபோற்
பரந்துள புத்தி யாதி பாவங்க ளான்மா வில்வே
றிருந்தன வலவென் றோது மிதுபாவ வொளியா மென்பர்
புரங்கடந் தவன்றன் னூலின் பொருடெரிந் துணர்ந்து ளோரே.

(ப - ரை.) புரம் - முப்புரத்தை, கடந்தவன்தன் நூலின் - வென்றவனாகிய சிவபெருமானது நூல்களின், பொருள் - அர்த்தவிசேஷத்தை, தெரிந்து உணர்ந்துள்ளோர்—, தரங்கம் ஆதிகள் - அலைமுதலானவைகள், வேலை தன்னில் - கடலினின்றும், வேறு ஆகா ஆறு போல் - வேறாகாத விதம் போல், பரந்துள்ள - விரிந்துள்ள, புத்தி ஆதி பாவங்கள் - புத்தி முதலாகிய பாவனைகள், ஆன்மாவில் - ஆத்மாவினின்றும், வேறு - வேறாக, இருந்தன அல்ல என்று —, ஓதும் - சொல்லப்படுகிற, இது—, பாவ ஒளி ஆம் என்பர் - பாவப்பிரகாசமென்று சொல்லுவர், எ - று.

(வி - ரை.) கடத்தல் - வெல்லுதல் (எரித்தல்). புரங்கடந்தவன்றன் னூல் என்றது சிவாகமத்தை. (க)

சகமெலாஞ் சிவமே தானுந் தற்சிவ மேயென் றுன்னும்
பகவிலா யோகி தான்வெம் பவத்தினல் வருத்த மெய்தா
னிகரிலாச் சிவபா வந்தா னிலைத்திடு மேல வற்குத்
திகழ்வுறு பாவ மெல்லாஞ் சிவமய மாகு மன்றே.

(ப - ரை.) சகம் எல்லாம் சிவமே—, தானும் தற்சிவமே—, என்று உன்னும் - என்று பாவிக்கிற, பகவு இல்லா - வேறுபடாத, யோகி—, வெம் பவத்தினல் வருத்தம் எய்தான்—, நிகர் இல்லா—, சிவபாவம் - சிவபாவனை, நிலைத்திடுமேல் - நிலைத்திடுமாயின், அவற்கு - அவனுக்கு, திகழ்வுறு - விளங்குகிற, பாவம் எல்லாம்—, சிவமயம் ஆகும்—, எ - று.

(வி - ரை.) தற்சிவமே - அந்தச் சிவமே. வெம் பவம் - கொடிய பிறவி. சிவமயம் - சிவஸ்வரூபம். பகவு - கர்மஸம்பந்த மெனினுமாம். (உ)

வேறறு சிவபா வத்தால் விலக்குறு வினைக ளுள்ளோன்
மாறறு சிவமே யன்றி மற்றொரு பொருளுங் காணன்
பாறிய மலமு டைத்தன் சொரூபாறு பவிபு லன்க
ளேறிய விடங்க ளெல்லா மிருஞ்சிவ மயமே யாகும்.

(ப - ரை.) வேறு அறு சிவ பாவத்தால்—, விலக்குறு - ஒழிக்கப்பட்ட, வினைகள் உள்ளோன்—, மாறு அறு சிவமே அன்றி மற்றொரு பொருளும் காணன்—, பாறிய மலம்

உடை - மலம் ஓட்டெடுக்கப்பெற்ற, தன் - தனது, சொரூபாநுபவி - ஸ்வரூபாநுபவமுள்ளவனது, புலன்கள் ஏறிய இடங்கள் எல்லாம்—, இருஞ் சிவமயமே ஆகும் - பெரிய சிவரூபமே யாவன், எ - று.

(வி - ரை.) வேறு அறு - அத்விதீயமாகிய. விலக்குறு வினைகளுள்ளோன் - வினைகளை யொழித்தவன். சிவமே - சிவத்தையே. பொருளும் - பொருளையும். மலம் - அஜ்ஞாநபந்தம். பாறல் - ஓடல். சொரூபாநுபவி - கேவலம் ஆத்மாவை யநுபவிக்கின்றவன் எனினுமாம். இடங்கள் என்றது வஸ்துக்களை. (௩)

விருப்பொடு வெறுப்பு மேவும் பாவனை விளையா நிற்கு
முருப்பவ மவையொ டுங்கும் பாவனை சிவமே நாட்டு
மிருட்படா மிரவி தன்னை யெய்திடா ததுபோற் பாவந்
தரிப்புட னிலகு மான்மாத் தனையுறா தவித்தை யன்றே.

(ப - ரை.) விருப்பொடு வெறுப்பு மேவும் பாவனை—, உரு பவம் விளையா நிற்கும் - உருவோடு கூடிய பிறவியை யுண்டாக்கும், அவை ஒடுங்கும் பாவனை சிவமே நாட்டும்—, இருள் படாம் - இருட் கூட்டம், இரவி தன்னை எய்திடாது—, அதுபோல்—, பாவம் தரிப்புடன் இலகும் - பாவனையைத் தரித்து (நித்யம் ஸ்வயம் ப்ரகாஶமாய்) விளங்குகிற, ஆன்மா தன்னை - ஆத்மாவை, அவித்தை உறாது - அஜ்ஞாநம் அடையாது, எ - று.

(வி - ரை.) விருப்பொடு வெறுப்பு - ராகத்வேஷங்கள். நாட்டல் - நிலைபெறுத்தல். இரவி - சூரியன். (௪)

பாவப்பிரகாசத்தலம் - முற்றும்.

உ

ஓம் பஶுபதயே நமஃ.

தொண்ணூற்றிரண்டாவது

## (௯௨.) ஞானப்பிரகாசத்தலம்.

—oo❖oo—

[அதாவது-அங்கலிங்கங்களின் முக்யார்த்தம் தெரியாதிருக்கையில் அவைகள் கார்ய காரணங்களென்னும் உபாதிகளைக் கூடியிருக்கும் ஜீவேஶ்வர ஸம்ஜ்ஞையுள்ளவைகளாயிருக்கின்றன. உபாதிரூபத்தினு லுண்டாயிருந்த அந்த அங்கம் லிங்கம் என்னும் ஜ்ஞாநத்வயத்தை ஸமாநமான ஸமரஸ பாவத்தினால் ஸம்யோகம் செய்வதே பாவப்ரகாஶ ஸம்பந்நனை ஶிவயோகிக்கு ஞானப்பிரகாசம் என்பது.]

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முக்கியப் பொருளிற் கூட்ட முளைத்திடு மாசெ யான்மன்
மிக்குறு மிலக்க ணூர்த்த மேவுறு நிமலன் றன்னாற்
புக்குறு மந்த ஞானம் பொருந்துத றனைய வற்குத்
தக்கவர் மொழியு ஞானப் பிரகாசந் தானென் றோர்வாய்.

(ப - ரை.) முக்கியப்பொருளில்—, கூட்டம் - கூடுதலை, முளைத்திடுமாறு செய்யான் - உண்டாகும்படி செய்யாதவனாகி, மன் மிக்குறும் - நிலைபெற்ற மிகுதியாகிய, இலக்கணூர்த்தம் - லக்ஷணார்த்தத்தை, மேவுறும் - பொருந்துகிற, நிமலன் தன்னால்-நிர்மலனாகிய சிவயோகியால், புக்குறும் - அடையப்படுதற்குரிய, அந்த ஞானம் பொருந்துதல் தனை - அந்த ஞானத்தைப் பெறுதலை, அவற்கு - அவனுக்கு, தக்கவர் மொழியும் - மேலோர் சொல்லுகிற, ஞானப்பிரகாசம் என்று—, ஓர்வாய் - அறியக்கடவை, எ - று.

(வி - ரை.) முக்கியப்பொருளில் - முக்யார்த்தமாகிய வாச்யார்த்தத்தில். மூளைத்திடுமாறு எனற்பாலது மூளைத்திடுமா என ஈறு தொகுத்தது. முக்யார்த்தமாகிய வாச்யார்த்தத்தில் பொருத்தமின்மை யேற்பட்ட லக்ஷணாவ்ருத்தியைப் பற்றுதலால் அந்த ப்ரஹ்மசைதந்யைக்யம் யாதொன்றுளதோ, அது ஜ்ஞாநப்ரகாஶ மென்பதிதன் கருத்து. (௧)

முத்தனுக் கந்த ஞான சம்பந்த முறைமை கூறின்
வைத்திடு மியல்பான் ஞேய மிலாமையாம் வகுத்து நின்ற
மெத்துறு முபாதி யோடு மேவிநிற் கின்ற ஞான
மித்தலை யென்றும் பேத மிறந்திடா தென்பர் நல்லோர்.

(ப - ரை.) முத்தனுக்கு—, அந்த ஞான சம்பந்த முறைமை கூறின்—, 'வைத்திடும் இயல்பால் - வைக்கப்பட்ட ஸ்வபாவத்தால், ஞேயம் இல்லாமை ஆம் - ஞேயமில்லா திருத்தலேயாம், வகுத்துநின்ற - வகுக்கப்பட்டிருக்கிற, மெத்துறும் உபாதியோடு—, மேவிநிற்கின்ற ஞானம்—, இத்தலை-இவ்வுலகில், என்றும் பேதம் இறந்திடாது என்பர்—, நல்லோர்—, எ - று.

(வி - ரை.) சம்பந்தம் - தொடர்பு. பேதம் - வேற்றுமை. இறந்திடாது - ஒழியாது. அஜ்ஞாநம் நீங்கினவனுக்கு ஜ்ஞாநஸம்பந்தமானது ஸ்வபாவத்தால் ஜ்ஞேயப்பொருளில்லாமற் போதலாம், உபாதியோடு கூடிய ஜ்ஞாநமானது பேதத்தோடு கூடியிருக்கும், அதாவது முக்தனான ஶிவயோகிக்குத் தன்னினும் வேறாயறியவேண்டிய வஸ்து மற்றொன்றில்லை, அந்த பரமுக்தனான ஶிவயோகிக்கு ஸோபாதிக ஜ்ஞாநமானது (அறிந்துகொள்வது வேறொன்றுண்டென்பது) இல்லாதிருக்கும் நிருபாதிக ஜ்ஞாநமே லிங்காங்க ஸாமரஸ்ய ஜ்ஞாந மென்பதிதன் கருத்து. (௨)

பொருளுறு பரிச்சே தந்தான் புகன்றிடு ஞான மாகு
மருளறும் பரிச்சே தம்பின் வரும்பர மான்மா வின்க
ணுரைசெயு ஞான மில்லை யுணர்விற்கு விடய மல்லாப்
பரசிவ னிடத்த யிக்கம் பண்ணலே ஞான மாகும்.

(ப - ரை.) பொருள் உறு - வஸ்துவின்கண் உள்ள, பரிச்சேதந்தான் - பரிச்சேதமே, புகன்றிடும் - சொல்லப்பட்ட, ஞானம் ஆகும்—, மருள் அறும் - மருட்சியற்ற, பரிச்சேதம் - பரிச்சேதமானது, பின்வரும் - பின்னே உண்டாகும், பரமான்மாவின்கண் - பரமாத்மாவினிடத்தில், உரை செயும்-சொல்லப்பட்ட, ஞானம் இல்லை—, உணர்விற்கு- அறிவுக்கு, விடயம் அல்லா - விஷயமாகாத, பரசிவனிடத்து அயிக்கம் பண்ணலே—, ஞானம் ஆகும்—, எ - று.

(வி - ரை.) விடயமல்லாமை - கோசரியாமை. அயிக்கம் - ஏகீபாவம். ஏகாரம் - தேற்றம். பரிச்சேதம் - வரையறுத்தல். மருள் அறும் பரிச்சேதம் - அபரிச்சேதம். ஜ்ஞேயமாகிய பொருளை வரையறுத்தலே ஜ்ஞாநம், அபரிச்சேதமாகிய பரப்ரஹ்மத்தினிடத்தில் ஜ்ஞாநத்திற்கு ஸம்பவமில்லை, ஜ்ஞாநத்திற்கு விஷயமல்லாததும், ஜ்ஞாநாநந்த ஸ்வரூபமுமாகிய ஶிவமென்னும் தத்வத்தோடு தான் அபிந்நன் என்று ஐக்யாநுஸந்தாநம் செய்வதே ஜ்ஞாநம் என்று சொல்லப்படும் என்பதிதன் கருத்து. (௩)

உலகொரு மயமா யின்ப வுண்மையா யபரிச் சேத
நலமலி பிரம மென்னு ஞானமே பிரம ஞான
மலிசக வுபாதி நீங்கி மலர்வுறு பிரம ஞான
மிலகுறி னறிவா மெங்கும் காண்பதொன் றில்லை வேறு.

(ப - ரை.) உலகு - உலகமே, ஒரு மயம் ஆய் - ஒரு வடிவாகியும், இன்ப வுண்மை, ஆய் - ஆநந்த ஸத்ரூபங்களாகியும், அபரிச்சேதம் நலம் மலி - அபரிச்சேதமாகிய நன்மை மிகுந்திருக்கிற, பிரமம் என்னும் - பிரமமென்கிற, ஞானமே—, பிரமஞானம்—, மலி - மிகுந்த, சகவுபாதி நீங்கி—, மலர்வுறு - விரிகின்ற, பிரமஞானம்—, இலகுறின் - விளங்கி னல், எங்கும் - எவ்விடத்தும், அறிவு ஆம் - ஞானமேயாகும், வேறு காண்பது - அதை விட வேருகக்காண்பது, ஒன்று இல்லை - ஒரு பொருளுமில்லை, எ - று.

(வி - ரை.) பரிச்சேதந்தான் என்பதில் தான் தேற்றம். மலிதல்-மிகுதல். சகவுபாதி-ப்ரபஞ்சவாஸனை. ஜகஸ்வரூபமும் ஆநந்தஸ்வரூபமும் ஸத்தைஸ்வரூபமும் பரிச்சேதமில் லாததும் ப்ரஹ்மலக்ஷணம் என்னும் ஜ்ஞாநமானது ப்ரஹ்மஜ்ஞாநமாம், ப்ரபஞ்சவுபாதி யற்றதாகிய ப்ரஹ்மஜ்ஞாந முண்டாகவே எல்லாம் ப்ரஹ்மஸ்வரூபமாய்த் தோன்று கின்றது, அதற்கு அந்யமாக யாதும் தோன்றுவதே யில்லை, அதாவது ப்ரபஞ்ச பேத ரஹிதமான ப்ரஹ்மஜ்ஞாநம் உதயமாகவும் ஸகல ஜகத்தும் ஜ்ஞாநஶக்தி மயமாய்த் தோன்றும், ஶிவத்திற்கும் ஶக்திக்கும் பேதமில்லாதிருப்பதனுல் ஶிவமயமாகியே தோன்றும் என்பதிதன் கருத்து. (௪)

முத்திகா ரணமா மத்து விதஞான முற்றி னுனுக்
கெய்த்திடும் பவமே யில்லை யெங்கணு நிறைந்து நின்ற
நித்தியா நந்த ஞான நிட்கள சிவத்தொ டுங்குஞ்
சித்தனு மியோகி பேதந் தீர்ந்தொரு தானே யாகும்.

(ப - ரை.) முத்தி காரணம் ஆம் - மோக்ஷத்துக்குக் காரணமாகிய, அத்துவித ஞானம் முற்றினுனுக்கு - அத்வைதஜ்ஞாநம் முதிர்ந்தவனுக்கு, எய்த்திடும் - மெலிதற்குக் காரணமாகிய, பவமே இல்லை—, எங்கணும் நிறைந்து நின்ற—, நித்தியாநந்த ஞான நிட்கள சிவத்து—, ஒடுங்கும்-ஒடுங்குகிற, சித்தன் ஆம் - மனமுடையவனுகிய, யோகி— பேதம் தீர்ந்து - வேற்றுமை நீங்கி, ஒரு தானே ஆகும் - ஒப்பற்றதானேயாவன், எ - று.

(வி - ரை.) காரணம் - ஹேது. முற்றல் - முதிர்தல் (மிகுதல்). ஒருதானே ஆகும் - கேவலம் தான் அபரோக்ஷமாய் விளங்குகின்றுன். (௫)

ஞானப்பிரகாசத்தலம் - முற்றும்.

இவ்விதமாய் தீக்ஷாபாதோதகம், ஶிக்ஷாபாதோதகம், ஜ்ஞாநபாதோதகம், க்ரியாநிஷ்பத்தி, பாவநிஷ்பத்தி, ஜ்ஞாநநிஷ்பத்தி, பிண்டாகாஶம், பிந்த்வாகாஶம், மஹாகாஶம், க்ரியாப்ரகாஶம், பாவப்ரகாஶம், ஜ்ஞாந ப்ரகாஶம் என்னும் பன்னிரண்டு ஸ்த்தலங்களில் கூறிய தாமங்க ளுடனே கூடியிருத்தலால் நிஷ்களஶிவத்தில் மனம் லயி த்து அபேதமில்லாதவனும், அபரோக்ஷமாய் விளங் குகின்றவனும், அங்கஸ்த்தலத்து ஐந்தாமவனு மான சரணனே ப்ரஸாதலிங்க சரணுர்த்தி என்று அறியப்பட்டான்.

௫ - வது. பிரசாதலிங்கத்தலம் - முற்றிற்று.

## ௪ - வது. மஹாலிங்கஸ்த்தலம்.

—∘∘◇∘∘—

[அதாவது - ஸாந்த்யாதீதோத்தரகலா ஸமேதமாய்ச் சிச்சக்தியுடன் கூடி மஹா ஸாதாக்யத்தைப் பொருந்தி பாவகம்யமா யிருத்தல் என்பது.]

### (அயிக்கியனுக்குச் சேர்ந்த உட்பிரிவுகள்.)

கலிநிலைத்துறை.

இலங்க வோதினை யச்சர ணத்தல மெய்துந்
தலங்க ளியாவையு மினியயிக் கத்தலஞ் சார்ந்த
நலங்கு லாந்தல பேதமு மெனக்குநீ நவில்வாய்
கலங்கி லாவுளத் தருளினாற் கணங்கணா யகனே.

(ப - ரை.) கலங்கு இல்லா - கலங்குதலில்லாத, உள்ளத்து அருளினால் - திருவுளத் தருளால், கணங்கள் நாயகனே - கணநாதனே, அ - அந்த, சரணத்தலம் எய்தும் - சரணத்தலத்தைச் சேர்ந்த, தலங்கள் யாவையும் - தலங்களெல்லாவற்றையும், இலங்க ஓதினை - விளங்கும்படி சொல்லியருளினை, இனி—, அயிக்கத்தலம் சார்ந்த—, நலம் குலாம் - நன்மை பொருந்திய, தலபேதமும் - தலபேதத்தையும், நீ எனக்கு நவில்வாய்—, எ - று.

(வி - ரை.) கலங்கு - முதனிலைத் தொழிற்பெயர். கணங்கள் நாயகனே யென்றது இரேணுகரை. நவிலல் - சொல்லல். (க)

சாத மேவருஞ் சுவிகிரு தப்பிர சாத
மாதி ஞானசூ னியமுடி வாகிய வொன்பான் *
பேத மாகிய தலங்களை யயிக்கியன் பெறுதற்
கோது வாமுறை யினிலவை யகத்திய வுணர்வாய்.

(ப - ரை.) அகத்திய - அகத்தியமுனிவனே, சாதம் மேவு அரும் - பிறவியுண்டாத லில்லாத, சுவிகிருதப்பிரசாதம் ஆதி - சுவிகிருதப்பிரசாத முதலாகி, ஞானசூனியம் முடிவாகிய—, ஒன்பான் பேதம் ஆகிய தலங்களை—, அயிக்கியன் பெறுதற்கு—, முறையினில் ஓதுவாம்—, அவை - அவற்றை, உணர்வாய் - அறியக்கடவை, எ - று.

(வி - ரை.) சாதம் ஜாதம் என்னும் வடசொற்றிபு. அருமை ஈண்டின்மை குறித்து நின்றது "தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க்கல்லால் - மனக்கவலை மாற்றலரிது" என்புழிப்போல. சுவிகிருதப்பிரசாதமாதி ஞானசூனிய முடிவாகிய ஒன்பது - சுவிகிருதப்பிரசாதத்தலம், சிட்டோதநத்தலம், சராசரலயத்தலம், பாண்டத்தலம், பாசநத்தலம், அங்கலேபத்தலம், சுபராஞ்சத்தலம், பாவாபாவலயத்தலம், ஞானசூனியத் தலம் என்பனவாம். (உ)

---

* **மஹாலிங்க ஷட் பக்தர்கள்.**— மஹாலிங்கமோஹி, மஹாலிங்கபக்தன், மஹாலிங்க பூஜகன், மஹாலிங்கவீரன், மஹாலிங்கப்ரஸாதி, மஹாலிங்கப்ராணி என அறுவகைப்படுவோர் கள். இவர்களில, உலகவ்ருத்தாந்தத்தை நினையாதவனே மஹாலிங்கமோஹி, பூர்வ பக்த்யாதி யநுஸந்தாந மில்லாதவனே மஹாலிங்கபக்தன், அஜ்ஞாநிகளுடன் ஸங்கஸம்பாஷணைக ளைச் செய்யாதவனே மஹாலிங்கபூஜகன், உத்பத்தி ஸ்த்திதி லயங்களுக்குச் சிந்திக்கா தவனே மஹாலிங்க வீரன், பந்தி போஜநத்தை அங்கிகரிக்காதவனே மஹாலிங்கப்ரஸாதி, பாஹ்யார்ச்சநார்ப்பணங்களாதிகளைச் செய்யாமல் அந்தரங்க க்ரியாநிஷ்டனே மஹா லிங்கப்ராணி.

**த்ரிவித மஹாலிங்கம்:**— பிண்டஜம், அண்டஜம், பிந்த்வாகாஸம் என மூவகைப்படும். இவைகளில், தேஹமே தேவாலயம் ஆத்மாவே லிங்கம் என்னும் நிஸ்சயமே பிண்டஜமாம், பூமியே பீடம் ஆகாஸமே லிங்கம் என்னும் விகல்பரஹித பாவனையே அண்டஜமாம், ஆகா ஸமே தன்னுடன் தன்னுடனே ஆகாஸம் என்னும் அந்யோந்ய வ்யாப்த்யநுஸந்தாநமே பிந்த்வாகாஸமாம்.

உ
ஓம் தேவாய நமஃ
தொண்ணூற்றுமூன்றாவது
## (௧) சுவிகிருதப்பிரசாதத்தலம்.

[அதாவது-ஜ்ஞாநப்ரகாஶ ஸம்பந்நனை ஶிவயோகியினிடத்தில் அங்கலிங்க ரூபமான ஜீவேஶ்வர வியோகரூபமான முக்யார்த்தமும், அவியோகரூபமான லக்ஷ்ணார்த்தமும் ஆகிய பேதம் இல்லாமல் அபரோக்ஷ ஜ்ஞாநமுள்ளவனாய் ஜ்ஞாநப்ரகாஶத்தை ஸ்வீகரிப்பதே சுவிகிருதப்பிரசாதம் என்பது.]

கலிநிலைத்துறை.

முக்கி யார்த்தமு மிலக்க ணார்த்தமு மிலைமொழியிற்
றக்க பேரறி வுருவமா மவற்கவன் றனக்கு
வைக்கு மோர்தடை யிலாமையான் மகிழ்பிர சாதந்
துய்க்கு மாறுகொண் டிடப்படு மெனமறை சொல்லும்.

(ப - ரை.) மொழியின் - சொல்லுமிடத்து, தக்க - தகுதியாகிய, பேர்அறிவு உருவம் ஆம் அவற்கு - சித்ஸ்வரூபனுக்கு, முக்கியார்த்தமும் இலக்கணார்த்தமும் இல்லை—, அவன் தனக்கு - அவனுக்கு, வைக்கும் - அமைத்து வைக்கப்பட்ட, ஓர்தடை இல்லாமையால்—, மகிழ் - மகிழ்தற்குரிய, பிரசாதம் - பிரசாதத்தை, துய்க்குமாறு - நுகர்தற்குரிய நெறி, கொண்டிடப்படும் - கொள்ளப்படும், என - என்று, மறை சொல்லும் - வேதம் சொல்லா நிற்கும், எ - று.

(வி - ரை.) அறிவுருவம் - ஞானவடிவு. துய்த்தல் - உண்டல். (௧)

மாது ருப்பிர மேயமொண் பிரமாண வழக்கிற்
பேத மற்றுயர் சிந்மய மாக்குறப் பெற்றே
யேத மற்றிடு யோகிதன் சொரூபமுற் றிருப்பன்
போத மற்றவத் துவிதனைப் பொருந்துமோ பந்தம்.

(ப - ரை.) மாதுரு பிரமேயம் ஒள் பிரமாணம் வழக்கில்—, பேதம் அற்று—, உயர் சிந்மயம் ஆக்குறப்பெற்று—, ஏதம் அற்றிடு யோகி—, தன் சொரூபம் உற்று இருப்பன் - தன் ஸ்வரூபத்தை யடைத்திருப்பன், போதம் அற்ற - தற்போதமற்ற, அத்துவிதனை- அத்வைத பாவமுடையவனை, பந்தம் பொருந்துமோ—, எ - று.

(வி - ரை.) சிந்மயம் - சித்ரூபம். ஏதம் - குற்றம். பந்தம் - பிறவிப்பிணிப்பு. மாதுரு பிரமேயம் பிரமாணம் - மாதா மேயம் மானம் என்னும் த்ரிபுடி. ஶிவாத்வைத ஜ்ஞாநத்தினால் அங்கலிங்கரூபமான ஜீவேஶ்வரர்களின் பேதத்தை நாஶப்படுத்தி, அபரோக்ஷஜ்ஞாந ப்ரகாஶமுள்ளவனா யிருக்கும் ஶிவயோகி பஞ்சக்லேஶங்களின் பந்தத்திற்குட் படுவதில்லை என்பதிதன் கருத்து. (உ)

போத மாகிய சிவனிடைப் பொருந்துமிவ் வுலக
மியாது மாரழற் படுவன போற்சிவ மேயாஞ்
சோதி யாஞ்சிவங் கண்டிடின் மண்முதற் சொல்லும்
பூத மோடுமற் றுள்ளவும் பொருந்திநின் றிலங்கா.

(ப - ரை.) போதம் ஆகிய - அறிவுருவாகிய, சிவனிடை - சிவனிடத்தில், பொருந்தும் - பொருந்துகிற, இ உலகம் யாதும் - இந்த வுலகமெல்லாம், ஆர் அழல் - நிறைந்த நெருப்பினிடத்தில், படுவன போல் - சேர்வனவாகிய விறகு முதலியன போல், சிவமே

ஆம்—, சோதி ஆம் சிவம் கண்டிடின்—, மண் முதல் சொல்லும் - மண்முதலாகச் சொல்லப்படுகிற, பூதமோடு - பஞ்சபூதங்களோடு, மற்றுள்ளவும் - மற்றுமுள்ளனவும், பொருந்தி நின்று இலங்கா - பொருந்தி நின்று விளங்கமாட்டா, எ - று.

(வி - ரை.) நெருப்பிடைப்படும் பொருள்களெல்லாம் அந்த நெருப்பினிடத்தே யொடுங்குதல் போல, சிவத்திடைப்படும் பொருள்களெல்லாம் அந்தச் சிவமயமாய் அதனிடத்தே யொடுங்குமென்பதிதன் கருத்து. நெருப்புக்குச் சேர்ந்தாரைக் கொல்லி யென்னும் பெயர் வருதற்காரணமு மிதுவே, "சினமென்னுஞ் சேர்ந்தாரைக்கொல்லி" என்றார் மேலோரும். (௩)

சோதி லிங்கநின் றகத்தினிற் சுடர்வுற யோகி
பூத மாதிய தத்துவங் கண்டவை பொருந்தான்
போத வாரழ லிடைப்புல னியாவையும் போக்கித்
தீதி லாமனத் துவகைபெற் றிடுஞ்சிவ யோகி.

(ப - ரை.) சிவயோகி - சிவயோகியானவன், அகத்தினில் - மனத்தில், சோதிலிங்கம் நின்று - ஒளியையுடைய லிங்கமானது நிலைபெற்றிருந்து, சுடர்வுற - பிரகாசித்தலால், பூதம் ஆதிய - பூதமுதலிய, தத்துவம் கண்டு - தத்துவங்களைக்கண்டு, அவை - அவற்றை, பொருந்தான் - சேரான், சிவயோகி - சிவயோகியானவன், ஆர் - நிறைந்த, போதம் - ஞானமாகிய, அழல் இடை - நெருப்பினிடத்தில், புலன் யாவையும் போக்கி - விடயங்களெல்லாவற்றையும் இட்டு (ஹோமம்செய்து), தீது இல்லா - தீமையில்லாத, மனத்து - மனத்தில், உவகை பெற்றிடும் - மகிழ்ச்சி யடைந்திருப்பன், எ - று.

(வி - ரை.) அகம் - மனமாகிய எட்டிதழ்களோடும் கூடிய ஹ்ருதயகமலம். சோதி லிங்கம் - ஒளியுருவாகியலிங்கம் (மஹாலிங்கம்). சுடர்வுற - காரணப்பொருட்டாகிய வினையெச்சம். புலன் - ஶப்தாதி விஷயங்கள். போக்கி தீதிலா என்றதனால் போக்கா மைக்கு முன்னர்த் தீதோடிருந்தமை பெறுதும். போக்கி உவகைபெற்றிடும் என்றமை யான் போக்காதிருந்துழித் துன்பம் பெற்றிருந்தனன் என்பதும் போதரும். ஹ்ருதய கமலத்தில் எப்போதும மஹாலிங்கம் ப்ரகாஶித்துக்கொண்டிருக்கவும், அந்த மஹாலிங் கத்தில் ஸகல தத்வங்களை லீனமாக்கியிருக்கும் ஶிவயோகி சரீரம் இந்த்ரியம் உலகம் முதலான முப்பத்தாறு தத்வங்களினுல் லிப்தனுதலில்லை என்பதிதன் கருத்து. (௪)

நவையில் யோகிதான் சச்சிதா நந்தமாய் நண்ணுஞ்
சிவனில் மேவுற விடயங்கள் சமர்ப்பணஞ் செய்தே
யவனி லாம்பிர சாதமுண் குவனென வறிவாய்
தவமெ லாமொரு வடிவுகொண் டனையமா தவனே.

(ப - ரை.) தவம் எல்லாம் - எல்லாத் தவங்களும், ஒரு வடிவு கொண்டனைய - ஓருருப் பெற்றாற் போன்ற, மாதவனே - பெருந்தவத்தினையுடைய அகத்திய முனிவனே, நவை இல் - குற்றமில்லாத, யோகி - (சிவ) யோகியானவன், சச்சிதாநந்தம் ஆய் நண்ணும் - சச்சிதாநந்த ஸ்வரூபமாய் விளங்குகிற, சிவனில் - சிவனிடத்தில், மேவுற - பொருந்த, விடயங்கள் - விஷயங்களை, சமர்ப்பணம் செய்து - ஸமர்ப்பித்து, அவன் - அந்தச் சிவனது, நிலாம் - விளங்குகிற, பிரசாதம் - ப்ரஸாதத்தை, உண்குவன் என - ஸ்வீக ரிப்பானென்று, அறிவாய் - அறியக்கடவை, எ - று.

(வி - ரை.) கொண்டாலனைய எனற்பாலது கொண்டனையவென விகாரமாயிற்று. நிலாம் நிலாவும் என்பதன் விகாரம். சச்சிதாநந்தமாய் நண்ணும் சிவனில் - ஸச்சிதாநந்த ஸமுத்ரமாகிய தனது ஸ்வரூபமான ஶிவனிடத்தில் எனினுமாம். (௫)

சுவிகிருதப்பிரசாதத்தலம் - முற்றும்.

உ

ஓம் மஹாதேவாய நமஃ

## (உ.) சிட்டோதநத்தலம்.

[அதாவது - ஜ்ஞாநப்ரஸாதத்தை ஸ்வீகரித்த பிவயோகி மாயா தத்வமாகிய ஸகல பதார்த்த ஸமூஹத்தை ஸ்வஸ்வரூபத்தினால் க்ரஹித்து ஸுகமாயிருப்பதே சிட்டோதநம் என்பது.]

கலிநிலைத்துறை.

மாயை யாதனிலை யாவர்க்குந் தோன்றியே மறையு
மாய மாயைதா னறிவுரு வாகிய வவற்குத்
தூய ராற்சொல் சிட்டோதநப் பெயர்பெறுந் தொன்மை
மூய மாமல விருளற முனிவுறு முனியே.

(ப - ரை.) தொன்மை - பழமையாகவே, மூய - சூழ்ந்திருக்கிற, மா - பெரிய, மலம் இருள் அற - மலவிருட்டொழியும்படி, முனிவுறும் - (அதனைக்) கோபித்த, முனியே - அகத்திய முனிவனே, மாயை - மாயையென்பது, யாது - எதுவோ, அது—, யாவர்க்கும் - யாவரிடத்தும், தோன்றியே மறையும்—, ஆய மாயைதான் - அந்த மாயையே, அறிவுரு ஆகிய - ஞானவடிவாகிய, அவற்கு - அவனுக்கு, தூயரால் - சுத்தாத்மாக்களாகிய பெரியோர்களால், சொல் - சொல்லப்பட்ட, சிட்டோதநப் பெயர் பெறும் - சிட்டோதந நாமம் பெறும், எ - று.

(வி - ரை.) முனிவுறல் - ஒருசொல், இதற்கு வேறலெனப் பொருள் கோடலுமமையும். யாது என்பதனீற்றேகாரம் தொகுத்தல். சிட்டோதநம் என்பதற்கு எஞ்சிய ப்ரஸாதம் என்பது பொருள். எந்த மாயையானது மிஸ்ரமாகவும் அஸுத்தமாகவும் இருக்கும் நடக்கையுள்ளவர்களுக்குத் தநு கரண புவந போக ரூபமான அதோமாயையாயிருக்குமோ, ஷட்த்ரிம்ஸத்தத்வாத்மகமான அந்த மாயாதத்வமே அந்த ஸ்வீக்ருதப்ரஸாதியின் விஷயத்தில் சிஷ்டோதநாகாரமானதென்று சொல்லப்படும் என்பதிதன் கருத்து. (க)

மாயை தந்துள சகம்வடி வாயதன் சொரூபந்
தூய ஞானத்தின் மூடுறப் படுதலாற் றோன்று
மாயை யொன்றுமே யெஞ்சிய தொருசிவ மயமே
யாய முத்தனுக் கேவல்செய் தொழிலியம் மாயை.

(ப - ரை.) மாயை - மாயையால், தந்துள்ள - தரப்பட்டிருக்கிற, சகம் - ஜகமானது, வடிவு ஆய - உருவு (அங்கமாக) கொண்டிருக்கிற, தன்சொரூபம் - தனது ஸ்வரூபமானது, தூய - பரிசுத்தமாகிய, ஞானத்தின் - ஞானத்தினால், மூடுறப்படுதலால் - மறைக்கப்படுதலால், தோன்றும் - காணப்படுகிற, மாயை ஒன்றுமே - மாயை யொன்றே, எஞ்சியது - சேஷித்து நின்றது, (ஆதலால்) அ மாயை - அந்த மாயையானது, ஒரு சிவமயமே ஆய - ஒப்பற்ற சிவமயமே யாகிய, முத்தனுக்கு - முக்தாத்மாவுக்கு, ஏவல் செய் தொழிலி - பணிவிடைசெய்யும் வேலைக்காரி (ஆம்), எ - று.

(வி - ரை.) தந்துள என்பது இங்குச் செயப்பாட்டுப் பொருளில் வந்தது. ஞானத்தின் என்பதில் இன் மூன்றுவதன் கருவிப்பொருளில் வந்தது. தொழிலி - கிங்கரி (வேலைக்காரி). ஒரு சிவமயமேயாய முத்தன் - அகண்ட ஸச்சிதாநந்த பரப்ரஹ்மஸ்வரூபனும்

நிரனுமான ஜீவன்முக்தன். மூடப்படுதல் - கபளீகரிக்கப்படுதல். கலாதி பூம்யாந்தங்களான முப்பத்தாறு தத்வங்களுடன் கூடின மாயாபாசத்தினால் வ்யாப்தமான ஜகத்தே தேஹமாயுள்ள ஶிவயோகியின் விஷயத்தில் ஸ்வஸ்வரூப ஜ்ஞாநமானது ஆத்மஜ்ஞாநத்தினால் ஆக்ரமிக்கவும், அந்த மாயாதத்வம் ஒன்றே யெஞ்சி நிற்கும், பரிபூர்ணமாகவும் ஸச்சிதாநந்த ஸ்வரூபமாகவும் இருக்கும் பரப்ரஹ்மமே ஸ்வரூபமாயிருக்கும் ஶிவயோகிக்கு மாயை தாஸி பாவத்தை யடைவாள் என்பதிதன் கருத்து. (உ)

எண்ணில் சத்தியா லுலகெலா மயக்குமிம் மாயை
நண்ணு மெய்ச்சிவத் தயிக்கனை நண்ணுற வற்றோ
கண்ணி னிற்றிகழ் சோதியாஞ் சிவத்தினிற் கலந்தோ
னுண்ண லுற்றிடு விடயங்க ளொழிந்திடுந் தாமே.

(ப - ரை.) எண் இல் - அளவிறந்த, சத்தியால்—, உலகு எல்லாம் மயக்கும் இ மாயை—, நண்ணும் - பொருந்திய, மெய் சிவத்து அயிக்கனை - உண்மையாகிய ஶிவைக்யமுடையவனை, நண்ணுற - அடைய, வற்றோ - வல்லதோ, கண்ணினில் திகழ் - சண்போல விளங்குகிற, சோதி ஆம் - ஒளியுருவாகிய, சிவத்தினில் கலந்தோன்—, உண்ணல் உற்றிடு விடயங்கள் - நுகர்தற்குரிய விஷயங்கள், தாமே ஒழிந்திடும் - தாமாகவே நீங்கிவிடும், எ - று.

(வி - ரை.) மெய்ச்சிவத்தயிக்கன் - இஷ்டலிங்கைக்யன். வற்றோ என்பது வல்லதோ வென்பதன் விகாரம். தாமே யொழிந்திடும் என்றமையால் ஒழிக்க இவன் முயலவேண்டா வென்பது விளங்கிற்று. (௩)

பொறிக ளாலுணும் புலன்கடல் புகுந்திடு நதிபோ
லறிஞ னாகியோ னிடத்திற்புக் கடங்குறு மென்பர்
மறிவில் யோகியிப் பொருளொழி வுறவடி வடக்கிச்
செறியு மார்கதி ரெலாங்கொடு வீழ்திந கரன்போல்.

(ப - ரை.) பொறிகளால் - ஐம்பொறிகளால், உண்ணும் - நுகரப்படுகிற, புலன் - விஷயங்கள், கடல் புகுந்திடு நதி போல்—, அறிஞன் ஆகியோன் இடத்தில் - அறிஞனுடைய விடத்தில், புக்கு அடங்குறும் என்பர் - புகுந்தொடுங்கு மென்று சொல்லுவர் (பெரியோர்), ஆர் - நிறைந்த, கதிர் எல்லாம் கொடு - கிரணங்களெல்லாவற்றையும் தன்னிடத் தடக்கிக் கொண்டு, வீழ் - கடலில் விழுகிற, திநகரன் போல் - சூரியன் போல, மறிவு இல் - மீட்சியில்லாத, யோகி - யோகியானவன், இ பொருள் - இந்தப் பொருள்களெல்லாம், ஒழிவுற - நீங்க, வடிவு அடக்கி - தன் ஸ்வரூபத்தில் அடக்கிக்கொண்டு, செறியும் - ஒடுங்கியிருப்பன், என்பர் - என்று சொல்லுவர் (பெரியோர்), எ - று.

(வி - ரை.) பொறிகள் - பஞ்சேந்த்ரியங்கள், அவை மெய் வாய் கண் மூக்கு செவி யென்பன. புலன் - பஞ்சவிஷயங்கள், அவை ஶப்தஸ்பர்ஶரூபரஸகந்தங்கள். திநகரன் - வடசொல், பகலையுண்டாக்குவோன் என்பதிதன் பொருள். மீட்சி யென்றது மீண்டு வருதலை, அது பிறத்தற்கு மீண்டு வருதலைக் குறித்தது. செறியும் - உபஶாந்தியடையப் பெறுவன் எனினுமாம். (௪)

சிட்டோதநத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் அவ்யயாய நம:

தொண்ணூற்றைந்தாவது

## (௩.) சராசரலயத்தலம்.

[அதாவது - கேவலம் ஜ்ஞாநப்ரஸாத ஸ்வீகாரத்தினால் ஸிஷ்டோதந ஸம்பந்நனை ஸிவயோகிக்குச் சராசர ப்ரபஞ்ச ஸ்வரூபமான மஹாலிங்கத்தில் ஐக்யத்வம் கிடைக்கவும், தான் நிர்த்தேஹியாய் ப்ரபஞ்சத்தை யடைந்திருக்கும் மலஸக்தியை நாஸஞ்செய்து, எந்த வஸ்துவும் காணாது எந்த ஸப்தமும் கேளாது தன்னைவிட அந்யமானதை யறியா திருப்பதே சராசரலயம் என்பது.]

கலிநிலைத்துறை.

பாகு பாடுறு சராசரத் துறுபரத் தொன்றும்
யோகி தானுடம் புறுகில னாகியே யொழிவி
லேக மாகிய சராசர நாசக னென்ன
மோக மாயையை முனிந்தவர் மொழிந்திடப் படுவான்.

(ப - ரை.) பாகுபாடு உறு - பல பகுப்புக்களுள்ள, சராசரத்து உறு - சராசரங்களில் வ்யாபித்திருக்கிற, பரத்து - பரம்பொருளில், ஒன்று ஆம் - ஒன்றுதலுடையனாகிய, யோகியே—, உடம்பு உறுகிலன் ஆகி—, ஒழிவு இல் - நீக்கமில்லாத, ஏகம் ஆகிய - ஒன்றாகிய, சராசரநாசகன் என்ன - சராசரவிநாசகனென்று, மோகம் - மோகத்தை யுண்டாக்குகிற, மாயையை முனிந்தவர் - மாயையை வென்றவராகிய அறிஞரால், மொழிந்திடப்படுவான்- சொல்லப்படுவான், எ - று.

(வி - ரை.) பாகு பாடு - பகுக்கப்படுதல், பகு பாகு என நீண்டது. பாடு முதனிலை திரிந்த தொழிற்பெயர். சராசரம் - சரம் அசரம், இவை சஞ்சரித்தல் சஞ்சரியாமை யெனப்பொருள் பயந்து அத்தொழில்களையுடைய பொருள்களை யுணர்த்தலால் ஆகுபெயர்கள். முனிவர் என்பதனீற்றில் மூன்றனுருபு தொக்கது. (க)

உலக ஞானமோ ரவித்தையாங் காரண முடைத்திங்
கலகி லாததன் சொரூபஞா னம்பெற வவிச்சை
மலமி ராதெனி னிச்சகம் விளங்கிட வற்றோ
கலையெ லாமுணர்ந் துயர்தரு கலயமா முனிவ.

(ப - ரை.) கலை எல்லாம் உணர்ந்து - எல்லாக் கலைகளின் பொருளையும் நன்கறிந்து, உயர்தரு - உயர்ந்த, மா - பெருமை பொருந்திய, கலயமுனிவ - கும்பமுனிவனே, உலக ஞானம்-லௌகிக ஜ்ஞாநமானது, ஓர் அவித்தை ஆம்-ஒப்பற்ற அஜ்ஞாநமாகிய, காரணம் உடைத்து - ஹேதுவினையுடையது, இங்கு - இவ்வுலகில், அலகு இல்லாத - அளவற்ற, தன் - தனது, சொரூபஞானம் பெற - ஸ்வரூப ஜ்ஞாநத்தைப் பெறின், அவிச்சை - அஜ்ஞாநமாகிய, மலம் இராது எனின் - மலமிராதென்றால், இ சகம் - இவ்வுலகமானது, விளங்கிடவற்றோ - விளங்கவல்லதோ (விளங்காது), எ - று.

(வி - ரை.) கலை - ஆகுபெயர். உயர்தரு - ஒருசொல், இதற்குப் பகுதி உயர்தா. கலயம் கலஸம் என்னும் வடசொற்றிரிபு. சகம் ஜகம் என்னும் வடசொற்றிரிபு, (தோன்றி யழிதன்மாலைய தென்பது பொருள்). வற்றோ வென்னு மோகாரம் எதிர்மறை. ஓர் - ஒப்பற்ற என்றதனால் அநாதி எனப்பெறப்பட்டது. காரணம் - மூலம் எனினுமாம். சொரூபஞானம் - ஆத்மைக்ய ஜ்ஞாநம். (உ)

வானின் மாமுகி லெழுந்தடங் குதலென மயங்கா
ஞானிபா லெழுந் தடங்குறும் விடயங்க ணவிலி
னூன தோர்கன விற்பொரு ணனவிலற் றிடல்போ
லூன மாஞ்சகத் தோற்றமெய் யுணர்வினி லொழியும்.

(ப - ரை.) மா முகில் - பெரிய மேகங்கள், வானில் - ஆகாயத்தில், எழுந்து அடங்குதல் என - தோன்றி யொடுங்குதல் போல, விடயங்கள் - விஷயங்களெல்லாம், மயங்கா ஞானிபால் - மயங்காத ஞானியினிடத்தில், எழுந்து அடங்குறும் - தோன்றி யொடுங்கும், நவிலின் - சொல்லுமிடத்தில், ஆனது ஓர் கனவிற்பொருள் - உண்டாகிய வொரு கனவில் கண்ட பொருள், நனவில் - ஜாக்ராவஸ்த்தையில், அற்றிடல் போல் - காணுதொழிதல் போல, மெய் உணர்வினில் - மெய் ஞானத்தின் தோற்றத்தில், ஊனம் ஆம் - அழிவதாகிய, சகத் தோற்றம் - உலகத் தோற்றமானது, ஒழியும் - ஒழிந்துபோம், எ - று.

(வி - ரை.) அடங்குறும்-ஒருசொல், பகுதி அடங்குறு; அற்றிடலும் அது, இதற்குப் பகுதி அற்றிடு, இடு துணிவுப் பொருள் விகுதி யென்றலு மொன்று. தோற்றம் - காட்சி.

சாக்கி ரந்தொடர் சொற்பனஞ் சுழுத்தியைத் தணந்து
மீக்கி ளந்திடு மவத்தையை மேவிய வொருவ
னாக்கு ஞாதுரு ஞானஞே யங்களா மனைத்து
நீக்கி நின்றிடு மென்பர்நல் லறிவினி னிலைத்தோர்.

(ப - ரை.) சாக்கிரம் தொடர் சொற்பனம் சுழுத்தியை - ஜாக்ரஸ்வப்நஸுஷுப்திகளை, தணந்து - கடந்து, மீ - அவற்றிற்கு மேலாக, கிளந்திடு - சொல்லப்படுகிற, அவத்தையை - அவஸ்த்தையை, மேவிய - பொருந்திய, ஒருவன்—, ஆக்கும் - உண்டாக்கப்பட்ட, ஞாதுரு ஞானம் ஞேயங்கள் ஆம் அனைத்தும் - ஜ்ஞாத்ரு ஜ்ஞாநம் ஜ்ஞேயங்கள் ஆகிய எல்லாவற்றையும், நீக்கி நின்றிடும் - ஒழித்து நிற்பான், என்பர் - என்று சொல்லுவார், (யாரெனின்) நல் அறிவினில் - மெய்ஞ்ஞானத்தில், நிலைத்தோர் - நிலைபெற்றவர், எ - று.

(வி - ரை.) சாக்கிரம் தொடர் சொற்பனம் சுழுத்தியைத் தணந்து மீக்கிளந்திடும் அவத்தை யென்றது பரமாகிய துரீயம் என்னும் ஸமாதியவஸ்த்தையை. (௪)

துரியா தீதமாம் பதத்திடைத் துளக்கற விருந்த
பெரியா னிவ்வுல கத்துருக் காண்கிலன் பின்னர்க்
கரியாய் நின்றமெய்ச் சிவத்தினைக் கண்டவன் காணுன்
றிரியா மற்றொரு பொருளினைச் செவிக்கொளா னறியான்.

(ப-ரை.) துரியாதீதம் ஆம் பதத்திடை - (வாக்குமனங்களுக்கு எட்டாத) துரியாதீதமாகிய பதத்தில், துளக்கு அற இருந்த - சலநமில்லாமலிருந்த, பெரியான் - பெரியோனாகிய ஶிவயோகி, இ உலகத்து உரு காண்கிலன் - (மீண்டும்) இந்தவுலகத்தின் வடிவினைக் காணுன், பின்னர் - பிறகு, கரி ஆய் நின்ற - சாக்ஷியாய் நின்ற, மெய்ச் சிவத்தினைக் கண்டவன்—, திரியா - திரிந்து, மற்றொரு பொருளினை - வேறொரு பொருளை, காணுன்—, செவிக்கொளான் - கேளான், அறியான் - உணரான், எ - று.

(வி - ரை.) பதம் என்றது அவஸ்த்தையை. காணுன் - கண்ணினுற் பாரான். அறியான் - மனத்தினுல் நினையான். மெய்ச்சிவம் - சிதாநந்தமயனுகியஶிவன் (இஷ்டலிங்கம் எனினுமாம்). (௫)

மித்தை யாகுமிவ் வுலகமுன் னுண்மைபோல் விளங்குஞ்
சத்த தாகிய பரசிவம் வெளிப்படிற் றனது
மெய்த்து நின்றமெய்ச் சொரூபமே யெங்கணும் விளங்குஞ்
சித்த மாமய லொழிந்துமுன் னூல்பல தெரிந்தோய்.

(ப - ரை.) சித்தம் - மனத்தினது, மா மயல் ஒழிந்து - பெரிய மயக்கந் தீர்ந்து, பல முன்னூல் - அநேக வேதார்த்தங்களை, தெரிந்தோய் - அறிந்திருப்பவனே, மித்தை ஆகும் - பொய்யாகிய, இ உலகம் —, முன் உண்மை போல் விளங்கும் - முன்னே மெய் போலப் பிரகாசிக்கும், சத்து ஆகிய - உண்மையாகிய, பரசிவம் வெளிப்படின் —, தனது - தனதாகி, மெய்த்து நின்ற - உண்மையாய் நின்ற, மெய்ச்சொரூபமே - உண்மையாகிய ஸ்வரூபமே, எங்கணும் விளங்கும் - எவ்விடத்தும் பிரகாசிக்கும், எ - று.

(வி - ரை.) வேதம் அநாதி யாதலால் அதனை முன்னூல் என்றார், முதனூலென்றுமிதனைக் கூறுவர். மெய்ச்சொரூபமே - ஸாக்ஷாத்கார ஸ்வரூபமே எனினுமாம். (கூ)

சராசரலயத்தலம் - முற்றும்.

உ

ஓம் ஹரயே நமஃ.

தொண்ணூற்றொருவது

## (சு.) பாண்டத்தலம்.



[அதாவது - அநேக கோடி ப்ரஹ்மாண்டங்களின் ஸ்ருஷ்டி ஸ்த்திதி லயங்களுக்கு ஆதாரபூதமானது யாதோ என்னும் விசாரமானதும், மாயையினால் விடப்பட்ட சிவயோகி சக்தியே முதலாகி ப்ருதிவியே ஈருயுள்ள ஸகலதத்வங்களென்னும் குமிழிகளை விமர்சம் என்னும் பாண்டத்திலிருத்தி ஸ்வஸ்வரூபத்தினால் ப்ரகாசிப்பதுமே பாண்டம் என்பது.]

கலிநிலைத்துறை.

அண்ட நூறுகோ டிகள்படைப் புடனிலை யழிவு
கொண்ட தோரிட மாகிய வதனையே குறித்துக்
கண்ட தோர்விம ரிசந்தனைக் கசடற வுணர்வாற்
பண்டை நூலுணர் பவர்பாண்டத் தலமெனப் பகர்வார்.

(ப - ரை.) பண்டை நூல் - முன்னூற்பொருளை, கசடு அற - குற்றமற, உணர்வால் - தமதறிவினால், உணர்பவர் - அறிபவர், அண்டம் நூறு கோடிகள் - நூறுகோடி யண்டங்கள், படைப்புடன் - உத்பத்தியோடு, நிலை - ஸ்த்திதி, அழிவு - லயம், (இவற்றை) கொண்டது - கொண்டிருப்பதாகி, ஓர் இடம் ஆகிய - ஒரு இடமாயிருப்பதாகிய, அதனையே குறித்து - அதையே குறிப்பிட்டு, கண்டது - கண்டதாகிய, ஓர் விமரிசந்தனை - ஒப்பற்ற விமரிசத்தை, பாண்டத்தலம் என - பாண்டத்தலமென்று, பகர்வார் - சொல்லுவர், எ-று.

(வி - ரை.) கசடு என்றது ஐயந்திரிபுகளை, இவற்றை ஸந்தேஹ விபர்யயங்கள் என்பர் வடநூலார். விமரிசம் - பாவனை, ஆராய்ச்சியெனினுமாம், இது ஈண்டு பராசக்தியைக் குறித்தது. உணர்பவர் பகர்வார் எனவியையும். எண்ணிறந்த ஸகல ப்ரஹ்மாண்டங்களுக்

கும் தோற்றம் நிலை ஒடுக்கங்களைக் குறித்து ஆதாரமாயுள்ள யாதொரு விமர்ஶமுளதோ, அந்த விமர்ஶமே பாண்டத்தலம் என்று சொல்லப்படும் என்பதிதன் கருத்து. (க)

தத்து வங்களுக் கொருகரி யாகியே சகத்திற்
குய்த்த காரண மாய்விம ரிசப்பெய ருடைய
சத்தி தானிலங் குறுஞ்சக மடங்கிடத் தானாய்
மெய்த்த வாருயிர் விளங்கிடும் விமரிச கலையே.

(ப - ரை.) விமரிசப்பெயர் உடைய சத்தி—, தத்துவங்களுக்கு—, ஒரு கரி ஆகி - ஒரு சாக்ஷி (ஸ்வரூபிணி) யாகி, சகத்திற்கு - உலகத்துக்கு, உய்த்த - செலுத்தப்பட்ட, காரணம் ஆய் - ஹேதுவாகி, இலங்குறும் - விளங்குவாள், விமரிச கலை - விமரிச ரூபிணியாகிய கலையானது, சகம் அடங்கிட - உலகமடங்க, மெய்த்த - மெய்யாகிய, 'ஆர் உயிர் - அரியவுயிர்கடோறும், தானாய் விளங்கிடும் - தானாகவே பிரகாசிப்பாள், எ - று.

(வி - ரை.) இலங்குறும் அடங்கிட என்பன ஒருசொன்னீர, இவற்றிற்குப் பகுதிகள் முறையே இலங்குறு அடங்கிடு என்பன. ஆருயிர்-நிறைந்தவுயிர் எனினுமமையும். விமர்ஶம் என்னும் பராஶக்தி ஸகல சராசரங்களாகிய ப்ரபஞ்சத்தை விளங்கச்செய்கின்றவளாகவும், ஸகல பூததத்வங்களுக்கும் ஸாக்ஷிஸ்வரூபமுடையவளாகவும், ஸகல வ்யாபக முள்ளவளாகவும் ப்ரகாஶிக்கின்றனள்; எதனிடம் ப்ரபஞ்சமெல்லாம் ஒடுக்கத்தை யடைகின்றதோ, எது ஆத்ம சித்ஸ்வரூபமாகவும் ஸதாநந்தஸ்வரூபமாகவும் விளங்குகின்றதோ என்னும் விசாரமே விமர்ஶரூபிணியாகிய கலை என்பதிதன் கருத்து. (உ)

ஈச னோர்பர வகந்தைசேர் விமரிச வானாய்ப்
பேசு மியாவையு முணர்ந்தொழி வறுபெருந் தகையாந்
தேசு லாம்பர வகந்தையிற் சிறந்துள தாகி
மாசி லாவிம ரிசநிகழ் வுறுமென மதிப்பாய்.

(ப - ரை.) ஈசன் - இறைவனானவன், பர அகந்தை சேர் - பரவகந்தையோடு கூடின, விமரிசவான் ஆய் - விமரிசவானாகி, பேசும் - சொல்லப்பட்ட, யாவையும் உணர்ந்து - எல்லாவற்றையு மறிந்து, ஒழிவு அறு - நீங்குதலற்ற, பெருந்தகை ஆம் - பெருங்குணத் தனவன், தேசு உலாம் - ஒளி பொருந்திய, பர அகந்தையில் சிறந்து உளது ஆகி—, மாசு இல்லா - குற்றமற்ற, விமரிசம் - விமரிசமானது, நிகழ்வுறும் என - விளங்குமென்று, மதிப்பாய் - அறியக்கடவை, எ - று.

(வி - ரை.) பரவகந்தை - பரத்தோடு கூடின அகந்தை, மேலான அகந்தை யெனினு மாம். நிகழ்வுறும் - ஒருசொல். பரமாத்மா யான் என்னும் பராஹங்கார ஸமாவேஶத்தால் பரிபூர்ண விமர்ஶமுடையவனும், ஸர்வஜ்ஞனும், ஸர்வவ்யாபகனும், ஸர்வகர்த்தாவும், ஸர்வஸாக்ஷியாயுள்ளவனுமானவன் மஹேஶ்வரன் எனப்படுவன்; பரமேஶ்வரனுடைய விமர்ஶமானது ப்ரபஞ்சாதாரமாகிய பேரறிவின் விளக்கத்தால் பரிபூர்ணமான பராஹங்கார ஸ்வரூபம் என்பதிதன் கருத்து. (௩)

பரந்த தாகிய விமரிச பாண்டத்தி லடங்க
விரிந்த தத்துவ மியாவையு மேவுற வைத்துத்
தெரிந்த தன்னையே கண்டிருப் பன்றிகழ் முத்த
னருந்த வர்க்கர சாகிய வகத்திய முனியே.

(ப - ரை.) அருந்தவர்க்கு - அரிய தபோதநர்க்கு, அரசு ஆகிய - வேந்தனாகிய, அகத்திய முனியே—, திகழ் - விளங்குகிற, முத்தன் - முக்தனானவன், பரந்தது ஆகிய -

விரிந்ததாகிய, விமரிச பாண்டத்தில் அடங்க—, விரிந்த தத்துவம் யாவையும் மேவுற வைத்து—, தெரிந்த தன்னையே கண்டிருப்பன்—, எ - று.

(வி - ரை.) அரசு-ஆகுபெயர். ஜீவன்முக்தனாகிய ஶிவயோகி விமர்ஶ பாண்டத்தில் (வைக்கப்பட்ட ஶக்திமுதல் ப்ருதிவி ஈறாகவுள்ள) ஸகல தத்வக்கூட்டங்களை யுடையவனாகவும், ஏனைய பொருளை நோக்காதவனாகவும், ஆத்மஸ்வரூபத்திலேயே நிற்கின்றான் என்பதிதன் கருத்து. (௪)

பாண்டத்தலம் - முற்றும்.

௨

ஓம் பகநேத்ரபிதே நம:

தொண்ணூற்றேழாவது

(௫.) பாசநத்தலம்.



[அதாவது - ஸமஸ்த ப்ரஹ்மாண்டங்களின் உத்பத்தி ஸ்த்திதி லயங்களுக்குக் காரணீபூதமான விமர்ஶ பரபிந்துவானது திரோதாந ரூபத்தினால் ஶிவனுடன் கலந்திருக்கும் ஶக்தியில் ப்ரகாஶிக்கும், அந்த ஶக்தி ஸ்வரூபமே பாண்டஸ்த்தல ஸம்பந்நனான ஶிவயோகிக்கு பாசநம் என்பது.]

கலிநிலைத்துறை.

ஓது மண்டங்கள் யாவும்வந் துதித்துநின் றொடுங்கற்
கேது வாகிய விமரிச மியாதன்க ணிலங்கு
மேதை யாமது பாசந மெனவிவண் விளம்பு
மாது பாதிய னருளிய வாகம மறைகள்.

(ப - ரை.) ஓதும் - சொல்லப்பட்ட, அண்டங்கள் யாவும்—, வந்து உதித்து நின்று ஒடுங்கற்கு - வந்து பிறந்து இருந்து இறப்பதற்கு, ஏது ஆகிய - காரணமாகிய, விமரிசம் - விமரிசமானது, யாதன் கண் இலங்கும் - எதனிடத்து விளங்குமோ, மேதை ஆம் அது - அறிவுருவாகிய அது, பாசநம் என - பாசநமென்று, இவண் - இவ்விடத்தில், விளம்பும் - சொல்லாநின்றன, (எவையெனின்) மாது பாதியன் - பெண்பாதியனாகிய சிவபிரான், அருளிய - அருள்செய்த, ஆகமம் மறைகள் - ஆகமங்களும் வேதங்களும், எ - று.

(வி - ரை.) மாது ஈண்டு உமாதேவியைக்குறித்தது. மாதுபாதியனருளிய வாகமம் - ஶிவாகமம். (௧)

வேறு பாடுறு முலகினுக் கொருதனி வித்தாய்க்
கூறு மோர்விம ரிசப்பெயர் பராசத்தி குறுகும்.
பேறி யாதெனிற் பெற்றிடும் பிரமமா மதுவே
தேறு பாசந மனைத்திற்கு மென்றுரை செய்வார்.

(ப - ரை.) வேறு பாடு உறும் - வேறுபாட்டை யுடைய, உலகினுக்கு—, ஒரு தனி வித்து ஆய் - ஒப்பற்ற தனி மூலகாரணமாகி, கூறும் - சொல்லப்படுகிற, ஓர் - ஒரு, விமரிசப்பெயர்-விமரிசமென்னும் பெயரினையுடைய, பராசத்தி குறுகும்-பராசத்தியானது எதனிடம் நிலைபெற்றிருக்குமோ, (அது) பெற்றிடும் பேறு யாதெனின்—, பிரமம் ஆம்—, அதுவே—, தேறு - தெளியப்பட்ட, அனைத்திற்கும் பாசநம் என்று உரைசெய்வார் - எல்லாவற்றிற்கும் பாஜநம் என்று சொல்லுவர் (அறிஞர்), எ - று.

(வி - ரை.) வேறுபாடு - வேறுபடுதல் (வேற்றுமை). உரைசெய்வார் என்னும் பயனிலைக்கு அறிஞர் என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது. வேறுபாடுறு மூலகு என்றது ப்ரபஞ்ச விசித்திரத்தை. பேறு - பயன். பாஜநம் - ப்ரபஞ்ச பாஜநம். (உ)

ஆதி யாயசிற் சத்தியிச் சகமுளை யாகி
யோது மாகர ணத்துரு வாலெதி லொளிருந்
தீதி லாவது பிரமமென் சிவமென வறைவர்
வேத மோடுய ராகம முணர்ந்திடு விமலர்.

(ப - ரை.) ஆதி ஆய-முதலாகிய, சிற்சத்தி—, இ சகம் முளை ஆகி—, ஓதும்-சொல்லப்பட்ட, மா - பெரிய, கரணத்து உருவால் - கரணவடிவால், எதில் ஒளிரும் - எதனிடத்து விளங்குமோ, தீது இல்லா - தீமையற்ற, அது - அதுவே, பிரமம் என் - பிரமமென்கிற, சிவம் என - (பர) சிவமென்று, அறைவர் - சொல்லுவர், (யாரெனின்) வேதமோடு உயர் ஆகமம் உணர்ந்திடு விமலர் - வேதார்த்தத்துடன் உயர்ந்த ஆகமார்த்தத்தினையும் அறிந்த பரிசுத்தர், எ - று.

(வி - ரை.) சிற்சத்தி - ஜ்ஞாநஶக்தி. மா கரணம் - மூலாஹங்காரம். ஒளிரும் என் பதனீற்றில் ஓகாரம் தொக்கது. வேதம் ஆகமம் என்பன ஆகுபெயர்கள். எந்த சிச்சக்தியானது ஜகதுத்பத்திக்குக் காரணமாய், மூலாஹங்கார ரூபத்தினால் எந்த பரபிந்துவில் ப்ரகாஶிக்குமோ, அந்த விமர்ஶாக்யமான பரபிந்துவே பரப்ரஹ்ம ஸ்வரூபனான பரஶிவன் என்பதிதன் கருத்து. (௩)

திங்கள் வெண்ணிலா வனைத்தையுந் திகழ்த்துதல் போலச்
சங்க ரன்றனி லுறுவிம ரிசமெனுஞ் சத்தி
யிங்க னைத்தையு மொருங்குற விளக்குமென் றிசைப்பர்
மங்க லப்பெருங் கலைகளி னுழைந்திடு மதியோர்.

(ப - ரை.) திங்கள் - சந்திரனிடத்து விளங்குகிற, வெள் நிலா - வெண்மையாகிய சந்த்ரிகையானது, அனைத்தையும் - எல்லாப் பொருள்களையும், திகழ்த்துதல் போல - விளங்குவித்தல் போல, சங்கரன் தன்னில் - சங்கரனிடத்தில், உறு-பொருந்திய, விமரிசம் என்னும் சத்தி—, இங்கு - இவ்வுலகத்திலுள்ள, அனைத்தையும் - எல்லாப் பொருள்களையும், ஒருங்குற விளக்கும் என்று - ஒருசேர விளங்குவிக்கு மென்று, இசைப்பர்-சொல்லுவர், (யாரெனின்) மங்கலம் - மங்களகரமாகிய, பெருங்கலைகளில் - பெருநூல்களில், நுழைந்திடும் - நுழைகின்ற, மதியோர் - அறிவுடையோர், எ - று.

(வி - ரை.) சங்கரன் ஶங்கர: என்னும் வடசொற்றிரிபு, இதற்கு ஆன்மாக்களுக்கு ஹிதம் செய்பவன் என்பது பொருள். இசைத்தல் - சொல்லுதல். மங்கலப் பெருங்கலைகள் என்றது வீட்டு நூல்களை, அவை வேத ஶிவாகமங்கள். விமரிசம் என்னும் சத்தி - ஜ்ஞாந க்ரியா ஶக்தியுக்தனான பரஶிவத்தினிடத்தில் ஸ்த்திரமாயிருக்கும் பராமர்ஶரூபமான பராஶக்தி. அனைத்தையும் - ஸகல ப்ரபஞ்சத்தையும் எனினுமாம். ஒருங்குற விளக்கும் என்றதனால் தனது அம்ஶத்தினால் வ்யாபித்து ப்ராகாஶித்துக் கொண்டிருக்கும் என்றபடி. (௪)

ஆதி யிற்பெறு மகரமே யுயர்சிவ மந்தா
னோது தற்கருஞ் சத்தியிச் சிவசத்தி யுருவா
மேத மற்றிடு பிரமமொன் றேயக மென்னு
மேதை நற்பதம் பொருந்துமென் றறைகுவர் மேலோர்.

(ப - ரை.) ஆதியில் பெறும் - முதலில் பெறப்பட்ட, அகரமே - அ என்னும் அக்ஷரமே, உயர் சிவம் - உயர்ந்த சிவமாகும், அம் தான் - ஹம் என்பதே, ஓதுதற்கு அரு சத்தி - சொல்லுதற்கரிய சத்தியாகும், இ - இந்த, சிவசத்தி உரு ஆம் - சிவசத்தி வடிவாகிய, ஏதம் அற்றிடு - குற்றமற்ற, பிரமம் ஒன்றே—, அகம் என்னும் - அஹமென்கிற, மேதை நல் பதம் பொருந்தும் என்று - ஜ்ஞாநத்தோடு கூடிய நல்ல பதத்தைப் பொருந்து மென்று, அறைகுவர் - சொல்லுவர், (யாரெனின்) மேலோர்—, எ - று.

(வி - ரை.) மேதை மேதா என்னும் வடசொற்றிரிபு, இதற்குப் பேரறி வென்பது பொருள். பதம் - சொல். முக்ய ப்ரகாஶாத்மகனான ஶிவன் ஶக்தியுடன் சேர்ந்து எவ்வாறிருப்பனெனின்,— அகாரமே ஶிவன், ஹம்காரமே ஶக்தி, இவ்விதமாய் ஶிவஶக்திமயமான பரப்ரஹ்மமானது ஒரே வஸ்துவாகிய அஹம் என்னும் பதத்திலுள்ளது என்பதிதன் கருத்து. (௫)

திகழு றும்பர மாகியே சிவசத்தி மயமா
மகமெ னும்பத மடைந்துய ரருஞ்சிவ யோகி
சகம டங்கலுந் தன்னுரு வாகவே சார்ந்து
நிகழு மென்றுரை செய்திடு நிமலனா கமங்கள்.

(ப - ரை.) திகழுறும் - விளங்குகிற, பரம் ஆகி—, சிவசத்தி மயம் ஆம் - சிவசத்தி யுருவாகிய, அகம் என்னும் பதம் அடைந்து—, உயர் - உயர்ந்த, அருஞ்சிவயோகி—, சகம் அடங்கலும் - உலகமுழுதும், தன் உரு ஆகவே சார்ந்து - தனவடிவாகவே பொருந்தப்பெற்று, நிகழும் என்று - விளங்குவனென்று, நிமலன் ஆகமங்கள் - பரிசுத்தனான சிவபிரானாற் சொல்லப்பட்ட ஆகமங்கள், உரைசெய்திடும் - சொல்லாநிற்கும், எ - று.

(வி - ரை.) திகழுறும் - ஒருசொல். பரம் - மேலான பொருள். அகம் என்னும் பதம் என்றது பராஹங்காரத்தை. ஶிவஶக்தியானது தேசம், காலம், ஆகாரம் இவைகளில்லா திருத்தலான் 'திகழுறும் பரமாகி' என்றார். (௬)

மரம டுத்துள பாசிலை மலர்முத லனவோர்
தரைய டுத்துள வித்தினி லடங்குறுந் தகைபோற்
பரவு மிச்சக மியாவுமோர் பரமநல் யோகி
யிருத யத்தனி வித்தினி லடங்குமென் றிசைப்பார்.

(ப - ரை.) மரம் அடுத்துள்ள - (ஆல) மரத்திற் பொருந்தியிருக்கிற, பாசிலை-பச்சிலை, மலர் - புட்பம், முதலன - முதலாயின, தரை அடுத்துள்ள - மண்ணிற் பொதிந்திருக்கிற, ஓர் வித்தினில் அடங்குறும் தகை போல் - ஒரு (ஆலம்) விதையிலடங்கி யிருக்குந்தன்மை போல, பரவும் - விரிந்திருக்கிற, இ - இந்த, சகம் யாவும் - உலகமெல்லாம், ஓர் பரமம் நல் யோகி - ஒரு மேலான நன்மையையுடைய யோகியின், இருதயம் - ஹ்ருதயமாகிய, தனி வித்தினில் அடங்கும் என்று - ஒரு விதையிலடங்கியிருக்குமென்று, இசைப்பார் - சொல்லுவர் (மேலோர்), எ - று.

(வி - ரை.) பாசிலை - பசுமையாகிய இலை. இசைத்தல் - சொல்லுதல். மேலோர் என்னும் எழுவாய் வருவிக்கப்பட்டது. (எ)

பாசநத்தலம் - முற்றும்.

---

ஓம் அவ்யக்தாய நம:

# தொண்ணூற்றெட்டாவது

## (௬) அங்கலேபத்தலம்.

[அதாவது - திரோபாவ லக்ஷணத்துடன் கூடியிருக்கும் ஜ்ஞாந க்ரியா ஶக்திகளே பாஜநமாயுள்ள ஶிவயோகி புண்யபாப கர்மங்களினால் லிப்தனாகாதிருப்பதால் அங்கலேபன் என்பது.]

கலித்துறை.

காலந் திக்கிவை யாதியாற் கண்டித மின்றிக்
கோலஞ் சச்சிதா நந்தமா மிதுமுனங் கூறுஞ்
சீலங் கொண்டவற் குருவெனச் செப்புவ ரவன்றான்
மாலிங் கோவுமங் காலேப னென்பர்நூல் வல்லோர்.

(ப - ரை.) காலம் திக்கு இவை ஆதியால் - காலம் திக்கு என்கிற இவை முதலியவற்றால், கண்டிதம் இன்றி - கண்டித (பரிச்சேத) மில்லாமல், கோலம் - அழகாகிய, சச்சிதாநந்தம் ஆம் இது - சச்சிதாநந்தமாகிய இதனை, முன்னம் கூறும் - முன்னே சொல்லப்பட்ட, சீலம் கொண்டவற்கு-சீலமாகக் கொண்டவனுக்கு, உரு எனச் செப்புவர்—, அவன் தான் - அவனே, இங்கு - இவ்வுலகில், மால் ஓவும் - மயக்கம் நீங்கின, அங்காலேபன் என்பர்—, (யாரெனின்) நூல்வல்லோர் - சிவாகமங்களில் வல்லவர், எ - று.

(வி - ரை.) கண்டிதம் இன்றி என்றது அகண்டமா யென்றபடி. உரு - வடிவு. செப்புதல் - சொல்லல். ஓவுதல் - நீங்குதல். திக்கு, தேசம், காலத்ரயம், இவைகளில் பரிச்சேத ரஹிதனாகவும், சிதாநந்த ஸ்வரூபனாகவும், ஶ்ரேஷ்டனாகவும் இருக்கும் இந்த ஜ்ஞாந க்ரியா ரூபத்தையே திரோபாவமென்னும் பாவனையுடன் கூடியிருக்கும் ஶிவயோகியின் ஸ்வரூபமென்றும், அதனால் ஶிவயோகி அங்கலேபனென்று சொல்லப்படுவ னென்பதிதன் கருத்து. (௧)

போத மேனியா மதிஞன்வெண் புகைமுத லனவா
லோதும் வானென வொன்றொரு தொழிலொடு முறான்
மேதை யாமிவன் றனக்கிலை விதியொடு விலக்காம்
பேத மாகிய விகற்பமு மென்றிடும் பெருநூல்.

(ப - ரை.) போதம் மேனி ஆம் - அறிவேயுருவாகக்கொண்ட, மதிஞன் - ஞானியானவன், வெள் புகை முதலனவால் - வெண்மையாகிய புகை முதலியவற்றால், ஓதும் - சொல்லப்பட்ட, வான் என - ஆகாயம் (விகாரப்படாதது) போல, ஒன்று - பொருந்திய, ஒரு தொழிலொடும் - ஒரு கிரியையுடனும், உறான் - பொருந்தமாட்டான், ஆல்-ஆதலால், மேதை ஆம் இவன் தனக்கு - அறிவுருவாகிய இவனுக்கு, விதியொடு விலக்கு ஆம் பேதம் ஆகிய விகற்பமும் - விதி விலக்குக்க ளென்கிற வேறுபாடாகிய விகற்பமும், இல்லை என்றிடும் - இல்லை யென்று சொல்லாநிற்கும், (எது வெனின்) பெருநூல்—, எ - று.

(வி - ரை.) விதி விலக்கு - செய்வதும் தவிர்வதும். பெருநூல் என்றது வேத ஶிவாகமங்களை, இவை பெருநூல் எனவே ஏனைய யாவும் சிறு நூல்களென்றவாறாயிற்று. ஒரு தொழிலொடும் - ஸம்ஸார பந்தங்களான பாபகர்மங்களினால் எனினுமாம். புகை முதலானவைகளினால் ஆகாஶமானது எவ்வாறு லிப்தமாயிருப்பதில்லையோ, அவ்வாறு சித்

ரூபனுயிருக்கும் ஶிவயோகி ஸம்ஸார பந்தங்களான பாபகர்மங்களினால் லேபிக்கப் பட்டிருப்பதில்லை; பின்னும் அந்த ஶிவயோகிக்கு விதிநிஷேதங்களும், ஸங்கல்ப விகல்பங் களும், கர்மத்தின் வாஸனையும் கூட இருப்பதில்லை; ஆதலால் ஶிவயோகி புண்யபாப கர்மங் களினால் நிர்லிப்தன் எனப்படுவன்; வாஸநாரஹிதனான ஶிவயோகிக்கு ஸர்வத்ர அபேத ஜ்ஞானமே இருக்கும் என்பதிதன் கருத்து. (௨)

வேறு பட்டிடு கடாதியால் விசும்புவே றுறினும்
வேறு பட்டிடா வாறென விமலமெய்ப் பிரமம்
வேறு பட்டிடு முபாதியால் வேறுவே றுறினும்
வேறு பட்டிடா தெனமறை விளங்குற விளம்பும்.

(ப - ரை.) வேறுபட்டிடு - வெவ்வேறு வகைப்பட்ட, கடாதியால்-கடமுதலியவற்றால், விசும்பு - ஆகாயமானது, வேறு உறினும் - வேறுபடினும், வேறுபட்டிடா ஆறு என - வேறுபடாதவாறுபோல, விமலம் - பரிசுத்தமாகிய, மெய் பிரமம் - உண்மையாகிய பிரம மானது, வேறுபட்டிடும் உபாதியால் வேறு வேறு உறினும்—, வேறுபட்டிடாது என - வேறுபடாதென்று, மறை - வேதங்கள், விளங்குற விளம்பும் - விளக்கமாகச்சொல்லும், எ - று.

(வி - ரை.) கடாதி - குடமுதலியன, இவற்றால் ஆகாஶம் வேறு படுதலாவது கடா காஶம் மடாகாஶம் கூபாகாஶம் முதலிய பெயர்களால் வேறுபடுதல். பிரமம் உபாதியால் வேறுபடுதலாவது கூடஸ்த்த ப்ரஹ்மம் முதலிய பெயர்களால் வேறுபடுதல். கடமடாதி களிலிருக்கும் ஆகாஶமானது உபாதி ஸம்பந்தத்தினால் பிந்நம் எனப்பட்டிருந்த போதிலும் அது எவ்வாறு அபிந்நம் என்று சொல்லப்படுகிறதோ, அவ்வாறே உபாதிவஶத்தினால் ப்ரஹ்ம தேவ தாநவர் என்னும் ப்ரதீதி யுண்டாயிருந்த போதிலும் அது எவ்வாறு அகண்டமானதோ, அவ்வாறு அந்த ஶிவயோகியின் ஜ்ஞாநமும் அகண்டமாயிருக்கும் என்பதிதன் கருத்து. (௩)

வான மேயென வளவற வயங்குறும் பிரம
மான வங்கதிற் சிற்கலை விசேடமென் றறிவாய்
மானி டங்கட வுளர்விலங் கெனுந்தகை மருவான்
ஞானி யாவையுந் தன்வடி வாகவே நண்ணும்.

(ப - ரை.) வானமே என - ஆகாசம் போலவே, அளவு அற வயங்குறும் - எல்லையற விளங்குகிற, பிரமம் ஆன - ப்ரஹ்மமாகிய, அங்கு அதில் - அதனிடத்தே, சிற்கலை - ஞான கலையே, விசேடம் என்று அறிவாய்—, ஞானி - ஞானியானவன், மானிடம் கடவுளர் விலங்கு என்னும் தகை மருவான்—, யாவையும் - எல்லாவற்றையும், தன் வடிவு ஆகவே நண்ணும் - தனதுருவமாகவே பாவிப்பன், எ - று.

(வி - ரை.) வயங்குறும்-ஒருசொல், பகுதி வயங்குறு. விலங்கு - ம்ருகாதிகள். தகை- தன்மை. மருவல் - பொருந்தல். சிதாகாஶஸ்வரூபனாகவும் ஜீவன் முக்தனாகவும் இருக்கும் இந்த ஶிவயோகிக்குப் புண்ய கர்மத்தினால் ஸித்தமான தேவத்வமும், புண்யபாப மிஶ்ர கர்மத்தினால் மனுஷ்யத்வமும், பாபகர்மத்தினால் திர்யக்ப்ராணித்வமும் இல்லை; பின்னை யாதெனின், ஸர்வத்ர பரிபூர்ணமான சிதாகாஶ ஸ்வரூபத்வமொன்றே யிருக்கும் என்ப திதன் கருத்து. (௪)

அங்கலேபத்தலம் - முற்றும்.

௨

ஓம் தக்ஷாத்வரஹராய நம:

தொண்ணூற்றொன்பதாவது

# (எ) சுபராஞ்ஞத்தலம்.



[அதாவது - அங்கலேபமில்லாத பிரவயோகி பாசபஞ்சக ரஹிதனு யிருப்பதனு லும், வ்யாபகனு யிருப்பதனுலும், ஏகத்வமடைந் திருப்பதனுலும், தன்னை வேருகவும் மற்றவர்களைத் தனக்கு அந்யர்களாகவு மறியாமலும், ஸம்யோக வியோகங்கள், பந்தமுக்தி கள், ஸுகதுக்கங்கள், ஜ்ஞாநாஜ்ஞாநங்கள், ஔத்க்ருஷ்ட்ய நைக்ருஷ்ட்யங்களில்லாமலு மிருப்பவனே சுபராஞ்ஞன் என்பது.]

கலிநிலைத்துறை.

ஏக மாகியே யறிவுரு வாயள விசையா
தாகு மோர்பிர மத்தினிற் கலந்திடு மரிய
யோகி யாமவன் றன்னையும் பரனையு முணரும்
பாகு பாடுறு மியல்பினை யுடையனே பகராய்.

(ப - ரை.) ஏகம் ஆகியே - ஒன்ருகியே, அறிவுருவாய் - ஞானவடிவாகி, அளவு இசையாது ஆகும் - அளவுக்கடங்காத தாகிய, ஓர் - ஒப்பற்ற, பிரமத்தினில்—, கலந்தி டும் - கலக்கிற (ஒடுங்கும்), அரிய - அருமையாகிய, யோகியாமவன்—, தன்னையும் பரனை யும்—, உணரும் - அறிதற்குரிய, பாகுபாடு உறும் - பாகுபாட்டினை யடைகிற, இயல் பினை உடையனே - இயல்புடையனே, பகராய் - சொல்லாய், எ - று.

(வி-ரை.) "திரிவிதவுலகத்தரி தொரு ஞானி" என்பவாகலின் 'அரிய யோகி' என்ருர். பாகுபாடு - பாகுபடுதல் (பகுக்கப்படுதல்). உடையனே வென்னு மோகாரம் எதிர்மறை. தேஜோமயமாகவும், "ஏகமேவாத்விதீயம் ப்ரஹ்மம்" என்னும் ஶ்ருதிப்ரமாணத்தினல் ஸ்வகத ஸஜாதீய விஜாதீய பேத ஶூந்யமாகவும், சிதாநந்த ஸ்வரூபமாகவும், ஶாஸ்வத மாகவும், நிர்மலமாகவு மிருக்கும் பரப்ரஹ்மத்தில் ஸாமரஸ்யதை யடைந்திருக்கும் ஶிவயோகிக்குத் தன்னையாவது மற்றெதையாவது அறிவதில்லை என்பதிதன் கருத்து. (௧)

ஞான சீலமே வினற்குநீ நானெனு மயலோ
டான வின்பதுன் பம்புணர் வகறலே வாதி
மான ஞாதுரு ஞேயம்வா லறிவறி யாமை
யீன மேலொடு பந்தம்வீ டிவைமுத லில்லை.

(ப - ரை.) ஞான சீலம் மேவினற்கு - ஞானவொழுக்கத்தை யடைந்தவனுக்கு, நீ நான் என்னும் மயலோடு—, ஆன - உண்டாகிய, இன்பதுன்பம் - சுகதுக்கங்கள், புணர்வு அகறல் - கூடுதல் பிரிதல், தேவாதி மானம் - தேவாதிகளில் அபிமாநம், ஞாதுரு ஞேயம்—, வால் அறிவு அறியாமை—, ஈனம் மேலொடு - இழிவு உயர்வு என்பவற்ருேடு, பந்தம் வீடு-பந்த மோக்ஷங்கள் ஆகிய, இவை முதல்-இவை முதலியவை, இல்லை—, எ-று

(வி - ரை.) வாலறிவு - மெய்யறிவு. அறியாமை - அவிவேகம். (௨)

தேச காலமற் றொளிதரு தேசடை தலினு
லாசி றன்னையும் பரனையு மறிந்திடா மையினு
லேசி றன்னொடு பரமறி யாத்தல மிதனைப்
பேசு மாகம மென்றறி யருந்தவப் பெரியோய்.

(ப-ரை.) அருந்தவம் - அரிய தவத்தொழிலை மேற்கொண்ட, பெரியோய் - பெரியோனாகிய அகத்திய முனிவனே, தேசகாலம் அற்று - தேச காலங்களை நீங்கி, ஒளி தரு - ஒளிர்கின்ற, தேசு அடைதலினால் - ஒளியுருவாய் பொருந்துதலாலும், ஆசு இல் - குற்றமற்ற, தன்னையும் பரனையும் அறிந்திடாமையினால் - தன்னையும் பரனையும் அறியாமையாலும், ஏசு இல் - பழிப்பில்லாத, தன்னொடு பரம் அறியா தலம் (என்று) இதனை—, ஆகமம் பேசும் என்று—, அறி - அறியக்கடவை, எ - று.

(வி-ரை.) ஒளிதரு - ஒருசொல், பகுதி ஒளிதா. அறிந்திடாமை என்பதில் பகுதி அறிந்திடு. ஏசு-முதனிலைத் தொழிற்பெயர். பேசல் - புகழ்தல். தன்னொடு பரம் அறியாத் தலம் - ஸ்வபராஜ்ஞஸ்த்தலம். தேசகால வரையிலடங்காத ஜ்ஞாந ஜ்யோர்திமயப் பேற்றால் தான் அந்யன் என்னும் ஜ்ஞாநம் தொலைவதனால் ஸ்வபராஜ்ஞஸ்த்தலம் என்பதிதன் கருத்து. (௫)

சுபராஞ்ஞத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் ஹராய நம:

நாருவது

(அ) பாவாபாவலயத்தலம்.

[அதாவது - அஹம்பாவ மில்லாமலிருக்கும் ஶூந்யமான சிதாகாஶத்தில் ஐக்யத்தை யடைந்திருக்கும் ஸ்வபரஜ்ஞாந மில்லாத லிங்கைக்யனுக்கு எந்த வஸ்துவினிடத்திலும் பாவாபாவங்களில்லா திருப்பதே பாவாபாவலயம் என்பது.]

கலிநிலைத்துறை.

பகுத்து நின்றுநீ நானெனும் பரிசில தாகி
யுகப்ப டைந்திடு சூனிய சிதம்பரத் தொன்றுந்
தகப்பெ ருந்தகை யாகிய யோகியைச் சாரா
மிகுத்து நின்றபா வாபாவ மெனவறி மேலோய்.

(ப-ரை.) மேலோய் - மேலானவனாகிய அகத்திய முனிவனே, பகுத்து நின்று - பகுக்கப்பட்டு நின்று, நீ நான் என்னும் பரிசு இலது ஆகி - நீ நானென்னுந் தன்மையில்லாததாகி, உகப்பு அடைந்திடு - மகிழ்வடைதற்குரிய, சூனிய சிதம்பரத்து - சூனியம் போன்றதாகிய சிதாகாசத்தில், ஒன்று ஆம் - ஒன்றுபடுதற்குரிய, தக - தகுதியாக, பெருந்தகை ஆகிய யோகியை —, மிகுத்து நின்ற பாவாபாவம் சாரா என - மிக்கு நின்ற பாவாபாவங்கள் அடையாவென்று, அறி - அறியக்கடவை, எ - று.

(வி-ரை.) பெருந்தகை - பெருங்குணமுள்ளவன், (பெருங்குணம் - ஞானகுணம்). பாவாபாவம் - பாவ நிர்ப்பாவம், (நினைவு நினையாமை). சூனியம் - ஒன்றுமில்லாமை. (க)

ஈங்கு நானெனும் பாவத்திற் கிலாமைவந் துறலாற்
றீங்கி லாதவான் மாவினத பாவமுஞ் செப்புற்
றாங்கி லாமையை யடைதலா லச்சிவன் முத்த
னேங்கு பாவமோ டபாவமு மிலனென வுணர்வாய்.

(ப-ரை.) ஈங்கு - இவ்விடத்து, நான் என்னும் பாவத்திற்கு—, இல்லாமை வந்து உறலால் - இன்மை வந்து பொருந்தலாலும், தீங்கு இல்லாத ஆன்மாவினது அபாவமும்—, செப்புற்று - சொல்லப்பட்டு, ஆங்கு - அவ்வாறே, இல்லாமையை அடைதலால் -

இன்மையை யடைதலாலும், அ - அந்த, சீவன்முத்தன்—, ஓங்கு - உயர்ந்த, பாவமோடு அபாவமும் இலன் என - பாவாபாவங்களில்லாதவ னென்று, உணர்வாய் - அறியக் கடவாய், எ - று.

(வி-ரை.) நான் என்னும் பாவமும், அதனது அபாவமும் இல்லாமையால் பாவாபாவங்கள் நீங்கினவனுய் ஜீவன்முக்தன் விளங்குகிறுன் என்பதிதன் கருத்து. (௨)

பந்த மோவிய பெருமையோ னின்பதுன் பத்தில்
வந்த பாவமு மபாவமு மிலனென மதிப்பா
யுந்து ஞானியாய்ப் பாவமு மபாவமு மொழித்தோ
னந்தி லுள்ளதா யினுமில்ல தாயினு மறியான்.

(ப - ரை.) பந்தம் ஓவிய - பந்தம் நீங்கின, பெருமையோன்—, இன்பதுன்பத்தில் வந்த—, பாவமும் அபாவமும் இலன் என—, மதிப்பாய் - அறியக்கடவை, உந்தும் ஞானியாய் - மிக்க ஞானமுடையவனுய், பாவமும் அபாவமும் ஒழித்தோன்—, உள்ளது ஆயினும் இல்லது ஆயினும் அறியான்—, எ - று.

(வி - ரை.) மூலாஹங்கார மில்லாதவனுகவும் ஜ்ஞாநஸ்வரூபனுகவுமிருக்கும் மஹாபுருஷனுக்கு ஸுகதுக்காதிகளின் சம்பந்தங்களில் பாவாபாவங்களிருப்பதில்லை, பாவாபாவங்களை விடுகிறவனுகிய பரசிவயோகிக்கு யாதொரு சித்ஸ்வரூபமான ஜ்யோதியில் ஸத்ரூபமாவது அஸத் ரூபமாவது யாதும் காணப்படுகிறதில்லை என்பதிதன் கருத்து. அந்தில் - அசை. (௩)

தோன்று பாவமு மபாவமு மெங்கணுந் தோயான்
சான்ற தாஞ்சிவத் தேகமாந் தகையினே னதனு
லான்று நின்றபா வாபாவ லயத்தல மதனை
ஞான்ற வார்சடைக் கடவுளா கமமெலா நவிலும்.

(ப - ரை.) சான்று ஆம்-சாக்ஷியாகிய, சிவத்து - சிவமென்னும் பொருளினிடத்தில், ஏகம் ஆம் தகையினேன் - ஒன்றுபடுந் தன்மையை யுடையவன், எங்கணும்-எவ்விடத்தும், தோன்று - உண்டாகிற, பாவமும் அபாவமும் தோயான்—, அதனுல்—, ஆன்று நின்ற - அகன்று நின்ற, பாவாபாவலயத்தலமதனை—, ஞான்ற - தொங்குகிற, வார்சடை - நீண்ட சடையையுடைய, கடவுள் - சிவபெருமானுற் சொல்லப்பட்ட, ஆகமம் எல்லாம் —, நவிலும் - சொல்லும், எ - று.

(வி-ரை.) சான்றது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. தோய்தல்-பொருந்தல். சிவத்து ஏகமாந்தகையினேன்-லிங்கைக்யன். ஆன்று அகன்று என்பதன் மரூஉ. தலமதனை என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி, மலமாகிய அதனை யென்றுரைப்பினு மிழுக்காது. ஞான்ற என்பதற்குப் பகுதி ஞால். ஞான்றவார் சடைக் கடவுளாகமம் - சிவாகமம். சிவலிங்கைக்யனுன சிவயோகிக்கு எந்த வஸ்துவினிடத்தாகிலும் பாவாபாவங்களில்லையாதலால், இது பாவாபாவலயஸ்தலமென்று சொல்லப்படும் என்பதிதன் கருத்து. (௪)

பாவாபாவலயத்தலம் - முற்றும்.

---

உ

ஓம் பூஷதந்தபிதே நமஃ.

நூற்றொன்றாவது

## (கூ.) ஞானசூனியத்தலம்.

—ooo—

[அதாவது-ஸ்வபரஜ்ஞாந ஶூந்யனாகவும், பாவாபாவலய ஸம்பந்நனாகவும், பரப்ரஹ்ம ஸ்வரூபனாகவுமிருக்கும் ஶிவயோகியினிடத்தில் ஏகத்வமடைந்து இது உத்தமமானது இது அதமமானது என்னும் பாவாபாவ விசாரயுக்தமான விகல்பஜ்ஞாநமின்மையே ஞானசூனியம் என்பது.]

கலிநிலைத்துறை.

பராப ரத்தினை விழைந்தபா வாபாவ விவேகம்
விராவு நற்பெரு ஞானமொண் பிரமத்தின் மேவுற்
றிராதெ னப்பட லான்ஞான சூனிய மிசைக்கு
மராவு டைச்சடை யெம்பிரா னாகம மனைத்தும்.

(ப - ரை.) அரா உடை-பாம்பையுடைய, சடை-சடாபாரத்தைச் சுமந்த, எம்பிரான்-சிவபெருமானது, ஆகமம் அனைத்தும் - ஆகமங்களெல்லாம், பராபரத்தினை—, விழைந்த - விரும்பிய, பாவாபாவ விவேகம்—, விராவும் - பொருந்தின, நல் பெரு ஞானம்—, ஒள் பிரமத்தில் மேவுற்று இராது எனப்படலால் - ஒட்பமாகிய பிரமத்திற் பொருந்தியிராதென்று சொல்லப்படுதலால், ஞானசூனியம் இசைக்கும் - ஞானசூனியமென்று இந்தத் தலத்தைச் சொல்லும், எ - று.

(வி - ரை.) அனைத்தும் - எல்லாவற்றாலும். ஒட்பம் - அழகு. ஞானசூனியம் - ஜ்ஞாநாபாவம். இசைத்தல் - சொல்லல். பராபரம் - பரம் அபரம். பாவாபாவ விவேகம் - பாவாபாவஜ்ஞாநம். (க)

நீரி னீரும்வெந் நெருப்பினி னெருப்புமே போல
வாரு மோர்பிர மத்தினி லயிக்கமுற் றடைந்த
பேரி னோன்விபா கத்தினாற் காண்குறா னென்று
சாரு மாகம நெறியுணர்ந் தவருரை தருவார்.

(ப - ரை.) நீரில் நீரும்—, வெம் நெருப்பினில் நெருப்புமே போல—, ஆரும் - எங்கும் நிறைந்த, ஓர் பிரமத்தினில் அயிக்கம் உற்று அடைந்த பேரினோன்—, விபாகத்தினால் காண்குறான் என்று—, சாரும் - தாமடைந்த, ஆகம நெறி உணர்ந்தவர்—, உரை தருவார் - சொல்லுவார், எ - று.

(வி - ரை.) ஆரும் ஓர் பிரமம் - மஹாலிங்கம். அயிக்கமுற்றடைந்த பேரினோன் - பாவாபாவலயன். விபாகம் - வேறுபாடு (பிந்நம்). காண்குறான் - காணமாட்டான், (பகுதி காண்(குறு). ஆகமநெறி - ஶிவாகம மார்க்கம். உரைதருவார் - ஒருசொல், (பகுதி உரைதா).

பேத மாறிய வனைத்துமா மொருபிர மத்தின்
ஞாது ராதிகள் வழக்கினாற் றோன்றுறு ஞானம்
யாது மேவுறு மியாதுமே வாதென வெய்ப்பாய்
போத வாரமு துண்டருந் தமிழ்க்கலை புகன்றோய்.

(ப - ரை.) போதம் ஆர் அமுது உண்டு - ஞானமாகிய நிறைந்த அமிர்தத்தைப் பருகி, ந - அருமையாகிய, தமிழ்க்கலை புகன்றோய் - தமிழ் மொழி மொழிந்தவனே, பேதம் மாறிய - வேற்றுமை யொழிந்த, அனைத்தும் ஆம் ஒரு பிரமத்தில்—, ஞாதுரு ஆதிகள்—,

வழக்கினால்—, தோன்றுறும் - காணப்படும், ஞானம்—, யாது மேவுறும் யாது மேவாது என—, எய்ப்பாய் - அறியக்கடவை, எ - று.

(வி - ரை.) போதவாரமுதுண்டருந் தமிழ்க்கலை புகன்றோய் என்ற விளி அகத்திய முனிவரைக் குறித்தது. வழக்கினால் - வழக்கத்தால். எய்த்தல் - அறிதல். எல்லா ஸ்வரூப மானதும், பேதஸங்கையற்றதுமாகிய பரதத்வத்தில் ஜ்ஞாத்ரு முதலிய வ்யவஹாரத்தினா லுண்டாகும் ஜ்ஞானமானது ஏற்படாது என்பதிதன் கருத்து. (ங)

வானமா மெனவடிவில்சின் மாத்திர மாகி
மான மின்றிவே றொன்றொடும் படாதுதான் மலர்ந்தொன்
றான வோர்பிர மத்தினி னானெனு மதனான்
ஞான பாவனை பாவிப்போன் யாவனீ நவில்வாய்.

(ப - ரை.) வானம் ஆம் என - ஆகாயமாமென்று சொல்லும்படி, வடிவு இல் - உருவமில்லாத, சின் மாத்திரம் ஆகி—, மானம் இன்றி - அபிமானமில்லாமல், வேறு ஒன்றொடும் படாது - மற்றொன்றுடனும் கலவாமல், தான் மலர்ந்து - தானாகவே விரிந்து, ஒன்று ஆன - ஏகரூபமாகிய, ஓர் பிரமத்தினில் நான் என்னும் அதனால்—, ஞானபாவனை பாவிப்போன் யாவன்—, நீ நவில்வாய் - நீ சொல்லக்கடவை, எ - று.

(வி - ரை.) ஓர் பிரமம் - ஒப்பற்ற பிரமம் ( மஹாலிங்கம் ). நவிலல் - சொல்லல். நிர்விகாரமாகவும், நிராகாரமாகவும், எல்லையில்லாததாகவும், நித்யமாகவுமிருக்கும் பரப்ரஹ்மமானது ஆகாஸத்தைப் போல அகண்டமாயிருக்கும் ; அந்தப் பரப்ரஹ்மமானது ப்ருதிவி முதலிய பூதங்கள், புதப்ருஹஸ்பதியாதி க்ரஹங்கள், அஸ்விந்யாதி நக்ஷத்ரங்கள், விஷ்ண்வாதி தேவர்கள், மனிதர்கள், பஸுபக்ஷியாதி ப்ராணிகள் முதலானவைகள் ஒன்று மல்லாமல் ஸச்சிதாநந்த ஸ்வரூபமாயிருக்கும் ; இவ்விதமான பரப்ரஹ்மத்தில் தாதாத்ம்யத்தை யடைந்திருக்கும் ஸிவயோகிக்கு விகல்பஜ்ஞான முண்டாவதில்லை என்பதிதன் கருத்து. (ச)

ஞேய மாகவொன் றெதிருற நின்றிடா மையினாற்
பாய ஞானசூ னியமென்றும் பாவிக்கப் படுமாற்
றூய தானசத் தாநந்த வடிவமாஞ் சோதி
மேய வோர்பரா காசமொத் தெங்கணும் விளங்கும்.

(ப - ரை.) ஞேயம் ஆக - காணப்படு பொருளாக, ஒன்று - ஒருபொருளும், எதிர் உற நின்றிடாமையினால் - எதிரே நில்லாமையால், பாய - பரவிய, ஞானசூனியம் —, என்றும் பாவிக்கப்படும்—, ஆல் - ஆதலால், தூயது ஆன - பரிசுத்த மானதாகிய, சத்து ஆநந்த வடிவம் ஆம் சோதி—, மேய - பொருந்திய, ஓர் - ஒப்பற்ற, பராகாசம் ஒத்து—, எங்கணும் விளங்கும் - எவ்விடத்தும் பிரகாசிக்கும், எ - று.

(வி - ரை.) ஞானசூனியம் - ஞானாபாவம். பாவிக்கப்படுதல் - நினைக்கப்படுதல், அறியப்படும் பொருளின்மையால் விஸேஷமாக ஸூந்யம் போனறதாய்ப் பாவிக்கப் படுகின்றது; ஜ்ஞாத்ரு ஜ்ஞேய முதலியவைகளால் ஸூந்யமும், ஜ்ஞானம் இச்சை முதலிய குணங்களால் ஸூந்யமும், முதலிலும் இடையிலும் கடையிலும் ஸூந்யமும், எங்கும் எப்போதும் இரண்டாவதாகிய பதார்த்தத்தால் ஸூந்யமுமாதலால் பாவிக்கப்படும் பொருள் யாதுமில்லாமல் ஸூந்யமாய்ப் பாவிக்கப்படுகின்றது; கேவலம் ஸச்சிதாநந்த ப்ரகாஸமாயுள்ளதும், இரண்டாவதில்லாததுமாகிய வடிவமும் பரமாகாஸமுமாகிய பரப்ரஹ்மமானது ஸூந்யம் போல விளங்குகின்றது என்பதிதன் கருத்து. (ரு)

சூனி யம்பெறு ஞானாதி கற்பனைச் சோதி
யான வொண்சிவ லிங்கமாந் தன்னுரு வதனிற்
றூனி ரண்டற வடைந்துள தகுதியோன் றனக்கு
ஞான மென்பதொன் றிலையென வறைகுவர் நல்லோர்.

(ப - ரை.) சூனியம் பெறும் ஞானதி கற்பனை—, சோதி ஆன ஒள் சிவலிங்கம் ஆம் தன் உருவதனில்—, இரண்டற அடைந்துள தகுதியோன் தனக்கு—, ஞானம் என்பது ஒன்று இல்லை என நல்லோர் அறைகுவர்—, எ - று.

(வி - ரை.) சோதி ஆன ஒள் சிவலிங்கம்-மஹாலிங்கம். இரண்டற வுடைந்துளோன்-அத்வைதமாய்க் கலந்திருப்பவன். அறைதல்-சொல்லல். ஜ்ஞாநேச்சா ஸங்கல்ப மிராததும், எல்லாப் பொருட் சாதநங்களில்லாததும், தனக்குமேல் ஓர் ஶ்ரேஷ்ட்ட மில்லாததும், ஸ்வயம் ப்ரகாஶ சித்ரூபமாயுள்ளதுமான ஜ்யோதிர்லிங்கமாகிய மஹாலிங்கத்தில் ஏகத்வத்தை யடைந்தவனுக்கு வ்ருத்திஜ்ஞாந நிகழ்ச்சி எவ்வாறு ஏற்படும்? அதாவது ஜ்ஞாநாதி ஸங்கல்ப ஶூந்யமாகவும், ஸர்வார்த்த ஸாதந ரஹிதமாகவும், ஜ்யோதிர்லிங்க ஸ்வரூபமாகவுமிருக்கும் ஸ்வப்ரகாஶத்தில் ஐக்யமடைந்திருக்கும் ஶிவயோகிக்கு வ்ருத்திஜ்ஞாந முண்டாவதில்லை என்பதிதன் கருத்து. (௬)

சாற்று காரணத் துவமொடு காரியத்தன்மை
யேற்ற சேடமோ டுற்றசே டித்துவ மிலானைப்
போற்று மோர்பர முத்தனென் றறைகுவர் புலவ
ராற்றல் சாறவத் துயர்தரு மகத்தியப் பெயரோய்.

(ப - ரை.) ஆற்றல் சால் - வல்லமை மிகுந்த, தவத்து - தவத்தினால், உயர்தரும் - உயர்ந்த, அகத்தியப் பெயரோய் - அகத்தியனென்னும் பெயரையுடையவனே, சாற்று - சொல்லப்பட்ட, காரணத்துவமொடு காரியத்தன்மை—, ஏற்ற - தகுதியாகிய, சேடமோடு உற்ற சேடித்துவம்—, இல்லானை - இல்லாதவனை, போற்றும் - (யாவரும்) போற்றுதற்குரிய, ஓர் - ஒப்பற்ற, பரமுத்தன் என்று—, புலவர் அறைகுவர்—, எ - று.

(வி - ரை.) தவத்தின் மிக்கதோராற்ற லின்மையால் அதனை 'ஆற்றல் சாறவம்' என்றார், அகத்தியர் கௌதமர் முதலியோரால் இந்திரன் முதலியோரடைந்த அருந் துயரே யிதற்குச் சான்று பகரும். சேடமோடு சேடித்துவங்களை ஶேஷ ஶேஷியென்பர் வடநூலார், இவற்றிற்குப் பொருள் முறையே அடிமையும் ஆண்டானும். புலவர் - அறிவுடையோர், (புலம் - அறிவு). எந்த ஜ்ஞாநிக்கு காரண நிலைமையாவது கார்யநிலைமையாவது அல்லது ஶேஷத்தன்மையாவது ஶேஷித்தன்மையாவது இல்லையோ, அந்த ஜ்ஞாநியே பரமுக்தன் என்று சொல்லப்படுவன் என்பதிதன் கருத்து. (எ)

ஞானசூனியத்தலம் - முற்றும்.

இவ்விதமாய் ஸ்வீக்ருதப்ரஸாதம், ஶிஷ்டோதநம், சராசரலயம், பாண்டம், பாஜநம், அங்கலேபம், ஸ்வபராஜ்ஞம், பாவாபாவலயம், ஜ்ஞாநஶூந்யம் என்னும் ஒன்பது ஸ்த்தலங்களில் கூறிய தர்மங்களுடனே கூடி யிருத்தலால் ஜ்யோதிர்லிங்கமாகிய மஹாலிங்கத்தில் இரண்டாவது பொருளில்லாது வ்ருத்திஜ்ஞாந மின்றி ஏகத்வமடைந்தபரமுக்தனும் அங்கஸ்த்தலத்து ஆறுமவனுமான ஐக்யனே மஹாலிங்கைக்யன் என்று அறியப்பட்டான்.

௬ - வது. மஹாலிங்கஸ்த்தலம் - முற்றிற்று.

---

ஆக - காப்பு பாயிரம் உள்பட செய்யுள் - அருக.

---

த்விதீய பரிச்சேதமாகிய
லிங்கஸ்த்தலம் ஸம்பூர்ணம்.

உ

ஓம் அவ்யக்ராய நம:

# அங்கலிங்க ஸம்பந்தம்.

## ஷட்விதலிங்கார்ச்சனை.

தேஹத்தில் குதம் குஹ்யம் நாபி ஹ்ருதயம் கண்டம் ப்ரூமத்யம் என்னும் ஷட் ஸ்த்தானங்களுள்ளதும், அந்த ஸ்த்தானங்களில் முறையே சதுர்தள ஷட்தள தஶதள த்வாதஶதள ஷோடஶதள த்விதளங்கள் என்னும் ஷட்வித தளங்களுள்ளதும், சதுரஸ்ரம் அர்த்தசந்த்ரன் த்ரிகோணம் ஷட்கோணம் வ்ருத்தம் சித்ரம் என்னும் ஷடாகாரங்களுள்ளதும், ப்ருதிவி அப்பு தேயு வாயு ஆகாஶம் ஆத்மா என்னும் ஷட்பூதங்களுள்ளதும், பீதம் ஶ்வேதம் ரக்தம் நீலம் ஸ்ப்படிகம் மாணிக்கம் என்னும் ஷட்வர்ணங்களுள்ளதும், வாதிஸாந்தம் பாதிலாந்தம் டாதிபாந்தம் காதிடாந்தம் அகாராதி ஷோடஶஸ்வரங்கள் ஹம் க்ஷம் என்னும் அக்ஷரங்களுள்ளதும், ய வா ஶி ம ந ஓம் என்னும் ஷட்ப்ரணவங்களுள்ளதும், ஆதாரம் ஸ்வாதிஷ்ட்டானம் மணிபூரகம் அநாஹதம் விஶுத்தி ஆஜ்ஞேயம் என்னும் ஷட்சக்ரங்களுள்ளதும், அந்தச் சக்ரங்களில் முறையே மூர்த்தீகரித்திருக்கும் ஆசாரலிங்கம் குருலிங்கம் ஶிவலிங்கம் ஜங்கமலிங்கம் ப்ரஸாதலிங்கம் மஹாலிங்கமாகிய ஷட்லிங்கங்களுண்டு. அவ்விலிங்கங்கள் கரஸ்த்தலத்தில் உள்ள இஷ்டலிங்கத்தின் வ்ருத்தம் மத்யம் கோமுகம் வர்த்துலம் நாளம் பீடம் என்னும் ஷட்ஸ்த்தானங்களில் இருக்கின்றனவெனவறிந்து, இஷ்டலிங்கத்திலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்கு ஸ்த்தூல ஜலத்தையும், சக்ரங்களிலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்கு ஶிவாநந்தம் பரிணமம் பரமாநந்தம் ஶாந்தி க்ஷமை ஸந்தோஷம் என்னும் ஷட்ஜலங்களையும் அபிஷேகஞ்செய்து, இஷ்டலிங்கத்திலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்கு ஸ்த்தூல கந்தத்தையும் சக்ரங்களிலிருக்கும் ஷட்வித லிங்கங்களுக்கு ப்ருதிவிநிவ்ருத்தி அப்பு நிவ்ருத்தி தேஜோநிவ்ருத்தி வாயுநிவ்ருத்தி ஆகாஶ நிவ்ருத்தி ஆத்மநிவ்ருத்தி என்னும் ஷட்கந்தங்களையும் லேபித்து, இஷ்டலிங்கத்திலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்கு ஸ்த்தூலாக்ஷதையையும் சக்ரங்களிலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்குச் சித்தம் புத்தி அஹங்காரம் மனம் ஜ்ஞானம் பாவம் என்னும் ஷடக்ஷதைகளையும் இட்டு, இஷ்டலிங்கத்திலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்கு ஸ்த்தூல புஷ்பத்தையும் சக்ரங்களிலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்கு மேற்கூறிய சதுர்தள ஷட்தள தஶதள த்வாதஶதள ஷோடஶதள த்விதள கமலங்களென்னும் ஷட்புஷ்பங்களையும் தரித்து, இஷ்டலிங்கத்திலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்கு ஸ்த்தூல தூபத்தையும் சக்ரங்களிலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்கு மேற்கூறிய கமலங்களின் வாஸனைகளென்னும் ஷட்தூபங்களையும் கொடுத்து, இஷ்டலிங்கத்திலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்கு ஸ்த்தூல தீபத்தையும் சக்ரங்களிலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்கு மேற்கூறிய பீத ஶ்வேத ரக்த நீல ஸ்ப்படிக மாணிக்க வர்ணங்களாகிய ஷட்தீபங்களையும் காட்டி, இஷ்டலிங்கத்திலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்கு ஸ்த்தூல நைவேத்யத்தையும் சக்ரங்களிலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்குக் கந்தம் ரஸம் ரூபம் ஸ்பர்ஶம் ஶப்தம் த்ருப்தி என்னும் ஷட்வித நைவேத்யங்களையும் படைத்து, இஷ்டலிங்கத்திலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்கு ஸ்த்தூல தாம்பூலத்தையும் சக்ரங்களிலிருக்கும் ஷட்விதலிங்கங்களுக்கு ஶ்ரத்தாபக்தி நிஷ்ட்டாபக்தி அவதாநபக்தி அநுபவபக்தி ஆநந்தபக்தி ஸமரஸபக்தி என்னும் ஷட்வித தாம்பூலங்களையும் ஸமர்ப்பித்து, மேற்கண்ட ஷட்விதலிங்கங்கள் மேற்கண்ட ஸ்த்தானங்களிலல்லாமல் க்ராணத்தில் ஆசாரலிங்கம் ஜிஹ்வாவில் குருலிங்கம் சக்ஷுவில் ஶிவலிங்கம் த்வக்கில் ஜங்கமலிங்கம் ஶ்ரோத்ரத்தில் ப்ரஸாதலிங்கம் ஹ்ருதயத்தில் மஹாலிங்கம் என்

றும், பின்னும் ரக்தத்தில் ஆசாரலிங்கம் மாம்ஸத்தில் குருலிங்கம் மேதையில் ஶிவலிங்கம் அஸ்தியில் ஜங்கமலிங்கம் மஜ்ஜையில் ப்ரஸாதலிங்கம் சர்மத்தில் மஹாலிங்கம் என்று மறிந்து, ஸர்வாங்கமும் லிங்கமயமாயிருக்கிறது என்னும் பாவத்தினுல் அஷ்டவிதார்ச்சனை செய்யவேண்டும். மேற்கூறிய ஷட்சக்ரங்களிலிருக்கும் ஷட்லிங்கங்களல்லாமல் தேஹத்தின் மஸ்தகம் ஶிகை ஶிகாந்தம் என்னும் ஸ்த்தாநங்களில் ஸஹஸ்ரதள த்ரிதள ஏகதளங்களுள்ள அக்ஷராத்மகம் அநக்ஷராத்மகம் நிஶ்ஶப்தம் என்னும் த்ரிநாதங்களுள்ள ப்ரஹ்மசக்ரம் ஶிகாசக்ரம் பஶ்சிமசக்ரம் என்னும் மூன்றுசக்ரங்களும், முறையே மஹாஸ்த்தலத்தில் கூறிய நிஷ்களலிங்கம் ஶூந்யலிங்கம் நிரஞ்ஜநலிங்கம் என்னும் த்ரிவித லிங்கங்களுமிருக்கின்றனவென்று அறியவேண்டும். மேற்கூறிய ஷட்சக்ரங்களும் இறுதியில் கூறிய த்ரிசக்ரங்களும் சேர்ந்த நவசக்ரங்களில் மேற்கூறிய ஷட்வித லிங்கங்களும் இறுதியில் கூறிய த்ரிவித லிங்கங்களும் சேர்ந்து நவலிங்கங்களாயிருக்கும்.

## யோகம்.

யோகம் ஸகுணயோகமென்றும் நிர்க்குணயோகமென்றும் இருவகையாகச் சொல்லப்படும். இவ்விருவகையோகங்களும் இயமம், நியமம், ஆஸநம், ப்ராணயாமம், ப்ரத்யாஹாரம், த்யாநம், தாரணை, ஸமாதியாகிய எட்டுறுப்புக்களை யுடையன; இவற்றுள்,

### ஸகுணஷ்டாங்கயோகம்.

**இயமம்** :—அஹிம்ஸா (கொல்லாமை), ஸத்யம் (வாய்மை), அஸ்தேயம் (திருடாமை), ப்ரஹ்மசர்யம் (விவாகமின்மை), க்ஷமை (பொறுமை), த்ருதி (தைர்யம்), தயை (கருணை), ஆர்ஜவம் (நேர்மை), மிதாஹாரம் (மித உண்டி), ஶௌசம் (தூய்மை) என பத்து வகைப்படும்.

**நியமம்**: — தபம், ஸந்தோஷம், ஆஸ்திக்யம் (ஶ்ரத்தை), தாநம், ஈஶ்வரபூஜை, ஸித்தாந்த ஶ்ரவணம், லஜ்ஜை (நாணம்), மதி, ஜபம், வ்ரதம் என பத்து வகைப்படும்.

**ஆஸநம்**:— ஸுத்தாஸநம், ஸித்தாஸநம், ஸிம்ஹாஸநம், ஸுகாஸநம், பத்ராஸநம், வீராஸநம் முதலியனவாக எண்பத்து நான்கு வகைப்படும்.

**ப்ராணயாமம்**:— பூர்வோத்தர முகமாயுட்கார்ந்து தந்தங்களினுல் தந்தங்களைத் தீண்டாமல், ஜிஹ்வாவையும் அசைக்காமல், நாஸாக்ர த்ருஷ்டிகூடி, ஶிவத்யாநம் செய்துகொண்டு, கநிஷ்டம் அநாமிகை என்னும் விரல்களினுல் இடநாஸியின் த்வாரத்திலிருக்கும் இடநாடியை ஈர்த்து, வலநாஸியின் த்வாரத்திலிருக்கும் பிங்கல நாடியினுல் தேஹாந்தர்க்கத வாயுவை அகாரோச்சாரணத்தினுல் பன்னிரண்டு மாத்திரைகாலம் ரேசித்து, அதன்மேல் அங்குஷ்டமென்னும் விரலினுல் பிங்கலநாடியை ஈர்த்து, இடநாடியினுல் வெளிப்புறத்து வாயுவை உகாரோச்சாரணத்தினுல் பன்னிரண்டு மாத்திரை காலம் பூரித்து, அதன்மேல் நாபீ ஹ்ருதயம் கண்டம் என்னும் மூன்று ஸ்த்தாநங்களுளொன்றில் மகாரோச்சாரணத்தினுல் பன்னிரண்டு மாத்திரைகாலம் கும்பித்து, இந்த ப்ரகாரம் செய்வதே ஶரீர ஜநித வாயு நிரோதநத்தை யுண்டாக்கும் ப்ராணயாமம் என்பதாம்.

**ப்ரத்யாஹாரம்** : — பாஹ்ய கர்ம பரித்யாகத்தினுல் சித்தத்தை அந்தர்முகத்திலடையச் செய்வதாம்.

**த்யாநம்**:— ஶிவசிந்தனை ப்ரவாஹமாம்.

**தாரணை**:—வாயுதாரணை பூதாரணை க்ரமங்களுள்ளனவாதலன்றிப் பரஶிவமென்னும் ஶுபாஶ்ரயத்தில் சித்தஸ்த்தாபநம் செய்வதாம்.

**ஸமாதி**:— த்யேய வஸ்துவில் மநோநிஶ்சலாத்மகமா யிருப்பதாம்.

## நிர்க்குணஷ்டாங்கயோகம்.

**இயமம்:** — தேஹேந்த்ரியாதிகளில் வைராக்யமாம் ; அதாவது ஸர்வம் ஶிவமென்னும் விஜ்ஞாநத்தால் இந்த்ரிய ஸமூஹத்தை யடக்குதல்.

**நியமம்:** — பரமாத்ம விஶேஷ ஆஸக்தியாம் ; அதாவது ஸஜாதீய வ்ருத்தியின் ப்ரவாஹமும் விஜாதீய வ்ருத்தியின் திரஸ்காரமும்.

**ஆஸநம் :** — ஸர்வவிஷயங்களில் உதாஸீநமும் உறுதியுமான நிலைமையாம் ; அதாவது இடைவிடா ஶிவசிந்தநம் ஸுகமாக வுண்டாகு மிடம்.

**ப்ராணயாமம்:**— விஷயார்த்தமான இந்த்ரிய நிரோதநமாம் ; அதாவது சித்த முதலிய ஸர்வ பாவங் (இருப்பு) களிலும் ஶிவத்தன்மையாக பாவித்தலால் ஸகல வ்ருத்திகளையும் நிரோதித்தல். ப்ரபஞ்சத்தை நிஷேதித்தல் ரேசகமென்னும் வாயு, ஶிவமேயானென்னும் வ்ருத்தி யாதோ அது பூரகமென்னும் வாயு, அதன்பின் அந்த வ்ருத்தியின் நிஶ்சலத்தன்மை கும்பகம்.

**ப்ரத்யாஹாரம்:**—விஷய விமுகத்தால் அந்தரங்காபிமுகமாம் ; அதாவது விஷயங்களில் ஶிவத்தன்மை யறிந்து மனம் சிவத்தி லழுந்துதல்.

**த்யாநம்:**— ப்ரஹ்மமே நானென்னும் ஐக்யாநுஸந்தாநமாம்; அதாவது ஶிவமே யான் என்னும் ஸத் வ்ருத்தியினால் நிராலம்பத் தன்மையாக நிற்றல்.

**தாரணை:**— ஸ்வாத்ம நிஷ்டையாம் ; அதாவது யாண்டு யாண்டு மனம் செல்கின்றதோ ஆண்டு ஆண்டு ஶிவத்தைக் காண்டலால் மனதை நிறுத்துதல்.

**ஸமாதி:**— நினைப்பு மறப்புகளில்லாத ஸ்வஸ்வரூபத்தில் ப்ரகாஶிப்பதாம்; அதாவது நிர்விகாரத்தன்மையினால் மீண்டும் வ்ருத்தியின் ஶிவாகாரத்தன்மையாக செவ்வனே த்யேயாகாரவ்ருத்தி ஶூந்யமாயிருத்தல் (த்வைதாநுஸந்தாநமின்மை).

## அஷ்டாங்கயோகம் ஷட்ஸ்த்தல ஸம்பந்தம்.

இயமாதி ஸகுணநிர்க்குணங்க யோகமானது பக்தாத்யைக்யாந்தமான அங்கஸ்த்தலமாயிருக்கிறது, எவ்வாறெனின்:—

**இயமம், நியமம்:** — இயம நியமங்கள் ஶ்ரத்தாபக்தி ரூபமாயிருப்பதனால், அப்படிப்பட்ட ஶ்ரத்தாபக்தியினால் ஆதார சக்ரத்திலிருக்கும் ஆசாரலிங்கத்தை ப்ருதிவ்யாங்க ஸமேதனாய் க்ரியாஶக்தியினாற் கூடிப் பூஜிப்பவனாகி, பக்தன் இயம நியமயோக முள்ளவனாயிருக்கிறான்.

**ஆஸநம் :**— ஆஸநமானது நிஷ்டாபக்தி ரூபமாயிருப்பதனால், அப்படிப்பட்ட நிஷ்டாபக்தியினால் ஸ்வாதிஷ்டாந சக்ரத்திலிருக்கும் குருலிங்கத்தை ஜலாங்க ஸமேதனாய் ஜ்ஞாநஶக்தியினாற் கூடிப் பூஜிப்பவனாகி, மாஹேஶ்வரன் ஆஸநயோக முள்ளவனாயிருக்கிறான்.

**ப்ராணயாமம் :** — சேதந மென்னும் ஸவிகல்ப நிர்விகல்பாத்மஜ்ஞாநத்திற்கும் அசேதநமென்னும் பாரமார்த்த வ்யவஹாரங்களுக்கும் பீஜரூபத்தினால் கர்ப்பீகரிக்கும் லயஸ்த்தாநமான நாதாத்மகமென்னும் ப்ரஸாதலிங்கம் பரமாகாஶம் என்னும் ஶிவபீஜத்தில் ப்ராணகலாத்மகமான ஆத்மபீஜம் மனோமாருதங்களுடன் கூடி லயமாகும் க்ரமமுள்ள ப்ராணயாமமானது அநுபவபக்தி ரூபமாயிருப்பதனால், அப்படிப்பட்ட அநுபவபக்தியினால் அநாஹதசக்ரத்திலிருக்கும் ஜங்கமலிங்கத்தை வாய்வாங்க ஸமேதனாய் ஆதிஶக்தியினாற் கூடிப் பூஜிப்பவனாகி, ப்ராணலிங்கி ப்ராணயாமயோக முள்ளவனாயிருக்கிறான்.

**ப்ரத்யாஹாரம்:—** ப்ராணலிங்கத்தில் லயிக்கும் மநோமாருதங்களைக் கலக்கவிடாமலிருக்கும் க்ரமமுள்ள ப்ரத்யாஹாரமானது அவதாநபக்தி ரூபமாயிருப்பதனுல், அப்படிப்பட்ட அவதாநபக்தியினுல் மணிபூரக சக்ரத்திலிருக்கும் ஶிவலிங்கத்தை அக்நயங்க ஸமேதனுய் இச்சாஶக்தியினுற் கூடிப் பூஜிப்பவனுகி, ப்ரஸாதி ப்ரத்யாஹாரயோக முள்ளவனுயிருக்கிறுன்.

**த்யாநம், தாரணை: —** லிங்கத்தின் த்யாநதாரணைகள் ஆநந்தபக்தி ரூபமாயிருப்பதனுல், அப்படிப்பட்ட ஆநந்தபக்தியினுல் விஶுத்தி சக்ரத்திலிருக்கும் ப்ரஸாதலிங்கத்தை ஆகாஶாங்க ஸமேதனுய்ப் பராஶக்தியினுற் கூடிப் பூஜிப்பவனுகி, சரணன் த்யாநதாரணையோக முள்ளவனுயிருக்கிறுன்.

**ஸமாதி: —** பூர்ணகும்பம் போலவும், நிவாததீபம் போலவும், நிஸ்தரங்காம்புதி போலவும், ஜ்ஞாத்ரு ஜ்ஞாந ஜ்ஞேயரூப த்வைத பாவமில்லாதிருக்கும் லக்ஷணமுள்ள ஸமாதியானது ஸமரஸபக்தி ரூபமாயிருப்பதனுல், அப்படிப்பட்ட ஸமரஸபக்தியினுல் ஆஜ்ஞேய சக்ரத்திலிருக்கும் மஹாலிங்கத்தை ஆத்மாங்க ஸமேதனுய்ச் சிச்சக்தியினுற் கூடிப் பூஜிப்பவனுகி, ஐக்யன் ஸமாதியோக முள்ளவனுயிருக்கிறுன்.

இந்தப்ரகாரமாய் இயமாத்யஷ்டாங்க யோகமுள்ளவனே ஷட்ஸ்த்தல முள்ள வீரஶைவனுயிருப்பதனுல், ஸர்வ ப்ரயத்நத்தாலும் மேற்கூறியவாறு கர்மாஷ்டாங்க ஜ்ஞாநாஷ்டாங்க யோகங்களை யப்யாஸம் செய்யவேண்டும்.

## ஷண்மூர்த்திலிங்கஸ்த்தலம்.

நிஷ்களலிங்கமத்தியில் சிச்சக்தி, அந்தச் சிச்சக்தியின் மத்தியில் ஶாந்த்யாதீதோத்தரகலை, அதன் மத்தியில் மஹாலிங்கம், அதன் மத்தியில் மஹாஸாதாக்யம், அதன் மத்தியில் பஶுபதி என்னும் கலாமூர்த்தி, அதன் மத்தியில் ஶிவன் என்னும் ஐக்யன், அவன் மத்தியில் உபமாதீதன், அவன் மத்தியில் ஆத்மா வுண்டாயிற்று. இது மஹாஸாதாக்ய ஸ்ருஷ்டியாம்.

அந்த நிஷ்களலிங்கமத்தியில் பராஶக்தி, அந்தப் பராஶக்தியின் மத்தியில் ஶாந்த்யாதீதகலை, அதன் மத்தியில் ப்ரஸாதலிங்கம், அதன் மத்தியில் ஶிவஸாதாக்யம், அதன் மத்தியில் மஹாதேவன் என்னும் கலாமூர்த்தி, அதன் மத்தியில் க்ஷேத்ரஜ்ஞன் என்னும் சரணன், அவன் மத்தியில் ஸதாஶிவன், அவன் மத்தியில் ஆகாஶம் உண்டாயிற்று. இது ஶிவஸாதாக்ய ஸ்ருஷ்டியாம்.

அந்த நிஷ்களலிங்கமத்தியில் ஆதிஶக்தி, அந்த ஆதிஶக்தியின் மத்தியில் ஶாந்திகலை, அதன் மத்தியில் ஜங்கமலிங்கம், அதன் மத்தியில் அமூர்த்திஸாதாக்யம், அதன் மத்தியில் பீமேஶ்வரன் என்னும் கலாமூர்த்தி, அதன் மத்தியில் கர்த்தாரன் என்னும் ப்ராணலிங்கி, அவன் மத்தியில் ஈஶ்வரன், அவன் மத்தியில் வாயு வுண்டாயிற்று. இது அமூர்த்திஸாதாக்ய ஸ்ருஷ்டியாம்.

அந்த நிஷ்களலிங்கமத்தியில் இச்சாஶக்தி, அந்த இச்சாஶக்தியின் மத்தியில் வித்யாகலை, அதன் மத்தியில் ஶிவலிங்கம், அதன் மத்தியில் மூர்த்திஸாதாக்யம், அதன் மத்தியில் பவன் என்னும் ப்ரஸாதி, அவன் மத்தியில் ருத்ரன், அவன் மத்தியில் அக்நி யுண்டாயிற்று. இது மூர்த்திஸாதாக்ய ஸ்ருஷ்டியாம்.

அந்த நிஷ்களலிங்கமத்தியில் ஜ்ஞாநஶக்தி, அந்த ஜ்ஞாநஶக்தியின் மத்தியில் ப்ரதிஷ்டாகலை, அதன் மத்தியில் குருலிங்கம், அதன் மத்தியில் கர்த்ருஸாதாக்யம், அதன் மத்தியில் ஸர்வன் என்னும் கலாமூர்த்தி, அதன் மத்தியில் சைதந்யன் என்னும் மாஹேஶ

வரன், அவன் மத்தியில் விஷ்ணு, அவன் மத்தியில் அப்பு வுண்டாயிற்று. இது கர்த்ரு ஸாதாக்ய ஸ்ருஷ்டியாம்.

அந்த நிஷ்களலிங்கமத்தியில் க்ரியாஶக்தி, அந்த க்ரியாஶக்தியின் மத்தியில் நிவ்ருத்தி கலை, அதன் மத்தியில் ஆசாரலிங்கம், அதன் மத்தியில் கர்மஸாதாக்யம், அதன் மத்தியில் அபவன் என்னும் கலாமூர்த்தி, அதன் மத்தியில் அந்தர்யாமி என்னும் பக்தன், அவன் மத்தியில் ப்ரஹ்மா, அவன் மத்தியில் ப்ருதிவி யுண்டாயிற்று. இது கர்மஸாதாக்ய ஸ்ருஷ்டியாம். அதன்மேல், ப்ரஹ்மாவால் ஸகல சராசரங்களு முண்டாயின.

## ப்ரவ்ருத்திக்ரமம்.

ப்ரவ்ருத்தி யென்றால் முன்னுக்கு ஆவரித்துக்கொண்டுபோதல். ஶக்திப்ரபஞ்சத்தின் வ்ருத்தியை இச்சிக்கத்தக்கதென்று முன்னரே சொல்லப்பட்டிருப்பதனால் ப்ரவ்ருத்திக்கு ஶக்தியே காரணமாயிற்று. நிஷ்களலிங்கம் சிச்சக்தியின் ஸ்ப்புரணத்தினால் மஹாலிங்கமாயிற்று, இந்த மஹாலிங்கத்திற்கு ஐக்யன் உபாஸகனானான்; மஹாலிங்கம் பராஶக்தியின் ஸ்ப்புரணத்தினால் ப்ரஸாதலிங்கமாயிற்று, இந்த ப்ரஸாதலிங்கத்திற்குச் சரணன் உபாஸகனானான்; ப்ரஸாதலிங்கம் ஆதிஶக்தியின் ஸ்ப்புரணத்தினால் ஜங்கமலிங்கமாயிற்று, இந்த ஜங்கமலிங்கத்திற்கு ப்ராணலிங்கி உபாஸகனானான்; ஜங்கமலிங்கம் இச்சாஶக்தியின் ஸ்ப்புரணத்தினால் ஶிவலிங்கமாயிற்று, இந்த ஶிவலிங்கத்திற்கு ப்ரஸாதி உபாஸகனானான்; ஶிவலிங்கம் ஜ்ஞாநஶக்தியின் ஸ்ப்புரணத்தினால் குருலிங்கமாயிற்று, இந்தக் குருலிங்கத்திற்கு மாஹேஶ்வரன் உபாஸகனானான்; குருலிங்கம் க்ரியாஶக்தியின் ஸ்ப்புரணத்தினால் ஆசாரலிங்கமாயிற்று, இந்த ஆசாரலிங்கத்திற்கு பக்தன் உபாஸகனானான். இது ப்ரவ்ருத்திக்ரமமாம்.

## நிவ்ருத்திக்ரமம்.

நிவ்ருத்தி யென்றால் பின்னுக்குக் கழித்துக்கொண்டுபோதல். பக்தி ப்ரபஞ்சத்தின் லயத்தை இச்சிக்கத்தக்கதென்று முன்னரே சொல்லப்பட்டிருப்பதனால் நிவ்ருத்திக்கு பக்தியே காரணமாயிற்று, அதனால் பக்தனானான்; இந்த பக்தன் ஆசாரலிங்க ஸம்யோகத்தினால் ஶ்ரத்தாபக்தியுடனிருப்பதே நிஷ்டாபக்தியாயிற்று, அதனால் மாஹேஶ்வரனானான்; இந்த மாஹேஶ்வரன் குருலிங்க ஸம்யோகத்தினால் நிஷ்டாபக்தி யுடனிருப்பதே அவதாநபக்தியாயிற்று, அதனால் ப்ரஸாதியானான்; இந்த ப்ரஸாதி ஶிவலிங்க ஸம்யோகத்தினால் அவதாநபக்தி யுடனிருப்பதே அநுபவபக்தியாயிற்று, அதனால் ப்ராணலிங்கியானான்; இந்த ப்ராணலிங்கி ஜங்கமலிங்க ஸம்யோகத்தினால் அநுபவபக்தியுடனிருப்பதே ஆநந்தபக்தியாயிற்று, அதனால் சரணனானான்; இந்தச் சரணன் ப்ரஸாதலிங்க ஸம்யோகத்தினால் ஆநந்தபக்தியுடனிருப்பதே ஸமரஸபக்தியாயிற்று, அதனால் ஐக்யனானான்; இந்த ஐக்யன் மஹாலிங்க ஸம்யோகத்தினால் ஸமரஸபக்தியுடனிருப்பதே முக்தியாயிற்று. இது நிவ்ருத்திக்ரமமாம்.

**ஶக்தியின் வல்லமையை பக்தியின் வல்லமையால் வென்று முக்தியடைதல் ஷட்ஸ்தல யுக்தியாம்.**

**அங்கலிங்கஸம்பந்தம் - முற்றும்.**

---

உ

ஓம் ஸஹஸ்ராக்ஷாய நம:

# அந்தியகதை.

[அதாவது - ஸ்ரீரேணுக கணநாதர் திக்விஜயஞ் செய்யுங்காலையில் பொதிகையை யடைந்து, அகஸ்த்ய முநிவருக்குபதேசித்து, லங்காபுரியை நணுகி, விபீஷணரது வேண்டுகோளின்படி ஆசார்யத்வத்தை வஹித்து, மூன்றுகோடி லிங்கங்களை ஏககாலத்தில் ஸ்தாபித்து, லங்கையை விட்டேகி, உலகங்களிளெல்லாம் சஞ்சரித்து, ஆங்காங்கு அநேக மஹிமைகளைப்புரிந்து, கடைசியாக ஸ்ரீருத்ரமுநீச்வரஸ்வாமிகளுக்கு ஆசார்ய பட்டாபிஷேகஞ்செய்து, கொல்லிபாக்கத்தில் தமது அவதாரக்ஷேத்ரமாகிய ஸ்ரீசைலமடைந்து, தாமுத்பவித்த ஸோமேச லிங்கமென்னும் மஹாலிங்கத்திலேயே ப்ரவேசித்தனர் என்பது.]

## ஸ்ரீரேணுகாகஸ்த்ய ஸம்வாதம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முக்கண னம்பி கைக்கு முன்சொலத் துவித ஞான
மக்கண நாத னிவ்வா றகத்திய முனிக்கு ணர்த்தி
நெக்குறு மனத்தி லீச னினைவொடு மவுனி யானான்
கைக்கம லங்கள் கூப்பிக் கடமுனி கசிந்து சொல்வான்.

(ப-ரை.) முக்கணன் - மூன்றுகண்களையுடையவனுகிய பரமசிவன், அம்பிகைக்கு - உமாதேவிக்கு, முன் சொல் - முற்காலத்திற்சொன்ன, அத்துவித ஞானம் - அத்வைத ஞானத்தை, அ - அந்த, கணநாதன் - கணநாயகனுகிய இரேணுகன், இவ்வாறு - இந்தப் பிரகாரம், அகத்திய முனிக்கு உணர்த்தி—, நெக்கு உறு மனத்தில் - நெகிழ்ந்துருகாநின்ற மனத்தில், ஈசன் நினைவொடும் மவுனி ஆனான்—, (பிறகு) கடமுனி - கும்பமுனியானவன், கைக்கமலங்கள் கூப்பி - கரகமலங்களைக் குவித்து, கசிந்து - மனமுருகி, சொல்வான் - கூறுவானாயினன், எ - று.

(வி-ரை.) அம்பிகைக்குச் சொல்லி என மேல் வருதலால் முக்கணன் என்றது பரமசிவனைக் குறித்தது. நெகு என்னும் பகுதியிற் ககரவொற்றிரட்டித்து இறந்தகாலங் காட்டிற்று. (க)

வருத்துறு பிறவி நோய்தீர் மருத்துவ நெஞ்சக் கோட்டந்
திருத்துறு முரவ ஞானச் செல்வவே தாக மங்கள்
கருத்துணர் புலவ நின்னின் கருணையா லடிய னேனுக்
குரைத்தருண் ஞான நூலா லுளத்துறு முவகை பெற்றேன்.

(ப-ரை.) வருத்துறு - வருத்துகிற, பிறவிநோய் - பிறவிப்பிணியை, தீர் - ஒழிக்கிற, மருத்துவ - வைத்தியனே, நெஞ்சம் கோட்டம் - மனக்கோணலை, திருத்துறும் - திருத்துகிற, உரவ - வலியுடையவனே, ஞானச்செல்வ - ஞானச்செல்வமுடையோனே, வேத ஆகமங்கள் - வேதாகமங்களை, கருதது உணர் - மனத்தினுலறிந்த, புலவ - அறிஞனே, நீ—, நின்கருணையால்—, அடியனேனுக்கு—, உரைதது அருள் - சொல்லியருளின, ஞானநூலால்—, உள்ளதது - மனத்தில், உறும் - மிகுந்த, உவகைபெற்றேன் - மகிழ்ச்சியை யடைந்தேன், எ - று.

(வி-ரை.) உரம் - வலி. மரக்கோட்டந் தீர்த்தல்போல மனக்கோட்டந் தீர்த்த வெளிதன்றென்பது போதர உரவ என்றார். புலம் - அறிவு. உவகை யென்பதில்

கை தொழிற்பெயர்விகுதி, (உவ பகுதி.) ஶிவயோக விஶேஷ மறிந்தவரே, ஶிவஜ்ஞானக் கடலே, வேதஶாஸ்த்ர முதலிய வ்யவஹாரங்களை நிர்வாஹஞ் செய்பவரே, பார்வை மாத்ரத்தால் ஸகல ஸம்ஸார பந்தங்களை யுதறினவரே, தமிச்சையின்படி நடக்கு மூல்லா ஸரே, தம் விளக்கத்தாலே விளங்குவோராகிய ஶிவஸ்வரூபரே, உமக்கு நமஸ்காரம், உமது திருவாய்மலரினின்று பிறங்கியதும் குற்றமற்றதுமாகிய இந்த ஶாஸ்த்ரத்தைக் கேட்டு என் சித்தமானது மகிழ்கின்றது, ஶிவமென்னும் ஜ்யோதியையும் பார்க்கின் றேன் என்பதிதன் கருத்து. (உ)

இன்றுநான் மனித யாக்கை யெய்திய பயன டைந்தே
னின்றுநான் முனிவர்க் கெல்லா மிறைவனும் பெரியோ னானே
னின்றுநா னவிச்சை யென்னு மிருள்விடி காலை பெற்றே
னின்றுநா னளவி னோன்பா லெய்த்ததற் குறுதி கண்டேன்.

(ப - ரை.) இன்று நான் மனித யாக்கை எய்திய பயன் அடைந்தேன்—, இன்று நான் முனிவர்க்கு எல்லாம் இறைவன் ஆம் பெரியோன் ஆனேன்—, இன்று நான் அவிச்சை என்னும் இருள் விடிகாலை பெற்றேன்—, இன்று நான் அளவு இல் நோன் பால் எய்த்ததற்கு உறுதி கண்டேன்—, எ - று.

(வி - ரை.) எய்தல் - அடைதல். இறைவன் - தலைவன். அவிச்சை அவித்யா என் னும் வடசொற்றிரிபு, அஜ்ஞானம் என்பது பொருள். விடிகாலை - விடியற்காலம். நோன்பு - விரதம், இது தவத்தொழி லெல்லாவற்றிற்கு முபலக்ஷணம். எய்த்தல் - இளைத்தல். உறுதி ஈண்டுப் பயனென்னும் பொருள் பயந்து நின்றது. (௩)

பரமநூ லிதனைக் கேட்க வருந்தவம் பயின்றோ ரென்போ
லொருவரு முலகி லில்லை யுமையொரு பாக னெங்கோ
னருளினா லடிய னேனை யடிமைகொண் டருள வேண்டி
மருவினை யென்று சீர்சான் மலயமா தவன்று தித்தான்.

(ப - ரை.) பரமம் - மேலான, நூல் - சாத்திரமாகிய, இதனைக்கேட்க—, அரு தவம் பயின்றோர் - அரியதவஞ் செய்தவர்கள், என்போல் ஒருவரும் உலகில் இல்லை—, உமை ஒரு பாகன் எங்கோன் - உமாதேவியை யொருபாகத்திலுடையவனாகிய எம்மிறை வனது, அருளினால்—, அடியனேனை அடிமைகொண்டு அருள வேண்டி—, மருவினை என்று - இங்கெழுந்தருளினை யென்று, சீர்சால் - சிறப்பின்மிக்க, மலயமாதவன் - அகத்தியன், துதித்தான்—, எ - று.

(வி-ரை.) அருளவேண்டி - அருள்செய்ய விரும்பி. மருவல் - எழுந்தருளல். மலயம் - பொதியமலை. பயிலல் - செய்தல். இரேணுக கணநாதர் முகத்தினின்றிறங்கியதும், உத்தம மானதும், ஶிவாத்வைதமானதுமான ஶாஸ்த்ரமானதனால் 'பரமநூல்' என்றார். (௪)

அறைந்தநூ லிதற்கு நீயே யதிகாரி யன்றி யில்லை
பிறந்திடா வடிவ முக்கட் பெருந்தகை யருளி னுக்குச்
சிறந்துளா யென்னு மாற்றுற் செப்பின னிதனைப் போல
மறைந்திடா திலகு ஞான சாதன மற்றொன் றில்லை.

(ப-ரை.) அறைந்த நூல் இதற்கு - என்னும் சொல்லப்பட்ட இந்த சாத்திரத்திற்கு, நீயே அதிகாரி அன்றி—, இல்லை-வேறொருவருமில்லை, பிறந்திடாவடிவ-பிறவாத வுருவுடை யோனே, முக்கண் பெருந்தகை அருளினுக்கு சிறந்துளாய் - மூன்று கண்களையுடைய பெரியோனாகிய சிவபெருமானது அருளுக்கு சிறந்த வுரிமையுடையை, என்னும் ஆற்றால் -

என்கிற ஹேதுவினால், செப்பினன் - சொல்லினேன், இதனைப்போல —, மறைந்திடாது இலகும் - மறையாமல் விளங்குகிற, ஞானசாதனம் மற்றொன்று இல்லை—, எ - று.

(வி - ரை.) அறைதல் - சொல்லல். அதிகாரி - உரிமையுடையோன். இதனைப்போல- இது ஞானசாதன மாதல்போல. ஞானசாதனம் - ஞானமடையத்தக்க கருவி (ஶிவா த்வைத ஶாஸ்த்ரம்). ஶிவப்ரஸாதத்திற்குப் பாத்ரமாயுள்ளவர் நீரொருவரேயன்றி மற்று யாவருமில்லை யென்று தீர்மானித்து நான் இவ்விதமான ஶிவாத்வைத ஶாஸ்த்ரத்தை யுமக்குபதேஶித்தேன், ஓ முனிவரே! ஶிவஜ்ஞாநத்திற்கு இதுபோன்ற ஸாதநம் ஓரிடத் திலு மில்லை என்பதிதன் கருத்து. (௫)

ஆகம சார மாகி யருமறைப் பொருணி றைந்து
சீர்கெழு கிரியை ஞானந் திகழ்த்து மிவ்விணையி னூலைப்
பாகம தடைந்த சீடன் பாலுகந் தளிப்ப தன்றி
மோகம தடைந்து ளோர்க்கு மொழிந்திடத் தக்க தன்றே.

(ப - ரை.) ஆகம சாரம் ஆகி—, அருமறைப்பொருள் நிறைந்து—, சீர்கெழு - சிறப் புப்பொருந்திய, கிரியை ஞானம் - கிரியை ஞானங்களை, திகழ்த்தும் - விளக்குகிற, இ - இந்த, இணை இல் நூலை - ஒப்பில்லாத சாத்திரத்தை, பாகம் அடைந்த - மலபரிபாக மடைந்த, சீடன்பால் - சீடனுக்கு, உகந்து அளிப்பது அன்றி - விரும்பியருள்செய்த லன்றி, மோகம் அடைந்துளோர்க்கு - மோகமடைந்திருப்பவனுக்கு, மொழிந்திடல் - சொல்லல், தக்கது அன்று - தகுதியானதல்ல, எ - று.

(வி - ரை.) ஆகமசாரம் - ஆகமப்பயன். மறைப்பொருள் - வேதார்த்தம். பாகமது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி, மோகமது என்பதும் அது. மோகம் - ப்ரபஞ்ச விருப்பம். இந்த ஶிவாத்வைத ஶாஸ்த்ரமானது உம்மால் எல்லா வுலகங்களிலும் பரவி நிலைபெறச் செய்யத்தக்கது; எல்லா மறிபவரும், எல்லாரையு மநுக்ரஹிக்கின்றவரும், பார்வதீ பதியுமாகிய ஶிவபெருமான் இந்த ரஹஸ்யப்பொருளை ஸகலலோகங்களின் ஸித்தியின்பொருட் டுபதேஶித் தருளினர்; ஆதலால், ஶிவஸித்தாந்த ஶ்ரேஷ்டங்களில் மிக்க வுத்தமமானதும், வேதவேதாந்த ஸாரம் ஜ்ஞாநம் ஆசாரமாகிய இவைகளை ப்ரவர்த்திக்கச் செய்கின்றதும், வீரமாஹேஶ்வரர்களால் க்ரஹிக்கவேண்டியதும், ஶிவா த்வைதத்தை விளக்குவதுமாகிய இந்த ஸித்தாந்தஶிகாமணியை, பரீக்ஷைசெய்து தக்க பரிபாகிக ளென்றறியப்பட்ட ஶிஷ்யர்களின் பொருட் டுபதேஶிக்க வேண்டியதன்றி வேறுவிதமாய் ஓரிடத்திலு முபதேஶிக்கக்கூடாது; இதன் ஶ்ரவணமாத்ரத்தால் எல் லாருக்கும் பாவம் நீங்கும்; இந்த ஶாஸ்த்ரமானது வ்யாபிக்கும் பொருட்டு என்னால் பூலோகத்தில் அவதரிக்கப்பட்டது; நீரும் இப்படிப்பட்ட ஶிவாத்வைத ஜ்ஞாநத்தைப் பரவச்செய்வீராக என்பதிதன் கருத்து. (௬)

இப்பரி சருளி யெங்க ளிரேணுகன் கடிதெ ழுந்தங்
கொப்பரு முனிவர் கோமு னுயர்விசும் பிடைக்க ரந்தா
னப்பெரு முனிவ னோக்கி யற்புத முடனி ருந்தான்
செப்பரும் வீரசைவ சித்தாந்த நூலு ணர்ந்து.

(ப - ரை.) எங்கள் இரேணுகன் - எமது இரேணுகன் என்னுங் கணநாதன், இ பரிசு அருளி - இவ்வாறருளிச்செய்து, கடிது எழுந்து - விரைவா யெழுந்து, அங்கு - அவ்விடத்திருந்த, ஒப்பு அரு முனிவர்கோ முன் - நிகரில்லாத முனிசிரேஷ்டராகிய அகத் தியற்கெதிரே, உயர் - உயர்ந்த, விசும்பு இடை - ஆகாசத்தில், கரந்தான் - மறைந்தான், அ - அந்த, பெருமுனிவன் - அகத்தியன், நோக்கி - பார்த்து, செப்பு அரும் - சொல்லு




விபீஷணா ஸ்ரீரேணுககணநாதரை மூன்றுகோடிலிங்கப்ரதிஷ்ட்டைசெய்ய ப்ரார்த்தித்தல். Copyright

தற்கரிய, வீரசைவ சித்தாந்த நூல் உணர்ந்து—, அற்புதமுடன் இருந்தான் - ஆச்ச ரியத்தோடிருந்தான், எ - று.

(வி - ரை.) கரத்தல் - மறைதல். கடிது கடியென்னு முரிச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம், இது எழுந்து என்னும் வினைகொண்டது. எதிரே - பார்த்துக்கொண் டிருக்க எனினுமாம். வீரசைவ ஸமயமாகிய வுத்தம ஸித்தாந்தத்தைப் பரிசுத்த மான மனத்தினால் கேட்கிறவன் மேலாகிய கதியை யடைவனாதலால் 'செப்பரும் வீரசைவ சித்தாந்தநூல்' என்றார். (எ)

## விபீஷணுபீஷ்டதாநம்.

வேண்டுரு வடைய வல்ல விழுமிய விரேணு கன்றான்
சேண்டொடு மதிலி லங்கைத் திருநகர் தன்னிற் சென்றான்
பூண்டிகழ் குவவுத் திண்டோட் பொருவலி விபீட ணன்றான்
காண்டலு முவகை பூத்துக் கரிப்பகை யணையி லுய்த்தான்.

(ப - ரை.) வேண்டு உரு - விரும்பும் வடிவை, அடைய வல்ல - பெறவல்லனாகிய, விழுமிய - மேலான, இரேணுகன்—, சேண்தொடு - ஆகாயத்தைத் தீண்டுகிற, மதில் - மதில்சூழ்ந்த, இலங்கை - இலங்கையாகிய, திருநகர்தன்னில் - அழகிய நகரத்தில், சென்றான் - போனான், (அவ்விடத்து) பூண்திகழ் - ஆபரணங்கள் விளங்கப்பெற்ற, குவவு - திரட்சியாகிய, திண் - திருடமான, தோள் - புயத்தையுடைய, பொரு - போர்செய்தற்குரிய, வலி - வலியுள்ள, விபீடணன்—, காண்டலும் - கண்டளவில், உவகைபூத்து - மனமகிழ்ந்து, கரிப்பகை அணையில் - சிங்காதனத்தில், உய்த்தான் - எழுந்தருள்வித்தான், எ-று.

(வி - ரை.) பொருதல் - போர்செய்தல். கரிப்பகை - சிங்கம். அணை - ஆஸநம். தமிச்சையாய் நடப்பவரும், தமிச்சையாய்த் தோன்றிய தேஹமுடையவரும், ஞானிபரு மாகிய இரேணுக ராதலால் 'வேண்டுரு வடையவல்ல விழுமிய விரேணுகன்' என்றார். (அ)

அருக்கிய முதல ளித்தங் கருச்சனை முறையி னாற்றித்
திருக்கிளர் கமலப் பொற்றாள் சென்னியின் வணங்கி நிற்பச்
செருக்கொழி யுளத்த னன்பாற் செய்பணி யுவந்தி யோகி
யிருக்கென வயலொ டுங்கி யிருந்தன னியம்ப லுற்றான்.

(ப - ரை.) அருக்கியம் முதல் அளித்து - அர்க்கிய முதலானவை செய்து, ஆங்கு - அவ்வாறே, அருச்சனை - அர்ச்சனையையும், முறையின் ஆற்றி - கிரமமாகச்செய்து, திரு கிளர் - அழகு விளங்குகிற, கமலம் - தாமரைமலர்போன்ற, பொன் தாள் - பொன் னடியை, சென்னியின் - சிரத்தினால், வணங்கி நிற்ப - தொழுதுநிற்க, யோகி - யோகி யாகிய கணநாதன், செருக்கு ஒழி - அகந்தை நீங்கின, உளத்தன் - மனத்தோனாகிய விபீடணன், அன்பால்—, செய் - செய்த, பணி - பணிவிடைக்கு, உவந்து - மகிழ்ந்து, இருக்க என - இருக்கக்கடவை யென்று நியமிக்க, அயல் - பக்கத்தில், ஒடுங்கியிருந் தனன் - ஒடுங்கியிருந்து, இயம்பல் உற்றான் - சொல்லத் தொடங்கினான், எ - று.

(வி - ரை.) அருக்கியம் - பூசை முறையினொன்று. கமலம் - ஆகுபெயர். இருக்கென இருக்க என வென்பதன் விகாரம். இருந்தனன் - முற்றெச்சம். (௯)

கண்ணுதல் கயிலை காக்குங் கணங்களிற் றலைவ நீயிம்
மண்ணுல குய்ய வந்த மாற்றமு முணர்ந்தி ருந்தேன்
புண்ணிய மூர்த்தி நீயிப் புரத்தினுட் டிருத்தாள் வைக்கப்
பண்ணிய தவங்க ளென்னோ வுணர்ந்திலன் பண்டி யானே.

(ப - ரை.) கண்ணுதல் - நெற்றிக்கண்ணனாகிய சிவபெருமானது, கயிலை காக்கும் - கைலாயமலையைக் காவல்செய்கிற, கணங்களில் தலைவ - கணநாதனே, நீ—, இ - இந்த, மண் உலகு உய்ய - மண்ணுலகத்தார் உய்யும் பொருட்டு, வந்த மாற்றமும் - அவதரித்த செய்தியும், உணர்ந்திருந்தேன்—, புண்ணியமூர்த்தி நீ - அறவுருவாகிய நீ, இ புரத்து இடை - இந்த நகரத்தில், திருத்தாள் வைக்க - திருவடி வைப்பதற்கு, பண்டு - பூர்வத்தில், யான் - நான், பண்ணிய தவங்கள் என்னோ—, உணர்ந்திலன் - அறிந்திலேன், எ-று.

(வி - ரை.) மண்ணுலகு - ஆகுபெயர். மூர்த்தி - உருவமுடையவன். (௧0)

பரித்துட லிருந்த தற்குப் பயனுனை யின்று கண்ட
தொருத்தரு மென்னை யொப்பா ருளர்கொலோ வென்று கூறக்
கருத்துவ கையினின் மூழ்கிக் கணங்கணு யகனு ரைப்பான்
பெருத்துள வறத்தி னின்போற் பெரியரிவ் வுலகி லில்லை.

(ப - ரை.) உடல் பரித்து இருந்ததற்கு - இவ்வுடம்பைச் சுமந்திருந்ததற்கு, உன்னை இன்று கண்டது பயன்—, என்னை ஒப்பார் - என்னை நிகர்ப்பவர், ஒருத்தரும் - ஒருவராயினும், உளர்கொலோ - உளரோ, என்று கூற—, கணங்கள் நாயகன் - இரேணுகன், கருத்து உவகையினில் - மனமகிழ்ச்சியாகிய கடலில், மூழ்கி—, உரைப்பான் - சொல்லுவான், பெருத்துள்ள அறத்தில் - பெரிதாகிய தர்ம மார்க்கத்தில், நின்போல் பெரியர்—, இவ்வுலகில் இல்லை—, எ - று.

(வி - ரை.) பரித்தல் - சுமத்தல். உளர்கொலோ வென்னு மோகாரம் எதிர்மறை. மூழ்கியென்றதற் கேற்ப உவகை கடலாக்கி யுரைக்கப்பட்டது. அறம் - ஆகுபெயர். இவ்வுலகிலில்லை யென்றமையால் அவ்வுலகிலுளரோ யானறியே னென்றது மாயிற்று. எப்போது நான் உம்மைத் தர்ஸித்தேனோ அப்போதே என் லங்காபுரியும் பயன் பெற்றதாயிற்று, ராக்ஷஸகுலமும் பயன் பெற்றதாயிற்று, என் ஜீவனமும் பயன் பெற்றதாயிற்று என்பது தோன்ற 'ஒருத்தரு மென்னை யொப்பா ருளர்கொல்' என்றார். (௧௧)

சங்கர பத்தி தன்னாற் றலைமையோய் நின்னைக் காண்பா
னிங்குற வடைந்தே மெம்பா லெய்துறும் வரமொன் றுண்டேற்
சங்கைய றவு ரைத்தி தருதுமென் றவனுரைப்பப்
பங்கய மலர்த்தாள் போற்றி யரக்கர்கோன் பகர லுற்றான்.

(ப - ரை.) சங்கரபத்தி தன்னால் - சிவபக்தி செய்தலால், தலைமையோய் - தலைமை பூண்டவனே, நின்னை —, காண்பான் - காணும்பொருட்டு, இங்கு —, உற அடைந்தேம்—, எம்பால் - எம்மிடத்து, எய்துறும் - பெறுதற்குரிய, வரம் ஒன்று உண்டேல்- ஒரு வரம் உண்டாயின், சங்கை அற - ஆசங்கையில்லாமல், உரைத்தி - கேட்கக்கடவை, தருதும் என்று அவன் உரைப்ப—, அரக்கர்கோன் - அரக்கர்க்கரசனாகிய விபீடணன், பங்கயமலர் - தாமரைமலர்போன்ற, தாள் - திருவடியை, போற்றி - வணங்கி, பகரலுற்றான் - சொல்லத் தொடங்கினான், எ - று.

(வி - ரை.) பான் செயவெனெச்சவாய்பாட்டு வினையெச்சம், இது அடைந்தேம் என்னும் வினைகொண்டது. 'சங்கரபத்தி தன்னாற் றலைமையோய்' என்றதனால் எல்லாப் பொருள்களையும் நன்குணர்ந்தவரென்பதும், இவரைத்தவிர உலகங்களில் இவ்வித பக்தியானது எவருக்கு மில்லையென்பதும், இவர் ஸகல ஶாஸ்த்ரங்களின் ஸாரத்தை யறிந்தவரென்பதும், ஸகல தர்மங்களையும் அநுஷ்டிக்கின்றவ ரென்பதும், ஆத்ம வித்யாதத்பரரென்பதும் பெறப்பட்டன. 'இங்குறவடைந்தேம்' என்றதனால் திக்விஜயம் செய்துகொண்டு கைலாஸகிரிக்குப் போகின்றவனாகிய நான் உமது ஶிவதர்மப்பேற்றைக்

கேள்விப்பட்டு ஆச்சர்யப்பட்ட மனமுடையவனாய் உன் ஸமீபம் வந்தனன் என்பது பெறப்பட்டது. (௧௨)

கலிவிருத்தம்.

இன்றுநீயிங் கெழுந்த ருளப்பெறு
நன்றி மேவிய நான்குறை யீதெனச்
சென்று கூறுஞ் செயலிலை யாயினு
மொன்று கூறுவ துண்டுனக் கின்றரோ.

(ப - ரை.) இன்று நீ இங்கு எழுந்தருளப்பெறும் - இன்று நீ யிங்கெழுந்தருளு தற்குரிய, நன்றி மேவிய - புண்ணியத்தையுடைய, நான்—, குறை ஈது என - குறை யாயிருப்ப திதுவென்று, சென்று கூறும் - தேவரீரிடத்தில் வந்து சொல்லிக்கொள்ளுதற் குரிய, செயல் - காரியம், இல்லை ஆயினும்—, உனக்கு இன்று கூறுவது ஒன்று உண்டு—, எ - று.

(வி - ரை.) அரோ - அசை. நன்றி - நன்மை (புண்ணியம்). 'இன்று கூறுவதுண்டு' என்றமையால் இதன்முன்பில்லை யென்றது மாயிற்று. ஒன்று - ஒருகாரியம். (௧௩)

எனக்கு முன்னவ னாகு மிராவணன்
சினக்கும் வென்றியி ராமன் சிலையுமிழ்
நுனிக்கு மம்புற நொந்துயிர் போம்பொழு
துனிக்க வன்றிது ரைத்திடன் மேயினான்.

(ப - ரை) எனக்கு முன்னவன் ஆகும் - எனக்கு முன்பிறந்தோனாகிய, இராவணன்—, சினக்கும் - சினந்த, வென்றி - வெற்றியையுடைய, இராமன் சிலை உமிழ் - ஸ்ரீராமபிரானது வில்லினின்றும் வெளிப்பட்ட, நுனிக்கும் - கூர்மையாகிய, அம்பு உற - பாணம்பட, நொந்து - வருந்தி, உயிர் போம்பொழுது—, உன்னி - ஆலோசித்து, கவன்று - துக்கித்து, இது - இந்தச் செய்தியை, உரைத்திடல் மேயினான் - சொல்லத் தொடங்கினான், எ - று.

(வி - ரை.) முன்னவன் - தமையன். சினத்தல் - கோவித்தல். உனி உன்னியென் பதன் விகாரம். கவலல் - துக்கித்தல். புண்யமானது பரிபக்குவமாயின் விரும்பப்பட்டது தானே ஸித்திக்கின்றதன்றோ, மாஹேஶ்வரஶிகாமணி யானவனும் எனக்கு ஸஹோ தரனுமான ராவணன் ஶத்ருக்கள் எதிர் காணாது ஆண்டான்; இந்த்ரன் முதலிய ஸகல தேவர்களும் எந்த ராவணனுடைய ஒப்பற்ற ப்ரதாபத்தை ஸஹிப்பதற்குத்தக்க ஆற்ற லில்லாதவர்களாய் ராஜ்யச் செல்வத்தை விட்டு நீங்கினார்களோ, அந்த ராவணனே கால வஶத்தினால் தனது மாறுபாடான நடக்கையால் விஷ்ணுமூர்த்தியின் அவதாரமாகிய ஸ்ரீராமபிரானால் யுத்தத்தில் அடிபட்டவனானான்; அந்த ராவணன் ராமபாணத்தாலடி பட்டு இறக்குங்காலத்தில், எஞ்சி நின்றவனாகிய என்னைப் பார்த்து மிக்க துக்கத்துடன் சொல்வதாயினான் என்பதிதன் கருத்து. (௧௪)

நங்கு லம்பெறு நன்மைப் பெருக்கினாற்
றிங்க ளென்னத் திசைகள் விளங்குறும்
பொங்கி ரும்புகழ்ப் புண்ணிய னாகுநீ
யிங்கொ ழிந்தனை யெம்பியென் றோதினான்.

(ப - ரை.) நம் குலம் பெறும் - நமது குலம் அடைந்திருந்த, நன்மைப் பெருக்கி னால் - புண்ணியமிகுதியால், திங்கள் என்ன - சந்திரன்போல, திசைகள் - திக்குகள் தோறும், விளங்குறும் - பிரகாசிக்கிற, பொங்கு இரும் புகழ் - மிகப் பெரிய புகழினை

புடைய, புண்ணியன் ஆகும் நீ - தருமவானுகிய நீ, எம்பி - எம்பியே, இங்கு ஒழிந்தனை என்று - இவ்விடம் விட்டு நீங்கினை யென்று, ஓதினுன் - சொல்லினன், எ - று.

(வி - ரை.) குலம் - வமிசம். எம்பி - என் தம்பி யென்பதன் மரூஉ. ஓ விபீஷணு, நன்கறிந்தவனே, மஹாபுத்திமானிலியே, மிக்கதர்மமுடையவனே, நாங்கள் அஜ்ஞானமுள்ளவர்களாய்ப் பெரியோர்களிடம் த்ரோஹஞ் செய்கின்றவராக விருந்து இவ்விதமான கதியை யடைந்தவராயினேம், கர்ம நிலைமையை மீறக்கூடாது என்பது இச்செய்யுளால் விளங்கிற்று. (கரு)

இலங்கை யொன்றவி லிங்கம் புதியவாய்
நிலங்க ளொன்பது கோடி நிறுவுவான்
மலங்க லின்றி மனங்கொண் டவற்றினு
ணலந்த யங்கறு கோடிக ணட்டினேன்.

(ப - ரை.) இலங்கை - இலங்கை நகரத்தில், ஒன்ற - பொருந்த, இலிங்கம் - லிங்கங்கள், புதியவாய் - புதியனவாக, நிலங்கள் - நிலங்களி லெல்லாம், ஒன்பதுகோடி நிறுவுவான் - ஒன்பது கோடியை பிரதிஷ்டை செய்யும் பொருட்டு, மலங்கல் இன்றி - சலநமில்லாமல், மனம்கொண்டு - நினைத்து, அவற்றினுள் - அவற்றுள்ளே, நலம் தயங்கு - நன்மை விளங்குகிற, அறுகோடிகள் - ஆறுகோடி லிங்கங்களை, நாட்டினேன் - பிரதிஷ்டை செய்தேன், எ - று.

(வி - ரை.) நிறுவல் - நிறுத்தல் (நாட்டல்). வான் செயவென்வாய்பாட்டு வினையெச்சம். (கசு)

கலிநிலைத்துறை.

மூன்று கோடிலிங் கங்களிங் கொழிந்தன முறைநீ
யூன்று வாயென வுரைத்திறந் தனனவ னுரையா
லான்ற வாகம முறையது செயத்துணிந் தகத்தெஞ்
ஞான்று நானினைத் திருந்தன னென்றிது நவில்வான்.

(ப - ரை.) மூன்றுகோடி லிங்கங்கள்—, இங்கு ஒழிந்தன - இவ்விடத்து ஸ்தாபியாதொழிந்தன, (அவற்றை) நீ—, முறை - ஆகம விதிப்படி, ஊன்றுவாய் என - ஸ்தாபிக்கக்கடவை யென்று, உரைத்து இறந்தனன்—, அவன் உரையால் - அவன்சொற்படி, ஆன்ற - விஸ்தாரமான, ஆகம முறை - ஆகமமுறையாக, அது செய்யத்துணிந்து—, அகத்து - மனத்தில், எஞ்ஞான்றும் - எப்பொழுதும், நான் நினைத்திருந்தனன் என்று—, இது நவில்வான் - இதனைச் சொல்வானுயினன், எ - று.

(வி - ரை.) ஊன்றல் - நாட்டல். ஆன்ற அகன்ற வென்பதன் மரூஉ. ஞான்று - பொழுது. நவிலல் - சொல்லல். நான் ஆறுகோடி லிங்கங்களை நன்கு ஸ்த்தாபித்தேன், ஆதலால் நீ மூன்றுகோடிலிங்கங்களை ஸ்தாபிக்கவேண்டும் என்றனன்; இவ்வாறு மனம் வருத்தமடைந்தவனும் ப்ராணுந்த மடைபவனுமான ராவணனுடைய வார்த்தையைக் கேட்டு, அவ்வாறே யாகுக என நான் ப்ரதிஜ்ஞை செய்தேன்; மிக்க ஶ்ரேஷ்ட்டமான மூன்றுகோடி ஶிவலிங்கங்களை ஒரே காலத்தில் விதிப்படி ப்ரதிஷ்ட்டை செய்யவேண்டியதென்று நான் தீர்மானித்தேன் என்பதிதன் கருத்து. (கஎ)

மூர்த்த மொன்றின்முக் கோடிலிங் கமுமுறை நிறுவித்
தீர்த்த வென்கருத் தினைமுடித் தருளெனச் செப்பி
யேத்தி நின்றன னரக்கர்கோ னிரேணுக னதுகேட்
டாத்த நன்றது புரிகுவ னென்றன னருளால்.

(ப - ரை.) மூர்த்தம் ஒன்றில் - ஒரு முகூர்த்த காலத்தில், முக்கோடி லிங்கமும் - மூன்றுகோடி லிங்கங்களையும், முறை - கிரமமாக, நிறுவி - ஸ்த்தாபித்து, தீர்த்த - பரிசுத்தனே, என் கருத்தினை முடித்தருள் எனச் செப்பி—, ஏத்தி நின்றனன் - துதித்து நின்றான், (யாரெனின்) அரக்கர்கோன் - விபீடணன், இரேணுகன் அது கேட்டு—, அருளால்—, ஆத்த - ஆப்தனே, நன்று - நல்லதாகிய, அது - அந்தக் காரியத்தை, புரிகுவன் என்றனன் - செய்வே னென்றான், எ - று.

(வி - ரை.) மூர்த்தம் - முஹூர்த்த மென்னும் வடமொழிச் சிதைவு. தீர்த்தன் - பரிசுத்தன். தீர்த்த என்றது அண்மைவிளி. கோன்-அரசன். ஆத்த-அண்மைவிளி. புரிதல் - செய்தல். மூன்றுகோடி லிங்கங்களையும் ஒரேகாலத்தில் ஸ்த்தாபிப்பதில் வல்ல ஓராசாரியரை யறியாமல் நான் இவ்வாறு தியங்கிக்கொண்டிருக்கிறேன், ஆதலால் ஶிவஶாஸ்த்ரம் விஶேஷமாயறிந்தவரும் ஶிவஜ்ஞாந நிதியுமான தேவரீர் எனக்கு ஆசார்யராயிருந்து என் கோரிக்கையை நிறைவேற்றக்கடவீர் என்று விபீஷணர் இறைஞ்ச, ஸர்வஜ்ஞராகிய ரேணுகர் அவ்வாறே யாகுக என ஒத்துக்கொண்டனர் என்பதிதன் கருத்து. (௧௯)

மூன்று கோடியா ரியவுரு வாயினன் முயன்று
மூன்று கோடிலிங் கங்களு முறையுளி வழாம
லூன்றி னொருங் கெயினரு ளொருவனு லன்றி
யூன்றி னனிருங் கணத்தினு ளுயர்ந்துள வொருவன்.

(ப - ரை.) இரு - பெரிய, கணத்தினுள் - கணங்களுள்ளே, உயர்ந்துள ஒருவன் - சிறந்துள்ள வொருவனாகிய ரேணுகாசார்யன், மூன்றுகோடி ஆரிய உரு ஆயினன் - மூன்றுகோடி ஆசார்ய ரூபம் கொண்டு, முயன்று—, மூன்றுகோடி லிங்கங்களும்—, முறையுளி வழாமல் - (ஶாஸ்த்ர) விதிப்படி தவறாமல், எயினருள் ஒருவனால் அன்றி - எயினருள்ளே யொருவனைக் கொண்டன்றி, ஒருங்கு ஊன்றினன் - முழுதும் (அந்த க்ஷணத்தில்) ஸ்த்தாபித்தான், எ - று.

(வி - ரை.) ஆயினன் - முற்றெச்சம். எயினர் - வேடர் - அந்தணர்

அரக்கர் கோனது கண்டுளத் தற்புத மடைந்து
நிரைக்கு மாமணி முடியக லிலம்பட விறைஞ்சி
யுரைக்கு மாறுள துதியெலா முரைத்திட வருளிச்
செருக்கு மாறிய கணேந்திரன் மறைந்தனன் சென்றான்.

(ப - ரை.) அரக்கர்கோன் - விபீடணன், அது கண்டு - அந்த மஹிமையைக் கண்டு, உள்ளத்து அற்புதம் அடைந்து—, நிரைக்கும் - வரிசையாகிய, மா - அழகிய, மணிமுடி - ரத்ந கிரீடமானது, அகல் - பரந்த, நிலம்பட - பூமியிற்படும்படி, இறைஞ்சி - வணங்கி, உரைக்குமாறு உள்ள - சொல்லத்தக்கவையாயுள்ள, துதி எல்லாம் உரைத்திட - தோத்திரங்கள் யாவும் சொல்ல, செருக்கு மாறிய - நிரஹங்காரனாகிய, கணேந்திரன் - இரேணுகன், அருளி - அருள்செய்து, மறைந்தனன் சென்றான் - மறைந்து போயினன் (அந்தர்த்தாநமாயினன்), எ - று.

(வி - ரை.) அற்புதம் - ஆஶ்சர்யம். கணேந்திரன் - கண இந்திரன் (கணநாயகன்). மறைந்தனன் - முற்றெச்சம். (௨௦)

சென்ற திக்கினை நோக்கின னஞ்சலி செய்தங்
கென்று மற்புட னிருந்தன னரக்கர்கோ னப்பா
னன்றி யுற்றருள் யோகிதா னல்லருள் புரிந்து
தன்ற னிச்சையிற் றடையற வுலகெலாஞ் சரித்தான்.

(ப - ரை.) அரக்கர்கோன் - விபீடணன், சென்ற - (இரேணுகன்) போன, திக்கினை நோக்கினன் - திசையைப் பார்த்து, அஞ்சலிசெய்து - கைகுவித்து வணங்கி, அங்கு - அவ்விடத்தில், என்றும் - எப்பொழுதும், அற்புடன் இருந்தனன் - அன்போடிருந்தான், அப்பால் - அதன்பின், நன்றி உற்று அருள் - நன்மையை மிகுதியாகச் செய்கிற, யோகி - யோகியாகிய இரேணுகன், நல் அருள் புரிந்து—, தன் தன் இச்சையில் - யதேச்சையாக, தடை அற - தடையில்லாமல், உலகு எல்லாம் - எல்லாவுலகங்களிலும், சரித்தான் - சஞ்சரித்தான், எ - று.

(வி - ரை.) நோக்கினன் - முற்றெச்சம். அற்பு அன்பு என்பதன் விகாரம். 'அற்புடன் இருந்தனன்' என்றதனால் விபீஷணர் ரேணுகருடைய ப்ரஸாதத்தால் ஶிவ பக்தி ரஸத்தில் மிக்க ப்ரீதியுள்ளவராய் ஸ்த்திரமாகிய ராஜ்யத்தைப் பரிபாலித்தனர் என்பது பெறப்பட்டது. (உக)

## ஸ்ரீரேணுகர் ஸ்ரீஶைல மடைதல்.

எண்ணி லாவகை யாடல்கொண் டோங்குறு மின்ப
மண்ணு ளோர்தமக் குதவின னுலாவினன் வந்தே
யண்ணன் மேவிய கொல்லிபாக் கத்தினை யடைந்தான்
கண்ணி னடி யவர்கள்கண் டுவந்திடக் கணேசன்.

(ப - ரை.) கணேசன் - இரேணுகன், என் இல்லா வகை - அளவற்ற விதங்களாக, ஆடல் கொண்டு - திருவிளையாடலைச் செய்துகொண்டு, மண் உள்ளோர்தமக்கு - உலகத்தாருக்கு, ஓங்குறும் - உயர்ந்த, இன்பம் உதவினன் - ஆநந்தத்தைத் தந்து, உலாவினன் வந்து - உலாவிக்கொண்டே வந்து, அடியவர்கள் கண்ணினால் கண்டு உவந்திட—, அண்ணல் மேவிய - சிவபிரான் எழுந்தருளி யிருக்கிற, கொல்லிபாகத்தினை அடைந்தான்—, எ - று.

(வி - ரை.) உதவினன் உலாவினன் - முற்றெச்சங்கள். உலாவுதல் - திக்விஜயஞ் செய்தல். அண்ணல் - பெருமையிற் சிறந்தோன், பெருமை யெனினுமாம், ஈண்டு ஸோமேஶ லிங்கத்தைக் குறித்தது. கொல்லிபாக்கம் - கொல்லீபாக்கம், இது த்ரைலிங்க தேசத்தின் கண்ணுள்ளதும், ரேணுகர் அவதார க்ஷேத்ரமுமாம். ரேணுகர் பரமாத்வைத பாவனையோடு கூடினவராகி, ஜனங்களால் த்ருஷ்டிக்கக் கூடினவரும் கூடாதவருமாக பூலோகத்தில் சஞ்சரித்து, சிலரைக் கருணாரஸத்தைப் பொழிகின்ற நோக்கத்தாலும், மற்றும் சிலரை ஶிவாத்வைதத்தை விளக்குவதாகிய வுபதேஶத்தாலும், வேறு சிலரை ஸகல மலங்களை நீங்கச்செய்வதாகிய ஸஹவாஸத்தாலும், பக்குவ கர்மமுள்ளவர்களும் புண்யவான்களுமாகிய ஜனங்களெல்லாரையும் க்ருதார்த்தராகச்செய்து, ஶிவஶாஸ்த்ரத்தில் ஆவலுள்ளவராய்த் தமது ப்ரபாவத்தைக் காட்டி, பிந்நமதஸ்த்தர்களும் துராசாரமுள்ளவர்களுமான பாஷண்டர்களைக் கண்டித்து, யந்த்ர மந்த்ர கலைகளில் ஸமர்த்தர்களும் புறமதஸ்த்தர்களுமான ஸித்தகூட்டங்களைத் தமது ப்ரபாவத்தால் வென்று, ஶிவாகமங்களை ஸ்த்தாபித்து, தமது அவதார க்ஷேத்ரமாகிய கொல்லீப்பாக்கத்தை யடைந்தனர் என்பதிதன் கருத்து. (உஉ)

ஆல யத்தினி லடைந்துசோ மேசனு மரனை
மால யற்கரி யான்றனை யன்பொடு வணங்கிச்
சால மெய்த்துதி செய்திரு தடங்க ணீரருவி
போல செக்குள முருகின னின்றிது புகலும்.

(ப - ரை.) ஆலயத்தினை அடைந்து—, சோமேசன் ஆம் அரனை—, மால் அயற்கு அரியான் தன்னை—, அன்பொடு வணங்கி—, சால - மிகுதியாக, மெய் துதி செய்து-உண்மையாக தோத்திரஞ் செய்து, தடம் - பெரிய, இரு கண் நீர் அருவி போல—, உள்ளம் நெக்கு - மனம் நெகிழ்ந்து, உருகினன் நின்று - உருகி நின்று, இது புகலும் - இதனைச் சொல்வானாயினன், எ - று.

(வி - ரை.) ஆலயம் - கோயில். மால் - திருமால். அயன் - பிரமன். அருவி - நீரருவி. நெக்கு நெகு என்னும் பகுதி யொற்றிரட்டித் திறந்தகால வினையெச்சமாயிற்று. உருகினன் - முற்றெச்சம். இது என்றது இனிச்சொல்லுஞ் செய்தியை. ஓ தேவதேவனே, ஜகந்நாதனே, ஜகத்காரண காரணனே, ப்ரஹ்மவிஷ்ணு இந்த்ரர்களால் வணங்கப்படும் பாதாரவிந்த முடையவனே, ஸம்ஸார நாடகமாகிய ப்ராந்தி கலையை முடிப்பதில் ப்ரிய முடையவனே, ஸகல வேத வேதாந்தங்களாலும் விளக்கப்பட்ட வைபவமுள்ளவனே, ஸம்ஸாரமென்னும் பிணிக்கு வைத்யனே, ஸர்வஜ்ஞனே, ஸர்வஶக்தியுள்ளவனே, ஸச்சிதாநந்த ஸ்வரூபனே, பரமாகாஶ ஶரீரனே, ஸகல ஜகங்களுக்கும் ஆதாரமாகிய ஜ்யோதிர் லிங்கஸ்வரூபனே, ஸதாஶிவ முதலிய பல திவ்ய மூர்த்திகளையைத் தரிக்கின்றவனே, முக்குணங்கடந்தவனே, மும்மல நாஶகனே, த்ரிலோக விலாஸ ஸ்வபாவகனே, மூன்று வேதக் கண்ணனே, பரமேஶ்வரனே, பார்வதி நாதனே, என்னை ரக்ஷியும், என ஸோமேஶப்பெருமானைத் துதித்தும், இரண்டு கண்களினின்றும் அருவி போல் நீர் தாரை தாரையாய்ப் பெருக்கியும், மனமானது நெக்குவிட்டுருகி ரேணுகர் விண்ணப்பஞ் செய்வாராயினர் என்பதிதன் கருத்து. (௨௩)

இன்று காறுநின் னேவலான் மண்ணிடை யிருந்தே
னன்று நீயினித் திருவடித் தாமரை நல்கி
யென்று நானுடற் பொறையெடா தருளென விரந்து
நின்று ஞானமே னியனுருப் பெற்றிட நினைந்தான்.

(ப - ரை.) இன்று காறும் - இன்றளவும், நின் ஏவலால் மண் இடை இருந்தேன்—, நீ இனி—, நன்று - நன்மைக்கிடமாகிய, திருவடித் தாமரை நல்கி—, என்றும் நான் உடல் பொறை எடாது அருள் என - எக்காலத்தும் நான் உடற்சுமையைத் தாங்காதிருக்க அருள் செய்யக்கடவை யென்று, இரந்து நின்று—, ஞானமேனியன் - அறிவுருவனாகிய சிவபிரானது, உருபெற்றிட - உருவையடைய, நினைந்தான்—, எ-று.

(வி - ரை.) பொறை - சுமை. ஞானமேனிய னுருப்பெற்றிடலாவது ஶிவலிங்கைக்யமாதல். தேவரீர் திருவாய்மலர்ந்தருளிய ஆகமங்களை எங்கும் பரவச் செய்யும் பொருட்டுச் சஞ்சரித்தேன், இனி உமது ஸ்வரூபமடைய விரும்புகின்றேன், ஓ ஶங்கரனே! க்ருபா விஶேஷத்தால் எனக்குச் சிறிது இடம் தந்தருளவேண்டும் என த்யாநம் செய்தனர் என்பதிதன் கருத்து. (௨௪)

ஆன காலையி லங்கண னறனதுபே ரருளான்
மான மாகுநின் பத்தியான் மகிழ்ந்தன முள்ள
ஞான மாமொழி மைந்தநீ வருகென நவின்றான்
வானு ளார்மலர் பொழிந்தனர் மண்ணுளா ரார்த்தார்.

(ப - ரை.) ஆன காலையில் - (இவ்வாறு) நிகழ்ந்தபோது, அங்கணன் - சிவபிரான், தனது பேரருளால்—, மானம் ஆகும் - பெரிதாகிய, நின் பத்தியால்—, உள்ளம் மகிழ்ந்தனம்—, ஞானம் ஆம் மொழி மைந்த—, நீ வருக—, என நவின்றான்—, வான் உள்

ளார் - விண்ணுலகத்துள்ள தேவர்கள், மலர் பொழிந்தனர்-பூமழை சொரிந்தார்கள், மண் உள்ளார் - மண்ணுலகத்துள்ள மனிதர்கள், ஆர்த்தார் - ஆரவாரித்தார்கள், எ - று.

(வி - ரை.) அங்கணன் - கருணைக்கண்ணன். வருக என எனற்பாலது வருகென வென விகாரமாயிற்று. நவில்வல் - சொல்லல். வான் மண் என்பன ஆகுபெயர்கள். பொழிந்தனர் என மேல் வருதலால் மலர் மலர்மழையைக் குறித்தது. இவ்வாறு கண நாதர் தோத்திரஞ் செய்தவுடனே, அந்த சிவலிங்கத்தினின்றும் 'ஓ மைந்த! உன்பக்தி யால் நான் ப்ரஸந்நமாகிறேன், வருவாயாக' என்னும் திருவாக்கு இறைவனால் கம்பீர மாயுண்டாயிற்று, அப்போது ஜனங்கள் ஆஸ்சர்யமுற்றார்கள், தேவதுந்துபிகள் முழங் கின, சிவகணங்கள் ஆகாசத்தில் புஷ்பவருஷம் வருஷித்தார்கள், பூலோகத்தவர்கள் ஆரவாரித்தார்கள் என்பதிதன்கருத்து. (௫௫)

## ஸ்ரீரேணுகர் மஹாலிங்கத்தந்தர்த்தாநமாதல்.

ஆதி நாயக னருண்மொழி கேட்டக மகிழ்ந்து
போத மாதவ ரனைவரு முறைமுறை போற்றச்
சோதி யாயெழுந் திலங்குசோ மேசன்மெய்ச் சொரூபத்
தோதி யான்மிகு மிரேணுக கணேசனுற் றொளித்தான்.

(ப - ரை.) ஓதியால் மிகும் - ஞானத்தினால் உயர்ந்த, இரேணுக கணேசன்—, ஆதிநாயகன் அருள் மொழி கேட்டு—, அகம் மகிழ்ந்து - மனங்களித்து, போதம் - அறி வினையுடைய, மாதவர் அனைவரும்—, முறை முறை போற்ற—, சோதியாய் எழுந்து இலங்கு - ஒளியுருவாய்த் தோன்றி விளங்குகிற, சோமேசன் - சோமேசனது, மெய்ச் சொரூபத்து உற்று ஒளித்தான்—, எ - று.

(வி - ரை.) ஆதிநாயகன் - சிவபிரான். மாதவர் - பெரிய தபோதநர். முறைமுறை- க்ரம க்ரமமாக. ஒளித்தல் - மறைதல். சோதியாய் எழுந்திலங்கும் - பரஞ்சோதியாகிய. சோமேசன் மெய்ச்சொரூபம் - ஸோமேசலிங்கம். உற்று ஒளித்தான் - ப்ரவேசித்தான். லிங்கத்தினின்றுண்டானதும் தயவோடு கூடினதுமாகிய சங்கரனுடைய திருவாக்கினைக் கேட்டு, ரேணுகர் ஸந்தோஷமுள்ள சித்தமுடையவராய், மனப் பரபரப்புண்டான வர்களும் கூடச்செல்கின்றவர்களுமாகிய யோகிகள் இவரை ஸ்தோத்ரஞ்செய்யா நிற்க, பரஞ்சோதியாகிய மஹாலிங்கத்திற் கலந்தனர் என்பதிதன் கருத்து. (௫௬)

கணங்க ணாயகன் சிவலிங்கத் துற்றமை கண்டு
வணங்கி வானவர் கணங்கண்மா தவரெலாம் வழுத்தி
மணங்கொண் மாமலர் பொழிந்துநின் றார்த்தனர் மண்மே
லணங்கு பாதியன் புகழ்வளர்ந் தோங்கிய தம்மா.

(ப - ரை.) கணங்கள் நாயகன் - கணநாதனாகிய இரேணுகன், சிவலிங்கத்து - சிவ லிங்கத்தில், உற்றமை - ஐக்யமானதை, வானவர்கணங்கள் மாதவர் எல்லாம் கண்டு - தேவகணங்கள் பெருந்தவத்தினர் ஆகிய எல்லாரும் பார்த்து, வணங்கி - தொழுது, வழுத்தி - தோத்திரஞ்செய்து, மணம் கொள் - வாசனை பொருந்திய, மா மலர் பொழிந்து நின்று ஆர்த்தனர் - பெரிய மலர்மழையைச் சொரிந்து நின்று ஆரவாரித்தார்கள், மண் மேல் - மண்ணுலகில், அணங்கு பாதியன் - பெண்பாதியனாகிய சிவபெருமானது, புகழ் - புகழானது, வளர்ந்து ஓங்கியது - மிகவும் வ்ருத்தியடைந்தது, எ - று.

(வி - ரை.) மண் - ஆகுபெயர். அணங்கு என்றது உமாதேவியை. ஸித்தநாதராகிய ரேணுகர் ஸ்வயப்ரகாசமும் திவ்யஸ்வரூபமுமாகிய அந்த சிவலிங்கத்தில் லயமடையவே,

ஜனங்களெல்லாரும் ஆஶ்சர்யமடைந்தனர்; ஶிவபக்தியும் ப்ரமாணத்தோடு கூடியதா யிற்று என்பதிதன் கருத்து. (௨௭)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வேதமோ டாக மங்கள் வேறுபா டின்றி நல்குந்
தீதறு பொருளை யெல்லாந் திரிவற வுலகிற் காட்டு
மாதவ னனைய விந்நூ லாதர வொடுபொ றிப்போ
ரோதுந ரோது விப்போ ருயர்தனி முத்தி சேர்வார்.

(ப - ரை.) வேதமோடு ஆகமங்கள் வேறுபாடு இன்றி நல்கும் - வேதத்தோடு ஆகமங்கள் வேற்றுமை யில்லாமல் தெரிவிக்கிற, தீது அறு - தீதற்ற, பொருளை எல்லாம் - எல்லாப் பொருள்களையும், திரிவு அற - திரிபறும்படி, உலகில் காட்டும் - உலகிற் காட்டுகிற, ஆதவன் அனைய - சூரியனை நிகர்த்த, இந்நூல் - இந்த சாத்திரத்தை, ஆதரவொடு - விருப்போடு, பொறிப்போர் - எழுதுவோர், ஓதுநர் - படிப்போர், ஓதுவிப்போர் - படிப்பிப்பவர், (ஆகிய யாவரும்) உயர் தனி முத்தி சேர்வார் - உயர்ந்த ஒப்பற்ற முக்தி யடைவார்கள், எ - று.

(வி - ரை.) திரிவு - மாறுபாடு, (ஒன்றை மற்றொன்றாகக் காண்டல்). ஆதவன் என்பது ஆதபஃ என்னும் வடசொற்றிரிபு. பொறித்தல் - எழுதல். ஸ்ரீ வேதாகம வீரசைவ மார்க்கமும், ஸ்ரீ ஷட்ஸ்த்தலங்களால் ஜ்வலிக்கும் ரத்நமும், ஸ்ரீ ஜீவேஶ்வர யோக மாகிய தாமரைக்கு ஸூர்யனும், ஸ்ரீ கோப்யமான சிந்தாமணியுமாகிய ஸ்ரீ ஸித்தாந்த ஶிகாமணியை விருப்பத்தோடு எழுதுபவரும், படிப்பவரும், படிப்பிப்பவரும் ஒப்புவமை யில்லாத பரமுக்தி யடைவார்கள் என்பதாம். ஓம் ஶுபம். (௨௮)

கலிவிருத்தம்.

மாரி பெய்க மநுநெறி யோங்குக
பாரி லொண்சிவ பத்தர்கண் மல்குக
சீரின் மல்குஞ் சிவன்புகழ் வெல்குக
வீர சைவம் விளங்குக வெங்குமே.

(ப - ரை.) மாரி பெய்க - மழைபெய்க, மநுநெறி ஓங்குக - மநுநீதி உயர்க, பாரில் - உலகில், ஒள் - அழகிய, சிவபத்தர்கள் மல்குக - சிவபக்தர்கள் நிறைக, சீரின் - சிறப் புடனேகூடி, மல்கு - நிறைந்த, சிவன் புகழ் - சிவபிரானது புகழே, வெல்குக - மேம் படுக, எங்கும் - எவ்விடத்தும், வீரசைவம் விளங்குக - வீரசைவ சமயமானது ஒளி செய்க, எ - று.

(வி - ரை.) மநுநீதி - மநுநீதி மார்க்கம். மல்கல் - நிறைதல். வெல்கல்-மேம்படுதல்.

அந்தியகதை - முற்றும்.

ஆக - காப்பு பாயிரம் உள்பட செய்யுள்-அ௮0.

---

இவ்விதமாய் ஸ்ரீரேணுகாசார்யர் அகஸ்த்யமுனிவருக்கு
உபதேஶித்தருளிய வீரஶைவ
சித்தாந்தசிகாமணி மூலமும் உரையும்
முற்றுப்பெற்றன.

---

உ

ஓம் ஸஹஸ்ரபதே நமஃ.

## வாழ்த்துக்கவிகள்.

### வீரசிங்காதனபுராணம்.

கலிவிருத்தம்.

வேத மோங்குக வேதிய ரோங்குக
மாத வத்தினர் மாதவ மோங்குக
பூத லத்துயி ரோங்குக பொற்பொடு
காதன் மங்கையர் கற்படர்ந் தோங்கவே.

அகமு மோங்குக வானின மோங்குக
மகமு மோங்குக மன்னவ னோங்குக
சகமு மோங்குக தண்புனற் காவிரி
மிகவு மோங்க விளைபயி ரோங்கவே.

வான மோங்குக மாமக மோங்குக
தான மோங்குக சத்திய மோங்குக
ஞான மோங்குக நன்னெறி யோங்குக
வான வீச னருடழைத் தோங்கவே.

நேரி லாத்திரு நீறுமிக் கோங்குக
வாரு ருத்திர வக்கமு மோங்குக
சாரு மஞ்செழுத் தோங்குக சந்ததம்
வீர சைவம் விளங்கிநின் றோங்கவே.

### பிரபுலிங்கலீலை.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

புண்ணிய நுலகில் வாழ்க புலஞ்செறு நோன்பு வாழ்க
பெண்ணொரு பாகன் பூசை பேணிவா ழடியர் வாழ்க
கண்ணுத லொருவன் சார்ந்த கற்புடைச் சைவம் வாழ்க
வண்ணலல் லமன்சீர் கேட்கு மாதர வாளர் வாழ்க.

பொருவரும் பூதி வாழ்க பூதியை யணிவோர் வாழ்க
திருவளர் கண்டி வாழ்க சிறந்தவஞ் செழுத்தும் வாழ்க
குருவருள் வாழ்க மெய்யைக் கூறுநா வோர்கள் வாழ்க
வெருவரும் பிறவி தீர்க்கும் வித்தகர் வாழ்க வாழ்க.

உ

சிவமயம்.

# சித்தாந்தசிகாமணியில் காணும்

## புராண சரித்திரங்களின் விவரணம்.

### பக்கம் - எ, செய்யுள் - உ.

### பரமசிவன் ப்ரஹ்மாவைப் படைத்தது.

நைமித்திக ப்ரளயமாகிய ஆயிரம் சதுர்யுகங்கொண்ட இராக்காலத்தில் ப்ரஹ்மா விஷ்ணுவின் உந்தியில் தங்கியிருந்து அந்த ப்ரளயம் நீங்கியபின்னர் வெளிவருதலை ப்ரஹ்மா விஷ்ணுவின் நாபீகமலத்தினின்றும் பிறந்தானென்று சொல்லுவர். ப்ரஹ்மாவின் * நூறுவருஷமாகிய ஆயுளின் முடிவில்வரும் ப்ராக்ருத ப்ரளயத்தின் பின்னர் சங்கரன் ப்ரஹ்மாவை யுண்டாக்கி, அவனுக்குச் சகல வித்தைகளுக்கும் நிதியாகிய வேதங்களை உபதேசிக்கிறா னென்பது.



### பக்கம் - கச, செய்யுள் - உஉ.

### மார்க்கண்டர் யமனைத் தண்டித்தது.

முன்னொருகல்பத்தில் குச்சகமுனிவர் என்னும் ஓர் அந்தணர் கடகம் என்னும் நகரத்தில் வசித்திருந்தனர். இவருக்குக் கவுச்சிகர் என்னும் ஓர் புதல்வரிருந்தனர். இவர் வேதாகமங்களிற்றேர்ந்து, பிறப்பை யொழித்துக்கொள்வதற்குரிய ஞானம்பிறந்து, சிவபிரானைக் குறித்துத் தவஞ்செய்ய; திருமால் சுகனமார்க்கமாய்வந்து, இவரைநோக்கி ஆசிகள் கூறி, மிருகண்டூயன் என்னும் பெயரைக்கொடுத்து சிவபிரானது பூர்ணகடாக்ஷமுண்டாகக் கடவதெனக் கூறிமறைந்தனர். அதன்மேல், மிருகண்டூயர் குச்சகமுனிவரிடம் வந்து நிகழ்ந்தவற்றை யெல்லாம் சொல்ல, அவர் சந்தோஷமடைந்தனர். பிறகு, ஓர்நாள் குச்சகர் தம் புத்திரனைநோக்கி, இல்லறதர்மத்தினை நடாத்திவரவேண்டுமென்றுகூற; புதல்வன் மறுத்து, தவஞ்செய்ய விரும்பியதைத் தெரிவிக்க; குச்சகர் மனங்கலங்கி நீதி மார்க்கங்களைப் போதித்துப் புத்திரனை விவாகஞ்செய்துகொள்ள இணங்கும்படிச் செய்தனர். அதன்பிறகு, குச்சகர் தம் புத்திரனிஷ்டப்படி சற்குணம் நிறைந்துள்ள ஓர் பெண்மணி வேண்டியிருத்தலினால், அநாமயம் என்னும் வனத்தில் அப்போது வசித்துக்கொண்டிருந்த உசத்தியமுனிவரிடம் போய், அவரது புதல்வியாகிய விருத்தையைத் தம் புத்திரனுக்கு மணம்செய்ய ஏற்படுத்தி, அவ்விடத்திலேயே சின்னாளிருக்கும் காலத்தில், ஓர்நாள் விருத்தை தன் தோழிப்பெண்களுடன் விளையாட ஓர் வனத்திற்செல்ல, ஓர் காட்டானையாற் றுரத்தப்பட்டு ஓர் பாழ்ங்கிணற்றில் விழுந்திறந்தனள். இதனைக் கண்ணுற்ற தோழிப்பெண்கள் எங்கெங்குந்தேடியும் விருத்தை கிடைக்காததனால், புலம்பிக்கொண்டு,

---

* வருஷம் நூறுகொண்டது மனிதர் ஆயுள்காலம். மனிதநாள் முப்பதுகொண்டது தென்புலத்தோர்க் கோர்நாள். அவ்வாறெய்திய மாதம் பன்னிரண்டுகொண்டது தேவர்களுக்கோர்நாள். அவ்வித நாள்கள் கூடிய வருஷம் பன்னீராயிரங் கழிந்தால் தேவர்க்கோருழி. நால்வகையூழியாயிரஞ்சென்றால் ப்ரஹ்மாவுக்கோர்பகல். அப்படிப்பட்ட ஊழி ஆயிரஞ் சென்றால் ஓர் இரா. இவ்விரண்டும்சேர்ந்த நாள்களாலாகிய வருஷம் நூறு ப்ரஹ்மாவின் ஆயுஷ் காலம். இந்த விஷயம் வேறிடத்திலும் கூறப்பட்டுள்ளது.

உசத்தியரது ஆச்சிரமத்தை யடைந்து, அவரது மனைவியாகிய மங்கலைக்குச் செய்தியைச் சொல்ல; அவள் மிகத் துயரமடைந்து தன் கணவராகிய உசத்தியருக்குத் தெரிவித்தனள். அதுகேட்ட உசத்தியர் மன வருத்தமுற்று, தோழிமார்களை யழைத்துக்கொண்டு வனத்திற்சென்று, பாழ்ங்கிணற்றில் இறந்து கிடந்த புதல்வியை வெளியே யெடுத்துப் பார்த்துத் தானும் தன் மனைவியும் புலம்புவாராயினர். அப்போது தூச்சகர் ஆண்டு நடந்தவைகளையெல்லாம் பார்த்து, புலம்புகின்றவர்களைத் தேற்றி, உசத்தியரை நோக்கி, "நாளையதினம் இறந்த உமது புதல்வியை உயிர்ப்பித்துக் கொடுப்போம்; நீர் நம் புத்திரனுக்கு இந்தப் பெண்ணை விவாகஞ்செய்து கொடுத்தல்வேண்டும்" என்றுகூறி, பிரேதத்தைத் தைலம்நிறைந்த ஓர் தோணியில் சேமஞ்செய்து வைக்கவும் திட்டஞ்செய்து, ஓர் தடாகத்தில் மூழ்கி, யமனை நோக்கித் தவம்செய்கையில், அக் காட்டானையானது முன்போலவே வந்து, இவரைத் தூக்கியெடுத்துத் தன் பிடரியின்மேல் வைத்துக்கொண்டு வெகுதூரம் சென்றது. இந்த யானையின் முற்பிறப்பின் வரலாற்றினை ஞானத்ருஷ்டியினால் தூச்சகர் அறிந்து, யானையுரு நீங்கும்படிச் சிவபிரானைச் சிந்திக்கவும், அவ்வுருவிழந்த தர்மதத்தன் தேவவுருவடைந்து, விண்ணினின்றிறங்கிய விமானத்திலேறி, தூச்சகமுனிவரைத் துதித்துக்கொண்டு ஸ்வர்க்கலோக மடைந்தனன். அதன்பின்பு, தூச்சகர் முன்போலவே தவஞ்செய்ய, யமன் பிரசன்னமாகி அந்தப் பெண் உயிர்பெற்றெழச் செய்தனன். அதுகண்ட தாய் தந்தையர் மிகவும் சந்தோஷமடைந்து, புதல்வியைத் தங்கள் பன்னசாலைக் கழைத்துக்கொண்டுபோய், அவளிடம் நடந்த விருத்தாந்தங்களை யெல்லாம் கேட்டுத் தெளிந்தனர். பிறகு, மிருகண்டுபேருக்கும் உசத்தியர் புதல்விக்கும் விவாகம் நடந்தது. இவ்விருவரும் இல்லறம் நடாத்திவரும் நாளில் தூச்சகர் தவஞ்செய்யச் செல்வாராயினர். மிருகண்டுபேர் மனைவியும் மிருகண்டு என்னும் ஓர் சற்புத்திரனைப்பெற்றனள். இப் புத்திரனுக்குச் செய்யவேண்டிய சடங்குகளை யியற்றி இல்லறதர்மத்திருத்தி, மிருகண்டுபேரும் தவஞ்செய்யச் செல்வாராயினர். பிறகு, மிருகண்டுமுனிவர் முற்கலமுனிவரது புதல்வியாகிய மருத்துவதியை மணந்து, புத்திரப்பேறில்லாததனால், காசிக்ஷேத்ரமடைந்து, சிவபெருமானைக்குறித்துத் தவஞ்செய்ய; பெருமான் பிரசன்னமாகி பதினாறுவயது ஆயுளுடைய ஓர் ஸத்புத்திரன் உண்டாகக் கடாக்ஷித்து மறைந்தருளினர். அவ்வாறே, மருத்துவதி கர்ப்பம் வாய்ந்து, பங்குனிமாதமும் ரேவதிநக்ஷத்ரமும் பொருந்த, மிதுன லக்நம் கழிந்து கடகம் வர, சுக்ரனும் குருவும் தத்தமக்குரிய உச்சவிராசிகளிலும், குஜ புத சனிகளும், ராகுகேதுக்களும் தத்தமக்கநுகூலமாகிய மூலத்ரிகோண ஸ்வமித்ர க்ஷேத்ரங்களிலும், சூரிய சந்த்ரர்கள் மீனத்திலும் கூடியிருந்த சுபதினத்தில் ஓர் ஸத்புத்திரனைப் பெற்றனள். ப்ரஹ்மா அப் புத்திரனுக்கு மார்க்கண்டர் என்று பெயரிட்டுச் சென்றனன். பிறகு மார்க்கண்டர் குழந்தைப் பருவம் நீங்கி ஐந்துவயதடையவே, வேதாகம சாஸ்திரங்களில் தேர்ந்து, சிவபெருமானே பரம்பொருளென உணர்ந்து, சிவபக்தியதிகரித்து வளர்ந்துவர; ஆண்டுகள் கழிந்துகொண்டு பதினாறும் வயது சமீபிக்க; தாய் தந்தையர் தம் புத்திரனது ஆயுஷ்காலம் நெருங்கியதே யென்று மிகத்துன்புறுவாராயினர். அது கண்ட மார்க்கண்டர் தாய் தந்தையரிடம் தன் விருத்தாந்தத்தைக் கேட்டு, அவர்களைத் தேற்றி வணங்கி, சிவபிரானையருச்சித்து யமனை வென்று வருவதாகச்சொல்லி, அவரிடம் விடைபெற்று, மணிகன்னிகை * யென்னும் சிவாலயத்திற்சென்று சிவபிரானை நோக்கித் தவஞ்செய்ய; சிவபிரான் காட்சிதந்து, யமனுக்குப் பயப்படவேண்டியதில்லை யென்று அநுக்ரஹித்து மறைந்தருளினர். மார்க்கண்டருக்குப் பதினாறு வயதாகவும், யமனது கட்டளைப்படி ஓர் தூதன் வந்து, அவர் பூஜையின் வலியால் அருகில் வரப் பயந்து, சிவபக்தசிரோமணியெனத் தெரிந்து, திரும்பி யமபுரியை யடைந்து தன் தலைவனாகிய யமனுக்கு மார்க்கண்டரைப்பற்றிக் கூறினன். அதுகேட்ட யமன் வெகுண்டு, தன் கருணிகர்களாகிய சித்திரகுப்தர்களை வரவழைத்து, அவர்களிடம் கணக்குக் கே

* திருக்கடவூர் என்றும் சில புராணங்கள் கூறுகின்றன.

டறிந்து, தன் மந்திரியாகிய காலனை நோக்கி மார்க்கண்டரது உயிரை விரைவில் கொண்டு வரும்படி கட்டளையிட்டனுப்ப; அந்தக் காலன் வணங்கி விடைபெற்று, அதிககோபத்துடன் மார்க்கண்டரிடம் வந்து, அவர் செய்யும் சிவார்ச்சனையையும் சிவத்தியானத்தையும் பார்த்து, இவரை யெவ்வாறு இழுத்துக்கொண்டு செல்வதெனத் திகைத்து, அவருக்குத் தன் தலைவனது பராக்கிரமத்தையும் அவனால் உண்டாகும் இந்திரபதவியைப்பற்றியும் சொல்ல; மார்க்கண்டர், சிவபக்தர்கள் இந்திரபதவியை மதியாரென்றும், சிவபதத்தையே விரும்புவரென்றும், யமபுரிக்கு வாராரென்றும், தான் சிவபக்தனாதலின் யமபுரிக்கு வருவதின்றென்றும் எதிர்மொழி கூற; காலன் அவரிடம் அணுகாமல் திரும்பி, யமபுரியடைந்து நடந்த விஷயங்களை யமனுக்குரைக்க; யமன் சீறி, மஹிஷவாஹநாரூடனாகி, பரிவாரங்களுடன் மார்க்கண்டரிடம் வந்து, பாசம் தண்டம் சூலம் மழு முதலிய ஆயுதங்களைக் கரத்திற்றாங்கி எதிரிலடைந்தனன். மார்க்கண்டர் யமனது வரவைப்பார்த்து பரமசிவனைத் துதிப்பாராயினர். அதுகண்ட யமன், மார்க்கண்டரை அணுகி, தன் புரிக்கு வரவேண்டுமென்று அழைக்க; மார்க்கண்டர் தான் வருவதில்லையென்றும், அவ்விடம் விட்டோடிப்போகும்படிக்கும் பதில் கூறி சிவலிங்கத்தைக் கெட்டியாய்ப் பற்றிக்கொள்ள; யமன் கோபமடைந்து மார்க்கண்டர் கழுத்தில் பாசத்தை வீசி இழுக்க; அந்தச் சிவலிங்கத்தினின்று பரமசிவன் தோன்றி தன் இடது திருவடியைத் தூக்கி யமனை யுதைக்க; அவன் கீழே விழுந்திறந்தனன். அதன்பிறகு, மார்க்கண்டர் பரமசிவனைப் பலவாறு துதிக்க; பரமசிவன் அவரைச் சிரஞ்சீவியாயிருக்கும்படி யாசீர்வதித்துத் தன் திருவடியில் சேர்த்தருளினர். அதன்மேல், ப்ரஹ்மாதியரின் வேண்டுகோளின்படி பரமசிவன் யமனை உயிர்ப்பித்து அவனைத் தன் லோகம்போய்ச் சேரும்படி ஆஜ்ஞாபித்து மறைந்தருளினரென்பதாம்.



பக்கம் - கச, செய்யுள் - உரு. *

## பிருகுமுனிவர் திருமாலைப் பத்துப் பிறவியெடுக்கும்படிச் சபித்தது.

முன்னொருகாலத்தில் தேவர்களும் அசுரர்களும் கொடிய பகை யுண்டாகி நெடுங்காலம் யுத்தஞ்செய்தார்கள். அக்காலத்தில் அதிதிபுத்திரர்களாகிய தேவர்கள் தோல்வியடையுந் தன்மையடைந்தார்கள். அப்பொழுது திருமால் அத்தேவர்களுக்குத்துணையாகவந்து நின்று தமது சக்கரத்தைக் கையிலெடுத்தசைத்தனர். அதனைக்கண்ட அதிதிகுமாரர்களான அசுரர்கள் பயந்து, தங்களுக்குச் சிறியமாதாவும் திருமகளுக்குத் தாயும் பிருகுமுனிவருக்கு மனைவியுமாகிய கியாதியென்பவளது பன்னசாலை யடைந்து, அடைக்கலம் என்று உள்ளே ஒளித்துக்கொண்டார்கள். உடனே அச் சும்பிற்சிறந்த கியாதியும் தனது சகோதரியின் புத்திரர்களும் அடைக்கலம் புகுந்தவர்களுமாகிய அசுரர்களைக் காக்கும்பொருட்டுத் தனது வீட்டுத் தலைவாசலில் உள்ளே வேறே யாரும் நுழையாதபடி காவல் பூண்டு நின்றனள். அப்பொழுது, ஓடிய அசுரர்களைத் தேடிக்கொண்டு வந்த திருமால் தன் மாமியாகிய கியாதி நிற்குமிடத்தை யடைந்து, உள்ளே போகும்படி எத்தனித்தனர். உள்ளே இப்போது போகக்கூடாதென்று பிருகுமுனிவரது மனைவி தடுத்தனள். திருமால் பெருங்கோபம் கொண்டவராய் மாமியெனறும், மகாமுனிவராகிய பிருகுமுனிவரது மனைவியென்றும், பெண்டன்மையிற் சிறப்புடைய பெண்மணியென்றும் கருதாமல் சக்கராயுதத்தினால் அவளது தலையை யறுத்தெறிந்தனர். உடனே பெருஞ் சத்தமுண்டாயிற்று. அப்பொழுது சிறிதும் குற்றமில்லாத பெருந் தவத்தினைச் செய்து முடித்த பிருகுமுனிவர் நிஷ்டையிலிருந்தவராய்க் கண்விழித்து நோக்கி, மனைவியிறந்ததை அறிந்து, துன்பங்கொண்டு கண்களில் தீப்பொறிபறக்க இதழ்துடிக்க

---

* சங்குகர்ணர் சரித்திரம் எந்தப் புராணத்திலுள்ளதோ நன்கு புலப்படவில்லை.

வெகுண்டு, உள்ளே அசுரர்களைச் சங்கரிக்கும்பொருட்டுச் சென்றுள்ள திருமாலின் முகத்தைப் பார்த்து, துன்பத்தைத் தருவதாகிய பத்துப்பிறவியை யடையக்கடவை யென்று சபித்தனர். பின்பு, தமது புத்திரராகிய சுக்கிரபகவானால் உயிர்பெற்றெழுந்த மனைவியாகிய கியாதியுடன் சிவத்தியானம் செய்துகொண்டிருந்தன ரென்பதாம்.



பக்கம் - கச, செய்யுள் - உச.

## ததீசிமுனிவர் திருமாலின் சக்கரம் ஒடியச் செய்தது.

பிருகுவின் மரபில் வந்த ச்யவநமுனிவர்க்குத்தோன்றிய ததீசிமுனிவர், ப்ரஹ்மாவின் தும்மலிற் பிறந்த குபன் என்னுமரசனோடு அந்யோந்ய நட்பாயிருக்கு நாளில், ஓர்நாள் ஒருவர்க்கொருவர் சல்லாபவார்த்தையாடிக்கொண்டு வேடிக்கையாய் அந்தணர்களோ? அரசர்களோ? இவர்களில் சிறந்தவர் யாவர்? என்று அரசன் வினவ, அந்தணரே சிறந்தவரென்று ததீசிமுனிவர் கூற; அதற்குக் குபன் அந்தணரினும் அரசரே சிறந்தவரென்று கூற; பெருங்கலகம் விளையவே, ததீசிமுனிவர் வெகுண்டு, குபனை யடிக்க; அக் குபன் வச்சிராயுதத்தால் இரண்டு துண்டாக்கப்பட்ட ததீசிமுனிவர் தமது நட்பினனாகிய சுக்கிரனை நினைத்து கீழே விழுந்திறந்தனர். அச் சுக்கிரன் நடந்த சங்கதியை யுணர்ந்து வந்து, துண்டுபட்ட சரீரத்தைப்பொருத்தி, ததீசியை உயிர்ப்பித்துத் தேற்றி முனிவரைப் பார்த்து, காஞ்சீபுரத்தை யடைந்து சிவாரச்சனைசெய்து வச்சிரசரீரத்தைக்கொள்வாய் என்று கூற; முனிவர் அவ்வாறே இஷ்டசித்திதீர்த்தத்தில் முழுகி, மிருதசஞ்சீவினி யென்னும் மந்த்ரத்தை யுச்சரித்து, சிவனை வணங்கி, அழியாத வச்சிரசரீரத்தைப் பெற்று, மீண்டு ராஜஸபையையடைந்து, குபனுடைய தலையை இடதுகாலாலுதைத்துருட்ட, அக் குபன் பொருட்டாகப் பகைத்து வந்த திருமால் சக்கரத்தை ஏவ, அச் சக்கரம் வாய் மடிதலால், அத் திருமால் புறங்கொடுத்தோடினரென்பதாம்.



பக்கம் - கச, செய்யுள் - உஉ; பக்கம் - கருசு, செய்யுள் - ரு.

## சிவகணநாதர் தக்கனை ஆட்டுமுகமடையச் செய்தது.

## தக்கன் வேள்வியைச்செய்தும் வீணானது.

ப்ரஹ்மாவின் நவபுத்திரர்களில் * ஒருவனான தக்ஷன் † என்பவன் ஓர்நாள் ப்ரஹ்மாவை நோக்கி, தேவர்களிற் சிறந்தவன் யாவனென வினவ; ப்ரஹ்மா, தேவர்களிற் சிறந்தவன் சிவபிரானென்றும், மோக்ஷாதி சகல நன்மைகளும் அவனாலேயே பெறவேண்டுமென்றும், அதனால் அவனையே சரணடையவேண்டுமென்றும் கூறினான். அதுகேட்ட தக்ஷன் மோக்ஷமார்க்கத்தினைக் கருதாது ப்ரஹ்மாதியர்களினும் அளவில்லாத வரத்தினைப் பெறும்பொருட்டு, மானஸஸரோவரமென்னும் தடாகத்தை யடைந்து, மிகுந்த தவஞ்செய்ய; சிவபிரான் பிரசன்னமாகி அவன் கேட்டவாறே ப்ரஹ்மாதியுலகங்களினும் தக்ஷனது ஆணைசெல்லவும், இவனை எல்லாரும் வணங்கவும், இவனுக்குப் பிள்ளைகளும் பெண்களுமுண்டாகவும், உமாதேவியே அப் பெண்களில் ஒரு புதல்வியாகவும், அப் புதல்வியைத் தான் மணஞ்செய்துகொள்வதாகவும், நன்மார்க்கத்தில் நிற்பதாயினிவ்வரம் சித்திக்குமென்றும் அருளிமறைந்தனர். அதன்பிறகு, ப்ரஹ்மா நடந்த வரலாற்

---

* க. மரீசி உ. அத்திரி, ஆங்கிரசன், ச. புலஸ்தியன். ரு. புலகன், சு. கிரதுவன், எ. பிருகு, அ. வசிட்டன், கூ. தக்ஷன். இதுவன்றி ப்ரஹ்மபுத்திரர் பதின்மரென்றும் கூறுவர்.

† தக்ஷனை ப்ரஹ்மாவின் மாநஸபுத்திரனென்றும், ப்ரஹ்மாவினதங்குஷ்டோத்பவனென்றும் கூறுவர்.

றைக்கேட்டு, மனங்கலங்கி, வேறியாது செய்வதெனத் துக்கித்து, ஒருவாறு தேறுதல டைந்து, தக்ஷணைப்பார்த்து ஆசீர்வதித்து, ஒரு நகரமுண்டாக்கி அவனுக்குக்கொடுக்க; அவன் அதில் வசித்துக்கொண்டிருந்தான்.

தக்ஷன் வேதவல்லி யென்பவளை * மணந்து, ஆயிரம் புதல்வரைப்பெற்று, அவர்களை நோக்கி, "நீங்கள் சிவபிரானைக் குறித்துத் தவஞ்செய்து, ஸ்ருஷ்டித்தொழில் செய்வதற்கு வரம்பெற்று வாருங்கள்" என்று ஆஜ்ஞாபித்து அனுப்ப; அவர்கள் அவ்வாறு தவஞ்செய்கையில், நாரதர் வந்து அவர்களுக்கு ஞானோபதேசஞ்செய்து ஸ்ருஷ்டித்தொழிலடைதலைத் தடுத்துவிட்டனர். அதை யறிந்த தக்ஷன் மறுபடியும் ஆயிரம் பிள்ளைகளைப் பெற்று முன்போலவே தவஞ்செய்ய அனுப்ப; மறுபடியும் நாரதர் அவ்வாறு செய்வாராயினர். அதன்பிறகு, தக்ஷன் ஸ்ருஷ்டித்தொழிலுக்குரிய பிள்ளைகளில்லாமற்போயிற்றென்றுதெரிந்து, கோபமடைந்து, நாரதனை இவ்வுலகில் எஞ்ஞான்றும் சஞ்சரிக்கச் சபித்து, பிள்ளைகள் வேண்டாது, பெண்கள் பிறக்கத் தன் மனதில் ஸ்மரிக்க; அறுபது † பெண்களைப் பெற்றுத் தர்மன் முதலியவர்களுக்குக் கொடுத்துச் சந்ததிவளர்ந்தோங்கும் காலத்தில், இருபத்தேழு நக்ஷத்ரங்களென்னும் அஸ்வினி முதலான இருபத்தேழு பெண்களைப் பெற்றுச் சந்திரனுக்களித்து, அவர்களைச் சமமாகப்பார்த்துக்கொள்ளும்படி திட்டஞ்செய்தனுப்ப; சந்திரன், அவர்களில் கார்த்திகை ரோகிணி யென்னும் பெண்களிடத்தில் மிகவும் காதலுற்றவனா யிருந்ததையறிந்த தக்ஷன், அவனைநோக்கி, தனது எண்ணத்திற்குமாறாக நடந்தமையால் கலைகளெல்லா மிழந்து இறந்துபோகுமாறு சாபமிட்டனன். அச் சாபத்தின்படி தினேதினே ஒவ்வொருகலையும் அழிந்து, பதினைந்தாநாள் ஓர்கலையுடனின்ற சந்திரன் நடுங்கி, ப்ரஹ்மாவின் கட்டளைப்படி சிவபிரானிட முறையிட; பெருமான், எஞ்சிநின்ற ஒருகலை அழியாது நிறுவி தன் ஜடையிற்றரித்து, சாபம்நீங்கி ஒருகலையுடனிருக்கவருளினன். இவ்வாறு சிவபிரானால் தன் சாபம் விலகினதைக்கேட்ட தக்ஷன், கோபமடைந்து சிவபிரானை நிந்தித்தனன். அதுகேட்ட புலகமுனிவன் தக்ஷனைப்பார்த்து சிவபிரானை இகழ்வது தகுதியன்றென்று பல நீதிமொழிகள் கூறிக் கோபத்தைத் தணிக்க; அவன் நெடுங்காலம் அரசாண்டுகொண்டிருந்தான். இதுநிற்க.

ஸ்ரீகைலாயமலையில் ஓர்நாள் பரமசிவனுக்கும் உமாதேவிக்கும் நடந்த சம்பாஷணையில் பரமசிவன் உமையைநோக்கி, "நீ உன்னை வியந்து வார்த்தையாடினதினால் உயிர்களடைந்த பாவம் அனைத்தும் நின்னிடம் வந்து சேரும்; ஏற்றுக்கொள்" என்றுகூற; உமாதேவி நடுங்கி, நேரிட்ட குற்றத்தை மன்னிக்கவேண்டினள். சிவபிரான் உமையைநோக்கி, "நீ காளிந்தியாற்றிற்சென்று, ப்ரணவம்போன்ற வலம்புரிச்சங்கின் வடிவெய்தி நோற்றுயானால், தக்ஷன் வந்து உன்னைக் கண்டு, நீ குழந்தை வடிவாக நிற்க, தன் மனைவியிடம் கொடுத்து, வளர்த்து, ஐந்து வருஷமான பின்பு, எம்மை நோக்கித் தவஞ்செய்துகொண்டிருக்க, நாம் வந்து ரஹஸ்யமாக மணம்புரிந்து, உன்னை யழைத்துவருவோம்" என்று அருளினர். அவ்வாறே உமாதேவியானவள் காளிந்தியை யடைந்திருக்க, தக்ஷன் அவ்வாற்றின் சிறப்பினைக்கேட்டுத் தன் மனைவியுடன் அவ்வாற்றில் நீராடப்போகையில், ஓர் தாமரையில் வெள்ளியசங்கைக்கண்டு, கையைநீட்டியெடுக்க, அது குழந்தையாதலும், மிகவும் சந்தோஷமடைந்து, அதைத் தன்மனைவியின் கையிற்கொடுத்தனன். இந்தக் குழந்தை சிறப்பாக வளர்ந்து ஐந்து வயது நிறைய, தக்ஷனது சம்மதிபெற்றுச் சிவபிரானைக் குறித்துத் தவஞ்செய்கையில், ஓர் நாள் சிவபிரான் காட்சிதந்து திருமணஞ்செய்துகொள்ள வந்ததாகக்கூறினர். இதைக்கேட்ட தக்ஷன் மிகவும் சந்தோஷமடைந்து இவ்விருவருக்கும் விவாகம் நடத்துவதற்கு வேண்டிய ஏற்பாடுகள்செய்து, தேவர்களெல்

* தக்ஷன் மனைவியை ப்ரஸூதியென்றும் வழங்குவர்.

† தர்மனுக்கு ௧0 பெண்கள், கஸ்யபன் - ௧௩, சந்திரன் - உஎ, அரிஷ்டநேமி - ௪ ஆங்கிரசன் - உ, கிரசாஸ்வன் - உ, பஹுபுத்ரன் - உ.

லாரையும் வரவழைத்து, தன் மகளாகிய உமாதேவியை சிவபிரானுக்குத் தத்தநீர்வார்க்க; மற்றைச் சடங்குகள் முடிவதற்குள் சிவபிரான் மறைந்தருளினர். இவ்வாறு மறையவே, தக்ஷன் மிகக் கோபித்து சிவபிரானது மாயத்தையே நினைத்துக்கொண்டிருந்தான். இது நிற்க.

பரமசிவன் ஓர் தவசியைப்போல வடிவம்தாங்கி, வருத்தமடைந்த உமாதேவி தவஞ் செய்யுமிடம்சென்று, சிவசின்னங்களைக்காட்டி, வ்ருஷபாரூடராகி, உமாதேவியைக் கரத்தால் நீட்டியெடுத்து, வ்ருஷபத்தின்மீது வைத்துக்கொண்டு, அவ்விடமிருந்த தோழிமார்கள் காண கைலாயத்திற்கெழுந்தருளினர். அதுகேட்ட தக்ஷன் கோபித்து அன்றுமுதல் சிவபிரானை நிந்தித்துக் கொண்டிருந்தான். ப்ரஹ்மா நடந்த வரலாற்றைக்கேட்டு, தக்ஷன் கைலாயத்திற்குப்போய் வருவானாயின், எல்லாரும் சுகமடைவார்களென்று நினைத்து, தக்ஷனிடம் சென்று, அவனுக்கு நற்புத்திகொளுத்தி, அவனைக் கைலைக்குச் செல்லும்படிச் செய்ய; அவ்வாறு தக்ஷன் சென்று, உள்ளே பிரவேசிக்க; அங்குள்ள சிவகணங்கள் இவனை உள்ளேவிடாமல் பலவாறு இவனது துர்க்குணங்களை யெடுத்தோதி இகழ்ந்து, அவ்விடத்திலேயே நின்று சிவபிரானைவணங்கி நிற்கும்படிச்செய்ய; அவன் வெள்கி, சபையினின்று மகன்று, புறம்போந்து, கோபமடைந்து, கணங்களைநோக்கி, சிவபிரானுக்குத் தான் மாமன் என்றும், ப்ரஹ்மாதியர்களும் தன்னைவணங்கி நிற்க சிவபிரானைத் தான் வணங்குவதில்லை யென்றும், பல மொழிகளைக்கூறி; சற்றுமாலோசிக்காமலிவ்வாறு செய்வித்த தேவனை யிகழுந்தன்மைக்கொத்த கார்யங்களைச்செய்யச் சபதம்செய்து, திரும்பித் தன் நகரை யடைந்தான். தக்ஷன் தேவர்க ளெல்லாரையு மழைத்து, நடந்த விருத்தாந்தத்தைச் சொல்லி, தன் ஆணையில் எல்லாரும் முன்போலவே நிற்கும்படி திட்டஞ்செய்து விடைகொடுத் தனுப்பிவிட்டான். இதுநிற்க.

ப்ரஹ்மா வோர் வேள்வியைச் செய்யக் கருதி, திருமால் முதலிய தேவர்களை அவிர்ப்பாகம் பெற்றுக்கொள்ள அழைத்துவரும்படி ஏற்பாடுசெய்து, தான் வேள்வி நிறைவேறும்பொருட்டுக் கைலைக்குச்சென்று சிவபிரானை யழைக்க; சிவபிரான் நந்தியை யனுப்புவதாகக் கூறினர். ப்ரஹ்மா அவ்விடம்விட்டுத் திரும்பி, தக்ஷனையும் அழைக்க; அவன் வருவதாகச் சொல்லி ப்ரஹ்மாவை யாகஞ்செய்ய முன்னா அனுப்பிவிட்டான்.

பின்பு, திருமாலும் இந்திரனும் தக்ஷனிடம்வர, இம்மூவரும் பேசிக்கொண்டு, சிவபிரானுக்கு அவிர்ப்பாகம் அளிப்பதனைத்தடுக்க முயல்வாராயினர். தக்ஷன் தன் பரிவார தேவர்களுடன் வேள்வியை அடைந்தான். அப்போது நந்தியும் சிவகணங்களுடன் வந்தனர். இவர்கள் வரவைக்கண்ட தக்ஷன் ப்ரஹ்மாவை வைது, சிவபிரானை யிகழ்ந்து, அவர்க்கு அவிர்ப்பாகமில்லையென்றுகூற; நந்தி கோபமடைந்து, யாகமழியவும், தேவர்கள் தண்டனையடையவும், தக்ஷன் தலை யற்றுப்போகவும் சாபமிட்டு, கணங்களுடன் கைலைக்குச்சென்று சிவபிரானுக்கு நடந்தவைகளையெல்லாம் சொன்னார். நந்தி சபித்துச்செல்லவும், தேவர்க ளனைவரும் பயந்து, யாகசாலையை விட்டுப் புறப்பட்டுப் போய்விட்டார்கள். தக்ஷன் தனனிடம் போய்ச்சோநதான். அதனால் யாகம் நடவாதிடையிலொழிந்தது. அன்றுமுதல் யாகாதிகள் நின்றுவிட்டதைத் தக்ஷன்தெரிந்து, தேவர்களை யழைத்துக் கேட்க; அவர்கள் அவ்வாறு செய்யாமலிருப்பதற்கு நந்தியினால் நேரிட்டசாபத்தைச் சொல்ல; அதைத் தடுத்துத் தான் ஓர் யாகஞ்செய்வதாகக் கூறி அவர்களை யனுப்பிவிட்டான்.

அதன்பின்பு, தக்ஷன் மயனை யழைத்து, ஓர் யாகசாலையை நிர்மிக்கக் கட்டளையிட; அவன் உடனே கங்காநதியின்கரையில் ஒரு யாகசாலையைச்செய்து முடித்தான். தக்ஷன் யாகத்திற்கு வேண்டிய சாமக்கிரிமுதலானவைகளைச் சேகரித்தது தேவர்களெல்லாரையும் வரவழைத்தான்; அகத்தியர், ஸனகனுதியர், அத்திரி, வசிட்டர், பிருகு, ததீசி, துருவாசர், பராசராதிமுனிவர் வருவதில்லையென்று சொல்லிவிட்டதைத் தெரிந்து அவர்கள்மீது

கோபித்துக்கொண்டனன். ப்ரஹ்மாதி தேவர்களனைவரும் வந்தடைந்தார்கள். ஆயினும், ததீசி யாகசாலையையடைந்த சங்கதி தக்ஷன் கேள்விப்பட்டு சந்தோஷமடைந்தனன். நடந்த விருத்தாந்தங்களையெல்லாம் சொல்லக்கேட்ட ததீசி மனந்தளர்ந்து தக்ஷனைநோக்கி, சிவபிரானது பராக்கிரமங்களை யெல்லாம் எடுத்தோத; அவன் அவ்வார்த்தைகளைச் சற்றும் கவனியாது யாகம் நடக்கும்படிச்செய்ய; ததீசி கோபமடைந்து யாகசாலையினின்றும் நீங்கித் தன்னிடம்போய்ச் சேர்ந்தனன். அப்போது நாரதர் கைலைமலையை யடைந்து, தக்ஷன் செய்யும் வேள்வியைக்குறித்துச் சிவபிரானுக்குச்சொல்ல; அதுகேட்ட உமாதேவியானவள் சிவபிரானைநோக்கி, தன்தந்தையாகிய தக்ஷன் செய்யும் யாகத்தைப்போய்ப்பார்த்து வருவதற்குத்தரவு கொடுக்கும்படி வணங்கிநிற்க; சிவபிரான், உமாதேவியை நோக்கி, தக்ஷன் மதிக்கமாட்டானாதலின், யாகத்திற்குப் போகவேண்டியதில்லையென்று தடுக்க; உமாதேவி, புத்தியற்ற தன்தகப்பனை மன்னித்துத் தன்னை அனுப்பும்படிப் பிரார்த்தித்தனள். அதன்மேல், சிவபெருமான் அவ்வாறே செய்யும்படி உமாதேவிக்கு விடைதந்தனர், உமாதேவி மிகவும் சந்தோஷமடைந்து, தன் பரிவாரத்துடன் தக்ஷனது யாகசாலையை யடைந்தனள். தக்ஷன் தன் புத்திரியின் வரவைக்கண்டு, அம்மையாரை அவமதித்துப்பேசி, சிவபெருமானையும் நிந்தித்தனன். அதுகேட்ட உமாதேவியானவள் மனங்கலங்கி, கோபமடைந்து, தக்ஷனைநோக்கி, "மூலகாரணனான சிவபிரானை இகழ்ந்ததனால் நீ தண்டமடைவாயாக" எனச் சபித்துத் திரும்பி கைலைக்குச்சென்று, சிவபிரானைநோக்கி, சுவாமி! உம்மை தக்ஷன் இகழ்ந்துகூறினன்; அவனையழிப்பீராக, எனப் பிரார்த்தித்து ஒரு புறம் வைகினள். அதுகேட்ட சிவபிரான் சற்றுமனதில் நினைத்தமாத்திரத்தில் தன் * நெற்றிக் கண்ணினின்றும் வீரபத்திரர் தோன்றி வணங்கிநிற்க; சிவபெருமான் அவரை நோக்கி, தக்ஷன்யாகத்தை யழித்துவரும்படிக் கட்டளையிட; வீரபத்திரர் விடைபெற்று சிவகணங்களுடன் கைலையினின்றுமகன்று யாகசாலையை யடைந்து, தன்னையும் சிவகணங்களையும் வைததையும், சிவபிரானை யிகழுந்தன்மையினை வாய்ந்த சாரியங்களையுங்கண்டு, மிகவும்கோபமடைந்து, பேரிடிபோல கர்ச்சனைசெய்து, தக்ஷன்றலையை உடனே இரண்டுதுண்டாக வெட்டி யாககுண்டத்திலிட்டு, அங்கிருந்த தேவர்களைத் தண்டஞ்செய்து, யாகத்தையழித்து, பரமசிவனது அருளால் இறந்த தேவர்களை உயிர்ப்பித்து, அவ்வவர் உலகம் போய்ச்சேரும்படி ஆஞ்ஞாபித்து, தக்ஷனது உடலுக்கு ஆட்டின்றலையைச் சேர்த்துத் தக்ஷனையுமெழுப்பி, தன் உலகம்போய்ச் சேர்ந்தனரென்பதாம்.



## பக்கம் - கரு, செய்யுள் - உரு.

## சுவேதன் யமனைத் தண்டித்தது.

முன்னொருகாலத்தில் சுவேதனென்னும் ராஜருஷி சுலோசனை யென்னும் மனைவியுடன் இல்லறதர்மம் நடாத்தி வருநாளில், சுலோசனை வாதாபியென்னும் புத்திரனைப் பெற்று, அப் புத்திரன் மரணமடைய, சுவேதனும் அவன் மனைவியும் வானப்ரஸ்தாச்சிரமத்தை யடைந்தார்கள். அதன் பின்பு, சுவேதன் சிவபிரானைநோக்கித் தவஞ்செய்ய வுபதேசித்தனன். இவன் தன வாழ்நாள் குறுகியதென்று நினைத்து, காளாஞ்சநம் என்னும் தீர்த்தக்கரையை யடைந்து, இரத்தினமுடிநீக்கி ஜடைமுடிதரித்து சிவபூசைசெய்வானாயினன். அவ்வாறிருக்கும் நாளில், தன் ஆயுள் முடிவெய்துநாளைக் கணிதர்களாற் றெரிந்து, குறித்த அந்நாளில் சிவபூசைசெய்துகொண்டு, சிவோகம்பாவனையிலிருக்க; யமன இவன் வாழ்நாளின் முடிவையறிந்து, மஹிஷவாஹனாரூடனாய், கரத்தில் சூலமேந்தி, மேககர்ச்சனைபோல் ஆரவாரித்து, கோரப்பற்கள்தோன்ற பெரிய வாயைத்திறந்துகொண்டு, கோபித்துச் சிரித்து சுவேதன் எதிரிலடைந்தனன். இவ்வாறு யமன் பயமுறுத்தி, தண்டத்தைச்

* ஜடையினின்றும் வெயர்வையினின்றும் வீரபத்திரர் தோன்றினதாகக் கூறுவன சில புராணங்கள்.

சுழற்றி சுவேதன்மேல் விடவும், அவன் சற்றேனும் சலிக்காது சிவபூசையிலேயே நாட்டமுற்றவனுயிருந்தனன். யமன் அவனைப்பார்த்து ப்ரஹ்மாதிதேவர்கள் என் பாசத்திற்குட் பட்டவர்களாயிருக்க, இம் மானிடனோ பாசத்தினின்றும் மீளவல்லவன் என்று கூறிச் சீறி வர; சுவேதன் பெருமகிழ்ச்சியுடன் சிவலிங்கத்தைக் கெட்டியாய்த் தழுவிக்கொண்டு, சிவத்தியானத்திலேயே இருந்தனன். இதைக் கண்ணுற்ற யமன் சீறி, அநேக பழிமொழிகளைக் கூறி, பாசத்தைக் கரத்தில் தாங்கி, சூலத்தைச் சுழற்றி, அதிவிரைவில் சுவேதனை அணுகி பேரிடிபோன்று கர்ச்சித்தான். சுவேதன் அக் கர்ச்சனையைக்கேட்டு, திடுக்கிட்டு, மனம் கசிந்து, "சங்கரா! மகேச! காமதகன! புராரி! முக்கண்ண! பரிசுத்த! அர்த்தநாரீச! அபயம்! எனப் பலவாறு துதித்து, சிவத்யாநஞ்செய்ய; பரமசிவன் அவனது பக்திக் கிரங்கி, வ்ருஷபாரூடனுகி, உமாசமேதனுக சிவகணங்களுடன் காட்சிதந்து "அஞ்சேல்" எனக் கூறி, சூலத்தை சுழற்றிவிட்டு யமனை மாய்த்தனன்; பின்பு, சுவேதனுக்குப் பல ஆசிகள்கூறி, சிவகணத்தலைவரில் ஒருவராக்கி, உமாதேவியின் விருப்பத்தின்படி யமனை யுயிர்ப்பித்து அவனது லோகம்போய்ச்சேர ஆஜ்ஞாபித்து அந்தர்த்தாந மாயினு ரென்பதாம்.



பக்கம் - உக, செய்யுள் - சரு.

## அகத்தியமுனிவர் விந்தமலையைப் பாதலமடையச் செய்தது

முன்னொருகாலத்தில் இமயமலையில் பரமசிவனுக்கும் பர்வதராஜனது புத்திரிக்கும் நடந்த திருக்கல்யாண மஹோத்ஸவத்தைத் தரிசிக்க எல்லா அண்டங்களினின்றும் ப்ரஹ்மாதி தேவர்கள், ருஷிகள், திக்குப்பாலகர்கள், கின்னரர் முதலானவர்களனைவரும் ஒருங்கு சேர்ந்தார்கள். இவ்வாறு பலவேறு அண்டங்களினின்று வந்து ஓரிடம் சேர்தலும், வடபக்கம் தாழ்ந்து தென்பக்கம் உயரவே, தேவர்கள் பயந்து, நேரிட்டதுன்பத்தை சிவபிரானுக்குத் தெரிவிக்க; பரமசிவன் அகத்தியரை யழைத்து, எல்லாரும் இமயமலையில் வந்தமையால் வடபாகம் தாழ்ந்து தென்பாகம் உயர்ந்ததாதலின், அவரைத் தென்னுட்டிலுள்ள பொதிகைக்குப்போய் உலகமுற்றும் முன்போல சமப்படுத்த ஆஜ்ஞாபிக்க; அம் முனிவர் எதிர்மொழிகூறுது, "சுவாமி! தேவரீர் திருமணக்கோலத்தைத் தரிசிக்க பிராப்தி யில்லாதவனுயினேன்" என்று விண்ணப்பஞ்செய்ய; சிவபிரான், "திருமணக் காட்சியைப் பொதிகையில் உன் நிமித்தம் காட்டுவோம்" என்றருளினுர். அகத்தியர் மிகக் களிப்படைந்து பொதிகையடையவே வடபூமியும் தென்பூமியும் முன்போலவே சமமாகி நின்றன. இது நிற்க.

நாரதமுனிவரது போதனையினுல் விந்தமலையானது மேருமலையுடன் பகைத்து, அதனினும் தான் உயர்வடைந்ததெனக் கூறி, ஓர் மந்திரத்தினுல் ப்ரஹ்மலோகபர்யந்தம் நிமிர்ந்து நின்று, ஆகாயமார்க்கத்தை யடைத்துக்கொள்ள; கோள்கள் நக்ஷத்ரங்கள் முதலியனவைகள் பயந்து அகத்தியரைச் சரணடைந்து, விந்தமலையினுல் தங்கள் லோகங்களில் சஞ்சரிக்கத் தடையாயிருக்கும் துன்பத்தைத் தீர்க்கும்படி விண்ணப்பித்து நிற்க; அகத்தியர் பரமசிவனைத் தியானித்து, விந்தமலையை யடக்கும் வல்லமையைப் பெற்று, பொதிகைக்குச் செல்லுகையில், ஆகாயமளாவிய விந்தமலையை நோக்கி, "விந்தமே! நாம் பொதிகைக்குச் செல்கின்றோம்; நீ சற்று வழிவிடுவாயாக" என்று கேட்க; விந்தமலை கர்வமடைந்து, "யான் உனக்கு வழிவிடுவதில்லை, நீ வந்தவழியே திரும்பிச் செல்வாயாக?" என்று பதில் கூறியது. இவ் வார்த்தையைக் கேட்ட அகத்தியர் கோபமடைந்து சிவபிரானைத் தியானித்து தன் கரத்தை பரமபதம் வரையிலும் நீட்டி விந்தமலையின் உச்சியில் வைத்து கெட்டியாய் ஊன்றுதலும், விந்தமலையானது அதிசீக்கிரத்தில் பாதலம்போய்ச் சேர்ந்தது. அதனுல், விந்தமலையானது துயரமடைந்து முனிவரை நோக்கி, "வள்ளலே! தேவரீரது பெருமையை நோக்காது இகழ்ந்த குற்றத்தைப் பொறுத்தருளல் வேண்டும்;

நான் எப்போது மேலே எழுவேன்" என்று பிரார்த்திக்க ; அகத்தியர் அதைப் பார்த்து, "நாம் இனி இவ் வழியே திரும்பிவருவோமாயின் நீயும் எழுந்திருக்கக்கடவை" என்று கூறிச் சென்றனரென்பதாம்.



பக்கம் - உக, செய்யுள் - சரு.

## அகத்தியமுனிவர் நகுடனைச் சர்ப்பவுருவடையச் சபித்தது.

முன்னொருகாலத்தில் தேவேந்திரன் சிம்மாசனத்தில் வீற்றிருந்து, அரம்பை, ஊர்வசி, மேனகை, திலோத்தமை முதலிய தேவஸ்த்ரீகளின் நாட்டியம் பார்த்துக்கொண்டு மனமகிழ்ச்சி யடைந்திருக்கிற சமயத்தில், தேவகுருவாகிய ப்ருஹஸ்பதி வந்தார். அவருக்கு எதிர்கொண்டு போகாமலும், குருவென்று வணங்காமலும் மதோன்மத்தனாயிருந்தது கண்டு, அவர் ஸ்த்ரீகளின் மயக்கத்திலகப்பட்டவர்களுக்கு வணக்கமுமுண்டோவென எண்ணிக்கொண்டு திரும்பிப்போய்விட்டார். அவ்வாறு போகவே, இந்திரன் தன் செல்வமெல்லாம் நாளுக்குநாள் குறைந்துபோனது கண்டு, தேவகுருவை வந்தனை வழிபாடுகள் செய்யாததனால் இவ்வாறு கேடு விளைந்ததென்று எண்ணி, அவரைத் தேடியுங் காணாததினால் ப்ரஹ்மாவிடத்திற்குப் போய், நடந்ததையெல்லாம் விண்ணப்பஞ்செய்ய; ப்ரஹ்மா இந்திரனை நோக்கி, "நீ இது முதல் குரு வருகிற வரையிலும் த்வஷ்டாவின் புத்ரனை மூன்று தலைகளையுடைய விஸ்வரூபனைக் குருவாக வைத்துக்கொள்வாயாக" என்று சொல்ல; இந்திரன் அதற்கிணங்கி அவ்வாறே விஸ்வரூபனைக் குருவாக வைத்துக்கொண்டிருக்கிற நாளில், இந்திரன் ஓர் யாகம் செய்யவேண்டி விஸ்வரூபனுக்குச் சொல்ல ; அவ்வாறு அவன் யாகம் செய்யுங்காலையில், தேவர்களை யறியாமல் அவிர்ப்பாகம் அசுராதிகளுக்குக் கொடுத்த செய்தியறிந்த இந்திரன் தன் வச்சிராயுதத்தால் குருவாயிருந்தவரான விஸ்வரூபனை வெட்டி மூன்று தலைகளையும் கீழே விழும்படிச்செய்தான். அம் மூன்றுதலைகளும் மூன்று பறவைகளாகப் போயின. அவ்வாறு வெட்டினவுடனே, இந்திரனை ப்ரஹ்மஹத்தி சூழ்ந்துகொள்ளவே, அதை நான்கு கூறாக்கி, பூமிக்கொருபங்கும், ஸ்த்ரீகளுக்கொருபங்கும், மரத்திற்கொருபங்கும், நீருக்கொருபங்குமாக பிரித்துக்கொடுத்து அவன் பரிசுத்தனானான். இந்தச் செய்தியை விஸ்வரூபன் தந்தையாகிய த்வஷ்டா கேள்விப்பட்டு துக்கித்து வாய்விட்டழுது, நெடிதுயிர்த்து, வச்சிராயுதத்தாலே கொன்றவனுடைய உயிரை வாங்க ஒரு வேள்வி செய்ய, அதினின்றும் விருத்திராசுரன் தோன்றினான். அவன் வந்து இந்திரனொடு எதிர்த்து போர்புரியும்போது, இந்திரன் நிற்கமாட்டாது தோற்றுப்போய் ப்ரஹ்மவிஷ்ணுக்களிடத்தில் முறையிட ; விஷ்ணு இந்திரனை நோக்கி இந்த நாட்பட்ட வச்சிராயுதத்தினால் அவனைக் கொல்ல முடியாது; ததீசிருஷியின் * முதுகெலும்பினாலே வேறோர் புதிய வச்சிராயுதத்தைச் செய்தால், அதனால் கொல்லலாமென்று சொல்லக்கேட்டு, ததீசிருஷியினிடம் வந்து வணங்கி முதுகெலும்பைக் கேட்க; அவர் கபாலத்தின் மூலமாய் வெளிப்பட்டு முக்தியடைய ; முதுகெலும்பை எடுத்து விஸ்வகன்மாவால் வச்சிராயுதம் செய்துகொண்டு அதனால் விருத்திராசுரனைக் கொன்றுவிட்டான். அந்த ப்ரஹ்மஹத்தியானது இந்திரனைப் பிடித்துக்கொண்டது. இந்திரன் பயந்து ஒரு தடாகத்தில விழுந்து தாமரைநாளத்திலுள்ள நூலில் ஒளித்தனன். இவ்வாறு பொன்னுலகம் பொலிவழிந்திருக்கும் சமயத்தில், இவ்வுலகில் நகுஷன் என்னும் ஓரரசன் அஸ்வமேத யாகம் செய்துவந்தான். தேவர்கள் அரசன் இல்லாது துயரடைதலை நோக்கி, நகுஷனை மாலைசூட்டி மகுடந்தரித்து அரசனாகக் கொண்டார்கள். நகுஷன் இந்திரனாகி தேவ

* முன்னொருகாலத்தில் திருப்பாற்கடலைக் கடையச் செல்லுகையில், ஆயுதபாணிகளாய் வரக்கூடாதென்று, தேவரும் அசுரரும் அவற்றையெல்லாம் ததீசியிடம் வைக்க ; நெடுநாளாக அவற்றை யாரும் வந்து கேட்காததனால் அவர் அவற்றை விழுங்கிவிட்டனர்; அவைகள் முதுகெலும்புடன் கலந்திருந்தன.

லோகம் வருகையில், சிவிகையைச் சுமந்து செல்லும் * சப்தருஷிகளின் தன்மைகளைச் சற்றுமறியாதவனாதலின், இந்திராணியின்பம் பழுத்த காமத்தை யனுபவிக்கும் ஆசையால் விரைந்து செல்லும்பொருட்டு, இந்திராணியிடத்துக்கு விரைவாகக்கொண்டு செல்லுங்களென்று சொன்னான். சிவிகையின் கொம்பு சுமந்து முன்புசெல்லும் அகத்திய முனிவர் நகுஷன் கூறிய வார்த்தையைக்கேட்டு சர்ப்பமாகக்கடவாயென்று சபித்தனர். அவன் உடனே பெரிய மலைப்பாம்பாய்ப் போனான். அப்போது, க்ருஷ்ணமூர்த்தி இந்திரப்பிரத்தத்தில் தருமன் யாகத்தை முடித்து இருவரும் வேட்டையாடச் சென்றவிடத்தில் ஓர் பாம்பு மலைபோலக் கிடத்தலைப் பார்த்து, அதனருகுசென்று, நீயாரென்று க்ருஷ்ணமூர்த்தி வினவ; என் பெயர் நகுஷன், நான் முன்னொருகாலத்தில் அஶ்வமேதயாகஞ்செய்து விண்ணுலகஞ்சென்று இந்திரபதத்தையடைந்து இந்திராணியைப் புணரக் கருதிய யான் சிவிகை சுமந்துசென்ற சப்தருஷிகளையும் நோக்கிச் சர்ப்ப ஏகுங்கள் என்று கூற; முற்கொம்பு தாங்கிய அகத்தியமுனிவர் சர்ப்பமாகக் கடவாய் என்று சபிக்க; அன்று தொட்டுச் சர்ப்பமாயிங்குக் கிடக்கின்றனன்; அதற்கொரு தீர்வுபெற்றிலேனென்று வருந்திக் கூற; கண்ணன் மாயூரமென்னும் திருப்பதியிற் சென்று இடபதீர்த்தத்தில் நீராடினு லிவ்வுரு நீங்குமென்றுரைக்க; நகுஷன், சிறிதும் பெயரும் வலியில்லாத யான் எவ்வாறு செல்லக்கூடும் என்று கூற; அந்த க்ருஷ்ணமூர்த்தி தனது கரத்தால் அவனைத் தூக்கி எறிந்தனர். நகுஷன் இடபதீர்த்தத்தில் விழுந்து, அவ்வுருநீத்துத் தேவவடிவம் பெற்றுச் சிவபிரானையும் உமாதேவியையும் பூசித்துத் தேவருலகடைந்தனனென்பதாம்.



பக்கம் - கருஈ, செய்யுள் - கூ.

## தண்டி தாதையைக்கொன்று சிவமானது.

சோழநாட்டிலுள்ள திருச்சேய்ஞலூர்ப் பிராமணகுலத்தில் காசிபகோத்ரத்தவனாகிய எச்சதத்தன் என்பவன் திருமைந்தராகத் திருவவதாரஞ்செய்து விசாரசருமனாரென்னும் பிள்ளைத் திருநாமம்பெற்று, ஐந்து வயதான பருவத்தில் பூர்வஜந்ம உணர்ச்சியினால் வேதாகம சாஸ்திரங்களெல்லாம் ஓதாதுணர்ந்து, ஏழு வயதான பருவத்தில் உபநயனச்சடங்கு தந்தை செய்வித்து வேதமோதுவிக்க, உபாத்தியாயர் எடுத்து ஓதுவிப்பதற்கு முன் உணர்ந்துகொள்வதை அவ்வுபாத்தியாயர் முதலானவர்கள் கண்டு அதிசயித்து மகிழ்ச்சி யடையும்படி யாவு முணர்ந்து, இவ் வேத முதலான பயிற்சியினாலடையும் பயன் பரமசிவனுடைய திருவடிக்கன்புசெய்வதேயென்று உள்ளத்திற்கொண்டு வளரும் நாளில், ஓர்நாள் வேதாத்யயநச் சிறுவர்களுடன் வேதபாடசாலைக்குப் போம் பொழுது, மார்க்கத்தில் பசுக்களை மேய்க்க ஓட்டிக்கொண்டு போகும் இடையனை ஒரு பசுவானது முட்டினதனால், அவனப்பசுவைத் தடியால் அடிக்கக்கண்டு, மனம் வருந்தி, அவனைநோக்கி, "நீ பசுக்களை என்னென்று நினைத்தாய்; த்ரிமூர்த்தி முதலான தேவஸ்வருபமுள்ளதுமன்றிப் பரமசிவத்தின் திருமஞ்சனத்துக்குரிய பஞ்சகவ்யத்தையும் விபூதிக்குக் காரணமான சாணத்தையும் தருவதனால் அதனை யடித்தால் மஹாபாதகம் நேரிடும்; ஆதலின், நீ யவைகளை மேய்க்கவேண்டியதில்லை; இன்று முதல் நானே மேய்க்கிறேன்" என்று கூறி, அப் பசுக்களுக்குரிய பிராமணர்களுடைய சம்மதமும் பெற்றுக்கொண்டு, அன்றுமுதல் மேய்த்து வருகையில், பசுக்களெல்லாம் மிகவும் பெருகி, பால் மடிசுரந்து பொழிவதை நாயனார் கண்டு, பூர்வஜந்மத்தில் சிவார்ச்சனைசெய்த தொடர்ச்சியினால், பரமசிவத்துக்குத் திருமஞ்சனஞ்செய்யவேண்டுமென்கிற விருப்பமுண்டாக; அங்கிருந்த மண்ணியாற்றங்கரையில் ஆத்திமரத்தின்கீழ் மணலினால் சிவலிங்கப் பெருமானைப்ரதிஷ்டைசெய்து, ஆலயமுதலானவைகளும் அம் மணலாலமைத்து,

---

* சப்தருஷிகள்:—அகத்தியன், ஆங்கிரசன், கோதமன், காசிபன், புலத்தியன், மார்க்கண்டன், வசிட்டன்.

திருப்பள்ளித்தாமமும் கொய்துவைத்துக்கொண்டு, குடங்களையேந்தி, ஒவ்வொரு பசுவினிடத்துஞ்சென்று, சுரப்பு மடியின்கீழ்ப் பிடிக்க, அவைகள் தாமே பால் பொழிய, அந்தத் திருமஞ்சனத்தைக் கொண்டுவந்து, அபிஷேகஞ்செய்து துதித்து, அன்றுமுதல் அதுவே ஒரு விளையாட்டாகச் செய்து வருகையில், ஒரு நாளந்தமார்க்கமாகப் போகின்ற ஒரு பிராமணன் பார்த்து நாயனாருடைய உள்ளன்பு தெரியாமல், இவன் சிறுபிள்ளைத் தன்மையால் பாலைக் கறந்து மணலிலூற்றிவிடுகிறானென்று நினைத்து, ஊரிற்சென்று பிராமணர்களுக்குச் சொன்னான். அவர்கள் தங்களுடைய பசுக்கள் குறைவில்லாமல் பால் கறப்பது தெரிந்திருந்தும் எச்சதத்தனுடன் சொன்னார்கள். அந்தப் பிராமணன், "நாளையதினம் நான் போய்ப்பார்த்து சொல்லுகிறேன்" என்று அவர்களுக்குச் சொல்லி, மறுநாள் மண்ணியாற்றங்கரையிற்சென்று, குராமரத்தின்மேல் மறைந்திருந்து, நாயனார் முன்போலத் திருமஞ்சனஞ் செய்வதனைக் கண்டு, கோபமூண்டு, இறங்கிவந்து, கோலால் முதுகிலடிக்க; நாயனார் அன்பின் மிகுதியால் அவனடித்ததும் தெரியாமல், அர்ச்சனைத் தொழில் விடாதிருக்க; எச்சதத்தன் பின்னும் கோபங்கொண்டு, திருமஞ்சனப் பாற்குடங்களைக் காலினாலிடறிச் சிந்தினான். அதைக்கண்ட நாயனார் மனம்பொறாமல், தம் மருங்கிருந்த கோலையெடுத்து, அதுவே மழுவாயுதமாக, எச்சதத்தனுடைய இரண்டு கால்களையும் தறிக்க; அவன் மண்மேல் விழுந்தான். அவ்வாறு அவன் விழுந்தது கண்டும், நாயனார் சிவார்ச்சனைவிடாது செய்ய; பரமசிவன் வ்ருஷபவாஹநத்துடன் பார்வதீ ஸமேதராயெழுந்தருளித் தம்மை வணங்கின அன்பரை யெடுத்து நோக்கி, "நீ நம்பொருட்டு ஈன்ற தாதை வீழ எறிந்தனை யாதலாலினி நாமே யுனக்குத் தந்தை" என்று அணைத்து, உச்சிமோந்து, மகிழ்ந்து, தொண்டர்களுக்கெல்லாம் தலைவராகுமுறையை யளித்து, நாமுண்ட பரிகலமும், உடுப்பவைகளும், சூடும்பூமாலைகளும், உனக்கே தக்கவாகக் கடவவென்றும், * தண்டீசனென்னும் பதமும் தந்தோமென்றும் கடாக்ஷித்து, தம்முடைய திருமுடியிலணிந்திருந்த கொன்றைமாலையினை அன்பர் முடியிற் சூடி சிவலோகத்துக் கெழுந்தருள; தண்டீசநாயனாரும் பரமசிவத்தைத் தொழுதுடன் சென்றனர். எச்சதத்தன் தண்டீசநாயனார் மழுவால் தண்டிக்கப்பட்டமையால் சிவாபராதம் நீங்கிச் சுற்றத்தாருடன் முக்தியடைந்தனனென்பதாம்.



பக்கம் - ௨௧, செய்யுள் - ௬௫.

## அகத்தியமுனிவர் கடலை ஆசமநஞ்செய்தது.

தேவேந்திரனும் விருத்ராசுரனும் போர்புரிந்து, தேவேந்திரன் விட்ட கணைகளை விருத்ராசுரன் வெட்டியும், விருத்தாசுரன் விட்ட கணைகளை தேவேந்திரன் வெட்டியும், ஒருவருக்கொருவர் பின்னிடாது முனைந்து சண்டைசெய்ய; தேவேந்திரன் இவன் எவ்வகையான அஸ்திரங்களை விட்டபோதிலும், பதில் அஸ்திரங்களை விட்டு மாய்த்துவிடுகிறானென்று தெரிந்து, கோபம் மூண்டு, வச்சிராயுதத்தை யெடுத்தவுடனே, அசுரன் பயந்து, சமுத்திரத்தில் குதித்து ஒளித்துக்கொண்டான். அவன் பின்னே இந்திரனும் குதித்துத் தேடிக் காணாமையினால், ப்ரஹ்மாவிடத்திற்போய் நடந்த சங்கதிகளையெல்லாம் சொல்ல; அவன் அசுரன் மாளும்படி யோசித்து, தேவேந்திரனை அகத்தியமுனிவரிடம் அனுப்ப; இந்திரன் பொதிகைக்கு வருவதை முனிவர் கண்டு அவனை ஆசீர்வதித்து, வந்த காரியத்தைக்கேட்க; இந்திரன் முனிவரைப்பார்த்து, "எல்லாம் உங்களுக்குத் தெரிந்த விஷயமே; ஆயினும், விருத்தாசுரன் என்னுடன் சண்டைசெய்து தோற்று சமுத்திரத்தில் ஒளித்துக்கொண்டான்; அவன் இறந்துபோகவும், எங்கள் துன்பம் தீர்ந்துபோகவும் வந்தேன்" என்று முறையிட; முனிவர் சிவத்தியானம்செய்து விருத்தாசுரன் மறைந்திருந்த சமுத்திரத்தை உள்ளங்கையில் உளுந்தளவாகக் கொண்டு ஆசமநஞ்செய்யவே கடல்நீர் வற்ற;

* சண்டேச்சுரன் என்றும் பெயர் வழங்கும்.

இந்திரன் கடலிலே ஒளித்திருக்கும் அசுரனைக் கண்ணுற்று வச்சிராயுதத்தால் அவனுடைய தலையை வெட்டி வீழ்த்தினனென்பதாம்.



பக்கம் - உக, செய்யுள் - சரு.

## அகத்தியமுனிவர் வாதாபியை ஜீர்ணஞ்செய்தது.

சூரபன்மன் தங்கையாகிய அசமுகியென்பவள் துருவாசமுனிவர் வசிக்கும் பன்னசாலையை யடைந்து, அம் முனிவரைப் பலாத்காரமாய்ப் புணர்ந்து இரண்டு பிள்ளைகளைப் பெற்று வில்வலன் வாதாபி என்னும் நாமந்தரித்தாள். அப் பிள்ளைகள் பிதாவாகிய துருவாசமுனிவரைக் கண்டு, தன் தபோபலத்தைத் தங்களுக்குத் தத்தஞ்செய்யும்படி பிரார்த்திக்க; அம் முனிவர் முனிந்து, "குற்றமற்ற முனிவருக்கு நாள்தோறும் நீங்கள் இடையூறு செய்து, பின்பு அகத்தியமுனிவரால் மரணமடைவீர்கள்" என்று சபித்தனர். அதன் பின்பு, இவ்விருவரும் பயந்து, ஓர் வனத்தை யடைந்து ப்ரஹ்மாவை நோக்கித் தவஞ்செய்து, "ஆட்டுக்கடாவைப்போல விளங்கும் வாதாபி வெட்டுப்படுவானாயின், நான் அவனைப் பார்த்து உயிர்பெற்று வரக்கடவையென்று கூவினால் பழைய உருவத்துடன் வர அருள் புரியவேண்டும்" என்று பிரார்த்திக்க; அவ்வாறே ப்ரஹ்மா வரங்கொடுத்தான். இவ் வரத்தைப் பெற்றுக்கொண்டு இவ்விரண்டு அசுரர்களும் குடகுதேசத்தில் ஓர் ஆச்சிரமம் செய்து வாழ்ந்துகொண்டிருந்தார்கள். அவ்விடத்தில் வரப்பட்ட முனிவர்களது உயிரை வாங்கும்பொருட்டு, வில்வலன் முனியுருவம் தாங்கியும், வாதாபி ஆட்டுருவம் தாங்கியுமிருப்பார்கள். வழியில் வரும் முனிவர்களைத் தங்கள் ஆச்சிரமத்திற்கு அழைத்துக்கொண்டு வந்து, வாதாபியைக் கொன்று, தசையைச் சமையல்செய்து, அன்னம் காய்கறி முதலியவைகளுடன் கலந்து, முனிவர்களுக்குப் படைத்து, உண்ணும்படிச்செய்து, தன் தம்பியாகிய வாதாபியை அழைப்பான். அப்போது ஆட்டுருவான வாதாபி உயிரும் உடலும் பெற்று முனிவர்களது வயிற்றைக் கிழித்துக்கொண்டு வெளியில் வருவான். அதனால், அவர்கள் இறக்கின்ற முனிவர்களது தசையையுண்டு சுகிப்பார்கள். இவ்வாறு, நெடுநாளாய் இவ் விருவரும் முனியுருவமாகவும் ஆட்டுருவமாகவும் எடுத்து தீத்தொழில்களைச்செய்து கொண்டு வசித்து வந்தார்கள். இவ்வாறிருக்க, அகத்தியமுனிவர் விந்தமலையைப் பாதலம் போயடையும்படிச்செய்து, பொதிகையை நோக்கி வருகையில், குடகுதேசம் வழியாய்ச் செல்வாராயினர். இவரது வரவையும் விருத்தாந்தத்தையும் வில்வலன் வாதாபி யறிந்து, இவரது தசையைத் தின்ன எதிர்பார்த் திருந்தார்கள். வாதாபி ஆட்டுருவடைந்து புதரில் மேய்ந்து கொண்டிருக்க; வில்வலன் முனிவுருதரித்து, அகத்தியமுனிவர் முன்னர் விரைவாய் வந்து நமஸ்கரித்து, மிக்க அன்புடையவனாகி, தன் ஆச்சிரமத்திற்கு வந்து உணவுகொள்ளும்படியாய்ப் பிரார்த்திகக; அம் முனிவர் இவ்வசுரனது வேண்டுகோளுக்கிசைந்து அவனுடன் போக; அவன் அவரைப் பூசித்து சமையல் செய்யத் தொடங்கினன். வில்வலன் அன்னம் காய் கறி பதார்த்தங்களையெல்லாம் திவ்யமாய் அமைத்து, அகத்தியமுனிவர் முன்னிலையில் ஆட்டுக்கடாவுருவம் பெற்றிருக்கும் வாதாபியை இரண்டு துண்டாக வாளினால் வெட்டி, தசையைக் கார திறுசுகளுடன் பாரித்து, ஆவிபோகமல் மூடி சமைத்து, வித்தமாக்கி, அகத்தியமுனிவருக்கு ஓர் ஆசனம் அமைத்து, அதில் இருக்கச் செய்து, உபசாரம் பண்ணி, சமையல் செய்த பலகாரவர்க்கங்களை யெல்லாம் முறையாகப் படைத்து, ஜலம் முதலியவைகளை யெல்லாம் சேகரித்துக்கொடுத்து உண்ணும்படிச் செய்தான். அகத்திய முனிவர் உண்டு, ஜலத்தைப் பானஞ்செய்து, அவ்விடம்விட்டு எழுந்து, வேறொரு இடத்தை யடையும் சமயத்தில், வில்வலன் அவருடைய உயிரை வாங்க நினைத்து ப்ரஹ்மாவைத் தியானித்து, "வாதாபி! சீக்கிரம் வருவாயாக" என்று அழைக்க; வாதாபி, "அண்ணா! வில்வலனே! இவனுடைய உயிரை வாங்கி வயிற்றைக் கிழித்துக்கொண்டு வருவேன்" என்று கூறிக்கர்ச்சிக்க; அகத்தியமுனிவர் வில்வலன் செய்த மாயத்தையறிந்து, கோப

மடைந்து, வாதாபி உயிர்நீங்கி இறக்கக் கடவனென்று வயிற்றை ஒருதரம் தடவ; வாதாபி இறந்துபோயினன். அதுகண்டு, வில்வலன் பழைய உருவத்தைத் தாங்கி, தண்டத்தை யேந்தி, அகத்தியமுனிவரைக் கொல்ல வரும்போது, அவர் ஒரு தர்ப்பையை யெடுத்து மந்திரித்து அவனது உயிர் நீங்கச் செய்தனரென்பதாம்.



## பக்கம் - சுக, செய்யுள் - ச.

## திருமால் தசாவதாரத்திலும் வாதனைபட்டது.

சோமுகாசுரன் முன்னொருகாலத்தில் ப்ரஹ்மாவிடமிருந்து வேதங்களைக் கொள்ளை கொண்டு கடலிலொளித்தனன். அதனை முனிவர்கள் கண்டு திருமாலுக்குணர்த்த, அஞ் சலிரென்றருளி, மீனவுருக்கொண்டு, அக் கடலிற் புகுந்து, அவ்வசுரனுயிரைக் கவர்ந்து, அவ் வேதங்களை யம் முனிவர்கட்கருளி, யாவுநிலைகலங்க அக் கடலைக்கலக்கி யுலாவினன். தேவர்கள் அதனைக் கண்டஞ்சி சிவபிரானைச் சரணடைய; சிவபிரான் அஞ்சலீரென்றருளி மகாசாத்தரைக் கூவி, அம் மீனத்தின் வலிசிந்துவாயென்றருள ; அவர் பரதவருருக் கொண்டு, கடல் சென்று, வலை வீசி, மீன்வடிவாகிய விஷ்ணுவைப் பிடித்து அம் மீனத்தின் கண்களைப் பறித்துக் கொடுக்க; சிவபெருமான் அவைகளைத் தம் திருமேனியிற் றரித்தனர்.

தேவர்களும் அசுரர்களுந் திருப்பாற்கடல் கடைந்தகாலத்தில் மந்தரகிரி யழுந்த; திருமால் ஆமையுருக்கொண்டு முதுகிற்சுமந்து கடைந்து அமுதெடுத்தபின்பு, இறு மாந்து அக் கடலைக் கலக்கும்போது, தேவர்கள் சிவபிரானுக்குரைக்க ; சிவபெருமான் மூத்தபிள்ளையாரை நோக்கி, அதனிறுமாப்பொழிப்பாயென்றருள ; அவர் பரதவருருக் கொண்டு சென்று வலைவீசி அக் கச்சபத்தினோடு வாங்கி மார்பிலணிவித்தனர்.

இரணியாக்ஷன் உலகினைப் பாயாகச் சுருட்டிப் பாதலத்திலொளித்தகாலத்துத் திரு மால் சுவேதவராகமாய்ச்சென்றவனைக்கொன்று உலகினை முன்போல் நிறுவி யிறுமாந்து அஷ்டகுலபர்வதங்களையும் கொம்பிற்கோத்து வீசத் தேவர்கள் நடுங்கி சிவபிரானிடம் முறையிடவும், சிவபிரானிரங்கி முருகக்கடவுளை நோக்கி, அச் சுவேதவராகத்தினிறுமாப் பொழித்து வருவாயென்றருள ; அம் முருகக்கடவுள் கிராதத் திருவுருவங்கொண்டு, அவ் வராகத்தோடு போர்செய்து வலியை யொழித்துக் கொம்பைப் பறித்து, அச் சிவ பெருமானுர் மார்பிலணிவித்தனர்.

இரணியாக்ஷன் எல்லா உலகங்களையும் தனதடிப்படுத்தித் தன்னை யாவரும் இரண்ய நமோ: என்று கூறச் செய்து, உலகினை வருத்திவருங்கால், தேவர்கள் வேண்டுகோளுக்குத் திருமாலிரங்கி அவன் புத்திரனுகிய பிரகலாதன்பால் தனதோரம்ஸத்தை நிறுவி, அவ னுல் தன் பெயர் நிறுவ ; அதற்கு இரணியாக்ஷன் பொருது புழுங்கத் தூணில் நரசிம்ம மாய்த் தோன்றி அவ்விரணியாக்ஷனுயிர்குடித்து, அம் மயக்கால் தேவர்களை வருத்த ; அவர்கள் வேண்டுகோளுக்குப் பரமசிவனிரங்கி, வீரபத்திரரை நோக்கி, அம் மயக்கொ ழித்து வருவாயென்றருள; அவ் வீரபத்திரர் சரபவடிவாய்ச் சென்று, அந நாரசிம்மத்தின் வலியழித்து, அதன் சர்மத்தைப் போர்வையாகத் தந்தனர்.

முன்னொருகாலத்தில் மாவலியென்பவன் எல்லாவுலகங்களையும் தன்னடிப்படுத்தித் தேவர்களேவல் கேட்ப அரசு செலுத்தி வந்தனன். தேவர்கள் திருமாலையடைந்து எங்கள் குறையொழிக்க வேண்டுமென்றிரக்க ; திருமால் அவ்வாறே யொழிப்போம் அஞ்சன்மி னென்று கூறினர். பின்பு, விஷ்ணு காஸிபர் மனைவியாகிய அதிதி வயிற்றில் வாமனவுருக் கொண்டவதரித்து, மாவலி செய்யும் வேள்விச்சாலையை யடைந்து, மூன்றடிமண் ணிரக்க; அவன் தந்தோமென்றுரைக்க ; விஷ்ணு நிலவுலகையும் விண்ணுலகையும் இரண்டடியி லடக்கி, ஓரடிக்கிடமில்லாமையால், அவன் தலையில் தமது திருவடியை வைத்துப் பாதலத்தி லழுத்தி இறுமாப்படைய; தேவர்களஞ்சிச் சிவபெருமானைச் சரணடைய ; கருணைநிதி

யாகிய பரமசிவன் கடாக்ஷித்து வயிரவரைக் கூவி, "விஷ்ணுவின் இறுமாப்பொழிதி" என்றருள; வயிரவர் கோபமடைந்து சென்று வாமனனோடு போர்செய்து வலியழிக்க; அந்தத் திருமாலின் உடம்பின் தோலுரிவாங்கிச் சட்டையாகத் தரித்து முதுகென்பைத் தண்டாகவேற்றனர்.

ஜமதக்கினிமுனிவருக்கும் அவர் மனைவியாகிய ரேணுகைக்கும் திருமால் புத்திரனாகப் பிறந்து பரசுராமனெனப் பெயர்பெற்றனன். ஜமதக்கினிமுனிவர் சிவபூசைக்கு நாள்தோறும் கங்கைநீர் திரட்டிவரும் பணியில் நின்ற ரேணுகையென்பவள் ஓர் நாள் நீர்திரட்டச் சென்றவள் ஆகாயத்திற் செல்லும் ஓர் கந்தருவனிழல் அக் கங்கைநீரில் பிரதிபிம்பிக்க, அதனைக் கண்டு சிறிது தன் மனநிலை கலங்கத் தனது கற்பின் நிலையால் கையாற்றிரட்டத் திரண்ட நீர் அன்று திரளாமையால், தனது மனமஞ்சி வருந்தி இது யாதாய் முடியுமோவெனக் கைநெரித்து நடுங்கி வருதற்குக் காலம் தாழ்க்க; முனிவர் அதனைத் தனது நிட்டையா லுணர்ந்தனனாதலின், அன்னைபாலோர் நவம்பழுத்த தீங்குணர்ந்து, தனது சொல்லைக் கடவாதொழுகுதலையே தனது புத்திரன் விரதமாகக் கொண்டோனாதலின், அவன் தனது அன்னையைக் கொல்ல ஏவ; பரசுராமன் தனது தந்தையின் சொல்லைக் கடவாமையே தருமமென்று தனது தாயைக் கொலைசெய்து மீண்டபின், தனது தாதையால் மூன்று வரம் பெற்று, ஒரு வரத்தால் தாயைப் பிழைப்பித்தும், ஒரு வரத்தால் தனது பிதா கோபத்தைப் பற்றற விடச்செய்தும், மற்றொரு வரத்தால் சிவபெருமான் திருவடிக்கன்பும் பெற்றனன். இவ்வாறிருக்க, ஏகயனென்னும் சந்திரகுலத்து அரசன் மரபிற்றோன்றிய கார்த்தவீரியார்ச்சுனன் அரசுபுரியுங்கால், நிலவுலகின் பரப்பைப் பார்த்தற்கு அளவில்லாத சேனைகளோடு போந்து எட்டுத்திக்கு முலாவி வரும்போது, ஜமதக்கினிமுனிவர் பன்னசாலையை யடைந்து அவரை வணங்கி நிற்க; அம் முனிவர் நோக்கி, "நீ மிகவும் உடல் வெயர்த்து இளைத்து வந்தனை; ஆகையால், நாம் தரும் கனி கிழங்குகளை யருந்தி யிளைப்பாறிச் செல்வாய்" என்று முனிவர் கூற; அரசன், "என்னொடு வந்த சேனைவெள்ளமளவில்லை; அவர்களைவிட்டுத் தனியே நுகரேன்; ஆதலால், நான் போதற்கு விடை தந்தருளல் வேண்டும்" என்று இரந்தனன். அதனைக் கேட்ட அம் முனிவர், காமதேநுவால் அவ்வரசனுக்கும் அவன் சேனைக்கும் நல் விருந்தமைக்க; அதனை நுகர்ந்து களிகூர்ந்த அவ்வரசன் அம் முனிவரை நோக்கி, இக் காமதேநுவை அடியேனுக்கருளவேண்டுமென்று குறையிரப்ப; அம் முனிவர் புன்னகை செய்து இசையாது தமது தவச்சாலைக்குட்சென்றனர். அஃதுணர்ந்த அவ்வரசன் அக் காமதேநுவைப்பற்றித் தன்னகருக்குக் கொண்டுபோகத் தனது சேனையோடு முற்றுகை செய்தகாலையில், அக் காமதேநு சினந்து தனது மயிரைச் சிலிர்க்க; அம் மயிர்க்கால்தோறும் கோடாகோடி வெள்ளம் தோன்றி அவன் சேனை முற்றும் அழித்தமையை அரசன் நோக்கி, எஞ்சின சேனையோடு தன்னகருட்போயினன். அது கண்ட அவன் மைந்தர் நால்வரும் தமது தாதையை வணங்கி, இத் தீங்கு விளைத்தது அம் முனிவராதலின், இரவிற் சென்று அவன் தலையைச் சிதைத்து வருகின்றோமென்று அனுஞைபெற்றுச் சென்று நிட்டையிலிருந்த முனிவர் தலையைச் சேதித்தனர். பரசுராமன் தனது தாதை கொலையுண்டதைப் பார்த்து கோபமுற்று, அரசர் குலமுற்றும் வேரோடழிப்பேனென்று சபதஞ்செய்து, சிவபிரானது திருவருள் பெறவேண்டி ஓர் சிவலிங்கந் தாபித்து அர்ச்சனைசெய்து வணங்கினன். அதுகண்ட சிவபெருமான் கிருபைகூர்ந்து, சுப்பிரமணியர் விநாயகர் உமாதேவி ஆகிய இவர்கள் ஸமேதராக, வேதங்களை நாய்களாக்கிக்கொண்டு, தானும் புலையனைப் போன்ற திருவுருவந்தாங்கி, பரசுராமனுக்கு எதிரில் தோன்ற; அப் பரசுராமன் அவரைச் சிவபெருமானென்று அறியாமல் புலையனெனக் கருதித் தன்னை அடுத்து வந்ததைப் பார்த்துத் தூஷிக்க; இருவருக்கும் பூர்வநிலையினைக் குறித்து வாக்குவாதமும் பெரும்போரும் விளைய; அதன்மேல், பரசுராமன் மனநொந்து சிவபெருமானைக்குறித்துப் பலவாறு துதித்து கடாக்ஷித்தருள்செய்யக் குறையிரப்ப; பரமசிவன்

இலாத அன்புமேலீட்டையுணர்ந்து, தனது புலியத்திருவுருக்கரந்து தன் உண்மையுருக் காட்சி தந்தருளினன். பரசுராமன் பெருமானை வணங்கி, "சுவாமி! என் தாதையாகிய ஜமதக்கினிமுனிவரை கார்த்தவீரியார்ச்சுனன் கொன்றனன்; அவனது குலத்தை வேரறக் கொன்றழித்து, என் தாதைக்கு அவ்வரசர்களது உதிரநீரை கையிலெடுத்து பிதுர் தர்ப்பணஞ்செய்யச் சபதஞ்செய்திருக்கின்றேன்; அவ் வலிமையை அருள்புரிதல் வேண்டும்" என்று வேண்டினன். பெருமான் அவ்வாறே அவனுக்கிரங்கி தனது திருக்கரத்திருந்த பரசாயுதத்தின் அமிசத்தினின்று ஓர் ஆயுதத்தைத் தந்தருளி திருவுருமறைந்தருளினன். இதனால், அவன் பரசுராமப்பெயரையடைந்து கார்த்தவீரியார்ச்சுனன் முதல் இருபத்தொரு தலைமுறையில் வந்தவர்களைப் போரிற்கொன்று அவர்களுடைய உதிரநீரினால் பிதிர்க்கடன்கள் செய்தின்புற்றனன்.

சூரியகுலத்திற்றோன்றிய தசரதசக்கிரவர்த்தி யென்பவர் அயோத்தியாபுரியில் கோசலை சுமித்திரை கைகேசி என்ற தேவிமாருடன் வாழுநாளில், சனிதூல் வல்லோரால் பன்னீராண்டு மழைபெய்யாமல் கொரோமானதோர் பஞ்சமுண்டாகி பூவுலகிலும் வானுலகிலுமுள்ள ஜனங்கள் வருந்துவர்களென்பதையறிந்து, அநேக மண்டலங்களைக் கடந்து சனிபகவானிடம்போய் சங்கதியைத் தெரிவித்து, தம் தேசம் துயரடையாதிருக்க அவரிடம் வரம்பெற்றுத் திரும்பி வந்தனர். மன்னன் அறுபதினாயிரம் வருஷம் அரசுபுரிந்தும், புத்திரப்பேறில்லாததனால் மனம் வருந்தி, வசிட்டமுனிவரிடம் சேர்ந்து தான் புத்திரனடைவதினிமித்தம் ஓர் அஸ்வமேதயாகஞ் செய்யக்கருதி இருந்ததனைத் தெரிவித்தனன். அதன்மேல், வசிட்டமுனிவர் மனமகிழ்ந்து, மகம் புரிவான் சுமந்திரனைக்கூவி, சரயுமாநதியின் வடதீரத்தில் யாகசாலையமைத்தற்கும், வேண்டிய சாமக்கிரிகளைச் சேகரித்தற்கும் கட்டளையிட்டனர். அவ்வாறே சுமந்திரன் வேள்விக்குரிய யாவையும் சேகரித்து, ரோமபாதரிடமிருக்கும் ருஸ்யஸ்ருங்கரை வரவழைத்து புத்திரகாமேஷ்டியாகத்தைச் செய்யும்படிக் கூறிச் சென்றனன். இதைக்கேட்ட மன்னன் வசிட்டமுனிவரையழைத்துத் தன் கருத்தினைத் தெரிவிக்க; அவர் அவ்வாறே சம்மதித்து, ருஷியை அரசனைப் போயழைத்து வரும்படி விடைகொடுத்தனுப்ப; அரசன் அதற்குடன்பட்டு அங்கதேசத்துக்குப்போய் ரோமபாதர் முதலானவர்களையழைத்து வந்து, விதிமுறையானே அஸ்வமேதயாகம் புரிந்தனன். அப்போது ஓமகுண்டத்தினின்று புறப்பட்ட ஓர் பூதம் பொன் வள்ளத்திற் பாயசங்கொணர்ந்து, அதைத் தரையில் வைத்து மீண்டும் அக்கினியில் பிரவேசித்தது. பிறகு, தசரதன் அப் பாயசத்திற் பாதி கோசலைக்கும், அப் பாதியிற் சிறிது சுமித்திரைக்கும், மிகுந்ததிற்பாதி கைகேசிக்கும், மற்றதை மீண்டும் சுமித்திரைக்கு மளித்தனன். இது நிற்க.

இராவணன் செய்யும் கொடுமையால் தேவர்களெல்லாரும் பயந்து, திருப்பாற்கடலில் சயனம் செய்துகொண்டிருக்கும் திருமாலுக்குச் செய்தியைக் கூறி, இடரைத் தவிர்க்கும்படியாய் இறைஞ்சி நிற்க; திருமால், தேவர்களை நோக்கித் தாம் தசரதன் மதலைகளென நான்கு மூர்த்திகளாயவதரித்து க்ருபைசெய்வதாயருளினர்.

பின்பு, பாயசமுண்ட தேவியார் மூவரும் கர்ப்பமுற்று, ஸ்ரீராமபிரானை மேஷமாதத்தில் நவமிதிதியும் புனர்பூசநக்ஷத்திரமும் கடகலக்நமும் கூடிய சுபதினத்தில் கோசலாதேவி பெற்றாள்; பரதனை பூசநக்ஷத்திரமும் மீநலக்நமும் கூடிய சுபதினத்தில் கைகேசி பெற்றாள்; லக்ஷ்மணனை ஆயில்யநக்ஷத்திரமும் கடகலக்நமும் கூடிய சுபதினத்திலும் சத்ருக்கனனை மகநக்ஷத்திரமும் சிம்மலக்நமும் கூடிய சுபதினத்திலும் சுமித்திரை பெற்றாள். பின்னர், இக் குமாரர்களுக்கு வசிட்டமுனிவர் பல கலைகளையும் வேதங்களையும் ஓதுவித்தனர். இவ்வாறிருக்குநாளில், விசுவாமித்திரமுனிவர் தசரதனிடம் வந்து, தன் தவத்திற்கு ஊறு செய்யும் தாடகையையும் அவள் மக்களாகிய மாரீச சுபாஹுக்களையுங்களைய இரகுநாதனையனுப்பும்படிகேட்க; தசரதன் சற்றுத்தாமதித்துத்

தெளிந்து, இராமசந்திரனையும் லக்ஷ்மணனையும் விசுவாமித்திரமுனிவருடன் அனுப்பினன். விசுவாமித்திரமுனிவர் அவர்களையழைத்துக்கொண்டு காட்டிற்சென்று, அவர்களுக்குப் பலை அதிபலை யென்னு மிரண்டு மந்திரங்களை யுபதேசித்து, வேண்டிய அஸ்த்ர ஶஸ்த்ரங்களையுமீந்து, சித்தாச்சிரமமணைந்து, வேள்வி தொடங்கலும் மாரீசன் சுபாகு முதலானவர்களால் வேள்வி கெடாவண்ணம் இராமசந்திரன் காத்தனன். முனிவர் ஆறுதினத்தில் வேள்வியை முடித்து, மிதிலை வேந்தனது வேள்வியைக் கண்ணுறும்பொருட்டு, இராமசந்திரனையும் லக்ஷ்மணனையும் அழைத்துக்கொண்டு வரும் மார்க்கத்தில், இரகுநாதன் சமீபித்த ஓரிடத்தில் கௌதமமுனிவரது சாபத்தால் சிலாரூபமாயிருந்த அகலிகை பண்டை உருவம் பெற்று நின்று, விடைபெற்றுத் தன் கணவரான கௌதமமுனிவரைச் சார்ந்தனள். அதன் பின்பு, இரகுநாதன் முதலானவர்கள் மிதிலை வேந்தனிடம் சென்றனர். அவ் வேந்தன் ஓர் வேள்வி யியற்ற நிலத்தைக் கலப்பையால் உழவே அக் கொழுமுகத்தினின்றும் ஓர் பெண் தோன்றினளென்றும், ஜனகர் அப் பெண்ணிற்குச் சீதையென்று பெயரிட்டு வளர்த்துவந்தனரென்றும், அவரிடமுள்ள வில்லை வளைத்தவரே பிராட்டியாருக்கு மணவாளரென்றும், அநேக சூராதி சூரர்கள் வில்லை வளைக்காது நாணித் திரும்பிவிட்டனரென்றும், இவ்விரகுநாதன் இவ் வில்லை வளைப்பானாயின் தாம் செய்த பெருந்தவப்பயனே யென்றும் கூறினதாகக் கூறினர் சதானந்தர். அதுகேட்ட முனிவர் இராமபிரானது திருமுகத்தைப் பார்க்கவே, அப் பிரான் துணுக்கெனவெழுந்து, வில்லை வளைக்கவே, அது இரண்டு துண்டமாயிற்று. பிறகு, இரகுநாதனுக்கும் சீதாபிராட்டியாருக்கும் திருக்கல்யாணம் நடந்தேறியது. ஜனகரது ஔரஸ புத்திரியாகிய மாண்டவியையும் அவருக்கிளையவனான குசத்துவசனென்பவனது புத்திரிகளாகிய ஊர்மிளை ஶ்ருதகீர்த்தி என்ற இருவரையும் முறையே பரதனும் லக்ஷ்மணனும் சத்ருக்நனும் விவாகஞ்செய்து கொண்டனர். அதன் பின்பு, தசரதனும் இராமசந்திரனும் மற்றுமுள்ளவர்களும் மிதிலையை விட்டு அயோத்தியாபுரியை நோக்கித் திரும்புங்காலத்தில், பரசுராமர் எதிர்ப்படவும் தசரதன் இரகுநாதனை அவன் யாது செய்வனோ என்று பயங்கொள்ள ; பரசுராமன் ஸ்ரீராமனைநோக்கி, "ஸ்ரீஹரி தனது சார்ங்கத்தை இருசிகன் என்றவனிடத்தில் கொடுத்தலும் அவன் தந்தையாகிய ஜமதக்கினிபாலீந்தனன் ; எந்தையு மெனக்குத்தந்த விச்சிலையை நீ நாணேற்றில் நின்னையொப்பான் அந்நாராயணனன்றி யாருமில்லை" என்றுரைக்க ; இரகுநாதன் அந்த வில்லை வளைத்துப் பரசுராமரை யனுப்பிவிட்டு அயோத்தியை யடைந்தான்.

தசரதன் பரதனை யழைத்து அவனது மூதாதையிடம் போய்வரும்படி கேகய நாட்டிற் கனுப்பிவிட்டனன். சென்னாட் சென்றபின்னர், இரகுநாதனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்யத் தொடங்கலும், கைகேசி சம்பராசுர யுத்தத்தில் கணவரிடத்திற் பெற்றிருந்த இரண்டுவரத்தில், ஒன்றால் ஸ்ரீராமன் வநத்திற்செல்லவும், மற்றொன்றால் பரதன் அரசாட்சிசெய்யவும் அருள்செய்ய வேண்டியதென்று மன்னனைக்கேட்டனள். அது கேட்ட தசரதன் மௌனம் சாதிக்க, கைகேசி ஸ்ரீராமனைநோக்கி, "குமர ! பதினான்கு வருஷம் நீ வநத்தில் வாசஞ்செய்யவும், பரதன் அரசாட்சிசெய்யவும் நினது தாதையால் வரம்பெற்றிருக்கிறேன் ; நீ அவ்வாறு செய்யக் கடவை" என்றனள். அவ்வுரைக்கிணங்கி இரகுநாதனும் சீதாபிராட்டியும் லக்ஷ்மணனும் தசரதனிடம் விடைபெற்றுக்கொண்டு தண்டகாரணியஞ் சென்றனர். தசரதன் கைகேசியின் வஞ்சகச் செயலினால் இவ்வாறு நேரிட்டதே யென்று அயர்ந்து துன்புற்றனன். விடைபெற்ற மூவரும் வநத்திற்செல்லுகையில் குகப்பெருமானிடம் உபசாரங்களைப்பெற்று, பரத்துவாசமுனிவரது ஆச்சிரமத்தையடைந்து, வாசஞ்செய்வதற்கு அவரால் அறிந்துகொண்டதோரிடமாகிய சித்திரகூடப்பர்வதத்திலேறி, அவண் ஓர் பன்னசாலையை யமைத்து அதில் வசிப்பாராயினர். இரகுநாதன் முதலியோர் வநமடைந்தனரென்று கேட்கவும், தசரதன் மனவியாகுலத்தினால் உயிர் துறந்து வானடைந்தனன். அதன் பிறகு, பரதன் கேகயநாட்டினின்றுமடை

ந்து, சங்கதிகளை யறிந்து, தைலத்திலிட்டிருந்தத் தன் தாதையினுடலை யெடுத்து விதிப்படி தகனஞ்செய்து நீர்க்கடன் செய்தனன். இரகுவீரன் தாதையின் சமாசாரத்தைத் தெரிந்து துக்கித்து நீர்க்கடன் யாவையுஞ் செய்தனன். பிறகு, பரதன் தன் தமையனது பாது கையைத் தருவித்து, அதற்குப் பட்டாபிஷேகஞ்செய்து, அர்ச்சனை புரிந்து, அரசாள் வாய் என்று துதித்து, தன் தம்பியுடன் மரவுரி தரித்து மாதவம் புரிந்தனன்.

அம் மூவரும் சின்னாட் கழிந்த பின்பு, சித்திரகூடத்தை விட்டகன்று, தென்றிசை நோக்கிச்சென்று, அத்திரிமஹர்ஷியைக்கண்டு அவரிடம் ஆசீர்வாதம் பெற்றுச் சரபங்க மஹர்ஷியினது ஆச்சிரமத்தை யடைந்தனர். சரபங்கர் அவர்களுக்குத் தம் மாதவங் களை அர்ப்பணஞ்செய்து, அவர்களை நோக்கிச் சுதீக்ஷணமுனிவர்பாற் சென்று ஓர் உறை விடம் ஏற்படுத்துக்கொள்ளும்படியாய்க் கூறி பிரமனுலகமடைந்தனர். பின்பு, இரகுநாதன் சுதீக்ஷணமுனிவரிடம் சென்று அவரது தவத்தையும் தனக்கர்ப்பணஞ் செய்யப்பெற்று, சில மஹர்ஷிகளின் ஆச்சிரமங்களில் சின்னாட்கழித்து, மீண்டும் சுதீக்ஷணர் பாலடைந்து, அவரிடம் விடைபெற்று அகத்தியமுனிவரிடம் செல்வாராயினன். இரகுநாதன் சீதாபிரா ட்டி லக்ஷ்மணன் இவர்களுடன் அகத்தியமுனிவராதாச்சிரமத்தை யடைந்து, அம் முனிவரி டம் ஆசீர்வாதத்துடன் விடைபெற்று, கோதாவிரிநதி தீரத்திலிருக்கும் பஞ்சவடியை யடை ந்து, ஓர் பன்னசாலை யமைத்து, அதில் வசித்துக்கொண்டிருக்குங் காலத்தில், ஓர் நாள் இராவணனது தங்கையாகிய சூர்ப்பணகை வந்து இரகுநாதனை நோக்கி, இராக்கதவுரு நீக்கி சுந்தரமுள்ள தெய்வப்பெண்ணுருத் தாங்கி, அவனைப் பலாத்காரப்படுத்தித் தன் இச் சக வார்த்தைகளுக்கிணங்க முயலுகையில், இவள் செய்யும் சூதினையோர்ந்து இரகு நாதன் தன் தம்பியாகிய லக்ஷ்மணனால் மூக்கையும் செவியையும் கொய்துவிடவே, அவள் இராவணனைக்கூவி, கரனிடம் சென்று நடந்தவற்றைத் தெரிவித்தனள். அதைக் கேட்ட கரன் முதலானவர்கள் கோபமடைந்து சேனைகளோடு வந்து இரகுநாதனுடன் போர்புரிந்து அவர்களெல்லாரும் உயிர் துறந்தனர். இவர்களில் தப்பிப் பிழைத்தவனான அகம்பன் என்பவன் விரைந்தோடி இராவணனுக்குத் தெரிவிக்க; அவன் கோபமடைந் திருக்கையில் சூர்ப்பணகை அவண் சென்று சீதாபிராட்டியின் சுந்தரத்தையும், தன்னை லக்ஷ்மணன் அங்கவீனப்படுத்தினதையும், இராமபிரானது வலியையும், அவனால் கரன் முதலானவர்கள் மாண்டதையும் தெரிவித்தனள். அதுகேட்ட இராவணன் சீதா பிராட்டியின்பேரில் அதிக மோகமுற்றவனாகி, மாரீசனை விளித்துத் தன் கார்யத்தை நிறைவேற்ற அனுப்ப; அவன் மானுருவந்தாங்கி சீதாபிராட்டியின் முன்றோன்ற; அது கண்ட பிராட்டியார் தன் கணவரைப்பார்த்து இம் மானைப்பிடித்துத் தரல்வேண்டுமென்று வணங்க; அதற்காக இராமசந்திரன் அம் மானின் பின்னே வெகுதூரம் துரத்திக்கொண்டு செல்ல; அம் மான் கிடைக்காது ஓட; ஓர் அம்பால் ஸ்ரீராமன் அதை கீழே வீழ்த்த; அம் மாரீசன் சீதா! லக்ஷ்மணா! என்று கதறிக்கொண்டு வீழ்ந்து இறந்தனன். பன்னசாலையி லிருந்த சீதாபிராட்டி மாரீசனது குரலைக்கேட்டு, இராமபிரானுக்கென்னவிடுக்கண் நேரிட் டதோவென்று மனங்கலங்கி யுற்றதறிவான் தம்மைக் காத்திருந்த லக்ஷ்மணனை அக் குரல் எழுந்த திசை நோக்கி அனுப்பினள். அவர் சென்றதும், இராவணன் ஓர் சன்னி யாசவேடந்தரித்து, சீதாபிராட்டியைக்கிட்டி, பிராட்டியைத் தன்றேரில் ஏற்றிக்கொண்டு செல்லுகையில், சீதாபிராட்டி வாய்விட்டரற்றுங் கூக்குரலை ஜடாயு அறிந்து பிராட்டி யாரை மீட்க இராவணனுடன் எத்தனித்துப் போர்புரிந்து தோல்வியடைந்து, உயிர் துறக்குந் தருணமாயிருக்கையில்: இராவணன் இலங்கை சேர்ந்து, ஓர் அசோகவநத்தில் சிம்சுபாவ்ருக்ஷத்தினடியில் சீதாபிராட்டியை வைத்துச் சிறையிட்டனன்.

அப்பால், இராமபிரானும் லக்ஷ்மணனும் திரும்பி வந்து பார்க்கையில் சீதையைக் காணாமல் மிகத் துயரமடைந்து, அவளைத் தேடுவான் செல்லும் மார்க்கத்தில் குற்றுயிர் தாங்கிக்கொண்டிருந்து தமக்கு எதிர்ப்பட்ட ஜடாயுவினால் தம் பத்தினி இராவணனால்

கவரப்பட்டு இலங்கையிலிருப்பதைத் தெரிந்துகொண்டனர். பின்பு, ஜடாயு உயிர்நீங்கவே, இராமசந்திரன் இப் பக்ஷிராஜனுக்குரிய தகனக்கிரியைகளைச் செய்தருளினன். அதன்மேல், அவர்கள் தேடிக்கொண்டு ஓர் வநத்தில் வருகையில், ஓர் அரக்கியாகிய அயோமுகி யென்பவள் லக்ஷ்மணனைக்கண்டு, தன்னுடன் சம்பந்தப்பட விரும்புதலும், அவர் அவளது செவியையும் மூக்கையும் ஸ்தநங்களையும் அறுத்துத் துரத்திவிட்டனர். அவ்விடம்விட்டு செல்லும்போது, கவந்தன் எதிர்ப்பட்டு அவனது விருப்பத்தின்படி அவனை ஓர் குழியில் தள்ளித் தகனஞ்செய்ய ; அவன் உடனே தேவவுருவடைந்து, பிரானைப் பார்த்து இருசியமுகபர்வதத்திலிருக்கும் சுக்கிரீவனிடஞ்சென்று, வேண்டிய வுதவியை அவனிடம் அடைவாயென்று கூறி வானுலகஞ் சென்றனன். அவ்வாறு அவர்கள் செல்லுங்காலத்தில், சவரியம்மை எதிரில் வர ; ஸ்ரீராமபிரான் அவளாலுபசரிக்கப்பட்டு, மதங்கமுனிவரது ஆச்சிரமத்தையடைந்து, அவ்விடமிருந்த விநோதங்களை யெல்லாங் கண்டு அதிசயங்கொண்டனர். சவரியம்மையார் இராமபிரானது திருவடிசேவையினால் தமதுடலை நீத்து வானுலகம் போய்ச்சேர்ந்தனள். அதன் பின்பு, இவ்விருவரும் அவணை விட்டேகி இருசியமுகபர்வதமடைந்தனர். அப்போது அப் பர்வதத்திலிருந்த சுக்கிரீவன் லக்ஷ்மணனைப் பார்த்து இவர் வாலியினால் ஏவப்பட்டவனே என்று திடுக்கிட்டுப் பயந்து குகையில் ஒளித்துக் கொள்ள ; அநுமான் சுக்கிரீவனைத் தேற்றித் தான் போய் இவரை இன்னாரென்று தெரிந்துகொண்டு வருவதாக விடைபெற்றுக்கொண்டு, லக்ஷ்மணனிடம்போந்து, அவர் வரலாற்றினையறிந்து, இராமபிரானையும் லக்ஷ்மணனையும் இரு தோள்களிற்றூங்கிக் கொண்டேகிச் சுக்கிரீவன்பால் விடுத்தனன். அதன் பின்பு, இராமபிரானும் சுக்கிரீவனும் நட்படைய ; வாலியைக்கொன்று சுக்கிரீவனுக் கரசளிக்கவேண்டியது இராமபிரான் கடனென்றும், சீதாபிராட்டியிருக்கு மிடத்தைத் தெரிந்துரைப்பது சுக்கிரீவன் கடனென்றும் ஒருவர்க்கொருவர் அக்கினி முன்னர் உறுதிமொழி செய்து கொண்டனர். அவ்வாறே, வாநரவேந்தனாகிய சுக்கிரீவனது வேண்டுகோளின்படி மராமர மேழையும் தொளைத்துத் துந்துபியென்னுமசுரனதுடலை லக்ஷ்மணன் உந்தி ஓட்டுவித்து, வாலியைக் கொன்று சுக்கிரீவனுக்கு முடிசூட்டி முடித்தனன்.

பின்பு, இருசியமுகமால்வரையில் வீற்றிருந்து சின்னாட் கழித்து, சுக்கிரீவன் உறுதிமொழியளித்ததை மறந்தனனோ ? என்று ஐயுற்று, சங்கதி விசாரித்தறிந்து வரும்படி லக்ஷ்மணனை ஸ்ரீராமன் அனுப்ப ; அவன் கிஷ்கிந்தையடைந்து நாணொலிசெய்தனன். இவ்வொலியைக்கேட்டு அநுமான் வந்து லக்ஷ்மணனை யழைத்துக்கொண்டுபோய் சுக்கிரீவனிடம் செய்தியைச்சொல்ல ; அவன் நாணி வாலியின் பத்தினியாகிய தாரையை நோக்கி, லக்ஷ்மணரை நீ சென்று, அவரைக் கோபந்தணியும்படிசெய்து எங்களைக் காக்கக் கடவதென்று வேண்டினன். அவ்வாறே அம் மாது லக்ஷ்மணனை யெதிர்கொண்டழைத்து இராமபிரானோடும் சுக்கிரீவனது அரண்மனையைச் சேர்தலும், ஸ்ரீராமனும் சுக்கிரீவனும் முகமன் கூறலாயினார்கள்.

பின்பு, சுக்கிரீவன் அநுமானையும் வாநரப்படைகளையும் அவர்களின் அதிபதிகளையும் வரவழைத்து அவர்களை நோக்கி நான்கு திக்குகளினும் சென்று சீதாபிராட்டியாரை நாடிவர வேண்டியதென்றும் அதற்குரிய உபாயங்களையும் சொல்லி அனுப்ப ; அநுமான் ஸ்ரீராமனைத் தொழுது அவரிடம் மோதிரம்பெற்றுக்கொண்டு, இளையவரசான அங்கதன் தொடர்ந்து வரவும் மற்ற வீரர்கள் புடைசூழ்ந்து வரவும் சீதாபிராட்டியாரைத் தேடிச் செல்லுங்கால், திருவேங்கட மலையைக்குறுகி, கோசலநாட்டையடைந்து, காவிரிநதியைத் தரிசித்து நீராடி, தென் கடலைககண்டு, அதையெவ்வாறு கடப்பதென்று திகைத்து, இராமகதையைப் பேசிக்கொண்டுவருகையில் * ஜடாயு என்னும் வார்த்தையை இறகிழந்து

* முன்னொரு காலத்தில் சம்பாதி ஜடாயுவென்னும் கழுகுருவமைந்த சகோதரர்கள் தம்மில் யார் வலியர் என்று ஒருவர்க்கொருவர் சண்டைசெய்து, சூரியனைக் கண்டு

கிடந்த சம்பாதி கேட்டு விரைந்து வந்து, வாநராதிபதியை நோக்கி அவன் தனக்கு இளையோனென்றும், சீதையை இராவணன் கொண்டுபோய் இலங்கையில் வைத்திருக்கிறானென்றும் உரைத்து சமுத்திரத்தில் மூழ்கிச் சிறகுபெற்று பறவைகட்கரசனாய்ப்போந்தனன். அதன் பின்பு, அநுமான், அங்கதன் ஜாம்பவன் நீலன் முதலானவர்களை வணங்கி விடைபெற்று, அதிவிரைவில் கடலைத்தாண்டி, இலங்கையிற்புகுந்து, ஸ்ரீ பஞ்சாக்ஷரமந்த்ரத்தை விதிப்படி ஜபித்து ஓர் சோலையைக்கண்டு, ஆண்டிருந்த சீதாபிராட்டியாரைத் தரிசனஞ்செய்து, பிராட்டியாருக்குத் தனது வரலாற்றைக்கூறி, மோதிரத்தைக் கொடுத்து, பிராட்டியாரிடம் சூளாமணியை வாங்கிக்கொண்டு, பிராட்டியாரைத் தேற்றி, இராமசந்திரன் சீக்கிரம் வந்து மீட்டுக்கொண்டு போவதையறிவித்து விடைபெற்றுத் திரும்பி, இராவணனைப் பார்த்துப் போகவேண்டியதென்று நினைத்து, இலங்கையைச் சூறையாடக் கருதி அச் சோலையை யழிக்க மரங்களின் கிளைகளை முறித்துக்கொண்டிருப்பதைத் தெரிந்த இராவணன் கேட்டு, கோபமடைந்து, குரங்கைக் கொல்லாது பிடித்துக் கொண்டு வருகவெனக் கிங்கரர் முதலானவர்களை ஏவ; அவர்களெல்லாரும் அநுமானால் உயிர் நீங்கப்பெற்றார்கள். அதுகேட்ட இராவணன் அநுமானைப் பிடித்துவர தானே புறப்பட எத்தனித்தலும், தன் மைந்தனான இந்திரஜித்துத் தடுத்துப் புறப்பட்டு, அநுமானை பிரமபாசத்தால் பிணித்து இராவணன் முன்னர்விட; அவன் அநுமானைநோக்கி, "நீ யாவன்? எங்கு வந்தனை? என்று வினவ; அநுமான் தான் இராமபிரானது தூதனென்று தான் வந்தகார்யத்திற்குரிய பலநீதிவசனங்களை யுரைக்க; இராவணன் சினந்து அநுமானைக் கொல்லும்படிக் கட்டளையிட; அதுகண்ட விபீஷணன் தமையனுக்கு நற்புத்தி கொளுவி அவ்வாறு தூதனைக் கொலைபுரிதல் தகாதெனத்தடுக்க; இராவணன், அநுமானின் வாலிற் கந்தைகளைச்சுற்றி தைலத்திற் றோய்த்து எரி கொளுவி விடுக்க; அநுமான், இலங்கைக்குத் தீமூட்டி விட்டுத் திரும்பிவந்து, அங்கதன் முதலானவர்களை வணங்கி நிகழ்ந்தவற்றை யுரைத்து, மதுவனம் சேர்ந்து தேறல் மாந்த மேயினர். அதன் பின்பு, அநுமான் ஸ்ரீராமபிரானை அணுகி, நடந்த வரலாற்றைச் சொல்லி, சீதாபிராட்டியிதுகாறும் உயிர்தாங்கி யிருத்தல் நற்குடிப்பிறந்தோர்க் கழகன்றென்றுன்னி உயிர் துறப்பான் தமது வேணியை தருவின்கொம்பிற்சுற்றி சுழுத்திற்சாத்துங்காலை, தான் மோதிரத்தைக்கொடுக்க; பிராட்டியார் தம் கர்மத்தைவிட்டு சூடாமணியைத் தந்தனள் என்று கூற; இரகுநாதன் மிகவும் சந்தோஷமடைந்தனன்.

அதன்பின்பு, ஸ்ரீராமபிரானும் சுக்கிரீவனும் வாநரப்படைகளைத் திரட்டிக்கொண்டு, தன்னுடன் முன்னும் பின்னுமாக வர தென்கடலின் வடகரையைச் சார்ந்தார்கள்.

முன்னர் தீயினால் தகிக்கப்பட்ட இலங்கையை மீண்டும் இராவணன் புதுப்பித்து அநுமானால் நேர்ந்த விஷயங்களை யெல்லாம் நினைத்து பெருங்கோப முற்றவனாகி, ஸ்ரீராமபிரானையும் சீதாபிராட்டியாரையும் இகழ்வானாயினன். அதுகேட்ட விபீஷணன் இராவணனை விட்டேகி ஸ்ரீராமனைச் சரணடைந்தனன். அதன்மேல், சேது பந்தனஞ்செய்து, ஸ்ரீராமபிரான் இலங்கையின் புறத்திற்றங்கி, அங்கதனைக் கூவி, "வீர! இராவணன்பாலணைந்து தேவியை விடுதியோ? அல்லது பத்துத்தலைகளும் சிந்தப்போர் புரிதியோ என்று கேட்டுவரும்படி அனுப்பினன். அவ்வாறே அங்கதன் இராவணனிடம்

---

மீள்வமென்று மேலெழுந்து பரக்க; சூரிய கிரணத்தினால் சம்பாதி சிறைகருகியும் ஜடாயு உடல் பொரிந்தும் நிலத்தில் வீழ்ந்தனர்; பின்பு, வேதகிரியிற் சிவபெருமானைப் பூசித்து அருள்பெற்றனர் என்றும்; அருணன் புத்திரராகிய சம்பாதி ஜடாயுவென்பவரிவரும் முக்தியடைய விரும்பி, சிவபெருமானை வணங்கும்பொருட்டு கைலைமலையின் மேலேறிச் செல்லுகையில் சிவகணங்கள் தடுக்க; அவ்விருவரும் மேலெழுந்து சூரிய மண்டலம் வரையிலும்போக, இவ்விருவரும் சிறைகருகி வீழ்ந்து சிவபெருமானை யருச்சித்து அருள்பெற்றன ரென்றும் கூறுகின்றன சில புராணங்கள்.

போய்க்கூற; அவன் சற்றேனும் இணங்காது வெகுண்டுகூறவே இருவரும் நெடுநாள் போர்புரிந்து, இறுதியில் ஸ்ரீராமன் ப்ரஹ்மாஸ்த்ரத்தைத் தொடுத்து இராவணனைக் கொன்றனன். அதன்பின்பு, இராமசந்திரன் விபீஷணனால் சீதாபிராட்டியைத் தம்மிடம் கொணர்ந்து வரும்படிச்செய்ய; அவ்வாறே பிராட்டியார் ஸ்ரீராமர் எதிரில் நின்று வணங்க ; இரகுநாதன் பிராட்டியை நோக்கி, "நினது கோலத்தால் நீ சிறையிலிருந்தவளாயுணர்த்துகிற்றிலை; ஆதலின், என் மனம் ஐயுறுகின்றது" என்று கடுஞ்சொல்லுரைக்க; பிராட்டி, "எனது கற்பை யுணர்த்துகின்றேன் அறிமின்" என்றுரைத்து எரிவளர்த்து அதிற்புகுந்தனள். அக்காலை, அக்கினிதேவன் பிராட்டியை ஏந்திக்கொண்டுவந்து இராமசந்திரனிடம் விட ; இதைக்கண்ட பிரமன் முதலான ஏனைய தேவர்களனைவரும் இராமசந்திரனை நோக்கி, "பிராட்டியை இகழாது அங்கீகரித்தருளுக" என்று கூறித் தங்களுலகம் போய்ச்சேர்ந்தனர். பிறகு ஸ்ரீராமபிரான் அயோத்தியை யடைவான், சுக்கிரீவன் விபீஷணன் முதலானவர்களுடன் புறப்பட்டு, சீதாபிராட்டியாருக்கு இலங்கையையும் போர்புரிந்த இடத்தையும் சேதுபந்தநத்தையும் காண்பித்து, சேதுவை தரிசித்தவர் புண்யராவாரென்றுரைத்து, மஹாதேவன் தனக்கு ப்ரஸாதமளித்தனரென்றனன். இவ்வாறு இராமமூர்த்தி இராவணாதியரைக் கொன்று விபீஷணனுக் கரசியல் தந்து கந்தமாதநத்தில் வந்திருந்தகாலையில் முனிவர்கள் சேரவந்து தம்மைப் புகழ்ந்தபோது, அவர்களை நோக்கி இராவணனைக்கொன்ற பழிதீர யாது செய்வதென்று வினவ ; அவர்கள், "தசரதீ ! இந்தத் தானம் அதிக விசேஷமுடையது; ஆதலின், இங்குச் சிவலிங்க ப்ரதிஷ்டைசெய்து பூஜித்தால் அப் பழியினின்று நீங்கி வேண்டியாங்குப் பெறலாம்" என்று கூற; ஸ்ரீராமன் அதற்குடன்பட்டு ஜானகியாற் குவித்த மணற்குன்றைச் சிவலிங்கமாகத் தாபித்து, தனுவின் கோடியால் தீர்த்தமொன்றுண்டாக்கிப் பூஜித்துப் பழிதீர்ந்து வேண்டிய வரம் பெற்றனனென்பது.

முன்னொரு காலத்தில், வைகுண்டத்தில் துவாரபாலகராயிருந்த ஜயவிஜயர் துருவாச சாபத்தால் கம்சன் சிசுபாலன் தந்தவக்கிரன் முதலான கொடியோரால் துன்புற்ற தேவர்கள் திருமாலிடம் விண்ணப்பஞ்செய்ய; திருமால் கிருஷ்ணாவதாரஞ் செய்து கிருபை செய்வாராயினர். கம்சன் தன் தங்கை தேவகியை வசுதேவர்க்கு மணம் புணர்த்தி, இருவரையுந் தேரிற்கொண்டு வருங்காலைச் சென்றபோது, "உன் தங்கை வயிற்றிற் பிறக்கும் எட்டாம் பிள்ளையால் நீ யிறப்பாய்" என்றசரீரியுண்டாக; கம்சன் உடனே வாளையுருவித் தேவகியை வெட்டப்புக; வசுதேவர், "இவளை வெட்டற்க; இவளிடத் துதிக்கும் பிள்ளைகளை உன்பால் ஒப்புவிக்கின்றேன்" என; அதற் கிணங்கி விடுத்தானாயினும், அவ்விருவரையுங் காவலில் வைத்துப் பிள்ளைகள் பிறக்குந்தோறுங் கொன்று வந்து ஏழாங்குழந்தை குறைமாசத்திற் பிறக்க; அதனை வசுதேவன் தன் மற்றொருமனைவியான கோகுலத்திலிருந்த ரோகிணி யிடங்கொடுத்து வளர்ப்பித்தனன். அம் மகவே பலராமன். காவலர் கம்சனிடஞ்சென்று ஏழாங்கருப்பம் அழிந்துவிட்டதெனக் கூறினர். எட்டாங் குழந்தையாக கிருஷ்ணன் பிறந்தனன். யோகமாயையா லப்பொழுது அனைவர்க்கும் நித்திரையுண்டாயது. சங்கு சக்ர கதா கட்க கோதண்டதரனாய்த் திருமால் காட்சியளித்துக் கூறிய வண்ணம் வசுதேவர் ஒருவருக்குந் தோன்றாமல் அவ்விரவிலேயே யமுனையின் மறுகரையில் நந்தகோபன் மனையில் வைத்துவிட்டு அப்போது தான் பிறந்த யசோதையின் சிசுவை யெடுத்து வந்து தன்னிருக்கையில் வைத்தனர். அதற்குள் யோகமாயை நீங்கிக் காவலர் சிசுவின் அழுகுரல் கேட்டுக் கம்சனுக் கறிவிக்க ; அவன் அச் சிசுவினைக் கொல்லக்கருதி மேலெறிய; அது ஆகாயமார்க்கத்திற் கிளம்பி, எட்டுக் கைளோடு விளங்கி, "அடா கம்ஸா ! என்னை ஏன் வீணே கொல்லப்பார்த்தாய் ; உன்னை முற்பிறப்பிற்கொன்ற திருமால் வேறு மனையிற் பிறந்து உன்னைக் கொல்ல வளர்கின்றான்" என்று கூறி மறைந்தது. கம்சன் இனி இவர்களைக் காவலிலிருத்துதலிற் பயனின்றென்று வசுதேவரையும் தேவகியையும் விட்டுவிட்டனன். வசுதேவர் பலராமனையும்

நந்தகோபர் மனையில் விட; இருவரும் வளர்ந்து வந்தார்கள். நந்தகோபர் மனையில் கிருஷ்ணன் வளர்ந்துவருவதையறிந்த கம்சன் பூதனையென்னும் பேயை அவனைக் கொல்ல என்றேவ; அப் பேய் ஸ்தநங்களில் நஞ்சுதடவிக்கொண்டு, கிருஷ்ணனை யெடுத்துப் பாலூட்ட; கிருஷ்ணன் வாயாலுறிஞ்சி அவள் முலைப்பாலுடன் உதிர முதலியன நீங்கி யலறி மாள்வித்தனன். ஓர் அசுரன் சகடமாய் வர நந்தகோபர் அதிலிருத்தப் பாலுக் கழுபவன்போல் சகடத்தை யுதைத்துத் தூளாக்கி அவ்வசுரனை மாள்வித்தனன். கண்ணனும் பலராமனும் அங்கே கட்டியிருந்த கன்றுகளை யவிழ்த்துப் பாலூட்டக் கண்ட யசோதை கண்ணனை உரலிற் பிணிப்ப, அதனோடு தவழ்ந்து சென்று, நளகூபன் மணிக்கிரீவன் என்னும் குபேரன் புத்திரரிருவர் சாபத்தால் உருமாறிக் கிடந்த மருதமரங்களிரண்டினிடையே தவழ்ந்து அவற்றை வீழ்த்தி அவர்கள் சாபத்தை விமோசனஞ் செய்தனன். ஓரசுரன் கொக்குருவாய்க் கண்ணனைத் தன் மூக்காற் குத்தித் துன்புசெய்யத் தொடங்குகையில் கண்ணன் அதனைக் காலால் மிதித்து அதன் வாயைப்பிளந்து கொன்றனன். இவன் பகாசுரனெனப்படுவன். கோவர்த்தனத்தைக் குடையாகப் பிடித்துப் பசுக்களையும் ஆயர்களையுங் காத்தனன். கம்சன் செய்த பல உபாயத்தினாலும் கண்ணன் கொல்லப்படாது கண்ணனால் கம்சன் கொல்லப்பட்டனன். சிசுபாலன் தந்தவக்கிரன் முதலியோர் கொல்லப்பட்டார்கள். கிருஷ்ணனுக்கு அஷ்டமஹிஷிகள். அவருள் உருக்குமிணி, சத்தியபாமை, இராதையென்னு மிவர்களே பிரியமனைவியர். அர்ச்சுனனுக்கு மிக்க நண்பன். அர்ச்சுனன் நரனும் கிருஷ்ணன் நாரணனுமாகப் பிறந்தவர்கள். அர்ச்சுனனிடத்துற்ற அன்பினாலே பாரதப்போரில் தூதுசென்றும், தேர் கடவியும், கீதை உபதேசம் புரிந்தும் பாண்டவர்க்கு ஜயமுண்டாக்குவித்தவன். உபமந்யுருஷி கண்ணனுக்குச் சிவதீக்ஷை செய்வித்து அவனைப் பாசுபத விரதம் பூண்டொழுகச் செய்தனரென்பதாம்.



பக்கம் - கக, செய்யுள் - உ.

## சிவபிரான் திரிபுரங்களைச் சாம்பராக்கியது.

தாரகாசுரனது புத்திரர்களான * வித்யுன்மாலி தாரகாக்ஷன் கமலாக்ஷன் என்னும் மூன்று அசுரர்கள் மிகுந்த தவஞ்செய்து அசுரத் தச்சனாகிய மயனென்பவனால் ஸ்வர்க்க மத்ய பாதலமாகிய மூன்றுலகங்களினும் அந்தரத்திற் சஞ்சரிக்கத்தக்க இரும்பு வெள்ளி பொன் இவற்றால் செய்யப்பட்ட மூன்று பட்டணங்களையும் முறையே பெற்று, தம்மினத்தாராகிய பல அசுரர்களைக் கூட்டிக்கொண்டு, அந்தரத்திற் செல்லும் அந் நகரங்களுடனே தாம் நினைத்த இடங்களிற் சென்று, அங்குள்ளவரைக் கொன்று திரியாநிற்குங் காலத்தில், அவர்களுடைய கொடுமைக்கஞ்சி முறையிட்ட தேவர் முனிவர் முதலியோரது முறைபாட்டுக்குச் சிவபெருமான் இரங்கிச் சந்திர சூரியர்கள் சக்கரங்களாகவும், வேதங்கள் குதிரைகளாகவும், பிரமன் சாரதியாகவும் அமைந்த பூமியாகிய இரதத்தின் மேல் ஏறி, மேருவை வில்லாக வளைத்துக்கொண்டு, அதற்கு ஆதிசேஷனாகிய நாரி யமைத்து வாயுவைச் சிறகாகவும் திருமாலைக் கூர்வாயாகவும் கொண்டு, அக்கினியாகிய அம்பைத் தொடுத்தெய்ய முயல்கையில், சந்திரன் முதலிய தேவர்கள் தத்தம் ஆற்றலால் திரிபுரங்களை யழித்தலாகிய இக் காரியம் முற்றுப்பெறுகின்றதென்று இறுமாப்புக் கொண்டதை சிவபெருமானுணர்ந்து புன்னகைபுரிய; அந் நகையால் திரிபுரவாசிகள் தமது முப்புரங்களோடு எரிந்து சாம்பராயினரென்பதாம்.



---

* சுதன்மன் சுசீலன் சுபுத்தி எனவும் பெயர்கள் வழங்கும்.

பக்கம் - ௬௪, செய்யுள் - ௩௧.

## சாநந்தமுனிவர் ஸ்ரீபஞ்சாக்ஷரீ ஜபத்தால் நரகலோகவாசிகளை ஸ்வர்க்கலோகமனுப்பியது.

பதரிகாச்சிரமத்தில் பூர்ணவித் என்ற ஓர் மஹர்ஷி சிவபக்தியிற் சிறந்து, தர்மா சார நெறிநின்று தவஶ்ரேஷ்டராயிருந்தார். இவர் இல்லறவாழ்க்கையராதலின், அருந் ததியினும் போற்றப்பட்ட கற்புடைய பத்திரதத்தை என்னும் ஓர் பெண்ணை மணம் புரிந்தனர். இவ்விருவரும் இல்லற தர்மத்தில் ஒழுகிவரும் நாள்களில், புத்திரப்பே றில்லாத ஏக்கத்தால் தேஹம் மெலிந்து துன்புறுவளான மனைவி தன் கணவராகிய மஹர்ஷியைப் பார்த்து நமஸ்காரஞ்செய்து, "சுவாமி! பரமசிவன் நமக்குக் குறைவில்லாத செல்வத்தையும், சிறப்பினையும் கொடுத்து, ஓர் புதல்வனைக் கிருபைசெய்ய வில்லையே. அதனால், என் மனம் கவலையுறுகிறது; மேலும், இல்லறத்திற்குரிய நற்குணம் வாய்ந்த தோர் புதல்வன் இல்லாதிருத்தல் மேற்கதியுமில்லையென வேதங்கள் கூறுகின்றன; பரமசிவன் நமக்கு ஓர் புதல்வனைக் கிருபைசெய்வார்; ஆதலின், நீர் தவஞ்செய்ய வேண் டும்" என்று வேண்டினள். அம் மஹர்ஷி தன் பத்தினியின் வார்த்தைகளைச் செவி மடுத்து, சந்தோஷமாகி, அவ்வம்மையைநோக்கி, "பெண்ணே! உன் வார்த்தை ஸத் யமே; அப்படியே தவஞ்செய்வன்; பரமசிவன் நமக்குப் புத்திரப்பேறு அருள்செய் வராக" என்று கூறி, மனைவியைத் தேற்றி, ஆச்சிரமத்திலிருக்கச் செய்து, தவஞ்செய்ய ஓர் அரணியத்திற்குச் சென்றனர். அவர் ஓர் வில்வ வநத்தை யடைந்து, அவண் ஓர் தடாகத்தையும் கண்டு, மகிழ்ச்சியடைந்து, பத்மாசனத்திருந்து, ருத்ராக்ஷந்தரித்து, ஸ்ரீபஞ்சாக்ஷரீமந்த்ரத்தை யுச்சரித்து, பஞ்சேந்த்ரியங்களை நிக்ரஹித்து, இஷ்டப்ராண பாவார்ச்சனைசெய்து, பரசிவத்திலேயே நாட்டமுற்று தவஞ்செய்வாராயினர். பரம சிவன் இவரது தவத்திற்கிரங்கி, வ்ருஷபாரூடராய்க் காட்சிதந்தருள; பூர்ணவித்ருஷி அஷ்டாங்கமாய் விழுந்து எழுந்து பரவசமுற்று துதிப்பாராயினர். பரமசிவன் ருஷி யைப்பார்த்து, "உன் தவத்திற்கு மகிழ்ந்தனம்: நீர் வேண்டும் வரம் யாது" என்று வினவ; ருஷி, "முன்னர் நந்தியெம்பெருமானைக் கிருபைசெய்ததுபோல இப்போது அடியேனுக்கும் சிவபக்தியிற் சிறந்த ஓர் நல்ல புதல்வனை யருளல் வேண்டும்" என்று விண்ணப்பஞ்செய்ய; அவ்வாறே பரமசிவன் அநுக்கிரகித்து மறைந்தருளினர். பின்பு, ருஷி வநத்தைவிட்டு, இல்லற ஆச்சிரமத்திற்கு வந்து, நிகழ்ந்தனவைகளை மனைவிக்குக் கூறி வாழும் நாளில், மனைவி கர்ப்பமாகி சுபதினத்தில் புத்திரனைப் பெற்றாள். அப் புதல்வ னுக்கு விதிமுறை சடங்குகளியற்றி, சாநந்தமுனிவர் என்று நாமகரணஞ்செய்தனர். சாநந்தமுனிவர் ஆசார்யரையடைந்து, வேதாகமங்களில் வல்லராய், தாய் தந்தை முதலிய வர்களுடைய கட்டளையைக்கடவாது, நற்குண நற்செய்கைகள் நிறையப்பெற்று, சன்மார்க் கத்தில் ஒழுகிவரும் நாளில், ஓர்நாள் முனிவர்கள் எல்லாரும் ஒருங்குகூடி சிவபுராணம் படிக்கும் சமயத்தில் ஆங்கு போக; அம் முனிவர்கள் அவரை அருகிலழைத்து, உபசாரஞ் செய்து, ஆசீர்வதித்து, தங்களாச்சிரமத்திலிருக்கச் செய்தார்கள். சாநந்தமுனிவர் அவர் களைப் பார்த்து, "சுவாமி! நீங்கள் படிக்கும் சாஸ்திரம் யாது" என்று வினவ; அவர்களில் தர்மப்பிரசங்க முனிவரென்பவர், "சிவதருமோத்திரத்தில் பெருந்தவஞ் செய்தவர்க ளடையும் கதியைப்படிக்கிறோம்" என்றனர். சாநந்தமுனிவர் முனிவர்களைநோக்கித் தனக்கு மெய்ஞ்ஞானம் உதிக்கும் வண்ணம் கிருபைசெய்தல் வேண்டுமென்று வேண்டினர். சாநந்த முனிவர் நல்வினை புரிந்தவரடையும் புண்ய பதவிகளையும், தீவினை புரிந்தவரடையும் பாப பதவிகளையும் கேட்டு, தீங்கரும்பைத் தின்ற வாயிலே வேம்புதின்றாற்போல, தர்மங்களைக் கேட்ட செவியில் பாபங்களையும் கேட்கலாயிற்றே எனத் துக்கித்து, கஷ்டப்படும் பாபிக ளுக்கு மதுரமொழியில் மனமிரங்கி பயப்படாதீர் என்று தைர்யச்சொற்களைக் கூறுவார்

உளரோ என்றும், பரமசிவன் சிலருக்குத் தர்மவாயிலாய் ஒழியாத சுகத்தையும் சிலருக்குப் பாபவாயிலாய் ஒழியாத துக்கத்தையும் கொடுத்தார்: இதனால் அவனுக்கு ப்ரயோஜனம் என்னே? எல்லாருக்கும் நல்லறிவு உதயமாகும்படிசெய்து மோக்ஷத்தைக் கிருபைசெய்வானாயின் அவனுக்கு யாதாமொரு குறைநேர்தலுமுண்டோ? என்றும் பலவாறு சிந்தித்து, ஆனால் ஈஸ்வரன் அருள் எவ்வாறாயினுமாகுக! யமதர்மராஜாவிடம்போய்ச் சொல்வதொன்றுண்டு என்று துணிந்து, பரமசிவனை த்ரிகரணஸுத்தியுடன் தியானம்செய்து, ஓர் புஷ்பவிமானம் வரும்படியாய்ச் சிந்திக்க; கைலாயத்தினின்றும் ஓர் விமானம் சிவகணங்களால் சூழப்பெற்று இறங்கிற்று. சாநந்தமுனிவர் முனிவர்களையெல்லாம் அழைத்துக்கொண்டு, விமானத்திலேறி, யமபுரியைநோக்கிச் செல்வாராயினர். இதையறிந்த நாரதமுனிவர் முன்னதாகவே யமபுரியை யடைந்து, சாநந்தமுனிவரின் வரலாற்றை யமனுக்குச் சொல்லி, யமலோகம் இவரால் கொள்ளையிடப்பட்டு பாழ்போகாவண்ணம் காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டு உபாயம் தேடிக்கொள்ள எச்சரித்துப் போய்விட்டனர். சாநந்தமுனிவர் யமபுரியை யடையவே யமதர்மராஜன் ஆசனம் விட்டிழிந்து, எதிர்கொண்டு நமஸ்கரித்து, சமீபம்வந்து, அவரைநோக்கி, என்ன கார்யம் கருதி இவண் வந்தது என்று வினவ; சாநந்தமுனிவர், "உம்மையும் உமது பட்டணச் சிறப்பினையும் பார்க்க வந்தேன்" என்று கூற; யமன் நன்றென்று சம்மதித்து, சாநந்தமுனிவரை அழைத்துக்கொண்டு, அவருக்கு அஷ்டதிக்குகளிலும் வாயல்களுடைய இடங்களில் சுகமனுபவிக்கும் புண்ய சீலர்களை முறையாக யமகிங்கரர்களால் காண்பித்து, பின்பு தெற்கு வாயிலை யடைந்து இவ்விடம் உள்ளபாபிகளை சாநந்தமுனிவர்போன்ற பக்தர்கள் பார்க்க நினைக்கத்தக்கதன்றென்று சொன்னான். இவ்வாறு கேள்விப்பட்டு அவ் வாயிலில் நிற்கும் சமயத்தில், ப்ரளயகால சமுத்திர வோசையைப்போல எழாநின்ற பாபிகள் கஷ்டப்படும் கூக்குரலைக் கேட்டமாத்திரத்தில், சாநந்தமுனிவர் அதிசயமுற்று உள்ளே பிரவேசிக்க எண்ணங்கொள்ள; யமன் வாயிலின் கதவைத்திறக்கும்படி உத்திரவுசெய்ய; சாநந்தமுனிவர் முதலானவர்கள் உள்ளே பிரவேசித்தார்கள். சாநந்தமுனிவர் அவ்விடம் பாபிகளை வருத்தப்படுத்தும் விதங்களையும் பார்த்து, இவ்வாறு வருத்தமடையும்படியாய் முன்செய்த பாபத்தொழில்களையும் இனிமேல் இவர்கள் எவ்வகையான நற்கதியையும் அடைய மாட்டார்களென்பதையும் கேட்டு, புன்னகைகொண்டவராகி, இந்தப் பாபிகளை சிவமந்திரத்தினால் கைலாயத்திற்குச் செலுத்தி ரக்ஷிக்காமற் போவோமாயின் சிவபக்தர்கள் தம்மை இழித்துக் கூறுவாரென்று நினைத்து, மிகக் கோரமான இருபத்தெட்டுகோடி நரகத்திலுள்ளவர்களெல்லாரும் ஜீவன்முக்தராய் சொர்ணவிமானத்திலேறி கைலாயம் போய்ச்சேரக் கிருபைசெய்யும்படி சிவபிரானைத் தியானம்செய்து, அம் மஹாபாபிகளின் செவிகள்தோறும் போய்க்கேட்கத் தகுந்ததாய் ஸ்ரீஷடக்ஷரீமந்த்ரத்தை உரத்துச் சொல்ல; அவ் வோசையைக் கேட்டறிந்த முனிவர்களெல்லாரும் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை ஜபிப்பாராயினர். இந்த ஸ்ரீபஞ்சாக்ஷர ஓசையானது பாபிகளது செவியில் போய்ப் புகுமுன்னரே, அவர்கள் செய்த பாபமெல்லாம் நீங்கி, பரிசுத்தராகி, விபூதி ருத்ராக்ஷ லிங்கதாரணம்பெற்று, சோதிப்பிரகாஸமுள்ளவர்களாகி, அதிவிரைவில் நரகலோகத்தை விட்டுக் கடைத்தேறிக் கைலாயமடைந்தார்களென்பதாம்.

பக்கம் - கசஅ, செய்யுள் - ரூ.

## ப்ரஹ்மவிஷ்ணுக்கள் ஜ்யோதிர்லிங்கத்தைத் தேடியும் காணாதது.

முன்பொரு கல்பத்தில் திருமாலினுடைய நாபிக்கமலத்திற்றோன்றிய ப்ரஹ்மா, தேவர் முதலியவர்களைச் சிருட்டித்துத் தானே பரப்ரஹ்மமென்றகங்கரித்து, திருப்பாற் கடலில் சயனித்துக் கொண்டிருக்கும் திருமாலை நோக்கி, "நீயார்" என்று கேட்க; விஷ்ணு, "நானுன்பிதா" என்று கூற; ப்ரஹ்மா கோபித்தெழுந்து பலவாறிகழ்ந்து, "நாமிருவரும் போர்புரிவோம்; அப் போரில் வென்றவரே பரமாவர்" என்று கூற; இருவருஞ் சம்மதித்து நெடுநாள் பெரும்போர் புரிந்தனர். அப்பொழுது சிவபெருமான் அவர்கட்கு மத்தியில் அக்நிமலை உருவங்கொண்டு பூமிக்கும் ஆகாயத்துக்குமொன்று யோங்கி நின்றருளினர். அவர்கள் அதனைக்கண்டு, போர்புரிதலை யொழிந்து, இம் மலையின் அடிமுடியைக் கண்டவர்களே பரமாவாரென்று கூறி, ப்ரஹ்மா முடியைக் காணும் பொருட்டு அன்னப்பறவையுருவங்கொண்டு ஆகாயத்திற் பறந்து சென்றனன். திருமால் பன்றியுருவங்கொண்டு பாதலமேழையும் கீண்டு சென்று நெடுநாள் வருந்தியும் திருவடியைக் காணாது திரும்பி வந்தனர். ப்ரஹ்மா அநேககோடிகாலம் பறந்து மேலேழுலகங்களையும் கடந்து சென்றும் சிறகுகள் முரிந்தும் வருந்தித் திருமுடியைக் காணமல், அங்குத் தோன்றிய அசரீரிவாக்கினால் மனந்தெளிந்து, திரும்பி வந்து, திருமாலைக் கண்டு நின்றனன். பின்பு, இருவரும் தாங்கள் அகாரணரென்பதை யுணர்ந்து, அகந்தையொழிந்து சிவலிங்கந்தாபித்துப் பூசிக்க; பெருமான், பார்வதீஸமேதராயெழுந்தருளி உங்கட்கு வேண்டியவரங்களைக் கேளுங்களென்ன; அவர்கள், "எம் பெருமானே! அடியேங்கட்குத் தேவரீரது திருவடிக்கண் அன்பு ஒன்றே வேண்டும்" என்று வணங்கினர். பெருமான் அவ்வாறே யருளி, அவர்களைத் தங்கள் பதவியிலிருக்க அநுக்கிரகித்து, அவ்வழல்வடிவாக வெழுந்தருளிய பெரிய தமது வடிவத்தைச் சுருக்கி ஒரு மலையுருவாக வெழுந்தருளினர். அஃதே இன்றும் சோணசைலம், அருணாசலம் முதலிய பலகாரணப் பெயரோடு விளங்குகின்றதென்பதாம்.

---



